ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்
ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# தானேயெழுதிய தன்சரிதை

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர் எழுதியது**

திருக்குடந்தையில் வாழும்

ஸ்ரீமத் ராவ்ஸாஹிப் S. ரங்கஸ்வாமி ஐயங்காரால்

சென்னை ரத்தினம் பிரஸ் பிராஞ்சில் அச்சிடுவிக்கப்பட்டது

13—1—1956



ஸ்ரீ

# அடியேனுடைய விண்ணப்பம்

(கும்பகோணம். ராவ்ஸாஹிப் S. ரங்கஸ்வாமி ஐயங்கார்.)

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமியின் திவ்ய சரித்திரத்தை 20 வருஷங்களுக்கு முன், உலகப்பிரசித்தரான K. வெங்கடசாமி நாயுடு, B.A., B.L., (அப்பா அண்டு கம்பெனி) அவர்கள் ஆங்கில பாஷையில் வெளியிட்டிருந்தார். பிறகு ஸ்ரீ ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி ஸமயத்தில் தமிழ் தெலுங்கு ஸம்ஸ்க்ருத பாஷைகளில் பலர் வெளியிட்டிருந்தார்கள். இருந்தாலும், ஸ்ரீஸ்வாமியின் சரித்திரத்தை ஸ்வாமி திருக்கையாலேயே எழுதுவித்து வெளியிட வேணுமென்று எனக்கு வெகுகாலமாக மிகவிருப்பமிருந்தது. அதனால் ஸ்ரீஸ்வாமியை அடிக்கடி பிரார்த்தித்துக் கொண்டிருந்தேன். 7, 8 வருஷ காலமாக அடியேன் செய்து கொண்டிருந்த பிரார்த்தனை ஸமீப காலத்தில்தான் நிறைவேறப் பெற்றது. இதை வெளியிடுகிற பாக்கியம் அடியேனுக்குக் கிடைத்தது பற்றி என்னுடைய ஆனந்தம் அளவிட முடியாதது.



இப்படிக்கு,

**S. ரங்கஸ்வாமி,**

112. கீழக் கடலங்குடி, திருக்குடந்தை.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

    

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# தானேயெழுதிய தன்சரிதை

(காஞ்சீபுரம் P. B. அண்ணங்கராசாரியர்)

தம்முடைய வரலாறுகளைத் தாமே யெழுதிக் கொள்வதென்பது உலகிற் சில பெரியார்களிடம் காண்பதுண்டு. அத்தகைய பெரியோர்களின் வகுப்பில் எந்த விதத்திலும் சேருவதற்கு உரிமையற்ற அடியேன் தன்னுடைய சரித்திரத்தைத் தானே யெழுதிக்கொள்ள ஆசைப்படுவது நகைப்புக்கு இடமானதே. இதை நன்கறிந்தவனே யடியேன். ஆயினும் சில காரணங்களினால் இதனை யெழுதத் தொடங்குகின்றேன். ஆப்தர்களான பல மஹான்கள் நிர்ப்பந்தித்து நியமித்தருளினது முதற்காரணம். பொருளல்லாத வென்னைப் பொருளாக்கிய சில மஹான்களிடத்து அடியேனுடைய நன்றி பாராட்டுதல் இப்புத்தகத்தின் மூலமாக நீண்ட காலம் விளங்கவேணுமென்னுமவா இரண்டாவது காரணம். அடியேனுடைய வாழ்க்கையில் நாற்றிசையிலும் பலபல பெரியார்களின் அன்பு ஏற்பட்டதனால் அன்னவர்களின் பெருமைகளை [உருவப்படங்களோடுங் கூட] வெளியிட்டுக் களிக்கவேணுமென்னுமவா மூன்றாவது காரணம். அடியேனது செய்கைகளில் விபரீத வுணர்ச்சி கொண்டிருக்கும் சிலருடைய மருளை மாற்றி உண்மையை உலகறியச் செய்து வைக்கவேணுமென்னு மாசை நான்காவது காரணம். இங்ஙனே மற்றும் பல காரணங்களை முன்னிட்டும் இதனை எழுதப் புகுந்தேன். விரிவாகவே யெழுத வேணுமென்னு மாவல் இருந்தும் முதலில் ஒருவாறு இதனைச் சுருக்கமாகவே யெழுதி வெளியிடுகின்றேன். இதனை நான்கு பகுதிகளாக அமைக்கின்றேன். *

## அடியேனுடைய வம்ச வரலாறு

ஆதிகாலத்தில் எம்பெருமானார் தாம் நிறுவிய வைணவக் கோட்பாடுகள் இந்நிலவுலகம் முழுதும் மேலும்மேலும் பெருகும் வண்ணம் திருவுள்ளமுகந்து நியமித்தருளின எழுபத்துநான்கு ஸிம்மாஸனாதிபதிகளுள் முடும்பை நம்பி யென்பார் ஞானம் அனுட்டானம் இவை நன்குகொண்டு இனிது வாழ்ந்திருந்தவர்; அவரது வழித்தோன்றலாகத் தேவப்பெருமாள் திருவருளுடன் தோன்றினார் பிள்ளை லோகாசார்யருடைய சிறிய தகப்பனாரின் திருப்பேரனாராகிய ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் ஸ்வாமி. காஞ்சீபுரத்துக்குள் ஒரு பகுதியான தூப்புலென்னும் தலமே அவரது திருவவதாரத்தினால் புனிதமாயது. சிறு வயதிலேயே அமோக பாண்டித்யம் பெற்று ப்ரதிவாதி பயங்கரரென்ற விருதையும் பெற்றவரான அண்ணன் ஸ்வாமி, கவிதார்க்கிக ஸிம்ஹமாய் விளங்கிய ஸ்ரீவேதாந்த தேசிகனுடைய திருக்குமாரராகிய நயினாராசாரியருடைய கடாக்ஷத்திற்கு இலக்காகி அவருடைய அருளினால் விசிஷ்டாத்வைதஸாரத்தை க்ரஹித்திருந்து, பிறகு ஸத்ஸம்ப்ரதாய ஸாரப் பொருள்களை நன்கு உணரவேண்டி உபயகாவிரியின் மத்தியில் பள்ளிகொண்டுள்ள திருவரங்கற்கு ஈடளித்த தனிப்பெருமை வாய்ந்த மணவாள மாமுனிகளின் திருவடிகளில் ஆச்ரயித்து ஸகலார்த்தங்களையுமுணர்ந்து உய்ந்தார்.

" ப்ரஸித்த: பரகோஷ்டீஷு ப்ரதிவாதிபயங்கர:;
ஸ்ரீவைஷ்ணவாநாம் கோஷ்டீஷு தத்தாஸ இதி விச்ருத:"

என்று தாமே அனுஸந்தானம் செய்துகொண்டபடி புறமதத்தவர்திரளில் ப்ரதி வாதி பயங்கரராயும், பாகவத கோஷ்டிகளில் ஸ்ரீ வைஷ்ணவ தாஸராயும் விளங்கின (மூல புருஷராகிய) அப்பேராசிரியரது திருவம்சத்தில் அவதாரம் செய்து குலப் பெருமையை மிக விளக்கிய மஹான்கள் பலர். நூறு ஆண்டுகளுக்கு முன் வடஇந்தியாவில் பல நாடுகளில் திக்விஜயம் செய்து வைணவ மதத்தை மிகவும் பரவச்செய்த புஷ்கரம் (ஆத்ய) அனந்தாசார்ய ஸ்வாமிபோல்வார் பலர் இம்மரபில் உதித்த மாஞானிகள். அவ்வனந்தாசாரியர் ஸ்வாமியின் திருப்பேரனுருடைய திருக்குமாரரே ஜகத்குருவென்று புகழ்பெற்ற காதி அனந்தாசாரியர் ஸ்வாமி. அவரது அபார பாண்டித்யமும் அபரிமிதமான தேஜஸ்ஸும் வடநாட்டில் லக்ஷக்கணக்கான சிஷ்யர்களை அவர் திருவடிகளில் ஈடுபடச் செய்தன. கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாங்கூர் திருவிந்தளூர் முதலான திவ்ய தேசங்களில் தீர்த்தம் மாலை மரியாதைச் சிறப்புகள் அந்நாள் தொடங்கி இந்நாள் வரையிலும் இத்திருவம்சத்தவர்களுக்கு உள்ளது. அன்றியும் மணவாள மாமுனிகள் நியமித்தருளின அஷ்டதிக்கஜாசாரியர்களுள் ஸ்ரீ பாஷ்ய ஸிம்ஹாஸநாதிபதியாக நியமனம் பெற்ற பெருமையும் இத்திருவம்சத் தலைவர்க்கு உள்ளது.



ஸ்ரீ உவே. ஜகத்குரு காதி அனந்தாசார்ய ஸ்வாமி
(வைகுண்டவாஸி)

அன்னவரது மரபில் தோன்றிய ஸ்ரீமத் அண்ணாரங்காசாரியர் ஸ்வாமியென்பார் அடியேனுடைய திருத்தகப்பனார்; காஞ்சீபுரியில் தென்னண்டை மாட வீதியில் வாழ்ந்து வந்தார். அவர் சிறந்த கல்விக்கடலாகவும் வேதாந்த வித்யாநிதியாகவும்மிகவிளங்கியவர். அவரிடத்துக் கல்விகளைப் பயின்று தேறிய பண்டிதர்கள் பலர். அவர் அடியேனுடைய பதினான்காவது வயது நிரம்பின ஒரு வாரத்திற்குள் க்ரோதிஹு பங்குனித்திங்களில் க்ருஷ்ண த்வாதசியில் திருநாட்டுக் கெழுந்தருளினபடியால் அப்போது அவருடைய திருவுருவப்படம் சேமித்து வைத்துக்கொள்ள ஸௌகரியமில்லையாயிற்று. திருத்தாயார் பரமபதமெய்தியது இற்றைக்குப் பன்னிரண்டாண்டுகட்கு முந்தியேயாகிலும் அவருடைய திருவுருவப்படமும் சேகரிக்கப்படாமலே போயிற்று. திருத்தாயார் அலர்மேல்மங்கையம்மா. தேவப்பெருமாளது கீழண்டை கோபுரவாசலில் விளங்கும் அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி மடத்தில் நாற்பது வருஷகாலம் ஆஸ்தானமலங்கரித்திருந்த ஷஷ்டிஜீயர் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான ஸ்ரீமத் பரமஹம்ஸ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியே அடியேனுக்கு மாதாமஹர். ஸ்வாமியின் பூர்வாச்ரமஜ்யேஷ்ட புத்ரியே எனது திருத்தாயார். ஒரு மாதுலரும் சிறியதாயார்களிருவரு மிருந்தனர். அம்மூவர்க்கும் ஸந்தானங்களுண்டு. சிறிய தாயார்களிருவர்க்கும் ஒவ்வொரு திருக்குமாரர் தோன்றி நல்ல ஸ்திதியிலிருக்கின்றனர். அடியேனுடைய திருத்தகப்பனார் நாற்பத்துமூன்று திருநக்ஷத்ரமே இவ்விபூதியில் எழுந்தருளியிருந்தார். அக்காலத்தில் தேவப்பெருமாள்



ஸ்ரீ பரமஹம்ஸ அழகிய மணவாள ஜீயர்ஸ்வாமி
(வைகுண்டவாஸி)

ஸன்னிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் நடந்துகொண்டிருந்த ஸம்ஸ்க்ருத பாடசாலையில் அவர் ஸாஹித்யத்திற்கும் திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக இருந்து வந்தார். அப்போது அப்பாட சாலையில் 150 வித்யார்த்திகள் ஸம்ஸ்க்ருத பாடங்கள் பயின்று வந்தார்கள். காஞ்சியில் ஸுப்ரஸித்த வித்வத் ஸார்வ பௌமராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை (குன்றபாக்கம்) ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமியின் தலைமையில் அப்பாடசாலை நடந்து வந்தது. அந்த ஸ்வாமி, மடத்து வாசல் திண்ணையிலெழுந்தருளியிருந்து நியாய சாஸ்த்ரபாடங்கள் ஸாதித்து வந்தது அடியேனுக்கு நன்றாக நினைவிலிருக்கிறது. காலைவேளைகளில் தமது திருமாளிகையிலேயே ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்தருள்வர். பகலில் 2-மணியிலிருந்து 4-மணி வரையில் மடத்திலெழுந்தருளி நியாயபாடங்கள் ஸாதித்து விட்டு, பிறகு திருமாளிகைக்கெழுந்தருளி பகவத்விஷய காலக்ஷேபம் ஸாதித்தருள்வர். அடியேனுடைய திருத்தகப்பனர்க்கு உபயவேதாந்த க்ரஹணமும் அந்தஸ்வாமி ஸன்னிதியிலேயாயிற்று. வேதாந்த விபாகத்திற்கு வித்யார்த்தியாகவும், ஸாஹித்யாதிகளுக்கு உபாத்யாயராகவுமெழுந்தருளியிருந்தார்.



—வித்வத்ஸார்வபௌமம்—
ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை குன்றபாக்கம்
ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி (வைகுண்டவாஸி)

மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் ஸாமாந்ய விசேஷ சாஸ்திரங்களை யதிகரித்து உத்தீர்ணரான வித்வான்கள் பலர் ஸுப்ரஸித்தர்களாயிருந்தார்கள்; எலத்தூர் க்ருஷ்ணாசார், வாயி நாராயணாசார் முதலான பல (இதரமதஸ்த) வித்வான்கள் ஸ்ரீ குன்றபாக்கம் ஸ்வாமியின் வித்யார்த்திகளேயாவர். இக்காலத்தில் அந்த ஸ்வாமியின் ப்ரக்க்யாதியை விளக்கக் கூடியவராக விளங்கும் வித்வானாக ஸ்ரீமத் புரிசை க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியொருவரேயுளர். இந்த ஸ்வாமி திருப்பதி ஸம்ஸ்க்ருத காலேஜில் பலவாண்டுகள் சாஸ்த்ரோபாத்யாயராக எழுந்தருளியிருந்து இப்போது விச்ராந்தராயிருக்கின்றார்.



ஸ்ரீமதுபயவே. வித்வந்மணி திருமலை அனந்தாண்பிள்ளை
புரிசை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி

திருத்தகப்பனார் சிறுபிராயத்திலிருந்தே "ஸ்காலித்யே சாஸிதாரம்" என்கிற ஆசார்ய லக்ஷணத்தைக் கைக்கொண்டு, வயதில் பெரியவர்களுக்குங்கூட ஆசாரத்தை நிர்தாக்ஷிண்யமாக சிக்ஷிக்குமவராயிருந்தபடியால், சிறியார் பெரியாரென்கிற வாசியில்லாமல் யாவருமே அவரிடத்தில் அஞ்சி நடுங்கிக்கொண்டிருந்த நிலையை நேரில் அநுபவித்திருக்கின்றேன்.

வானமாமலை மடத்துப் பாடசாலையில் திருத்தகப்பனாரோடுகூட உபாத்யாயர்களாக எழுந்தருளியிருந்தவர்கள், வியாகரண வேதாந்த வித்வானாகிய

ஸ்ரீமத் ஷஷ்டி கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி; ஆசாரி கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி; பலாப்புத்தூர் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி; பட்டடை ஸ்ரீநிவாஸவரதாசாரியர் ஸ்வாமி. (மாத்வர்) ராமசந்த்ராசார். இன்னும் பத்தெட்டு பண்டிதர்கள் உபாத்யாய பதவியை அலங்கரித்திருந்த நல்லடிக்காலம் அது. எனது எட்டாவது வயது முதல் பதினோராவது வயது வரையில் இப்பாடசாலையின் அநுபவம் எனக்கு விசேஷமாக இருந்தது. அப்போது ஆங்கில கலாசாலை சின்னகாஞ்சீபுரத்தில் அடியோடு இல்லாமலிருந்ததனால் இந்த ஸம்ஸ்க்ருத வித்யாலயம் அப்போது மிகச் சிறப்பாக விளங்கிற்று. காலை மாலைகளில் பாடசாலை விடும்போது கிழக்கு முகமாகத் திரும்பிப்போகிற வித்யார்த்திகளும் மேற்கு முகமாகத் திரும்பிப்போகிற வித்யார்த்திகளும் பெருந்திரளாகக் காணப்படுவர்கள். அந்தக் காட்சி இற்றைக்கும் அடியேனுடைய உள்ளத்திற் பதிந்திருக்கின்றது.

அடியேனுடைய 11, 12 வயதில் இப்பாடசாலை என்ன காரணத்தினாலோ நின்று விட்டது. அப்போது தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் வஸந்தோத்ஸவ மண்டபத்தில் 'சடகோப நிலயம்' என்கிற ஸம்ஸ்க்ருத பாடசாலை நடந்து கொண்டிருந்தது. அதிலும் 40, 50 வித்யார்த்திகள் வாசித்துக் கொண்டிருந்தார்கள். காவ்ய நாடகாதிகளும் சதுச்சாஸ்த்ரமும் பாடம் நடந்து கொண்டிருந்தது. இது தவிர, திருப்புட்குழி பட்டண்ணா ஸ்வாமி, தன்றி பட்டப்பா ஸ்வாமி முதலான வித்வச்சிகாமணிகள் தம் தம் திருமாளிகைகளிலேயே சாஸ்த்ரப்ரவசனங்கள் செய்து கொண்டிருந்தார்கள். அந்த ஸமயம் காஞ்சீபுரி ப்ரபல ஸம்ஸ்க்ருத வித்யா பீடமாக விளங்கிற்று.

## அடியேனுடைய வித்யாப்யாஸம்

திருத்தகப்பனார் பரமவைதிகராகையாலும் வைதிகச்ரத்தையில் நிகரற்றவராகையாலும் அடியேனுக்கு சௌலம் உபநயனம் முதலியவற்றை ப்ராப்தகாலங்களிலேயே செய்வித்தார். திருத்தகப்பனாருக்கு கிடாம்பி கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியென்றொரு மாதுலர் சென்னையிலிருந்தார். அவர் அதிககாலம் காஞ்சியிலேயே எங்கள் க்ருஹத்திலேயே இருப்பர். அவருக்கு க்ரந்தம் தமிழ் தெலுங்கு நாகரி ஆங்கிலம் முதலிய பல லிபிகளில் பரிசயமிருந்தது. அவர் நாலாறுமாத காலத்தில் ஸகலலிபிகளிலும் அடியேனுக்குப் பயிற்சியை யுண்டாக்கி வைத்தார். சப்தமஞ்ஜரி, ஸ்ரீராமாயண ஸங்க்ரஹம், ஸமாஸ குஸுமாவளி முதலிய பாலபாடங்களைத் திருத்தகப்பனாரே வெகு ஆஸ்தையுடன் நடத்தினார். ஸ்ரீராமாயண ஸங்க்ரஹம் வாசித்து முடிக்குங் காலத்தில் எந்த வார்த்தைகளையும் ஸம்ஸ்க்ருதத்திலேயே சொல்லவேண்டியதென்று அடியேனுக்குக் கட்டளையிட்டார் திருத்தகப்பனார்.

அக்காலத்தில் ஸம்ஸ்க்ருத ப்ரதமபாட மென்றொரு புத்தகம் பிரசாரத்திலிருந்தது. வித்வான் மேல்பாக்கம் வீராதாதாசார்ய ஸ்வாமி என்பவரால் தமிழிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது அது; அதில் முப்பத்திரண்டு கதைகள். அவற்றில் அடிபடாத சப்தமே கிடையாது. தவிர அக்காலத்தில் மைஸூர் தர்மாதிகாரி சக்ரவர்த்தி ஐயங்காரால் கதாஸப்ததி என்றொரு சிறுபுத்தகம் அச்சிடப்பட்டிருந்தது. அந்த எழுபது கதைகளிலும் ஸம்ஸ்க்ருத ப்ரயோகங்கள் மிகச் சிறந்தவை. மேலே சொன்ன இரண்டு நூல்களையும் திருத்தகப்பனார் தாமே பாடம் சொல்லி வைத்தார். அதனால் அடியேன் இளம்பிராயத்திலேயே ஸம்ஸ்க்ருத வியாஸங்கள் எழுத ஆரம்பித்தேன். அதுவுமல்லாமல் ஸ்ரீராமாயண ஸங்க்ரஹமென்னும் சிறு க்ரந்தத்தையொட்டி மணிப்ரவாள ராமாயண ஸங்க்ரஹமொன்று அப்போதே எழுதினேன்.

ஸீதாராமபதாப்ஜாநி வணங்கித் துதிசெய்கிறேன்
கிமர்த்தமென்றால் மத்க்ரந்தபூர்த்தயேதான் அஹர்நிசம்.
அயோத்யாம் நாம நகரீம் ராஜாவொருவராண்டனர்
அவர்பெயர்தானென்னென்னில் ஆஹுர் தசரதம் ஜநா:.

இவைபோன்ற இருநூறு சுலோகங்களினுல் அப்போது ஸ்ரீராமாயண ஸங்க்ரஹத்தை எழுதினேன். பலஇதிஹாஸபுராணகதைகளை வடமொழியிலெழுதினேன்.

அக்காலத்தில் மலையாளத்தில் பட்டாம்பியென்னுமூரிலிருந்து விஜ்ஞாநசிந்தாமணியென்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகை வாரந்தோறும் வெளிவந்து கொண்டிருந்தது. அது என்னுடைய 25 வயது வரையில் நடந்து வந்தது. பன்னிரண்டாம் வயதிலேயே அதற்கு வியாஸங்கள் எழுதியனுப்ப ஆரம்பித்தேன். ஸமஸ்யைகள் கொடுப்பது, ஸமஸ்யாபூர்த்திகள் செய்வது, சித்ரப்ரச்நங்கள் கொடுப்பது, பிறர் கொடுக்கும் சித்ரப்ரச்நங்களுக்கு உத்தரங்கள் வெளியிடுவது—இப்படிப்பட்ட லேகனங்களில் ஆஸக்தியுண்டாயிற்று. அப்போது ஆசுகவியென்றும சித்ரகவியென்றும் சில பிருதுகளை அந்த விஜ்ஞாநசிந்தாமணி பத்ரிகையின் ஸம்பாதகரான நீலகண்ட சர்மாவென்கிற வித்வான் அப்பத்ரிகையில் வெளியிட்டிருந்தார். ஒருநாள் திருத்தகப்பனுர் ஓர் மறைபொருள் வினவைச் சொல்லி அதற்கு விடையளிக்கும்படி நியமித்தார்; அந்த வினவை மூன்று ச்லோகங்களாக இயற்றி விடையை ஒரு ச்லோகத்தினுல் வெளியிட்டேன். வினு என்னவென்ருல், ஒரு குளத்தில் சில தாமரைமலர்கள் மலர்ந்திருந்தன. அவற்றில் உட்காருவதற்காகச் சில கிளிகள் ஆவலோடு அங்கு வந்து சேர்ந்தன; ஒவ்வொரு மலரில் தனித்தனி ஒவ்வொரு கிளியாக உட்கார வேண்டியதென்று எண்ணி அப்படியே அக்கிளிகள் உட்காரப் பார்க்கையில் ஒரு கிளிக்கு மாத்திரம் தாமரைப்பூ கிடைக்காமற் போகவே அது வருந்திக் கிடந்தது; அதைக்கண்ட மற்ற கிளிகள் உடனே யெழுந்து ஒவ்வொரு மலரில் இரண்டிரண்டு கிளி வீதம் உட்கார்ந்தன. அப்போது ஒரு தாமரைப்பூ (கிளி உட்காராதபடிக்கு) மிச்சப்பட்டு விட்டது; எத்தனை கிளிகள் வந்தன? குளத்தில் எத்தனை தாமரை மலர்கள் இருந்தன? என்று வினு; இந்த வினுவுக்கு விடை—நான்கு கிளிகள் வந்தன; மூன்று மலர்கள் இருந்தன என்பது.

இவ்வினு விடைகளை அடியேன் ச்லோகங்களாக்கின விதம் வருமாறு:—

(வினு ச்லோகங்கள் மூன்று)

சுகா: கேசித் கஸ்மிம்ச்சந ஸரஸி பாதோஜகுஸுமேஷு
அவஸ்தாநம் ப்ராப்தும் ஸகுதுகமுபாகத்ய ஸரஸீம்,
ப்ருதக் சைகைகஸ்மிந்நபி கமல ஏகைகசுக இதி
அமீ ஸங்கல்ப்யைவம் ப்ருதகுபவிசந்திஸ்ம ஸஹஸா.
ததச்சைகம் கீரம் கமலகுஸுமாலரபஜசுசா
விஷண்ணம் வீக்ஷ்யைதே ஸரபஸமதோத்தாய ஸகலா:,
ந்யஷீதந் ப்ரத்யப்ஜம் சுகயுகள ரீத்யா ததநு போ
அபூதேகம் பத்மம் சுகசரணவிந்யாஸவிதுரம்.
அயி போஸ் ஸுஹ்ருதோ ப்ரூத கதி கீராஸ் ஸமாகதா:?
கமலாநி ச ஸந்திஸ்ம கியந்தி கமலாகரே?

(இந்த வினுவுக்கு விடை யிறுத்த ச்லோகம்)

சுகாச் சத்வார ஆயாதா:, கமலத்ரிதயம் ஸ்திதம்,
இத்யேவமுத்தரம் ஸாது த்ரஷ்டவ்யமிஹ பண்டிதை:.

இங்ஙனே பலபல வெழுதினேன். அப்போது அச்சிட்டவை இன்னுமுள்ளன.

ப்ராம்மணபட்டு ரங்காசாரியர் என்ஞெருரு பெரியவர். அவர் திருப்பதி ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமிகளின் சிஷ்யர். அதனுல் திருத்தகப்பனுரிடத்தில் பரமபக்தி கொண்டு அடிக்கடி காஞ்சீபுரம் வந்து நமது க்ருஹத்தில் வஸிப்பர்; வீணை வாசிப்பதிலும் ஸங்கீதம் பாடுவதிலும் அவர் வெகு நிபுணர். காஞ்சீபுரத்தில் வந்திருக்கிற நாட்களில் அவர் பின்மாலைவேளைகளில் ஒருநாளும் தவருமல் வீணைவாசித்துக்

கொண்டும் ஸங்கீதம் பாடிக்கொண்டும் தேவப்பெருமாளுடைய திருவீதிகளில் வலம் வருவர். அவருக்கு ஸாஹித்ய வ்யுத்பத்தி நன்றாகவுண்டு. அடியேன்ஏழாவது வயதிலிருந்தே ஸம்ஸ்க்ருதத்தில் கத்ய பத்யங்களெழுதுவதை அவர் வாசித்துப் பார்த்து உள்ளம் பூரிப்பர். அவருக்குத் தெலுங்கு லிபியில் தான் தாராளமான ப்ரவேசமாகையால் "இதையெல்லாம் தெலுங்கு லிபியில் எழுதிக்கொடு" என்று நிர்ப்பந்திப்பர். அப்படியே அவர்க்கு எழுதிக்கொடுப்பேன். அதை அவர் திருப்பதிக்குக் கொண்டுபோய் ஸ்ரீமத் புரிசை ஸ்வாமிக்கும் ஸ்வாசார்யர்க்கும் காண்பிப்பர். அவர்கள் அவற்றை வாசித்துப் பார்த்து "மற்றொரு ஸமயம் நீர் இவ்விடம் வரும்' போது இது எழுதினவனையும் இங்கு அழைத்துக் கொண்டு வாரும்" என்று அவரிடம் சொல்லியிருந்தார்கள். அடுத்தபடியாக அவர் காஞ்சிக்கு வந்தபோது



—வித்வத்ஸார்வபௌம—ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி. திருப்பதி (வைகுண்டவாஸி)

இதைத் திருத்தகப்பனரிடம் சொல்லி "பையனை என்னோடு கூட ஒரு முறை திருப்பதிக்கு அனுப்பவேணும்" என்று கேட்டுக்கொண்டார். திருத்தகப்பனர் அதற்கு ஸம்மதிக்கவில்லை. இப்படியிருக்கையில், திருப்பதியில் உற்றாருறவினர் விசேஷமாக இருப்பதால் ஒரு கல்யாண விசேஷத்தையுத்தேசித்து ஸஹ குடும்பமாக அவ்விடம் போய்வர நேர்ந்தது. மேலே சொன்ன ப்ராம்மண பட்டு ரங்காசார்ய ஸ்வாமியும் அங்கு வந்து சேர்ந்து, அப்போது நம்மாழ்வாருடைய ஸன்னிதியில் நடந்துகொண்டிருந்த ஸம்ஸ்க்ருதபாடசாலையில் பெரிய ஸதஸ்ஸொன்று கூட்டிவிட்டார். அவ்வூரிலுள்ள வித்வான்களையும் திரட்டி விட்டார். அங்கு ஸுப்ரஸித்த வித்வத் ஸார்வபௌம திலகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசைஸ்வாமி [முன் 8-ம் பக்கத்தில் ஸேவை ஸாதிப்பவர்] ஸதஸ்ஸுக்கு அக்ராஸநாதிபதியாக எழுந்தருளியிருந்தார். அடியேன் எழுதியிருந்த கத்யபத்யச் சுருணைகளை அந்த ஸதஸ்ஸில் வாசிக்க நியமனம் பெற்று வாசித்தேன். அவை அடியேனெழுதியவையென்று ஒருவர்க்கும் ப்ரத்யயமுண்டாகவில்லை. அப்போது அவர்கள் கொடுத்த சில தமிழ்க்கதைகளை அவர்களின் முன்னிலையிலேயே ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்த்து வாசித்துக் காட்டிய பின்பே அவர்களுக்கு நம்பிக்கையுண்டாயிற்று. அப்போது ஸ்ரீமத் புரிசை ஸ்ரீ ரங்காசார்ய ஸ்வாமி விசேஷ ஸன்மானமளித்து அமோகமான ஆசீர்வாதம் செய்தருளியது அடியேனுக்கு நித்ய ஸ்மிருதியிலுள்ளது. அதன்பிறகே அடியேன் ரகுவம்ச மேக ஸந்தேசாதிகள் வாசிக்கத் தொடங்கினேன்.



சரண்யாசார்யர்.—(ஸஹபாடிகள்.)—வாதிகேஸரி.

காஞ்சியில் ஸன்னிதி வீதியில் வானமாமலை மடத்தில் அப்போது மிகச் சிறந்த ஸம்ஸ்க்ருத பாடசாலையொன்று நடந்துகொண்டிருந்த விஷயம் முன்னமே விவரித்திருக்கிறேன். அப்பாடசாலையில் திருத்தகப்பனரும் ஸாஹித்யோபாத்

யாயராக எழுந்தருளியிருந்தபடியால் அப்பாடசாலையில் சேர்ந்து எட்டாவது வயதில்
ரகுவம்சம் முதலியன வாசிக்க ஆரம்பித்தேன். அப்போது பலபிள்ளைகள் ஸஹாத்
யாயிகளாக இருந்தார்கள். அவர்களில் ஒருவர் கூட இப்போது இல்லை என்பது
அத்யந்தசோசநீயம். வடவண்டைமாட வீதியில் ஜடப்ரோல். கோயில் கந்தாடை
அண்ணன் ராமாநுஜாசார்ய ஸ்வாமி யென்பாரொருவர் இருந்தார். இவருடைய
திருத்தகப்பனர் சப்தகுஜேத்தீபம்—ரங்காசாரியர் ஸ்வாமி என்று ப்ரஸித்தரான
மிகப் பெரிய வித்வான். தாதாசார்ய வம்சஸ்தர்களில் திருப்புட்குழி அப்பா ஸ்வாமி
யென்று ஸுப்ரஸித்தராயிருந்த மஹான் அந்த ரங்காசார்யஸ்வாமி ஸன்னிதியிலே
மஹா பாஷ்யாந்தம் வியாகரணம் அதிகரித்தாரென்று சொல்லுவர்கள். அவரு
டைய திருக்குமாரரான (மேலே சொன்ன) ஜடப்ரோல் ராமாநுஜாசாரியர் ஸ்வாமி
ஸாஹித்ய வியாகரணங்களில் நிபுணராய் அடியேனுடைய மாதாமஹரான
ஸ்ரீ. அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலே பகவத் விஷயம்
முதலான ஸம்ப்ரதாய க்ரந்தங்களெல்லா மதிகரித்தவர். [அவர் தாடி ராமாநுஜா
சார்யரென்று ப்ரஸித்தர்] அவருக்கு மூன்று திருக்குமாரர்கள். மூவரும் அடியே
னுக்கு ஸஹாத்யாயிகளாக இருந்தவர்கள். சரண்யன், வாதிகேஸரி என்கிற
த்விதீயத்ருதீய குமாரர்கள் என்னோடு அதிககாலம் நெருங்கியிருந்து இருபது வயது
வரையில், கூடவே வாசித்தவர்கள். அவர்களின் உருவப்படத்தை (பக்கம் 9ல்)
காண்மின். இவர்களிருவரும் விலக்ஷண மேதாவிகளாயிருந்தவர்கள். இவர்களுள்
கநிஷ்டரான வாதிகேஸரி யென்பவர் மஹா மேதாவியாயிருந்தவர். உத்தம வித்வந்
மணியாக விளங்கக் கூடியவராயிருக்கையில் சிறு பிராயத்திலேயே ஆசாரியன்
திருவடி சார்ந்துவிட்டார். அவருடைய தமையனர்களும் அவருக்கு முன்னமே
மறைந்துவிட்டார்கள்.

வானமாமலை மடத்துப் பாடசாலை நின்றுபோன பிறகு சில மாதங்கள்
அகத்திலேயே திருத்தகப்பனரிடமே காவ்ய பாடங்கள் வாசித்துக்கொண்டிருந்
தேன். எமது பூருவர்களுக்கு நவாபு காலத்தில் தானமாகக் கிடைத்த சுரோத்திரி
யக்ராமம் திருவடி ராயபுரமென்பது தூசி மாமண்டூர் ஏரி யெதிர்வாயிலுள்ளது.
அதனருகில் சித்தாத்தூர் என்றொரு அக்ரஹாரம்; அதிலே சொந்தமான க்ருஹ
முண்டு. [இப்போது அந்த சுரோத்திரிய க்ராமத்தை அரசாங்கத்தார் பறித்துக்
கொண்டு ஏழெட்டு வருஷமாயிற்று. அதனால் சித்தாத்தூர் க்ருஹமும் விற்பனை
செய்யப்பட்டு விட்டது. அந்த க்ராமமிருந்த காலத்தில் நடந்த செய்திகளை யெழுது
கிறேன்.] திருத்தகப்பனர் அடிக்கடி அந்த கிராமத்திற்கு எழுந்தருள்வர். மாதக்
கணக்காகவும் அங்கே வஸிக்கும்படியா யிருக்கும். அப்போது யானும் அவ்விடத்
திலேதான் வஸித்தது. அப்படி அங்கு வஸித்தகாலம் (மொத்தத்தில்) இரண்டு
மூன்று வருஷங்கள் தேறும். அங்கே சில மாத்வர்களும் குருக்களும் வைதிக
வ்ருத்தியில் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய குமாரர்கள் மூவர்
நால்வர் அங்கு எனக்கு ஸஹபாடிகளாக அமைந்தார்கள். அவர்களோடு சிறுகாவி
யங்களையெல்லாம் வாசித்தேன். பிறகு க்ராமவாஸத்தை அறவே விட்டு ஸ்வஸ்
தானம் வந்து சேர்ந்து, தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்துகொண்டிருந்த
சடகோப நிலயமென்னும் பாடசாலையில் சேர்ந்து வாசிக்கத் தொடங்கினேன்.

ராமசந்த்ராசார் என்கிற மாத்வ பண்டிதர் அப்போது அங்கு ப்ரதாந உபாத்
யாயராக இருந்து வந்தார். அவருடைய போதநாசக்தி மிகவும் ஆச்சரியமானது.
பாடங்களை மறுபடியும் சிந்தனை செய்யவேண்டாதபடி பாடம் சொல்லிக்கொடுப்பவர்
அவர். அவரிடத்தில் வாஸவதத்தா, காதம்பரீ முதலான கத்யக்ரந்தங்களை
ஏழெட்டு மாதகாலம் வாசித்தேன். அப்போது ஸ்ரீமத். காதி அனந்தாசார்ய
ஸ்வாமி அஸ்மத்குல கூடஸ்தரான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா ஸந்நிதியில்
வேதாந்த வைஜயந்தீ என்னும் பெயரால் ஒரு ஸம்ஸ்க்ருத பாடசாலை ஸ்தாபித்தார்.

அது மூன்று நான்கு வருஷகாலம் நடைபெற்றது. அதில், மேலே சொன்ன ராமசந்த்ராசாருடைய கநிஷ்டப்ராதாவான வித்யாசர் என்பவர் தலைமையுபாத்யாயராக நியமிக்கப்பட்டிருந்தார். காஞ்சியில் உத்தமாச்ரமியாயிருந்து ஏழெட்டு வருஷங்களுக்கு முன் பரமபதித்தவரான புதுப்பேர் இளையவில்லி. வேங்கடாசார்ய ஸ்வாமியும் ஓர் உபாத்யாயராக நியமிக்கப்பட்டார். அவரிடத்தில் ஸித்தாந்த கௌமுதீபாடமும், வித்யாசார் என்கிற மாத்வ வித்வானிடத்தில் சம்பூநாடக அலங்காரக்ரந்தங்களின் பாடங்களும் நடந்து வந்தன. இப்பாடசாலைக்கு ஸ்தாபகரான ஸ்ரீமத். உவே. காதி அனந்தாசார்ய ஸ்வாமியும் ப்ரதாநோபாத்யாயஸ்தானத்தை யலங்கரித்து சாஸ்த்ரபாடங்களை ஆரம்பம் செய்தருளினர். தர்க்க ஸங்கரஹம் ஆரம்பித்து வாதக்ரந்தங்கள் வரையில் அந்த ஸ்வாமி ஸன்னிதியில் அதிகரிக்க ப்ராப்தமாயிற்று. இதைப்பற்றி மேலேயெழுதுவேன். என்னுடைய பதினைன்காவது வயது முடிந்தவுடனே திருத்தகப்பனர் திருநாடலங்கரித்தபடியால் அதுவரையிலுள்ள செய்திகளை முன்னம் எழுதுகிறேன்.

அஸ்மத்குல கூடஸ்தர் ஸன்னிதியில் வேதாந்த வைஜயந்தீ பாடசாலை ஸ்தாபித்தபோது திருத்தகப்பனரே அதன் நிர்வாஹ பாரங்களை ஏற்றுக்கொண்டு மிகச் சிறப்பாக நடத்தி வந்தார். அப்போது இப்பாடசாலை மிகவும் உன்னதமான ஸ்திதியிலிருந்து வந்தது. ஐம்பது வித்யார்த்திகளுக்குமேல் வாசித்து வந்தார்கள். 7, 8 மாதங்களுக்குள் திருத்தகப்பனர் நோய்வாய்ப்பட்டு வெளியில் நடையாட முடியாமல் திருமாளிகையிலேயே யெழுந்தருளியிருக்க நேர்ந்து விட்டது. மறுபடியும் வெளி ஸஞ்சாரமின்றியிலே [இரண்டு ஸம்வத்ஸரகாலம்] திருமாளிகையிலேயே யிருந்து திருநாட்டுக்கெழுந்தருள நேர்ந்தது. அந்த இரண்டு ஸம்வத்ஸரகாலத்தில் ஒரு ஸம்வத்ஸரம் பூர்த்தியாக திருமாளிகையிலே வித்யார்த்திகளை வரவழைத்து காவ்ய நாடகாலங்கார பாடங்களை நடத்திக்கொண்டிருந்தார். பாடசாலைகளில் நடப்பது போலவே வகுப்புவாரியாகத் திருமாளிகையில் பாடங்கள் நடந்து வந்தன. ஸ்ரீவைஷ்ணவர்கள் மட்டுமல்லாமல் ஸ்மார்த்த மாத்வர்களும் வந்து வாசித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது எனக்கு சிசுபாலவதகாவ்ய பாடம் நடக்கிறது. மேல் வகுப்பில் சிலர் நைஷதம் முதலியன வாசிக்கிறார்கள். அதற்கும் மேல் வகுப்பில் சிலர் அநர்க்கராகவம் [முராரி நாடகம்] வாசிக்கிறார்கள். க்ருஹத்திலேயே பாடம் நடப்பதால் இதரர்கள் பாடம் வாசிக்கும்போதும் நான் கூடவே உட்கார்ந்திருப்பேன். திருத்தகப்பனர் கல்லும் கரையும்படி பாடம் சொல்லுகிறவராகையால், எவ்வளவு பெரிய ச்லோகங்களாயிருந்தாலும் வாசிக்கும்போதே கண்டபாடமாய்விடும். நைஷதம் வாசிக்கிறவர்களோடும் முராரி வாசிக்கிறவர்களோடும் யான் கூடவேயிருந்து பாடம் கேட்டுக்கொண்டிருப்பது வழக்கமாகையால் அந்தப் பாடங்களில் வரும் ச்லோகங்களும் எனக்குப் பெரும்பாலும் கண்டபாடமாய்விடும்.

இப்படி யிருக்கையில், மைஸூரில் பண்டிதரத்னமென்று ப்ரஸித்தரான ஸ்ரீமத் கஸ்தூரி ரங்காசாரியர் ஸ்வாமி திருமலை யாத்திரையாக வெழுந்தருளினவர் காஞ்சீபுரிக்கும் விஜயம்செய்திருந்தார். அவரோடுகூட மைஸூர் அரசாங்கத்து அதிகாரிகளும் சிலர் வந்திருந்தார்கள். தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்து வரும் சடகோப நிலய பாடசாலையின் நிர்வாஹகரான ஸ்ரீ சாமா திருமலை தாதாசார்யருடைய க்ருஹத்தில் அவர்கள் தங்கியிருந்து அந்த பாடசாலையில் ஒருநாள் பரீக்ஷா ஸதஸ்ஸு நடத்தினர்கள். அப்பாடசாலையில் வாசிக்கிற வித்யார்த்திகளை மட்டுமல்லாமல் பிறவிடங்களில் வாசிக்கிற (ஸம்ஸ்க்ருத) வித்யார்த்திகளையும் வருவித்துப் பரீக்ஷை நடத்தினர்கள். அதற்கு அடியேனும் போயிருந்தேன். உத்துங்கவித்யார்த்திகளைத் தனியாகவும் கீழ்வகுப்பு வித்யார்த்திகளைத் தனியாகவும் உட்கார வைத்துப் பரீக்ஷை நடத்தி வருகிறார்கள். முராரி நாடகத்தில் பரீக்ஷை நடந்து கொண்டிருக்கிறது. அதில் முதல்அங்கத்தின் முடிவிலுள்ள "யதிந்தோரந்வேதி வ்யஸந

முதயம் வா நிதிரபாம்" என்கிற சுலோகத்தில் ஓர் உத்தமவித்யார்த்தி பரீக்ஷை செய் யப்படுகிறார்; அவர்க்கு ச்லோகமே உபஸ்திதியில்லை. அதனால் அவர் மிகவும் சிரமப் படுகிறார். அப்போது சிறுமாணாக்கர்திரளில் உட்கார்ந்திருந்த யான் "அதை நான் சொல்லுகிறேன்" என்றேன். அப்பாடசாலையின் தலைமையுபாத்யாயரான சாமா. திருமலை தாதாசாரியர், அடியேன் ஏதோ வம்பு பேசுவதாக நினைத்து "கழுதே! வாயைமூடியிரு" என்று அதட்டினார். பரீக்ஷகரான கஸ்தூரி ஸ்வாமி "சொல்லப்பா! பார்ப்போம்" என்றார். உடனே யெழுந்து அந்த ச்லோகத்தைப் பூர்த்தியாகச் சொல்லி அர்த்தமும் தாத்பரியமும்விரியச்சொல்லி அதில் இரண்டாவது பாதத்தில் "ஜயதி ஜநிகர்த்து: ப்ரக்ருதிா" என்ற விடத்திற்குச் சொல்லவேண்டிய "ஜநிகர்த்து: ப்ரக்ருதி:" என்னும் வியாகரண ஸூத்ரத்தின் விஷயங்களையும் சொல்லி முடித்தேன். அப்போது அடியேனுக்கு வயது பன்னிரண்டானாலும் பார்ப்பவர்களுக்கு 7, 8 வயதுதான் மதிப்பிருந்தது; பரமாணுவென்றே சிலர் அழைப்பதுமுண்டு. அந்த நிலைமையில் யான் முராரி நாடக ச்லோகத்தைச் சொன்னதும், அதன் பொருளை உபந்யாஸ வகையில் உரைத்ததும் அவர்களுக்கு மீக மிக வியப்பாக இருந்தது. "காவ்ய பாடம் வாசிக்கிற உனக்கு இந்த ச்லோகம் எப்படித் தெரிந்தது?" என்று கஸ்தூரி ஸ்வாமி கேட்டார். "என் க்ருஹத்தில் எனது தகப்பனாரிடத்தில் பலபேர்கள் வாசிக்கிறார்கள்; அவர்களில் முராரி



ஸ்ரீமத் பண்டிதரத்நம்
கஸ்தூரி ரங்காசார்யஸ்வாமி, மைஸூர்.

நாடகம் வாசிப்பவர்களுமுண்டு; அவர்கள் வாசிக்கும்போது நான் கூடவிருந்து கேட்டுக்கொண்டிருப்பது வழக்கம்; அதனால் தெரிந்தது" என்றேன். "அவரவர் கள் வாசிக்கிற எல்லா க்ரந்தங்களிலும் நீ பரீக்ஷை சொல்லுவாயா?" என்று கேட்டார்; "நிச்சயமாகச் சொல்ல முடியாது; அனேகமாய்ச் சொல்லுவேன்; கேட் டுப் பார்க்கலாமே" என்றேன். பிறகு மற்ற வித்யார்த்திகளை விட்டுவிட்டு என்னை மாத்திரம் விசேஷமாகப் பரீக்ஷித்தார்கள். அவர்கள் த்ருப்தி யடையும்படியாகவே சொல்ல இயன்றது.

பிறகு பரீக்ஷிதர்களுக்கு ஸன்மானம் செய்யும்போது, ஒரு ரூ. இரண்டு ரூ. மூன்று ரூ. உத்தரீயம், புத்தகம்......இப்படியாகக் கொடுத்தார்கள். அடியேனுக்கு இரண்டு பவுன் கொண்ட டாலர் ஒன்று கொடுத்தார்கள். அதைக்கொண்டு தாய் தந்தையர் எனக்குத் தங்கவளை செய்வித்துக் கரபூஷணம் போட்டார்கள். அதை யான் 26, 27 வயது வரையில் அணிந்துகொண்டிருந்தேன். அதனால் "தங்கக் காப்பு அண்ணா" என்றே எனக்குப் பெயர் வழங்கி வந்ததப்போது. காவ்ய நாடக அலங்கார க்ரந்தங்களை மேல் வகுப்பினர்கள் வாசிக்கும்போது உடனிருந்து கேட்டது, பிறகு அந்த க்ரந்தங்களை யெல்லாம் தனியாகவும் வாசித்தது ஆகிய விவற்றால் அடியேனுக்கு காவ்ய—சம்பூ—நாடக அலங்கார க்ரந்தங்களின் உபஸ்திதி அதிகமாகவுண்டாயிற்று. இடையில் பலவருஷங்கள் அவற்றை ஸ்மரிக்க ப்ரஸக்தியில்லாமலிருந்துங்கூட இற்றைக்கும் அவற்றின் உபஸ்திதியைப் பெரும்பாலுமுடையேன். இவ்விஷயத்தில் அடியேன் மூவரிடத்தில் தினந்தோறும் க்ஷணந்தோறும் உபகாரஸ்மிருதி செலுத்திக்கொண்டிருக்கிறேன்; 1. திருத்தகப்பனார்; 2. (மாத்வ) ராமசந்த்ராசார்; 3. அவருடைய ஸஹோதரர் வித்யாசார் ஆகிய இம்மூவரும் என்னுடைய நித்ய க்ருதஜ்ஞதா பாத்ரபூதர்கள். திருத்தகப்பனார் சொல்லிக்கொடுத்ததில் ஆச்சரியமில்லை; ராமசந்த்ராசாரும் வித்யாசாரும் புத்ரநிர்விசேஷமாகப் பாடங்கள் சொல்லிவைத்ததை நான் நினையாத க்ஷணமில்லை. அவர்களுடைய போதநாசக்தி நிகரற்றது. அதைப்பற்றி எவ்வளவு எழுதினாலும் அடியேனுக்கு த்ருப்தி யுண்டாகமாட்டாது. வித்யாசார் என்பவரிடத்தில் தான் அடியேன் அதிகமாக வாசித்தது. அவர் எங்களுடைய வீதிக்குப் பின்புறத்திலுள்ள வேகவதித் தெருவில் வாழ்ந்து வந்தவர். அவர்க்கு ஒரு புத்திரன் மட்டுமிருந்தான்; அவன் அகாலத்தில் மரணமடைந்ததனால் ஒரு மாதம் புத்ர சோகத்தினால் வருந்திப் பாடசாலைக்கு வராமல் க்ருஹத்திலேயே யிருந்தார். அந்த ஸமயத்திலும் என்னைத் தம்முடைய க்ருஹத்திற்கு வரவழைத்துப் பரமப்ரீதியோடு பாடஞ் சொல்லுவர். "அண்ணா! எனக்கு நீதான் புத்திரன்" என்று வேளைதோறுஞ் சொல்லுவர். விச்வகுணாதர்சம், வரதாப்யுதய மென்கிற ஹஸ்திகிரி சம்பூ, உத்தரசம்பூ, காளிதாஸ நாடகத்ரயம், பவபூதி நாடகத்ரயம், குவலயா நந்தம் இப்படி அனேக க்ரந்தங்களை அவர் அவலீலையாகப் பாடஞ்சொல்லிக் கொடுத்தார்.

ராமசந்த்ராசாருக்கு சாஸ்த்ரபாண்டித்யம் அதிகம்; வித்யாசாருக்கு ஸாஹித்ய பாண்டித்யம் அதிகம். ராமசந்த்ராசாரிடத்திலும் ஸாஹித்ய பாடங்கள் வாசிக்க ப்ராப்தமானதுண்டு. அப்போது அவரால் அநேக சாஸ்த்ரமரியாதைகள் போதிக்கப்பெற்றேன். திருத்தகப்பனாருடைய வ்யுத்பத்தியும் ஞாபகசக்தியும் அப்ரதிமமானது, அபரிமிதமானது. பாடஞ்சொல்லுகிற ஸமயம் போக இதரஸமயங்களிலுங்கூட நாநா க்ரந்த ஸம்பந்திகளான பல விஷயங்களையுரைத்துக்கொண்டேயிருப்பர். அந்த கால விசேஷங்களை நினைக்கும்போதெல்லாம் "தே ஹி நோ திவஸா கதா:" என்கிற பவபூதி ச்லோகம் நினைவுக்குவந்து கண்ணீர் பெருகும். வேறெங்குங் கேட்கமுடியாத விநோதகதைகளையும் விசேஷமாக ஸாதிப்பர் தகப்பனார். அவருடைய அநுபவம் எனக்குப் பதினான்கு வயது வரைக்குமே யிருந்தாலும், ஒரு க்ஷணங்கூட அவர் என்னை யகலவிடாமல் இரவும் பகலும் அருகேயே வைத்துக்கொண்டிருந்து "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்று (திருவாய்மொழியில்) நம்மாழ்வார் ஸாதிக்கிறபடி சிக்ஷித்த விதங்கள் வாசாமகோசரம். "எண்ணெய்க் குடத்தையுருட்டி இளம்பிள்ளை கிள்ளியெழுப்பி" என்றும் "கன்றுகளோடச் செவியில் கட்டெறும்பு பிடித்திட்டு" என்றும் "திருவுடைப் பிள்ளை தான் தீயவாறு தேக்கமொன்றுமிலன் தேசுடையன், உருக வைத்த குடத்தொடு வெண்ணெய் உறிச்சி யுடைத்திட்டுப் போந்து நின்றான்" என்று மிவ்வாறாகக் கண்ணபிரானுடைய பால்ய சேஷ்டைகள் அநுஸந்திக்கப்

படுவதுபோல அடியேனுடைய பால்ய சேஷ்டைகளும் ஒரு பாரதத்திற்குப் போதும். உரலோடாப் புண்டிருந்த தண்டனைதான் கண்ணனுக்கு நாம் கேட்பது; அதற்கு மேலாகவும் அடியேன் பட்டதுண்டு; இடுப்பிலே தாம்பைக் கட்டிக் கிணற்றிலே தோய்ப்பர்திருத்தகப்பனர். ஏக புத்திரனுகையாலே *செல்வத்தினல் வளர் பிள்ளையென்கிற பெருமைக்கும் குறையில்லை. *प्रेम्णाऽथ दामपरिणामजुषा बबन्ध— ப்ரேம்ணாத தாமபரிணாமஜுஷா பபந்த* என்று [அதிமாநுஷஸ்தவே] கூரத்தாழ்வானருளிச்செய்தது போல ப்ரேம பரீவாஹமான தண்டனைகளுக்கும் குறையில்லை. *அறியு மூலகெல்லாம் யானேயுமல்லேன்* என்று பொய்கையாழ்வாரருளிச்செய்ததுபோலத் திருத்தகப்பனர் செய்தருளின சிக்ஷைகள் அக்காலத்தில் ஊரும் நாடு மூலகமுமறிந்தவை. ஹிதபரர்களில் தலைசிறந்தவ ரென்பதை அப்போதே யறிந்தவனடியேன். அவர் அடியேனுக்குக் கற்பித்த ஸ்தோத்ர பாடங்கள் எண்ணிறந்தவை. முதலில் வேதாந்த தேசிக ஸ்தோத்ரங்களை யெல்லாம் கற்பித்தார்; பிறகு ஆளவந்தார் ஆழ்வான் பட்டர் முதலான ஸகலாசார்ய ஸ்தோத்ரங்களையும் கற்பித்தார். இவற்றைப் பின்மாலைவேளையிலும் இரவிலும் சொல்லிக்கொடுப்பது வெகு அற்புதமாயிருக்கும். அப்போது அச்சுப்புத்தகமில்லை; எழுதிக்கொடுப்பர்.

என்னுடைய அத்தையின் குமாரனெருவன் அக்காரம் கிருஷ்ணஸாமி யென்பவன் மூன்றுவது க்ருஹத்திலேயே யிருந்தான். அவனை ஆங்கிலம் படிக்கவைத்தார்கள். அவன் ஸ்கூலுக்குப் போகிற காலம் தவிர மற்ற காலங்களில் என்னேடு கூடவேயிருந்து ஸகல ஸ்தோத்ரங்களையும் சந்தை சொல்லிக்கொண்டான். அவன் சிலவாண்டுகளில் ஆசாரியன் திருவடி சேர்ந்துவிட்டான். திவ்யப்ரபந்தங்களில் பெரும்பாகம் திருத்தகப்பனரிடத்திலேயே அதிகரித்தேன். அவர் திருநாடலங்கரிப்பதற்குச் சில மாதங்கள் முன்னமேதான் அடியேனுக்குத் திருவிலச்சினை [சக்ராங்கனம்] ப்ரஸாதித்தருளினர்; அதனல் திருவாய்மொழியாயிரம் மட்டும் அந்யத்ர அதிகரிக்க நேர்ந்தது. முமுக்ஷுப்படி ஸ்ரீவசந பூஷணம் முதலிய ரஹஸ்யங்களைத் தாமே சந்தை சொல்லுவித்துக் கண்ட பாடம் செய்விக்கவேணுமென்று திருத்தகப்பனர் மிகவும் பாரித்தார். அப்போது திருமேனியில் அசக்தி அதிகமாயிருந்தபடியால், அந்த ஸமயத்தில் அண்ணஸன்னிதியில் திருவாராதன கைங்கரியம் பார்த்துக்கொண்டிருந்த ஸ்ரீ உவே. குவளை பார்த்தஸாரதி ஐயங்காரென்பவரை நியமித்து அவர் மூலமாக அதிகரிப்பித்தருளினர். அந்த ஸ்வாமி நாலாயிர திவ்யப்பிரபந்தங்களிலும் ரஹஸ்ய க்ரந்தங்களிலும் (மூலத்தில்) மஹாநிபுணர். ஆசார்ய ஹ்ருதயம் சந்தையாரம்பித்து நடந்துவருகையில் திருத்தகப்பனர்க்குத் திருமேனியில் அசக்தி அபிவிருத்தியடைய ஆரம்பித்தது. அப்போது ஸ்ரீபெரும்பூதூருக் கெழுந்தருளி ஸ்வாமியை மங்களாசாஸனம் செய்துவரவேணுமென்கிற ருசி உத்கடமாக விளைந்திருந்தது. அப்போது மோடர்கார் தலைகாட்டியிராத ஸமயம். குதிரை வண்டியில் போய்வர அதிர்ச்சியை ஸஹிக்கமாட்டாத நிலைமை; இந்நிலையில் அவ்வளவுதூரம் போய்வரவேணுமென்கிற உத்கண்டை வேண்டாமென்று பலர்சொல்லியும் கேளாமல் மாட்டுவண்டியை அமர்த்திக்கொண்டு நிதானமாகச் சென்று அவ்விடம் சேர்ந்தாயிற்று. அடியேனும் பிதாமஹியும் கூடவே சென்றிருந்தோம். அப்போது அங்கு குருபுஷ்யோத்ஸவம் நடந்து கொண்டிருந்ததாக ஞாபகம். அப்போது அவ்விடத்தில் ஸ்ரீமத். நியாய வேதாந்த மஹாவித்வத்வரேண்யரான குண்டலம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி விசேஷ வைபவத்தோடு எழுந்தருளியிருக்கிறர். அங்கு நடந்த ஓர் செய்தியைத் தெரிவிக்கிறேன் கேண்மின். திருவுள்ளூர் ஸமீபத்தில் பாலவேடு என்றெரு அக்ரஹாரமாம். அவ்வூரில் ரங்கராமாநுஜாசாரியார் என்றெரு வித்வான். அவர் வடகலை ஸம்பிரதாயஸ்தர்; ஸ்ரீபெரும்பூதூரில் விசேஷோத்ஸவ ஸந்தர்ப்பங்களில் அவர் அவ்விடம் வருவது வழக்கமாம். வருகிறபோதெல்லாம் அங்குள்ள வித்வான்களோடு ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சைகள்

செய்வராம். அந்த வழக்கப்படி அன்றைக்கு அவர் அவ்விடம் வந்திருந்து, ஸ்வாமி திருவீதிப்புறப்பாடு நடைபெறும்போது மேலேசொன்னகுண்டலம் ஸ்ரீமத் ஸ்வாமியோடு சர்ச்சை செய்துகொண்டிருக்கிறார். குண்டலம் ஸ்வாமியின் பாண்டித்யம் வாசாமகோசரம்; ஸர்வதோமுகமானது. அந்த ஸ்வாமி தெலுங்கு தேசத்திலே அவதரித்தவராயினும் நெடுநாள் ஸ்ரீபெரும்பூதூரிலே வஸித்து ஸதாசார்ய ஸேவைபண்ணி ஸத்ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களை மிக நன்றாக ஆழ்ந்து அதிகரித்தவர்; ஸாமாந்யசாஸ்த்ரங்களிலோ நிகரற்ற ப்ரசண்ட வித்வான் அந்த ஸ்வாமியை சதுச்சாஸ்த்ரபண்டிதரென்று சொல்லுவர்கள். அது பற்றி வியப்பில்லை. அவர் நமது திராவிட வேதாந்த ரஹஸ்ய ஸம்பிரதாயங்களிலும் மஹாப்ராஜ்ஞராக எழுந்தருளியிருந்தது மிகவும் வியக்கத்தக்கதாயிருந்தது. அந்த ஸ்வாமியோடு, மேலே சொன்ன பாலவேடு பண்டிதர் வாதம் செய்ய வந்தால் "விவாதச்ச விவாஹச்ச ஸமயோரேவ சோபதே" என்பதை யறிந்த மஹான்கள் அந்த ஸ்வாமியினுடைய வித்யார்த்திகளிடத்திலே அந்த பாலவேடு பண்டிதரைக்கொண்டு விடுவர்களாம்.



மஹாவித்வத்வரேண்ய குண்டலம். நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர்.

அக்காலத்தில் குண்டலம் ஸ்வாமி ஸன்னிதியிலே ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களைப் பலர் அதிகரித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது அவ்விடத்து ஸம்ஸ்க்ருத பாடசாலையில் ஏறக்குறைய நூறு வித்யார்த்திகள் நாநாதேசங்களிலிருந்து வந்து வாசித்துக் கொண்டிருந்தார்கள். உள்ளூரிலும் பலர் "விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்னும்படிக்கு நிதர்சநமாக வித்யார்த்தி தசையிலேயே உத்துங்க வித்வான்களென்னும்படி யிருந்தார்கள். அன்னவர்களுள் அப்போது

ஸ்ரீமத். ஆஸூரி ராமாநுஜாசார்ய ஸ்வாமி ப்ரதமபரிகணநீயராகவிருந்தார். இவ்வுலகின் பாக்ய விசேஷத்தினால் இந்தமஹாஸ்வாமி இற்றைக்கும் ஸ்ரீபெரும்பூதூரில் பாங்காக எழுந்தருளியிருந்து உபயவேதாந்த ப்ரவசனத்தைத் தமது திருமாளிகையிலேயே மிகநன்றாகச் செய்து வருகிறார்.



ஸ்ரீ தத். உவே வித்வத் ஸார்வபௌம. ஆஸூரி ராமாநுஜாசார்ய ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர்.

திருத்தகப்பனார் ஸ்ரீபெரும்பூதூரெழுந்தருளியிருந்தவன்று, பாலவேடு பண்டிதர் ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமியோடு வாதிக்க ஆசைப்பட்டு ஏதோ ஆரம்பித்தார். அப்போது அடியேன் பதினான்காவது வயதிலிருப்பவனாகையாலும், ஸம்ப்ரதாய மார்க்கத்தில் ப்ரவேசமேயில்லாதவனாகையாலும், விஷயமின்னதென்றே தெரிந்து கொள்ள முடியாதவனாயிருந்தேன். அவருக்கு ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமி சிலவார்த்தைகள்மட்டும் ஸாதித்துவிட்டு அவரை ஆஸூரிஸ்வாமியிடம் காட்டிக் கொடுத்துவிட்டுத் தாம் இயல் கோஷ்டிக்கு எழுந்தருளிவிட்டார். வேதபாராயண கோஷ்டிக்குப் பின்னாலே இவ்விரண்டு ஸ்வாமிகளுக்கும் சர்ச்சை நடந்து வருகிறது. க்ரமேண வேடிக்கை பார்ப்பதற்குப் பலர் கூடிவிட்டார்கள். அந்தத் திரளில் அடியேனுமிருந்து கொண்டு வேடிக்கை பார்க்கிறேன். ஸம்ப்ரதாய விஷயங்களை முதன் முதலாக அடியேன் கேட்கப் பெற்ற ஸமயம் அதுதான். ஆஸூரி ஸ்வாமி அப்போது ஏறக்குறைய இருபத்தைந்து திருநக்ஷத்ரமாயிருப்பர். அப்போதே இவர் மஹாவாவதூகராதலால் பாலவேடு பண்டிதர்

வாயெடுக்கவொட்டாதபடி விஷயங்களைப் புங்காநுபுங்கமாகத்*தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல் வர்ஷித்தவதிசயம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றது. அப்போதுதான் அடியேனுக்கு முதன்முதலாக ஸம்ப்ரதாயார்த்தங்களில் ருசி ஏற்பட்டது. அந்தஸமயத்தில் எம்பார் ஜீயர்மடத்தில் தோட்டம் ஜீயர்ஸ்வாமி யென்றொரு உத்தமாச்ரமி யெழுந்தருளியிருந்தார். அவர் விசேஷ பாண்டித்யமுடையவரல்ல ராயினும் ஒன்றான எம்பார் ஜீயர் ஸ்வாமியிடத்தில் பஹுச்ருதராய் ஸம்ப்ரதாய க்ரந்தங்களை வெகு ரமணீயமாக ப்ரவசனம் செய்துகொண்டிருந்தார். அதே வீதியில் ஸ்ரீமத். காழியூர். ஸ்ரீ ரங்காசார்ய ஸ்வாமியும் குண்டலம் ஸ்வாமியின் க்ருபா பாத்ரபூதராய் அவ்விடத்துப் பாடசாலையில் சாஸ்த்ரோபாத்யாய பதவியை யலங்கரித்துக்கொண்டு தமது திருமாளிகையில் வேதாந்த ப்ரவசநம் செய்துகொண்டிருந்தார். இப்படிப்பட்ட மஹான்களின் அருள் நோக்கத்திற்கும் ஆசீர்வாதத்திற்கும் அடியேன் அப்போதே இலக்காகப் பெற்றேன். திருத்தகப்பனார் அப்போது இரண்டு நாள் ஸ்ரீபெரும்பூதூரில் எழுந்தருளியிருந்து ஸேவித்துவிட்டுத் திரும்பி ஸ்வஸ்தானம் சேர்ந்தாயிற்று.



ஸ்ரீமத் உவே. காழியூர் ஸ்ரீ ரங்காசார்ய ஸ்வாமியின்
காலக்ஷேப கோஷ்டி (ஸ்ரீபெரும்பூதூர்)

இது தைமாதத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சி. பிறகு அடுத்த பங்குனித்திங்களில் திருநாடலங்கரித்தாயிற்று. அவருடைய சிகித்ஸைக்காக தஞ்சாவூரிலிருந்து ஒரு முதலியார்

முன்னமே வந்திருந்து நமது க்ருஹத்திலேயே போஜனம் செய்து கொண்டு திருத்தகப்பனாருக்கு தீவிரமான சிகித்ஸைகள் நடத்திவந்தார். அவர் ஆங்கிலத்தில் பெரிய புலவர். விவகாரம் என்பது அவருடைய பெயர். அவர் வாயெடுத்தால் வார்த்தைதோறும் விவகாரம், விவகாரம் என்பர். அதனாலேயே அவர்க்கு அந்தப் பெயர் வழங்கினதுபோலும். அவரிடத்தில் ஆங்கிலம் படிக்கும்படி திருத்தகப்பனார் எனக்குக் கட்டளையிட்டார். ஆங்கிலத்தில் மிகவும் வெறுப்புடையவர் திருத்தகப்பனார். அந்த பாஷையில் ப்ரவேசலேசமும் கூடாதென்று கடுமையாக ஸாதித்துக் கொண்டிருந்தவவர் என்ன காரணத்தினாலோ அந்த சிகித்ஸகரிடத்தில் ஆங்கிலம் வாசிக்க நியமித்ததுமல்லாமல் அவரிடத்திலும் அடிக்கடி சொல்லுவர்—"வைத்யரே! உம்முடைய சிகித்ஸையினால் எனக்கு யாதொரு பலனும் ஏற்படப் போகிறதில்லை; பையனுக்கு இங்கிலீஷ் சொல்லிக்கொடுத்த பெருமையையாவது நீர் அடைய வேணும்" என்று. அதனால் அந்த வைத்யர் வெகு ச்ரத்தையுடன் எனக்கு ஆங்கிலம் சொல்லிக்கொடுத்தார். நாலைந்து மாதந்தான் அது கற்றது. நான் ஆங்கிலமெழுதுவதைப் பார்க்கும் நண்பர்கள் "நீர் B.A. பாஸ் செய்திருப்பீரோ? M.A. பாஸ் செய்திருப்பீரோ?" என்று என்னைக் கேட்பதுண்டு. உண்மையில் அந்த பாஷையில் எனக்கு அதிஸ்வல்ப பரிசயமேயுள்ளது. வருகிற தந்திகளை வாசிக்கவும், பதில் தந்தியெழுதவும், சிறு தபால்களை வாசித்துத் தெரிந்துகொள்ளவும் மட்டுமே அடியேனுக்கு ஆங்கில வுணர்ச்சி யுள்ளது. இவ்வளவுகூட இல்லாமலிருந்தால் என்னுடைய இப்போதைய கார்ய நிர்வாஹங்களுக்கு மிகவும் சிரமமேற்பட்டிருக்கும். இது ஏற்படாமைக்காகவே திருத்தகப்பனார் தம் இயல்பை மாற்றிக்கொண்டு ஆங்கிலம் கற்க எனக்குக் கட்டளையிட்டாரென்று மகிழ்ந்து வருகிறேன். இந்த ஆங்கிலப் பயிற்சியை மேன்மேலும் அபிவிருத்தி செய்துகொண்டால் மிக நன்று என்று பல ஆப்தர்கள் நியமிப்பதுண்டு; எனக்கும் ஆஸ்தையுண்டு. எம்பெருமான் திருவுள்ளமில்லையென்றே கருதுகின்றேன்.

க்ரோதிஹு மாசி மாதத்திலிருந்து திருத்தகப்பனாருடைய திருமேனியில் கிலேசம் அதிகரிக்கவாரம்பித்தது. ஆனாலும் அவருடைய நித்யகர்மாநுஷ்டானங்களுக்கு ஸ்வல்பலோபமும் நேர்ந்ததில்லை. அவர் த்வாதசோர்த்வ புண்ட்ரமணியாமல் ஒருநாளுமிருந்ததில்லை. அவருடைய திருமேனி ஸ்வர்ணச்சாயையை வென்றிருக்கும். அவர் திருப்பரிவட்டம் தரிக்குமழகும் பன்னிருநாமம் அணியுமழகும் நிகரற்றது என்னலாமத்தனை. அவர் திருவீதியில் நடந்தெழுந்தருளும்போது கண்டால் ஸ்வர்ணவிக்ரஹமொன்று கைகால் முளைத்துச் செல்லுகின்றதென்றே பலரும் பேசலாயிருக்கும். இத்தகைய விஷயங்களை நன்கறிந்தவர் இப்போது யாராவதொருவர் இருக்கிறாராவென்று ஆலோசித்தேன். ஒரு மஹானே அடியேனுடைய நினைவுக்கு வருகிறார். (பக்கம் 6-ல்) ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸ்ரீமத். குன்றபாக்கம் ஸ்வாமியின் திருவடியாய் உத்தமவித்வன்மணியாய் விளங்கிக் கொண்டிருக்கும் ஸ்ரீமத். உ.வே. புரிசை க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமியொருவரே ஸ்மிருதிக்கு வருகிறார். இந்த ஸ்வாமியின் திருத்தமையனார் ஸ்ரீமத். ஷஷ்டி ஸ்ரீநிவாஸவரதாசாரியர் ஸ்வாமியென்பார், திருத்தகப்பனாரிடத்திலே ஸாஹித்ய பாடங்கள் வாசித்துக் கொண்டிருந்ததும், அடியேனுக்கும் சில பாடங்கள் சொல்லிக் கொடுத்து வந்ததும் நினைவிலிருக்கிறது. அவருடைய [ஜநககுலத்துத்] திருத்தம்பியாரான மேலே குறித்த புரிசை ஸ்வாமியும் திருத்தகப்பனாரிடத்தில் நெருக்கமான பழக்கமுடையவராயிருந்தார். "தோழியும் நானுமொழிய வையம் துயின்றது" என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்வதுபோல, தற்காலம் அந்த புரிசை ஸ்வாமியும் அடியேனும் தவிர வேறு யாரும் திருத்தகப்பனாருடைய விசேஷங்களை ஸ்மரிக்கவும் சொல்லவும் வல்லவர்களில்லையென்றே நினைக்கிறேன்.

க்ரோதிஹூ மாசிமாத முடிவில் திருமாளிகையிலுங்கூட ஸஞ்சரிக்க முடியாதபடி அசக்தி அதிகரித்தது. அவர் அஜாதசத்ருவென்று ப்ரஸித்தராகையாலே அந்த நாட்களில் தென்கலையார் வடகலையார் ஸ்மார்த்தர் மாத்வர் என்கிற வாசியின்றிக்கே அனைவரும் இரவும் பகலும் நமது க்ருஹத்திலேயே படுகாடு கிடப்பர்கள். அந்த ஸமயத்திலும் திருத்தகப்பனர் தமது ஸமீபத்தில் வருமவர்களை ஆசாரவிசாரங்களில் நிர்தாக்ஷிண்யமாக சிக்ஷிப்பர். பெரியதிருமொழி வியாக்கியானத்தில் (8—1) *சிலையிலங்கு பொன்னாழி ப்ரவேசத்தில் ஓர் ஐதிஹ்யம் கூரத்தாழ்வானைப் பற்றி அருளிச்செய்யப்பட்டிருக்கிறது ; அதாவது—

> "ராஜேந்த்ரசோழனிலே ஒரு ப்ராஹ்மணன்மகன் புத்தரோடே ஸம்ப்ரதாயமுண்டாய் பூணுநூலையும் குடுமியையும் அறுத்துப் பொகட்டான் ; கூரத்தாழ்வான் அங்கேற நடந்தவளவிலே அவன் சிகாயஜ்ஞோபவீதங்களைத் தரித்துக்கொண்டு வந்து புகுந்தான். அவனைக் கண்ட பிதாவானவன் 'கூரத்தாழ்வானைச் சந்தித்தாயோ?' என்று கேட்டான். புறம்புள்ளார் 'நீ இது அறிந்தபடி எங்ஙனே?' என்று கேட்க ; 'ஆழ்வான்ஸன்னிதியில் தமோபிபூதரும் ஸத்வஸ்தராவர்கள் காண்' என்றான்." என்று.

இச்சிறப்பு நம் திருத்தகப்பனர்க்குமொக்கும். அக்காலத்தில் திருத்தகப்பனரைவிட வயோவ்ருத்தர்கள் பலர் இருப்பர்களே ; அவர்கள் ரங்கஸாமியென்று ஏகவசனமாகச் சொல்லுவர்களானாலும் எதிரே நிற்க நடுங்குவர்கள். அந்த சரமஸமயத்தில் ஏறக்குறைய ஒரு மாதகாலம் அல்லும் பகலும் அடியேனை அருகிலேயே வைத்துக்கொண்டு ஸாதித்த உபதேசமொழிகள் அனேக சாஸ்த்ரார்த்த கர்ப்பிதங்களாய் சரமஸந்தேசமென்னத் தகுந்தவை. ஒவ்வொன்றும் மறக்க முடியாமலிருக்கின்றன. ஐம்பது வருடங்களுக்குமேல் ஆனாலும் நேற்று போலவும் இன்று போலவுந்தானுள்ளது.

சில விஷயங்களை இங்கே எழுதாவிடில் என்னாத்மா தரிக்கமாட்டாது போலிருப்பதால் எழுதுகிறேன். இரவுவேளைகளில் அல்பசங்கைக்குப் போனால் வாய்கொப்பளிக்காமலும் ஆசமனம் செய்யாமலும் படுத்துக் கொள்ளக்கூடாது என்று இப்படிப்பட்ட பல ஆசாரங்களைக் கடுமையாக சிக்ஷித்து வந்தார். ஒரு நாளிரவு தீர்த்தபாத்திரமில்லாமையினாலோ சோர்வு சோம்பலாலோ கண்டூஷமும் செய்யாமல் பாதப்ரக்ஷாளனமும் செய்யாமல் படுக்கைக்கு வந்து சேர்ந்தேன். அசக்தியிலும் இதை கவனித்துக் கொண்டிருந்து "பையா! வாய் கொப்பளித்தாயா?" என்று கேட்டார் ; கொப்பளித்தேனென்று பொய் சொல்லிவிட்டேன். அப்போது இரவு 12 மணி. உடனே ஒருவரையெழுப்பி "வாசலிலே சென்று வாய்கொப்பளித்த அடையாளமிருக்கிறதாவென்று பார்த்துவா" என்று போகவிட்டார். அவர் எழுந்துபோய்ப் பார்த்து 'என் கண்ணுக்கெட்டினவரையில் ஈரமான இடமே தென்படவில்லை' என்று சொல்லி விட்டார். தகப்பனர் ஸரிதானென்று சொல்லி விட்டார். இந்த வேளை தப்பித்துக் கொண்டோமென்று தேறியிருந்தேன். காலையெழுந்தவுடனே செய்தருளின தண்டனைகளை என்னவென்றெழுதுவேன். மூன்றுநாள் புழைக்கடைத் தாழ்வாரத்தில் உட்காரவைத்து ஸாப்பாடு போடச்சொல்லி நாலாநாள் ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரிப்பித்து உள்ளே புகச் செய்தார். அரையில் உத்தரீயமில்லாமல் கௌபீன மாத்திரத்தோடு இருக்க நேரும் ஸமயங்களில் யஜ்ஞோபவீதத்தைக் காதில் சுற்றாமல் கடிஸூத்ரத்திலே படும்படி விட்டுக் கொண்டு நிற்கக் கண்டாராகில் கொடிய தண்டனைகள் செய்வர். இப்படிப்பட்ட விஷயங்களை நூற்றுக்கணக்காக எழுதலாம். எழுதினால் இப்புத்தகமே ஒரு தர்மசாஸ்த்ரம் போலவும் ஆஹ்நிகம் போலவும் காணப்படும்.

ஸ்ரீரங்கத்தில் பத்தராவி ஸ்வாமியென்று ஒரு மஹாபுருஷர் எழுந்தருளி யிருந்தார். அந்த ஸ்வாமி ஜ்ஞாநாநுஷ்டானங்களில் மிக ப்ரஸித்தர். திருத்தகப்பனாருக்குப் பரமாப்தர். அநாரோக்யத்தை யறிந்து நேரில் பார்ப்பதற்காகக் காஞ்சிக்கு வந்து நமது க்ருஹத்திலே தங்கியிருந்தார். அவர் மறுநாள் காலை தேவப்பெருமாள் ஸன்னிதிக்குச் சென்று ஸேவிக்க விரும்பினார். அப்போது திருத்தகப்பனார் அடியேனை யழைத்து 'ஸன்னிதிக்குப்போய் என்ன ஸமயம், பார்த்துவா' என்று நியமித்து அனுப்பினார். அடியேன் போய் அவ்விடத்தில் தென்பட்ட மணியகாரரை நோக்கி என்ன ஸமயமென்று விசாரிக்க, அவர் 'ஆராதனம் ஆகப்போகிறது' என்றார். அகத்துக்கு வந்து ஆராதனமாகப் போகிறதாமென்றேன்; திருவாராதனமென்று சொல்லாமல் ஆராதனமென்று சொன்னதற்காக உடனே முதுகு பிளந்து விட்டது. இதைக்கண்ட அந்த பத்தராவி ஸ்வாமி 'லகுவான அபராதத்திற்கு இவ்வளவு குருவான சிக்ஷையா?' என்று வியந்தார். அந்த ஸமயம் அந்த பத்தராவி ஸ்வாமி ஐந்தாறுநாள் எழுந்தருளி யிருந்தார். அப்போது அடியேனுக்கு கத்யத்ரயம் ஸந்தை யாகாமலிருந்தது. அந்த ஸ்வாமி ஸன்னிதியில் அதிகரிக்கும்படி தகப்பனார் நியமித்தருள அவரும் பரமக்ருபையோடு நித்யமும் இரண்டு ஸந்தை ஸாதித்தருளினார். மற்றும் பல நல்வார்த்தைகளும் ஸாதித்தார். இதுவொரு மஹாபாக்யம்.



கோயில் பத்தராவி ஸ்வாமி
(வைகுண்டவாஸி)

திருத்தகப்பனார் திருநாடலங்கரிக்கிற காலத்தில் ஸ்ரீமத். காதி. அனந்தாசார்ய ஸ்வாமியும் வடதேசத்தில் சிஷ்யஸஞ்சாரார்த்தமாக வெழுந்தருளியிருந்தார்; மாதாமஹரான ஜீயர் ஸ்வாமியும் திருநாராயணபுரம் ப்ராந்தமெழுந்தருளி யிருந்தார். அடியேனை யாரிடத்தில் ஒப்பிப்பதென்கிற சிந்தை திருத்தகப்பனாருக்கு மிகப்பெரிதாக ஏற்பட்டது. அடியேனுடைய மாதுலர் ஷஷ்டி. திருவேங்கடாசார்யரென்பவர் ஸ்ரீமத். குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியிலே சாஸ்த்ரங்கள் வாசித்து உபயவேதாந்தங்களும் பூர்த்தியாகக் காலக்ஷேபஞ் செய்திருந்தவர் ஜீவிகார்த்தமாக விறகு தொட்டி வியாபாரத்தில் இறங்கி யிருந்தார். சில ஸமயங்களில் எனக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதாக விறகு தொட்டிக்கு வரவழைத்து அங்கே வேலைகள் செய்ய ஏவி விடுவர். அது திருத்தகப்பனார்க்குத் தெரிந்து 'நான் கண்ணை மூடிக் கொண்டபின் இவனை நல்வழிப்படுத்துவார் ஒருவருமில்லையே' என்று தமது

திருத்தாயாரோடு கவலைப்பட்டு அழுத அழுகைகள் இன்னமும் மறக்க முடியாமலிருக்கிறது.

பிதாமஹிக்குப் பெருந்தேவியம்மா என்று திருநாமம். ஏகபுத்ரை. திருத்தகப்பனார் பரமபதித்த பிறகு பதினைந்து ஸம்வத்ஸரம் ஜீவித்திருந்தாள். தகப்பனார் அந்த திருத்தாயாரை உபசரிக்கும் விதம் பிறர்களால் அநுகரிக்கவும் முடியாதது. அந்த பிதாமஹிக்கு முமுக்ஷுப்படி தத்வத்ரயம் ஸ்ரீவசநபூஷணம் திருவாய்மொழி இவை வாசோவிதேயம். 'கோடியாத்து காக்கு' என்றொருத்தி; ஜடப்ரோல் பாபம்மா என்றொருத்தி. இவ்விருவரும் அக்காலத்தில் கூரத்தாழ்வான் தேவியாரை நினைப்பூட்ட வல்லவர்கள். அவர்களும் பிதாமஹியும் சேர்ந்து நம் க்ருஹத்தில் ரஹஸ்யங்களையும் திவ்யப்பிரபந்தங்களையும் அநுஸந்தானம் செய்வதைக் கேட்டுக் கொண்டிருந்தே அடியேனுக்குப் பல பாகங்கள் சிந்தனையாயின.

திருத்தகப்பனார் பரமபதிப்பதற்குமுன்னே ஐந்துநாள் அடியோடு ஞாபகமேயில்லாமலிருந்தார். திருநாட்டுக்கெழுந்தருளுகிறவன்று காலை 6-மணி முதல் 12-மணி வரைக்கும் நல்ல ஞாபகமும் படபடவென்று பேசுகிற சக்தியும் பெற்று அடியேனுக்கு சரமஸந்தேசங்கள் அநுக்ரஹிக்க ஆரம்பித்தார். அடியேனுக்கு மட்டுமன்று; அங்குக் குழுமியிருந்த அனைவர்க்கும் "யதாதிகாரம் நெறியெல்லாமெடுத்துரைக்கிறார்" என்று ஆசார்யஹ்ருதயத்தில் ஸாதிக்கிறபடி அவரவர்களுக்குத் தக்கவாறு ஆச்சரியமான ஸந்தேசங்களை ஸாதித்தருளினார். அந்த ஸமயம் ஸ்ரீமத். காதி ஸ்வாமியின் தேவியார் அங்கே வந்து ஒரு மூலையிலிருந்தார். அதைத் தெரிந்து கொண்டு அந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியாரை முன்னே வரவழைத்து "உன்னுடைய மாமனாரான காதி க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியாலே நான் அபிவிருத்திக்கு வந்தவன்; உன்னுடைய பர்த்தாவான அனந்தாசார்யரை அபிவிருத்திக்குக் கொண்டு வந்தவன் நான்; இப்போது அவர் மார்வாடத்திலிருக்கிறார். நான் போய்விட்டேனென்பது அவர்க்குத் தெரிந்தால் உடனே இவ்விடம் திரும்பி வந்துவிடுவர்; அதுவரையில் பையனை உன்னுடைய ஸம்ரக்ஷணையில் வைத்துக் கொண்டிருந்து அவர் வந்தவுடனே இவனை அவர்கையில் காட்டித்தரவேண்டியது உன் பொறுப்பு" என்று இவ்வளவும் பலரெதிரில் பெருமிடற்றுடன் ஸாதித்து அடுத்த க்ஷணத்திலேயே ப்ரஜ்ஞாபங்கமடைந்தார். இரண்டு நாழிகைக்குள் இவ்விபூதியை விட்டகன்றார். அந்த ஸந்நிவேசம் பலர்க்கும் ஆச்சரியமாயிருந்தது.

வடநாட்டிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் காதிஸ்வாமி யாத்திரையை முடித்துக்கொண்டு காஞ்சிக்கு வந்துசேர நாலாறு மாதமாயிற்று. குடும்பக்லேசமும் அதிகம். அப்போது எங்களுக்கு ஜமீனாக இருந்த திருவடிராயபுரம் என்கிற சுரோத்திரிய க்ராமத்தை கவனித்துக்கொள்ள என் தாயாரும் மாதுலரும் பெரும்பாலும் க்ராமத்திலேயே வாஸமாயிருந்தார்கள். என்னுடைய க்ருஹத்தில் ஸஹோதரிகள் பிதாமஹியின் ஸம்ரக்ஷணையில் இருந்து வருகிறார்கள். நான் மட்டும் ஸ்ரீமத். காதி ஸ்வாமி திருமாளிகைக்கு ஸ்வீகாரகுமாரன் போல் சென்று சேர்ந்து அங்கேயே அசநசயனாதிகளை வைத்துக் கொண்டு, அப்போது அண்ணா ஸன்னிதியில் நடந்து கொண்டிருந்த வேதாந்த வைஜயந்தீ பாடசாலையிலும், தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்து கொண்டிருந்த சடகோபநிலய பாடசாலையிலும் சாஸ்த்ரபாடங்கள் வாசித்துக் கொண்டிருந்தேன். மார்வாடம் ப்ராந்தத்திலிருந்து ஸ்ரீ காதி ஸ்வாமியின் திருவருள்வெள்ளமான ஸ்ரீமுகங்கள் ஸம்ஸ்க்ருத பாஷையிலேயே அடிக்கடி கிடைத்துக் கொண்டிருக்கும். திருநாராயணபுரத்திலிருந்து மாதாமஹ ஜீயர் ஸ்வாமியின் ஸ்ரீமுகங்களும் அப்படியே. காஞ்சீபுரியில் ஸன்னிதி வீதியில் ஸ்ரீமத். ஈச்சம்பாடி நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி யென்பவர் மஹாவ்யாபகராக

எழுந்தருளியிருந்தவர். அந்த ஸ்வாமியை
அவர் ஸ்ரீமத். திருப்புட்குழி ஸ்வாமியின்



ஸ்ரீமத். உ.வே. ஈச்சம்பாடி நரஸிம்ஹா
சார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி)

அடியேன் ஸேவிக்கப்பெற்றதில்லை.
ஸமகாலத்தவர். அந்த நரஸிம்ஹா
சார்ய ஸ்வாமி திருவடிகளில் தான்
மாதாமஹ ஜீயர் ஸ்வாமி ஸக
லார்த்தங்களும் கேட்கப்பெற்றவர்.
அவருடைய திருக்குமாரரான ராமா
நுஜாசார்ய ஸ்வாமி அடியேனுடைய
இருபது வயது வரையில் எழுந்தருளி
யிருந்தவர். அந்த ஸ்வாமியிடத்திலும்
அடிக்கடி சென்று எதையாவது அதி
கரிக்கக் கடவாயென்று மாதாமஹ
ஜீயர் ஸ்வாமி அடிக்கடி ஸ்ரீமுகம்
ஸாதித்துக் கொண்டிருந்தார்.
“தௌஹித்ரனை அண்ணாவை
அநுக்ரஹிக்க வேணும்” என்று
அந்த ஸ்வாமிக்கும் ஸ்ரீமுகங்கள்
ஸாதித்துக் கொண்டிருந்தார். அத
னல் அடிக்கடி அந்த ஸ்வாமியிடம்
சென்று அவருடைய க்ருபைக்கும்
பாத்திரனாக ப்ராப்தமாயிற்று. அந்த
ஸ்வாமி ஸன்னிதியில் ஆறாயிரப்படி
குருபரம்பராப்ரபாவம் முதன்முத
லாக ஸேவிக்க ப்ராப்தமாயிற்று.
அந்த ஸ்வாமி பரமசாந்தர்; மஹா
ஸாத்விக ப்ரக்ருதி. திருமாளிகையை
விட்டுக் கீழே யிறங்காமல் திருமாளி
கையிலேயே ஏகாந்த சீலராக எழுந்
தருளி யிருந்தவர். அந்த ஸ்வாமி
“அண்ணா! உனக்கு அவகாசமுள்ள
காலங்களில் இங்கே வந்து கொண்
டிரு” என்று பரம கிருபையோடு நியமித்தருளினபடியால் அடிக்கடி அங்கு
நெருங்க நேர்ந்தது. வம்பு தும்பான வார்த்தைகளைச் சிறிதும் ஸாதிக்கமாட்டார்.
மணித்திரள் என்னும்படியான ஸதாசார்ய திவ்யஸூக்தி ஸாரார்த்தங்களைப் பூச்
சொரிந்தாப்போலே ம்ருதுமதுரமாக ஸாதிப்பர். ஸ்ரீ காதி ஸ்வாமி திருமாளி
கைக்கு அருகிலேயே ஸ்ரீமத். வித்வான் இளங்காடு ரங்காசாரியர் ஸ்வாமி ந்யாய
பாடங்கள் ஸாதித்துக் கொண்டு எழுந்தருளி யிருந்தார். இந்த ஸ்வாமி நம்முடைய
பாக்ய விசேஷத்தினல் இற்றைக்கும் காஞ்சியில் ஸ்ரீரங்கராஜ வீதியில் ஸேவை
ஸாதித்துக் கொண்டிருக்கிறார். இவர் காதி ஸ்வாமிக்கு மிகவும் ஆப்தர். இவரிடத்
திலே நியாய பாடங்களை நீ வாசிக்க வேண்டியது என்று காதி ஸ்வாமி ஸ்ரீமுகங்கள்
ஸாதித்துக் கொண்டிருந்தபடியால் அந்த ஸ்வாமியிடத்திலே பஞ்சலக்ஷணி வாசிக்க
ஆரம்பித்தேன். ஏறக்குறைய மூன்று நான்கு ஸம்வத்ஸரங்கள் அந்த ஸ்வாமி
யிடத்திலே நியாய பாடங்கள் நடந்தது. இடையிடையில் காதி ஸ்வாமியும்
அந்த பாடங்களை ஸாதிப்பதுண்டு. இதைப்பற்றி மேலே விவரிப்பேன்.

அந்த ஸமயம் தேவப்பெருமாள் ஸன்னிதியில் கலாவைஷம்யப்ரயுக்தமான
விவாதகலஹங்கள் முற்றிக் கொண்டிருந்தன. அடியேன் இளமையிலேயே திவ்ய

ப்ரபந்தங்களை யதிகரித்து தேவப்பெருமாளுடைய இயல் கோஷ்டியை விடாமல் காத்து வருபவன். அந்த காலத்தில் வேதபாராயண ஸ்ரீசடகோபச் சண்டை என்று பிரபலமான கலஹம் நடந்து கொண்டிருந்தது. இதைப்பற்றி ஸ்வல்பமாக எழுதுகிறேன். இயல் கோஷ்டியென்னப்படுகிற திவ்யப்ரபந்த கோஷ்டிக்கு ஸாதித்துக் கொண்டிருந்த ஸ்ரீசடகோபனை கலாவைஷம்யத்தினால் நிறுத்தி, அதை வேதபாராயண கோஷ்டிக்கு ஸாதிக்க ஆரம்பித்தார்களாம். அக்காலம் அடியேனுக்குத் தெரியாது. அது விஷயமாக நியாயாலயங்களில் ஏழெட்டு வருஷகாலம் வியவஹாரம் நடந்து வேத கோஷ்டிக்கு ஸ்ரீசடகோபன் ஸாதிக்கக்கூடாதென்று முடிவாக ஹைகோர்ட்டு தீர்ப்பு ஆயிற்று. அப்படி தீர்ப்பு ஆன பிறகுங்கூட, கோவில் தர்மகர்த்தாக்கள் அதை நிறுத்தாமல் நடத்திவர முயன்றார்கள். அதனால் தேவப்பெருமாளுடைய திருவீதிப்புறப்பாடு காலங்கள் தோறும் இது ஸம்பந்தமான கலஹம் வெகு தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. பரஸ்பரம் ப்ரபல ப்ரஹார பர்யந்தமான கலஹம் நடந்து கொண்டிருந்தது. இது அடியேனுடைய பதினைந்தாவது வயதில் மும்மிரமாக இருந்தது. அடியேன் இயல் கோஷ்டியைத் தவறாமல் காப்பவனே யொழிய சண்டை நடக்கிற விடத்தில் தலையைக் காட்டமாட்டேன். ஒரு க்ஷணமும் அங்கு நிற்கமாட்டேன். ஆனாலும் நானிருக்குமிடத்தைத் தேடி வந்து என் முதுகில்தான் விசேஷ ப்ரஹாரங்களை ஸமர்ப்பிப்பார்கள். இவ்விதமாக நான்பட்ட அடிகள் அபரிமிதமென்னலாம்.



ஸ்ரீமத். ஈச்சம்பாடி நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரர் ஸ்ரீ உவே. ஈச்சம்பாடி ராமாநுஜாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி)

இப்புத்தகத்தில் இப்படிப்பட்ட விஷயங்களை நான் சிறிதும் எழுத நினைத்ததில்லை. ஆனாலும், கீழே இளங்காடு ரங்காசார்ய ஸ்வாமியின் ப்ரஸ்தாவம் வந்தபடியால் ப்ராஸங்கிகமாக ஒரே விஷயம்மட்டும் எழுதத்தோன்றிவிட்டது. இளங்காடு ஸ்வாமி வடகலை ஸம்ப்ரதாயஸ்தர். தேவப்பெருமாளுடைய மங்களாசாஸனத்தை ஒருநாள் தவறாமல் செய்து வருவர். புறப்பாடுகளையும் இழவாமல் வேதபாராயண கோஷ்டிக்குப் பின்னால் சில வித்வான்களோடு கூடிப் பரமசாந்தராக எழுந்தருள்வர். கலாவைஷம்யமான கலஹங்களில் மநஸா வாசா கர்மணா அணுவளவும் பிரவேசித்தவரல்லர். அந்த ஸ்வாமியினுடைய ப்ரக்ருதி அத்யாபி அப்படிப்பட்டதே. இப்போது உத்தமாச்ரமியாக விளங்கிக் கொண்டிருக்கும் ஸ்ரீமத். கோழியாலம் ஸ்வாமி யென்பவர் அப்போது க்ருஹஸ்தராயிருக்கையில் கோழியாலம் ராகவாசாரியர் என்று வழங்கப்படுவர். இவர் கோவில் பாடசாலையில் வியாகரணம்

வாசித்துக் கொண்டிருந்தவர். இவர் மாதாபிதாக்களோடும் மனைவியோடும் ஸஹோதரரோடும் காஞ்சீ வாஸத்தை விரும்பி வந்து சேர்ந்தபோது முதன்முதலாக அடியேனுடைய வீதியில்தான் ஸமீபத்திலே குடி வாழ்ந்து வந்தார். அடியேனுடைய திருத்தகப்பனாரிடத்திலும் சிலநாள் பாடம் வாசித்ததாக ஞாபகம். உறுதியாகச் சொல்லகில்லேன்; அதுநிற்க. இவர் இளங்காடு ரங்காசார்ய ஸ்வாமியிடத்தில் தர்க்கஸங்க்ரஹம் வாசிக்க வந்து சேர்ந்தார். அப்போது அடியேன் ஆரணி க்ருஷ்ணசாரென்கிற மாத்வரோடுகூட பக்ஷதையோ ஸாமாந்யநிருக்தியோ வாசித்துக் கொண்டிருக்கிறேன். பிறவிக் குருடரானவொரு மாத்வரும் இளங்காடு ஸ்வாமியிடத்தில் தர்க்கம் வாசிக்க வந்தார். அவர் அந்தகராயினும் மஹாமேதாவியாயிருந்தார். உலகில் அங்கவைகல்யமுள்ளவிடத்திலே விசேஷமாக மேதையைக் கொண்டு கூட்டுவது எம்பெருமானுடைய இயல்பாதலால் அவ்வந்தகரிடத்திலே ஆச்சரியமான மேதையைக் குடிபுகச் செய்திருந்தனன் பகவான். அவரோடுகூடவே கோழியாலம் ராகவாசாரியர் ஸ்வாமி தர்க்க ஸங்க்ரஹமாரம்பித்து வாசிக்கிறார். அடியேன் அவரோடு ஸஹாத்யாயியாக இருந்திலேனாகிலும் பரஸ்பரம் ஸௌஹார்தம்மிக்கு இன்பமாகப் பேசிக் கொண்டிருந்தவர்களே. அப்போது ஒரு கார்த்திகை மாதத்தில் தேவப்பெருமாளுக்கு வநபோஜநோத்ஸவம் நடந்து இரவு 9-மணிக்கு திருவீதிப் புறப்பாடு முடிந்து பெருமாள் ஸன்னிதிக்குள்ளே யெழுந்தருளியாகிறது. மேலே நான் விவரித்திருக்கிற ஸ்ரீசடகோபச் சண்டை அன்று பிரபலமாக நடந்திருக்கிறது. அதற்கு நான் அங்கே தலைகாட்டாமல் ஸன்னிதியை விட்டு வெளியேறி ஸ்ரீ காதி ஸ்வாமி திருமாளிகை சேருவதற்கு மேற்கு முகமாகச் சென்று கொண்டிருக்கிறேன். மேலே சொன்ன கோழியாலாசாரியர், எங்கிருந்தோ எதிரே வந்துகொண்டிருக்கிறார். நிலா ஆச்சரியமாகவொளிர்கின்றது. இவர், தேவப்பெருமாள் ஸன்னிதியில் *தமேதமேகரோதி யாகின்றதென்று கேள்விப்பட்டு உக்ரவேஷத்துடன் விரைந்து வந்து கொண்டிருக்கிறார். பதினாறுகால் மண்டபத்தருகில் நான் மேற்கு முகமாகப் போகிறேன், இவர் கிழக்கு முகமாக வருகிறார்; என்னைக் கண்டவுடனே குடுமியைப் பிடித்துக் கொண்டு கீழே தள்ளி ப்ரஹாரங்கள் ஸமர்ப்பிக்கிறார்; இது நடந்து 47 வருஷங்களுக்கு மேலானாலும் ஸத்யமாய் நேற்றிரவு நடந்ததுபோல் நினைவிலிருக்கிறது. அவரிடத்தில் வலிமைகாட்ட எனக்கென்ன சக்தியிருக்கிறது. வாயைக் கையைத் திறவாமல் பட்டுக் கொண்டு கிடக்கிறேன். ஸ்ரீராமஸக்யம் பெற்று முதல்நாள் வாலியோடு யுத்தம் செய்யப்போன ஸுக்ரீவன் பூசல் பெற்றானென்று சொல்லுகிறார்களே; அந்த பூசல் ஏகதேசம்; அன்றே என்னுயிர் போயிருக்க வேண்டும். ஜீவித சேஷமிருந்தபடியால் பிழைத்தேன். யாரோவொரு வடகலை ஸ்வாமி அங்கே க்ருஹத்தினுள் சயனித்திருந்தவர் இந்த ப்ரஹாரத்வநியைக் கேட்டுத் துயிலெழுந்து பதறி யோடிவந்து இதென்ன அநியாயமான ப்ரஹாரமென்று கத்தின பின்பு ப்ரஹரிப்பதை நிறுத்திக் கொண்டு போய்விட்டார். அந்த ஸ்வாமி இற்றைக்கும் பாங்காக எழுந்தருளியிருப்பதாலும், உத்தமாச்ரமியாகையாலே பொய் சொல்லமாட்டாராதலாலும் இச்செய்தியைப் பற்றி யார்வினவினாலும் உண்மையை யொளித்திடாது ஸாதித்தருள்வர். "ப்ரக்ருதி ஸ்வபாவாத் மிகவும் அநீதியாகவே நேர்ந்துவிட்டது; என் செய்வேன்!" என்று அநுதாபத்தோடு சிலரிடம் அத்யாபி அஸக்ருத் ஸாதித்துக் கொண்டிருக்கிறாரென்றும் கேள்வி.

இவ்விஷய ப்ரஸ்தாவம் ப்ரஸங்காத் இங்கு நேர்ந்து விட்டபடியால் அந்த ஸ்வாமிக்கும் அடியேனுக்குமுள்ள தொடர்பை வர்த்தமாநகாலம் வரைக்கும் ஒருவாறு எழுதி விடுகிறேனிங்கு. பிறகு அந்த ஸ்வாமி சில நாட்களில் காஞ்சீ வாஸத்தை விட்டுத் திருப்பதி திருச்சுகனூர் சென்று சிலகாலம் அங்கே வஸித்து, அங்கிருந்து திருவஹீந்திரபுரம் சென்று அங்கே உத்தமாச்ரமியாகித் தென்தேசங்

களிலேயே ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார். 15 வருஷகாலம் அவர்க்கு மெனக்கும முகாவலோகந ப்ரஸக்தியேயில்லாமலிருந்தது. பிறகு காஞ்சீபுரத்திற்கெழுந்தருளி வடவண்டை மாடவீதியில் ஒரு க்ருஹத்தில் வாழ்ந்து வந்தார். அப்போதும் எமக்கு ஸாமாநாதிகரண்ய ப்ரஸக்தியில்லாமலேயிருந்தது. அந்த ஸ்வாமி தினப்படியாக அனுஷ்டானத்திற்கு வெள்ளக்குளமெழுந்தருள்வது வழக்கம். அடியேனும் அங்குத்தான் செல்வது. இருவரும் அடுத்தடுத்த துறையிலேதான் காலைக்கடன்களை முடிப்பது. அடியேன் 7-மணிக்குள் காரியங்களை முடித்துக் கொண்டு இராமானுசநூற்றந்தாதியநுஸந்தானத்துடன் க்ருஹத்துக்குச் செல்வேன். ஸ்ரீ ஸ்வாமி 8-மணிக்குக் குளத்திலிருந்து புறப்படுவர். இங்ஙனே தினப்படியாக நாலாறு மாதம் நடந்து கொண்டிருக்கிறது. இப்படியிருக்கையில் ஒருநாள் அடியேன் அக்குளத்தில் வஸ்த்ரதாரண ஊர்த்வபுண்ட்ரதாரண ஸந்த்யாவந்தநாதிகளை முடித்துக் கொண்டு புறப்படுகையில் ஸ்ரீ ஸ்வாமிக்கு அநுஷ்டானம் ஸாவசேஷமாயிருந்தும் அடியேனைத் தொடர்ந்து கொண்டு புறப்பட்டார். அவரோடு ஸந்திக்க வேண்டாமென்கிற எண்ணத்துடன் சிறிது வேகமாகச் செல்லுகிறேன்; ஸ்வாமியோ ஸந்தித்து வார்த்தையாட வேணுமென்கிற திருவுள்ளத்துடன் மிகவும் விரைந்து எழுந்தருளுகிறார். வேகவதிஸமீபத்தில் வந்து



ஸ்ரீமதுபயவே. வித்வான்
இளங்காடு ரங்காசார்யர்ஸ்வாமி, ஸ்ரீ காஞ்சீ.

"அண்ணா! நிற்கவேணும், அண்ணா ஸ்வாமிந்! நிற்கவேணும்" என்று ஸாதித்துக் கொண்டே பக்கத்தில் எழுந்தருளியாயிற்று. அப்போது பட்டரை ஸ்ரீநிவாஸவரதாசாரியர் என்கிற அத்யாபக ஸ்வாமி என்னோடு கூடவே க்ருஹத்துக்கு வருகிறார். கோழியாலம்ஸ்வாமி அவரை நோக்கி 'ஸ்வாமீ சீமாவரதாசாரியா!' என்றழைத்து 'இந்த வ்யக்தியினுடைய யோக்யதை தெரியுமா? *ந பூதோ நபவிஷ்யதி*...... ...... இத்யாதிகள் பலபல ஸாதித்து விட்டு, 'ஸ்வாமீ! நாங்களிருவரும் ஏதோ வார்த்தையாட வேண்டியிருக்கிறது, தேவரீர் எழுந்தருள வேணும்' என்று ஸாதித்து அவரைப் போகவிட்டு, அடியேனிடம் பரமக்ருபாகனமான பல ஸ்ரீஸூக்திகளை "கண்டேந ஸ்வரகத்கதேந நயநேநோத்கீர்ணபாஷ்பாம்புநா" என்னும் நிலை

யிலே ஸாதிக்க ப்ராப்தமாயிற்று. அப்போது அந்த ஸ்வாமியால் பரபக்ஷநிராக்ருதி யென்றொரு க்ரந்தம் ஸாதிக்கப்பட்டிருந்தது. அதை அடியேன் மூலமாக அச்சிடுவிக்க வேணுமென்று குதூஹலமுண்டாகி அதற்குரிய நியமனம் ஸாதித்தாகிறது. “அரசாணிபாலை வேங்கடாத்வரி தான் செய்த லக்ஷ்மீஸஹஸ்ரத்தில் சொல்லுகிறார்; தேசிகனைக் கொண்டு பாதுகாஸஹஸ்ரம் அவதரிப்பித்துக் கொண்டது ஆச்சரியமன்று; என்னைக் கொண்டு லக்ஷ்மீஸஹஸ்ரம் அவதரிப்பித்துக் கொள்வதுதான் ஆச்சரியம் என்கிறார்; அதுபோல தேவர் நித்யம் ஒரு க்ரந்தம் அச்சுப் போடுவது ஆச்சரியமன்று; என்னுடைய க்ரந்தத்தைப் பரிஷ்கரித்து அச்சிட்டுத் தந்தால் அதுதான் ஆச்சரியமாகும்” என்று பலபலவும் ஸாதித்து ‘ததாஸ்து’ என்று சொல்லித்தானாகவேணுமென்று நியமனமாயிற்று. ‘அதற்காக வேண்டிய பணத்தை திருக்குடந்தையில் ஒருவர் அனுப்பிக் கொடுக்க ஸித்தமாயிருக்கிறார்; அவருக்கு தேவரீருடைய விலாஸத்தை நான் தெரிவித்துமாயிற்று; நாளைக்கே பணம் வந்து விடும்; இந்த கோரிக்கையை அவசியம் பூர்த்தி பண்ணித் தரவேணும்’ என்றும் ஸாதித்தாயிற்று.

அந்த ஸந்தர்ப்பத்தில், பூர்வாச்ரமே அஸ்தானே அகாண்டே ப்ரஹரித்த விஷயமும் ஸ்வாமிக்கு நினைவுக்கு வந்தது. “ந ஸ்மரத்யபகாராணாம் சதமபி ஆத்மவத்தயா” என்பதை அநுகரித்து அடியேன் அதை ஒருகால் மறந்தாலும் ஸ்வாமி க்ருதஜ்ஞராகையாலே ஸ்வேந க்ருதமானதை மறக்கமாட்டாரன்றோ. அதனால் அதை நினைத்தருளி “அது ஜன்மாந்தரத்தில் நேர்ந்ததென்று கொள்ள வேணும்; அதை மனதில் வைத்துக் கொள்ளவே கூடாது; ஆச்ரமஸ்வீகாரம் பண்ணின பிறகு காமக்ரோதங்களை யெல்லாம் ஸவாஸநமாக விட்டிட்டேன்” என்றும் ஸாதித்தார். அந்த ஸமயத்தில் அடியேன் ஒன்று விஜ்ஞாபிக்கலாயிற்று; அப்போதைக்கு இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பு புரட்டாசித் திருவோணத்தன்று தூப்புல் தேசிகன் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கெழுந்தருளி மங்களாசாஸனம் செய்தான பிறகு தேசிகன் ஆழ்வார் திருவீதி வலமாக எழுந்தருள்வது வழக்கம். அப்போது உபயகலையாரும் ஸ்தோத்ர பாடம் சொல்லிக் கொண்டு தனித்தனி கோஷ்டியாய்ப் போவது வழக்கம். முன்னே தென்கலையாருடைய கோஷ்டியும் அதற்குப் பின்னே வடகலையாருடைய கோஷ்டியுமாகச் செல்வது. அப்போது இந்த ஸ்வாமி வடகலை கோஷ்டியில் அக்ரேஸராராக எழுந்தருளுகிறார். தேசிகன் மணவாளமாமுனிகள் ஸந்நிதியருகே எழுந்தருளா நிற்கையில் இந்த உத்தமாச்ரமி என்ன செய்திருக்கிறாரென்றால்—ஸ்தோத்ரம் ஸேவிக்கிற ஸ்வகீயர்களை ‘நிறுத்துங்கள், நிறுத்துங்கள்’ என்று கையை யமர்த்தி நிறுத்தச் செய்து தாம் மணவாளமாமுனிகளுக்கு ப்ருஷ்டபாகத்தைக் காட்டிக் கொண்டு நின்று, “சொல்லுங்கோள்! உரக்கச் சொல்லுங்கோள்; *குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்யசிஷ்யே ஜநா பக்திஹீநா: யதீந்த்ராப்ரியாஸ் ஸ்யு:, யதீந்த்ராப்ரியாவிஷ்ணுகாருண்யதூரா: குதோ முக்திவார்த்தா ஹி தாத்ருக்விதாநாம். .......*ஹந்த ஹந்த ராமக்ருஷ்ண தூஷணபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்யராவணாநுஸாரிணாம்*” என்று தாமும் கோஷிக்கிறார், பிறரையும் கோஷிக்கச் செய்கிறார். “இதெல்லாம் இப்போது எதுக்கு?” என்று சிலர் சொல்லவும் “உங்களுக்கென்ன தெரியும்? சொல்லுங்கோள்” என்று த்ரிதண்டத்தை வீசி ரோஷகஷாயிதாக்ஷராய் நியமிக்கிறார். இதையெல்லாம் அடியேன் எங்கள் கோஷ்டியிலிருந்துகொண்டு பார்க்கிறேன். அப்போது அங்கு கால்மணி காலம் இவருடைய அட்டஹாஸம் அளவு கடந்து சென்றது. இஃது அடியேனுடைய நினைவில் இருந்தபடியால் “ஆச்ரமஸ்வீகாரம் பண்ணின பிறகு காமக்ரோதங்களை யெல்லாம் ஸவாஸநமாக விட்டிட்டேனென்று இன்று ஸாதிக்கிற தேவரீர் ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளி 10 வருஷமாகிறது; இரண்டு மாதங்களுக்கு முன்னே இப்படி யிப்படி நடத்தவில்லையா?”



என்று கேட்டேன். அதற்கு ஸ்வாமி ஸாதித்தபடி—“இதை தேவரீர் கவனித்திருக்கமாட்டாதென்று நினைத்திருந்தேன்; *விச்வதச்சக்ஷுருத விச்வதோமுக:* என்று நினைக்கிறேன். வாஸ்தவந்தான்; இந்த பாஞ்ச பௌதிக பிண்டமுள்ள வரையில் காமக்ரோதங்கள் அவர்ஜநீயங்கள்தான்; அதையெல்லாம் மறந்துவிட வேண்டியது. இனி அப்படியெல்லாம் ஒன்றும் நேராது” என்று ஸாதித்து, தம்முடைய அந்த பரபக்ஷநிராக்ருதி க்ரந்தத்தை உடனே கொடுத்தனுப்பி, விரைவில் முத்ரணம் செய்வித்து முடித்துத் தரவேணுமென்று நியமித்தாயிற்று. அடியேனும் அந்த நியமனத்தைக் கூடிய த்வரையில் பூர்த்தி செய்தாயிற்று.

இந்த க்ரந்தமுத்ரணம் அடியேன் மூலமாக நடந்து வருகிறதென்பதைத் தெரிந்து கொண்ட தச்சிஷ்யர்கள் பல வெளியூர்களிலிருந்து ஸ்வாமியிடம் ஓடி வந்து “நாங்கள் எத்தனை பேர் இல்லை, எங்களிடம் பணத்தைக் கொடுத்து நியமிக்காமல் இப்படி கூடச் செய்வதுண்டா? இதை உடனே நிறுத்தி யாகவேண்டும்” என்று வெகுவாக நிர்ப்பந்தித்தார்கள். திருக்குடந்தையிலிருந்து ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்யரையும் இதற்காகவே காஞ்சிக்கு வரவழைத்து அவரைக் கொண்டும் நிர்ப்பந்திக்கச் செய்தார்கள். [இந்த ராயம்பேட்டை ஸ்வாமியைப்பற்றி வக்தவ்ய விஷயங்கள் பலவுண்டு; அவற்றை மேலே வேறு ப்ரகரணத்தில் சொல்லுவேன். இவரும் காஞ்சிக்கு வந்து “இப்பணியில் அண்ணங்கராசாரியரை நியமிக்கவே கூடாது” என்று இரண்டு நாள் உபவாஸமிருந்து நிர்ப்பந்தித்தாரென்று ப்ரஸித்தமாயிருந்தது. ஸ்ரீஸ்வாமி எதையும் பொருள்படுத்தாமல், “நீங்கள் வீணான அஸூயைக்காரர்கள்; குணக்ரஹணம் பண்ணத் தெரியாத நீங்கள் இது விஷயமாக என்னிடத்தில் ஒன்றும் சொல்லவேண்டாம்; எது சொன்னாலும் என் காதில் அடியோடு ஏறாது. வேறு பேச்சு உண்டானால் இங்கு வாருங்கள், இல்லையேல் நடவுங்கள்” என்று ஸாதித்துத் தள்ளி விட்டு, தாம் மநோரதித்தபடியே அந்த காரியத்தை அடியேன் மூலமாகவே பூர்த்தி செய்வித்துக் கொண்டார். மேலே விவரித்தபடி பலர் தம்மிடம் வந்து நிர்ப்பந்தித்தபடியையும், அதற்குத் தாம் இணங்காமல் அவர்களை வெறுத்தபடியையும் ஸ்ரீஸ்வாமி திருவாக்கிலிருந்து தான் அப்போது அடியேனறிந்தேன். அந்த ஸமயம் ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் திநேதிநே வளர்ந்து சென்ற ஸௌஹார்தம் வாசாமகோசரமாகவேயிருந்தது.


ஸ்ரீ உ.வே. ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியர் திருக்குடந்தை (வைகுண்டவாஸி)

அப்போது அடியேன் பல துறைகளிலும் நூல்கள் எழுதிக்கொண்டிருந்த படியால் அந்த க்ரந்தங்களை ஸ்வாமிக்கும் காட்டுவேன். ஸ்வாமியும் திருவுள்ள முகந்து கடாக்ஷிப்பர். அவற்றில் ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சைகள் வருமிடங்களிலே கடாக்ஷித்தருளும்போது ஸ்வாமிக்கு மநோவிகாரம் விளையும். நேராகவே வாத ப்ரதிவாதங்களும் நடக்கும். நாளடைவில் இந்த வாதவிவாதம் மிகமிக வளர்ந் திட்டது. அவரும் சில சிறு புத்தகங்களை யெழுதி அச்சிட ஆரம்பித்தார். அவற் றுக்கு அடியேன் சரமாரியாகக் கண்டனங்களெழுதி வெளியிடநேரும். பிறகு தாம் எழுதுவதை நிறுத்திக் கொண்டு சிஷ்யர்களுக்கு நியமனம் தந்து அவர்கள் மூல மாக மறுப்புகளை வெளியிடுவர். அவற்றுக்கும் உடனே மறுப்புகள் பெற்றுக் கொள்வர். மறுபடியும் தாமே மறுப்பெழுத முயல்வர்..................இப்படியாக அந்த ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் நடந்த க்ரந்தச்சண்டைகள் அபரிமிதம். இந்த ஸம்பவங்கள் அடியேனுடைய 30, 35 வயதுக்கு மேற்பட்ட காலத்திலாதலால், பதினைந்தாவது வயதிலிருந்து தெரிவிக்க வேண்டிய செய்திகளை க்ரமேண தெரி வித்து விட்டு, பிறகு இதைப்பற்றிச் சிறிது விரிவாகத் தெரிவிப்பேன். வித்யார்த்தி தசையில் நடந்த செய்தியைத் தெரிவித்ததிலிருந்து இவ்வளவும் ப்ராஸங்கிகம். இது நிற்க. 15ஆம் வயதிலிருந்து என் விஷயங்களை யெழுதுகிறேன்.

ஸ்ரீ காதி ஸ்வாமி மார்வாட யாத்திரையைப் பூர்த்தி செய்து கொண்டு காஞ்சீ புரிக்கு எழுந்தருளியாயிற்று. அப்போது தம்முடைய வேதாந்தவைஜயந்தீ பாட சாலையைத் தாமே ஸாக்ஷாத்தாக நிர்வஹித்தருளத் திருவுள்ளம்பற்றி காலைவேளை களில் மட்டும் திருமாளிகையிலேயே பாடப்ரவசனங்களும் பகல் வேளையில் பாட சாலையினிடமாகிய அண்ணா ஸன்னிதியிலெழுந்தருளியிருந்து பாடப்ரவசனங்களும் செய்தருள ப்ராப்தமாயிற்று. அப்போது அலங்காரசாஸ்த்ரத்தில் சித்ரமீமாம்ஸாதி பாடங்களும் நியாயத்தில் உத்க்ராந்த பாடங்களும் வெகு சிறப்பாக நடத்தப்பட்டன. ஸ்ரீ காதி ஸ்வாமியின் ஸர்வதோமுகமான பாண்டித்யமும் போதநாசக்தியும் மிக வியக்கத்தக்கதாயிருக்கும். அப்படி இரண்டு வருஷங்கள் காஞ்சியிலேயே எழுந் தருளியிருந்து பாடப்ரவசனங்கள் செய்து கொண்டிருக்கையில் ஹைதராபாத் மஹாநகரத்தில் சிஷ்ய வர்க்கங்களின் வேண்டுகோளுக்கிணங்கி காதி ஸ்வாமி அவ்விடமெழுந்தருள நேர்ந்தது. அப்போது அடியேனும் கூடவே விடை கொள் ளும்படியாயிற்று. அப்போது 16 வயது நிரம்புகிறஸமயம்.

ஹைதராபாத் நகரத்தில் ஸீதாராம்பாக் என்பது மிகப்பெரிய தோட்டம். அதில் தேவப்பெருமாள் ஸன்னிதி ஆத்ய அனந்தாசார்ய ஸ்வாமியால் ப்ரதிஷ்டா பிதமானது விளங்கிக் கொண்டிருக்கிறது. அந்த ஸ்வாமி நூறு வருஷங்களுக்கு முன்பு முதன்முதலாக வடதேச யாத்திரை யெழுந்தருளினபோது பூர்ணமல் என் கிற ஸேட்டு தாம் ஸபரிவாரராயும் மற்றும் பல ஸேட்டுக்களுடனும் ஆச்ரயித்து அவ்விடத்தில் மஹத்தான ஸன்னிதியையும் ப்ரதிஷ்டாபனம் செய்வித்தார். அந்த ஸன்னிதி இற்றைக்கும் வெகு சிறப்பாக நடந்து வருகின்றது. சிஷ்ய ப்ரார்த்தனையினால் ஹைதராபாத் நகரத்திற்கு எழுந்தருளின காதி ஸ்வாமி அந்த ஸீதாராம்பாக் என்னும் மஹத்தான தோட்டத்தில்தான் எழுந்தருளியிருந்தார். அப்போது அடியேனும் அங்கு ஏறக்குறைய ஒரு ஸம்வத்ஸரகாலம் உடனிருக்க ப்ராப்தமாயிற்று. அப்போது அவ்விடத்தில் அடியேனுக்குப் பலவிதமான பேறு கள் கிடைத்தன. அந்த ஸமயம் மிகச்சிறந்த ஸமயமென்று நான் அடிக்கடி அதை நினைப்பதுண்டு. அப்போது காதி ஸ்வாமிக்கு நிர்ப்பந்தமான ஒரு காரியமும் கிடையாது. இரவு 9-மணிக்குமேல்தான் நகரத்திலிருந்து சிஷ்யர்கள் வந்து வார்த்தையாடுவர்கள். பகல் முழுவதும் இரண்டொரு மணிகாலம் தவிர மற்ற போதெல்லாம் ஸ்வாமியை க்ஷணமும் விட்டுப் பிரியாமலே வாழ நேர்ந்த காலம் அது. அவ்விடத்து நிகழ்ச்சிகளை மட்டும் எழுதுவதானால் அதமபக்ஷம் நூறு

பக்கங்கள் எழுத விஷயமுண்டு. அவற்றை விட்டிடுகிறேன். சிலவற்றை மட்டும் எழுதுகிறேன். சாஸ்த்ரபாடம் வாசிப்பதோடுகூட ஸ்வரூப க்ரந்தங்களை ஸேவிக்கத் தொடங்கும்படி நியமனமாயிற்று. திருமந்த்ரார்த்த காலக்ஷேபம் அப்போது அவ்விடத்தில்தான் ப்ராப்தமாயிற்று. தாத்பர்ய சந்திரிகையோடு கீதாபாஷ்ய காலக்ஷேபமும் அங்கேதான் ப்ராப்தமாயிற்று. அவ்விடத்தில் இதரர்களோடு பேசினால் ஹிந்தியிலும் தெலுங்கிலும் பேசவேண்டியிருந்தபடியாலே அவ்விரண்டு பாஷைகளிலும் பரிசயம் ஏற்பட்டது அவ்விடத்திலேதான். அந்த ஸமயம் காதி ஸ்வாமியோடுகூட அவ்விடம் விடைகொள்ள நேர்ந்ததானது அடியேனுடைய பலவகை க்ஷேமங்களுக்கு மூல காரணமாயிற்று. திருநாராயணபுரத்தில் மண்டயம் ஆழ்வார் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான பெரியார் எழுந்தருளியிருந்தார். இவர் நியாய வேதாந்தங்களில் சிறந்த வித்வான். விசேஷித்து பகவத் விஷய ஸாகரத்தில் நன்றாக ஆழ்ந்தவர். நல்ல வாக்மி. இந்த ஸ்வாமி அப்போது ஹைதராபாத் நகரத்தில் ஸேட்டுகளுக்குக் காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தபடியால் அடிக்கடி ஸீதாராம்பாக் எழுந்தருளி ஸேவை ஸாதிப்பர். உபயவேதாந்தங்களிலும் ரஹஸ்ய க்ரந்தங்களிலும் நுட்பமான அநேக விஷயங்களை ஸாதித்தருள்வர். இதுவும் ஒரு நல்ல போதுபோக்காக அமைந்தது அங்கு. அந்த ஆழ்வார் ஸ்வாமியின் திருக்குமாரர் லக்ஷ்மீ தாதாசார்யர் ஸ்வாமியென்பவர் நியாயசாஸ்த்ரத்தில் ப்ரசண்ட பண்டிதர். தர்க்க தீர்த்தரென்கிற பிருதும் பெற்றவர். இந்த ஸ்வாமி இளமையிலேயே திருநாடலங்கரித்து விட்டார். இந்த ஸ்வாமியின் மூத்த திருக்குமாரர் ஆழ்வார் திருமலை ஐயங்காரென்பவர் நியாயவேதாந்த வித்வானாகத் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கிறார். அவ்விடத்து ஸம்ஸ்க்ருத காலேஜில் நியாயசாஸ்த்ரப்ரவசனமும் செய்து கொண்டிருக்கிறார். இவருடைய பிதாமஹரான மேலே குறித்த மண்டயம் ஆழ்வார் ஸ்வாமி வயஸா அத்யந்தம் உத்துங்கராயிருக்கச் செய்தேயும் ஸௌசீல்ய நிதியாய் அடியேனோடு கலந்து பழகினவாற்றை நினைக்கும்போதும் அளவுகடந்த ஆனந்தமுண்டாகிறது. இந்த ஸ்வாமியிடத்தில் ஏதாவதொரு க்ரந்தம் அதிகரிக்க வேணுமென்று குதூஹலமுண்டாயிற்று. இதற்கு காதி ஸ்வாமியும் நியமனம் தந்தருளினார். அப்போது, மைஸூர் அனந்தாழ்வானுடைய வேதாந்தவாதாவளியில் ஸித்தாந்த ஸித்தாஞ்ஜனம் முதலிய சிலக்ரந்தங்கள் நாலாறுமாஸகாலம் வாசித்தேன்.



ஸ்ரீ உவே. வித்வான் மண்டயம் ஆழ்வார் ஸ்வாமி (வைகுண்டவாஸி)

ஸீதாராம்பாக் ஸன்னிதியில் அப்போது அர்ச்சக பரிசாரக அத்யாபக கைங்கரியங்களில் தக்ஷிண தேசத்தவர்கள் பன்னிரண்டு ஸ்வாமிகள் நியமிக்கப்

பட்டிருந்தார்கள். தினப்படியாக ஸன்னிதியில் திவ்யப்ரபந்த ஸேவையை நாலாயிர க்ரமமாக ஸேவித்து வரவேணுமென்றும், நான்கு பாதமும் நிதானமாக ஸேவிக்க வேணுமென்றும் நிபந்தனை ஏற்பட்டிருந்தது. கைங்கர்யபரர்கள் பெரும்பாலும் நாலாயிரமோதினவர்களாயிருந்தபடியால் தினப்படி காலை மாலைகளில் அருளிச்செயல் கோஷ்டி வெகு ஆச்சரியமாக நடந்து கொண்டிருந்தது. அடியேன் திவ்ய ப்ரபந்தத்தை அறியாக் காலத்துள்ளே அதிகரித்தவனாயினும் அது வாசோவிதேயமாகப்பெற்றது அந்த ஸீதாராம்பாக் ஸன்னிதியிலேதான். அப்போது அங்கு முஸர்பாக்கம் சாமாவையங்கார் என்பவர் அத்யாபகர்களில் தலைவராக எழுந்தருளியிருந்தார். அப்போது இவர்க்கு வயது எண்பது. நேத்ரபாடவம் அடியோடு இல்லாதவர். திவ்யப்ரபந்தம் தவிர வேறு எதுவுமறியாதவர். கீர்த்தி மூர்த்தியான கோவர்த்தனம் ரங்காசாரியர் ஸ்வாமியோடு நெருங்கிப் பழகிக் கொண்டிருந்தவராம். ஸ்ரீ காதி ஸ்வாமியின் ப்ரபிதாமஹரான ஆத்ய அனந்தாசாரியர் ஸ்வாமியையும் ஸேவித்திருப்பதாகச் சொல்லுவர். அவ்விரண்டு மஹான்களுடையவும் பரமபாவனமான சரித்திரங்களைச் சொல்லிக் கொண்டே யிருப்பர். அவையும் கர்ணம்ருதமாகக் காதில் விழுந்து கொண்டிருந்தன. அடியேன் பஹுச்ருதன் என்று சொல்லிக் கொண்டு செருக்குக் கொள்வதற்குப் பல மஹான்கள் காரணபூதர்கள். அவர்களுள், மேலேகுறித்த மண்டயம் ஆழ்வார் ஸ்வாமியும் சாமாவையங்காரென்கிறகிழவரும் அங்கு முதன்மைபெற்றிருந்தவர்கள். மண்டயம்ஸ்வாமி வித்வத் கோஷடியில் பரிகணிதராகையாலே அவரிடத்தில் ச்ரவணம் பண்ணின விஷயங்கள் சாஸ்த்ராநுபந்திகளாயிருக்கும். அத்யாபகரான கிழவரிடத்தில் கேட்ட விஷயங்கள் பல மஹநீயர்களின் சரித்திரங்களைப் பற்றியதாயிருக்கும். திருத்தகப்பனாரிடத்தில் கேட்டவை மிக்க இளம்பிராயத்திலே கேட்டவையாகையாலே என்னுள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதிந்தவை அவையேயாகும். பண்டிதர்கள் ரஸிக்கும் கதைகளும், ஸாமான்யர் உகக்கும் கதைகளும், உபயர்க்கும் உகப்பான கதைகளும் நாடோறும் நாலைந்தாவது ஸாதித்துக் கொண்டேயிருப்பர் திருத்தகப்பனார். அடியேனுக்கு மட்டுமன்றிக்கே உலகுக்கெல்லாம் தந்தையாக எழுந்தருளியிருந்த அவரை இளமையிலேயே பறி கொடுத்த பரிதாபம் பாவியேனுக்கு எந்த ஸந்தர்ப்பத்திலும் மறக்க முடியாமலிருக்கிறது.

காதிஸ்வாமி சோர்வு சோம்பலில்லாமல் பாடங்களை விசேஷமாகச் சொல்லிக் கொடுத்தாரேயல்லது விடுதியான நல்வார்த்தைகளைச் சொன்னதில்லை. அடியேன் திருத்தகப்பனார் முதலானாரிடத்தில் கேட்ட நல்வார்த்தைகளையும் விடுதிக்கதைகளையும் அந்த ஸ்வாமி ஸன்னிதியில் ப்ராஸங்கிகமாக விண்ணப்பம் செய்ய நேரும். அவற்றைக் கேட்டருளி ஒரு ஸமயம் ஸாதித்தருளின வார்த்தை—“உபந்யாஸங்கள் செய்ய ஆரம்பித்து இடையிடையே இப்படிப்பட்ட விஷயங்களைக் கலந்து பொழிந்தாயாகில் கேட்பவர்கள் மிகவும் ரஸிப்பர்கள்” என்று. இங்ஙனம் அந்த ஸ்வாமி ஹார்தமான க்ருபையோடு அநுக்ரஹ பூர்வகமாக நியமித்தருளினபடியால் அவ்விடத்திலேயே சித்திரையில் செய்ய திருவாதிரையன்று கோஷ்டியில் எம்பெருமானார் வைபவம் எடுத்துரைத்தேன். அதை ஹிந்தியிலும் சொல்ல வேணுமென்று அந்த தேசத்தார்கள் கேட்டுக் கொண்டபடியால் அன்றிரவு கோஷ்டியில் ஹிந்தியிலும் உபந்யஸித்தேன். அது முதலாகவே அடியேனுக்கு அடிக்கடி உபந்யாஸங்கள் செய்ய ப்ராப்தமாயிற்று.

அந்த ஸமயத்தில் காதி ஸ்வாமி சிஷ்யப்ரார்த்தனையினால் கல்கத்தா ப்ராந்தம் எழுந்தருள நேர்ந்தது. அடியேனும் கூடவே விடைகொள்ளக் குதூஹலித்திருந்தும், என்னை நெடுநாள் பிரிந்திருக்கமாட்டாத திருத்தாயார் அடிக்கடி யெழுதிக் கொண்டிருந்த கடிதங்களினால் காஞ்சிக்குத் திரும்பி வந்துவிட நேர்ந்தது. அப்போது மாதாமஹஜீயர் ஸ்வாமியும் திருநாராயணபுர ப்ராந்தத்திலிருந்து காஞ்சிக்

குத் திரும்பி யெழுந்தருளியாயிற்று. அப்போது ஸ்ரீஜீயர் ஸ்வாமி மடத்தில் காலை வேளைகளில் ஸ்ரீவசநபூஷணதி ரஹஸ்ய காலக்ஷேபமும் மாலை வேளைகளில் பகவத்விஷய காலக்ஷேபமும் சிறக்க நடந்துகொண்டிருக்கிறது. காஞ்சீவாஸிகளான சில ஸ்வாமிகள் ஸேவித்துக் கொண்டிருக்கிறார்கள். அடியேனும் அந்த கோஷ்டியில் அந்வயித்து ஸேவிகக ஆரம்பித்தேன். அப்போது பதினேழாவது வயது நடந்துவருகிறது. ப்ரஹ்மசாரியாகவே யிருக்கிறேன். ஜீயர்ஸ்வாமி தமிழ்ப் பண்டிதரென்று ஸுப்ரஸித்தர்; பூர்வாச்ரமத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் நடந்து கொண்டிருந்த சடகோபநிலய பாடசாலையில் பல வாண்டுகள் தமிழ் உபாத்யாயராக எழுந்தருளியிருந்தவர். இலக்கண இலக்கியங்களில் ஜீயர் ஸ்வாமியின் பாண்டித்யம் அபரிமிதமானது அக்காலத்தில் (பூர்வாச்ரமத்தில்) வடகலையார் தென்கலையார் பல பேர்கள் ஸ்வாமியிடத்திலே தமிழ் வாசித்துத் தேறினவர்களுண்டு. ஸுப்ரஸித்தரான (வைகுண்டவாஸி) வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமிக்குத் தமிழுபாத்யாயரான "புன்னை சீமாச்சார்" என்று ப்ரஸித்தரான ஸ்வாமியும் ஜீயர் ஸ்வாமியிடத்திலேதான் பரிபூர்ணமாகத் தமிழ் வாசித்தவர் என்று சொல்லக் கேள்வி. பூர்வாச்ரமத்தில் "ஷஷ்டி வரதாசாரியர் ஸ்வாமி"யென்று ப்ரஸித்தர். ஸ்வாமி ஸாமசாகையாதலால் ஸாம வேதத்தைப் பரிபூர்ணமாக வோதினவர்; சாந்தோக்ய உபநிஷத்தை ஸ்வரத்தோடு கர்ணச்ராவ்யமாக ஓதுவர். ஸங்கீத சாஸ்த்ரத்திலும் சிறந்த பாண்டித்யமுள்ளவர். உத்தமாச்ரமியான பிறகும் இராக்காலங்களில் மடத்துவாசலில் வீணை வாசிப்பர். நூற்றுக்கணக்கான ஜனங்கள் கிழகோபுர வீதியில் நின்று கொண்டே கேட்டிருப்பர்கள். ஸன்னிதிகளில் வீணை வாசித்துக் கொண்டே உபந்யாஸங்கள் ராகத்துடன் ஸாதித்தருள்வர். கர்ணம்ருதமான சாரீரம். ஆச்சரியமான—பரமகம்பீரமான திருமேனித் தோற்றம். பரத்வமென்பதைச் சிறிதும் காட்டாத சீலநிதி.

உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்தருளின பிறகு சிலர் ஸ்வாமி ஸன்னிதியிலே வந்து தமிழ்ப்பாடம் ஸாதிக்க வேணுமென்று வந்தார்களாம்; "இனி நான் ஸம்ப்ரதாயக்ரந்தங்கள் தவிர தமிழ்ப்பாடங்கள் சொல்லமாட்டே"னென்று மறுத்து விட்டாராம். அடியேன் ஜனிப்பதற்கு முந்தியே இம் மாதாமஹஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளியாயிற்று. ஸ்வாமியினுடைய ஜ்யேஷ்டபுத்ரியின் புதல்வனாக அடியேன் ஜனித்திருந்தபடியால் ஸ்வாமிக்கு அடியேனிடத்தில் இளமை தொடங்கியே அபரிமிதமான வாத்ஸல்யம். 'ஜீயர்தாதா' என்று சொல்லிக் கொண்டு மடத்திலேயே விழுந்து கிடப்பேன். அக்காலத்தில் கம்பராமாயணம் பிள்ளைப்பெருமாளையங்கார் பிரபந்தம் முதலானவை அதிகமாக அச்சேறவில்லை. அவையெல்லாம் ஸ்வாமிக்கு நாலாயிரதிவ்யப்பிரபந்தம்போல் கண்டபாடமாகவே யிருந்தன. அடியேனுக்கும் அப்படியேயாக வேணுமென்று ஸ்வாமிக்கு உத்கடமான உத்கண்டையிருந்தது. இளமையிலேயே அவற்றை அடியேனுக்குச் சந்தை சொல்லிக் கொடுத்தருள்வர். நன்னூலையும் அப்படியே சந்தை சொல்லிக் கற்பித்தருளினர். பகவத் விஷய ப்ரவசனம் நடக்கிறபோதும் பகல்வேளையில் மடத்திற்கு அடியேனை வரவழைத்துத் தமிழ்ப்பாடங்கள் சொல்லித் தருவர். வைசாகோத்ஸவம், மணவாளமாமுனிகளுத்ஸவம் முதலான விசேஷோத்ஸவ ஸமயங்களில் விராமமேயிராது; அப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களிலுங்கூட விச்ராந்தி கொடாமல் ஆளிட்டு அடியேனை மடத்திற்கு வரவழைத்தருள்வர். சில ஸமயங்களில் தாமே நேராக எழுந்தருளி "அண்ணங்காசாரீ! என்ன பண்ணுகிறாய்? வா" என்று திருவீதியிலிருந்தே கூப்பிட்டருள்வர். அதற்காக ஸ்வாமியை 'ஸம்ந்யாஸியா ஸம்ஸாரியா' என்றும் சிலர் ஏசுவர்கள். எதையும் செவியேற்கமாட்டார் ஸ்வாமி. இடைவிடாது மூன்று வருஷகாலம் இளம்பிராயத்திலே அடியேனைத் தமது திருவடி வாரத்திலே வளர்த்தருளினர். பதினேழாவதுவயதிலிருந்து மறுபடியும் இரண்டு மூன்று வருஷ காலம் அப்படிப்பட்ட பாக்யம் ப்ராப்தமாயிற்று.

ஜீயர் ஸ்வாமி நான்கு திசைகளிலும் யாத்திரை யெழுந்தருளியிருந்தவராதலால் அக்காலத்தில் ஸ்வாமியை யறியாதபேர் எவ்வூரிலுமிருந்ததில்லை. ஸ்வாமியை ஸேவிக்க தினப்படியாக வெளியூர்களிலிருந்து யாராவது வந்து கொண்டே யிருப்பர்கள். அவர்கள் ஜீயர்ஸ்வாமியினுடைய ஸ்ரீஸூக்தியைக் கேட்கவிரும்பினல் 'அண்ணு! நீ ஏதாவது சொல்லு' என்று அடியேனுக்கு நியமித்தருள்வர். அடியேனும் கூசாமல் ஒரு பாசுரத்தையோ ச்லோகத்தையோ எடுத்துக் கொண்டு உபந்யஸிப்பேன். அப்போது ஜீயர்பேரன் என்றே அடியேனுக்கு எங்கும் ப்ரஸித்தியுண்டாயிற்று. ஜீயர்ஸ்வாமி திருநாடலங்கரித்த பிறகுங்கூட சில வருஷம் வரையில் அந்தப்பெயரே அநுவர்த்தித்து வந்தது.

ஜீயர்ஸ்வாமி எம்பெருமானுருத்ஸவந்தோறும் அனேகமாய் ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருள்வது வழக்கம். அங்கு ஸ்ரீமத் உவே. திருநீர்மலை கண்ணமாசாரியர் ஸ்வாமி ஜீயர்ஸ்வாமி திருவடிகளிலே மஹத்தான ப்ராவண்யமுடையவராதலால் அடிக்கடி ஸ்வாமியை ஸேவிக்கக் காஞ்சிக்கு எழுந்தருள்வர். ஒரு ஸமயம் எழுந்தருளினபோது தேவப்பெருமாள் ஸன்னிதியில் நூற்றுக்கால் மண்டபத்தில் ஒரு உபந்யாஸம் ஸாதிக்கும்படி பலரும் பிரார்த்திக்க, அந்த ஸ்வாமியும் அப்படியேயிசைந்து ஸாதித்தார். அன்று திவ்ய ப்ரபந்தவைபவம் என்னும் விஷயமாக ஸாதித்தார். எல்லாரும் (இருகலையாரும்) ஆனந்தமாகக் கேட்டுக்கொண்டிருக்கையில், சாமா திருமலைதாதாசாரியருடைய குமாரர் ஸாமிதாதாசாரியரென்பவர் எழுந்து "தமிழ் மிலேச்ச பாஷையாகையாலே அந்த பாஷையில் தோன்றின பிரபந்தங்களை வேத ஸமமாகவும் வேதத்தைவிட உத்க்ருஷ்டமாகவும் சொல்லுவது தகாது" என்று ஆக்ஷேபம செய்தார். அதற்கு அந்த ஸ்வாமி ப்ரமாண பூர்வகமாக ஸமாதானம் ஸாதித்து யாவரையும் மகிழ்வித்தார். அப்போது அடியேனுக்கு அது விஷயமாக ஒரு க்ரந்தமெழுத வேணுமென்கிற குதூஹலமுண்டாயிற்று. "திவ்யப்ரபந்த வைபவ விவேகஃ" என்றொரு ஸம்ஸ்க்ருதக்ரந்தம் அப்போது எழுதி க்ரந்த லிபியில் அச்சிட்டு வெளியிட்டேன். அடியேன் க்ரந்தரசனையில் இறங்கினபோது இது தான் முதன்முதலாக எழுதி வெளியிட்ட நூல். அது அப்போது தென்னுடு முழுவதும் பரவியதனுல் அது காரணமாகப் பலருடைய திருவுள்ளத்தில் அடியேன் குடிபுக நேர்ந்தது. இத்திருநீர்மலை ஸ்வாமியோடு பலவாண்டு நெருங்கிப் பழகினேன்.

அக்காலத்தில் திருக்கண்ணபுரம் பட்டப்பாஸ்வாமி ப்ரஸித்தவித்வாளுக எழுந்தருளியிருந்தவர் சென்னைமாநகரில் ப்ரவசனங்கள் செய்யத் திருவுள்ளம்பற்றி ஜீயர் ஸ்வாமியின் நியமனம் பெற்றுப் போகலாமென்று காஞ்சிக்கு எழுந்தருளி ஸ்வாமி மடத்திலேயே நாலைந்துநாள் தங்கியிருந்தார். அந்த ஸ்வாமி மஹாவாக்மியாகையாலே அவருடைய உபந்யாஸங்களைத் தேவப்பெருமாள் ஸன்னிதியில் நடப்பிக்கவேணுமென்கிற ருசி ஜீயர்ஸ்வாமிக்கு உண்டாயிற்று. அந்த ஸ்வாமியும் உபந்யஸிப்பதற்கு ஸ்வயமேவ உத்கண்டிதராயிருந்தார். நூற்றுக்கால் மண்டபத்தில் ஆழ்வார்களின் பெருமையைப்பற்றி முதல் நாளும், ஆசாரியர்களின் பெருமையைப்பற்றி மறுநாளும் உபந்யஸித்தார். ஆசாரியர்களின் பெருமையைப் பேசும்போது ஆசார்யத்வோபயுக்தமான ஸகல குணங்களும் நிரம்பியிருந்தது மணவாளமாமுனிகளொருவரிடத்திலேதான் என்பதை உபபத்திகளுடன் வெகு ரமணீயமாக உபந்யஸித்தார். அப்போது தேவப்பெருமாள் தேவஸ்தானத்திற்கு ரிஸீவராயிருந்த தோணுங்குளம் ராமாநுஜாசாரியரென்பவர் முடிவுரை சொல்லவெழுந்து "இந்த ஸ்வாமி வெகு ஆச்சரியமாக உபந்யஸித்தார்; நாளைக்கு தேசிகன் பெருமையையும் உபந்யஸிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்" என்ருர். அந்த ஸ்வாமியும் அப்படியேயென்று இசைந்திருந்தார். ஆனல் என்ன காரணத்தாலோ மறுநாள் உபந்யாஸம் நடைபெறவில்லை. அப்போது அந்த

ஸ்வாமியோடு அடியேனுக்கு மிகவும் நெருங்கின பரிசயம் ஏற்பட்டு அது நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்து அடிக்கடி அவரை யுத்தேசித்து அடியேன் சென்னைக்கு விடைகொள்வதும், அடியேனை யுத்தேசித்து அவர் காஞ்சிக்கு எழுந்தருள்வதுமாய் ஸங்கிகர்ஷம் ப்ரபலப்பட்டுவிட்டது. அந்த ஸ்வாமி சென்னையில் தங்கசாலைத் தெருவில் ஜாகை அமைத்துக்கொண்டு இரண்டு மூன்று சாரிடிகளில் உபந்யாஸங்கள் ஸாதிக்கத் தொடங்கினார். அப்போது அடியேன் மாதந்தோறும் இரண்டு மூன்று நாட்களாவது அங்குச் சென்றிருப்பேன். அந்த ஸ்வாமியின் நியமனத்தினால் உபந்யாஸங்களும் செய்வேன். அவ்விடத்திலேயே ஸ்திரவாஸம் செய்யும்படி அவ்விடத்து பக்தர்கள் பலர் கேட்டுக்கொள்வர்கள். அப்போது அடியேன் வித்யார்த்தி தசையிலேயேயிருப்பவனாதலாலும் நகரவாஸத்தில் ருசியற்றவனாதலாலும் அதற்குச் சிறிதும் இணங்கிற்றிலேன். அப்போது அவ்விடத்தில் அதே வீதியில் பண்டிட் லக்ஷ்மணாசார் கீதை யுபந்யாஸம் செய்து கொண்டிருந்தார்; பட்டப்பாஸ்வாமி அவ்விடத்தில் உபந்யாஸம் ஸாதிக்க ஆரம்பித்த பிறகு லக்ஷ்மணாசாருடைய கோஷ்டி குறையத் தொடங்கிற்று; அதனால் அவர் ஸ்வஸ்தானம்சென்று சேர்ந்தார். பட்டப்பாஸ்வாமி ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளினால் ஜனங்களை ஆவர்ஜனம் செய்கிறாரென்று தெரிந்து கொண்ட லக்ஷ்மணாசார் தாமும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் பரிசயத்தை ஸம்பாதித்துக் கொண்டு மறுபடியும் சென்னைக்கு வருவதாகச் சொல்லிப்போய் அப்படியே இரண்டு மூன்று வருஷகாலம் ஸ்வஸ்தானத்திலிருந்து கொண்டு சில ஸ்ரீவைஷ்ணவ பண்டிதர்களைத் துணைகொண்டு திவ்யப்ரபந்தத்தில் சிலசில பாகங்களை அதிகரித்து வியாக்கியானங்களையும் ஸேவித்து மறுபடியும் சென்னைமாநகர் வந்து முதன்முதலாக அமலனாதிபிரான்



ஸ்ரீ உவே. திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி
யென்கிற திருவேங்கடாசாரியர் ஸ்வாமி
(வைகுண்டவாஸி)

உபந்யஸித்தார். திருப்பாவையும் உபந்யஸித்தார். பெரியவாச்சான்பிள்ளை கனவிலே தமக்கு ஸாக்ஷாத்காரமளித்து அர்த்தவிசேஷங்களை உபதேசித்தருளினதாக ஸதஸ்ஸில் அடிக்கடி சொல்லுவராம். பழையபடியே பக்தர்கள் அவரிடத்திலும் ஈடுபட்டு உபந்யாஸங்கள் கேட்டு வந்தார்கள்.

பட்டப்பா ஸ்வாமியைப்போல உபந்யஸிக்கவல்லவர்கள் இல்லையென்றே சொல்லலாம். அவருடைய பிதாமஹர் வாய்மோட்டு வரதாசாரியர் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தராம். அந்த ஸ்வாமியின் உபயவேதாந்த வைதுஷ்யாதிசயத்தைப் பற்றி அஸ்மதீய மாதாமஹ ஜீயர் ஸ்வாமி காலக்ஷேப ஸமயங்களில் அடிக்கடி ஸாதித்துக் கொண்டிருந்ததுண்டு. அவரிடத்திலேயே பட்டப்பா ஸ்வாமி ஸகலார்த்தங்களும் கேட்டவராம். ஸம்ப்ரதாயார்த்தங்களில் அவரிட்டது பிச்சை என்றே சொல்லும்படியாயிருந்தது. அந்த ஸ்வாமி அதிஸ்வல்பகாலத்திலேயே சென்னையிலேயே திருநாடலங்கரிக்க நேர்ந்து விட்டது. ஆனாலும் நாலைந்து வருஷங்கள் சென்னையில் அந்த ஸ்வாமி காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டிருந்ததன் பலனாகவே சென்னையில் வைணவம் தழைத்தோங்கும்படியாயிற்று. அவருடைய தேஜஸ்ஸு அத்விதீயமானதே. அப்போது அவரிடத்தில் ஸ்ரீவில்லிபுத்தூர் கிடாம்பி தெய்வசிகாமணி ஐயங்காரென்பவர் திருமடைப்பள்ளி கைங்கரியம் பார்த்து வந்தார். அவர் இளமையில் காவ்ய நாடகாதிகள் சிறிது வாசித்திருந்தார். பட்டப்பா ஸ்வாமியிடம் உபந்யாஸங்கள் கேட்டே விசேஷமான ஞானம் பெற்று ஸ்ரீவில்லிபுத்தூரில் பலவாண்டுகள் பல பேர்களுக்கு ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரவசனம் செய்து வந்தார். அந்த தெய்வசிகாமணி ஸ்வாமியின் ஸ்நேஹமும் அடியேனுக்கு ஏற்பட்டு, ஒருவிசை அடியேனோடுகூட அவர் வைரமுடியுத்ஸவத்திற்குத் திருநாராயணபுரம் வந்தார். அப்போது இருவோமுக்கும் பரஸ்பர ப்ரேமபந்தம் ப்ரபலமாயிற்று.



ஸ்ரீ உவே. கிடாம்பி தெய்வசிகாமணி ஸ்வாமி
ஸ்ரீவில்லிபுத்தூர் (வைகுண்டவாஸி)

அடியேன் பதினாறாவது வயதில் முதல் தடவையாக நம்பெருமாள் ஸன்னிதியில் திருவத்யயநோத்ஸவம் ஸேவிக்க விடை கொண்டேன். அப்போது ப்ரதிஸம்வத்ஸரமும் இவ்வுத்ஸவத்தை ஸேவித்தே தீரவேணுமென்கிற அத்யவஸாயமுண்டாயிற்று. அப்படியே அனேக வருஷங்கள் அடுத்தடுத்து அவ்விடம் விடை கொண்டு ஸேவித்து வந்தேன். அதனால் அடியேனுக்கு ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதியநுபவம் அதிகமாகவுண்டு. ப்ரஹ்மோத்ஸவங்களுக்கும் பல தடவை சென்று ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. இற்

றைநாள் வரையில் அடியேன் ஸ்ரீ ரங்கம் சென்று ஸேவித்த பர்யாயங்கள் 75-க்கு மேல் என்னலாம். அங்கே திருவத்யயநோத்ஸவத்தில் நடைபெறும் அரையர்ஸேவையில் அடியேனுக்கு அபரிமிதமான அபிநிவேசம் உண்டானபடியால் அவ்வுத்ஸவத்திற்கு மட்டும் அனேகமாய்த் தவருமல் விடை கொள்வதை வைத்துக் கொண்டிருந்தேன். ஒருவிசை மாதா மஹ ஜீயர்ஸ்வாமியும் அவ்விடத்தில் எழுந்தருளியிருக்க நேர்ந்தது. அப்போது ஸ்ரீ குவளக்குடி சிங்கமையங்கார் ஸ்வாமியென்பவர் தேவஸ்தான தர்மகர்த்தாவாயும் தென்னாசார்ய தர்சநநிர்வாஹகராயும் அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கிருர். இவர் மஹத்தான ஸம்பத்தையுடையவர். இவர் தம்முடைய கீர்த்தி ஆசந்த்ரார்க்கம் விளங்கும்படியாக ஸ்ரீ ரங்கத்தில் தம்முடைய திருமாளிகை ஸமீபத்தில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய பாடசாலையொன்று விசேஷமான மூலதனத்துடன் ஸ்தாபித்தவர். அந்த பாடசாலை இற்றைக்கும் விசேஷ அபிவிருத்தியுடன் நடைபெற்று வருகிறது. இப்பாடசாலையை ஸ்தாபிக்க முயலுங்காலத்திலே அந்த சிங்கமையங்கார் ஸ்வாமியின் உயர்ந்த கடாக்ஷவீக்ஷணத்திற்கு அடியேன் இலக்கானேன். இராப்பத்தில் நம்பெருமாள் புறப்பாடு கண்டருளி ஆயிரக்கால் மண்டபத்திற்கு எழுந்தருளும்போது ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் ஸேவிக்கிற கோஷ்டி மிகப் பெரிதாக நடைபெறுவது வழக்கம்.



ஸ்ரீமத் உவே. குவளக்குடி சிங்கமையங்கார் ஸ்வாமி
ஸ்ரீ ரங்கம் (வைகுண்டவாஸி)

அந்த கோஷ்டியில் அடியேன் இருந்து கொண்டு உச்சஸ்வரமாக ஸேவிக்கையில் எதிர்வரிசையில் தடியை யூன்றிக்கொண்டு தளர்ச்சியோடு நின்று கொண்டிருந்த சிங்கமையங்கார் ஸ்வாமி 'இந்த பிள்ளையாண்டான் யார்? எவ்வூர்' என்று பக்கத்தில் நிற்குமொரு பெரியவரைக் கேட்கிருர்; 'காஞ்சீபுரத்திலிருந்து அழகியமணவாள ஜீயர்ஸ்வாமி எழுந்தருளியிருக்கிருரே, அவருடைய பேரன்' என்று அவர் சொல்லுகிருர். 'அப்

படியா? இதுவரையில் எனக்குத் தெரியாமல் போயிற்றே' என்கிறார் சிங்கமையங்கார் ஸ்வாமி. இந்த ஸம்வாதத்தை அடியேன் கவனித்துக் கொண்டேயிருக்கிறேன். பிறகு அவர் அடியேனருகே வந்து நின்று கொண்டு "இவ்வூரில் ஸேவிக்கிற ஸ்தவம் உமக்கு எப்படி பாடமாயிற்று? தேவப்பெருமாள் ஸன்னிதி



(வைகுண்டவாஸியான) ஸ்ரீ மதுபயவே மெய்யுவையங்கார் ஸ்வாமியின்
ஸ்ரீ பாஷ்யப்ரவசந கோஷ்டி ஸ்ரீ ரங்கம்

யில்கூட இது ஸேவிக்கிற வழக்கமுண்டா என்ன?" என்று கேட்டார். அதற்கு அடியேன் "தேவப்பெருமாள் ஸன்னிதியில் இந்த உத்ஸவம் நடப்பது வெகு ஏகாந்தம்; அங்கு இந்த ஸ்தவம் ஸேவிக்கப்ரஸக்தியும்கிடையாது" என்றேன். 'அப்படியானால் இதை நீர் எதற்காக வரப்பண்ணினீர்?' என்று அவர் கேட்க, "திருத்தகப்பனார் இளமையிலேயே அடியேனுக்கு எல்லாம் கற்பித்தார்" என்றேன். பிறகு புறப்பாடு முடியும் வரையில் கூடவேயிருந்து அடியேனைத் தமது திருமாளிகைக்கு அழைத்துச் சென்றார். ஸ்ரீ உவே. வித்வான் மெய்யுவையங்கார் ஸ்வாமி யென்பவர் அப்போது கோயிலில் ப்ரதிஷ்டிதராக எழுந்தருளியிருக்கிறார். அனேகர் அந்த ஸ்வாமியிடத்தில் உபயவேதாந்த ரஹஸ்யங்கள் அதிகரிக்கிறார்கள். சாஸ்த்ரபாடங்களும் ஸாதித்து வருகிறார்; புராணப்ரவசனமும் செய்து போருகிறார். [அந்த ஸ்வாமியின் திருக்குமாரரே ஸ்ரீ பண்டிதராஜ ஸுந்தரராஜாசார்யர். இவரே ஸ்ரீவிலாஸம் அச்சுக்கூடத்திற்குத் தலைவராய் அம்ருதலஹரீ பத்ரிகைக்கு அடியேனோடுகூட ஸஹகாரி ஸம்பாதகராக இருந்து வருகிறார்.] அந்த மெய்யுவையங்கார் ஸ்வாமியிடம் அடியேனைக் கொண்டுவிட்ட



ஸ்வாமியின்



அப்பெரியார் "இவரைப் பரீக்ஷிக்க வேணும்" என்று ஸாதித்தார். அந்த ஸ்வாமியோடு அடியேனுக்கு முன்னமே விசேஷபரிசயமிருந்ததனாலும், இரண்டு மூன்று வருஷகாலம் முன்னமே பிடித்து பத்ரிகாஸம்வாதங்களும் விசேஷமாக இருந்தபடியாலும் "இந்த ஸ்வாமியைப் பரீக்ஷிக்க இவ்வூரில் ஒருவருமில்லை" என்று தம்முடைய ப்ரீதிவிசேஷமும் க்ருபாவிசேஷமும் தோன்ற அளவு கடந்து ஸாதித்து விட்டார் மெய்புவையங்கார்ஸ்வாமி. அதனால் சிங்கமையங்கார் ஸ்வாமிக்கு அடியேன்மீது அளவற்ற விச்வாஸமுண்டாயிற்று. எனக்கு ஸர்வஸ்வதானம் பண்ணவேணுமென்கிற அபிலாஷையும் அவர்க்கு உண்டாயிற்று. அதனால் "பிள்ளாய்! ஸங்கோசப்படாமல் கேட்க வேணும்; வேண்டியதைத் தருகிறேன்" என்றார். பதினாயிரம் ரூபாய் வேணுமென்று கேட்டாலும் கொடுப்பார் போலிருந்தது; அது அந்த ஸ்வாமிக்கு லக்ஷ்யமுமன்று; அவர் பல லக்ஷங்களுக்கு அதிகாரியாகையாலே அவலீலையாகக் கொடுக்கவும் வல்லவர்; ப்ரீதியோ கரை புரண்டிருக்கிறது. ஆனாலும் அந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் அப்போது இரண்டு விஷயம் விரும்பினேன். ஸ்ரீரங்கத்திற்கு அப்பால் ஒரு திவ்யதேசமும் ஸேவித்ததில்லையாகையாலே ஸ்ரீவில்லிபுத்தூர் ஆழ்வார் திருநகரி வனமாமலை திருக்குறுங்குடி அனந்தசயனம்வரை ஸேவித்துவரக் குதூஹலங்கொண்டு அதற்குரிய ஸௌகரியம் பண்ணித்தர வேணுமென்று ஒரு விஷயம் விஜ்ஞாபித்தேன்; அக்காலத்தில் அடியேனிடத்தில் விசேஷமாகப் புஸ்தகங்கள் கிடையாது; திருத்தகப்பனார் காலத்தில் 30, 40 புஸ்தகங்களே சேமிக்கப்பட்டிருந்தன. "கோசவாந் ஆசார்ய:" என்பதை நினைத்து ஸ்ரீகோசங்களை விசேஷமாகத் திரட்டவேணுமென்று ருசியுண்டாகி அதை இரண்டாவது விஷயமாக விஜ்ஞாபித்தேன். வாமனன் மஹாபலியிடத்திலே சென்று *என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடி மண் மன்னா! தருகென்று வாய் திறந்தபோது இதை அல்பப்ரார்த்தனையாக நினைத்த மஹாபலிக்கு வெட்கமுண்டாயிற்றென்று தேசிகன் ஸாதிக்கிறார் "வ்ரீடாவித்த வதாந்யதர்நவ" என்பதனால்; அதுபோலவே அந்த மஹாஸ்வாமிக்கும் அடியேனுடைய அல்பப்ரார்த்தனையினால் லஜ்ஜையுண்டானதாகவே தெரிந்து கொண்டேன். ஆயினும் அவரிடத்தில் அடியேன் விரும்பியது அவ்வளவே. உடனே அந்த ஸ்வாமி இதற்கென்ன ப்ரமாதம்? என்று ஸாதித்து, தம் திருமாளிகைக்கு அழைத்துக் கொண்டுபோய் ஸித்தமாக வைத்துக் கொண்டிருந்த பட்டு பீதாம்பரங்கள் சிலவற்றைப் பரமப்ரீதியோடு ஸாதித்து, நூறு ரூபாய் கொடுத்து 'திவ்யதேச யாத்திரையைச் செய்து கொண்டு மறுபடியும் இவ்விடமே வாரும்' என்று சொல்லி விடை கொடுத்தார்.

அப்போது காஞ்சீபுரத்திலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு மூன்று ரூபாய்க்குள்ளாகவே ரைல்சார்ஜ் இருந்தது. அந்த ஸ்வல்ப தொகையும் அடியேன் கடன் வாங்கிக் கொண்டு வந்தவன். குடும்பநிர்வாஹமும் ச்ரமதசையில் இருந்த காலம் அது. அதனால், அப்போது சிங்கமையங்கார் ஸ்வாமி அசிந்திதமாகச் செய்தருளின உபகாரம் மஹோபகாரம், மஹாமஹோபகாரம் என்று மதிக்கக்கூடியதாக இருந்தது. அடியேனுக்கு அப்போதுண்டான ஆனந்தம் அளவிட முடியாதது. திருத்தகப்பனார் தம்முடைய வாழ்நாளை மிகுந்த ச்ரமத்துடன் கழித்தவர். சுரோத்திரியக்ராமமிருந்ததாக நாமமாத்ரமேயொழிய அதிலிருந்து வருஷத்தில் அப்போது 200 ரூ. காண்பது அரிதாயிருக்கும். பாடசாலையில் உபாத்யாயராக இருந்தபோது, பல வருஷங்களில் ஐந்து ரூபாயும், சில வருஷங்களில் ஏழு ரூபாயும் வேதனமாம். ஆகவே வெகு ச்ரமத்துடன் குடும்பநிர்வாஹம் செய்து வந்தார். யாராவது சோதிடர்கள் வந்தால் அவர்களிடம் அடியேனுடைய ஜாதகத்தைக் காண்பித்து யோகங்களைப்பற்றிக் கேட்பர்; அப்படி 50, 60 சோதிடர்களிடம் திருத்தகப்பனார் கேட்டது அடியேனுக்கு நினைவிருக்கிறது. ஒவ்வொரு சோதிடரும் "இப்படிப்பட்ட ஜாத

கம் நாங்கள் பார்த்ததேயில்லை; அநந்யஸாமாந்யமான யோகங்களுள்ள ஜாதகம் இது" என்றே சொல்லுவர்கள். அதைக் கேட்டுத் திருவுள்ளம் பூரிப்பர் தகப்பனார். "மருகாந்தாரத்தில் சென்றாலும் வடைபாயஸத்தோடு ம்ருஷ்டான்ன போஜனம் கிடைக்கும்" என்பர் ஒவ்வொரு சோதிடரும்.

"வாசகர்களே! அடியேனுக்கு நினைவுக்கு வரும் விஷயங்கள் அபரிமிதம்; அவற்றையெல்லாம் எழுதிககொண்டு போனால் இதுவொரு மஹாபாரதமேயாகும். யாரும் வாசிக்கவும் மாட்டார்கள். ஏதோ முக்கியமென்று தோன்றுகிறவற்றை எழுதுகிறேன். சிலவற்றாலோ பலவற்றாலோ ஆத்மஸ்துதி [தற்புகழ்ச்சி] பலிப்பதாகக் கண்டாலும் அதற்காக அடியேன் ஸங்கோசப்படவில்லை. பெரியார்களின் பரமக்ருபைக்கு விசேஷமாக இலக்காகப் பெற்றேனென்பதை வெளியிட்டு இதனால் ஒரு ஆத்மானந்தமடைவதற்கே இஃது எழுதப்படுவதால் அன்புடையார்க்கு இது போக்யமாகட்டும்; உதாஸீநர்கட்கு உபேக்ஷணீயமாகட்டும்.

கீர்த்திமூர்த்தியான சிங்கமையங்கார் ஸ்வாமியின் பரமக்ருபையைப் பெற்றவடியேன் அன்றே ஸ்ரீவில்லிபுத்தூர் முதலான திவ்யதேசங்களை ஸேவிக்கப் புறப்பட்டு விட்டேன். அடியேனுடைய வாழ்நாளில் இந்த திவ்யதேசங்களை யெல்லாம் 20, 30 தடவை ஸேவித்திருக்கிறேனாகிலும், விவாஹமாவதற்கு முன்னே ப்ரஹ்மசாரியாயிருந்து கொண்டு முதல் தடவையாக ஸேவிக்கப்பெற்ற காலத்துச் செய்திகளை விஜ்ஞாபிக்கிறேன். முதலில் ஸ்ரீவில்லிபுத்தூர் விடை கொண்டேன். ஏற்கெனவே அடியேனுக்குப் பரமாப்தரென்று கிடாம்பி தெய்வசிகாமணி ஸ்வாமியொருவர் (பக்கம் 34-ல்) தெரிவிக்கப்பட்டிருக்கிறார். அவருடைய ஸ்நேஹம் அப்போது ஏற்பட்டிருக்கவில்லை. நடத்தைகளை ஆநுபூர்வியாக இதில் எழுதிவருகின்றேனில்லை. பெரும்பாலும் முன்னதுபின்னதாகவே எழுதப்பட்டு வருகின்றன. திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமியின் ப்ரீதிவிச்வாஸங்கள் ஏற்பட்ட வரலாறுகளை அடியேன் இதில் முன்னமே யெழுதியிருந்தாலும் அவை பிற்பாடு ஏற்படுமவையேயாம். ப்ராஸங்கிகமாக எழுத ப்ராப்தமாமவற்றை விடமுடியாமையாலே வரலாறுகளில் பௌர்வாபர்யக்ரமம் பரிபாலிக்க முடிகிறதில்லை. அடியேனுடைய இருபத்திரண்டாவது வயதுக்குப்பிறகு ஏற்பட்ட வரலாறுகள் அனேகமாக வரிசைக்கிரமமாய் எழுதப்படலாம். அதற்கு முந்திய வரலாறுகள் இவை.

ஸ்ரீவில்லிபுத்தூரில் முதன்முதலாகப் பல மஹான்களின் பரமக்ருபையைப் பெற்றேன். அங்கே நடந்து கொண்டிருந்த அத்யயநோத்ஸவ கோஷ்டியை ஸேவிக்கும்போது அடியேனுக்கு வெகு விஸ்மயமுண்டாயிற்று. ஆசார்யஹ்ருதயத்தில் *பொலிக பொலிகவுக்கு ப்ரமேயம் ஸாதிக்கிறபோது "லோகத்வீபாந்தரங்களில் நின்றும் போந்த தேவர்குழாங்களைக் கண்டு காப்பிட்டு" என்று ஸாதிக்கிறார்; ஸ்ரீவைகுண்டத்திலுள்ளாரும் ச்வேதத்வீபத்திலுள்ளாரும் ஆழ்வாரெதிரே வந்து திரண்டதாக ஸாதிக்கிறார். அந்தத் திரளையே அடியேன் அப்போது ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸேவிக்கப்பெற்றேன். அதிசயோக்தியன்று; பரமவிலக்ஷணர்களான ஐந்நூறு ஸ்வாமிகள் ஸேவை ஸாதித்தார்கள். காஞ்சீப்ராந்தத்தில்தான் ஸ்ரீவைஷ்ணவத்திரள் அதிகமென்று இறுமாப்புக் கொண்டிருந்த அடியேன் அவ்விடத்தில் ஸேவித்தவாறே அது தொலையப்பெற்றேன். பாவியேனுடைய கண் பொல்லாதது; கண்ணெச்சில் பட்டு விட்டது. அடுத்த பர்யாயங்களில் அந்த திவ்யதேசத்திற்கு விடை கொண்டபோது அந்த ஸம்ருத்தியில் எட்டிலொன்றுகூட ஸேவிக்க ப்ராப்தமாகவில்லை. இந்த பரிதாபம் கிடக்கட்டும். அப்போது அடியேன் அநுபவித்த ஆனந்தம் வாசாமகோசரம். ஸன்னிதியினுள்ளே புகும்போது

அரையர்ஸேவை நடந்து கொண்டிருந்தது. நம்முடைய பாக்ய விசேஷத்தினால் இற்றைக்கும் பாங்காக எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ அரையர் வடபத்ரமையங்கார் ஸ்வாமி அப்போது யுவாவாய் அதிகம்பீரமான தோற்றத்துடனே ஆச்சரியமான திருமிடற்றோசையுடனே வியாக்கியானம் ஸேவித்துக் கொண்டிருந்தார். முதன் முதலாக அந்த மஹானுடைய கடாக்ஷவீக்ஷணத்திற்கும் நிரவக்ரஹமான அநுக்ரஹத்திற்கும் இலக்கானேன். அடியேனுக்கு அப்போதிருந்த "ஜீயர் பேரன்" என்கிற வ்யபதேசம் அடியேன் அங்கு விடை கொள்வதற்கு முன்னமே பரவியிருந்தது போலும். அதனால் அங்கு எழுந்தருளியிருந்த மஹான்கள் பலரும் மிகச் சிறியேனான வென்னை அதிமாத்ரம் ஆதரித்தார்கள். வாழைக்குளத் தெருவில் தமிழ் வித்வான் ஸ்ரீ உவே. அப்புவையங்கார் ஸ்வாமி, மஹாப்ராஜ்ஞரான திருவாழி ஸ்வாமி, மேலைவாத்யார் ஸ்வாமி........முதலான பல மஹான்கள் இப்போது நமது தௌர்ப்பாக்யத்தினாலே வைகுண்டவாஸிகளாயிருக்கின்றார்கள். இப்படிப்பட்ட பல மஹான்கள் அடியேனை முன்னமறியாதவர்கள் சிரபரிசிதர்கள்போல அணுகி வந்து 'அடியேனுடைய க்ருஹத்திற்கு வரவேணும், அடியேனுடைய குடிசைக்கு எழுந்தருளவேணும்' என்று அஹமஹமிகயா அழைத்தருளின ஸம்ப்ரமங்கள் இன்றுபோல் நினைவுக்கு வரும்போது "நினைந்தென்னுள்ளே நின்று நெக்குக் கண்களசும்பொழுக" என்னும் நிலைமையே உண்டாகிறது. வாழ்நாளெல்லாம் அவ்விடத்திலேயே இருந்து விடலாமென்றும் தோன்றிற்று. ஒரு வாரத்திற்குள் இந்த திவ்யதேச யாத்திரையை முடித்துக்கொண்டு ஊருக்குத் திரும்ப வேண்டிய ஆவச்யகதை யிருந்தது. அப்போது இரண்டொருநாள்தான் ஸ்ரீவில்லிபுத்தூரில் இருக்க நேர்ந்தது. அங்கு ஸ்ரீ உவே. விஞ்சிமூர் கிருஷ்ணமா



ஸ்ரீமதுபயவே வித்வான் அரையர்
வடபத்ரமையங்கார் (ஸ்ரீவில்லிபுத்தூர்)

சாரியர் ஸ்வாமி யென்கிற மஹான் சிறந்த அத்யாபகராய் கோஷ்டியை நிர்வஹித்து வருகிறார். அவருடைய மூத்த திருக்குமாரர் விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமி அப்போது வித்யார்த்திதசையிலிருக்கிறார். மஹாமேதாவி. ஸர்வர்க்கும் ஸ்ப்ருஹணீயர். அவருடைய நிரதிசய ப்ரீதிக்கும் பாத்ரமானேன். அந்த ஸ்வாமி இப்போது ஸ்ரீமத் பரமஹம்ஸ திருக்குறுங்குடி ஜீயர்ஸ்வாமி திருவடிவாரத்தில் ஆஸ்தான வித்வானாக எழுந்தருளியிருக்கிறார். நமது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் தற்போது அனேக வித்வான்கள் எழுந்தருளியிருந்தாலும் இந்த ஆழ்வார் ஸ்வாமியை விசிஷ்டாதிகாரியாக அடியேன் கொண்டிருக்கிறேன். உபய வேதாந்தத்திலும் தெளிந்த ஞானமுடையவர். ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளுமெல்லாம் கண்டஸ்தமாக இருக்கப் பெற்றவர். வித்வான்களுக்கு இந்த ஸம்பத்து வாய்ப்பது அரிதன்றோ. மூலோபஸ்திதியில்லாமல் காலக்ஷேபம் ஸாதிப்பவர்கள் பலருளர். அங்ஙனன்றிக்கே அருளிச்செயல்கள், ரஹஸ்யங்கள், ஸ்தவங்கள் என்னும் வாசியின்றிக்கே ஸகல திவ்ய ஸூக்திகளையும் அர்த்தஜ்ஞானத்தோடும் கண்ட பாடமாக வைத்துக் கொண்டிருப்பவர் இந்த ஸ்வாமி. அத்தோடு நல்ல விமர்ச கௌசலமுமுள்ளவர். ஆழ்வார் காலத்தில் *அரக்கரசுரர் போல்வாரைத் தடவிப் பிடிக்க வேண்டியிருந்ததாக ஆசார்யஹ்ருதயத்தில் ஸாதிக்கப்பட்டது. இக்காலத்தில் இந்த ஸ்வாமியைப்போன்ற விசிஷ்டாதிகாரிகளைத் தேடிப்பிடிக்க வேண்டியிருக்கிறது. எல்லாவற்றுக்கும் மேலாக ஆத்மகுணஸம்பத்தியுமமைந்தவர். பல்லாண்டு பாடின மஹான் அவதரித்த தலத்திலே அவதரித்த விவர்க்கு நாம் பல்லாண்டு பாடுவது மிகை. 'ஆயினும் *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்னும் கோவையில் நினைவுக்கு வரக்கூடியவர்களில் அடியேனுடைய நினைவில் நித்யஸந்நிஹிதரான



ஸ்ரீமதுபயவே வித்வான் விஞ்சிமூர்
ஆழ்வார் ஸ்வாமி (ஸ்ரீவில்லிபுத்தூர்)

இந்த ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாடுகிறேன். மிகமுக்கியமாக இங்கு ஒன்று விஜ்ஞாபிக்கிறேன். இப்படிப்பட்ட துர்லபாதிகாரிகளில் மற்றும் ஒருவராக ஆழ்வார் திருநகரியில் ஸ்ரீமதுபயவே இளையவில்லி சடகோபாசாரியர் ஸ்வாமி எழுந்தருளியிருக்கிறார். அந்த ஸ்வாமி இரண்டு வருஷ காலமாக அடியேனுக்கு ஸம்பந்தியாயிருக்கின்றார். அதற்காகக் கொண்டாடுகிறபடி போலுமென்று சிலர் நினைப்பர்களாயினும் அந்த ஸ்வாமியின் ஒப்புயர்வற்ற யோக்யதாதிசயங்களை உள்ளபடியுணர்ந்தவர்கள் இக்கொண்டாட்டம் ஸ்தாநே ஸ்தாநேயென்று உள்குழைவர்கள். ஆழ்வாரருளிச் செயல்கள் அர்த்தஜ்ஞானமில்லாதவர்களுக்குக் கைவந்திருப்பதை நாம் பலவிடங்களிலும் காணலாம். அதில் என்ன வியப்பு. வேதத்தை மட்டும் உருப்போட்டுத் தலைகீழாகச் சொல்லவல்லவர்கள் பலருளரன்றோ. அவர்கள் பக்கலில் விஸ்மயநீயம் என்னவுளது? அப்படி திவ்யப்ரபந்த மூலத்தைக் கண்ட பாடம் செய்தவர்கள் பலருளரென்றாலும் வியப்பில்லை. ஜ்ஞான பூர்த்தியுடன் ப்ரவசநம் செய்யவல்ல அதிகாரிகளிடத்திலே ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகள் யாவும் கண்டஸ்தமாக இருக்கப்பெற்றால் அது ஸுவர்ணகமலத்திற்கு ஸௌரபோந்மேஷம் என்றுதான் சொல்லவடுக்கும். திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமியிடத்திலே அடியேனுக்கு ஈடுபாடு உண்டானதற்குக் காரணம் இதுவே. சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவராயிருந்து அருளிச்செயல்களையும் ரஹஸ்யக்ரந்தங்களையும் முகஸ்தமாகக் கொண்டிருந்த பெருமையை முதன்முதலாக அந்த ஸ்வாமியிடத்திலே அடியேன் கண்டு ஈடுபட்டவன். இத்தகைய உத்தமாதிகாரிகளிலே தற்காலம் அடியேனுடைய நித்யாநுஸந்தானத்தி லுள்ளவர்கள் மிகச்சிலரே. அவர்களுள் மேலேகுறித்த ஸ்வாமிகளிருவரும் முன்னணியில் நிற்பவர்கள். இவர்களுக்கு அடியேன் ஏதாவது குறைகூற நினைத்தால் 'வேதாத்யயநம் செய்திலர்' என்று ஒரு குறை கூறலாம். "ஏகோ ஹி தோஷோ குணஸந்நிபாதே நிமஜ்ஜதி இந்தோ: கிரணேஷ்விவாங்க:" என்றதை நினைத்துக் கொண்டு ஸமாஹிதனுவேன். வர்த்தமான காலத்தில் வானமாமலை மடாதிபதியாக எழுந்தருளி ஸேவை ஸாதிக்கின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதிஜீயர்ஸ்வாமி பூர்வாச்ரமத்திலெழுந்தருளியிருந்தபோது அவரோடு நெருங்கிய பழக்கமுண்டு. (அடியேனுடைய) பதினாறும் வயதிலேயே ஸ்ரீஸ்வாமியின் க்ருபாதிசயம் அடியேன்பால் பெருகப்பெற்றது. அடியேனுடைய இளம்பிராயச் செய்திகளை விஜ்ஞாபித்திருக்கிற கீழ்ப்பிரகரணத்தில் விடுபட்டவை பலபலவுண்டு.



ஸ்ரீமதுபயவே இளையவில்லி சடகோபாசாரியர் ஸ்வாமி. ஆழ்வார் திருநகரி.

ஸ்ரீமத்பரம ஹம்ஸேத்யாதி சின்னகலியன் ஸ்வாமியின் ஒப்புயர்வற்ற திருவருளுக்கு அடியேன் இலக்காகப்பெற்ற விசேஷங்கள் இனிமேல்தான் ப்ராகரணிகமாக வெளிவரப்போகின்றன. அந்த ஸந்தர்ப்பத்தில் விளக்க வேண்டியவை வர்த்தமாநவானமாமலை ஸ்வாமியின் பெருமைகள் என்று விட்டிருந்தேன். *ஸ்ம்ருதஸ்ய உபேக்ஷாநர்ஹத்வம் ஸங்கதி:* என்ற கணக்கிலே இங்குச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன்.



ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய வர்த்தமாந
வானமாமலை மடாதிபதி ஸ்வாமி
சின்ன ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி

ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து அடியேன் வானமாமலைக்கு விடைகொண்டேன். அப்போது ஆஸ்தானமலங்கரித்தருளாநின்ற ஸ்ரீமத் சின்னகலியன் ஸ்வாமி யாத்திரையில் எழுந்தருளியிருக்கிற காலம். வர்த்தமாந ஸ்வாமி அப்போது வித்வான் வானமாமலை ஐயங்காரென்றே ப்ரஸித்தி பெற்றிருந்தவர். இன்னும் சில வித்வான்களும் அங்கு எழுந்தருளியிருந்தார்கள். இந்த ஸ்வாமியின் க்ருபா ப்ரவாஹமே அடியேன்பால் அப்போது ஒரு மடை செய்தது. அப்போது ஸ்வாமியினுடைய யோக்யதைகளில் மிகவும் ஈடுபட்டேன். ஸ்வாமி உயர்ந்த தர்க்கவித்வானென்பது ப்ரஸித்தம். சிலகாலம் காஞ்சீபுரத்திலுமெழுந்தருளி ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸந்நிதியிலும் க்ரோடபத்ராதிகள் வாசித்தவர். அந்த காலத்தில் அடியேன் சைதந்யமில்லாதவனுதலால் ஸ்வாமியைப்பற்றி அப்போது தெரிந்து கொள்ள ப்ரஸக்தியில்லையாயிற்று. ப்ரஸ்தாவயாத்திரையில்

வானமாமலைக்கு விடை கொண்டபோது இந்த ஸ்வாமியோடு மிகவும் நெருங்கிப் பழக நேர்ந்தது. அடியேனுக்கு இளமை தொடங்கியே (நல்லதோ, தீயதோ) ஒரு வழக்கமுண்டு; (அதாவது) அக்ஷராஸ்யர்களோடு பேச நேர்ந்தால் அவர்களின் யோக்யதை எவ்வளவு என்று பராமர்சிக்கப் புகுந்து நிலைகண்டறிவது. அதிகமாகப் படித்தவர்கள்—பாடப்ரவசனங்களும் செய்கிறவர்கள் என்பதை மட்டுங் கொண்டு ப்ரமிக்கமாட்டேன்; படித்த புத்தகங்களில் இவர்களின் வ்யுத்பத்தி எப்படிப்பட்டது? விவேசநசக்தி எப்படிப்பட்டது? என்பதைக் கண்டறிய விரும்பி அதற்கு அநுகுணமாகவே வார்த்தையாடுவேன். வைத்யர்கள் நாடியைப் பிடித்துப் பார்த்து ஒரே நிமிஷத்தில் உடல்நிலையை யுணருவர்கள். அடியேன் பத்தெட்டு நிமிஷம் வார்த்தையாடி வ்யுத்பத்தி ப்ரகாரங்களை நிலைகாண்பேன். இந்த அப்யாஸம் திருத்தகப்பனரிடமிருந்து அடியேனுக்கு ஸங்க்ரமித்ததொன்று. இடையில் ப்ராஸங்கிகமாக வொன்று விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீமான் உவே. அ. வீ. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியைப் பலர் அறிவர். இந்த ஸ்வாமி ஸமீபகாலத்தில்தான் திருநாட்டுக்கெழுந்தருளினர். ஏறக்குறைய 35 வருஷ காலமாகத் திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருந்தவர். கீர்த்திமூர்த்தியான அத்தங்கி கவிபூஷண ஸ்வாமிக்கு வலக்கை போன்றிருந்தவர். இவர் ஸாஹித்யமும் சாஸ்த்ரமும் வாசித்ததெல்லாம் ஸ்ரீபெரும்பூதூர்வித்யாலயத்தில். வியாகரணசாஸ்த்ரம் பூர்த்தியாக வாசித்தவர். ஸ்ரீபெரும்பூதூரில் வாசித்துக் கொண்டிருந்த காலத்தில் ஒரு ஸமயம் திருத்தகப்பனரை ஸேவிக்கக் காஞ்சிக்கு வந்திருந்தார். [இவர் திருப்பதி ப்ரதிவாதிபயங்கர ஸ்வாமிகளின் திருவடியாகையால் திருத்தகப்பனரிடத்தில் விசேஷித்து ப்ராவண்யமுடையவர்.] இவர் காஞ்சிக்கு வந்த ஸமயம் வித்யாப்யாஸம் அனேகமாய் முடிவு பெற்றிருந்ததாக ஞாபகம். திருத்தகப்பனர் மிகவும் அசக்தியோடு சயனித்துக் கொண்டிருக்கிற காலம் அது. வந்தவிவர் தம்முடைய கல்விகளை உள்ளபடி தெரிவித்துக் கொண்டார். ஆசுகவித்வமும் சித்ரகவித்வமும் தமக்கு உண்டு என்றும் சொல்லிக் கொண்டார். ஏதோவொரு ப்ரயோக விஷயத்தில் ஐந்தாறு நிமிஷமே



ஸ்ரீமதுபயவே வித்வான் அகரம் வீரவல்லி நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி (வைகுண்டவாஸி)

சர்ச்சை செய்து வார்த்தையாடின திருத்தகப்பனுர் உடனே "இவரைப் போன்ற
வ்யுத்பந்நர் இல்லை; *ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராம் அஸௌ குருகுலக்
விஷ்டோ ந்ருஸிம்ஹ: கவி:*" என்று மிகவும் கொண்டாடினுர். அந்த க்ஷணம்
முதலாகவே அடியேனுக்கு அந்த நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியிடத்தில் மிகுந்த ப்ரா
வண்யமுண்டாயிற்று. அவர் திருவல்லிக்கேணியிலேயே யெழுந்தருளி யிருந்த
படியால் அடிக்கடி சந்திக்க நேரும். விஷய சர்ச்சைகள் செய்தால் த்ருப்திகரமான
ஸமாதானம் கிடைப்பது சில வ்யக்திகளிடத்தில்தானே. அப்படிப்பட்ட வ்யக்தி
விசேஷங்களில் இந்த ஸ்வாமி முன்னணியில் நின்றிருந்தார். ப்ராஸங்கிகமான
விது நிற்க. வர்த்தமாந வானமாமலை மடாதிபதி ஸ்வாமியைப் பூர்வாச்ரமத்தில்
அடியேன் வானமாமலையில் ஸந்தித்தபோது ஸ்வல்ப ஸம்பாஷணத்திலேயே
ஸ்வாமியின் யோக்யதாதிசயத்தைக் கண்டு மிக வியந்தேன். ஸாமாந்ய சாஸ்த்ரங்
களிற்போலவே ஸம்ப்ரதாய சாஸ்த்ரங்களிலும் மிகவுமுழைத்தவர் என்றும், அத்
யாவச்யக ஸம்ப்ரதாய க்ரந்தங்களின் உபஸ்திதியை நன்ருகவுடையவரென்றும்
க்ரஹித்து அப்போதே யீடுபட்டேன்.

வாசகர்களே! அத்யந்தம் ப்ரதிஷ்டிதர்களான மஹான்களைப்பற்றி நீச
னேன் நிறையொன்றுமிலேன் அபிநந்தனம் செய்வது அநுசிதமும் அபஹாஸ்
யமுமாகும். ஸுப்ரஸித்தர்களான மஹான்களுக்கு அடியேனுடைய புல்லுரை
யினுல் புதியதோர் பெருமை விளையப் போகிறதில்லை. இப்படிப்பட்டவொரு ப்ர
ஸக்தியையிட்டு மஹான்களின் குணநுபவத்தைப்பண்ணி அடியேன் களிக்கிறேன்.
க்ருதக்ருத்யனுகிறேனென்று கொள்க. வானமாமலையிலிருந்து திருக்குறுங்குடி
அனந்தசயனம் விடைகொள்ள அபிநிவேசமிருந்தும் திருவத்யயநோத்ஸவ சாத்து
முறை அணித்தானபடியாலே ஆழ்வார் திருநகரிக்கு விடை கொண்டேன். அப்
போது அவ்விடத்தில் உத்தமாச்ரமிகள் நிறைந்து ஸேவை ஸாதித்தார்கள்.
அப்படி ஸேவிக்கும் பாக்கியம் அந்தவொரு ஸமயத்தில்தான் அங்கே கிடைத்தது.
அந்த ஜீயர்ஸ்வாமிகளுள் ஸ்ரீமத் பரமஹம்ஸ அப்பன் ஜீயர்ஸ்வாமியென்று
ப்ரஸித்தராயிருந்தவர் சிலர்க்குத் திருப்பாவையாருயிரப்படி காலக்ஷேபம் ஸாதித்
துக் கொண்டிருந்தார். ஆழ்வாரை ஸேவிப்பதற்கு முன்னே அந்த காலக்ஷேப
கோஷ்டியின் ஸேவை அடியேனுக்கு ப்ராப்தமாயிற்று. அந்த ஸ்வாமியின் ப்ரவசந
பக்தி வெகு ரமணீயமாயிருந்தது. பூர்வாசார்ய பங்க்திகளின்மேல் பொருளுரைத்து
நிர்வஹிக்கிற பத்ததி மிகவும் ஸ்ப்ருஹணீயமாயிருந்தது. அந்த ஸ்வாமியை மறு
படியும் ஸேவிக்கப் பாவியேன் கொடுத்து வைக்கவில்லை. அப்போது அவ்விடத்
தில் பல மஹான்களுடைய க்ருபையைப் பெற்றேனுயினும் அன்னவர்களில் ஒருவர்
கூட இப்போது எழுந்தருளியிருக்கவில்லை. அங்கிருந்து திருக்குறுங்குடிக்கு
விடை கொண்டேன். அப்போது ஆஸ்தானமலங்கரித்தருளியிருந்த பெரிய
ஸ்வாமி திருமேனி பாங்கில்லாமலெழுந்தருளியிருந்தபடியால் அவருடைய திரு
வருளை அதிகமாகப்பெற ப்ராப்தமாகவில்லை. அந்த ஸ்வாமிக்கு ப்ரதிநிதியாக
வர்த்தமாந ஸ்வாமி ஸ்ரீகார்யதுரந்தரராக எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி
யினுடைய விசேஷகடாக்ஷத்திற்கு அடியேன் இப்போது பாத்ரபூதனுயிருப்பது
வியப்பன்று; அப்போதே இலக்கானேன். ஸந்நிதி கைங்கரியங்களையும் திருப்
பணிகளையும் அபிவிருத்தி செய்வதில் ஸ்ரீஸ்வாமிக்கு அப்போதே தொடங்கி
மஹத்தான ச்ரத்தை. வித்யாபக்ஷபாதமும் வித்வான்களிடத்தில் ஆதராதிசயமும்
இந்த மடத்திற்கு இயற்கையானது. வர்த்தமாந ஸ்வாமியின் ஜ்ஞாநாநுஷ்டா
னங்களை வருணிப்பதற்கு அடியேனு அதிகாரி? எண்பத்தேழு திருநக்ஷத்திரங்
களுக்கு மேற்பட்ட வயோதிகராயிருக்கச் செய்தேயும் அனுஷ்டானங்களிலும்
பெருமாளுடைய நித்யமங்களாசாஸனத்திலும் ஈஷத்தும் ச்ரத்தைகுன்ருமல்
ஸௌலப்யமே வடிவெடுத்தவராய்* ஸ்மிதபூர்வாபிபாஷியாய் ஸேவை ஸாதிக்கின்ற

போன்ற
குருகுலக்
க க்ஷணம்
குந்த ப்ரா
ளி யிருந்த
திகரமான
ட வ்யக்தி
ங்கிகமான
ாச்ரமத்தில்
த்திலேயே
சாஸ்த்ரங்
றும், அத்
வரென்றும்

பற்றி நீச
அபஹாஸ்
புல்லுரை
வொரு ப்ர
ரிக்கிறேன்.
க்குறுங்குடி
வ சாத்து
டன். அப்
ித்தார்கள்.
கிடைத்தது.
ாமியென்று
பம் ஸாதித்
காலக்ஷேப
ின் ப்ரவசந
நுளுரைத்து
மியை மறு
அவ்விடத்
ளில் ஒருவர்
றுங்குடிக்கு
ந்த பெரிய
டைய திரு
ரதிநிதியாக
ந்த ஸ்வாமி
னுயிருப்பது
ளயும் திருப்
தொடங்கி
ராதிசயமும்
ாநுஷ்டா
நக்ஷத்திரங்
னங்களிலும்
தகுன்றுமல்
ஸாதிக்கின்ற



ஸ்ரீமத் பரமஹம்ஸ திருக்குறுங்குடி பேருளாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி
(வர்த்தமான பீடாதிபதி)

இந்த ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாட ஸ்ரீவைஷ்ணவ வுலகமெல்லாம் கடமைப்பட்டிருக்கிறது. முதன்முதலாக க்ருஹஸ்தாச்ரமத்திலே அடியேன்பால் அன்று விசேஷகடாக்ஷம் செய்தருளின இந்த மஹாஸ்வாமி இன்றளவும் அந்த கடாக்ஷ விஷயத்தில் சுக்லபக்ஷ சந்திரனேயே யொத்திருப்பது அடியேனை யுருக்குகின்றது.

திருக்குறுங்குடியிலிருந்து நேராக நம்பெருமாள் ஸன்னிதிக்கு வந்து சேர்ந்து, அடியேனுக்கு நேர்ந்த இவ்வளவு பாக்யவிசேஷங்களுக்கும் காரணபூதரான ஸ்ரீமத் சிங்கமையங்கார் ஸ்வாமி திருவடிகளிலே யாத்ரா விசேஷங்களை யெல்லாம் விஜ்ஞாபனஞ் செய்தேன். ஏற்கெனவே அந்த ஸ்வாமியிடத்தில் ஸ்ரீகோசாபேக்ஷையையும் தெரிவித்திருந்தேனுகையால் அடியேன் வருவதற்குள் அனேக ஸ்ரீகோசங்களை எப்படியோ ஸித்தப்படுத்தி வைத்திருந்தார். பெரிய பகவத்விஷய ஸ்ரீகோசமுட்பட நாலாயிர வியாக்கியானங்களும் மற்றும் பலபல க்ரந்தங்களும் அங்கே பலரிடத்தில் விலை கொடுத்து வாங்கி சேகரித்து வைத்திருந்து "இவையெல்லாம் உமக்காக வைத்திருக்கிறேன், எடுத்துக் கொண்டு போகலாம்" என்று ஸாதித்து, உடனே 'இவை உம்மால் கொண்டு போக முடியாது; பார்ஸல் செய்வித்தனுப்புகிறேன்; இனி என்ன உத்தேசம்?' என்று வினவினர். 'நேராக ஊர் போய்ச்சேர வேண்டியிருக்கிறது, நியமித்தருள வேணும்' என்று விஜ்ஞாபித்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டேன். அப்போது விருத்தாசலம் வழி கிடையாது, தஞ்சாவூர் – கும்பகோணம் வழியேயுள்ளது. திருக்குடந்தையில் மட்டுமிறங்கி ஆராவமுதனை ஸேவித்துப்போக வெண்ணி அங்கே யிறங்கினேன். *ஏரார்கோலந் திகழக்கிடந்த ஆராவமுதனை ஆராத காதலுடன் ஸேவித்தேன். அப்போது அவ்விடத்தில் விலக்ஷணர்களான பல வித்வான்கள் எழுந்தருளியிருந்தார்கள். அவர்களுள் வயோதிகரான ஸ்ரீமது பயவே சின்னமு ரங்கநாதபாட்டராசாரியர் ஸ்வாமி யென்பவர் சிறந்த ஜ்ஞாதா; பகவத் விஷயாதிகாரியாகவும் காணப்பட்டார். அவ்விடத்தில் இப்போது எழுந்தருளியிருக்கிற ஸ்ரீ உவே. சின்னமு ஸ்ரீநிவாஸபாட்டராசாரியரின் திருத்தகப்பனர் அவர் என்று ஞாபகம். அந்த ஸ்வாமி நிர்ஹேதுகமாக அடியேனிடத்தில் அப்போது காட்டியருளின ப்ரீதி வாசாமகோசரமாயிருந்தது. மஹான்களினுடைய விசாரணைக்கு இலக்காகக்கூடிய வயதில் அப்போது அடியேன் இருந்திலேன்.

முன்னம் ப்ரஸ்தாவித்த 'ஜீயர்பேரன்' என்கிற வ்யபதேசம் அடியேனை அறியாக் காலத்திலேயே அனேக மஹான்களின் ஆச்சரியமான கடாக்ஷத்திற்கு இலக்காகப் பண்ணிற்று. ஸ்ரீவில்லிபுத்தூரிலும் வானமாமலையிலும் ஆழ்வார் திருநகரியிலுமிருந்த ஸ்வாமிகளின் ஆதராதிசயங்களைப் பெற்றது அடியேனுக்கு ஆச்சரியமாகத் தோன்றவில்லை; திருக்குடந்தையில் அப்போது எழுந்தருளியிருந்த மஹான்கள் மிகவும் பரத்வம் பாராட்டக் கூடியவர்கள்; அடியேனை அப்போது ஒரு பொருளாகவும் மதிக்கக்கூடியவர்களல்லர். அப்படியிருந்தும் நெடுநாள் பழகினவர்களையும் பெரியார்களையும் விசாரிக்குமாபோலே ஒவ்வொருவரும் தாமாக வந்து விசாரிப்பதும், பெருமாள் ஸேவையைச் சிறப்பாகச் செய்விப்பதும், அவ்விடத்து விசேஷங்களை யெடுத்துரைப்பதும் என்னுள்ளத்துள்ளே வியக்கத்தக்கதாயிருந்தது. பாட்டராசார் தெருவிலே தாதாசாரியர் ஸ்வாமி யென்று ஒரு பெரியவர் எழுந்தருளியிருந்தார். (ஸ்ரீ. தி. ச. ச. நா.) என்னு மெழுத்துக்கள் அந்த ஸ்வாமிக்கு இன்ஷலாக அமைந்தவை. (வ்யக்திஸ்மாரணார்த்தமாக இது தெரிவித்தபடி.) அந்த ஸ்வாமியின் ஞானம் ஒருபுறமிருக்க சமதமாதி குண ஸம்பத்து வெகு அற்புதமாக இருந்தது. அப்போது அந்த ஸ்வாமி ஜந்தாறு பண்டிதர்களை உடன் வைத்துக்கொண்டு ஸ்ரீ தேசிகனுடைய ஸ்தோத்ரங்களுக்கு வியாக்கியானங்களை யெழுதுவித்து அச்சிட்டு மாதாந்த ஸஞ்சிகையாக வெளியிட்டுக்கொண்டிருந்தார். அது

ஸம்பந்தமான கார்ய நிர்வாஹ க்ரமங்களை யெல்லாம் பரமப்ரீதியோடு காண்பித்தார். கீழே ப்ரஸ்தாவித்த ஸ்ரீமத். சின்னா ரங்கநாதபாட்டராசார்ய ஸ்வாமியும் அவ்விடத்தே வந்து சேர்ந்து, தாமும் தேசிக ஸ்தோத்ரங்களில் சிலவற்றுக்கு மணிப்ரவாள வியாக்கியான மிட்டருளியிருப்பதாக ஸாதித்துச் சில விடங்களை வாசித்துக்காட்டினார், முகுந்தமாலைக்கு விரிவான மணிப்ரவாள வியாக்கியானமொன்று எழுதியிருப்பதாகவும் காட்டினார். [இது பிறகு அச்சாகி வெளிவந்திருப்பதாக ஞாபகம்.] அப்போது இந்த ஸ்வாமி அடியேனை விட நாற்பது திருநக்ஷத்ரங்களுக்கு மேற்பட்டு வயோவ்ருத்தராயிருந்தவர். அப்படி யிருந்தும் மிகச் சிறியேனான அடியேனோடு புரையறக் கலந்திருந்த சீலம் நிகரற்றிருந்தது. இந்த ஸ்வாமி பகவத் விஷயத்தில் நல்ல விரகர். ஈட்டுப் பங்க்திகள் பலவற்றை எடுத்து ஸாதிக்கக் கேட்டேன். அவரது திருக்குமாரருடைய நட்பும் நெடுநாள் தொடர்ந்துவந்தது.

தமிழ் வித்வான் மஹாமஹோபாத்யாய ம. வீ. ராமாநுஜாசார்ய ஸ்வாமியும் அப்போது அங்குச் சில ஸம்ஸ்க்ருத வித்வான்களைக் கொண்டு மஹாபாரதத்தை மொழிபெயர்ப்பிக்கும் பணியிலே ஊன்றியிருக்கிறார். அவருடைய நட்பும் மிகமிகக் கிடைத்ததப்போது. மாத்வர்களான ஸ்ரீமத். க்ருஷ்ணாசார் வ்யாஸாசார் என்னுமிருவர் [இவர்கள் ஸஹோதரர்களென்று நினைவு.] பாம்பே நகரத்தில் மஹாபாரதத்தை அச்சிடக்கொடுத்து இங்கே இருபது வித்வான்களைத் திரட்டி சோதனங்கள் செய்வித்துக்கொண்டிருந்தது மப்போது. அந்த ஸமிதியையும் கண்ணாரக்கண்டு களித்தேன். ஸ்வகீய துர்க்குணமொன்றை மறைத்திடாமல் விஜ்ஞாபிக்கிறேனிங்கு. அடியேனுக்கு இளமை தொடங்கியே புரோபாகித்வம் அதிகம்; ஜன்மஸித்தமென்றும் சொல்லலாம். மஹா வ்யாபகர்கள் எழுதினதாயிருந்தாலும் அதில் குற்றங்குறை கண்டு கூறிக்கொண்டிருப்பேன். அவ்வியல்பை அங்கிருந்த வித்வான்களிடத்திலும் சிறிது சிறிது காட்ட அவகாசம் கிடைத்தது. அதனால் அவர்களுக்குத் திருவுள்ளக் கலக்க முண்டாகாமல் ப்ரீதி ப்ரகர்ஷமே விளைந்தது. அங்குப் பெருமாளை ஸேவித்துவிட்டு அடுத்த வேளையிலேயே திரும்ப வேணுமென்றிருந்த வடியேனை அந்த மஹா ஸ்வாமிகள் அப்போது மூன்று நான்கு நாள் அங்கே ஆனந்தமாக இருக்கச் செய்தருளினார்கள். திருவாய்மொழியில்*சூழ்விசும்பணி முகிலிலே "குடந்தை யெங்கோவலன் குடியடியார்க்கே" என்கிற பாசுரப்படி திருநாட்டிலும் பேச நின்ற திருக்குடந்தை ஸ்வாமிகளின் பெருமை அப்போதடியேனுக்கு அநுபவ விஷயமாயிற்று. ஸ்ரீமத். சதுச் சாஸ்த்ர கல்பதரு. அம்மாஸத்ரம் சேஷாசாரியர் ஸ்வாமி யென்கிற மஹான் மஹா தேஜஸ்வியாய் அப்போது அங்கே ஹயக்ரீவமந்திரமென்று ஒரு ஸ்தான விசேஷ மேற்படுத்தி அதில் ஸாமான்ய சாஸ்த்ரங்களையும் அத்யாத்ம சாஸ்த்ரங்களையும் பலர்க்கு ப்ரவசனம் செய்து கொண்டிருந்தார்; அவரிடத்தில் வானமாமலை வித்வான்ஸ்வாமி யொருவரும் சாஸ்த்ரம் வாசித்துக்கொண்டிருந்தார். அவர் அடியேனை அந்த அம்மாஸத்ரம் ஸ்வாமி ஸன்னிதியில் கொண்டுவிட்டு அவருடைய பரம க்ருபைக்கும் பாத்ரமாக்கி வைத்தார். கீழே (27-ஆம் பக்கத்தில்) திருவுருவப்படமாக ஸேவை ஸாதிக்கின்ற ஸ்ரீ ராயம்பேட்டை க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, கொட்டையூர் சேஷசாயி ஸ்வாமி முதலானவர்கள் அங்கு அப்போது சிறந்த வித்வான்களாக எழுந்தருளியிருக்கிறார்கள். இவர்கள் வெறுமனேயிராமல் லோகோபகார தீக்ஷிதர்களாய் நாநாக்ரந்தமுத்ரண ப்ரகாசந ப்ரவசநாதிகளிலே நிஷ்ணாதர்களாயிருந்தபடியால் அவர்களுடைய க்ருபைக்கும் ப்ரீதிக்கும் அடியேன் அநாயாஸமாகவே இலக்காகப் பெற்றேன். அந்த ஸமய விசேஷத்தை நினைக்கும்போது அடியேனுடைய அங்கமெல்லாம் ஆராவமுதமாகி விடுகிறது.

ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்ய ரென்பவர் R. V. க்ருஷ்ணமாசார்யரென்று ப்ரஸித்தர். அபிநவபட்டபாணேத்யாதி பிருதாவளிகள் பெற்றவர். அந்த ஸ்வாமி அப்போது வைத்த ப்ரீதிப்ரகர்ஷத்திற்குச் சில உபாதிகளாலே

இடையில் ஸ்வல்பகாலம் சிறிது பங்கமேற்பட்டிருந்த போதிலும் பிறகு அவர்தாமே மிகவும் அநுதபித்துப் பழைய ப்ரீதியைப் புநராவாஹநம் செய்துகொண்டு அதை நாடு நகரமும் நன்கறியக் காட்டிக்கொண்டு வாழ்ந்தார். [இதைப்பற்றி மேலே விவரிக்க நேரும்.] நம்மாழ்வார் திருவிருத்தத்தில் ஒரு பாசுரம் ஸாதிக்கிறார். “சேமம் செங்கோனருளே, செறுவாரும் நட்பாகுவரென்று ஏமம்பெற வையஞ் சொல்லும் மெய்யே” என்று. ஸ்நேஹிகள் த்வேஷிகளாவதும், த்வேஷிகள் ஸ்நேஹிகளாவதும் இவ்வுலகின் இயல்வன்றோ; இவ்வியல்வை அடியேனுடைய வாழ்நாளில் சில ஸ்வாமிகள் பக்கலிலே அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. இதற்குத் திருக்குடந்தை ப்ரதாந லக்ஷ்யமாகும். எக்காரணம் பற்றியும் எந்த நாளிலும் நிலைமாறாமல் ப்ரேமமேவடிவாக இருப்பவர்கள் (திருக்குடந்தையில்) சில ஸ்வாமிகள் இற்றைக்குமுளர். ஆங்குக் கரணைக்கொல்லையக்ரஹாரத்தில் ஸேவை ஸாதித்து



ஸ்ரீமதுபயவே. திருக்குடந்தை. இளையவில்லி ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் பகவத்விஷய ப்ரவசநகோஷ்டி.

வரும் ஸ்ரீமதுபயவே. இளையவில்லி ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி அடியேனுக்கு முதல் தடவையான திருக்குடந்தை யாத்திரையிலே பரிசிதரன்றிக்கே பிறகு இரண்டு மூன்றாண்டுகள் கழித்துப் பரிசிதரானாலும் அவருடைய க்ருபையும் ப்ரேமமும் விச்வாஸமும் திநேதிநே க்ஷணேக்ஷணே வளர்ந்து வருவதத்தனை யொழிய க்ஷுத்ரங்களான உபாதிகளாலே சலிக்குமதன்று. “திருக்குடந்தை கண்ணன்ஸ்வாமி” யென்று ப்ரஸித்தரா யிருக்கின்ற ஸ்ரீநிவாஸராகவாசார்யரும் இந்த ச்ரேணியிலே பரிகணிதராயிருக்கச் செய்தேயும் அவர் சென்னை நகரவாஸியாக அமைந்ததனாலே தம்முடைய ப்ரீதி விச்வாஸங்களை ‘இலை மறைவு, காய் மறைவு’ என்னுங் கணக்

கிலேவைத்துக் கொள்பவரா யிருக்கின்றார். இருந்தாலும் ப்ரேமவான்களிலே அவரே ப்ரதமபரிகணிதராய் நிற்பர்.

இங்குத் திருக்குடந்தை ப்ரஸ்தாவம் வலிதாக வந்துவிட்டபடியாலே மிகுந்த ஆனந்தத்துடன் ஒரு விஷயம் விஜ்ஞாபிக்கிறேன். இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாக அடியேன்பால் சிறந்த க்ருபையும் நிறைந்த ப்ரீதியும் கொண்டிருக்கின்ற ஸ்ரீ மதுபயவே. S. ரங்கஸ்வாமி ஐயங்கார் டெங்கணிகோட்டை, நெல்லூர் முதலானவிடங்களிலே லௌகிக உத்யோகபதவிகளில் அமர்ந்திருந்தாலும் வைதிகாக்ரேஸரராய் ஸதாசார சீலராய் ஸம்பிரதாய நூற்கடலிலே ஆழ அவகாஹித்தவராய் உத்தம ஸ்ரீவைஷ்ணவராய் விளங்குபவர். இவர் உத்யோகத்திலிருந்து விச்ராந்தரானது முதல் திருக்குடந்தையையே நித்ய வாஸஸ்தலமாகக் கொண்டிருக்கிறார். [இந்த ஸ்வாமியின் நெடுநாளைய அபேக்ஷையைப் பூர்த்தி செய்வதற்காகவே இந்த ஸ்வகீய சரித்திர நூல் எழுதப்பட்டு வருகிறதென்பதும் அன்பர்கள் அறியத்தக்கது.] இதுநிற்க.



(ராவ்ஸாஹிப்) ஸ்ரீமதுபயவே. S. ரங்கஸ்வாமி ஐயங்கார்
(திருக்குடந்தை)

அப்போதைய திருக்குடந்தை விசேஷங்களை மட்டும் எழுதுவதென்றால் உண்மையில் அதுவே ஒரு பெரிய புராணமாகும். வெகு ஆனந்தமாகத் தெரிவித்துக்கொண்ட இத்தனை விசேஷங்களுக்கு

மேல் ஸஹ்ருதய ஹ்ருதயோத்வேக ஜநகமானதொரு அற்பவிஷயத்தையும் இங்குத் தெரிவிக்க வேண்டியவனாகிறேன். இதை அடியேன் ப்ரஸ்தாவியாமல் விட்டும் விடலாம். தெரிவித்து வைப்பது நலமென்று தோன்றியே சிறிது தெரிவிக்கிறேன். அப்போது அவ்விடத்தில் குரிச்சி கோபாலாசார்யர் என்றொரு வயோதிகர் இருந்தார். இப்பெரியவர் அடியேனைப்பற்றிக் கேள்விப்பட்டு, தம்முடைய க்ருஹத்திற்கு என்னையழைத்து வரும்படி ஒருவரை என்னிடத்திற்கு அனுப்பினார். இதை யறிந்த சில ஆப்தர்கள் அவரிடம் போகவேண்டாமென்றும் சொன்னார்கள். ஏனென்று கேட்டதற்கு "அவர் தென்கலை ஸம்பிரதாயஸ்தர்களிடத்திலே மிகுந்த மாச்சரியமுடையவர், எதையாவது குறும்பாகப் பேசுவர்; வீணான மனஸ்தாபந்தான் விளையும்; போகாமலே யிருப்பது நலம்" என்றார்கள். "ப்ரஹரிப்பரோ?" என்று கேட்டேன்; "சே, சே, அவ்வளவு அதிசங்கை வேண்டாம்; அவர் கிழவர்" என்றார்கள். பெரியவர் சொல்லியனுப்பியிருக்கும்போது போய்வருவதே நலமென்று தோன்றிப் புறப்பட்டுப் போனேன்; ப்ரணாமம் செய்து நின்றேன். உடனே 'நீர் எவ்வூர்? எங்கு வந்தீர்? என்று கூட வினவாமல் "உமக்குத் திருப்பாவை தனியன் தெரியுமன்றோ?* கோதா தஸ்யை நம இதமிதம் பூய ஏவாஸ்து பூய:* என்று சொல்லிக்கொண்டு ஒரு தடவை ஸேவிக்கிறீரே, நியாயமா?" என்றார். அதற்கு அடியேன் "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத்புவி" என்கிற சாஸ்த்ரம் தேவரீருக்குத் தெரிந்திருந்தும் நாற்காலியை விட்டுப் பெயராமல் இடித்தபுளிபோலிருப்பது நியாயமா?" என்றேன்........இவ்வாறு ஆரம்பம் முதலாகவே வாதப்ரதிவாதங்களே நடந்து சென்றன. அப்போது அவர் சததஸம்வாதமென்றொரு புத்தகம் அச்சிட்டு அதே ஸமயத்தில்தான் அச்சுக்கூடத்திலிருந்து கட்டுக்கட்டாக கூடத்திலும் முற்றத்திலும் கொண்டு வைக்கப்பட்டிருந்தது. மொத்தம் ஆயிரம் புத்தகமிருக்கும். ஒரு புத்தகத்தை யெடுத்து என்கையில் கொடுத்து 'என்னெதிரேயே இதை நீர் வாசித்துப் பார்க்க வேணும்' என்று கட்டளையிட்டார். அது நூறுபக்கங்களுக்கு மேலிருக்கும். இவ்வளவையும் இப்போதே வாசிக்க முடியுமா? என்றேன். நடுவில் ஒரு பாகத்தை யெடுத்துக் கொடுத்து இந்த கெட்டத்தையாவது வாசித்துப்பாரும் என்றார். தேவரீரே வாசித்துக்காட்டலாமே யென்றேன். அவரே சிறிதுபாகம் வாசித்துக் காட்டினார். அந்த புஸ்தகத்திற்கு சததஸம்வாதமென்றல்லவா பெயரிட்டிருக்கிறார். அதற்குத் தக்கபடி தென்கலையாருக்கும் வடகலையாருக்கும் நூறு பேதங்களிருப்பதாக அதில் நிரூபிக்கிறார். இந்த பேதங்கள் அர்த்தங்களைப் பற்றி யிருக்குமோ வென்னில்; அத்தனையும் வம்பு விஷயம்; சிலவற்றைமட்டும் இங்கு உதாஹரிக்கிறேன். (1) பூணூல் முறுக்கும்போது வேதமந்த்ரங்களைச் சொல்லிக்கொண்டே முறுக்கவேணுமென்பது வடகலையார்மதம்; ஊர்வம்புதும்புகளையெல்லாம் பேசிக்கொண்டே முறுக்க வேணுமென்று தென்கலையார் மதம். (2) இறந்துபோன மாதாபிதாக்களுக்குப் பார்வணச்ராத்தம் செய்ய வேணுமென்று வடகலையார் மதம்; அது கூடாது, ஸ்ரீவைஷ்ணவ ததீயாராதனந்தான் செய்யவேணுமென்று தென்கலையார் மதம். (3) பார்யை ரஜஸ்வலையாயிருக்கும்போது பர்த்தா நிமந்த்ரணம் புஜிக்கக் கூடாதென்று வடகலையார் மதம். அப்படிப்பட்ட காலத்தில் புஜிப்பதே உத்தமமென்று தென்கலையார் மதம். (4) ஜலமல விஸர்ஜந காலங்களில் பூணூலைக் காதில் சுற்ற வேணுமென்று வடகலையார் மதம். உபவீதியாகவே யிருக்க வேணுமென்று தென்கலையார் மதம். (5) ஏகாதசியன்று சுத்தோபவாஸமிருக்க வேணுமென்று வடகலையார் மதம். அன்று மூன்று தடவை புஜிக்க வேணுமென்று தென்கலையார் மதம்........என்றிப்படி தாம் எழுதியிருப்பதாக வாசித்துக் காட்டிக் கொண்டு போகிறார்.

இவ்விதமாக வம்புதூஷணைகளை யெழுதி நிந்திப்பவர்களுக்குத் தகுந்த பதிலுரைகளை வெளியிட்டு வாய்மூடிபோடவேணுமென்று அன்றுதான் முதன்

முதலாக அடியேனுடைய உள்ளத்தில் தோன்றிற்று. அப்போதே அவ்விடத்திலேயே உட்கார்ந்து பதிலெழுதி அச்சிட்டு வெளியிட்டுவிட்டே இவ்வூரைவிட்டுக் கிளம்ப வேணுமென்று அவ்வளவு உத்வேகமுண்டாயிற்று. ஆனாலும் அப்போது அது செய்து தலைக்கட்ட ஸௌகரிய மேற்படவில்லை. அப்போது எட்டு பக்கங் கொண்ட ஒரு பாரமச்சிடுவதற்கு மூன்று ரூபாய்தான் அச்சுக்கூலி. காகிதத்தின் விலையும்மிகக்குறைவே. அவ்வூரிலேயேகண்டனமொன்றுவெளியிடவேணுமென்று ஆக்ரஹமுண்டாயிற்று. "விரைவில் இதற்குச் சரியான கண்டனம் வெளிவரக் காண்பீர்" என்று சொல்லிவிட்டு ஒரு புத்தகமெடுத்துக்கொண்டு வந்துவிட்டேன். அச்சுக்கூடம் தேடவேண்டிய அவசிய மேற்பட்டுவிட்டது. அங்கே திருமழிசையாழ்வார் ஸன்னிதி ஒன்றுமட்டும் தென்கலை. அவ்விடத்தில் பிரதிவாதி பயங்கர ஸ்வாமி யொருவர் வாழ்கிறார். ஏதாவதொரு அச்சுக்கூடத்தில் ஸௌகரியம் பண்ணித் தரவேணுமென்று அவரிடம் சென்று மன்றாடினேன். இது விஷயத்தில் எனக்குத் தெரிந்தவர்கள் யாருமில்லையே யென்று அவர் 'சொல்லிவிட்டார். (கீழே ப்ரஸ்தாவித்த) மஹாபாரத மொழிபெயப்புப் பதிப்பாசிரியரான மஹாமஹோபாத்யாய ராமாநுஜாசாரியர் தென்கலையாகையாலே அவரை யடுத்துப் பார்த்தேன். அவர் "இவ்விடத்துள்ள வடகலை வித்வான்களெல்லாரும் உம்மிடத்தில் பரம ப்ரீதர்களாயிருக்க, அவர்களின் மனம் கன்றும்படியாக இவ்விடத்திலேயே அச்சிடவேணுமோ?" என்றார். "அவர்களைப்பற்றியாவது அவர்களின் ஸம்பிரதாயத்தைப்பற்றியாவது அடியேன் குறை கூறப்போகிறதில்லை; சதஸம்வாதகாரருடைய அஸம்பத்த ப்ரலாபங்களுக்கு மட்டும் கண்டன மெழுதப்போகிறேன்; இதனால் மற்ற ஸ்வாமிகளுக்கு மனக்கலக்கம் ஏற்படஹேதுவில்லையே" என்றேன். "நீர் அப்படி நினைக்கிறீர்; ஸமயத்தில் எல்லாரும் ஒன்று சேர்ந்து கொள்வர்கள்; குரிச்சி கோபாலாசாரியொருவரே அப்புத்தகத்தை யெழுதியச்சிட்டு விட்டதாக நினைக்கிறீர் போலும்; இவ்விடத்தில் பலரும் அதில் ஸஹயோகமுள்ளவர்களென்றே எனக்குக் கேள்வி" என்றார். ஸரிதானென்று சொல்லி உடனே ஊருக்குப் புறப்பட்டுவிட்டேன். வழியிலேயே அப்புத்தகத்தை வாசித்து முடித்தேன். காலே பிடித்துத் தலைவரையில் அபத்தமயமாயிருக்கிறவதற்குக் கண்டனமொன்று எழுதவேணுமோ! என்கிற வெறுப்பும் தோன்றிற்று. அப்புத்தகம் ஸாமான்ய பாமரஜனங்களை மயக்கக் கூடியதாயிருந்தபடியாலே ஒரு மறுப்பு எழுதி வெளியிட்டே யாகவேண்டுமென்று தீவிரமான முயற்சி யுண்டாயிற்று.

சதஸம்வாதகண்டனமென்றே பெயர்வைத்து பதிலெழுதி 4, 5 நாளிலேயே அச்சிட ஆரம்பித்து முதல்பாரத்தை மட்டும் (கீழே ப்ரஸ்தாவித்த) பரமாப்தரான தாதாசாரியர் ஸ்வாமிக்கு (ஒருபிரதி) அனுப்பினேன். உடனே அந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகம் கிடைத்தது. (அதில் அவர் எழுதியிருந்ததாவது)—"இவ்வூரில் அந்த நபர் அக்கிலி பிக்கிலியென்று யாவராலும் ஒதுக்கப்பட்டவர்; அவருடைய புத்தகத்தை இங்கே கண்ணெடுத்துப் பார்ப்பாருமில்லை. அந்த புத்தகம் பிரசாரமடையாதபடி நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம். இதைப் பொருள்படுத்தி தேவரீர் பரிச்ரமம் கொள்ள வேண்டாமென்று தோன்றுகிறது" இத்யாதி. அப்படி அந்த ஸ்வாமி யெழுதியிருந்ததை மிகவும் பத்யமாகக் கொண்டு அந்த ப்ரவ்ருத்தியில் நின்றும் நிவ்ருத்தனானேன். ஆனாலும் ஒரு பாரம் (8 பக்கம்) அச்சிட்டானதை வீண்படுத்தக் கூடாதென்று தோன்றி மேலேயும் சில பக்கங்கள் அச்சிட்டு, அவதாரிகை யென்றும், "ஸூர்யோதயத்திற்கு அருணோதயமிது" என்றும் வெளியிட்டுப் பரவச் செய்தேன். இதில் ஒரு பிரதிகூட இப்போது கிடைக்காது. அந்த சதஸம்வாதமும் அப்படியே. அதன் பிறகு பலதடவை அடியேன் திருக்குடந்தைக்குச் சென்றதுண்டே; யாரைக் கேட்டாலும் சதஸம்வாதமென்கிற பெயரையும்

நாங்கள் கேட்டதில்லையே யென்றூர்கள். அந்த நபரைப்பற்றின ப்ரஸ்தாவமும் பிறகு காதில் விழுந்ததில்லை. ஸம்ப்ரதாயத்தில் வாதக்ரந்தங்களெழுதுவது என்கிற ஒரு பணிக்கு அந்த நபரே பீஜபூதர். அவருடைய அந்த அஸம்பத்த— அபத்த புத்தகத்தைப் பார்க்க நேர்ந்ததும் ஒரு நன்மைக்கு ஹேதுவாயிற்று. அதாவது, நம்முடைய ஸம்பிரதாயத்திலுள்ள மருமமான அம்சங்களையெல்லாம் ஆர அமர ஆராய்ந்து தெரிந்து கொள்ள வேணுமென்கிற அபிநிவேசமுண்டாவதற்கு அதுவே அடியாயிற்று. திருப்புட்குழி ஸமீபத்திலுள்ள மூஸரபாக்கத்தில் ஸ்ரீமத் விரக்திபாஷ்யகாரர் ஸ்வாமியென்று ஒரு வித்வந்மணி யெழுந்தருளியிருந்தார். அவர் வியாகரண மீமாம்ஸைகளில் பரிபூர்ணபாண்டித்யம் பெற்றிருந்ததோடு உபயவேதாந்தங்களிலும் அகாதமான ஞானமுடையவர். அவரை 'நீறுபூத்த நெருப்பு' என்றே யாவரும் சொல்லுவர்கள். காஞ்சீபுரத்தில் ஸ்ரீயதோக்தகாரி ஸன்னிதி ப்ராந்தத்திலுள்ள பல பெரியார்கள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் காலக்ஷேபம் செய்ய வேணுமென்று ஆவல் கொண்டு அந்த பாஷ்யகார ஸ்வாமியைக் காஞ்சிக்கு எழுந்தருளப்பண்ணி அவ்விடத்திலேயே ஸ்திரவாஸியாக வைத்து யதோக்தகாரி ஸன்னிதியில் பொய்கையாழ்வார் திருமண்டபத்தில் நித்யமும் காலை மாலைகளில் ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரவசநம் நடந்து வரும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். அப்படி 15, 20 வருஷகாலம் நடந்தது. அக்காலத்தில் பிரபல உத்யோகஸ்தர்கள் வக்கீல்கள் வைதிகர்கள் பலரும் அந்த ஸ்வாமி பக்கலிலே உபயவேதாந்த ரஹஸ்யங்களையெல்லாம் வரியடைவே ச்ரவணம் செய்து வந்தார்கள். அதுவொரு நல்லடிக் காலமென்ன வேணும். அந்த பாஷ்யகார ஸ்வாமிக்கு ஸ்ரீவசநபூஷணமீமாம்ஸா பாஷ்யம், ரஹஸ்யத்ரயமீமாம்ஸாபாஷ்யம், பாலஸரஸ்வதீப்ரணீத தாத்பர்ய தீபிகை, ஸம்ப்ரதாயசந்திரிகை.........இத்யாதிகளான அர்வாசீந உத்துங்க க்ரந்தங்களிலும் விசேஷமான உபஸ்திதியுண்டு. அந்த க்ரந்தங்கள் யாவும் அந்த ஸ்வாமிக்குத் தவிர வேறு எந்த வித்வானுக்கும் வசப்பட்டிருக்கவில்லையென்று திண்ணமாகச் சொல்லலாம். அந்த க்ரந்தங்களையெல்லாம் அந்த ஸ்வாமி ஸன்னிதியிலே வாசிக்க வேணுமென்று அடியேனுக்கு அபிலாஷையுண்டாயிற்று. கீழே (பக்கம் 8-ல்) ஸேவைஸாதிக்கின்ற ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியிலே ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களை யதிகரித்து வித்வானயிருந்த தாமல் குட்டியென்கிற அக்காரம் அனந்தாசார்ய ஸ்வாமியும் அப்போது காஞ்சியில் வாஸமாக வந்திருந்தபடியால் இருவருமாகச் சேர்ந்து அதிகரிப்பதென்று முடிந்தது.



ஸ்ரீமதுபயவே வித்வத்வரேண்ய விரக்தி பாஷ்யகாரர் ஸ்வாமி (வைகுண்டவாஸி)

நெடுக வாசித்துக் கொண்டே போவது, ஸந்தேஹமுள்ள விடங்களில் கேட்டுத் தெளிவது—என்கிற ப்ரக்ரியையில் நடந்து சென்றது. அப்போது அந்த க்ரந்தங்கள் அச்சேறுமல் ஓலையேட்டிலும் காகிதத்திலுமே யிருந்தபடியால் அவற்றைப் பரிஷ்கரித்து அச்சிடவும் ஆரம்பித்தேன். அப்போது தெலுங்கு லிபியில் அச்சிடுவதற்கு விசேஷ ஸௌகரியமிருந்தபடியாலே அந்த லிபியிலேயே அச்சிடத் தொடங்கினேன்.

முதலில் ஸம்ப்ரதாயசந்திரிகா என்கிற ஏழு ப்ரகாசம் கொண்ட உயர்ந்த க்ரந்தத்தை யச்சிட்டேன். பிறகு, புருஷகாரமீமாம்ஸை, ரஹஸ்யத்ரயகாரிகாவளீ என்கிற க்ரந்தங்களை யச்சிட்டேன். அதன் பிறகு ரஹஸ்ய விவேகமென்கிற மணிப்ரவாளக்ரந்தம். அதன் பிறகு ரஹஸ்யத்ரயமீமாம்ஸாபாஷ்யத்தை யச்சிடத் தொடங்கினேன். இது மிகப்பெரிய க்ரந்தம். மூலமந்த்ரத்தில் ப்ரணவ நமஸ்ஸுக்கள் வரைக்குமே இதில் விசாரம் நிகழ்ந்திருக்கிறது. அவ்வளவுக்கே க்ரந்தம் மிகப் பரந்திருக்கிறது. அதை யச்சிடுவதற்கு விசேஷத்ரவ்ய உபபத்தி அபேக்ஷிதமாயிருந்தபடியால் சென்னையில் தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்களான சில மஹான்களையடுத்து அவர்களின் உதவியைக்கொண்டு நடத்துவதென்று ஆலோசித்திருக்கையில், அப்போது மயிலாப்பூரில் பிரபல அட்வொகேட்டாயிருந்த ஸ்ரீமதுபயவே S. கோபாலஸாமி ஐயங்கார் என்பவர் யாத்ருச்சிகமாகக் காஞ்சிக்கு எழுந்தருளினார். இவர், ஜகத்ப்ரஸித்தரான ஸ்ரீ உவே. (ஸர்) எஸ். வரதாசாரிய ஸ்வாமியின் ஸாக்ஷாத் மாதுலர். ஆங்கிலத்திற்போலவே ஸம்ஸ்க்ருதத்திலும் வல்லவர். கீழே (பக்கம் 29-ல்) ஸேவை ஸாதிக்கின்ற மண்டயம் ஆழ்வார் ஸ்வாமியை வரவழைத்துத் தம்முடைய பங்களாவில் பல வருஷங்கள் எழுந்தருளி யிருக்கச் செய்து அவரிடத்திலே உபயவேதாந்தங்களையும் வரியடைவே கற்றவர். அஸ்மதீய மாதாமஹ ஜீயர் ஸ்வாமி திருவடிகளிலும் ஸ்ரீவசநபூஷண தத்வத்ரயாதிகளை யதிகரித்தவர். உபய வேதாந்தங்களையும் சில வக்கீல்களுக்கு ப்ரவசனமும் செய்தவர். பஹுச்ருதர் என்கிற பிருதம் உண்மையில் இவரொருவர்க்கே ஏற்கும். அனேகவருஷகாலம்சென்னையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த வேதாந்ததீபிகையென்னும் பத்ரிகைக்கும் இரண்டு மூன்று வருஷகாலம் ஸம்பாதகராக இருந்தவர் இந்த கோபாலஸாமி



ஸ்ரீமதுபயவே S. கோபால ஸ்வாமி ஐயங்கார்,
B.A., B.L., அட்வகேட், மயிலை
(வைகுண்டவாஸி)

ஐயங்கார் ஸ்வாமி. இவர், மேலேகுறித்த விரக்திபாஷ்யகார ஸ்வாமியின் பெருமைகளைக் கேள்விப்பட்டு அவருடைய ப்ரவசந கோஷ்டியில் இரண்டொருநாள் அந்வயித்துப் போக வேணுமென்றே காஞ்சிக்கு வந்ததாகத் தெரிந்தது. அப்படியே அந்வயித்திருந்த காலத்தில், ஸம்ப்ரதாயசந்த்ரிகாதிகளான சில க்ரந்தங்கள் அச்சிட்டு முடிந்திருப்பதையும் இன்னும் சில பெரிய க்ரந்தங்கள் அச்சிட வேண்டியிருப்பதையும் அடியேன் விஜ்ஞாபித்து இதை தேவரீரே நிறைவேற்றி வைக்க வேணுமென்று பலருடன் சேர்ந்து பிரார்த்தித்தேன். ஸமயம் நல்ல ஸமயமாயிருந்தபடியால் அந்த ஸ்வாமி ஒருவிதமான தடையும் சாக்குபோக்கும் சொல்லாமல் 'எத்தனை பாரமாகும்? என்ன செலவாகும்?' என்றுகூட வினவாமல் "அச்சுக்கூடத்தில் கொடுக்கும்படியாக மாத்ருகை ஸித்தமாயிருக்கிறதோ? இருந்தால் இப்போதே அடியேன் கையில் கொடுத்து விடலாம்; நாளையிலிருந்தே அச்சிட ஆரம்பித்து ப்ரூப் காபிகளை இவ்விடத்திற்கே அனுப்பிவரத் தடையில்லை" என்று அவலீலையாக ஸாதித்து விட்டார்.

அக்காலத்தில், சென்னைமா நகரில் வாழ்ந்துவந்த கராலபாடி ஆழ்வாரய்யா என்கிற த்ரைவர்ணிகர் வித்வானும் விசேஷ தனிகராயு மிருந்தபடியால் ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபை யென்னும் பெயரால் ஒரு ஸபையை ஏற்படுத்தி அது சாச்வதமாக நடக்கும்படியான திட்டங்களும் செய்திருந்தார். அந்த ஸபையின் மூலமாக நம்முடைய ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் நூற்றுக் கணக்காக அச்சிடப்பட்டிருக்கின்றன வென்பது ஜகத் ப்ரஸித்தம். ட்ரஸ்டிகளின் அவதானக் குறைவினால் அந்த ஸபை இப்போது அஸத் கல்பமாயிருந்தாலும் அது நன்றாக வேலை செய்து கொண்டிருந்த காலத்தில் அந்த ஸபைக்கு, மேலே சொன்ன கோபாலஸ்வாமி ஐயங்கார் தலைவராக நியமிக்கப்பட்டிருந்தார். அடியேன் முத்ரணம் செய்ய வேணுமென்று தெரிவித்த க்ரந்தங்களை யெல்லாம் அந்த ஸபையின் மூலமாகவே அச்சிடுவிக்க நிச்சயித்த அந்த மஹான் அதிஸ்வல்ப காலத்திலேயே அத்தனையும் தெலுங்கு லிபியிலேயே அச்சிடுவித்து முடித்தார். ரஹஸ்யத்ரயமீமாம்ஸாபாஷ்யம், பால ஸரஸ்வதியின் தாத்பர்ய தீபிகை, கடிநபத தீபிகையோடு கூடின சரமச்லோக டிப்பணி...... இத்யாதிகளான உத்க்ரந்தங்களெல்லாம் அந்த மஹானுடைய கருணையினால் வெகுவிரைவாகவே அச்சேற்றப்பட்டு முடிந்தன. அவ்வதிசயம் எழுதி முடியாது. அந்த ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையும் அதன் காரியங்களும் சென்னைமா நகரில் நடந்து கொண்டிருந்தன. அப்படியிருக்க, அச்சுக் கூடத்தையும் இதற்காகவே காஞ்சீபுரிக்கு அனுப்பி பெரியகாஞ்சியில் ஸ்தாபித்து, ஸபாபண்டிதர்களான இருவரை இவ்விடத்திலேயே வந்து வஸிக்கச் செய்து, இரவுபகலாக வேலை நடக்கும்படி திட்டம் செய்து, அதிமாநுஷக்ருத்ய மென்னும்படி அதித்வரையில் முடித்து வைத்த அதிசயம் நெஞ்சால் நினைப்பரிதே. ஸ்ரீவசநபூஷணமீமாம்ஸாபாஷ்யம் மட்டும் அதற்கு முன்னமே ஸ்ரீமத் யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி (தெலுங்கு லிபியில் அதிஸூக்ஷ்மமான அக்ஷரத்தில்) ஒருவாறு அச்சிட்டிருந்தார். அதை அடியேன் ஏழெட்டு வருஷங்களுக்கு முன்பு தேவநாகர லிபியில் அச்சிட்டிருக்கிறேன். இந்த க்ரந்தம் அபூர்ணம்; கிடைத்திருக்கிறவரையில் அச்சிட்டிருக்கிறேன்.

அந்த மயிலை கோபாலஸ்வாமி ஐயங்கார் அப்போது அடியேனுக்கு ஒரு கட்டளையிட்டார். அதாவது, நம் பூருவாசாரியர்கள் ஸாதித்திருக்கிற ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் மணிப்ரவாள வியாக்கியானம் விரிவாகவும் விளக்கமாகவும் எழுதித் தரும்படி நியமித்தார். எழுதிக் கொடுப்பதை உடனுக்குடனே அச்சிட்டு முடிப்பதாகவும் ஸாதித்தார். அப்போதே அந்த நியமனத்தை சிரஸா வஹித்து பஞ்ச

ஸ்தவத்தில் ஸ்ரீஸ்தவத்திற்கு வியாக்கியான மெழுத ஆரம்பித்து அதைப் பூர்த்தி செய்து உடனே வரதராஜஸ்தவத்திற்கும் எழுத ஆரம்பித்தேன். நம் தேவப் பெருமாளுடைய ஸ்தோத்ரமாயிருப்பதால் விஸ்தாரமாகவே யெழுத வேணுமென்று ஆவல் கொண்டு விரிவுக்கு அஞ்சாமல் விபுலமாகவே யெழுதினேன். “எவ்வளவு விரிவாக எழுதினாலும் அச்சிட்டுவைக்க ஆக்ஷேபணை கிடையாது” என்று அந்த ஸ்வாமி உறுதி கூறியிருந்தபடியால் வெகு உத்ஸாஹத்தோடு விரிவாகவே யெழுதிக் கொடுத்தேன். அவ்விரண்டு ஸ்தவங்களின் வியாக்கியானங்களையும் அந்த மஹான் அந்த ஸ்ரீவைஷ்ணவ க்ரந்த முத்ராபக ஸபையின் சார்பாகவே அச்சிடுவிக்க நிச்சயித்திருந்தார். அந்த ஸபைக்கு அதிகாரிகள் இன்னும் ஏழெட்டு நபர்கள் இருந்தபடியால் அவர்கள் அதை ஆக்ஷேபித்தார்கள்; பூருவர்கள் இயற்றின க்ரந்தங்களை ப்ரகாசநம் செய்வதற்காக இந்த ஸபை ஏற்பட்டதே யொழிய இக்காலத்தவர்கள் எழுதும் க்ரந்தங்களையும் இதில் ஏற்றுக்கொண்டு அச்சிடுவது உசிதமன்று என்று ஆக்ஷேபித்தார்கள். அது யுக்தமானதே யென்று அடியேனும் ஆமோதித்தேன். ஆனாலும் அந்தஸ்வாமி அடியேனிடம் வைத்திருந்த பக்ஷபாத விசேஷத்தினால் தம்முடைய அத்யவஸாயம் பழுதுபடக் கூடாதென்று ஒரு தலைநின்று தீவிரமாக முயன்று மற்ற அதிகாரிகளையும் தம் சொல்வழி வரும்படி பண்ணி அவ்விரண்டு ஸ்தவவியாக்கியானங்களையும் அந்த ஸபையின் மூலமாகவே அச்சிடுவித்து முடித்தார். ஸ்ரீஸ்தவ வியாக்கியானம் 7 பாரம் (அதாவது 56 பக்கம்), வரதராஜஸ்தவ வியாக்கியானம் 58 பாரம் (அதாவது 464 பக்கம்) அச்சாகி யிருக்கிறது. ஆயிரம் பிரதிகள் அச்சிட்டபடியால் அவை ஸ்ரீவைஷ்ணவ வுலகமெங்கும் பரவின. முப்பது வருஷங்களுக்கு முன்னிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் பெரும்பாலும் அந்த ஸபையில் 20ரூ ஜீவிய சந்தா செலுத்தி அந்வயித்திருந்தபடியால் அந்த க்ரந்தங்கள் அப்போது யாவர்க்கும் கிடைத்திருக்கின்றன. தெலுங்கு லிபியில் ப்ரவேசமில்லாதவர்களுக்காகப் பிறகு மணிப்ரவாள லிபியில் இவற்றை, ஸ்ரீ உ.வே. (கோயம்புத்தூர்) வெங்கடரமணையங்கா ரென்கிற மஹான் அச்சிடுவித்தார். அப்போது பாதிபாகம் சுருக்க வேண்டியதாயிற்று. ஸமீப காலத்தில் மூன்றாவது பதிப்பும் நடந்திருக்கிறது. இது நிற்க.

அந்த கோபாலஸ்வாமி ஐயங்கார் ஆசார்ய ஹ்ருதயத்தில் மிகுந்த ஈடுபாடுடையவர். அதனால் அதற்கு தாத்பர்ய ஸாரமொன்று எழுதித் தரும்படி நியமித்தார். அதையும் எழுதிக் கொடுத்தேன். ஆனால் முதலிரண்டு ப்ரகரணங்களுக்கு மட்டுமே அப்போது எழுதிக் கொடுத்தேன். அதையும் உடனே அந்த ஸபையின் மூலமாகவே தெலுங்கு லிபியிலேயே அச்சிடுவித்தார். அக்காலத்தில் அடியேன் வித்யார்த்தி தசையில்தான் இருந்து வருகிறேன். ஸகலக்ரந்தங்களுக்கும் எல்லாரும் தெளிவாகத் தெரிந்து கொள்ளும்படியான வியாக்கியானங்களை யெழுத வேணுமென்கிற குதூஹலம் அடியேனுக்கு இளம்பிராயத்திலேயே உண்டாயிற்று. ஸ்வயமாகவே குதூஹலித்திருந்தது தவிர அனேக மஹான்களின் நியமனமும் ப்ராப்தமாயிற்று. அப்படிப்பட்ட மஹான்களில் மேலே குறித்த கோபாலஸ்வாமிஜயங்கார் ஸர்வ ப்ரகாரங்களாலும் முதன்மை பெற்றவர். அடியேன் வியாக்கியானங்களெழுதுவதற்கு இந்த ஸ்வாமி செய்தருளின ப்ரரோசநமும் ப்ரோத்ஸாஹநமும் வாசாமகோசரம். அந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகங்கள் ஐந்நூறுக்கு மேல் அடியேனுக்குக் கிடைத்திருக்கும். ஒவ்வொரு ஸ்ரீமுகத்திலும் நான்கு வரிகளே யிருக்கும்; எதையாவது எழுதும்படி நியமித்தபடியே யிருப்பர். பதினெட்டாவது வயதிலிருந்து நாற்பத்து மூன்றாவது வயதளவும் இருபத்தைந்து வருஷகாலம் இந்த மஹானோடு நெருங்கிப் பழகினது அடியேனுக்குப் பலவகையான ச்ரேயஸ்ஸுக்களுக்கு ஹேதுவாயிற்று. இவருடைய சரமகாலத்தில் இரண்டு மூன்று ஸம்வத்

ஸரங்களின் விருத்தாந்தங்கள் தெரிவிக்கவேண்டியவை யுண்டு; அவற்றை மேலே தெரிவிப்பேன்.




ஸ்ரீமத்பரமஹம்ஸ அஹோபில மடாதிபதி ஸ்ரீ இஞ்சிமேடு அழகியசிங்கர் (வைகுண்டவாஸி)

நெடுநாள் அஹோபிலமடாஸ்தானத்தை யலங்கரித்திருந்து மூன்று வருஷங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்த ஸ்ரீமத் இஞ்சிமேடு ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் இஞ்சிமேடு ரங்கநாதாசார்ய ஸ்வாமியென்று வ்யபதிஷ்டர். திருப்பதியில் ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் நெடுநாள் வாழ்ந்து ஸாமாந்ய விசேஷசாஸ்த்ரங்களை யதிகரித்து உபயவேதாந்த ப்ரவர்த்தந ப்ரவீணராய் காஞ்சியில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தார். அடியேனுடைய க்ருஹத்திற்கு அதிஸமீபத்திலேயே ஒரு திருமாளிகையை ஸ்வகீயமாகக் கொண்டு குடி வாழ்ந்து வந்தார். அப்போது இருவோருக்கும் மிகநெருங்கிய பழக்கம் ஏற்பட்டது. அனுஷ்டானத்திற்கு வெள்ளக்குளமெழுந்தருள்வர். அடியேனுடைய க்ருஹத்தின் பக்கத்திலுள்ள ஸந்து வீதிவழியாகவே அக்குளத்திற்குச் செல்ல வேண்டுமாதலால் இருவரும் ஒன்று சேர்ந்தே குளம் செல்வது தினப்படியான வழக்கம். திரும்புகிற ஸமயத்தில் சேர்த்தி ஏற்படுவது அரிதாகும். செல்லுகிற ஸமயத்தில் நியமேந சேர்ந்துதான் செல்வது. அப்போதைய ஸம்பாஷணைகள் நாற்பது வருஷங்களுக்கு மேலானாலும் மறக்க முடியாதவை. திருப்பதியில் தாம் வாழ்ந்தபோது ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி பக்கலிலே தாம் அநுபவித்த விசேஷங்களை ஒவ்வொருநாள் ஒவ்வொன்றாக ஸாதித்தருள்வர். மற்றும் அநேக க்ராந்திக விஷயங்களையும் ஸாதித்தருள்வர். இடையிடையே ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சைகளும் நடைபெறும். கோபதாபங்கள் சிறிதுமில்லாமல் புன்முறுவலோடே ஸாதிப்பர்; தாமுறுவல் கொண்ட முகத்துடனே கேட்டருள்வர். மனச்சாக்ஷியை மீறியோ அப்ராமாணிக வழியை யவலம்பித்தோ விதண்டாவாதமாகவோ ஓரக்ஷரமும் ஸாதிக்கமாட்டார். அந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்து அநுபவித்த குணமிது. ஸ்ரீமத் பெருங்கட்டூர் கண்டாவதாராசார்ய ஸ்வாமி யென்றொருவர் ஸன்னிதி வீதியிலெழுந்தருளியிருந்தார். அவர் வையாகரணர். கோவில் பாடசாலையில் பல வருஷங்கள் வ்யாகரணப்ரவசநம் செய்து கொண்டிருந்தவர். அந்த ஸ்வாமியின் இயல்வு இஞ்சிமேடு ஸ்வாமியின் இயல்வுக்கு நேர்மாறானது. விஷயசர்ச்சை யென்றெடுத்தால், அது எந்த விஷயமானாலும் ஸரி, கோபதாபங்களில்தான் பர்யவஸித்து நிற்குமவர்க்கு. உச்சைருத்கோஷம் ப்ரபலமாயிருக்கும். இஞ்சிமேடு ஸ்வாமியின் கம்பீர ப்ரக்ருதிகளை நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு கனிந்திருக்கும்.

இப்போது லௌகிகவைதிகங்களில் மஹாப்ரவீணராயும் ஸுப்ரஸித்தராயுமெழுந்தருளியிருக்கிற ஸ்ரீமதுபயவே (ஸர்) எஸ். வரதாசாரியர் ஸ்வாமி அப்போது

[வக்கீலாக எழுந்தருளியிருந்த காலத்தில்] அடிக்கடி காஞ்சீபுரிக்கு வந்து வாரக் கணக்காகவும் பக்ஷக்கணக்காகவுமிருந்து இஞ்சிமேடு ஸ்வாமி ஸன்னிதியில் வேதாந்த ச்ரவணம் செய்து கொண்டிருந்தார். அந்த ஸ்வாமி அப்போது ஜட்ஜ் பதவியை அடையாமலிருந்தாலும் அப்போதும் பரத்வத்தில் குறையநின்றவரல்லர்; எனினும் இப்போது போலவே அப்போதும் ஸௌலப்யமூர்த்தியாகவேயிருப்பர். நாற்பது வருஷங்களுக்கு முற்பட்ட பழைய காலத்துக் கதையை எழுதுகிறேனாகிலும் அடியேனுடையசிந்தனையில் இவையெல்லாம் இன்று நேற்றுக் கதைகளாகவே ஸ்புரிக்கின்றன. எஸ். வரதாசாரியர் ஸ்வாமி அடியேனுடைய தென்னண்டை மாடவீதியில் உலாவிக்கொண்டிருப்பதாகவே இப்போதும் பாவனை நிகழ்கின்றதடியேனுக்கு. இந்த ஸ்வாமியின் பரிசயத்தை அக்காலத்திலிருந்தே பெற்றவனடியேன். கீழே ப்ரஸ்தாவித்த மயிலாப்பூர் கோபாலஸ்வாமி ஐயங்காருக்கு இவர் மருமகனார் என்கிற காரணத்தினாலும் அன்பு வளர்ந்து வந்தது. இளமையிலே அங்குரித்த நேசமாகையாலே நிலைகுலையாமல் இற்றைக்கும் திநேதிநே அபிவிருத்தி தசையிலிருந்து வருகிறது.



ஸ்ரீமதுபயவே (ஸர்) எஸ். வரதாசார்ய ஸ்வாமி, (ரிடைர்ட் பெடரல் கோர்ட் ஜட்ஜ்) மயிலாப்பூர்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ தேரழுந்தூராண்டவன் அக்காலத்தில் காஞ்சீபுரியில் நித்யவாஸமாக எழுந்தருளினார். எப்படிப்பட்டவர்களையும் ஆவர்ஜநம் செய்யும்படியான வொரு மஹாகுணம் அந்த ஸ்வாமியிடத்திலே குடிகொண்டிருந்தது. யார் அணுகி வந்தாலும் தாமும் விச்ராந்தி கொள்ளாமல் அவர்களுக்கும் விச்ராந்தி கொடாமல் வார்த்தையாடியருள்வர். மஹாரஸிகர். அந்த ஸ்வாமியின் பரமக்ருபைக்குப் பாத்திரமாக நேர்ந்தது. "அண்ணா! நித்யமும் ஒரு மணி காலமாவது நீர் இவ்விடம் வந்து வார்த்தையாடித்தான் போகவேண்டும்" என்று கடுமையாக நியமித்திருந்தார். அப்படியே சிலகாலம் தினப்படியாகவே சென்று கொண்டிருந்தேன். ஸ்வரூபாநுரூபமாக ப்ரணாமம் செய்தே உட்காருவேன். ஸ்வகீயஸம்ப்ரதாயப்படி ஸக்ருத்ப்ரணாமம் செய்கையில் ஒருநாள், "அண்ணா! நான் நேற்றிரவு ஒரு கனாக்கண்டேன்; நீர் இங்கு வந்து என்னைப் பலமுறை நமஸ்கரித்ததாகவும் அப்போது நான் 'இன்று என்ன விசேஷம்? பலமுறை நமஸ்காரம் செய்கிறீரே ஏன்?' என்று கேட்க, 'நான் வேதாந்த தேசிக ஸம்ப்ரதாய நிஷ்டன்தானே, அந்த நிஷ்டைக்குச்சேர இப்படித்தானே அநுஷ்டிக்க வேண்டும்' என்று நீர் பதில் சொன்னதாகவும் கனாக்கண்டேன், இன்று ப்ரணாம விஷயமாக உம்மோடு சர்ச்சை செய்ய வேணுமென்று நினைக்கிறேன்; செய்யலாமா?" என்று மந்தஹாஸத்தோடு கேட்டருளினார். அதற்கு விஜ்ஞாபித்தேன்—"தினந்தோறும் எத்தனையோ சர்ச்சைகள் செய்து கொண்டு தானேயிருக்கிறது; இன்று மாத்திரம் பூர்வபீடிகை எதற்காக?" என்றேன். அதற்கு ஆண்டவன் ஸாதித்தார்—"அந்த சர்ச்சைகளெல்லாம் ஏடுகளோடு நிற்கிற விஷயம்; இது அப்படியல்லாமல் தினப்படி அநுஷ்டானத்திலிருக்கிற விஷயமாகையாலே உம்முடைய அநுஷ்டானத்தை மாற்றிவைக்க வேணுமென்கிற ஆசையோடு இதை சர்ச்சிக்க நினைக்கிறேன்.

நான் சொல்லுகிற விஷயங்கள் யுக்தமாகத் தோன்றினால் இனிமேல் ஸக்ருத்ப்ரணாமாநுஷ்டானத்தை மாற்றிக் கொண்டு அஸக்ருத்ப்ரணாமாநுஷ்டானத்தைக் கைக்கொள்வீரா?" என்று.

"ஆக்கூராண்டவன்" என்கிற வ்யபதேசத்தோடு பிறகு தேரழுந்தூராண்டவனுடைய ஆஸ்தானத்தை யலங்கரித்திருந்த ஸ்வாமி அப்போது க்ருஹஸ்தராய் காஞ்சீபுரியிலேயே வாஸம் செய்து கொண்டு ஸன்னிதி வீதியில் திருவடி ஸன்னிதியில் ஸ்ரீராமாயணப்ரவசனம் செய்துகொண்டிருந்தார். ஆக்கூர் ரங்கஸாமி ஐயங்காரென்று அவர்க்குத் திருநாமம். அவரும் அடிக்கடி ஆண்டவன் ஸன்னிதிக்கு வருவர். மேலே ப்ரஸ்தாவித்த ப்ரணாம சர்ச்சை ஆரம்பிக்கும்போது அவரும் கூடவிருந்தார். தேரழுந்தூராண்டவன் அடியேனை நோக்கிக் கேட்ட கேள்விக்கு அடியேன் விடை கூறுவதற்கு முன்னே அவர் சொன்னார்—"ஏதோ லோகாபிராமமாக விஷய சர்ச்சைகளைச் செய்யலாமேயொழிய ஸ்வாமி இப்படி கேட்டருள்வது யுக்தமாகாது. ஸக்ருத்ப்ரணாமமே ப்ராமாணிகமென்று அண்ணங்கராசாரியர் ஸ்தாபித்து விட்டால் அவ்வநுஷ்டானத்தை ஸ்வாமிதான் கைப்பற்ற முடியுமா? ஸ்வாமி கேட்டருளுகிறமாதிரி அவரும் கேட்கலாமன்றோ?" இத்யாதி. பிறகு அடியேன் விஜ்ஞாபித்தேன்;—முற்காலத்தில் வித்யாரண்ய ஸ்வாமிக்கும் அக்ஷோப்ய முனிக்கும் த்வைதாத்வைத விஷயமாய் வாத விவாதம் பிரபலமாக நடந்ததாகவும், தேசிகன் *அஸிநா தத்த்வமஸிநா பரஜீவப்ரபேதிநா, வித்யாரண்ய மஹாரண்யம் அக்ஷோப்ய முநிரச்சிநத்* என்று ஒரு ச்லோக மெழுதியனுப்பி வித்யாரண்யருடைய பராஜயத்தைத் தெரிவித்ததாகவும் புத்தகங்களில் கதையெழுதி வைத்திருக்கிறார்கள். அதனால் அத்வைத மதம் தலை மடிந்துவிட்டதா? நம்மாழ்வார் (திருவிருத்தத்தில்) *வணங்கும் துறைகள் பலபலவாக்கி, மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பல பலவாக்கி, அவையவைதோறு அணங்கும் பல பல வாக்கி நின்மூர்த்தி பரப்பிவைத்தாய்* என்றருளிச்செய்கிறார். இப்பாசுரத்தின் அர்த்தம் ஸ்வாமி யறியாததன்று. உபயகலா ஸம்ப்ரதாயத்திலும் மஹாஜ்ஞாதாக்களாகப் பலபல மஹான்கள் விளங்கிவருகிறார்கள். அவரவர்கள் தங்களுக்குப் பரம்பரயா ப்ராப்தமான அநுஷ்டானங்களிலே ஊன்றிநிற்கிறார்கள். விசாலமான நாடுநகரங்களிலே நெடுநாளாகப் பரவியுள்ள இவ்வநுஷ்டாந பேதங்கள் இன்றைக ஒருவரால் அடியறுக்க முடியுமா?



ஸ்ரீமத் பரமஹம்ஸ தேரழுந்தூர் ஆண்டவன்
(வைகுண்டவாஸி)

அடியேன் ஸ்வாமியின் வாதங்களுக்கு விடைகூறமுடியாமல் பங்கமடைந்து ஸக்ருத்ப்ரணாமானுஷ்டானத்தைவிட்டு அஸக்ருத் ப்ரணாமாநுஷ்டானத்தைக் கைப்பற்றுகிறேனென்றே வைத்துக்கொள்ளுவோம்: அடியேனொருவன் இப்படி செய்துவிட்டதனாலே என்னாய்விடும்? அல்லது வாதத்தில் தேவரீர் பங்கமடைந்து அடியேனுடைய அனுஷ்டானத்தைக் கைப்பற்றிவிட்டாலும் என்னாய்விடும்? ஒன்றுமாகாது. எந்த அனுட்டானத்தில் ஔசித்யமிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ள விமர்சிக்கலாம், சர்ச்சை செய்யலாம்; அத்தனை யொழிய, ஸ்வாமி கேட்கிற கேள்வி நன்றாயில்லையே" என்றேன். ஆனாலும் அந்த சர்ச்சை விசேஷமாக நடந்தது. அதையெல்லாம் அடியேன் அச்சிட்டு வெளியிட்டுமிருக்கிறேன். "தேரழுந்தூராண்டவன் ஸன்னிதியில் நடந்த நமஸ்காரசர்ச்சை" என்று விளங்கக் காட்டியே அச்சிட்டிருக்கிறேன்.

கலாபேத விஷயங்களில் தலையிட்டு வாதக்ரந்தங்களை அடியேன் விசேஷமாக [நூற்றுக்கணக்காக] எழுதியிருக்கிறேனென்பதை உலகமுழுதுமுணரும். 'வேலையற்று வம்புவாதங்களைத் தானே கிளப்பிக்கொண்டு எதையேனும் எழுதிக்கொண்டிருக்கிறானிவன்' என்று நவீனர்கள் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு. உட்புகுந்து விஷயவுண்மைகளை விமர்சிக்கவல்லவர்கள் அங்ஙனம் நினைக்கவோ சொல்லவோ மாட்டார்கள். ப்ரஸக்தி யேற்படுகிறபோதும், பிறர் விவாதங்களைக் கிளப்புகிறபோதுமே அடியேன் வாதவிவாத நூல்களை எழுதப்புகுவது வழக்கம். இதை மேல் பிரகரணங்களில் விரிவாக மூதலிக்க ப்ராப்தமாகலாம்.

கோவில் பாடசாலையென்கிற சடகோபநிலய பாடசாலையில் ஸ்ரீ சாமா. திருமலைதாதாசாரியர் என்பவர் தலைமை யுபாத்யாயராக இருந்துவந்தார். இவர் மாதாமஹ ஜீயர்ஸ்வாமிக்கு (பூர்வாச்ரமத்தில்) ப்ரதான வித்யார்த்தியாக இருந்தபடியாலும், ஸ்ரீ காதிஸ்வாமி ஸன்னிதியிலும் அடிக்கடி வந்துகொண்டிருந்தபடியாலும், இளமையில் இவரிடத்திலும் அடியேன் வித்யார்த்தியாயிருந்து சில நாடகாலங்கார பாடங்கள் வாசித்தேன். ஸாஹித்யத்தில் இவர் நல்ல பண்டிதர். சிறந்த விமர்சகர். எழுதுவதிலும் நல்லகைகாரர். எனக்கு இவரோடு அதிகமான நெருக்கம் ஏற்பட்டிருந்தது. ஸ்ரீ காதிஸ்வாமி ஸுதர்சன அச்சுக்கூடம் ஸ்தாபித்து அதில் பத்ரிகாப்ரகாசனங்களும் நானா க்ரந்த முத்ரணங்களும் ஏற்பாடு செய்தருளியிருந்தபடியால் யாமிருவரும் சேர்ந்து வாழ்ந்து அக்காரியங்களை நிர்வஹிக்க வேண்டியிருந்தது. அப்போது அந்த திருமலைதாதாசாரியர் கலா வைஷம்ய வார்த்தைகளையே அடிக்கடி யெடுத்துரைப்பர். அவ்வளவோடும் நில்லாமல், தென்னாசார்ய ஸம்ப்ரதாய தூஷணைகளை நிரப்பிச் சில சிறு சுவடிகளையும் அச்சிட்டு வெளியிட்டுக் கொண்டிருந்தார். அப்போது அவரோடு எனக்கு அதிக ஸஹவாஸம் நேர்ந்திருந்ததனால் அவருடைய வெளியீடுகளை ஒன்றுவிடாமல் கண்டு கண்டிக்க வேண்டியதாயிற்று எனக்கு. அவருக்காகவே சில பல புத்தகங்கள் அப்போது நான் எழுத நேர்ந்தது.

பாம்பே நகரத்தில் நிர்ணயஸாகர முத்ராலயாதிகாரிகள் காவ்யமாலா என்றொரு மாஸிக ஸஞ்சிகையைப் பல வருஷங்கள் நடத்திவந்தார்கள். அதில் அபூர்வமான அனேக காவியங்களை வெளியிட்டுக்கொண்டு வந்தார்கள். அதில் பாதுகாஸஹஸ்ரத்தை வியாக்கியானத்தோடுகூட அச்சிட்டார்கள். அதற்கு, மேலே சொன்ன சாமா திருமலைதாதாசாரியர் தவறான ஒரு பூமிகை எழுதியனுப்பி அதில் அச்சேற்றிவைத்தார் பாதுகாஸஹஸ்ரம் அவதரித்ததற்குக் காரணம் இன்னதென்பதை அந்த பாதுகாஸஹஸ்ர வியாக்கியானகாரரே உள்ளபடி யெழுதிவைத்திருக்கிறார். வேதாந்தாசார்ய விஜயமென்கிற ஆசார்ய சம்புவிலும் எழுதப்பட்டிருக்கின்றது யாரோவொரு மதாந்தரஸ்தனான கவி வந்து செருக்கிக் கொக்கரிக்க, அவனுக்காகப் பாதுகாஸஹஸ்ரத்தை ஸ்வாமி இயற்றியருளினரென்று பூருவர்கள் சரித்திரமெழுதிவைத்திருக்க, பிற்காலத்தவர்கள் கோவில்களில் சண்டைகளைக்

கிளப்பினதோடு நில்லாமல் அதன் பரமகாஷ்டையாக ஆசார்ய தூஷணைகளிலும் தலையிட்டு அஸங்கதமான பொய்க்கதைகளைக் கல்பனை செய்ய ஆரம்பித்து மனம் போனபடியெல்லாம் எழுதிவைக்கத் துணிந்து முன்வந்தார்கள். இப்படிப்பட்டவர்களிலே மேலே குறித்த சாமா திருமலைதாதாசாரியர் அக்காலத்தில் அக்ரகண்யராயிருந்தார். இவர் அந்த பாதுகாஸஹஸ்ரபூமிகையில் என்ன எழுதியுள்ளாரென்றால், (ஸம்ஸ்க்ருதத்திற்கு நேரான மொழிபெயர்ப்பு.)

> “வாதிகேஸரி யென்பவர் தாம் பெற்றிருந்த வாதிகேஸரி யென்னும் பிருது காரணமான செருக்கினாலும் மருந்தில்லாத வியாதியான அஸூயையினாலும் கவித்வ விஷயத்தில் தேசிகனோடு போட்டியிட்டதனால் பாதுகாஸஹஸ்ரம் தோன்றியது. அந்த வாதிகேஸரி யென்பவர் பிள்ளை லோகாசார்யரோடு கூடப்பிறந்தவர்”.

என்று எழுதியுள்ளார். இக்கதையை இன்னமும் விரிவாகவே கல்பனை செய்திருக்கிறார். அதே ஸமயத்தில், தேசிகனுடைய மற்றொரு க்ரந்தமாகிய நியாய பரிசுத்தி மூலம் மட்டும் தேவநாகரலிபியில் சென்னையில் அச்சிட்டு வெளியிடப்பட்டது; அதற்கொரு பூமிகையெழுதின திருவஹீந்திரபுரம் சதாவதானி ஸ்ரீநிவாஸாசாரியரும் அந்த பூமிகையில் பாதுகாஸஹஸ்ர ப்ரஸ்தாவத்தைக் கொண்டுவிட்டுக்கொண்டு மேலே சொன்ன திருமலை தாதாசாரியரையே பின்பற்றி அதே விதமாக ஐதிஹ்ய மெழுதி வைத்தார். இவருடைய பூமிகையைப் பார்த்து அவரெழுதினரோ, அவருடைய பூமிகையைப்பார்த்து இவரெழுதினரோ தெரியாது. இருவருடைய பூமிகைகளும் ஸமரூபமாகவே வெளிப்பட்டன. அப்போதே அடியேன் இவ்விருவரையும் கண்டித்து உண்மையை ஸப்ரமாணமாக வெளியிட்டு ஒரு மறுப்புப்புத்தகம் (பாதுகாஸஹஸ்ராவதாரதத்வமென்று) தேவநாகரியில் வெளியிட்டேன். பிறகு சில வருஷங்கள் பொறுத்து அது க்ரந்தலிபியிலும் வெளியிடப்பட்டு நாளைக்கும் கிடைக்கக்கூடிய நிலைமையிலிருக்கிறது. இவ்விருவரும் அநேக விஷயங்களில் இருளும் மருளும் மலிந்தவர்களென்று இதில் விரிவாக நிரூபிக்கப்பட்டிருப்பதைப் பண்டிதவுலகம் கண்டு களிக்கின்றது. இந்நூல் அவர்களுடைய ஜீவிததசையிலேயே [அவர்களுடைய பூமிகை வெளிவந்த அடுத்தவாரத்திலேயே] வெளியிடப்பட்டு அவர்கள் கையில் நேராகவே கொடுக்கப்பட்டது; அதன்பிறகு அவர்கள் பல நாள் ஜீவித்திருந்தும் அதற்கு யாதொரு பதிலும் அவர்கள் வெளியிட்டவர்களல்லர். பிராமாணிகர்களான விவேகிகள் தலைதுலுக்கிக் கொண்டாடும்படியாகவே ஆதியிலிருந்து அடியேன் எழுதப் பயின்றவன். இவ்வுண்மையைத் தெரிந்து கொண்டவர்கள் அடியேனுடைய வாத நூல்களுக்கு அஞ்சலிசெய்து நிற்பர்களே யொழிய பதிலெழுத நெஞ்சாலும் நினையார்கள். சிலரோவென்னில்; இவ்வுண்மையை நெஞ்சார அறிந்துவைத்தும், சிறிது பிரதிவாதம் செய்து பார்ப்போமே யென்று ஆசைகொண்டு கிளர்ந்து ஆந்தனையும் கைகாட்டி, பிறகு கைகட்டி ‘அண்ணா! வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே” என்றும் “அண்ணாவடியேனிடரைக் களையாயே” என்றும் அடிபணிந்து நிற்பர்கள்.

விவேகிகள் ப்ரக்ருத விஷயத்தை கவனிக்கவேணும். வாதிகேஸரி யென்பவர் உத்தமாச்ரமி; அழகிய மணவாளச்சீயரென்று அவருடைய திருநாமம். இவரே திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படியும் திருவிருத்தத்திற்கு ஸ்வாபதேசவுரையும், தத்வதீப தீபப்ரகாசமும் மற்றும் அனேக க்ரந்தங்களும் ஸாதித்தவர். இவர்க்குப் பிள்ளை லோகாசார்யரோடு யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. இவர் பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியாரல்லர். நைஷ்டிக ப்ரஹ்மசாரியாயிருந்த அவர்க்கு வாதிகேஸரியென்கிற பிருதும் கிடையாது. இப்படிப்பட்ட பிருதங்களை அபதார்த்தமாகக்கொண்டு தள்ளுகிற ஆசார்ய பரம்

பரையில் தலைநின்றவரான அழகிய மணவாளப் பெருமாள் நயினார்தாம் பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியார். வாதிகேஸரியென்று விருதுபடைத்த உத்த மாச்ரமியும் வேதாந்த தேசிகனும் பரஸ்பரம் ஸௌஹார்தம்மிக்கவர்களென்பது உபயருடையவும் க்ரந்தங்களினால் நன்கு தெரியவருகிறது. தவிரவும், ஸ்ரீரங்கத்திற்கு வேதாந்த தேசிகன் எழுந்தருளின காலத்தில் அவ்விடத்தில் நம்பெருமாளுடைய நிலைமை எப்படியிருந்தது? அப்போது அங்கு எந்தெந்த ஆசாரியர்கள் எழுந்தருளியிருந்தார்கள்? இத்யாதி விஷயங்களை ஸப்ரமாணமாக ஆராயப்புகுந்தால் தெளிவாகத் தெரியவருகின்ற உண்மைகள் வேறாகும். அடியேன் இளமையில் அந்த ஆராய்ச்சிகளைச் செய்ய ஸந்நத்தனாக இருந்திலேன். தேசிகனைப்பற்றி நவீனர்கள் சொல்லியும் எழுதியும் போருகின்ற இதிஹாஸங்கள் எந்த புராதன க்ரந்தங்களை ஆதாரமாகக் கொண்டவை? என்கிற ஆராய்ச்சி யொன்றில் மட்டும் அடியேன் இறங்கி அப்போது மேலே குறித்த திருமலைதாதாசாரியரிடமும் அவருக்குத் தோள் தீண்டிகளாயிருந்த மற்றும் ஸ்ரீ அய்யா ஸ்ரீக்ருஷ்ணதாதாசாரியார் முதலானவர்களிடமும் விசேஷமான சர்ச்சைகளைச் செய்திருக்கிறேன்.

ஆசார்ய சம்பூ என்கிற உத்தமமான—பரமப்ராமாணிகமான பழைய க்ரந்தத்தை அவர்கள் வாயால் சொல்லுவதுமில்லை. ஏனென்றால், நவீனர்களான தாங்கள் சொல்லுவதும் எழுதுவதுமான பொய்க்கதைகளில் ஒன்று கூட அந்த க்ரந்தரத்னத்தில் இடம் பெறாமையாலும், அதிலுள்ள கதைகளுக்கு நேர்மாறான கதைகளைத் தாங்கள் சொல்லிக்கொண்டிருப்பதனாலும் அந்த ஆசார்ய சம்பூக்ரந்தத்தை இவர்கள் பிரமாணமாக உதாஹரிக்க முடியாமற் போயிற்று. 500 ஆண்டுகளுக்கு முன்னே தங்களுடைய ஸம்பிரதாயத்தில் ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்றும் மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்றும் இரண்டு க்ரந்தங்கள் ஆழ்வாராசாரியர்களின் சரித்திரங்களைத் தெரிவிப்பதற்குத் தோன்றியவையென்று சொல்லி, அவற்றுள் ஆறாயிரப்படிகுருபரம்பரையென்பது முன்னமே லுப்தமாய் விட்டதென்றும், மூவாயிரப்படி குருபரம்பரை அச்சிடப்பெற்று இருப்பதாகவும் அதுவே தாங்கள் சொல்லும் கதைகளுக்கு ஆதார மென்பதாகவும் சில யதாஜாதர்களிடம் சொல்லி அவர்களை வஞ்சித்துக்கொண்டிருந்தார்கள். அதைப் பற்றியும் அடியேன் ஆழ்ந்து ஆராய்ச்சிசெய்து "அந்த மூவாயிரப்படி நவீநகல்பிதமே" யென்று இவர்கள் தாங்களே 1893-ஆம் வருஷத்தில் (அதாவது) அடியேனுடைய ஒன்றிரண்டு வயதில் வெளியிட்டிருந்த சில புத்தகங்களையும் பத்ரிகைகளையும் ஸம்பாதித்து எடுத்துக்காட்டி மறுவாய் திறக்கவொண்ணாதபடி செய்ய நேர்ந்தது. இதைச் சிறிது விவரிக்க அவசியமாகின்றது. மிகமுக்கிய விஷயமிது.

ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்வாமியுத்ஸவத்தில் ஆறாந்திருநாள் வெள்ளைசாத்துப்படியுத்ஸவம் என்று கொண்டாடப்பட்டுவருகிறது. "சிவாத் பரதரம் நாஸ்தி" என்றெழுதி அதில் எழுத்திட நிர்ப்பந்தித்த சோழனுடைய கொடுங்கோன்மையினால் கூரத்தாழ்வான் த்ரிதண்ட காஷாயங்களை யணிந்து ராஜஸபைக்கு எழுந்தருளினதாகவும், ஸ்வாமியெம்பெருமானார் வெள்ளைசாத்திக்கொண்டு வெளியேறினதாகவும் சொல்லப்படுகிற ஐதிஹ்யத்தையநுஸரித்து மேலே சொன்ன மஹோத்ஸவம் நடந்து வருகிறது. காஞ்சீபுரம் தாதாசாரியர்கள் ஸ்ரீபெரும்பூதூர்ஸன்னிதியில் சிறந்த மரியாதைகளையநுபவித்துக்கொண்டிருந்த காலத்தில் அவர்களில் தலைவராயிருந்த ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பாஸ்வாமி, தண்ட்ரி பட்டப்பாதாதா சாரியர்ஸ்வாமி முதலான மஹான்கள் "இது சாஸ்த்ரவிருத்தமான நடத்தை; கூரத்தாழ்வான் த்ரிதண்டகாஷாயங்களை யணிந்ததும் கிடையாது, பாஷ்யகாரர் வெள்ளைசாத்திக்கொண்டதும் கிடையாது; இது மிகவும் தவறான—நவீநகல்பிதமான ஐதிஹ்யம்; தென்கலையார்கள் விதகைதிஹ்யஸஹஸ்ரவர்ணநத்திலே வல்லவர்களாகையாலே அவர்கள் கட்டினதே இந்த ஐதிஹ்யம்; இது புஸ்தகத்தோடு நில்லாமல் ஸன்னிதி

யிலும் அநுஷ்டானத்தில் வருகிறதென்றால் இது நமக்கு ஸஹ்யமேயன்று; இப்படி அசாஸ்த்ரீயமாக நடத்தப்படுகிற இந்த வெள்ளைசாத்துப்படியுத்ஸவத்தன்று வடகலையார் ஒருவரும் ஸ்வாமிதர்சநமே செய்யக்கூடாது; விசேஷித்து தாதாசார்ய வம்சஸ்தர்கள் அன்று முழுவதும் ஸ்ரீபாஷ்யகாரர் ஸன்னிதியில் ஒரு மர்யாதைக்கும் போகாமல் உபவாஸமுமிருக்கவேண்டியது" என்று திட்டம் செய்தார்களாம்: இப்படிக்கு பத்ரிகையும் அச்சிட்டிருந்தார்கள். அப்போது, அந்த வெள்ளைசாத்துப்படி ஐதிஹ்யம் மிகவும் தப்பானது என்று வாக்வாத யுத்தங்களும் க்ரந்தச்சண்டைகளும் விசேஷமாக நடந்தனவாம். "வடகலையார் மூவாயிரப்படி குருபரம்பரையென்று ஒன்று அச்சிட்டிருக்கிறார்களே, அதிலுங்கூட இந்த ஐதிஹ்யமிருப்பதால் இது கல்பிதமன்று' என்று தென்கலையார்கள் வாசிகமாகவும் க்ரந்த மூலமாகவும் வாதித்தார்களாம். அப்போது ஸ்ரீமத் திருப்புட்குழியப்பாஸ்வாமியின் நியமனத்தினால் மஹாவித்வத் வரேண்யரான தண்ட்ரி பட்டப்பாஸ்வாமி "ஐதிஹ்யதத்த்வம்" என்றொரு சுவடியையெழுதி வெளியிட்டதில் மேலேசொன்ன மூவாயிரப்படி குருபரம்பரை "இதாநீந்தந கல்பிதமாகையாலே அப்ராமாணிகம்" என்று முடிக்கப் பட்டிருக்கிறது.

அவ்வளவோடும் நில்லாமல், மேலே சொன்ன சாமாதிருமலைதாதாசாரியர் எழுதிய "ஸதாசார்யப்படிரக்ஷை" என்கிற தென்னாசார்ய தூஷணச் சுவடியிலும் மேலே சொன்ன விஷயமெல்லாம் மிகவிரிவாக எழுதப்பட்டு அந்த மூவாயிரப்படி குருபரம்பரை நவீநகல்பிதமென்று கல்வெட்டாக்கப்பட்டிருக்கிறது.

"பாஷ்யகாரர் திருக்கோட்டியூர்நம்பியிடம் கேட்ட ரஹஸ்யார்த்தத்தை அங்கேயே கோபுரத்தின்மேலேறிப் பல பேர்களுக்கு வர்ஷித்தாரென்று தென்கலையார் எழுதிவைத்திருக்கிற ஐதிஹ்யமும் அசாஸ்த்ரீயம்; *பத்ரே க்ஷிதோ வா வ்யர்த்தஸ் ஸ்யாத் யத்ருச்சா ச்ருத ஏவ வா* என்கிற ப்ரமாணம் ஸர்வஜ்ஞரான பாஷ்யகாரருக்குத் தெரியாததன்றே. தெரிந்திருந்து ஒருகாலும் அப்படி அபாத்ரங்களிலே வர்ஷித்திருக்கமாட்டார். அப்படி வர்ஷித்ததாகச் சொல்லப்படுமைதிஹ்யம் விததைதிஹ்ய ஸஹஸ்ரத்தில் சேர்ந்ததே" என்று எழுதிவிட்டு,

"இது வடகலையாருடைய மூவாயிரப்படி குருபரம்பரையிலுமிருக்கிறதே யென்று சிலர் எடுத்துக்காட்டுகிறார்கள்; அதனால் ஒரு லாபமுமில்லை. அந்த மூவாயிரப்படி தென்கலையாரெழுதி வைத்த குருபரம்பரையைப் பார்த்து ஆவாபோத்வாபங்கள் பண்ணிக் கல்பித்ததாகையாலே அதுவும் தள்ளத்தகுந்ததே. இதுமாத்திரமன்று; ஆழ்வார்களுடைய வைபவங்களிலும் அநேகம் அசாஸ்த்ரீயமான விஷயங்கள் தென்கலையாருடைய புத்தகங்களைப் பார்த்தே எழுதியிருப்பதால் அந்த மூவாயிரப்படி ப்ராமாணிக கோஷ்டியில் பரிக்ராஹ்யமன்று"

என்று எழுதி அச்சிட்டுப் பரவச்செய்திருந்தார்கள். அது தெய்வச்செயல்.

மேலே சொன்ன மூவாயிரப்படியில் மைஸூர் பரகால மடாதிபதி ஸ்வாமிகளின் பதிப்பிலும், மேலே விவரித்தபடி ஸ்ரீமத் திருப்புட்குழி அப்பாஸ்வாமி முதலான மஹான்களால் தப்பான ஐதிஹ்யமென்று தூஷிக்கப்பட்ட கதைகள் [பல பதிப்புகளிலும் ஏறி] விளங்கிக்கொண்டிருக்கின்றன. அதில் பக்கம் 88-ல் எம்பெருமானார் வைபவப்ரகரணத்தில்"

"பின்பு கூரத்தாழ்வான் நடாதூராழ்வான் முதலான முதலிகளோடே உடையவர் காலக்ஷேபம் செய்து கொண்டிருக்கிற காலத்தில் சோள ராஜாவும் வித்வான்களை யழைத்து *சிவாத் பரதரம் நாஸ்தியென்று எழுதச்சொல்லி தண்டிக்க, சிலர் அர்த்தகாமங்களடியாக எழுத்திட்டார்

> கள்; சிலர் அவனுக்கஞ்சி எழுத்திட்டார்கள். இத்தை நாலூரான் கண்டு எம்பெருமானார் எழுத்திட்டாலன்றோ ப்ரயோஜநமுண்டாவது, இவர்களெழுத்திட்டால் என்ன ப்ரயோஜநம்? என்ன, சோளனும் எம்பெருமானாரை யழைத்துக் கொண்டு வரும்படி சில மநுஷ்யரை அனுப்பிவிக்க, அவர்களும் அங்கேற அழைக்கப்போக, அந்த வ்ருத்தாந்தத்தை மாத்யாஹ்நிகஸ்நாநார்த்தமாகப் போகும்போது கேட்டு முதலியாண்டான் நீராடிவர, நடாதூராழ்வான் முன்னமே அந்த வ்ருத்தாந்தத்தை வந்து சொல்லக்கேட்டு நீரன்றோ ப்ரியபாகிநேயரென்று போரவுகந்து கூரத்தாழ்வான் உடையவருடைய த்ரிதண்ட காஷாயாதிகளை தரித்துக் கொண்டு அந்த மநுஷ்யரோடே போக, பெரியநம்பியும் கூட வெழுந்தருளினர். பின்பு நடாதூராழ்வான் முதலியாண்டான் திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலானவர்கள் 'தேவரீர் இங்கிருக்க வொண்ணாது' என்று உடையவருக்கு வெள்ளைசாத்தி மேல்நாட்டுக்கெழுந்தருளப் பண்ணிக் கொண்டு போக" என்றிருக்கின்றது.

இவ்வளவோடும் நிற்கவில்லை. உடையவர் வெகுநாள்வரையில் வெள்ளை சாத்திக் கொண்டே யிருந்ததாகவும் பிறகு த்ரிதண்ட காஷாயாதிகளை ஸம்பாதித்து முன்பு போலே தரித்தருளினதாகவும் அதிலே (பக்கம் 89-ல்) எழுதப்பட்டிருக்கிறது.

அதிலேயே (பக்கம் 74-ல்)—திருக்கோட்டியூர் வ்ருத்தாந்தம்—

> "உடையவரும் கூரத்தாழ்வானையும் நடாதூராழ்வானையும் முதலியாண்டானையும் கூட்டிக் கொண்டு திருக்கோட்டியூரில் சென்று அவர்களை ஓரிடத்தில் வைத்துத் தாமொருவருமே சென்று நம்பிதிருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, நம்பியும் 'இவ்வர்த்தத்தை ஒருவருக்கும் சொல்லவேண்டா' வென்று நியமித்தருளி திருமந்த்ரார்த்தத்தையும் சரமச்லோகார்த்தத்தையும் பரக்க ப்ரஸாதித்தருள, உடையவரும் க்ருதார்த்தராய் அன்று மற்றநாள் தெற்காழ்வான் திருவோலக்கத்தில் அந்த ரஹஸ்யார்த்தத்தை எல்லாருக்கும் ப்ரஸாதித்தருள" என்றிருக்கிறது.

ஆரியர்காள்! நவீநர்களது கோஷ்டியில் ஆசார்யகம் செய்கிற சிஷ்டவரிஷ்டர்கள் இப்படிப்பட்ட சரித்திரங்களை "சாஸ்த்ரவிருத்தவாதிகளான தென்கலையார் கல்பித்த தப்பான ஐதிஹ்யங்க" ளென்று இற்றைக்கும் தூஷித்து வருகிறார்கள். 'நம்முடைய ஸம்பிரதாயத்திற்கும் ஒரு குருபரம்பராப்ரபாவ மிருக்கவேணும்' என்று நினைத்த நவீநர்கள் தென்னாசார்ய ஸம்பிரதாயத்திலுள்ள வைபவக்ரந்தங்களையே தஞ்சமாகப் பற்றவேண்டி வந்தபடியாலே அவற்றையே யெடுத்துக் கொண்டு சிலவற்றைத் தள்ளியும் சிலவற்றைச் சேர்த்தும் அதிக்ராம்யமான வார்த்தைகளை விசேஷமாகப் புகவிட்டும் மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று ஒன்று வரைந்து இதை த்ருதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி தலையிலே வைத்து அச்சிட்டு விட்டார்கள். இப்படி கல்பனை செய்து அச்சிட்டவர் மைஸூர் ஸ்ரீபரகால ஸ்வாமியிடம் வந்து "இந்த வைபவக்ரந்தம் உங்கள் கூடஸ்தர் செய்ததாச்சே; இதை உங்கள் மடத்திலிருந்தும் வெளியிட வேண்டாமா?" என்று சொல்ல, இதனுள் என்ன விஷயமிருக்கிறது? என்பதைக்கூட விமர்சியாமலே 'இதற்காக ஆயிரம் ரூபாய்' என்று அநுக்ரஹித்து அபத்தகளிஞ்சமாக அச்சிடச்செய்து உலகமெங்கும் பரவவிட்டாயிற்று. இப்படி 70, 80 வருஷங்களுக்கு மேலாக நடந்து வருகிறது. அதுதானும் ஒரு பதிப்போடு நில்லாமல், இரண்டாம் பதிப்பு, மூன்றாம் பதிப்பு என்று அவ்வப்போதுகளில் மறுபதிப்பேறியும் வருகின்றது. அதுகிடக்க. இந்த மூவாயிரப்படி குருபரம்பரையொன்றுதான் இவர்கள் கூறிவரும் பொய்க் கதைகளுக்கு மூலகந்தம். அப்புத்தகம் இவர்களது கோஷ்டியில் தலைவர்களா

யிருந்த மஹான்களாலே நவீநகல்பிதமென்றும் அதனாலேவ அப்ராமாணிகமென்றும்
சிலாசாஸனம் செய்யப்பட்டான பின்பு இவர்கள் தாங்கள் சொல்லும் கதை
களுக்கு எந்த க்ரந்தத்தையும் பிரமாணமாக வெடுத்துக்காட்ட முடியாமற்
போயிற்று. ஆசார்யசம்புவோ இவர்களுக்கு விஷமாய் விட்டது. மூவாயிரப்படி
குருபரம்பரையென்று சொல்லிக் கொண்டு வந்தார்கள். அதன் சாயத்தை இவர்
களுடைய வெளியீடுகளைக் கொண்டே நாம் கக்கவைத்தபடியால் வாயைக் கையைத்
திறக்க முடியாமல் போயிற்று. அப்போது அந்த வகுப்பினர்க்கு அடியேன்மீது
பிரபலமான க்ஷாத்ரமுண்டாகத் தொடங்கியது. "மூலையிலே கிடந்தவற்றை
முற்றத்திலே கொண்டு விட்டு விஷயங்களை நோண்டியெடுத்து நம்மை வாய் மூடு
விக்க இவனொருவன் தோன்றினானே!" என்று கடுநெஞ்சு கொண்டார்கள்.
"இவன் வெள்ளக்குளம் போகும்போது ஆள்களையிட்டு கையைக் காலை முறித்து
விட வேண்டியது" என்று ஆலோசனை செய்திருக்கிறார்களென்றும் அப்போது
காதில் விழுந்தது. அதனால் பின்மாலையில் குளம் போவதை நிறுத்திப் பொழுது
விடிந்த பிறகு பலருடன் சேர்ந்து குளம்போய் வருவதென்றும் சிலகாலம் வைத்
துக் கொண்டிருந்தேன். இச்செய்திகள் அடியேனுடைய பதினெட்டாவது வயதில்
நிகழ்ந்தவை. அப்போது நான் சில காரியங்களுக்காக மேலேசொன்ன சாமா
திருமலைதாதாசாரியரிடம் நெருங்கிப் பழகிக் கொண்டிருந்தவன். அதனாலேயே
இந்த வாத விவாதங்களில் தலையிட்டு நிர்தாக்ஷிண்யமாகவே மறுப்பெழுதினேன்.

மேலே விவரித்தபடி நவீநர்களின் க்ருத்ரிமச் செயல்களையெல்லாம் கையி
லங்கு நெல்லிக்கனிபோல் எடுத்துக்காட்டி வடமொழியிலும் தென்மொழியிலும்
சில நூல்களை இயற்றி அப்போது அடியேன் வெளியிட்டவற்றில் ஒன்றுக்கா
வது ஒருவரும் பதில் சொன்னதுமில்லை, எழுதினதுமில்லை. அப்போது ஸ்ரீமத்
வில்லியம்பாக்கம் கோபாலதாதாசார்ய ஸ்வாமியென்கிற மஹான் ஸ்ரீரங்கராஜ
வீதியில் வாழ்ந்து கொண்டு ஆசார்யகம் செய்து கொண்டிருந்தார். இந்த ஸ்வாமி
சமதமாதிஸத்குணநிதி. வம்பு தும்பு விஷயங்களில் அடியோடு தலையிட்டவரல்லர்.
ஏகாந்த சீலர். ஸ்ரீமத் திருப்புட்குழி ஸ்வாமி ஸந்நிதியில் காலக்ஷேபம் செய்தரு
ளினவரென்று கேள்வி. சிறந்த வித்யாநிதி. அக்காலத்தில் பலர்க்குப் புகலா
யிருந்தவர் இந்த ஸ்வாமி. இவருடைய திவ்யமங்கள விக்ரஹஸ்மரணமும் பரம
பாவநமென்பது அடியேனுடைய கொள்கை. அடியேனுடைய இருபத்தைந்தாவது
வயதில்தான் அந்த ஸ்வாமி திருநாடலங்கரித்தருளினார். அந்த ஸ்வாமி தினப்படி
யாக ஸந்நிதிக்கெழுந்தருள்வது தவறமாட்டார், புறப்பாடுகளையும் ஒரு க்ஷண
காலமும் இழக்கமாட்டார். பலவாண்டுகள் அந்த ஸ்வாமியை அடியேன் தினப்படி
யாக ஸேவிக்கப் பெற்றவனாயினும், அவருடைய கடாக்ஷமும் அடியேன்மீது
விசேஷித்து விழுந்து கொண்டிருக்குமானாலும் நீசனானவடியேன் அந்த மஹா
ஸ்வாமியிடம் நெருங்குவதற்கு ப்ரஸக்தியில்லாமலிருந்தது. அய்யா. ரகுநாததாதா
சாரியர் ஸ்வாமியென்பவர் பலவாண்டு தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு தர்மகர்த்
தாவாக இருந்தவர். பகவத் விஷயாதிகாரி. சிறந்தவிவேகி. ஸ்ரீமத் காதிஸ்வாமி
ஸந்நிதிக்கு அடிக்கடி வருபவராதலால் என்னிடத்தில் அவர்க்கு ஸௌஹ்ருதயமான
ப்ரீதி உண்டாயிருந்தது. அப்போது அடியேனெழுதி வெளியிட்டிருந்த பாதுகா
ஸஹஸ்ராவதாராதி விஷயகங்களான வாதக்ரந்தங்களை அந்த ஸ்வாமி ஊன்றிக்
கடாக்ஷித்து, மற்றபேர்களைப்போலே ¡மனக்கலக்கம் கொள்ளவேண்டியிருந்தும்
அது சிறிதுங்கொள்ளாமல் உண்மையான விஷயங்களை ஸப்ரமாணமாக நிரூபணம்
செய்து பிரதிவாதம் பண்ணுவதற்கு எள்ளளவும் அவகாசமில்லாதபடி நான் செய்து
வைத்திருந்த வைகரியில் மிகவுமீடுபட்டுப் பலருடைய முன்னிலையில் அதிமாத்ரம்
கொண்டாடினதுமல்லாமல், தேவப்பெருமாளுடைய ஒருபுறப்பாட்டில் (மேலே
சொன்ன) ஸ்ரீமத். வில்லியம்பாக்கம் ஸ்வாமியோடு தாம் வார்த்தையாடிக் கொண்

டிருக்கையில் சிறிது தூரத்திலிருந்த அடியேனை அருகே வரவழைத்து "உம்முடைய க்ரந்தத்தை ஸ்வாமி ஸன்னிதியிலே காண்பித்தீரா?" என்று கேட்டு விட்டு, அந்த ஸ்வாமியிடத்தில் இதைப்பற்றி வெகுகாலம் ஆனந்தம் பொங்கிவழியப் பேசினார். அப்போது திருமுற்றவெளியில் அவர் அந்த ஸ்வாமியிடம் சொன்ன வார்த்தைகளின் ஸங்க்ரஹம் வருமாறு:—"ஸமீபகாலத்தில் இவர் ஒரு க்ரந்தமெழுதியிருக்கிறார்; அது ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலுமிருக்கிறது. அதை ஸ்வாமி அவசியம் கடாக்ஷிக்க வேணும்; நமக்கெல்லாம் அது கண்டனமாகத் தானிருக்கும்; இருந்தாலும் தனக்கு விவக்ஷிதமான விஷயங்களை ராஜபாட்டையிலே சென்று விசதீகரித்திருக்குமழகு ஸ்வாமி நேரில் கடாக்ஷித்தால் மிகவும் ரஸிக்கக்கூடியதாகும். அதை எத்தனை தடவை வாசித்தாலும் எனக்கு த்ருப்தியே உண்டாகவில்லை. நம்ம திருமலை தாதத்தின்மேல் கண்டனமாக எழுதியிருக்கிறார்; திருமலை தாதத்தையே நான் கேட்டேன் "அண்ணா எழுதியிருப்பது உனக்குக் கிடைத்ததா? பார்த்தையா? அதற்கு பதில் வெளிவருமா?" என்று கேட்டேன்; அவனும் இதைக் கொண்டாடியே பதில் கூறினான்; ஸ்வாமி இதை அவசியம் கடாக்ஷிக்க வேணும்—என்று பலவும் கூறினார். இப்படிப்பட்ட விஷயங்களில் ருசியில்லாதவரான அந்த வில்லியம்பாக்கம் ஸ்வாமியும் இதைக் கடாக்ஷிக்க விரும்பி வரவழைத்துக் கடாக்ஷித்தருளி மிகவுமுகந்தார். அதிலிருந்து அந்த ஸ்வாமியோடும் அடியேனுக்கு நெருங்கின பழக்க மேற்பட்டது. அதற்காகச் சிலர் அந்த ஸ்வாமியை வெறுத்தவர்களுமுண்டு. மஹான்கள் அதை யெல்லாம் கணிசிக்க மாட்டார்களன்றோ.



ஸ்ரீமதுபயவே. வில்லியம்பாக்கம்
கோபாலதாதாசார்ய ஸ்வாமி, ஸ்ரீகாஞ்சீ.
(வைகுண்டவாஸி)

அந்த ஸ்வாமிகள் யாவரும் பரமபதித்துப் பல காலமாய்விட்ட படியாலே இதெல்லாம் அடியேன் கல்பனையாக எழுதுவதென்று சிலர் பேசிக் கொள்ளவுங் கூடும். அன்னவர்கள் தெளியும்படியாக, இற்றைக்கும் ஜீவித்திருக்கின்ற பல மஹான்கள் ஒருவருடைய வேண்டுகோளுக்காகவன்றிக்கே தாமாக மனங்கனிந்து எழுதியுள்ளவை பல வுண்டென்று காட்ட வேண்டியது அவசியமாகிறது. சிலவற்றையே காட்டுகின்றேன் ;—ஸ்ரீரங்கம் பெரியாச்ரமமென்கிற ஆண்டவனாச்ரமத்தில் ஸ்ரீமத் ஆக்கூராண்டவனுக்குப் பிறகு ஆஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற வர்த்தமான ஆண்டவன் ஸ்வாமியோடு அடியேனுக்குப் பரிசயமின்றிக்கே நேரில் ஸேவிக்கப் பெற்றதுமின்றிக்கே பத்ரவ்யவஹாரப்ரஸக்தியுமின்றிக்கே யிருந்தது. இப்படியிருக்கையில் 1951ஆம் முடிவில் அந்த ஸ்வாமி ஸந்நிதியிலிருந்து அசிந்திதமாக வொரு ஸ்ரீமுகம் கிடைத்தது.



வர்த்தமானபீடாதிபதி ஆண்டவன்
பெரியாச்ரமம், ஸ்ரீரங்கம்.

அதிலுள்ள விஷயம்—

“தேவரீருடைய க்ரந்தங்களையும் வாக்விலஸிதங்களையும் ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித்தும் கேட்டும் மிகவுமுகந்தருளும்படியாச்சுது. தேவரீருடைய க்ரந்தங்களையெல்லாம் கடாக்ஷிக்க மிகுந்த குதூஹலமுண்டாகி யிருக்கிறது. அப்போதப்போது அனுப்பிக்கொண்டிருக்கும்படியாக நியமனம்.” என்று ஸ்ரீகார்யதுரந்தரர் எழுதியிருந்தார். அந்த நியமனத்தை சிரஸாவஹித்து ஸ்ரீஸ்வாமியின் ருசியையுணர்ந்து பத்தெட்டு க்ரந்தங்களை மட்டும் அனுப்பியிருந்தேன். வாத க்ரந்தங்களைக் கடாக்ஷிக்கவே ஆண்டவனுக்குத் திருவுள்ளமென்று தெரிந்து கொண்டு அவையும் சில அனுப்பியிருந்தேன். அவற்றையெல்லாம் கடாக்ஷித்தருளி அடுத்த வாரத்திலேயே அநுக்ரஹித்தருளின ஸ்ரீமுகம் அப்போதே பத்ரிகைகளிலும் சில நூல்களிலும் பிரகரமாகியுள்ளது. அந்த ஸ்ரீமுகம்—

"श्रीजगदाचार्यसिंहासनाधिपतीत्यादिबिरुदालंकृतानां प्रतिवादिमत्तगजभयङ्करकण्ठीरवाणां श्रीमताम् अण्णङ्गराचार्याणाम्.........वादप्रतिवादग्रन्थजालमधिगतम्। श्रीमदाचार्यवर्याणां कटाक्षपात्रं चाभवत्। सर्वम् आनुपूर्व्या कटाक्षितवन्तो महागुरुवरास्ते अमन्दानन्दतुन्दिलस्वान्तास्सन्त एवं प्रशशंसुः—बहुसुतर्कसच्छास्त्रानुसारिप्रमाणपुञ्जमञ्जून् सहृदयरसिकसुहृद्रञ्जकनिरतिशयाश्चर्यशैलीप्रगुम्भितवचनमणिमालालंकृतान् दर्शनावसरेषु नवंनवम् अत्युत्साहजनकान् विविधविचित्रविषयवर्गान् दर्शंदर्शं निरवधिकतुष्टिम् अलभन्त। किञ्च एवमेव युष्माकं शेषमायुरपि नित्यनिरवद्यकैङ्कर्योपयुक्तदेहारोग्यधनधान्यसमृद्धिशालि भूयादिति श्रीरङ्गनायिकासमेतं श्रीरङ्गनाथपरब्रह्म पुनः पुनः प्रार्थये-इति"।

என்பது அந்த ஸ்ரீமுகத்தின் பிரதிபிம்பம். இந்த ஸம்ஸ்க்ருத வாக்யங்களின் கருத்துச் சுருக்கம்—தேவரீரெழுதியுள்ள வாத க்ரந்தங்களெல்லாம் சாஸ்த்ர ப்ரமாண உபபத்திகள் மலிந்தவையென்றும், எத்தனை தடவை வாசித்தாலும் ஆராவமுதமாய் விளங்குகின்றனவென்றும், ஸகல ரஸிக பண்டிதர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றனவென்றும் ஆண்டவன் ஆனந்தம் பொங்கி ஸாதித்ததாகவும், இப்படியே இன்னமும் அநேக க்ரந்தங்கள் அவதரித்துக் கொண்டிருக்க ஸகலவித ஸௌகரியங்களும் விளைய திவ்யதம்பதிகளை ப்ரார்த்தித்துக் கொண்டிருப்பதாகவும் ஆண்டவன் ஸ்ரீமுகத்திலுள்ளது. நம்முடைய க்ரந்தங்களுக்கு ஒரு மதிப்புரை தந்தருள வேணுமென்று நாம் அபேக்ஷித்ததில்லை, எதிர்பார்த்ததுமில்லை. "துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்" என்று (பாதுகாஸஹஸ்ரே) தேசிகனருளிச் செய்தபடி எம்பெருமானுடைய திவ்யஸங்கல்பமேயடியாகத் தோன்றிய ஸ்ரீமுகமன்றோவிது. "யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசாः ப்ரதிபேதிரே" என்ற கணக்கில் இங்ஙனே பல பெரியார்கள் அபிநந்தனம் செய்ய ப்ராப்தமாகியிருக்கிறது ஆண்டவன் இப்படி ஸ்ரீமுகமருளினதற்காக மாத்ஸர்யசாலிகள் சிலர் அந்த ஸ்வாமியைப் பர்யநுயோகம் செய்ததாகவும் "உங்களைப் போலே அந்தரங்கஸாக்ஷ்யத்தை வஞ்சிக்க வேண்டிய ஆவச்யகதை எனக்கில்லை" என்று ஆண்டவன் அருளிச் செய்ததாகவும் பிறகு கேள்விப்பட்டதுமுண்டு.

இந்த வாத விவாதங்களில் தலையிடாதவரான ஆண்டவன் ஸ்வாமி போல்வார் அபிநந்தநம் செய்வது வியப்பன்று; இந்த விவாதங்களில் தலையிட்டுக் கொண்டேயிருப்பவர்களுமன்றோ ஆத்மவஞ்சனம் செய்ய முடியாமல் உண்மையையெழுதி வைக்கிறார்கள். அதையும் சிறிது காட்டுவோம். நவீனர்கள் எங்கெந்த விஷயங்களை நூதனமாகக் கல்பனை செய்தெழுதி 1910ஆம்௵ முதற்கொண்டே அடியேனுடைய பதிலுரைகளைச் சரமாரியாகப் பெற்று மறுவாய் திறக்க முடியாமல் மறைந்து போனார்களோ, அந்த விஷயங்களுக்கு இன்னமும் உயிரிருப்பதாக வைத்து அந்த அபத்த அஸம்பத்த விஷயங்களையே அடிக்கடி புதுப்பித்துக் கொண்டு இதுவே ஒரு போதுபோக்காக இருப்பவர்கள் இக்காலத்திலும் சிலருண்டே; நம்முடைய நூல்களையெல்லாம் வாசித்துக் கொண்டிருப்பார்க்கு அந்த நபர்கள் இன்னாரென்பது நன்றாகத் தெரியுமாதலாலும், மேலே ப்ரகரண விசேஷங்களில் விளக்க நேருமாதலாலும் இங்கு விவரிக்கின்றிலோம். அந்த நபர்கள் நம்முடைய பதிலுரைகளையும் பெற்று சீற்றத்தோடு நிற்கச் செய்தேயும், ப்ராப்தமாம் ஸமய விசேஷங்களில் ஆத்ம வஞ்சனையில்லாமல் எழுத வேண்டியவற்றை எழுதி ப்ரசுரம் செய்து போருவர்கள். அத்தகைய ப்ரசுரங்களில் இங்கு ஒன்றெடுத்துக் காட்டுகிறேன்.

"ஸ்ரீவைஷ்ணவமே வடிவெடுத்தவர்

ஓர் உண்மை ஸ்ரீவைஷ்ணவன் மூன்றுவித நோக்கங்களுடன் உயிர் வாழ்கிறான். ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்தையும் கொள்கைகளையும் பிறருக்குப் போதிப்பதும் தேசமெங்கும் பிரசாரம் செய்வதும் முதலாவதாகும். பின்புள்ளார் கற்றறிந்து ஆசரிக்கைக்காக அச்சித்தாந்தத்தின் உயர்ந்த கொள்கைகளையும் உன்னத நோக்கங்களையும் கிரந்த ரூபமாக எழுதி வெளியிட்டு பிரசுரம் செய்வது இரண்டாவதாகும். கடைசியாக, ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்டு ஆங்காங்கு அர்ச்சாரூபியாய்த் திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களின் வடிவழகில் ஈடுபட்டுப் பணிசெய்தல். இம்மூன்றுவகை வைஷ்ணவ நோக்கங்களுக்காக முறையே பாடுபட்டுப் பெரிதாக வெற்றியடைந்தவர் உளரேல் அவர் ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஒருவரே யாவர். இவருடைய ஷஷ்டியப்தபூர்த்தி இம்மாதம் எல்லா வைஷ்ணவர்களாலும் தேசமெங்கும் கொண்டாடப்படுகிறது. ஸம்ஸ்கிருதம் தமிழ் ஆகிய உபயவேதாந்தத்திலும் இந்த ஸ்வாமிக்கிருக்கும் அபாரஞானம், ஆச்சரியமான உபன்யாஸ சக்தி இவைகளைப்பற்றிய கீர்த்தி தேசமெங்கும் பரவியிருப்பதால் நான் அதிகமாகச் சொல்லத் தேவையில்லை. பரதகண்டத்தில் முக்கியமாக சென்னை மாகாணத்தில், அதனிலும் முக்கியமாக மதராஸில் ஸ்ரீவைஷ்ணவத்திற்காக இவர் செய்திருக்கும் பணிகள் சமீப காலங்களில் இணையற்றதாகும். ஸ்ரீவைஷ்ணவக்கொடியை இவர் ஹிமாலயம் முதல் கன்னியாகுமரி வரையில் வெற்றிகரமாக நாட்டியிருக்கிறார். இவர் எங்குச் சென்றாலும் அங்கு மத சம்பந்தமான நடவடிக்கைகளில் சூழப்பட்டு ஓர் பிரகாசமான நக்ஷத்திரம் போல் விளங்குகிறார். இவருடைய சொந்த நகரமான காஞ்சீபுரியில் ஓர் பாடசாலையையும் க்ரந்த ப்ரசுராலயத்தையும் ஸ்தாபித்திருக்கிறார். இவருடைய பாடசாலையிலிருந்து வெளியேறும் வித்யார்த்திகளும் ப்ரசுராலயத்திலிருந்து வெளியாகும் க்ரந்தங்களுமே மத விஷயத்தில் இவர்க்கிருக்கும் ஆர்வத்துக்கும், நிர்மாண திறமைக்கும், விடாமுயற்சிக்கும் சிறந்த அத்தாட்சிகள். இன்றைக்கும் ஒரு நாளைக்குப் பதினாறு மணிக்குமேல், சிறிதும் குன்றாத வீர்யத்துடன், ஸ்ரீவைஷ்ணவத்துக்கே பாடுபடும் நபர் ஸ்வாமியைத் தவிர வேறு கிடையாது. கம்பீரமான வங்கலகண்டத்வனியுடன் மணிக்கணக்காக கேட்போர் மனங்களை வசீகரித்து அப்படியே ஸ்தம்பிக்கச் செய்யும் சக்தியே எம்பெருமான் இவருக்களித்திருக்கும் குணாதிசயங்களில் முதன்மையாகும். சொல்லப்படும் விஷயங்களிலும் எடுத்துரைக்கும் ரீதிகளிலும் இவரையே மற்றவர் தற்காலத்தில் பின்பற்றுகின்றனர். தெலுங்கு பாஷையில் இவருக்கிருக்கும் புலமை தெலுங்கு நாடுகளிலும் உபயவேதாந்தத்தின் உண்மைகளை இவரால் பரவச்செய்து விட்டது. அந்தந்த காலத்தில் க்ரந்தங்களை எழுதி ப்ரசுரிப்பதிலேயோ—இவை இப்போது நூற்றுக்கணக்காகவே யிருக்க வேண்டும்—எந்த விஷயத்தை எடுத்துக் கொண்டாலும் அந்த விஷயத்தில் இவர் காட்டும் ஞானத்திலேயோ இவரை வெல்பவர் கிடையாது. இவர் கையாண்ட விஷயங்களோ அனேகம்; இவை பல துறைகளிலுள்ளவை என்பதையும் இங்கு ஞாபகப்படுத்துகிறேன். வாதப்போர் நடத்துவதில் ஸ்வாமிக்கு வெகு உற்சாகம். இதனால் ஸ்வாமியாலும் ஸ்வாமி விஷயமாகவும் அனேக ரஸமில்லாத கிரந்தங்கள் உற்பத்தியாகியிருக்கின்றன வென்றாலும் இவற்றுக்கெல்லாம் காரணம் ஸ்வாமியின் அதிசக்தி வாய்ந்த குணாதிசயமென்றே சொல்ல வேண்டும். இவ்வளவு சக்தி வாய்ந்த ஒரு மஹாபுருஷர் விஷயத்தில் அசூயையையும் பொறாமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம். ஆனால், எவ்வித வாதப்போரிலும் ஸ்வாமி பின்வாங்கவே மாட்டார், இவருடைய வாதமே கடைசியாக ஓங்கி நிற்கும். இந்த ரீதியில்

அனேகம் உள்ளன. விஷயங்களைத் தேங்காய் உடைப்பதுபோல், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று உடைத்துக் காட்டுவர்! இவை ஒரு பக்கம் கிடக்கட்டும். ஸ்ரீவைஷ்ணவத்திற்காக இவர் செய்திருக்கும் செய்துகொண்டிருக்கும் பணி கணக்கிட முடியாதது. நம் தேசமெங்கும் ஆயிரக்கணக்கிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் இவருக்கு மேன்மேலும் வணங்கிக்கொண்டும் நன்றி செலுத்திக்கொண்டுமிருக்கின்றனர். இவர்கள் எல்லாருடைய பிரார்த்தனைகளும், ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி நடக்கும் இத்தருவாயில், இவர் பல்லாண்டு பல்லாண்டாக குன்றாத ஆரோக்யத்துடன் ஸ்ரீவைஷ்ணவத்திற்கு தொண்டாற்ற வேண்டுமென்று எம்பெருமானிடம் பிரார்த்தனைகள் செலுத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றன."

அன்பர்களே! மேலே குறித்த வியாஸம் இன்னாருடையதென்பது நாடு நகரமும் நன்கறிந்ததேயாதலால் அவர்பெயரை நாம் குறிப்பிட விரும்பவில்லை. பெரியாழ்வார் திருமொழியில் (1—8—5.) *கழல்மன்னர்சூழக் கதிர்போல்விளங்கி, எழலுற்று மீண்டேயிருந்து உன்னை நோக்குஞ் சுழலை பெரிதுடைத் துச்சோதனனை... ..* என்னும் பாசுரத்தில் விநோதமான வரலாறொன்று கூறப்பட்டுளது. கண்ணபிரான் துர்யோதந ஸபைக்கு எழுந்தருளும்போது அதை முன்னமேயறிந்திருந்த துரியோதனன் 'க்ருஷ்ணன் வரும்போது ஒருவருமெழுந்து மரியாதை செய்யக்கூடாது' என்று உறுதியாய்க் கட்டளையிட்டுத் தானும் உறுதியுடன் ஸபையிலேயிருக்க, ஸ்ரீக்ருஷ்ணன் அங்கு எழுந்தருளியவளவில் அத்துரியோதனனுட்பட அரசர்களனைவரும் ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவின் ஜ்யோதிஸ்ஸைக் கண்டு பரவசராயெழுந்திருக்க நேர்ந்துவிட்டதென்றும், பிறகு 'அநியாயமாய் எழுந்துவிட்டோமே!' என்று துரியோதனன் அநுதபித்தனனென்றும் சொல்லப்படுகிறது. அவ்வண்ணமாக, பரவசமாய் எழுதி விட்டு 'ஐயோ! நெஞ்சிலுள்ளதை நெஞ்சோடு வைத்துக் கொள்ளாமல் எதற்காக எழுதித் தொலைத்தோம்!' என்று அநுதபித்துக் கொண்டிருப்பவருடையபெயரை வெளியிடுவது விரஸமுமாகும். எழுதியிருப்பது அழகியதே.

காலத்ரயத்திலும் கரணத்ரயமும் ஸமரூபமாக இருக்கப்பெற்றவர்கள் எத்தனை பேர்கள் எத்தனையெழுதியிருக்கவில்லை. அத்தகைய மஹான்கள் எழுதியுள்ள வியாஸங்கள் பலவற்றுள் சிகரமான வொருவியாஸத்தை மட்டும் இங்கே தருகின்றேன்; ரிடைர்ட் பெடரல் கோர்ட் ஜட்ஜ், ஸ்ரீமதுபயவே (ஸர்) எஸ். வரதாசார்ய ஸ்வாமியின் வியாஸம்;—(இவருடைய திருவுருவப்படம் பக்கம் 57ல் காண்க.)

"ஸ்ரீ உ. வே. மஹாவித்வான். பிரதிவாதி பயங்கரம். அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் வாழ்க்கையைப்பற்றியும் இவர் செய்திருக்கும் பணியைப்பற்றியும் ஓர் சுருக்கமான வெளியீடு ப்ரசுரிக்கப்படுகிறது. இது இந்த ஸ்வாமியின் குணங்களைப்பற்றியும் இவர் செய்துவரும் பணி விஷயத்திலேயும் எனக்கிருக்கும் உயர்ந்த மதிப்பை விளக்கிக்காட்ட ஓர் சந்தர்ப்பம் அளிப்பதால் அதை நான் சந்தோஷமாகப் பயன்படுத்திக்கொள்ளுகிறேன். இந்த ஸ்வாமியை 25 வருஷங்களுக்கு மேலாகவே நான் தெரிந்துகொண்டிருக்கும் பாக்யத்தையுடையேன். ஹிந்து மதத்தை, முக்கியமாக ஸ்ரீராமானுநுஜரின் வைதிக சித்தாந்தத்தைப் பரவச்செய்தற் பொருட்டு இவர் ஆற்றிவரும் பணியின் இயல்பையும் இதன் அளவையும் நான் சிறிது நெருங்கிய பழக்கத்துடன் அறிந்து கொண்டிருக்கிறேன் என்றே சொல்லலாம். நாகரீகமுறையில் படித்திருப்பவர்களின் மனத்திலேயும் ஸ்ரீராமாநுஜ சித்தாந்தத்தை நன்றாக வேரூன்றும்படி நிலைநாட்டிய இரண்டு வித்வான்கள் விஷயத்தில், அதாவது (காலஞ் சென்ற) ஸ்ரீ ம. ம. சேட்லூர் நரஸிம்மாசாரிய ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. மஹாவித்வான் P. B. அண்ணங்கராசாரிய ஸ்வாமி இவ்விருவர்களிடத்தில், நம் தேசத்தவர், முக்கியமாக சென்னையிலும் அதன் சுற்றுப்புறங்களிலுமுள்ளவர்கள் நன்றி பாராட்டக் கடமைப்பட்

டுள்ளனர் என்கிற உணர்ச்சி வெகு நாட்களாக எனக்குண்டு. இவ்விரண்டு பெரிய வித்வான்களும் ஸ்ரீவைஷ்ணவ மதத்தில் ஏற்பட்டிருக்கும் இரண்டு உப ஸம்பிரதாயங்களைச் சேர்ந்தவர்கள்; தங்கள் தங்கள் சம்பிரதாயத்தைச் சேர்ந்த உலகறிந்த பெரிய ஆசார்யர்களின் கொள்கைகளையே இவர்கள் வற்புறுத்தி விளக்கிக்கொண்டு போனாலும், நான் இங்கு முக்கியமாகக் கருதுவது இவர்கள் ஸ்ரீராமாநுஜ சித்தாந்தத்தை நன்கு பரவச் செய்த ஒரு பெரிய பணியையே யாகும். ஸ்ரீ உ.வே. வித்வான் அண்ணங்கராசாரியஸ்வாமியிடம் பெரிய சபைகளை ஸ்தம்பிக்கச் செய்யும் அதிசய சக்தியுண்டு. இவரது உபன்யாசங்களைக் கேட்கப் பெரிய கூட்டங்கள் சேருவது வழக்கம். பெரிய சபைகள் முன் இவர் ஸம்ஸ்க்ருதத்திலும், தமிழிலும், தெலுங்கிலும் உபந்யசிக்கவல்லவர்: சிலகாலமாக ஹிந்தீ பாஷையையும் இவர் பழகுவதாகத் தெரிகிறது. இவர் மிகவும் வெற்றிகரமாகச் செய்து முடித்த ஓர் மிகப் பெரிய பணி என்னவென்றால், ஸ்ரீ ராமாநுஜர், ஸ்ரீ நம்பிள்ளை, ஸ்ரீவேதாந்த தேசிகர், ஸ்ரீ மணவாளமாமுனிகள் இந்நான்கு பெரிய ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களின் கிரந்தங்களை யெல்லாம் தொகுத்து ஒரு கோர்வையாக வெளியிட்டதே. இது இவர் சாதித்த ஓர் அரிய பெரிய காரியமாகும். ஆனால் இது இவருடைய வெளியீடுகளின் ஓர் பகுதியேயாகும். ஏனென்றால் ஹிந்தியிலேயும், ஸம்ஸ்க்ருதத்திலேயும், தமிழிலேயும் அறிவு பொருந்திய வியாஸங்கள், சர்ச்சைகள், மத விஷயங்கள், தமது சொந்த கற்பனைகள் அல்லது வியாக்கியானங்கள் இவைகளைக்கொண்ட அநேக பத்திரிகைகளை வெளியிடுவதிலேயே இவருடைய காலம் சென்றுகொண்டிருக்கிறது.

இவருடைய காலம் இத்தகைய பணிகள் செய்வதிலேயே மேன்மேலும் வளர்ந்து நம்முடைய சமுதாயம் ஆத்மீய விஷயங்களில் விருத்தியடையும்படி இவருக்குத் தகுந்த தேஹாரோக்யத்தையும் சக்தியையும் அளிக்கும்படி ஸர்வ சக்தியுள்ள எம்பெருமானைப் பிரார்த்தித்து இச் சுருக்கமான மதிப்புரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**ஸர். S. வரதாசாரியர்,**

பெடரல் கோர்ட் ஜட்ஜ், (ரிடைர்ட்)

வாசகர்களே! இத்தகைய அபிநந்தன பத்ரிகைகளை இங்கு அடியேன் வெளியிட்டது அபூர்வமான வொரு பெருமையை ஸம்பாதித்துக் கொள்வதற்காகவன்று. வீணான மாச்சரியத்திற்கு வசப்பட்டு உண்மைகளை மறைத்துப் பொய்யான (அல்லது) தவறான விஷயங்களை ப்ரசாரம் செய்து போருகின்ற சிலருடைய மாயப் பேச்சு வலைகளிலே சிலர் மயங்காமைக்காக மஹான்களின் மதிப்புரைகளை யெடுத்துக்காட்ட நேர்ந்ததத்தனை.

ஆக, இடையில் இவை ப்ராஸங்கிகம். பாதுகாஸஹஸ்ரம் அவதரித்ததற்குக் காரணம் நவீநர்கள் கல்பித்தது ஸர்வாத்மநா அஸங்கதமென்று நெடுநாள் முன்னமேயே நிலைநாட்டப்பட்டிருக்கின்றது. அதன் சுருக்கம் வருமாறு; அந்த பாதுகா ஸஹஸ்ர மருளிச்செய்த தேசிகனும், அதற்கு வியாக்கியான மியற்றினவரும், சரித்திரம் தெரிவிக்கவந்த ஆசார்ய சம்பூகாரரும் எவ்விதமாக எழுதிவைத்திருக்கிறார்களென்பதை முக்கியமாக கவனிக்கவேணும். பாதுகாஸஹஸ்ரத்தினுள்ளேயே நாதபத்ததியில் (41) "ப்ரக்க்யாதாநாம் பரிஷதி ஸதாம் காரயித்வா ப்ரதிஜ்ஞாம்" என்றொரு ச்லோக முள்ளது. இதனால், தேசிகன் தாமே ப்ரஸித்தர்களான ஸத்துக்களின் முன்னிலையில் ஆயிரம் ச்லோகம் செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்து இந்த ஸஹஸ்ரத்தை ஸாதித்தருளினதாக ஸ்பஷ்டமாகிறது. நவீநர்கள் சொல்லிவருகிறபடி ஏதாவது ஐதிஹ்யமிருந்தால் இவ்விடத்து வியாக்கியானத்தில் அது எழுதப்பட்

டிருக்கவேணுமே. எழுதாது விடுவர்களோ? பாரத்வாஜ ஸ்ரீநிவாஸாசார்ய ரென்பவர் பாதுகாஸஹஸ்ரத்திற்கு வியாக்கியாநகர்த்தா. இவர் எவ்விதமாக எழுதி வைத்திருக்கிருரென்னில்; அந்த வியாக்கியான ஆரம்பத்தில் "ரங்காஸ்தாநீரஸிக பரிஷத்ப்ரேரணும் ப்ராப்ய சௌரே: பாதாவந்யா: ஸ்துதிமக்ருத யோ யைஸ் ஸஹஸ்ரேண பத்யை:" என்கிற ச்லோகத்தை முன்னமெழுதிவிட்டு உடனே

> "ஸ்ரீமாந் வேங்கடநாதோ குரு: பகவதோ ரங்கநாதஸ்ய திவ்யாஸ்தாந ரஸிகைர் பாகவதை: அப்யநுஜ்ஞாத பாதுகாஸ்துதி: பாதுகாஸஹஸ்ரம் நாம காவ்யம் ப்ரணிநாய." என்றெழுதியுள்ளார். ஸ்ரீரங்கத்திலிருந்த

ரஸிகர்கள் ப்ரேரணைபண்ண அதற்கிணங்கிப் பாதுகாஸஹரம் ஸாதித்ததாக ச்லோகத்திலுள்ளது. அந்த ரஸிகர்களின் அநுஜ்ஞையைக் கொண்டு அது அருளிச் செய்ததாக வசனத்திலுள்ளது. இவ்வளவேயொழிய ஸ்ரீவைஷ்ணவாசார்யர்கள் ஸ்பர்த்தை பண்ணினதாகப் பேச்சே கிடையாது. இந்த கல்பனையான பேச்சுக்கள் இவர்கள் தங்களாலேயே கல்பிதமென்று சிலாசாஸனம் செய்யப்பெற்ற மூவாயிரப்படி குருபரம்பரையிலிருந்து முளைத்தவையேயொழிய, ப்ராமாணிகமான வேறு எந்த நூலிலும் அணுவளவும் ஆதாரம் காட்ட முடியாது.

"திருப்புட்குழி ஸ்வாமியும் அவரை யநுஸரித்த சில வித்வான்களும் மூவாயிரப்படி குருபரம்பரையை நவீந கல்பிதமென்று ஸ்தாபித்து விட்டதனுலேயே உலகமெல்லாம் அதற்குக் கட்டுப்படவேணுமா என்ன?" என்கிற வாதம் இதுவரை எழுந்ததில்லை. இனியொருவர் இந்த வாதத்தைக் கிளப்புகிருரென்று வைத்துக் கொள்வோம். அத்தகைய வாதம் கிளரும்போது வேண்டுவன சொல்லுவோம்—என்பதும் பண்டே எழுதி முடிக்கப்பட்ட விஷயம். வாதிகேஸரியென்பவர் வேறு வ்யக்தி என்பதையும், அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் வேறு வ்யக்தி என்பதையும் தெரிந்துகொள்ள மாட்டாமல் இருளும் மருளுமா யெழுதிவைத்திருப்பவர்கள் ஸதஸ்ஸில் வந்து நிற்க அர்ஹதையற்றவர்களென்பது நிர்விவாதம். இதை இப்போது இவ்வளவில் நிறுத்துவோம்.

ஸ்ரீமத் தோணுங்குளம் ராமாநுஜாசாரிய ரென்பவர் அக்காலத்தில் கிரஸனுயில் வியாபாரத்தில் அளவற்ற செல்வம்படைத்து மஹாதனிகராய் தேவப்பெருமாள் திருவடிகளில் பரமபக்தராய் அபரிமித கைங்கரியங்களைச் செய்பவராயிருந்து வந்தார். அவர் சில பல வருஷங்கள் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு ரிஸீவராகவும் நீதி மன்றத்தில் நியமிக்கப்பட்டு வேலைபார்த்து வந்தார். அவர்க்கு ஸம்ஸ்க்ருதத்திலோ ஸம்ப்ரதாயத்திலோ அவ்வளவாக ப்ரவேசமிருந்ததில்லை. ஆனுலும் காஞ்சிக்கு வந்த பின்பு பெரியார்களை யடுத்துப் பழகி நல்ல விவேகம் பெற்றுர். அவர் வைதிகர்களுக்கும் வித்வான்களுக்கும் ஏதாவது வியாஜத்தையிட்டு ஸன்மானங்கள் செய்து கொண்டே யிருந்தார். ஒருநாள் நூற்றுக்கால் மண்டபத்தில் பண்டிதர்களையெல்லாம் வரவழைத்து ஒரு ஸதஸ்ஸு நடத்தினுர். ஸாமான்ய பண்டிதர்களும் விசேஷ வித்வான்களுமாகப் பலர் குழுமியிருந்தார்கள். ஒவ்வொருவரும் தேவப்பெருமாளைப் பற்றி 10 நிமிஷம் ஏதாவது சொல்ல வேணுமென்று அவர் கோரியிருந்தார். இடையிடையே அவரும் சில கேள்விகள் ஜிஜ்ஞாஸு முறையில் கேட்பர்.

அப்படி கேட்டுக்கொண்டு வருகையில், வரதராஜ பஞ்சாசத்தில் "த்வத் தேஜஸி த்விரத சைலபதே! விம்ருஷ்டே ச்லாக்யேத ஸந்தமஸபர்வ ஸஹஸ்ரபாநோ:" என்பதையெடுத்து இதன் தாற்பரியத்தை யாராயினுமொரு வித்வான் விளக்கியுரைக்க வேணுமென்று கோரினுர். 'தேவப்பெருமாளே! தேவரீருடைய தேஜஸ்ஸை ஆராய்ந்து பார்த்தால் ஸூர்யனைக் காட்டிலும் அமாவாஸ்யை சிலாகிக்கப்படும்'

என்பது அந்த ச்லோகப் பகுதிக்குப் பொருள். இது அநாயாஸமாக யாவரும் சொல்லக்கூடியதே. அமாவாஸ்யைக்கு வந்த ஏற்றமென்ன? ஸூர்யனுக்கு வந்த தாழ்வு என்ன? என்பதை உபபாதிக்கவேணுமே; அதையே அந்த ஸ்வாமி கோரினார். இதில் (ஸஹஸ்ரபாநோ:) என்றதில் பஞ்சமீவிபக்தியா? ஷஷ்டீ விபக்தியா? என்று பலர்க்கு மயக்கம். பஞ்சமியேயொழிய ஷஷ்டியன்று. ஆனால் வியாக்கியானம் செய்தவர்கள் அறுதியிடாதே ஏதோ எழுதியிருக்கிறார்களாம் அதனால் தான் இந்தக் கேள்வி விளைந்தது. வித்வான்கள் சிறிது ஆலோசித்துவிட்டு "இது தேசிக திவ்யஸூக்தி யல்லவா? லேசாகச் சொல்லிவிட முடியுமா?" என்பார் சிலர்; "வியாக்கியானம் பார்த்தால் தெரியும்" என்பார் சிலர்; "வியாக்கியானத்திலும் தலை சுற்றலாயிருக்கிறது" என்பார் சிலர்; இப்படியாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அடியேன் இளமையில் இது பாடங்கேட்டிருந்தபடியால் உத்ஸாஹமாக வெழுந்து தாத்பரியத்தை விளக்கமாக விஜ்ஞாபித்தேன். இதை ஒரு கதைபோல் எடுத்துச் சொன்னேன்; (அதாவது) அக்காலத்தில் ஸ்ரீமத் திருப்புட்குழி ஸ்வாமியை எல்லாரும் ஒப்புயர்வற்ற வித்வானாகச் சொல்லிக்கொண்டிருப்பர்களாதலால் அந்த ஸ்வாமியைத் தேவப் பெருமாளுடைய தேஜஸ்ஸின் ஸ்தானத்திலே வைத்தேன். ஸ்வல்பசாஸ்த்ரஜ்ஞானம் படைத்தவொரு ஸாதாரண வித்வானை ஸூர்யனுடைய ஸ்தானத்திலே வைத்தேன். உண்மையில் ஒரு படிப்புமில்லாத வொரு யதாஜாதனை அமாவாஸ்யையின் ஸ்தானத்திலே வைத்தேன். திருப்புட்குழி ஸ்வாமி சாஸ்த்ரார்த்தம் நடத்தும்போது ஏறக்குறைய அவருக்கு ஸமாநஸ்கந்தரானவொரு ப்ரபலவித்வான் பேசினால் ஏற்றிருக்கும்; அரைகுறை படிப்பாளியானவொரு ஸாதாரண வித்வான் தன்னை ப்ரபல பண்டிதராக நினைத்துச்செருக்குற்றிருந்தபடியாலே தாம் ஏதோ ப்ரதிவாதம் செய்வதாக எழுந்தார்; அதனாலென்னாகும்? நாலு வார்த்தையிலேயே பங்கமடைந்து நின்றார். ஒரு படிப்புமில்லாத யதாஜாதர் ஒருவருளரே; அவரும் அந்த ஸதஸ்ஸிலே யிருந்தார்; அவர் உள்ளபடி தம்மை அஜ்ஞராகவே நினைத்திருப்பவராதலால் தாம் ஒன்றும் வாய்திறக்கவில்லை; அதனால் பங்கமடைய ப்ரஸக்தியே யில்லையாயிற்று. இடையில் ஒருவர் பங்கமடைந்தாரே, அவர் ஸ்வல்பம் கல்வி கற்றிருந்தபடியாலல்லவோ வாயைத் திறக்க நேர்ந்து அதனால் பங்கமடைய ப்ராப்தமாயிற்று. அவர் நினைத்தார் 'ஐயோ, நாம் சிறிது கல்விகற்றபடியாலன்றோ இப்படி பங்கமடைய நேர்ந்தது; இந்த யதாஜாதனைப் போலே நாமும் நிரக்ஷரகுக்ஷியாயிருந்து விட்டால் இந்த பங்கம் நமக்கு நேர்ந்திராதே' என்று நினைத்தார். இதுபோல, தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸின் முன்னிலையிலே பங்கமடைந்த ஸூர்யன், அவ்விதமாக பங்கமடைய ப்ரஸக்தியற்ற அமாவாஸ்யையைக் கொண்டாடி 'நாம் அமாவாஸ்யையாகப் பிறவாமற் போனேமே!' என்று அநுதபிக்க நேர்ந்தது. இதுவே இங்கு தேசிகனுடைய திருவுள்ளம். இந்த வர்ணனையினால், ஸூர்ய தேஜஸ்ஸை ஸர்வாத்மநா பங்கப்படுத்தவல்லது தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸு என்பது தேறி நிற்கும். இதனை சமத்காரமாக ஸாதித்திருக்கிறபடி—என்று விரிவாக வுபந்யஸித்தேன். இதைக்கேட்டஸதஸ்யர்கள் யாவர்க்கும், விசேஷித்துக் கேள்விகேட்ட அந்த தோணுங்குளம் ராமாநுஜாசார்ய ஸ்வாமிக்கும் பரமானந்த முண்டாயிற்று. அப்போது ஒருவர்க்கும் அஸூயை தலைகாட்டினதாகத் தெரியவில்லை.

கீழே (பக்கம் 30ல்) ஸ்ரீமத் காதி ஸ்வாமியின் ப்ரஸ்தாவம் ஒருவாறு நிறுத்தப்பட்டிருக்கின்றது. ஹைதராபாத் நகரத்திலிருந்து கல்கத்தாப்ராந்தம் ஸஞ்சாரமாக எழுந்தருளினவர் அடுத்த வருஷத்தில் காஞ்சிக்கு எழுந்தருளும்படியாயிற்று. அப்போது இரண்டு ஸம்வத்ஸரம் வடநாட்டுப் பயணத்தை அறவே மறந்து ஸ்வஸ்தானத்திலேயே எழுந்தருளியிருக்க ப்ராப்தமாயிற்று. அப்போது அடியேனுக்குக் காலை வேளைகளில் ஸ்ரீபாஷ்ய ச்ருதப்ரகாசிகா ப்ரவசனத்தையும் பகல் வேளைகளில்

நியாய பாடப்ரவசனத்தையும் வெகு உத்ஸாஹத்துடன் நடத்தியருளினார். சோள ஸிம்ஹபுரத்தில் ஸம்ஸ்க்ருத கலாசாலையை ஸ்தாபித்துப் புகழ்பெற்ற ஸ்ரீ உவே. ப்ர. க்ருஷ்ணமாசாரியஸ்வாமி ஏற்கெனவே ஸ்ரீ பெரும்பூதூரில் ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமி ஸன்னிதியில் ஸ்ரீபாஷ்யம் அதிகரித்திருந்தும் மறுபடியும் அதிகரிக்க ஆசை கொண்டு ஸப்ரஹ்மசாரியாக அமைந்தார். இன்னும் சிலரும் அந்வயித்தார்கள். ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் இரண்டு வருஷகாலம் பெரிய கோஷ்டியாகவே நடைபெற்று வந்தது. இடை யிடையில், கோயில் திருமலை முதலான திவ்ய தேசங்களில் உத்ஸ வங்கள் ஸேவிக்கக் குதூஹலங்கொண்டு அடியேன் நாலுநாள், ஒருவாரம் இப்படி யாகப் பிரிந்து செல்ல நேரும். செல்லுமிடங்களில் உபந்யாஸங்கள் செய்ய மஹான் கள் நியமித்தருள்வர்கள். திரும்பி வந்தபின் ஆங்காங்கு நடந்த செய்திகளை விஜ் ஞாபனம் செய்வேன். ஸ்ரீஸ்வாமியின் உபந்யாஸங்கள் வட இந்தியாவில் விசேஷ மாக நடைபெறுவதுண்டே யல்லது இந்த ப்ராந்தங்களில் நடைபெற்றதில்லை. இங்கும் நடத்தவேணுமென்கிற ருசியுண்டாகி அண்ணா ஸன்னிதியில் தினப்படியாக மாலை வேளைகளில்கீதையுபந்யாஸம் செய்வதென்று ஆரம்பித்தருளினார். ஸ்ரீயதோ க்தகாரி ஸன்னிதியில் சில கிழமைகளில் பகலில் உபந்யாஸம் நடத்தவேணுமென்று அந்த ஸன்னிதி தர்மகர்த்தாக்கள் ஸ்ரீ ஸ்வாமியை வேண்டிக்கொண்டார்கள். அப் போது ஸ்ரீமத் உவே. வித்வான் வாதூல அப்பன் ப்ரணதார்த்தி ஹராசார்ய ஸ்வாமி முதலான மற்றும் சில பெரியார்களும் உபந்யாஸங்கள் செய்தருள இசைந்து, இன்ன கிழமைகளில் இன்னார் உபந்யஸிப்பதென்று நிபந்தனை ஏற்பட்டு அங்ஙனே வெகு காலம் நடந்து வந்தது.

ஸ்ரீகாதி ஸ்வாமி, சார்வரி வருஷத்தில் (அதாவது அடியேனுடைய பத்தாவது வயதில்) மஞ்ஜுபாஷிணீ யென்றொரு ஸம்ஸ்க்ருதபத்ரிகை பிரசுரம்செய்ய ஆரம் பித்தருளினார். அது சில வருஷங்கள் மாதத்திற்கொருமுறையும், சில வருஷங்கள் பக்ஷத்திற்கொரு முறையும், நடந்து வந்து பிறகு வாரப்பத்திரிகையாகப் பல வரு ஷங்கள் நடந்து வந்தது. அப்பத்ரிகையை நிர்வஹிக்கும் பாரத்தைப் பதினெட் டாவது வயதில் ஸ்ரீ ஸ்வாமி அடியேனிடம் ஒப்படைக்க, ஏறக்குறைய இருபது ஸம்வத்ஸரகாலம் அதை நிர்வஹித்து வந்தேன். அப்போது பெரும்பாலும் ஸ்ரீஸ்வாமி வடதேச ஸஞ்சாரத்தில் ஊன்றியிருந்தார். பன்னிரண்டாண்டு இந்த பக்கம் திரும்புவதில்லை யென்கிற திடமான ஸங்கல்பத்துடனே மடாதிபதிகளுக் கும் மேலாக திக்விஜய யாத்திரை புறப்பட்டருளினார். அந்த யாத்திரையில் க்வசித் க்வசித் அடியேன் சென்று சேர்ந்து ஸஹாநுபவம் பண்ணிக் களிக்க நேர்ந்தது.

ஸ்ரீமத்பரமஹம் ஸேத்யாதி. சின்ன கலியன் ஸ்வாமியென்று தேசமெல்லாம் பரந்த பெரும் புகழுடைய ஸ்ரீமத். வானமாமலைஸ்வாமி முதல்தடவையான பெரிய யாத்திரை புறப்பட்டருளிக் காஞ்சீப்ராந்தம் எழுந்தருளியாகிறது. அப்போது அடியேன் [கீழே பக்கம்53ல் ப்ரஸ்தாவித்த] ஸம்ப்ரதாய சந்த்ரிகாதி க்ரந்த முத்ரணத்தில் தத்பரனாயிருந்தபடியால் அப்போது அச்சிட்டிருந்த புஸ்தகங்களில் ஒவ்வொரு பிரதியை ஸ்ரீஸ்வாமிஸன்னிதிக்கு அனுப்பியிருந்தேன். ஸம்ப்ரதாய சந்த்ரிகைக்கு விஸ்தாரமான பூமிகையும் விசேஷடிப்பணியும் எழுதிச் சேர்த்திருந் தேன். அவற்றை ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித்தருளித் திருவுள்ளம் போரவுகந்து ‘‘குகனோடுங் கங்கை தன்னில் சீரணிந்த தோழமை கொண்டது மோரடையாளம்’’ என்பதற்கீடான முறையிலேயே நிரவக்ரஹாநுக்ரஹம் செய்தருளினார். அதை ப்ரீதியென்பதா? ப்ரேம மென்பதா? கருணையென்பதா? நேச மென்பதா? இன்ன தென்று சொல்லத் தெரியவில்லை. அந்தஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி இருபதாண்டுகளானாலும் ‘‘ராமஸுக்ரீவயோரைக்யம்’’ என்னும்படியான அந்த நிலையை அறியுமவர்கெல்லாம். ஸ்ரீஸ்வாமியின் பரமக்ருபைக்கு இலக்காகப்பெற்ற ஸந்தர்ப் பங்கள் பலபலவுண்டு; அவை மேற்பகுதிகளில் விசதமாகும்.

திருவல்லிக்கேணியில் ஸ்ரீமத். வைத்தமாநிதி முடும்பை அப்பங்கார் ஸ்வாமி யென்பவர் ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரவசநப்ரவீணராய் எழுந்தருளியிருந்தார். அவர் திருநாட்டுக்கெழுந்தருளி 35, 40 வருஷமிருக்கும். அவருடைய மூத்த திருக்குமாரர் சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி தமிழுலகில் மஹாப்ரஸித்தர். இவர் 'இளம்பிராயத்திலேயே கலைகள் பலவுங் கற்றுப் போதனாசிரியராக விளங்கியவர். அப்போதே கம்பராமாயணம், அஷ்டப்பிரபந்தம், நன்னூல் முதலிய இலக்கண விலக்கியங்களுக்கு உலகங் கொண்டாட நின்ற உரைகளை யெழுதத் தொடங்கியவர். திருவிருத்தத்திற்கு இவரெழுதிய வுரை இன்னமும் உலகில் கொண்டாடப்பட்டு விளங்கா நின்றது. நச்சினார்க்கினியரென்றும் பரிமேலழகரென்றும் ப்ரஸித்தர்களான உரையாசிரியர்களிற் காட்டிலும் மிக மேம்பட்டு விளங்கியவர் இவர். இவருடைய உரைகளில் ஒருவர் ஒருவிதமான குற்றங் குறை கூற முடியாது. இலக்கணங்களிலும் இலக்கியங்களிலும் ஸமமான மிகத்தெளிந்த ஞானம் பெற்றிருந்தவரிவர். இவரெழுதிய 'டெக்ஸ்ட் நோட்ஸ்' என்னும் உரைகளை மட்டும் படித்தே பலர் தமிழ்ப்பண்டிதர்களாயினர் என்பது உண்மையுரை. கீர்த்திமூர்த்தியான மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்யகலாநிதி சாமிநாதையரவர்கள் இவரிடத்தும் இவர் எழுதி வெளியிட்ட உரைகளினிடத்தும் மஹத்தான கௌரவபுத்தி வைத்திருந்தார். அடியேன் முதன்முதலாகத் திருக்குடந்தைக்கு விடை



உலகம் நிறைந்த புகழாளரான ஸ்ரீ மதுபயவே.
வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி
(வைகுண்டவாஸி)

கொண்டபோது இந்த ஸ்வாமி அவ்விடத்துக் காலேஜில் போதனாசிரியராக எழுந்தருளியிருந்தார். ஆனால் அப்போது அங்கு இவரை ஸேவிக்க ப்ராப்தமாகவில்லை. இவருடைய கீர்த்திகளை முதன்முதலாக அவ்விடத்தில்தான் கேள்விப்பட்டேன்.



ஸ்ரீ மதுபயவே. வித்வான் வை. மு. கோபாலக்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, திருவல்லிக்கேணி.

இவரிடத்தில் பாடங்கேட்டுப் பண்டிதரானவர்கள் பலர். திருவல்லிக்கேணியில் தமிழ்ப் பண்டிதராக விளங்கினவரும், பல புத்தகங்களுக்குப் பதிப்பாசிரியருமான ஸ்ரீ உவே. சே. க்ருஷ்ணமாசாரியர்ஸ்வாமி இவருடைய திருவருளினாலேயே பேர் பெற்றவர். உலகின் பாக்யவசத்தினால் இற்றைக்கும் திருவல்லிக்கேணியில் ஸேவை ஸாதித்தருள்பவரும், கம்பராமாயணம் முதலிய பல நூல்களுக்கு அரிய பெரிய உரைகளை வகுத்தவரும், வடமொழி தென்மொழிகளை நன்கு பயின்றவருமான ஸ்ரீ உவே. வை. மு. கோபாலக்ருஷ்ணமாசாரியர்ஸ்வாமியும் இவருடைய பரம க்ருபைக்குப் பாத்ரபூதராகியே மேன்மை பெற்றவர். இவ்விருவரும் தம்பி

தமையன் முறையிற் சேர்ந்தவர்களுமாவர். இவ்விருவராலும் தமிழுலகுக்கு நேர்ந்துள்ள மஹோபகாரங்கள் எழுத்திலடங்கா. விசேஷித்து ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கும் இவர்கள் பரமோபகாரகர்கள். இவ்விருவரையும் நாம் நிச்சலும் நினைக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இவர்களில், சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி அதிபால்யத்தில் பரமபதமெய்தினர். நாற்பது வருஷங்களுக்குமேல் ஆய்விட்டாலும் இவருடைய மறைவைப்பற்றி இன்னமும் நாடோறும் சோகிப்பவர்கள் பலருளர். இவருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய இன்னமும் ஒருவர் தோன்றிற்றிலர் என்றால் இது மிகையாகாது. இவர்க்கு ஸம்பந்தங்களெல்லாம் காஞ்சீபுரத்திலே யாதலால் அடிக்கடி இவ்விடமெழுந்தருள்வர். மணவாளமாமுனிகளின் திருவவதாரம் ஸாதாரண வருஷத்திலாதலால் சென்ற ஸாதாரண வருஷத்து ஐப்பசி மாதத்தில் மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவம் தேவப்பெருமாள் ஸந்நிதியில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அப்போது சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி அவ்வுத்ஸவம் ஸேவிக்கும் வியாஜமாகக் காஞ்சிக்கெழுந்தருளி உத்ஸவம் முடிந்த பிறகும் சில மாதங்கள் அங்கே தங்கியிருக்க நேர்ந்தது. அப்போது அவரோடு மிக நெருங்கிய பழக்கம் ஏற்பட்டது. மாணாக்கனாகவுமிருந்து அவருடைய எல்லைகடந்த வித்வத்தை அநுபவித்து ஆனந்திக்க நேர்ந்தது. இக்காலத்து ஸ்ரீவைஷ்ணவர்களும் பிறரும் சிறிது தமிழ்ப்பயிற்சி பெற்றவாறே தங்களை மஹாமேதாவிகளாகவும் விமர்சகுசலர்களாகவும் "சதிரமென்று தம்மைத் தாமே சம்மதித்து" என்ற ஆழ்வாருளிச்செயற் கணக்கிலே அபிமானித்துப் பூருவாசாரியர்களின்மேல் அம்பு தொடுக்கப் புகுவர்கள். சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி உபயபாஷையிலும் நிரம்பிய ஞானம்பெற்ற கல்விக்கடலாகையாலே பூர்வாசார்ய திவ்யஸூக்திகளில் அவர் கொண்டிருந்த ப்ரதிபத்தி அப்ரதிமமானது. அடியேனெழுதிய செந்தமிழாராய்ச்சி யென்னுமோர் நூல் 2—11—43-ல் (சுபாநு ஹு ஐப்பசியில் திருமூலத்தன்று) வெளியிடப் பெற்றது தமிழுலகமெங்கும் பரவியுள்ளது. அதில் (பக்கம் 44-ல்) அடியேனெழுதியுள்ள சில பங்க்திகளை இங்கு எடுத்துக் காட்ட வேண்டியது அவச்யமாகிறது. அவை வருமாறு ;—

"கீர்த்தி மூர்த்தியான, வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமியைத் தமிழுலகமும் ஸ்ரீ வைஷ்ணவ வுலகமும் இற்றைக்கும் எற்றைக்கும் போற்றுமென்பது நிர்விவாதம். அந்த மஹான் இலக்கண விலக்கியங்களை நன்கு பயின்றவர். வடமொழியும் விசேஷமாகக் கற்றவர் என்கிற இவ்வளவேயன்று அவர்க்கு ஏற்றம். அருளிச் செயல்களை சுத்த பரம்பரையில் ஓதி நம் ஆசாரியர்களின் வியாக்கியானங்களை நல்லாசிரியர் திருவடிகளிற் பலகாலம் பணிந்து குனிந்து கேட்டவரென்பதே அவர்க்கு விசேஷித்த பெருமை. அத்தகைய சிறப்புக்களில் ஏகதேசமும் பெறாததுதான் மற்றையோர்கள் ஆசார்ய ஸ்ரீ ஸூக்தி விச்வாஸமின்றிக்கே தாந்தோன்றிகளாக மனம்போன போக்கெல்லாம் எழுதி வருவதற்கு மூலம். அடியேனுக்கு ஸாக்ஷாத் மாதாமஹரும் ஜகத் ப்ரஸித்தரா யெழுந்தருளி யிருந்தவருமான ஸ்ரீமத் பரம ஹம்ஸேத் யாதி, ஸ்ரீகாஞ்சீ அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி திருவடிகளில் அடியேன் இலக்கண விலக்கியங்கள் வாசித்துக்கொண்டிருந்தபோது ஜீயர் ஸ்வாமி சிஷ்ய யாத்திரை எழுந்தருளநேர்ந்தது. அப்போது வை. மு. சடகோப ராமாநுஜாசாரியர் ஸ்வாமி காஞ்சீபுரத்திற் கெழுந்தருளி ஸ்வஸம்பந்தி க்ருஹத்திலும் மாமனா ரகத்திலும் சில மாதங்கள் தங்கியிருக்க நேர்ந்தது. அப்பொழுது அவரிடத்திலும் சில தமிழ் நூல்களை வாசிக்க அடியேனுக்குப் பாக்கியம் வாய்த்தது. மாதாமஹ ஜீயர் ஸந்நிதியில் தமிழ் வாசித்து ப்ரஸித்தரான புன்னை-ஸ்ரீநிவாஸாசாரியர் பக்கலிலே வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி வாசித்து விளக்கில் கொளுத்தின தீவட்டியாக விளங்கினவர். இங்ஙனம் ஜீயர் ஸ்வாமி ஸம்பந்தமும் அவரிடத்தில் இருந்ததனால் அடியேன்

மிக்க ப்ரதிபத்தியோடு அவரிடம் வாகிக்க நேர்ந்தது. அந்த மஹானுக்கு நம் ஆசார்ய ஸ்ரீ ஸூக்திகளில் இருந்த ஒப்புயர்வற்ற பிரதிபத்தியை அடியேன் அப்போது கண்டு வியந்தேன். அவரது திருவருளாலேயே அந்த ப்ரதிபத்தி அடியேனுக்குச் சிறிதளவு வாய்த்த தென்றும் உள்ளபடி கூறுவேன். சில மாதங்கள் அடியேன் அவரிடத்தில் வாழ்ந்து கேட்டிருந்திலேனாகில் நானும் ஒரு தாந்தோன்றியா யிருந்திருப்பேனென்பது திண்ணம். அடிக்கடி அவரது திருவருளை ஸ்மரிப்பவனடியேன். உள்ளபடி அந்த ஸ்வாமியிடத்தில் சில மாதங்கள் பழக நேர்ந்தபடியாலும், அவருடைய உரைகளில் பரிசயம் செய்யப்பெற்ற படியாலுமே அடியேன் பல நன்மைகளை யடைய ப்ராப்தமாயிற்றென்பதை அந்தரங்க ஸாக்ஷிகமாக விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்.” இத்யாதிகள்.

பலர் மறந்திருப்பதும், சிலர் நாடோறும் அநவரதமும் அநுஸந்தித்துக் கொண்டிருப்பதுமான எனது ஓர் விசேஷத்தைப்பற்றி இப்போதெழுத விரும்புகிறேன். திருவாய்மொழி ஆரம்பத்தில் ஐந்தாவது பதிகம் *துவளில் மாமணிமாடமென்பது. அதற்கு அவதாரிகை யருளிச்செய்கின்ற நம்பிள்ளை ஈடுமுப்பத்தாறாயிரப்படியிலே பணித்த ஸ்ரீ ஸூக்திகளிவை :—

“ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் பிறந்த ஸமயத்திலே ஜ்யோதிர் வித்துக்களை யழைத்து ‘இவள் ஜீவிக்கும்படிகளென்?’ என்று கேட்க; ‘இவள் ஜீவிக்கும் படிகளில் ஒரு குறையில்லை; ஸார்வபௌமனா யிருப்பானொருவனைக் கைப்பிடிக்கவுங் கடவள். இங்ஙனே யிருக்கச் செய்தேயும் வநவாஸரஸ மநுபவிக்கக் கடவள் என்றார்கள். அப்படியே இப்பெண்பிள்ளை [பராங்குச நாயகி] பிறந்தபோது இவள் திருத்தாயாருள்ளிட்டார் நிதாநஜ்ஞரா யிருப்பாரை யழைத்து இவள் ஜீவிக்கும்படிகளெங்ஙனேயென்று கேட்க; எல்லாம் நன்றாய்த் தலைக்கட்டக் கடவது, ஆனாலும் இவளுக்கு ஓர் அபம்ருத்யு வுண்டு; அது தப்பினளாகில் ஸூகமே ஜீவிக்கும்; அதாவது திருத்துலைவில்லி மங்கலத்தில் கொடுபோகாதே யொழியப் பெறில் இவளைக் கிடைக்கும் என்றார்கள். இவள் ஜீவியா தொழியிலும் திருத்துலைவில்லி மங்கலத்தில் கொடுபோகாதொழியவல்ல குடியன்றே. இவள் அங்கே புக்கு முடிய வமையும் என்றிருப்பார் சிலரிறே. பிராட்டி வநவாஸரஸ மநுபவியாதவன்றிறே இவள் திருத்துலைவில்லி மங்கலத்தில் புகாதொழிய வல்லளாவது.” என்று.

இப்படிப்பட்ட பரம கம்பீரமான ஸ்ரீ ஸூக்திகளின் கருத்தை அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையிலே விளக்கமாக உரைத்திருப்பதையும் இங்கெடுத்துக் காட்டுகிறேன். ஸ்ரீ ஜநகராஜன் திருமகள் [ஸீதை] பிறந்தபோது சோதிடர்களை வரவழைத்து ‘இவளுடைய அத்ருஷ்ட பாகங்கள் எப்படியிருக்கிறது? சொல்லுங்கோள்’ என்று தாய்மார் கேட்க; சோதிடர்கள் பார்த்து ‘இவளுடைய பாக்கியம் மிக நன்றாயிருக்கிறது; ஒரு குறையுமில்லை. ஸார்வ பௌமனா யிருப்பானொருவனுக்கு மனைவியாக வாழ்க்கைப்படுவள்; ஆனால் ஒரு கண்டமுண்டு—(அதாவது) வநவாஸம் அநுபவிக்க நேரும்’ என்றார்களாம். அப்படியே, நம்மாழ்வாராகிற பராங்குசநாயகி பிறந்தபோதும் இவளது திருத்தாயார் முதலானோர் சோதிடர்களை யழைத்து பாக்ய விசேஷங்களைப்பற்றி விசாரிக்கையில் அவர்கள் சொன்னதாவது ‘எல்லாம் நன்றாகவே யிருக்கிறது; இவள் * உயர்வற வுயர்நல முடையவனான அயர்வறு மமரர்களதிபதியால் மயர்வற மதிநல மருளப்பெறுவள்; உலகம் நிறைந்த புகழ்பெறுவள்; தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல்மாலைகள் சொல்லுவள்’ என்று; இங்ஙனே பலவும் சொல்லிவிட்டு, ஆனால் இவளுக்கு ஓர் கண்டமுண்டு;

அது என்னென்னில்; இவள் துலைவில்லி மங்கலத்திலே ஈடுபடும்படி நேரும்; அது இவளுக்குப் பெரிய கண்டமாகவே முடியும்; அது தப்பினால் சுகமே வாழலாம்—என்றார்களாம். சோதிடர்கள் ஸீதாபிராட்டிக்குச் சொன்ன கண்டமும் தப்பிற்றில்லை; ஆழ்வார்க்குச் சொன்ன கண்டமும் தப்பிற்றில்லை. ஸாமாந்ய த்ருஷ்டியாலே இவை கண்டமென்னத் தகுமேயல்லது, விசேஷ த்ருஷ்டியாலே இவையிரண்டும் பேறுப்பேறு என்னப்படுமன்றோ. பிராட்டி வநவாஸம்புக்கு * தனிச் சிறையில் விளப்புற்ற கிளிமொழியாளென்று திருவாய்மொழியாலும், "இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீ ராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றம் சொல்லுகிறது" என்று ஸ்ரீ வசநபூஷணத்தாலும் லோகோத்தரமாகக் கொண்டாடப்பட்டாள். ஆழ்வாரும் துலைவில்லி மங்கலத்திலே புகுந்து மிக்க பெரும்புகழ் பெற்றார்.

இனி விவக்ஷிதமான விஷயத்திற்கு வருகிறேன். அடியேனுக்கு பவிஷ்யத் பலன்களை இளமையிலேயே தெரிவித்த சோதிடர்களும் பல பலவும் தெரிவித்து "இவை ஸாமாந்ய ஸம்ருத்திகள்; விசேஷ ஸம்ருத்தியொன்று உண்டாம்; (அதாவது) தேசமெல்லாம் பரந்த பெரும்புகழைப் பெறுவிக்க வல்லதொரு க்ரந்தரசனை ஏற்படும்; அது ஸாமாந்யர்களின் த்ருஷ்டியாலே குறையாகத் தோன்றினாலும், விசேஷஜ்ஞர்களின் த்ருஷ்டியாலே * ஜநகாநாம் குலே கீர்த்திம் ஆஹர்ஷ்யதி மே ஸுதா* என்னப்பெற்ற பிராட்டி பெற்றதும் பெறுவித்ததுமான கீர்த்தியாகவே விளங்கும்" என்றார்கள். அந்த க்ரந்தமே குலப்ரஷ்ட முகத்வம்ஸமென்பது. தர்சநத்திற்காகக் கண்ணை யிழந்த கூரத்தாழ்வானையும், உயிரையே யிழந்த பெரிய நம்பியையும் போலே இழக்கப் பெற்ற தொன்றில்லையே யென்று குறைபட வேண்டியதாயிற்று. உண்மையில் இந்த ஸம்பவத்தை எம்பெருமான் எதற்காக விளைவித்தானென்பதுபற்றி ஸ்ரீமத் பரமஹம்ஸ.திருமலைதிருப்பதிசின்னஜீயர் ஸ்வாமி யாஸ்தானத்தை யலங்கரித்தருளா நின்றவர் பூர்வாச்ரமத்திலே [ஸ்ரீ உவே. ஸாது ராமாநுஜாசார்ய ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தராய் விளங்கின காலத்திலே] ஸ்ரீ பெரும்பூதூரிலே ஸாதித்தருளின வார்த்தை;—"விளக்கிலே விட்டில்கள் தாமாக வந்து விழுந்து மடிகிறப்போலே உன்னுடைய பலவகை நூல்களிலே தாமாக வந்து விழுந்து சிலர் எதையாவது ப்ரலபித்து, உடனே உன்னுடைய சாச்வத விஜயத்வஜமான ப்ரத்யாக்க்யானங்களைப் பெற்று அதன்பிறகு சிறிதும் கைகாலாட்ட முடியாமல் தணறு



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி.
திருமலை திருப்பதி சின்னகேள்வி ஜீயர்ஸ்வாமி

கிற காலத்திலே எதையாவது பதில் சொல்லிப் பிழைக்கவேணுமே; அப்போது இந்த ஸம்பவத்தை ஒரு ப்ரஹ்மாஸ்த்ரமாக வெடுத்துக் காட்டி இதனுல் தாங்கள் வெற்றிபெற்று விட்டதாகக் கருதுவதற்கு இடமாக எம்பெருமான் செய்து வைத்தது இது" என்று. இதை ஸ்வாமி விநோதமாக ஸாதிக்கிருரென்றிருந் தேன். அது இன்றுவரை அவிச்சின்னமாக அநுபவத்தில் காண்கிறது. வாத ப்ரதிவாத நூல்கள் அவதரிக்கும்போது, ப்ரதிபடர்கள் முதலில் ப்ரதிவாதம் செய்யப்புக்கு வாய்மடிந்தவாறே "இன்ன வருஷத்தில் இன்ன தேதியில் ஜாக்ஸன் துரை யெழுதிய இன்ன நம்பருள்ள ஜட்ஜ்மெண்டைக் காண்க." என்று எழுது வதும், அந்த ஜட்ஜ்மெண்டைப் பிரசுரம் செய்வதுமாய் இதையே தங்களுடைய வெற்றிக்கொடியாக நாட்டிவருகிருர்கள். இந்த ஸம்பவமில்லையானல், க்ராந்திக விஷயங்களில் பிரதிவாதம் செய்து பங்கப்பட்டவர்க ளனைவர்க்கும் மனஸ்ஸமா தான மில்லாமே போகுமே. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் "வரதநஹதிம் வாலித் ரோஹம் மகாகபஸர்ப்பணம்" என்று ஸாதித்த கணக்கிலே தூஷணருசி யுடை யார்க்கு ஆலம்பனமாக இது அமைந்தபடி.

20, 25 ஆண்டுகட்கு முன்பு ஸ்ரீதேசிகஸூக்தி ஸம்ரக்ஷிணி யென்றொரு பத்ரி கையை ஒருவர் மாதந்தோறும் வெளியிடத் தொடங்கி, திருச்சியில் ஸுப்ரஸித்த மஹநீயராக எழுந்தருளி யிருக்கின்றவரும், அடியேனுக்கு ஸுஹ்ருந்மணியுமான ஸ்ரீமத். ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமியை அப்பத்திரிகைக்கு ஸம்பாதகராக நிறுத்தி அவரைக்கொண்டு அடியேனுடைய ஸம்ப்ரதாயார்த்த வாத நூல்களுக்கு பதில் எழுதுவித்துப் பிரசுரம் செய்துவந்தார். அவருடைய பெயர் கீழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸா சாரியரென்பது. அடியேனுடைய நூல்களுக்கெல்லாம் பதில் வெளியிட வேணுமென்றே அப்பத்திரிகையை ஆரம்பித்ததாக அதில் ஸ்பஷ்டமாக வெளியிட்டு வந்தார்கள். அப்போது அடியேன் 'தேசிகஸூக்தி ஜயத்வஜமாலா' என்கிற மாதாந்தப் பத்ரிகையை வெளியிடத் தொடங்கிப் பல வருஷங்கள் பிரசுரித்து வந்தேன். எதிர்த்தலையில் வரும் வாதங்கள் அத்தனையும் அஸாரங்கள்—அஸம்பத்தங்கள் என்பது அதில் உடனுக்குடனே நிரூபிக்கப்பட்டு வந்தது. அவற்றையெல்லாம் ஆழ்ந்து கடாக்ஷித்தருளின அந்த ஏ. வி. கோபாலா சார்யஸ்வாமி முடிவாக அநுதாப பத்ரிகையை வெளியிட்டு விச்ராந்தராஞர். இதைப் பற்றி மேற்பகுதிகளில் விவரிக்கப்படும். ஒன்றுமட்டும் முக்கியமாக அனைவ ருடையவும் அந்தரங்கத்தில் பதிந்திருக்கத் தக்கதுண்டு; (அதாவது) அடியேனை வடகலை வகுப்பினரிடத்தில் க்ஷாத்ரங்கொண்டவனுகச் சிலரோ பலரோ கருதி யிருப்பது மிகத்தவறு. அவர்களின் நூல்களுக்கு மறுப்புக ளெழுதியிருப்பது போலவே தென்கலை வகுப்பிலும் பலருடைய நூல்களுக்கு மறுப்புகள் எழுதி வெளியிட்டே யிருக்கிறேனென்பதை உலகம் உள்ளபடி யுணர்ந்திருக்கின்றது. ஸங்கையில் இரண்டும் ஸமமாகவே யிருக்கும்: "அஸங்கதமாக எழுதுகிறவர்கள்" என்று அடியேன் மனத்தில் பட்டால் அவர்களுடைய அஸங்கதோக்திகளுக்கு பதில் வெளியிட்டே தீருவது அடியேனுடைய இயல்வு. இவ்வளவேயொழிய, வ்யக்தி விசேஷங்களிலாவது மதங்களிலாவது கறுக்கொண்டவனல்லேன். வடகலை வகுப்பினருடைய அன்பையும் ஆதரவையுமே அடியேன் விசேஷித்துப் பெற்றவன். தேசிக திவ்யஸூக்தி ஸாகரத்தில் ஆழவிழிந்து அமுதத்தை அருந்தி அரியபெரிய மணி மாணிக்கங்களை அணிந்து அகமகிழ்பவனும் அடியேனே. இத்தகைய பாக்யமில்லாதவர்கள் எதிரம்பு கோத்து இடர்ப்பட்டு நிற்கிருர்கள்.

நான்கு பகுதிகளாக எழுத மனங்கொண்ட இந்தச் சரிதையில் இவ்வள வோடு முதற்பகுதியை முடிக்கின்றேன். ... ... ...; *

தானேயெழுதிய தன்சரிதையில் முதற்பகுதி முற்றிற்று.

---

ஸ்ரீ:

# தானேயெழுதிய தன்சரிதையில்

## இரண்டாவது பகுதி

திருவல்லிக்கேணியில் வேத வேதாந்தவர்த்திநீஸபை ஏற்பட்டு ஏறக்குறைய எழுபது வருஷமாகிறது. 40வருஷங்களுக்கு முன்வரையில் இந்த ஸபையின் காரியங்கள் வெகு உன்னதமான நிலையில் நடந்துவந்தன. வருஷந்தோறும் ஆவணி மாதத்தில் ஸாமாந்யசாஸ்த்ரங்களிலும் உபயவேதங்களிலும் உபயவேதாந்தங்களிலும் பரீக்ஷைகள்நடத்தி ஸன்மானமளிப்பதென்றுநடந்துவந்தது. வருஷந்தோறும் 50, 60 வித்யார்த்திகளுக்குமேல் பரீக்ஷைக்கு வருவார்கள். ப்ரஸித்தர்களான வித்வான்கள் பரீக்ஷகர்களாக எழுந்தருள்வர்கள். நியாயத்தில் வாக்யார்த்த சர்ச்சைகளும் நடைபெறும். அக்காலத்தில், வானமாமலைபர்யந்தமான தென்னாடுகளிலிருந்தும், மைஸூர் பர்யந்தமான மேல்நாடுகளிலிருந்தும் வித்யார்த்திகள் பரீக்ஷைக்கு வந்து கொண்டேயிருப்பார்கள். அக்காலத்தில் அடியேன் திவ்வியப் பிரபந்தங்களை வியாக்கியானங்களோடும் அதிகரித்து "மூலத்திலும் வியாக்கியானங்களிலும் ஸூர்க்கத்திப் பரீக்ஷை கொடுக்க ஸித்தமாயிருக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டிருந்தவன். ஸூர்க்கத்திப் பரீக்ஷையாவது, 'கத்தியைத் தீட்டி எதிரே வைத்திட்டுப் பரீக்ஷை செய்யுங்கள்; பரீக்ஷையில் தப்பினால் அந்தக் கத்தியினாலே நாக்கை யறுத்திடுங்கள்' என்று சொல்லிப் பரீக்ஷை கொடுப்பது. இத்தகைய பரீக்ஷையை 19-ஆம் பிராயத்தில் அந்த ஸபையில் கொடுக்கச் சென்றேன். மூலத்தில் மட்டுமன்று, வியாக்கியானங்களிலும். அப்போது அந்த ஸபாவித்வான்கள் செய்த பரீக்ஷையில் சிலவற்றை இங்குத் தெரிவிக்கிறேன். [ஸ்ரீமதுபயவேமஹாவித்வான்—திருமழிசை வரதாசார்யர் ஸ்வாமியும் மற்றொரு தமிழ் வித்வானும் எனக்குப் பரீக்ஷகர்கள்.]

(1) நாச்சியார் திருமொழியில் முதற்பதிகத்தில் ஒன்பதாம் பாட்டை [*தொழுது முப்போது முன்னடிவணங்கி யென்கிற செய்யுளை] எழுதிக் காட்டு என்றார்கள். உடனே அவர்களது கருத்தையறிந்த அடியேன் அப்பாட்டின் இரண்டாமடியில் முற்கூற்றைமட்டும் எழுதிக்காட்டினேன்—"பழுதின்றிப் பார்க்கடல் வண்ணனுக்கே" என்று எழுதிக்காட்டினேன். இங்கு புத்தகங்களில் 'பாற்கடல்' என்றே பலரும் பதிப்பித்திருக்கின்றார்கள்; 'பால் - கடல்' என்று கருதி அங்ஙனம் பதிப்பித்தார்கள். அது பூருவாசாரியர்களின் வியாக்கியானத்திற்குச் சேராது: பார் - கடல் [பார் சூழ்ந்த கடல்] என்று ஸ்பஷ்டமாகக் காட்டிப் பெரியவாச்சான் பிள்ளை உரைவகுத்துள்ளார். அதை நான் கவனித்திருக்கிறேனா என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவே அவர்கள் இப்பாட்டை யெழுதிக் காட்டும்படி கட்டளையிட்டார்கள். அதைத் தெரிந்துகொண்ட வடியேன் 'பாட்டை முழுவதும் எழுதுவது எதற்கு? அப்பகுதியைமட்டும் எழுதினால் அவ்வித்துவான்கள் உகப்பர்கள்' என்றறுதியிட்டு அவ்வளவே யெழுதிக் காட்டினேன்.

(2) பெரியாழ்வார் திருமொழியில் (4-9-1) *மரவடியைத் தம்பிக்கு* என்னுஞ் செய்யுளை யெழுதக் கட்டளையிட்டார்கள். அச் செய்யுளில் மூன்றாமடியின் பிற்கூற்றை மட்டும் எழுதிக் காட்டினேன்—'திருமங்கை மலர் கண்ணும்' என்றெழுதிக் காட்டினேன். இங்கும் புத்தகங்களில் "மலர்க்கண்ணும்" என்றே பலரும் பதிப்பித்துள்ளார்கள். மலர்போன்ற கண் என்னும் பொருளில்தான் அங்ஙனே சந்தியாகும்; பூருவர்களின் வியாக்கியானம் அங்ஙனமில்லை; மலர்கின்ற கண் என்

றுள்ளதனால் [உவமைத் தொகையன்றிக்கே வினைத்தொகையாதலால்] 'மலர்கண்' என்று இயல்பாக எழுதினேன். மலர்போன்ற கண் என்கிற பொருள் அங்குப் பொருந்தமாட்டாது. திவ்யப்ரபந்த மூலப்பதிப்புகளிலும் வியாக்கியானப் பதிப்புகளிலும் (மலர்க்கண்) என்றே பதிப்பித்துள்ளார்கள். பரீக்ஷகர்கள் இந்த மருமத்தை யுத்தேசித்தே பரீக்ஷை செய்திருந்தார்கள். இரண்டிலும் அடியேன் எழுதிக் காட்டியவற்றைக் கண்ட பரீக்ஷக வித்வான்கள் "இவனை நாம் பரீக்ஷை செய்து பிழைக்க முடியாது" என்று பேசிக்கொண்டார்கள்.

வாக்குப்பரீக்ஷையில் ஒன்று தெரிவிக்கிறேன்; எம்பெருமானுடைய திருவடிக்குக் கமலத்தை உபமானமாகக் கூறுமிடங்கள் பலவருகின்றன வென்பது தெரிந்ததே; கமலபந்துவை உபமானமாகச் சொல்லியிருக்குமிடத்தைச் சொல்லுவீரோ? என்று கேட்டார்கள். "சொல்லமாட்டேன்" என்றேன். அதன் மருமத்தைப் பரீக்ஷகர்கள் மட்டுமே தெரிந்துகொள்ள முடிந்தது. திருவாய்மொழியில் (8-5 5) "சொல்லமாட்டேனடியேன்" என்கிற பாசுரத்தை அவர்களுடைய கேள்விக்கு உத்தரமாகச் சொன்னேனேயொழிய 'உமது கேள்விக்கு உத்தரம் நான் சொல்லமாட்டேன்' என்னுங் கருத்தில் சொன்னேனல்லேன். அந்தப்பாசுரம்—"சொல்லமாட்டேனடியேன் உன்துளங்கு சோதித் திருப்பாதம், எல்லையில் சீரிளஞாயிறிரண்டுபோல் என்னுள்ளவா" என்பது. இதில் எம்பெருமானுடைய உபயபாதங்களை இளநாயிறிரண்டு போன்றவையாகச் சொல்லியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. நாயிறுதானே கமலபந்து.

இக்கேள்வியை அவர்கள் வேறோர் ஊரில் முன்னமே ஒருவரைக் கேட்டிருந்ததாகத் தெரிவித்து, அபூர்வமான சில கேள்விகளைக் கேட்டார்கள். ஒவ்வொரு கேள்விக்கும் ஆலஸ்யமில்லாமலும் பிறழ்வு இல்லாமலும் விடையிறுத்தேன். அப்படிப்பட்ட பரீக்ஷையைப் பெரும்பாலும் இப்போதும் அடியேன் கற்ற கல்விகளில் கொடுப்பேன்; ஆனால் ஸூர்க்கத்திப் பரீக்ஷைக்கு நிற்கத் துணிவு குறைவு. வயஃப்ரயுக்தமான அயர்வு அவர்ஜநீயமாதலால் ஞாபகசக்திக்குக் குறைவு ஏற்பட ஆரம்பமாய் விட்டது. ஆனாலும் பல பெரியார்களின் மங்களாசாஸன பலம் அமோகமானது. ஸ்ரீரங்கத்திலிருந்து வெளிவரும் தேவஸ்தான பத்ரிகையில் 5-2-56 தேதியன்று வெளிந்த இதழில் கீழ்வரும் வியாஸம் பத்ராதிபரால் பிரசுரம் செய்யப்பட்டிருக்கின்றது;—

"சூர்க் கத்தி பரீக்ஷை: நாலாயிர திவ்ய ப்ரபந்தத்திலும் அதன் வியாக்கியானங்களிலும் கேட்ட இடத்தில் பதில் சொல்லத் தயார்—என்று ஒரு சிறுவர் தம்முடைய 19ம் வயதில் பரீக்ஷையில் தெரிவித்தார். 19க்கு முன்பே 9ம் வயதிலேயே இப்படிச் சொல்லக்கூடிய இந்த தைரியசாலியான வித்வாந் இப்படிச் சொல்ல 19ல் தான் ஸந்தர்ப்பம் வாய்த்தது. கத்தியைத் தீட்டி எதிரே வைக்கிறேன் பிரபந்தம் 4000 பாட்டு அவற்றின் வியாக்கியானம் 40 புஸ்தகம்— இத்தனையிலும் எந்த இடம் கேட்டாலும் தவறாமல் சொல்லுகிறேன். தவறினால் இந்தக் கத்தியால் என் நாக்கை அறுத்திடுங்கள்"—என்று சொல்லி திருவல்லிக்கேணி வேதவேதாந்த வர்த்திநி ஸபையில் கேட்ட கேள்விக்கெல்லாம் பதில் சொல்லி ஜெயித்தார். இந்த பயங்கரர் யார்? பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் தவிர யார் இப்படி செய்ய முடியும்! பிரபந்தம் தவிர வேதத்திலும் சாஸ்திரங்களிலும் கூட இவர் இப்படித்தான்!"

இப்படி பிரசுரம் செய்திருப்பது பத்ராதிபருடைய ப்ரீதிவிசேஷத்தினாலத்தனை.

அந்தத் திருவல்லிக்கேணி ஸபையில் அடியேன் ஒரு வருஷந்தான் சென்று பரீக்ஷை கொடுத்தேன். அடுத்த வருஷங்களிலும் பரீக்ஷைக்குப் போகக் குதூஹலமிருந்தும் பல ஆப்தர்கள் தடுத்து விட்டார்கள். அதன் காரணத்தையும்

சிறிது விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீமத் ஸாரநாதாசாரியர் என்று ஒருவரிருந்தார். அவர் ஸ்ரீபெரும்பூதூர் வித்யாலயத்தில் வாசித்துக் கொண்டிருந்தவர். மஹாமேதாவியாக விளங்கினவர். அவர், மேலேசொன்ன திருவல்லிக்கேணி ஸபையில் ஸ்ரீபாஷ்யம் சதுஸ்ஸூத்ரீபர்யந்தம் பரீக்ஷை கொடுத்து உத்தமஸன்மானம் பெற்று ஊர்சேர்ந்து விரைவிலேயே ஆசாரியன் திருவடியடைந்து விட்டார். அப்போது அவருடைய வயது 25க்குமேல் 30க்குள் இருக்குமென்று நினைவு. அவர் ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமியின் ப்ரதான அந்தேவாஸிகளில் ஒருவர். அவர் இப்போது ஜீவித்திருந்தாராகில் ப்ரசண்ட பண்டித மணியாக விளங்குவர். அவர் பரீக்ஷை கொடுத்துப் பரிசு பெற்றவுடனே பரமபதித்தபடியால் ஆப்தர்கள் அந்தப் பரீக்ஷைக்கு இனி நீ போகவே கூடாதென்று தடுத்தனர். அங்ஙனம் தடுத்தவர்களில் (மாதாமஹ) ஜீயர் ஸ்வாமியே தலைவர். அந்த வருஷத்திற்குப் பிறகு அந்த ஸபையும் நிலைகுலைந்து விட்டது. அப்போது அந்த ஸபையில் பரீக்ஷை கொடுத்தவர்களில் ஸ்ரீ உவே. சேனங்குளம் கந்தாடை ராமாநுஜாசாரியர் ஸ்வாமியொருவரே இப்போது ஜீவித்திருப்பவர்களில் அடியேனுடைய நினைவிலுள்ளார்.

தேவப்பெருமாள் ஸன்னிதியிலிருந்த சடகோப நிலய பாடசாலையில் அவ்விடத்து உபாத்யாயர்கள் சேர்ந்து வித்யோல்லாஸிநியென்று ஒரு ஸபை ஏற்படுத்தி அதன் மூலமாக அடிக்கடி ஸம்ஸ்க்ருத உபந்யாஸங்கள் நடத்தும் வழக்கமிருந்து வந்தது. சென்ற 1908ஆம் வருஷத்திலும் 1909ஆம் வருஷத்திலும் நிகழ்ந்த செய்தியிது. அப்போது காஞ்சியில் ஸம்ஸ்க்ருத பாஷைக்கு பஹுமுகமான ப்ரசாரமிருந்து வந்தது. அக்காலத்தையும் இக்காலத்தையும் ஒத்திட்டுப் பார்க்குமிடத்து "புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம்" என்கிற உத்தரராம சரிதச்லோகமே நினைவுக்கு வருகிறது. அப்போதிருந்த ஸம்ஸ்க்ருத பண்டிதர்களில் ஒருவர்கூட இப்போது இல்லை. அந்த வித்யோல்லாஸிநீ ஸபையின் மூலமாக அடிக்கடி நடந்துவந்த ஸம்ஸ்க்ருதோபந்யாஸங்களில் பலவகைப் பரிசுகள் பெற்றிருந்தேன். பரிசு கொடுக்க அப்போதப்போது பல கனதனவான்கள் கூடுவர்கள். வாரந்தோறும் மூன்று நாட்களில் இரவு எட்டுமணி முதல் பத்துமணி வரையில் அந்தஸதஸ்ஸு நடைபெறும். இதை யுத்தேசித்து வெளியூர்களிலிருந்தும் வித்வான்களும் வித்யார்த்திகளும் வந்து போவதுண்டு. அதையெல்லாம் இப்போது எழுதுவதில் என்ன பயனென்று அடியேனே ஆலோசிப்பதுமுண்டு. வைதவ்யமடைந்தவர்கள் ஸௌமங்கலியாய் வாழ்ந்த காலத்து வாழ்ச்சிகளை நினைப்பதும் பேசுவதுமுண்டே ; அதுவுமொரு தாரகமாகும்.

அந்த வித்யோல்லாஸிநீ ஸபையில் அத்யக்ஷர் ஒருநாள் சில வித்யார்த்திகளுக்கு ஒரு கட்டளையிட்டார் ; (அதாவது) ஸம்ஸ்க்ருதத்தில் மூன்று லேகங்கள் எழுத வேண்டியது ; இரண்டு லேகங்கள் கத்யரூபமாகவும், ஒன்று பத்யரூபமாகவும் இருக்கவேண்டும் ; கத்யரூபமான லேகங்களில் ஒன்று லௌகிகரீதியிலும், மற்றொன்று சாஸ்த்ரீயஸரணியிலும் அமைய வேண்டும் ; பத்யங்களைப் பதினைந்துக்குக் குறையாமல் புகவானைப்பற்றி யெழுத வேண்டியது ; இதற்கு ஒருவாரம் தவணை—என்று நியமித்தார். இந்த நியமனத்தை நிறைவேற்றமுயன்ற அடியேன் லௌகிகரீதியில் எழுதவேண்டிய வசனவியாஸத்திற்காக "பாலகோபதேசமாலிகா" என்று இளமையிலெழுதியிருந்த சுருக்கமான வியாஸத்தை வெகு விரிவாக எழுதினேன். சாஸ்த்ரீய ஸரணியில் எழுத வேண்டிய வியாஸத்தை தர்மார்த்த காம மோக்ஷங்களென்னும் நால்வகைப் புருஷார்த்தங்களில் தர்மமென்கிற முதல் புருஷார்த்தத்தைப்பற்றி "தர்மவாத:" என்னும் பெயரிட்டு எழுதினேன். மூன்றாவதாக, திருப்பள்ளியெழுச்சி யென்னும் திவ்யப்ரபந்தத்தை, பாசுரமொன்றுக்கு இரண்டு ச்லோகங்கள் வீதம் சார்தூலவிக்ரீடித வ்ருத்தத்தில் இருபதுச்லோகங்களாக மொழி

பெயர்த்தேன். அப்போது அடியேனுக்குப் போட்டியாக வேறு எந்த வித்யார்த்தியும் எழுத முன்வரவில்லை. மூன்றே நாட்களில் இவற்றை யெழுதி ஸித்தப்படுத்தி அத்யக்ஷரிடம் ஸமர்ப்பித்தேன். முதற்பகுதியில் (பக்கம் 59 ல்) ப்ரஸ்தாவித்த சாமா திருமலை தாதாசாரியரே அப்போது அத்யக்ஷபதவியிலிருந்தார். அவர் என்னிடத்தில் நல்லெண்ணங்கொண்டவரல்லரென்பது தெரிந்தும் மற்றும்பல பண்டிதர்களின் முன்னிலையில் அவரிடமே கொடுத்து இவற்றை அரங்கேற்ற வேணுமென்றேன். "முன்னம் நான் பார்த்து விட்டு நாளை மறுநாளில் அப்படியே செய்கிறேன்" என்று சொல்லி அவற்றை வாங்கிக் கொண்டார். கொண்டு போய்ப் பூர்த்தியாகப் பார்த்தார். வியப்பும் உகப்பும் என்னால் தாங்க முடியவில்லையென்று வெளியிட்டார். அப்போது பெரியகாஞ்சியில் ஏகாம்ரநாதர் கோவில் தெருவில் பிரபலமாகவொரு ஸம்ஸ்க்ருத பாடசாலை நடந்து கொண்டிருந்தது. அங்குள்ள வித்வான்களுக்கும் வித்யார்த்திகளுக்கும் தெரிவித்து அவர்களையும் வரவழைத்து அவரே முன்னின்று அரங்கேற்றம் நடத்தினார். வைஷம்ய லவ லேசத்தையும் காட்டாமல் உதாரஸ்வபாவத்தையே கொண்டு பலவாறு ப்ரசம்ஸித்தார். சிறந்த ஸன்மானமும் செய்வித்தார். இந்த ப்ரஸ்தாவத்தைச் சுருக்கமாக முடிக்கிறேன் ;

பாம்பேமாநகரில் "கேமராஜஸேட், கங்காவிஷ்ணு" என்னுமிருவரைக் கேள்விப்படாதவர்கள் அனேகமாக இருக்கமாட்டார்கள். இவ்விருவரும் ஸஹோதரர்கள் ; பாம்பேயிலும் கல்யாணியிலும் மிகப்பெரிய அச்சுக்கூடங்களை ஸ்தாபித்து எண்ணிறந்த க்ரந்தங்களை யச்சிட்டு கோடீச்வரர்களாகப் பெற்றவர்களிவர்கள். இவர்களது க்ரந்தாலயம் இற்றைக்கும் பௌத்ரனுடைய நிர்வாஹத்தில் மிகவும் உன்னதமான நிலைமையில் விளங்கிக் கொண்டிருக்கிறது. அந்த ஸேட்டுகளிருவரும் அப்போது ஸ்ரீரங்க யாத்திரையாகப் புறப்பட்டுக் காஞ்சியில் வந்து தங்கியிருந்தனர். மேலே சொன்ன என்னுடைய க்ரந்தங்களின் அரங்கேற்றம் நடந்த ஸமயத்தில் அவர்கள் தேவப்பெருமாளை ஸேவிக்க வந்திருந்தபடியால் ஸன்னிதிக்குள்ளே வஸந்தோத்ஸவ மண்டபத்தில் பெருந்திரள் குழுமியிருப்பதைக் கண்டு அங்கே வந்து உட்கார்ந்தார்கள். அப்போது எனக்கு புஷ்பமாலாலங்கரணம் முதலியன நடப்பதைக்கண்ட அவர்கள் என்ன விசேஷமென்று பக்கத்திலிருப்பவர்களை [ஹிந்தீ பாஷை தெரிந்தவர்களை]க் கேட்டார்கள். அவர்கள் மூலம் விஷயத்தைத் தெரிந்துகொண்டு அந்தமூன்று க்ரந்தங்களும் தேவநாகராக்ஷரத்திலேயே ஒழுங்காக எழுதப்பட்டிருப்பதையுங் கண்டு அவற்றை ஒரு வாரத்திற்குள் தாங்கள் அச்சிட்டனுப்புவதாகச் சொல்லி அப்போதே கையில் வாங்கிக் கொண்டு போய் ஸ்வஸ்தானம் சேர்ந்தவுடனே நாலேநாளில் அச்சிட்டு எனக்கு ப்ரூப்காபி அனுப்பி விட்டார்கள். கொட்டையான எழுத்தில் வெகு ஆச்சரியமாக அச்சிட்டு விட்டார்கள். உத்ஸாஹ மிகுதியினால் இரண்டாயிரம் பிரதிகள் அச்சிட்டார்கள். இது நிகழ்ந்தது 1908ல். நாற்பத்தேழு வருஷங்களுக்கு மேலாகிறது. இதுவரையில் ஆயிரம் பிரதிகளே செலவாகியிருப்பதாகவும், மிச்சம் ஆயிரம் பிரதிகள் க்ரந்தாலயத்தில் கட்டி வைத்திருப்பதாகவும் ஸமீபகாலத்தில் தெரிந்து கொண்டேன். "To கேமராஜ ஸ்ரீக்ருஷ்ணதாஸ், ஸ்ரீவெங்கடேச்வர ப்ரெஸ், பாம்பே 4." என்கிற விலாஸத்திற்கு "பாலகோபதேசமாலிகா தேவை" என்று யார் எழுதினாலும் மூன்றுநாளில் V.P.P. மூலம் புத்தகம் வந்து சேரும். அதில் பாலகோபதேசமாலிகை மட்டும் இல்லை; தர்மவாதம், ஸ்ரீரங்கநாதப்ராபோதிகப்ரபந்த ப்ரதிக்ருதி— என்னும் மற்றையிரண்டு க்ரந்தங்களும் அத்துடன் சேர்ந்தேயிருக்கின்றன. திருப்பள்ளியெழுச்சி மொழிபெயர்ப்பு ச்லோகங்கள் பாட்டொன்றுக்கு இரண்டிரண்டாக அமைத்தவதில் அஸந்துஷ்டியுண்டாகி, பிறகு ஒவ்வொரு பாட்டையும் ஒரே ச்லோகமாகச் செய்து முத்ரணம் செய்வித்திருக்கிறேன். அது இளமைக் கவிதையன்று. 10, 15, வருடங்களுக்குட்பட்டது.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி சின்னகலியன் வானமாமலை ஸ்வாமி தெற்கு ப்ராந்தத்திற்கு மூன்றுவிசை யெழுந்தருளின யாத்திரைகளில் முதல் யாத்திரையில் மட்டுமே காஞ்சிக்கு எழுந்தருளினர்; மற்ற இரண்டு யாத்திரைகளில் ஒருபர்யாயம் சிங்கப்பெருமாள் கோயிலிலும், மற்றொருவிசை திருநின்றவூரிலும் சிலநாள் தங்கியிருந்து அவ்விடங்களிலே அடியேனைப் பரமக்ருபையோடும் நிரதிசய ப்ரீதியோடும் வரவழைத்தருளி விசேஷ அநுக்ரஹங்கள் செய்ய ப்ராப்தமாயிற்று. அப்போது அடியேன் பல துறைகளில் பலநூல்களை யெழுதி யச்சிட்டு வெளியிட்டுக் கொண்டிருக்கிறேன். அவற்றை யெல்லாம் ஒன்றுவிடாமல் ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித்தருள்வதும் திருவுள்ளவுகப்புக்குப் போக்கு வீடாகக் கருணைபரிணும ஸ்ரீமுகங்களை யநுக்ரஹித்தருள்வதுமுண்டு. அப்போது அனேக ஸ்வகீய க்ரந்தங்களின் முத்ரணத்திற்காக ஸ்ரீஸ்வாமி பொருளுதவி புரிந்ததும் அப்ரமேயம் விஜ்ஞாந சிந்தாமணி, மஞ்ஜுபாஷிணி முதலான ஸம்ஸ்க்ருத பத்ரிகைகளையெல்லாம் ஸ்ரீஸ்வாமி வரவழைத்துக் கடாக்ஷித்தருள்வது வழக்கம். ஸம்ஸ்க்ருத சந்திரிகா, மித்ரகோஷ்டி, ஸஹ்ருத வாதிநி என்கிற பெயர்களால் அப்போது ஸம்ஸ்க்ருத பத்ரிகைகள் பல பல நடந்துகொண்டிருந்தன. அக்காலத்தில் அடியேனுடைய வியாஸங்களில்லாத பத்ரிகை காணக்கிடைக்காது. அந்த வியாஸங்களை யெல்லாம் விடாது கடாக்ஷித்தருள்வதனால் ஸ்ரீஸ்வாமிக்கு அடியேனிடத்தில் புத்ரவாத்ஸல்யத்திலும் மிகுந்த வாத்ஸல்யமே



ஸ்ரீமத் பரமஹம்ஸ வானமாமலை
சின்னகலியன் ஜீயர் ஸ்வாமி
வைகுண்டவாஸி

உண்டாயிற்று. அதையெல்லாம் நன்கு அறிந்தவர்கள் வானமாமலையில் இன்றைக்கும் சில வித்வான்களுள்ளார்கள். வர்த்தமானபீடாதிபதியான ஸ்ரீமத் சின்னராமாநுஜ ஸ்வாமி அன்னவர்களில் தலைவர். அப்போது சின்னகலியன் ஸ்வாமி திருவடிவாரத்தில் வித்வத்ஸிம்ஹங்களாகப் பத்தெட்டு ஸ்வாமிகள் விளங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய யோக்யதைகளில் ஏகதேசமும் அடியேனுக்கு இல்லையாயிருக்கச் செய்தேயும், ஸார்வபௌமனுக்கு ஜகந்யவ்யக்தி விசேஷத்திலும் காதல் விளையுங் கணக்கிலே சின்னகலியன் ஸ்வாமிக்கு அடியேன்பாலுண்டான பரமக்ருபையை எடுத்துரைக்கும் சப்தமறிகின்றிலேன். ஆசார்ய ஹ்ருதயத்தில் "காதல் அன்பு வேட்கை அவாவென்னும் ஸங்ககாமாநுராக ஸ்நேஹாத்யவஸ்தா நாமங்கள்" என்று அருளிச் செய்கிற கட்டளையிலே காதலென்பேனோ? அன்பு என்பேனோ? வேட்கை யென்பேனோ? அவாவென்பேனோ? ஒன்றுமறியேன்.

அப்போதைய் ஸம்ஸ்க்ருத பத்ரிகைகளில் அடியேனுடைய கத்யபத்ய ரசனை யெல்லாம் கடாக்ஷித்தருளாநின்ற ஸ்ரீ ஸ்வாமி (சின்ன கலியன் ஸ்வாமி) யாத்திரை யடைவில் திருநின்றவூரில் அடியேனை வரவழைத்து "அண்ணா இந்த ரசநாஸாமர்த்தியத்தை நீர் திவ்ய ப்ரபந்தங்களிலும் ரஹஸ்ய க்ரந்தங்களிலும் உபயோகப்படுத்தினால் வடநாட்டுக்கு மஹோபகாரம் செய்ததாகுமே'' என்று நியமித்தருளினார். 'ஸ்வாமியின் அநுக்ரஹமிருந்தால் அப்படியே யாகிறது' என்று விஜ்ஞாபித்தேன். உடனே ஸ்ரீ ஸ்வாமி, ரஹஸ்யத்தில் ஒரு சூர்ணையையும் திவ்யப்ரபந்தத்தில் இரண்டு பாசுரங்களையும் ஸாதித்து "இவற்றை ச்லோகமாகச் செய்யும, பார்ப்போம்'' என்று நியமித்தருளினார். அடியேனுடையவாழ்க்கையில் இது ப்ரஹ்மானந்த ஸந்தோஹமயமானதொரு ஸம்பவமாகையாலே இதைச் சிறிது விவரித்தெழுத விரும்புகிறேன்.

பதினைந்தாவது பிராயத்திலிருந்தே அடியேன் ஆசார்ய ஹ்ருதயத்தில் ஆழங்காற்பட்டவன். இது ஸ்ரீ ஸ்வாமிக்கும் நன்கு தெரியுமாதலால் அந்த மஹா க்ரந்தத்தில் "போக்ய பாகத்வரை தெளிந்த சந்தைக்கு முன்னில் மூன்றிலும் ப்ரகடம்'' என்றுள்ள சூர்ணையைத் தம்மெதிரிலேயே ச்லோகமாக்கி விண்ணப்பம் செய்ய நியமித்தருளினார். இந்த சூர்ணையின் ப்ரமேயம் இன்னதென்பதைச் சற்று விவரிக்கிறேன். ஆசார்யஹ்ருதயத்தில் மூன்றாம் ப்ரகரணத்தில்*வன் பெருவானக முதலுய்ய*என்கிற சூர்ணை தொடங்கி இருபத்தெட்டு சூர்ணைகளினால் நம்மாழ்வார் திருவாய்மொழியாயிரத்தில் மங்களாசாஸனம் செய்ததிருப்பதிகளில் விளங்கும் திருக்குணங்கள் ஆச்சரியமாக அநுபவிக்கப்படுகின்றன. ஒன்பதாம்பத்தில் இரண்டாம்பதிகமாகிய *பண்டைநாளாலே* என்கிற திருவாய்மொழியில் திருப்புளிங்குடி, வரகுணமங்கை, ஸ்ரீ வைகுண்டம் என்னும் மூன்று திருப்பதிகள் மங்களாசாஸனம் செய்யப்பட்டனவாதலால் அம்மூன்று தலங்களிலும் விளங்கும் திருக்குணத்தை ஒரே சூர்ணையினால் அருளிசசெய்தார் ஆசார்ய ஹ்ருதயகாரர். [அதுதான்*போக்யபாகத்வரை*இத்யாதி.] இதன் கருத்து யாதெனில்; ஒருவனுக்குக் கனத்த பசியிருந்தால் அவன அன்னம் பக்குவமாவதற்கு முன்னே பதற்றத்தினால் அன்னம் பக்குவமாகிற விடத்தருகே வந்து சற்றுப்போது அங்கே படுத்திருப்பதும்; சற்று உட்கார்ந்திருப்பதும், சற்று நின்றுகொண்டே 'ஆச்சா ஆச்சா' என்பதுமாய்த் தவிப்பன். அப்படியே ஆழ்வாராகிற பரமபோக்யமான அன்னத்தை யநுபவிப்பதிலே பெரும்பசியனான எம்பெருமான் (அவர்க்குப்) பரம பக்தியாகிற பாகம் பக்குவமாவதற்கு முன்பு (அவரை) அநுபவித்துப் பசிதீர முடியாமையாலே 'அந்த பரமபக்தி பக்குவமாயிற்றா ஆயிற்றா?'' என்று பதற்றங்கொண்டு திருப்புளிங்குடியிலே சயனிப்பதும், வரகுணமங்கையிலே வீற்றிருப்பதும் ஸ்ரீ வைகுண்டத்திலே நிற்பதுமாகிறான்; இப்படிப்பட்ட த்வராதிசயம் இம்மூன்று திருப்பதிகளிலும் வ்யக்தம்—என்பது இந்த சூர்ணையின் கருத்து. போக்ய—போக்யபூதரான ஆழ்வாருடைய, பாக—பக்தி பரிபாகத்தைப்பற்றிய, த்வரை—எம்பெருமானுடைய பதற்றமானது, தெளிந்த சந்தைக்கு முன்னில் மூன்றிலும்—'தெளிந்த வெண் சிந்தை யகங்கழியாதே'' என்கிற அடிக்கு முன்னடியான*புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று*என்னு மடியில் கூறப்பட்டுள்ள மூன்று திருப்பதிகளிலும், ப்ரகடம்—வ்யக்தம். என்று பதப்பொருள் காண்க. இவ்வளவு பொருளைக் கொண்டிருக்கின்ற சூர்ணையை ச்லோகமாக்கிச் சொல்ல வேணுமென்று நியமனமாயிற்று. உடனே ஒரு காகிதம் வாங்கி ச்லோகத்தை யெழுதித் திருவடிகளில் ஸமர்ப்பித்தேன். அடியேன் எழுதின ஆசார்ய ஹ்ருதய ஸாரத்தின் 1933 ஸ்ரீமுக வருஷத்துப் பதிப்பில் (பக்கம் 150-ல்.)

" இந்த சூர்ணிகையை ஒரு ஸம்ஸ்க்ருத ச்லோகமாக மொழிபெயர்க்க வேணுமென்று ஒருகால் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. வானமாமலை சின்ன

கலியன் ஜீயர்ஸ்வாமி நியமித்தருளினபோது அடியேன் விண்ணப்பம் செய்த ச்லோகம் வருமாறு"

என்று மகுடமிட்டு அந்த ச்லோகத்தை முத்ரணம் செய்திருக்கிறேன்; அதாவது,

भोग्यभूतशठकोपयोगिनो भक्तिपाकविषयां त्वरां हरिः ।
वक्ति सन्निहितमन्दिरत्रये तल्पशाय्युपविशंश्च तस्थिवान् ॥

போக்யபூத சடகோப யோகிநோ பக்திபாக விஷயாம் த்வராம் ஹரிః;
வக்தி ஸந்நிஹித மந்திரத்ரயே தல்பசாய்யுபவிசம்ச்ச தஸ்திவாந்.

என்பதே அந்த ச்லோகம்; இதனை ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித்தருளி, அங்கிருந்த வித்வான்களுக்குத் தாமே வாசித்துக் காட்டியருளி "மூல சூர்ணையின் தாற்பரியத்தை இந்த சுலோகத்தினுல்தான் தெள்ளிதாக அறிந்துகொள்ள முடியும்" என்று ஸாதித்தருளின வார்த்தை.

இந்த சூர்ணையோடுகூட ஆழ்வார் பாசுரங்களிரண்டையும் ச்லோகமாக்கும்படி நியமித்தருளினதாக விஜ்ஞாபித்தேனே, அவற்றுள் முதற்பாசுரம் பெரியாழ்வார் திருமொழி 3—8—4.

"ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான்கொண்டு போனன்
பெருமகளாய்க் குடிவாழ்ந்து பெரும்பிள்ளை பெற்றவசோதை
மருமகளைக் கண்டுகந்து மணாட்டுப்புறம் செய்யுங் கொலோ."

இப்பாசுரத்திற்கு அடியேன் அப்போது விஜ்ஞாபித்த மொழிபெயர்ப்பு ச்லோகத்தையும் 1914-ல் அச்சிட்ட அடியேனது திவ்யார்த்த தீபிகையுரையில் அப்பாட்டின் தீபிகையில் (முதற்பதிப்பின் பக்கம் 244ல்) இரண்டாவது பதிப்பில் பக்கம் 314ல் ஸ்ரீ வானமாமலை ஸ்வாமி நியமனத்தையும் அங்கு ச்லோகத்தின் தலைமேற் பதிப்பித்திருக்கிறேன்.

एकामेव सुतामजीजनमहं त्रैलोक्यपूर्णप्रथां पुष्णामिस्म रमामिव अहरदिमां रक्तान्तनेत्रस्स्वयम् ।
गाम्भीर्याढ्यकुटुम्बिनी जनितसत्पुत्रा यशोदाह्वया दृष्ट्वा हृष्टमनाः स्नुषां, वितनुयाद्वैवाहिकं वा क्रमम् ॥

ஏகாமேவ ஸுதாம் அஜீஜநமஹம் த்ரைலோக்ய பூர்ணப்ரதாம்
புஷ்ணாமி ஸ்ம ரமாமிவ, அஹரதிமாம் ரக்தாந்த நேத்ரஸ் ஸ்வயம்,
காம்பீர்யாட்ய குடும்பிநீ ஜநிதஸத்புத்ரா யசோதாஹ்வயா
த்ருஷ்ட்வா ஹ்ருஷ்டமநாः ஸ்நுஷாம், விதநுயாத் வைவாஹிகம் வா க்ரமம்.

என்பதே அந்த ச்லோகம். ஸ்ரீ ஸ்வாமி நியமித்த மற்றொரு பாசுரமாவது— பெரியாழ்வார் திருமொழியிலேயே 5—3—6.

எருத்துக் கொடியுடையானும் பிரமனு மிந்திரனும், மற்று
மொருத்தரு மிப்பிறவி யென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை
மருத்துவனுய் நின்ற மாமணிவண்ணு மறுபிறவி தவிரத்
திருத்தி*உன்கோயில் கடைப்புகப்பெய் திருமாலிருஞ்சோலை யெந்தாய்.

இப்பாசுரத்திற்கு மொழிபெயர்ப்பாக விஜ்ஞாபித்த ச்லோகம்.

नेशानो वृषभध्वजो न च पुनर्वेधा नचेन्द्रो नचा प्यन्यः कोऽपि जनोऽस्य संसृतिमहारोगस्य वेत्त्यौषधम् ।
स्वामिन् वैद्यमणे मणिप्रभ पुनर्जन्मापनीयाथ मां युष्मन्मन्दिरवासिनं कुरु हरे श्रीकाननाद्रिप्रभो ॥

நேசாநோ வ்ருஷபத்வஜோ நச புநர் வேதா நசேந்த்ரோ நசாப்
யஸ்ய: கோபி ஜநோஸ்ய ஸம்ஸ்ருதி மஹா ரோகஸ்ய வேத்த்யௌஷதம்,
ஸ்வாமிந் வைத்யமணே மணிப்ரப புநர்ஜந்மாபநீயாத மாம்
யுஷ்மந்மந்திர வாஸிநம் குருஹரே ஸ்ரீ காநநாத்ரி ப்ரபோ.

இதுவும் அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையில் முதற்பதிப்பில் (பக்கம் 406 ல்) இரண்டாவது பதிப்பில் பக்கம் 493 ல் முத்ரணம் பெற்றுள்ளது. இவ்விதமான ச்லோக மொழிபெயர்ப்புத் தொண்டை விசேஷமாகச் செய்துவந்தேன். திருவாசிரிய மேழுபாட்டையும் ஏழு தண்டகமாகவும், திருவெழுகூற்றிருக்கையைப் பெரியதொரு தண்டகமாகவும், சிறிய திருமடலையும் பெரிய திருமடலையும் ஆர்யையில் இருநூறு ச்லோகங்களாகவும் மொழிபெயர்த்துள்ளேன். இவை தவிர இன்சுவையே வடிவெடுத்த பலநூறு பாசுரங்களை (ஏறக்குறைய ஆயிரம் பாசுரங்களை) ச்லோகமாக்கியுள்ளேன். இவையெல்லாம் முதலில் க்ரந்த லிபியில் அச்சிடப்பட்டு, பிறகு தேவநாகரலிபியில் விவரணத்தோடுங்கூட அச்சிடப்பட்டு அபேக்ஷகர்களுக்கு அளிக்க ஸித்தமாயிருக்கின்றன.

ஸ்ரீ வானமாமலை ஸ்வாமி ஸன்னிதியிலே யிருந்த ஆஸ்தான வித்வானொருவர் * கலையுங் கரியும் பரிமாவும் * என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தை அதே யிசைநடையில் ஸம்ஸ்கிருத ச்லோகமாக்கிச் சொல்லுவீரா? என்றார். அப்போதே திருநின்றவூரிலேயே; உடனே விண்ணப்பம் செய்துகொண்டேன்;

பெரியதிருமொழி I—5—1.

கலையுங்கரியும் பரிமாவும் திரியுங்கானம் கடந்துபோய்ச்
சிலையுங் கணையுந் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து
மலைகொண்டலை நீரணைகட்டி மதிள் நீரிலங்கை வாளரக்கர்
தலைவன் * தலைபத்தறுத் துகந்தான் சாளக்கிராம மடைநெஞ்சே.

(இப்பாட்டுக்கு மொழிபெயர்ப்பாக இதே யிசைநடையில் விஜ்ஞாபித்த ச்லோகம்)

हरिणैः करिभिस्तुरगैश्च व्याप्तामटवीमतियन् सन् धनुषा विशिखैस्सहायो गतवान् जयदां रणभूमिम् ।
गिरिभिर्जलधौ कृतसेतुः दशवक्त्रशिरांसि दश व्यलुनात् भगवान् स हि यत्र विराजति तं सालग्रामं भज चित्त ॥

ஹரிணை: கரிபிஸ் துரகைச்ச வ்யாப்தா மடவீம் அதியந் ஸந்
தநுஷா விசிகைஸ் ஸஸஹாயோ கதவாந் ஜயதாம் ரணபூமிம்,
கிரிபிர் ஜலதௌ க்ருதஸேது: தசவக்த்ர சிராம்ஸி தச வ்யலுநாத்
பகவாந் ஸஹி யத்ர விராஜதி தம் ஸாலக்ராமம் பஜ சித்த.

இந்த ச்லோகமும் அடியேனுடைய பெரியதிருமொழி ஸம்ஸ்க்ருதா நுவாதத்தில் (ப்ருஹத்ஸூக்தாபரநாமதேய ஸ்ரீ பரகாலஸூரிஸூக்தத்தில்) பக்கம் 24-ல் காண்க.

ரஹஸ்ய க்ரந்தங்களையும் ச்லோக ரூபமாக மொழி பெயர்க்கும்படி ஸ்ரீ ஸ்வாமி நியமித்தருளினதைச் சிரமேற்கொண்டு ஸ்ரீவசநபூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி ஆகிய மூன்று ரஹஸ்யங்களையும் யதாவகாசம் இரண்டொரு மாதங்களில் ச்லோகமாக்கி முடித்தேன். அந்த ஸமயத்தில் ஸ்ரீமத் ஸ்வாமி (சின்ன கலியன் ஸ்வாமி) வடதேச யாத்திரை யெழுந்தருளியிருந்தார். எவ்விடத்தில் எழுந்தருளியிருக்கிறாரோ அவ்விடத்தில் நேரேவிடைகொண்டு இந்த ஸம்ஸ்க்ருதாநுவாதங்களை ஸ்வாமி ஸன்னிதியில் பூர்த்தியாக வாசித்துக் காட்டவேணுமென்கிற குதூஹலமுண்டாயிற்று. அது வரையில் அடியேனுக்கு வடதேச யாத்திரை ப்ராப்தமானதில்லை. பதினாறுவது வயதில் ஹைதராபாத் நகரம் வரையில் சென்று ஸீதாராம் பாக்கில் பத்துமாதம் வஸித்து வந்ததாகக் கீழ்ப்பகுதியில்

(பக்கம் 28-ல்) விஜ்ஞாபித்திருக்கிறேன். அப்போது அதுதவிர வடநாடுகளில் வேறு யாத்திரை நேர்ந்ததில்லை. [இந்தத் தன்சரிதை யெழுதுகிற ஸமயம் வரையில் அடியேனுக்கு பதரிகாச்ரம யாத்திரை மூன்று பர்யாயமும், ஹரித்வார ஹ்ருஷீகேசம் வரையில் யாத்திரை பத்தொன்பது பர்யாயமும் ப்ராப்தமாகியிருக்கிறது. அதைப் பற்றி மேலே விஜ்ஞாபிக்க நேரும்.] வடநாட்டு யாத்திரையிலெழுந்தருளியிருக்கின்ற சின்ன கலியன்ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே ஒரு பயணம் புறப்பட்டேன். அதுதான் அடியேனுடைய முதல் தடவையான வடநாட்டு யாத்திரை. காஞ்சீ ஸமீபத்தில் பாலாற்றங்கரையில் விச்சந்தாங்கல் என்பது ஒரு அக்ரஹாரம். அங்கு ப்ரதிவாதிபயங்கர வம்சஸ்தர்களின் திருமாளிகைகள் மட்டுமேயுள்ளது. அவர்களில் ஒருவரான பிரதிவாதிபயங்கரம் ரங்கஸாமியென்பவரைத் துணையாகக் கூட்டிக் கொண்டு அந்த முதல் யாத்திரை புறப்பட்டேன். அவர் அடியேன் பிறந்த வருஷத்திலேயே அதே மாதத்தில் அனுஷ நக்ஷத்திரத்தில் தோன்றியவர். அவர்க்கும் எனக்கும் ஒருநாள்கூட வ்யவதானமில்லை; ஓரிரவு தான் வ்யவதானம். அவர் இற்றைக்கும் பாங்காகவுள்ளார். பரமஸாதுவும் பரமஸாத்விகருமான அவருடைய ஸஹாயத்தினால் அந்த யாத்திரை ரமணீயமாக நடைபெற்றது.



ஸ்ரீ உவே. விச்சந்தாங்கல் பிரதிவாதிபயங்கரம் ரங்காசாரியர் ஸ்வாமி

அப்போது சின்ன கலியன்ஸ்வாமி பாட்னாவில் தீகாகாட்டென்னுமிடத்தில் பரிஜந பரிவாரங்களோடும் பத்து வித்வான்களோடும் விசேஷச்சிறப்புடன் எழுந்தருளியிருக்கிறார். தீகாகாட் என்னுமிடத்தை நம் தேசத்தவர்கள் பலர் பார்த்திருக்கமாட்டார்களென்று நினைக்கிறேன். தீர்க்ககட்டம் என்பதே 'தீகாகாட்' என வழங்கப்படுகிறது போலும். அங்கே பெருகுகின்ற கங்கை நாலுமைல் அகலமுள்ளது. அந்த கங்கையின் ஸமுத்ரமென்ன வேணுமே யொழிய நதியென்ன முடியாது.

கரையிலேயே தேவேந்திர பவனத்தையும் வென்ற மஹாபவனத்தில் ஸ்ரீஸ்வாமி யெழுந்தருளியிருக்கிறார். அவ்விடம் சென்று சேர்ந்து ஸ்ரீஸ்வாமி திருவடி வாரத்தில் ஒருவாரம் வாழ்ந்தேனங்கு. ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீசின்ன நாராயணை யங்கார் ஸ்வாமியென்பவர் நியாயத்திலும் உபய வேதாந்தங்களிலும் அத்விதீய வித்வானாக இருந்தவர். அந்த ஸ்வாமியும் அப்போது அவ்விடத்தில் ஆஸ்தான வித்வானாக ஸேவை ஸாதிக்கிறார். அந்த ஸமய விசேஷத்தை ஸ்மரிக்கும்போதே அடியேனுடலம் புலகாங்கிதமாகிறது. வாசலில் கங்கையைக் கண்டுகொண்டிருந்தாலும் பசி தோன்றாது. காலை மாலை வேளைகளில் ஸ்ரீஸ்வாமி உபய வேதாந்த ப்ரவசனம் ஆச்சரியமாகச் செய்தருளாநின்றார். அங்கே சாதுர் மாஸ்ய ஸங்கல்பத்திற்கு எழுந்தருளியிருக்கிறபடி. அடியேன் விடைகொண்ட காரியத்தை ஸ்ரீ ஸ்வாமி தெரிந்து கொண்டார். "ஸ்வாமி நியமித்தருளினபடி மூன்று ரஹஸ்ய க்ரந்தங்களையும் ச்லோகரூபேண மொழிபெயர்த்துக் கொண்டு வந்திருக்கிறேன்; பூர்த்தியாகத் திருச்செவி சாத்தியேயாக வேணும்" என்று விஜ்ஞாபித்தேன். அந்த விஜ்ஞாபநமாத்ரத்தினால் ஸ்ரீஸ்வாமிக்குண்டான ஹர்ஷப்ரகர்ஷம் அளவிடவொண்ணாததாயிருந்தது. காலை மாலை காலக்ஷேபத்தையும் நிறுத்தி இதையே வாசித்துக்காட்ட நியமனமாய்விட்டது. அங்குள்ளாரனைவரும் கூடியிருந்து கேட்கவேணுமென்றும் கட்டளை யிட்டருளியாயிற்று. ஏழெட்டு நாள் இவ்வரங்கேற்றமே போது போக்காக நிகழ்கின்றது. அதை வாசிக்கத்தொடங்கும்போது "ஸ்ரீவசநபூஷணத்தில் த்ரிபாத்விபூதி சூர்ணிகை மிகப்பெரிதாயிற்றே; அதன் ச்லோகங்களை முன்னம் வாசியும் கேட்போம்" என்று நியமனமாயிற்று. அடியேனும் உத்ஸாஹத்தோடு வாசிக்கத் தொடங்கினேன் அந்த கெட்டத்தையே;

[இவையெல்லாம் தெலுங்கு லிபியிலும் தேவநாகர லிபியிலும் அச்சாகி, அபேக்ஷையுள்ளவர்கள் தாராளமாகக் கடாக்ஷிக்கக்கூடிய நிலைமையிலிருக்கின்றன; அந்த ச்லோகங்களைமட்டும் இங்குக் குறிக்கிறேன்.]

त्रिपाद्विभूतौ परिपूर्णभोगे संपद्यमानेऽपि ततो नतृप्तः ।
दविष्ठपुत्रे विनिविष्टचेताः पितेव संसारिषु दत्तचित्तः ॥
विच्छेदमेषामसहिष्णुरीश इमान् समाश्लिष्य बुभूषुरेभ्यः ।
दत्त्वेन्द्रियग्रामकलेवरे तद्व्यापारणार्थं च वितीर्य शक्तिम् ।
प्रत्यक्षभावे शपथेन रोद्धुं शक्ता अमी इत्यथ सन् परोक्षः ।
शिशुं स्वपन्तं परिरभ्य पृष्ठे यथा हि शेते जननी तथाऽसौ ।
स्वज्ञातसंबन्धत एव चित्ते संश्लिष्य तान् बद्धजनान् अमुञ्चन् ।
अथानुभूतेरपि चानुवृत्तिर्युक्तेति मत्वा धृतजीवसत्तः ।
एतेष्वसत्कर्मकृतिप्रवृत्तेष्विमानरुन्धन्ननुमन्यमानः ।
तिष्ठन्नुदासीनवदेव, धौर्त्यान्निवर्तनेच्छुस्समयप्रतीक्षी ।
सत्कर्मसंज्ञार्हमसच्चरित्रं यत्किञ्चिदप्येष नवीक्षमाणः ।

"த்ரிபாத்விபூதியிலே பரிபூர்ணாநுபவம் நடவா நிற்க, அது உண்டுடுருக்காட்டாதே, தேசாந்தரகதனான புத்ரன் பக்கலிலே பித்ருஹ்ருதயம் கிடக்குமாபோலே, ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய் இவர்களைப் பிரிந்தாற்றமாட்டாதே, இவர்களோடே கலந்து பரிமாறுகைக்குகரணகளேபரங்களைக் கொடுத்து, அவற்றைக்கொண்டு வ்யாபரிக்கைக்கீடான சக்தி விசேஷங்களையும் கொடுத்து, கண்காண நிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி, உறங்குகிற ப்ரஜையைத் தாய் முதுகிலே யணைத்துக்கொண்டு கிடக்குமாபோலே, தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக விடமாட்டாதே, அகவாயிலே அணைத்துக்கொண்டு, ஆட்சியில் தொடர்ச்சி நன்றென்று விடாதே ஸத்தையை நோக்கியுடன் கேடனாய், இவர்கள் அஸத்கர்மங்களிலே ப்ரவர்த்திக்கும்போது மீட்கமாட்டாதே, அநுமதி தானத்தைப்பண்ணி உதாஸீநரைப்போலே யிருந்து மீட்கைக்கிடம்

व्यर्थे गते फालपरीक्षणेऽपि निराशदुःखीव सबाष्पनेत्रः ।
व्याजं मनाग्जातुचिदीक्षमाणः संतोषसीम्नि स्थितिमान् हरिस्सः ।
मदीयधामाभ्यदधाः किल त्वं मदीयनामाभ्यदधाः किल त्वम् ।
मद्भक्तरक्षामकरोः किल त्वं तत्तापशान्तिं व्यदधाः किल त्वम् ।
छायाममीषामददाः किल त्वम् इत्यादिरीत्या सुकृतावभासान् ।
यथा मृषैवाम्रशलाटुचोरत्वारोपणं तद्वदिहाधिरोप्य ।
सौवर्णिको हेम निघृष्य शाणे ततो मधूच्छिष्टत आददानः ।
एतावदासीन्ननु तावदासीदित्येवमुद्वेल्यते यथैव ।
तथा ह्यसौ जन्मपरम्परासु यादृच्छिकादीन् सुकृतप्रभेदान् ।
स्वेनैव संकल्प्य ततश्च तेषां भूयस्तया वर्धनमादधाति ॥

பார்த்து, நன்மையென்று பேரிடலாவதொரு தீமையும் காணாதே நெற்றியைக் கொத்திப்பார்த்தால் ஒரு வழியாலும் பசைகாணாதொழிந்தால் அப்ராப்யமென்று கண்ண நீரோடே மீளுவது, தனக்கேற இடம்பெற்ற வளவிலே, 'என்னூரைச் சொன்னாய், என் பேரைச் சொன்னாய், என்னடியாரை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்றாப்போலே சிலவற்றை யேறிட்டு, மடிமாங்காயிட்டு, பொன்வாணியன் பொன்னை உரை கல்லிலே யுரைத்து மெழுகாலே யெடுத்துக் கால்கழஞ்சென்று திரட்டுமாபோலே ஜந்ம பரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே யவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்."

இவையே த்ரிபாத்விபூதி சூர்ணையின் மொழிபெயர்ப்பு ச்லோகங்கள். ஸ்ரீஸ்வாமி ஸபரிவாரராய் மூன்று நூல்களையும் ஒரு வாரம் திருச்செவி சாத்தியருளித் திருவுள்ளம் போரவுகந்தருளினார். உகப்பின் பரீவாஹமாக நடந்த ஸன்மானமென்ன? என்று பலர்க்கு ஜிஜ்ஞாஸிதமாகும். ஸ்ரீராமாயணத்தில் பெருமாள் திருவடிக்கு ஸர்வஸ்வதானமொன்று செய்தருளினதாகச் சொல்லப்படுவதை அனைவருமறிவர். அதனிலும் மேம்பட்ட தானம் கிடைக்குமிடத்து வேறுவகையான தானங்களைத் தெரிவிப்பது வேண்டாவென்று விடப்படுகிறது. அங்கு ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் நடந்த ஸல்லாபங்களில் இரண்டு விஷயம் என்றும் மறக்க முடியாதபடி நிச்சலும் நினைவிலிருக்கின்றன; அவற்றை மட்டும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன்.

(1) 'அண்ணா! நீர் வரும்போது ஸிம்ஹாசலம் ஸேவித்தீரா?' என்று ஸ்வாமி கேட்டருளினார். 'முதலில் ஸிம்ஹாசலம் ஸேவித்துவிட்டே ஸ்ரீஜகன்னாதம் விடைகொண்டேன்' என்று விஜ்ஞாபித்தேன். 'ஸிம்ஹாசல மார்க்கம் எப்படியிருக்கிறது?' என்று கேட்டருளினார். 'கேட்கவேணுமா? அர்ச்சிராதிமார்க்கம்போலிருக்கிறது' என்று விஜ்ஞாபித்தேன். அதைக் கேட்டதும் ஸ்ரீஸ்வாமிக்கு ஒரு விஸ்மயமுண்டாயிற்று. ஸ்வாமி தாம் ஸிம்ஹாசல ஸோபாநமார்க்க மேறியருளும்போது 'நாம் ப்ரத்யக்ஷமாகக் காணும் அர்ச்சிராதி மார்க்கம் இதுவே' என்று ஸாதித்துக்கொண்டே யெழுந்தருளினாராம். அது அடியேனுக்குத் தெரிய ப்ரஸக்தியில்லை. உண்மையில் அது அடியேனுக்குத் தெரியாது. அடியேனும் 'அர்ச்சிராதி மார்க்கம் போன்றிருந்தது' என்று விஜ்ஞாபித்தது ஸ்ரீஸ்வாமிக்கு அநிர்வசநீயமான ஹர்ஷப்ரகர்ஷத்திற்கு உடலாகி "அர்ச்சிராதி மார்க்க ஸத்பாவத்திலும் அதன் பரமபோக்யதையிலும் ஸந்தேஹகந்தமுமில்லை" என்று ஸ்வகீயர்களை நோக்கி ஸாதிக்கும்படியாயிருந்தது.

(2) ஸ்ரீஸ்வாமி தெலுங்கு தேசங்களில் எழுந்தருளும்போது 'பர்லாக்கிமிடி' என்கிற ஸம்ஸ்தானத்திற்கு எழுந்தருளி ஒரு தர்மசாலையில் தங்கியிருக்கையில் பக்தவர்க்கங்கள் விசேஷமாக உபஹாரங்களை யெடுத்துக்கொண்டு ஸ்வாமியை ஸேவிக்க வந்து ஸ்வாமியைக் காணாமல் 'ஸ்வாமுலவாரு எக்கடா?" என்று கேட்க "கொஞ்ச சேபு உண்டண்டி; ஸ்வாமுலவாரு அல்பசங்ககு வேஞ்சேஸி

யுந்நாரு; இதோ வஸ்தாரு" என்று சிலர் சொன்னார்களாம்; அது கேட்ட அவர்கள் "ஸ்வாமுலவாரு கூடா அல்பசங்ககு வேஞ்சேஸ்தாரு !!!" என்று சொல்லிக் கொண்டே போய்விட்டார்களாம்; அவர்கள் மறுபடியும் வரவேயில்லையாம். ஜீயங்காரென்றால் பரமபதத்திலிருந்து நேராக வந்த நித்யஸூரிகளென்று அவர்களுடைய அத்யவஸாயம். ஸ்வாமி அல்பசங்கைக்குப் போயிருக்கிறாரென்று சொல்லவே 'ஸ்வாமியும் நம்மைப்போலவே ஒரு மநுஷ்யர்போலிருக்கிறது' என்றெண்ணிப் போய்விட்டார்கள். இவர்களுடைய மூடபக்தியை நாம் மெச்சவேண்டியிருக்கிறது—என்று ஸாதித்தபடி. அப்போது ஸ்ரீஸ்வாமியை விச்லேஷிக்கவே முடியாமலிருந்தது. ஆயினும் விச்லேஷித்தே தீரவேண்டியதாயிற்று. இரண்டு மாதம் யாத்திரை செய்து ஹ்ருஷீகேசம் வரையிற் சென்று ஸ்வஸ்தானம் திரும்பி வந்து சேர்ந்தேன். அந்த முதல் யாத்திரையில் ஒவ்வோரிடத்திலும் பல மஹான்களின் அன்பையும் ஆதரவையும் பெற நேர்ந்தது.

## கூரத்தில் நிகழ்ந்ததொரு நிகழ்ச்சி

காஞ்சீபுரியில் ஸ்ரீமத் அய்யாக்ருஷ்ணஸாமி தாதாசார்யரென்பவரைப் பலருமறிவர். அவர் ஸம்ப்ரதாய நிஷ்ணாதர். அவர் ஒரு ஸமயம் கூரத்தாழ்வான் திருநக்ஷத்திரோத்ஸவம் ஸேவிக்க கூரம் சென்றிருந்தார். அங்கே பல ப்ரகரணங்களில் அநுஸந்திக்கிற தனியன் ஒன்றுண்டு; அதாவது, "अर्वाञ्चो यत्पदसरसिजद्वंद्वमाश्रित्य पूर्वे मूर्ध्ना यस्यान्वयमुपगता देशिका मुक्तिमापुः । सोऽयं रामानुजमुनिरपि स्वीयमुक्तिं करस्थां यत्संबन्धादमनुत कथं वर्ण्यते कूरनाथः ॥" [அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வமாச்ரித்ய பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபுஃ, ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாதமநுத கதம் வர்ண்யதே கூரநாதஃ.] என்பது; இது பட்டர் அருளிச்செய்ததாக ஸுப்ரஸித்தம். இதில், எம்பெருமானாருடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசாரியர்கள் உஜ்ஜீவித்ததாகவும் பிற்பட்ட ஆசார்யர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினால் உஜ்ஜீவித்துக் கொண்டிருப்பதாகவும் கூறப்பட்டிருக்கிறது. இதைக்கேட்ட அய்யாதாதாசாரியர் "இதெல்லாம் தப்பான ஐதிஹ்யத்தைக் கொண்டு கல்பிக்கப்படுகிற ச்லோகம்; பிற்பட்டவர்களுக்கு ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது பொருந்தும்; முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமுண்டாயிற்றென்றால் இது அநந்விதமான வார்த்தையல்லவா? இது எப்படி பொருந்தும்? ஸ்ரீமந்நாதமுனிகள் உய்யக்கொண்டார் மணக்கால்நம்பி போல்வார்தானே ஸ்வாமிக்கு முற்பட்டவர்கள்; அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச் சேர்ந்தவர்களன்றோ; அவர்களது காலத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு. இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான வார்த்தை" என்று உபந்யஸித்து அங்குள்ள யதாச்ருதக்ராஹிகளான ஸ்ரீவைஷ்ணவர்களின் மனத்தை அதிமாத்ரம் குழப்பி விட்டார். இச்செய்தி அடியேனுக்குத் தெரியவந்து உடனே அன்றிரவு மஹோத்ஸவத்திற்கு அங்கே சென்று அந்த அய்யா க்ருஷ்ண தாதாசார்யருக்கு வெகு தத்துவங்களையுணர்த்தினேன். அதைச் சிறிது விவரிக்கிறேன்;—

தேசிகன் ந்யாய பரிசுத்தியின் தொடக்கத்தில் எம்பெருமானாரைப் பற்றிப் பணித்த மங்கள ச்லோகத்தில்—"पत्युस्संयमिनां प्रणम्य चरणौ तत्पादकोटीरयोः संबन्धेन समिध्यमानविभवान् धन्यांस्तथाऽन्यान् गुरून्" [பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்

பாதகோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்யமாநவிபவாந் தந்யாந் ததாந்யாந் குரூந்] என்றுள்ளது. இதன் பொருளாவது, ஸம்யமிநாம் பத்யு: சரணௌ ப்ரணம்ய—; தத்பாதகோடீரயோ: ஸம்பந்தேந—அந்த எம்பெருமானுருடைய திருவடியென்ன திருமுடியென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினுல், ஸமித்யமாநவிபவாந்—பெருமைபெற்றவர்களாய், தந்யாந்—க்ருதார்த்தர்களான, குரூந் ப்ரணம்ய—ஆசாரியர்களை வணங்கியும்......ந்யாயபரிசுத்தி யென்கிற இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது என்கை. இதில் "தத் பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந" என்றது உயிரான வார்த்தை. கோடீரமென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் போல முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம் உத்தாரகமென்று இதனுல் நன்கு காட்டப்பட்டதாயிற்று. இந்த ச்லோகமானது "அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய" என்கிற ஆழ்வான் தனியனையடியொற்றியே தேசிகன் பணித்தது. * यश्चोभयोस्समो दोषः परिहारोऽपि वा समः * [யச்சோபயோஸ் ஸமோ தோஷः பரிஹாரோபி வா ஸமः] இத்யாதி. என்று பரக்கவுபந்யஸித்தேன். அவர் இவை முழுவதும் கேட்டு இதற்குமேல் ஒன்றும் சொல்ல வழியில்லாமையாலே 'இப்படியன்றே விஷயஞ் சொல்லவேணும்' என்று கொண்டாடி விட்டு அப்போது ஸாரமாகவும் ரஸமாகவும் சில வார்த்தை சொன்னுர்; "ஒரு க்ஷணத்தில் தேசிகனுடைய ஸ்ரீஸூக்தியைக் கொண்டே என்னை வாய்மாளப் பண்ணின ஏற்றம் இந்த அண்ணுஸ்வாமி யொருவர்க்குத்தான் ஏற்கும். மற்ற பேர்கள் ஏதாவது கதை சொல்லிக்கொண்டிருப்பார்களே யொழிய இப்படி ச்ருங்கக்ராஹிகயா ப்ரமாணமெடுத்துக்காட்ட, அதிலும் தேசிக ஸூக்தியையே யெடுத்துக்காட்ட சக்தரல்லர். எங்களுடையவர்கள் எதையும் ஆழ்ந்து பாராமல் "वितथैतिह्यसहस्रवर्णनेन" [விததைதிஹ்யஸஹஸ்ரவர்ணநேந] என்று உபாலம்பம் செய்து போனுர்கள். வாயெடுத்ததற்கெல்லாம் பின்புள்ளாரான எங்கடவர்கள் அதையே சொல்லிவருகிருர்கள். நானும் தப்பான ஐதிஹ்யமென்றே கருதிப் பல பேசிவிட்டேன், ஆழ்வானே க்ஷமித்தருள வேணும்" என்று.

அப்போது அடியேன் மேலே காட்டின ந்யாய பரிசுத்தி ஸூக்திக்கு அநுபந்தமாகவே பல விஷயங்களை உபந்யஸித்தேன். அவையெல்லாம் என் க்ரந்தங்களில் ஏறியேயிருக்கின்றன. சிலவற்றையிங்கெடுத்துரைக்கின்றேன். சாஸ்த்ரங்களில் உத்தமபுருஷர்களின் ப்ரபாவங்களைச் சொல்லுமிடத்து "दश पूर्वान् दशापरान्....पुनाति" [தச பூர்வாந் தசாபராந் புநாதி] என்றும் "सप्त सप्त च सप्त च" [ஸப்த ஸப்தச ஸப்தச] என்றும் சொல்லப்பட்டிருப்பது ப்ரஸித்தம். "परिवर्तिनि संसारे मृतः को वा न जायते। स जातो येन जातेन याति वंशः समुन्नतिम्॥" [பரிவர்த்திநி ஸம்ஸாரே ம்ருதः கோ வா ந ஜாயதே, ஸ ஜாதோ யேந ஜாதேந யாதி வம்சஸ் ஸமுந்நதிம்] என்ற கணக்கிலே ஒரு வம்சத்தில் ஒரு மஹநீய புருஷன் தோன்றினுல் அவரது பெருமேன்மையினுல் முன்னேபலதலைமுறையாரும் பின்னே பலதலைமுறையாரும் வாழ்ச்சிபெறுவதாகச் சொல்லப்படுகிறது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் *செடியார் நோய்களெல்லாம் துறந்து எமர் கீழ்மேலெழுபிறப்பும் விடியா வெந்நரகத்து என்றுஞ் சேர்தல் மாறினரே* என்றும் *கேசவன்தமர் கீழ் மேலெமரேழெழு பிறப்பும் மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா* என்று மருளிச் செய்தார். இவற்றால், முற்பட்டவர்களையும் ஸத்கதிபெறுவிக்கும் பெருமை பிற்பட்டவர்களுக்கு [மஹாகுலதிலகபூதர்களான சில விசிஷ்டவ்யக்திகளுக்கு] விளைகின்றதென்பது சாஸ்த்ர ஸம்மதமான விஷயம். முற்பட்டவர்களை ஸத்கதி பெறுவிப்பதென்னும் விஷயம் நிற்க. பிற்பட்டவர்களுக்கு ஸ்வஸம்பந்தத்தினுல் ஸத்கதி பெறுவிக்கும் பெருமை ஸ்வாமி எம்பெருமானுர்க்கு அஸாதாரணமென்பது நிர்விவாதமான விஷயம்.

இப்பெருமை ஸ்வாமிக்கு ஸ்ரீரங்கநாதனுடைய வரப்ரஸாதமடியாகவும் கிடைத்ததென்பது வேதாந்த தேசிகனாலேயே ஸ்பஷ்டமாக விளக்கப்பட்டிருக்கின்றது. ந்யாஸதிலகத்தில் "श्रुत्वा वरं तदनुबन्धमदावलिप्ते" [ச்ருத்வா வரம் ததநுபந்தமதாவலிப்தே] என்ற ஸூக்தியானது ஒருவராலும் கண்ணழிக்க முடியாமல் விளங்குகின்றது. இதில் ஒவ்வொரு பதமும் உயிரானது. ச்ருத்வா என்பது முதற்பதம். இவ்விஷயம் கர்ணபரம்பரையினால் தமக்கு எட்டியதாகக் காட்டினபடி. வரம் என்பது இரண்டாவது பதம். வேதத்தில் वरं वृणे [வரம் வ்ருணே] என்றும் वरं वृणामहै [வரம் வ்ருணாமஹை] என்றும் பலபல விடங்களில் வருகிறது. அவரவர்கள் தாமே ஏதோ வரம் கேட்டுப்பெற்றதாக இதிஹாஸம் வருகிறது. वरं वृणीष्व [வரம் வ்ருணீஷ்வ] என்று வரத்தை வேண்டிக் கொள்ளும்படியாகச் சொல்லி பிறகு வேண்டிக்கொண்ட வரத்தைக் கொடுத்ததாகவும் வேதங்களில் பலபல உபாக்கியானங்கள் உள்ளன. இங்கு அப்படியன்றிக்கே ஸ்ரீரங்கநாதன் தானே ஸ்வாமிக்கு ஒரு வரம் கொடுத்தருளினதாகச் சொல்லப்படுகிறது. வரப்ரஸாதமென்று சொல்லிவிட்டால் அதில் ஒருவரும் ஒருவிதமான ஆக்ஷேபமும் செய்யக்கூடாது, செய்யமாட்டார்கள்—என்பது ஸம்ப்ரதிபந்நம். அப்படியே இங்கும் ஒருவரும் ஒருவகையான ஆக்ஷேபமும் செய்யக் கூடாதென்று காட்டவே "ச்ருத்வா வரம்" என்றார் தேசிகன். இந்த வரம் எப்படிப்பட்டதென்னில் அதை நமக்கு வியாக்கியானங்கள் விளக்கித் தருகின்றன. திருக்குமாரரான நயினாசார்யரும் கௌசிக ஸ்ரீபாஷ்ய ஸ்ரீநிவாஸாசார்யருமாகிய இருவர் ந்யாஸதிலகத்திற்கு வடமொழியில் வியாக்கியானமியற்றியுள்ளார்கள். இதை ஐம்பது வருஷங்களுக்கு முன்பு திருக்குடந்தையில் தேசிகஸம்ப்ரதாய விவர்த்திநீஸபையார் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள்; அதில் நயினாசார்யருடைய வியாக்கியானத்தில்—

"न केवलमसदाचार्याभिमानमात्रेण दृप्यामः ; अपितु परमगुरोर्भगवद्रामानुजाचार्यस्य भ(ग)वता दत्तं वरमपि श्रुत्वा तत्संबन्धादपि" என்றுள்ளது. அதற்கடுத்த வியாக்கியானத்தில்—"वरदानं कीदृशमिति चेदित्थम् ; भो यतीन्द्र ! त्वया वेदान्तशास्त्रार्थप्रतिष्ठापनाद्धेतोः माम् अविकलं प्रपन्नस्य तव अभिमाने सिद्धान्ते च साक्षात् परम्परया वा येये अन्तर्भूताः ते सर्वेऽपि देहावसान एव त्वत्सम्बन्धिसंबन्धात् मोक्षं यान्त्विति आप्तपरम्पराश्रावितम्" என்றுள்ளது. இதைச் சிலர் தங்களுடைய ஆசாரணைக்கு விரோதமானதென்று நினைத்து இதில் பலவகையான சோத்யங்கள் செய்கிறார்கள். ஒன்றும் ஈஷத்தும் விலை செல்லாது. இதற்கு வியாக்கியானமே வேண்டா. வரம் எப்படிப்பட்டதென்பதை ந்யாஸதிலகவக்தாவானவர் தாமே மூலத்திலேயே ஸ்பஷ்டமாகக் காட்டியிருக்கிறார். "ததநுபந்த மதாவலிப்தே" என்று சொல்லியிருக்கையாலே எம்பெருமானாருடைய அநுபந்திகளுக்கும் மோக்ஷமுண்டென்பது வரசரீரத்தில் அடங்கியிருப்பதாக நன்கு புலனாகின்றதன்றோ. இல்லையேல் இங்கு (வரம்ச்ருத்வா) என்றவுடனே (ததநுபந்தமதாவலிப்தே) என்றது பொருளற்றதாகுமே. எம்பெருமானாருடைய அநுபந்தங்கொண்டு தாம் செருக்கடைந்திருப்பதாகவன்றோ சொல்லுகிறார். ச்ருதமான வரத்திற்கும் இதற்கும் ஸம்பந்தமில்லையாகில் இது ஜாரத்கவாதி வாக்யார்த்தம் போலாகுமத்தனையன்றோ.

அன்றியும் *அஸ்து தே ; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே* என்ற சரணாகதிகத்ய ஸ்ரீஸூக்தியின் ச்ருதப்ரகாசிகையில் "संबन्धिनिस्तरणमपि सर्वशब्दाभिप्रेतम्" [ஸம்பந்திநிஸ்தரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம்] என்றிருப்பது அழிக்கவும் மாற்றவுமொண்ணாதாதலால் அந்த ஸ்ரீஸூக்தியும் வரப்ரகாரத்தை விசதீகரித்துக் காட்டுகிறதன்றோ. எம்பெருமானை 'இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹமுடைய

வன்'' என்கிறார்கள். அந்த க்ருபாப்ரவாஹம் பெருகப்புக்கால் 'அது இவ்வளவு தான் செல்லும், அவ்வளவு செல்லாது' என்றொரு நியந்த்ரணம் பண்ண வல்லாருண்டோ? 'ஒருவனுக்கு நிதி கிடைத்தது; அதிலுள்ளதெல்லாம் நவரத்னமே' என்று ஒருவர் சொன்னால் இதில் பிறர் அஸூயைப்படலாமேயல்லது 'இது எப்படி ஸம்பாவிதம்? அந்த நிதியில் பத்தெட்டுக்காசுகள் இருக்கலாம்; நவரத்னங்களே நிரம்பியிருக்குமோ?'' என்று சிலர் க்ஷேபிக்க இடமுண்டோ? இப்படி க்ஷேபிப்பவர்கள் பரிஹாஸ்யராவர்களத்தனை. ஸ்வாமி ராமானுஜர்க்கு இப்படிப் பட்ட வரம்பெறுகையாகிற ஒப்புயர்வற்ற ப்ரபாவமுண்டாயிற்றென்கிறவிதை ப்ராமாணிகர்கள் எழுதி வைத்தால் இதை க்ஷேபிக்க அதிகாரிகள் யார்?

தேசிகன் ஸாதித்த ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதிகாரி விபாகாதிகாரத்தில்—"ஒரு மலையில் நின்றும் ஒரு மலையிலே தாவும் ஸிம்ஹ சரீரத்தில் ஜந்துக்களைப் போலே பாஷ்யகாரர் ஸம்ஸாராதிலங்கனம் பண்ண அவரோடுண்டான குடல் துவக்காலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டானருளிச்செய்த பாசுரம்'' என்றுள்ளது. இந்த ஸிம்ஹத்ருஷ்டாந்தத்தை விமர்சிக்க வேணும். ஸிம்ஹத்தின் உடலிலே ஒரு ஜந்து இருந்தால் அது மலையைத் தாவுதற்குத் தானாகவொரு முயற்சி செய்ய வேண்டாம்; ஸிம்ஹ சரீரத்தில் ஒட்டிக்கொண்டு கிடக்கை மாத்திரமே அதற்குப் போதும் என்பது இங்கே ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டுள்ளது. இதுபோல உடையவருடைய திருமேனியின்மேல் ஆண்டான் போல்வார் ஏறியிருக்க வேணுமென்பது விவக்ஷிதமன்றே. அது ஸம்பாவிதமுமன்றே. ஏதேனுமொருபடி தத்ஸம்பந்தமிருந்தால் அவ்வளவே கொண்டு ஸம்ஸாராதிலங்கனம் பண்ணிப் பேறு பெறலாமென்பதே நிஷ்கர்ஷமாகிறது. முதலியாண்டான் உடையவருடைய திருமேனி ஸம்பந்தமத்தனையே தாம் உத்தீர்ணராகைக்குப் போதும் என்றருளிச் செய்தார். அவர் உடையவரோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமுள்ளவராகையாலே அவர் சொல்ல வேண்டியது அவ்வளவேயாயிற்று. ஸாக்ஷாத் ஸம்பந்தமற்றவர்களாய் மிகவும் பிற்பட்டிருக்கு மவர்களான தேசிகாதிகளுக்கும் அஸ்மதாதிகளுக்கும் பேறு தப்பாதென்று மார்பிலே கைவைத்து உறங்கப் பாங்காக "புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:'' என்பதையும் "ச்ருத்வா வரம் ததநுபந்தமதாவலிப்தே'' என்பதையும் தேசிகன் எழுதி வைத்தாராயிற்று. ஆக இவ்வளவும் அன்று கூரத்தில் அய்யாக்ருஷ்ணதாதாசாரியருக்காக விரிவாக உபந்யஸிக்க நேர்ந்தது. அவரும கேட்டு உகந்தார்.

## கைவல்யமோக்ஷ விசாரத்தில் அடியேன் ஸாரமாகத் தெரிவித்தது

திருப்பதியில் வித்வத் ஸிம்ஹமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி, கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி, மைஸூர் கஸ்தூரி ரங்காசார்ய ஸ்வாமி முதலான சில மஹாபண்டிதர்கள் அக்காலத்தில் கைவல்ய விஷய விசாரத்தில் பிரபலமாக க்ரந்தரசனைகள் செய்து கொண்டிருந்தார்கள்; கார்யாதிகரணவாதம், கார்யாதிகரணதத்வம், கார்யாதிகரணாச்வாஸம் என்றிப்படி சில விவாத க்ரந்தங்கள் அப்போது அவதரித்துக் கொண்டிருந்தன. இவ்விஷயத்தில் அடியேனைச் சிலர் கேட்டார்கள்; "கைவல்யவிஷயத்தில் இவ்வளவு விரிவாக விவாதங்களை வித்வான்கள் வளர்த்திக் கொண்டிருக்கிறார்களே; இதன் தத்துவத்தை ஸாமான்யர்களும் புரிந்து கொள்ளும்படி தெரிவிக்க முடியுமோ?'' என்று; அதற்கு அடியேன் அப்போது ஸாரமாகத் தெரிவித்த விஷயங்கள் இவை;—(அப்போதே அச்சானது.)

கைவல்ய விஷயம் ஸ்ரீபாஷ்யத்தில் ஒருவிதமாகவும் கீதாபாஷ்யத்தில் மற்றொருவிதமாகவும் இருப்பதாக தேசிகனுடைய திருவுள்ளம். ஸ்ரீபாஷ்யத்தில் "अप्रतीकालम्बनान्नयतीति बादरायणः...." என்ற ஸூத்ரவிவரணத்தில் "पञ्चाग्निविदोऽपि

अर्चिरादिना गतस्य ब्रह्मप्राप्त्यपुनरावृत्तिश्रवणाच्च ; अत एव तत्क्रतुन्यायात् प्रकृतिविनिर्मुक्तब्रह्मात्मकात्मानुसंधानं सिद्धम् " என்றருளிச் செய்திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்ம ப்ராப்திரூபமான பலன் ஸ்ரீபாஷ்யஸம்மதமாகத் தேறுகின்றது. கீதாபாஷ்யத்திலோ வென்னில், பஞ்சாக்நிவித்யாநிஷ்டனை கேவலனுக்கு ब्रह्मात्मकप्रकृतिवियुक्तात्मस्वरूपोपासनम्, प्रकृतिवियुक्तात्मस्वरूपा वाप्तिरूपफलम् अर्चिरादिगत्या परमपदप्राप्तिः अपुनरावृत्तिश्च அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யஸூக்திகள் பரஸ்பரவிருத்தம் போல் தோற்றும். இந்த விரோதத்தை சமிப்பிக்கவேண்டி தேசிகன் மதுவித்யாங்யாயத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு ப்ரக்ருதி வியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தரபலனாக வைத்தும், ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதாநபலனாக வைத்தும் நிர்வஹித்தார். [வஸ்துத: இப்படி நிர்வஹிக்க ஔசித்யமுண்டோவென்று பார்த்தால் இல்லை. அவாந்தரபலனைக் கல்பிக்கக்கூடிய ப்ரமாணம் துர்லபம். மது வித்யாங்யாயத்திற்கு இங்கு ப்ரஸக்தியில்லை. பஞ்சாக்நி வித்யாநிஷ்டனுக்கு मूर्धन्यनाड्या निष्क्रमणமும் இடையில் வ்யவதாநமில்லாமல் பலனடைவதும் ச்ருதப்ரகாசிகாஸித்தம். ஜாபகோபாக்யானத்தில் வ்யவதாநேந பலப்ராப்தியானதை இங்கே நிதர்சநமாகக் காட்டத்தகாது. ஏனென்னில் அவனுக்கு நேர்ந்த ப்ரஹ்மகாய நிஷேவணரூபமான வ்யவதாநம் ஜிஹ்வை வழியாக நிஷ்க்ரமணத்தினாலானது—இத்யாதி விஷயங்கள் இருக்கின்றன. நிற்க.] இப்படி நிர்வஹிக்கும்போது கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திக்கு அஸ்வாரஸ்யம் விளைகிறது. அதை ஸஹித்துக் கொள்ள வேண்டியது தவிர வேறு கதியில்லையென்று கொண்டு "एकग्रन्थशकलास्वारस्यं बहुग्रन्थस्वारस्याय ग्राह्यम् " என்று ஸ்வாமி தேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜநத்திலே பணித்தார். ஒரு க்ரந்தத்திற்கும் அஸ்வாரஸ்யமில்லாதபடி நிர்வஹிக்கக்கூடிய வொருவழியைக் காட்டினால் தேசிகன் கைக்கொள்ள மாட்டாதவரல்லர். கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்ய ஸூக்திகளுக்குப் பரஸ்பரம் ஒரு விரோதமும் கிடையாது. கீதாபாஷ்யத்தில் சொல்லப்பட்டபடி ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதானபலன். ப்ரஹ்மப்ராப்தியைச் சொல்லுகிற ஸ்ரீபாஷ்யஸூக்தி இதற்கு விருத்தமன்று. எப்படியென்னில் ஸ்ரீபாஷ்யத்தில் "ब्रह्मप्राप्त्यपुनरावृत्तिश्रवणात् ब्रह्मात्मकस्वात्मानुसन्धानं सिद्धम् " என்று அருளிச்செய்திருக்கையாலே, தத்க்ரதுந்யாயத்தாலே ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மப்ராப்தி தான் பலனாகத் தகும். ப்ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸநத்திற்கு இதுதானே அநுரூபமான பலனாகும். ஆக, விசேஷணதயா பரப்ரஹ்மத்துக்கு ப்ராப்யத்வம் தேறுகிறபடியால் இவ்வழியாலாகும் ப்ரஹ்மப்ராப்திதான் ஸ்ரீபாஷ்யத்தில் சொல்லப்பட்டதாக விளங்குகிறது. ஒரு விரோதமுமில்லை யன்றோ. கைவல்யத்திலும் பரப்ரஹ்மத்திற்கு ப்ராப்யத்வமுண்டென்னில், அந்த முக்திக்கு இழிவு சொல்லுவானேன்? என்னில், ப்ரஹ்மாநுபவம் அப்ரதானமாகவும் ஆத்மாநுபவமே ப்ரதாநமாகவுமன்றோ ஸித்திக்கிறது. ஆனதுபற்றியே அது ஹேயமெனப்படுகிறது. இவ்விதமாக ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்ய ஸூக்திகள் ஒரு விரோதமுமின்றிக்கே எளிதாக ஸமந்விதமாகிறபடியாலே கீதாபாஷ்ய ஸூக்திக்கு அஸ்வாரஸ்யம் கல்பிக்க வேண்டியதேயில்லை. இப்படிப்பட்ட வழி ஸ்புரியாமையினாலே ஒன்றுக்கு அஸ்வாரஸ்யம் கல்பிக்க நேர்ந்தது. * यतिप्रवरभारतीरसभरेण नीतं वयः * [யதிப்ரவரபாரதீரஸபரேண நீதம் வய:] என்றும் *ஏரணிகீர்த்தியிராமாநுசமுனி யின்னுரைசேர், சீரணிசிந்தையினேம் சிந்தியோமினித் தீவினையே* என்று மிருப்பவர்க்கு பகவத்ராமாநுஜஸூக்தியில் அஸ்வாரஸ்யகல்பநம் ஆவச்யகமன்றே. எல்லாம் ஸ்வரஸமாகவே நிர்வஹிக்கப்படுவதற்கு மார்க்கமிருக்கிறதென்று காட்டினால் "நாண் பெரியோமல்லோம்நாம் நன்றுந் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்று ஸௌமநஸ்யத்தின் எல்லையிலே நின்று கூறின அவர்க்குப் பரமானந்தமே

யன்றோ. ‘அம்மஹாபுருஷருக்கு நீர்தாம் வழிகாட்டுகிறவரோ?’ என்கிற க்ஷேபந்தான் அடுத்தபடியாக வெளிவரும். நாம் காட்டுகிற வழியன்றிது; எற்கெனவே பூருவர்கள் காட்டிவைத்த வழியைத்தான் நாம் எடுத்துக்காட்டுகிறபடி. ஒரு அபிநிவேசத்தினால் கீதாபாஷ்யஸூக்திக்கு அஸ்வாரஸ்யம் கல்பித்துத்தானாக வேண்டுமென்று சிலர் போராடினால் இது எவ்வளவு ஸமஞ்ஜஸமென்பதை மஹாவிவேகிகளாயிருப்பார் பரிசீலிக்கவேணுமத்தனை. என்று ஸாரமாக வெழுதி முடித்தேன்.

## பகவத் க்ருபையைப்பற்றி ஒருநாள் செய்த உபந்யாஸம்

பகவத்க்ருபை ஸஹேதுகமா? நிர்ஹேதுகமா? என்கிற வொருவாதம் ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் வீணாக வளர்ந்து வருகிறது. ஸஹேதுகமென்று தேசிகனுடைய திருவுள்ளமென்றும், நிர்ஹேதுகமென்று வேறு சில ஆசார்யர்களின் மதமென்றும் இப்படியொரு கொள்கை பரவியிருக்கின்றது. நிர்ஹேதுக க்ருபாவாதிகளில் தலைவரான தேசிகனை ஸஹேதுகவாதிகளுக்குத் தலைவராகக் கூறுவது ஆச்சரியங்களில் தலையானது. இவ்விஷயத்தில் அடியேன் அவருடைய வசனங்களை அபரிமிதமாக எடுத்துக்காட்டியிருக்கிறேன். இரண்டொன்றை மாத்திரம் இங்குக் காட்டுகிறேன். அபயப்ரதாநஸாரத்தொடக்கத்தில் ஸ்வாமி “नमस्तस्मै कस्मैचन भवतु निष्किञ्चनजनस्वयंरक्षादीक्षासमधिकसमिन्धानयशसे” [நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது நிஷ்கிஞ்சநஜநஸ்வயம்ரக்ஷாதீக்ஷாஸமதிகஸமிந்தாநயசஸே] என்கிறார். அகிஞ்சநஜநங்களை ஸ்வயமாகவே ரக்ஷிப்பதில் தீக்ஷை கொண்டிருப்பதனால் எம்பெருமானுக்குக் கீர்த்தி மிக்கிருப்பதாக இதில் சொல்லப்படுகிறது. ஸஹேதுகமாக ரக்ஷிப்பதுதான் எம்பெருமானுக்குப் புகழ் என்பவர்களுக்கும் இந்த ஸ்ரீஸூக்திக்கும் ஏதேனும் ஸம்பந்தமுண்டோ? அன்றியும், ஸ்வாமி அமலனாதிபிரானுக்கு முனிவாஹநபோகமென்றொரு வியாக்கியானமிட்டு அதனை ரஹஸ்யக்ரந்தங்களில் ஒன்றாகச் சேர்த்திருக்கிறார். அதில் அவதாரிகை தொடங்கும்போதே “காரண விசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத் கடாக்ஷத்தாலே” என்கிறார். இதனால் பகவத்க்ருபை நிர்ஹேதுகமேயொழிய ஸஹேதுகமன்று என்பது அவருடைய ஸித்தாந்தமென்று விளங்கவில்லையா? நிர்ஹேதுகமென்று சொன்னால் நாம் ஒன்றும் செய்யவேண்டாமென்று தேறிவிடுமேயென்று கொண்டே பிறர் ஸஹேதுகவாதம் பண்ணுகிறார்கள். நாம் கனக்கச் செய்தாலுங்கூட இதற்காகப் பேறு கிடைப்பதன்று, அவனுடைய கேவலக்ருபையினால்தான் கிடைக்கிறதென்று நினைக்க வேணுமென்று சிக்ஷிக்கிறவரன்றோ தேசிகன்; அவன் கொடுக்கிற பேற்றுக்கும் நாம் செய்கிற அபராத நிர்விசேஷங்களான காரியங்களுக்கும் என்ன ஸம்பந்தம்...இப்படியாகப் பலபல உபந்யாஸங்கள் இளமையில் செய்ய ப்ராப்தமாகும். அப்போது உபயகலையாருமே உபந்யாஸ கோஷ்டிகளில் வீற்றிருந்து ஆனந்தமாக அநுபவிப்பர்கள். இதன் விரிவு மேலேவரும்.

## வேதாத்யயந ப்ராரம்பம்

அடியேனுடைய திருத்தகப்பனார் வேதாத்யயனத்தில் ஆசைகொண்டு தாம் சில காண்டங்கள் ஓதியிருந்தார். பூர்த்தியாக ஓதுவதற்கு ஸௌகரியம் வாய்க்கவில்லையென்று மிகவும் குறையுற்றிருந்தார். அக்குறைதீர இளமையிலேயே அடியேனுக்கு வேதாத்யயனம் செய்விக்க வேணுமென்று மிக முயன்றார். அவருடைய சிறியதாயார் குமாரர் “குட்டிமாமாபிள்ளை நரஸிம்ஹாசாரியர்” என்பவர் பூர்த்தியாக வேதமோதி ஸமர்த்தராயிருந்தார். அவரை உபாத்தியாயராக நியமித்து, ஸ்ரீ (மாதாமஹ) ஜீயர்ஸ்வாமி மடத்தில் வேத பாடசாலையொன்று ஆரம்பித்து ஏழெட்டு வித்யார்த்திகளைச் சேர்த்து அவர்களோடு அடியேனையும் வேதமோதக்

கட்டளையிட்டார். அப்போது அடியேனுக்கு உபநயனமான புதுமை. அப்பாடசாலை ஏறக்குறைய ஒரு ஸம்வத்ஸரகாலம் நடந்தது. பஞ்ச ஸூக்தங்கள், தைத்திரியோபநிஷத்து, அபிச்ரவணம் முதலான உபயுக்தங்களின் அத்யயனம் முடிந்து முதல் காண்ட மாரம்பித்து நாலைந்து ப்ரச்னங்களும் ஓதியாயிற்று. என்ன காரணத்தாலோ அப்பாடசாலை நின்றுபோயிற்று. ஆனாலும் அடியேனுக்கு வேத மோதவேணுமென்கிற ருசி தீவ்ரமாகவே யிருந்தது. இடையிடையில் பலதடவை பலபேர்களிடத்தில் ஆரம்பிப்பதும், இரண்டொரு வாரம் சந்தை நடப்பதும், ஆவ்ருத்திபண்ணுவதற்கு அவகாசமில்லாமல் நின்றுபோவதுமாகவே நிகழ்ந்தது. இருபத்திரண்டாவது வயதில் திருமலையில் ஒரு உத்ஸவத்திற்கு விடைகொள்ள நேர்ந்தது; ஸ்ரீமதுபயவே. திருமலை விஞ்சிமூர் மாம்பள்ளம் ஸுதர்சநாசார்ய ஸ்வாமி யென்பவர் கோயில் வாஸத்தையே ஸ்வயம் ப்ரயோஜநமாகக் கொண்டு அங்கே வாழ்ந்துவருபவர் திருமலையப்பனைஸேவிக்கஅப்போது எழுந்தருளியிருந்தார். அந்த ஸ்வாமியின் யோக்யதை அப்ரமேயமானது. அதைப்பற்றிப் பிறகு விஜ்ஞாபிக்கிறேன். அந்த ஸ்வாமி திருமலையில் வேத கோஷ்டியில் நடுநாயகமாக ஸேவை ஸாதித்துக்கொண்டு ஆச்சரியமாகப் பாராயணம் செய்துபோகிறார். அவருடைய தனிப்பட்ட கண்டத்வநியானது அடியேனை மிகவும் ஆகர்ஷித்துவிட்டது. "ப்ரஹ்மப்ரயத்நம் செய்தாவது இந்த ஸ்வாமியைக் காஞ்சிக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்று பல வித்யார்த்திகளைச் சேர்த்துக்கொண்டு வேதத்தைப் பூர்த்தியாக ஓதியே தீர்வது" என்று அதே க்ஷணத்தில் த்ருட ஸங்கல்பம் செய்துகொண்டேன். அதற்கு அநுகுணமாக எம்பெருமானுடைய அநிர்வசநீயமாய் அடியேன் மனத்திற்கே கோசரமானவொரு திருவருள் நோக்கத்தையும் பெற்றேன். உடனே அந்த ஸ்வாமி திருவடிகளில் விழுந்து அடியேனுடைய மநோரதத்தை விரிவாக விஜ்ஞாபனம் செய்து பிரார்த்தித்தேன். "अव्याक्षेपो भविष्यन्त्याः कार्यसिद्धेर्हि लक्षणम् — அவ்யாக்ஷேபோ பவிஷ்யந்த்யாः கார்யஸித்தேர்ஹி லக்ஷணம்" (ரகு. 10-6.) என்று காளிதாஸர் சொன்னபடி அந்த ஸ்வாமி அடியேன் பிரார்த்தனைக்கு ஈஷத்தும் தடை சொல்லாமல் "அப்படியே செய்வது, இப்போதே புறப்படுவது" என்று மஹோத்ஸாஹத்துடன் ஸாதித்து மறுநாள் அடியேனோடு கூடவே புறப்பட்டுக் காஞ்சிக்கு எழுந்தருளினார். அந்த முஹூர்த்த விசேஷத்தின் நன்மையை ஆரே யறிவார்? ஊர்வந்து சேர்ந்தவுடனே வேத



ஸ்ரீமத் உவே. வைதிகவித்யாநிதி மாம்பள்ளம் தி. வி. ஸுதர்சநாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி)

மோதத் தொடங்கவேணுமென்கிற ருசி புஷ்கலமாக இருந்தும், ஏற்கெனவே சில
தடவைகள் ஆரம்பித்து விச்சின்னமானது போலல்லாமல் முற்ற முடிய நடைபெற
வேண்டிய மார்க்கத்தைத் தேடியே ஆரம்பிக்க வேணுமென்று கருதி, உபய
வேதவேதாந்த பாடசாலையொன்று ஸ்திரமாக நடப்பதற்கு வழிதேடினேன்.
பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் பரிபூரண கடாக்ஷம் செய்தருளி வித்யா
லய நிர்வாஹத்திற்குரிய சில உபபத்திகளை ஸங்கல்பித் தருளினபடியாலே தைர்ய
முண்டாகி ஒருநன்னாளில் ஸ்ரீமத்பரமஹம்ஸ. (மாதாமஹ) ஜீயர்ஸ்வாமிமடத்தையே
தாத்காலிக வித்யா நிகேதனமாக்கி வேதாத்யயநம் உபக்ரமித்தாயிற்று. அந்த ஸம
யத்தில் சில மஹான்கள் மாதந்தோறும் யதோ
சிதம் சந்தாத்தொகை உபகரித்துவர வாக்தானம்
செய்தார்கள். அஸ்மதாசார்யபாதரான ஸ்ரீகாதி
ஸ்வாமி அப்போது வடதேச யாத்திரையிலெழுந்
தருளி யிருந்தபோதிலும் இச்செய்தியை யறிந்து
மிகவுகந்தருளி மஹத்தான உபகாரம் செய்தருளி
னார். ஏற்கெனவே அண்ணா ஸன்னிதியில் தாம்
ஸ்தாபித்து நடத்திவந்த வேதாந்த வைஜயந்தீ
பாடசாலையின் பெயரையே வைத்துக்கொள்ளும்
படிக்கும் நியமித்தருளினார். இதில் வேதப்ராதாந்
யம் தோற்ற "வேதவேதாந்த வைஜயந்தீ" என்று
நாமகரணம் செய்யப்பட்டது. ஸ்ரீஸ்வாமி தமது
திருக்குமாரரையும் இப்பாடசாலையில் அந்வயிக்கும்
படி நியமித்தருளினார். அப்போது ஸ்ரீமத்
கோவர்த்தனம் ரங்காசார்ய ஸ்வாமி காஞ்சியில்
வாஸம் செய்ய வந்து சேர்ந்தார். அவரும் இப்
பாடசாலை நிரந்தரமாக நடந்துவரவேணுமென்று
அபிமானித்துத் தம்மாலான உதவியைச்செய்தார்.
ஸ்ரீஉவே. அகரம்கந்தாடை. ஸ்ரீநிவாஸாசாரியர்
ஸ்வாமி யென்கிற பெரியார் ஸன்னிதி வீதியில்
எழுந்தருளியிருந்தார். அவர் மஹா தனிகர்.
வைதிகவித்யாபக்ஷபாதி. அந்த ஸ்வாமியும் சில
வருஷங்கள் உதவிபுரிந்து வந்தார். அப்போது
காஞ்சியில் ஸ்ரீஉவே. கூர்மம் ஸ்ரீரங்காசார்யஸ்வா
மியென்பவர் தென்னாசார்ய தரிசநஸபைத் தலைவ



ஸ்ரீமதுபயவே கோவர்த்தனம்
ரங்காசார்ய ஸ்வாமி (ஒன்றான
ரங்காசார்ய ஸ்வாமியின் திருப்
பேரனார் (வைகுண்டவாஸி)

ராயிருந்தவர் இப்பாடசாலையை விசேஷமாக அபிமானித்தார். அவர் "வக்கீல்
ஸ்ரீரங்காசாரியர்" என்று ப்ரஸித்தர். கீழே (பக்கம் 52ல்) ஸேவை ஸாதிக்கின்ற
ஸ்ரீமத் விரக்தி பாஷ்யகார ஸ்வாமி ஸன்னிதியில் உபயவேதாந்த ரஹஸ்யாதிகளை
வரியடைவே அதிகரித்தவர்களில் அந்த ஸ்வாமி தலைவராயிருந்தவர். வைதிக
விச்வாஸமும் வித்யாபக்ஷபாதமும் அந்த ஸ்வாமிக்கு மிகமிக இருந்தபடியால் அவர்
இப்பாடசாலையின் அபிவிருத்தியில் மேலான ஊக்கம் கொண்டார். உண்மையில்
இப்பாடசாலை இன்றளவும் சிறப்பாக நடந்து வருவதற்கு முக்கிய காரணம்
அந்த ஸ்வாமியின் அமோகமான மங்களாசாஸனமே யென்னத் தட்டில்லை. அப்
போது வித்யார்த்திகளுக்கு வேதநம் கொடுப்பதென்கிற நிர்ப்பந்தம் ஏற்படாமையி
னாலே உபாத்யாய ஸ்வாமியைக் குறையற ஆதரிக்க வேண்டிய பொறுப்பு ஒன்றே
யிருந்தது. வித்யார்த்திகளுக்கும் அடிக்கடி பரீக்ஷைகள் நடத்தி புஸ்தக ரூபமாக
வும் பட்டுபீதாம்பராதிரூபமாகவும் ஸன்மானங்கள் அளிக்கப்பட்டுவந்தன.

ஆரம்பத்தில் முப்பது வித்யார்த்திகளுக்குமேல் சேர்ந்தார்கள். அதிகமாக
வயது சென்றவர்களுக்குங்கூட இதில் அந்வயித்து வேதமோத வேணுமென்கிற

ருசியுண்டாகி அன்னவர்களும் சேர்ந்தார்கள். அவர்களும் இரண்டொரு காண்டங்கள் அதிகரித்துச் சிலவாண்டுகள் பகவத் ஸன்னிதிகளில் வேதபாராயண கைங்கரியத்திலும் அந்வயித்திருந்தார்கள். மூலம் அசீதியையும் சொல்லி முடித்த பிறகு பதமும் க்ரமமும் ஓதுவது எங்குமுள்ள வழக்கம்; அவ்விதமாக அத்யயனம் செய்தால் பகவத் ஸந்நிதிகளில் திருவீதிப் புறப்பாடுகளில் க்ரமபாராயண கைங்கரியம் செய்ய மிகவும் தாமதமாகுமென்று உபாத்யாயஸ்வாமி ஸம்ஹிதையோடு கூடவே பதக்ரமங்களையும் ஓதுவித்த அதிசயம் தனிப்பட்டது. பலர் மூன்றாவது காண்டத்தை முதலில் ஆரம்பிப்பார்கள் அப்படியல்லாமல் முதல்காண்டமே பிடித்து வரிசையாக பதக்ரமங்களோடு கூடவே ஸம்ஹிதையையும் பிறகு ப்ராஹ்மணத்தையும் அதிகரிப்பித்தார் மாம்பள்ளம் ஸ்வாமி.

உபாத்யாய பாதரான ஸ்ரீமத் மாம்பள்ளம் ஸ்வாமியின் யோக்யதைகளைப் பற்றிப் பேசவேணுமானால், உலகத்தில் ஒரு வசனமுண்டு. "ஸஹஸ்ரவதநனான ஆதிசேஷனாலும் பேசமுடியாது" என்று; அந்த வசனம் கடல் சூழ்ந்த மண்ணுலகில் இந்த ஸ்வாமியொருவர் திறத்திலே தான் யதார்த்தமாகும். அடியேனெழுதி வருகிற இந்தத்தன்சரிதையில் இதுவரை பலமஹான்களின் கல்விப்பெருமைகளைப் பற்றி யெழுதியுள்ளேன்; மேலும் பலமஹான்களின் பெருமைகளைப்பற்றியும் எழுதப் போகிறேன். ஆனால் இந்த ஸ்வாமியின் வித்யாப்ரபாவத்தைப்பற்றி அடியேனால் உள்ளவாறு எழுதமுடியா தென்பது ஸத்யம். உலகில் ப்ரஸித்தமாக வழங்கிவருகிற *ந பூதோ ந பவிஷ்யதி* என்கிற வாக்கானது இந்த ஸ்வாமியொருவர் விஷயத்தில் தான் தகும். உலகத்தில் அவரவர்கள் ஸம்பாதிக்கும் யோக்யதைகளானவை மற்றும் பலரிடத்திலும் காணக் கூடியவையே யாகும். ந்யாய வித்வான்கள், ந்யாய வேதாந்த வித்வான்கள், சதுச்சாஸ்த்ர வித்வான்கள் என்றிப்படி குலாவப்படும் வித்வான்களிடத்தில் காணும் யோக்யதைகள் பல வ்யக்திகளிடத்திலே காணக் கூடியவையே யாகும். இந்த ஸ்வாமி ஸம்பாதித்திருந்த யோக்யதைகள் இறந்தகாலத்திலோ நிகழ் காலத்திலோ எதிர்காலத்திலோ கடல் சூழ்ந்த இம்மண்ணுலகில் வேறொரு வ்யக்தியினிடத்தில் ஸம்பவிக்கமாட்டாதவையே. வேதத்திலும் ஆழ்வாரருளிச் செயல்களிலும் ஆசார்ய திவ்யஸூக்திகளிலும் இதிஹாஸ புராணங்களிலும் காவ்யநாட காலங்காரங்களிலும் இந்த ஸ்வாமி பரிச்ரமப்பட்டு ஸம்பாதித்திருந்த யோக்யதை ஒருவர்க்கும் ஒரு புருஷாயுஸ்ஸில் ஸம்பாதிக்கக் கூடியவையல்ல. "அம்பரமே தண்ணீரே சோறே யறஞ்செய்யும்" என்றவிடத்து ஏகாரங்களை நோக்கி நம் பூருவாசாரியர்கள் செய்தருளின வியாக்கியானத்திற்கிணங்க, இந்த ஸ்வாமியின் ஒவ்வொரு யோக்யதையையும் பார்க்கும்போது 'இஃதொன்றிலேயே இவருடைய ஆயுள் முழுவதும் கழிந்திருக்குமோ!' என்றே ஒவ்வொருவரும் வியக்கும்படியிருந்தது. வேதத்தில் ஜடை, கனம், லக்ஷணம், வர்ணக்ரமம் முதலியவற்றையும் பயின்று மஹாவ்யாபகர்களென்று ப்ரஸித்திபெற்ற வைதிக வித்வத் வரிஷ்டர்கள் உலகில் ஆங்காங்கு பலருண்டு; இந்த ஸ்வாமி க்ரமாந்தம் அதிகரித்தவரேயொழிய ஜடை முதலானவற்றில் பரிசய லேசமும் பெற்றவரல்லர்; ஆயினும் இந்த ஸ்வாமி யெதிரில் 'நான் வேதமோதினவன்' என்று ஒருவரும் நிற்க முடியாது. இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி இருபது வருஷங்களாகிறபடியால் இவருடைய அந்த வித்யாப்ரபாவங்களை இப்போது பன்னிப் பகர்வதனால் என்ன பயனாகும்? எனினும் "ஏற்றி மனத்தெழில் ஞான விளக்கை யிருளனைத்தும் மாற்றினவர்க்கொரு கைம்மாறு மாயனும் காணகில்லான், போற்றியுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்குபுகழ் சாற்றி வளர்ப்பதும் சற்றல்லவோ முன்னம் பெற்றதற்கே" என்று தேசிகன் பணித்த ப்ரக்ரியையில் வேறு எந்த விதத்தினால் க்ருதஜ்ஞதாப்ரகாசநம் செய்வது? அடியேனுக்கு ஆசார்யஸ்தானத்தில் நிற்பவர்கள் மூவர்; திருத்தகப்பனார், ஸ்ரீகாதி ஸ்வாமி,

(மாதாமஹ) ஜீயர் ஸ்வாமி. இம் மூவரினும் அடியேன் மேலான ஸ்தானத்தில் வைத்து அநுஸந்திப்பது மாம்பள்ளம் ஸ்வாமியையே யென்று அந்தரங்க ஸாக்ஷிகமான வார்த்தை யிது. இந்த ஸ்வாமி காஞ்சீபுரியில் எழுந்தருளியிருந்து வேதமோதுவித்தருளாவிடில் அடியேன் அஸத்கல்பனுகவே யிருந்திருப்பேன். "எமக்காகவன்றே இங்காண்டாளவதரித்தாள்" என்று மணவாள மாமுனிகளருளிச் செய்ததுபோல "எமக்காகவே மாம்பள்ளம் ஸ்வாமியை ஸர்வேச்வரன் இம்மண்ணுலகில் திருவவதரிப்பித்தான்" என்றே நிச்சலும் நாம் அநுஸந்தித்திருப்பது. ஸ்ரீபெரும்பூதூரில் கோணியூர் வாத்யார் ஸ்வாமியென்று ப்ரஸித்தரான வொரு மஹான் எழுந்தருளியிருந்தார். அவர் திருநாட்டுக் கெழுந்தருளி ஐம்பது வருஷமாகிறது. அந்த ஸ்வாமியிடத்தில் அனேகர் வேதாத்யயனம் செய்து உத்தீர்ணர்களாயினர். அவரிடத்தில்தான் அஸ்மதுபாத்யாயரான மாம்பள்ளம் ஸ்வாமி பெரும்பாலும் வேதாத்யயனம் செய்தது. அந்த கோணியூர் ஸ்வாமியின் திருக்குமாரர் "வேதவாத்யார் கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி" என்று ப்ரஸித்தராயிருந்தார். அவர் வியாகரண சாஸ்த்ரத்தில் மஹாபாஷ்யாந்தம் ப்ரசண்ட பண்டிதர். வேதாத்யயநத்தில் அவரை அத்விதீயராக மாம்பள்ளம் ஸ்வாமி தினந்தோறும் கொண்டாடி ஸாதிப்பர். அடியேனும் அந்த ஸ்வாமியோடு அதிகமான பரிசயமுடையவனே. இருபது வருஷகாலம் அந்த ஸ்வாமியோடு கூடவும் அடிக்கடி வேத பாராயணம் செய்ய ப்ராப்தமானதுண்டு. அந்த ஸ்வாமியின் திருவாக்கில் பிழையென்பது காணவே முடி



ஸ்ரீ பெரும்பூதூர் உவே. வேதவாத்யார்
கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி (வைகுண்டவாஸி)



யாது. அவரும் மாம்பள்ளம் ஸ்வாமியும் ஸப்ரஹ்மசாரிகளாதலால் அவரை க்ருஷ்ண ஸாமியென்று ஏகவசனமாகவே வ்யபதேசிப்பர் நம்வாத்யார் ஸ்வாமி. "நாலு ஸமுத்ரத்துக்குள் நம்ம க்ருஷ்ண ஸாமியை வேதாத்யயனத்தில் வெல்லக்கூடியவர் காலத்ரயத்திலும் ஒருவருமில்லே" என்றே அடிக்கடி மாம்பள்ளம் ஸ்வாமி ஸாதிப்பது. உண்மையில் அப்படி கொண்டாடிக் கூறத்தக்க யோக்யதாதிசயம் அந்த ஸ்வாமியிடத்தில் குடிகொண்டு தானிருந்தது. இருந்தாலும், மாம்பள்ளம் ஸ்வாமிக்கு நிகரானவர் நபூதோநபவிஷ்யதியென்பதே அடியேனுடையவும் மற்றும் பலருடையவும் ஸித்தாந்தம். ஸர்வதோமுகமான யோக்யதையன்றோ இவரது.

தஞ்சை ஜில்லாவில் விக்ரமம் என்கிற அக்ரஹாரத்தில் அவதரித்து மிகச் சிறந்த கனபாடியாக விளங்கினவர் ஸ்ரீமத் வெங்கடாசார்ய ஸ்வாமியென்பவர். அந்த ஸ்வாமி திருக்கண்ணபுரத்தில் பலகாலம் எழுந்தருளியிருந்து பலபேர்களுக்கு ஜடைகனமுட்படச் சொல்லி வைத்தவர். இப்போது தென்னாட்டில் வேதாத்யயநஸம்பந்நர்களாக விளங்குமவர்கள் பெரும்பாலும் அந்த ஸ்வாமியிடத்தில் அத்யயனம் செய்தவர்களென்று சொல்லலாம். அவருடைய திருக்குமாரர் திருக்கண்ணபுரம் சௌரி ஸ்வாமி யென்பவர் திருத்தகப்பனாரைக் காட்டிலும் மஹாவ்யாபகராய் கனபாடி யென்பதோடு நில்லாமல் லக்ஷண வர்ண க்ரமாதிகளிலும் நிபுணராய் நியாய வேதாந்தங்களிலும்வல்லவராய் ஸ்ரீரங்கத்தில்சிங்கமையங்கார் ஸ்வாமியின் பாடசாலையில் சாஸ்த்ர ப்ரவசந நிரதராய் விளங்குகின்றார். அந்த வேங்கடாசார்ய கனபாடி ஸ்வாமியின் யோக்யதையையும் மாம்பள்ளம் ஸ்வாமி கொண்டாடிக் கூறுவர். மற்றும் அநேக வைதிகோத்தமர்களை அஸ்மத் ஸ்வாமி கொண்டாடி ஸாதிப்பதுண்டு. ஆனாலும் அடியேன் போல்வார் மாம்பள்ளம் ஸ்வாமியைத் தவிர வேறொருவரிடத்திலும் விஸ்மயம் கொள்வதில்லை. "வ்யாஸரும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் ஒன்றாகத் திரண்ட அவதாரம் மாம்பள்ளம் ஸ்வாமியே'' என்றுதான் ஸித்தாந்தம் செய்திருந்தோம். எதிலும் ஸந்தேஹவிபர்யயமற்றவர் மாம்பள்ளம் ஸ்வாமியொருவரே.



திருக்கண்ணபுரம் கனபாடி ஸ்ரீஉவே. வேங்கடாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி)

இருபத்திரண்டு வயதுக்குமேல் அடியேன் மாம்பள்ளம் ஸ்வாமியிடத்தில் வேதமோதத் தொடங்கினேன். அப்போது பலரும் பரிஹஸிப்பதும் நிந்திப்பதுமாயிருந்தார்கள். 'இத்தனை வயதுக்குமேல் வேதம் நன்றாக வரும்' என்று பரிஹஸிப்பவர்கள்; நமக்கு ஸ்வரூப ப்ராப்தமல்லாத கர்மகாண்டத்திலோ இப்போது கைவைப்பது! என்னே!' என்று நிந்திப்பவர்கள். "லோகோ பிந்நருசி:" ஆகையாலே ஆமோதித்தவர்களுமுண்டு. முக்கியமாக அடியேன் கைங்கரியத்தையே ப்ரதாநலக்ஷ்யமாகக் 'கொண்டு வேதாத்யயனமாரம்பித்தேன். காஞ்சீபுரியில் திவ்யதேசங்கள் பல; அவற்றில் உத்ஸவங்களும் அடிக்கடி ப்ராப்தமாகும்.

தேவப்பெருமாள் ஸந்நிதியொன்று தவிர மற்ற ஸன்னிதிகளில் வேதபாராயணம் அடியோடு இல்லாமலே உத்ஸவங்கள் நடந்து வந்தன. அதுவொரு பெரிய குறை யாகவே தோன்றிற்று. இக்குறையை அறவே நீக்கவேணுமென்கிற அபிநிவேசந் தான் அடியேனுக்கு வலிதாயிருந்தது. ஸ்ரீயதோக்தகாரி, உலகளந்தபெருமாள், வைகுண்டபெருமாள் முதலான எம்பெருமான்களின் ஸன்னிதிகளில் ப்ரஹ்மோத் ஸவ நைமித்திகோத்ஸவாதிகள் பலபல இப்போது நடந்து வருவதைக் காட்டிலும் முன்பு [நாற்பது வருஷங்களுக்கு முன்னே] மிகச்சிறப்பாக நடந்து கொண்டிருந் தன. அவற்றில் "வாளும் வில்லுங் கொண்டு பின்செல்வார்மற்றில்லை" என்று ஆழ்வார் வயிறு பிடித்த வருத்தம் தீரப் பரிபூர்ண கைங்கரியம் பண்ணப் பெற வேணுமென்கிற பாரிப்புக்கொண்டே வேதமோத விழிந்தபடியால் அந்த எம்பெரு மான்களனைவரும் பரமக்ருபையைச் செய்தருளி அடியேனுடைய மனோரதத்தை அப்ரமேயப்ரக்ரியையிலே பூர்த்தி செய்வித்தருளினார்கள். உண்மையில் எம்பெரு மானுடைய க்ருபையினால் நிறைவேறியதாகச் சொல்லுவது உபசாரமத்தனை. ஸ்ரீமாம்பள்ளம் ஸ்வாமியின் பரமக்ருபை யொன்றுதான் இதில் ப்ரசம்ஸநீயம். நாடோறும் பின்மாலை மூன்று மணிக்குத் தாமெழுந்து ஒருவருடைய க்ருஹம் தப்பாமல் கர்ணம்ருதமான திவ்யப்ரபந்தாதி அநுஸந்தானத்துடன் தாமேயெழுந் தருளி யெழுப்பியழைத்து வந்து வாசாமகோசரமான ச்ரத்தையுடன் வேதமோது வித்த பரமக்ருபை ஸர்வேச்வரனிடத்திலும் காணமுடியாததே; "அருள்கண்டீரிவ் வுலகினில் மிக்கதே" என்ற பாசுரம் இந்த ஸ்வாமிக்கே தகும்.

இந்த மஹாசார்யர் காஞ்சியிலெழுந்தருளியிருந்து வேதமோதுவித்த பெருமையை மட்டும் பெற்றவரல்லர்; "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க் குத் தம்மையேயொக்க அருள் செய்வர்" என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்த படி ஸ்வஸாம்யாபத்தியைச் செய்விப்பவன் எம்பெருமானென்று கேட்டிருக்கி றோம்; அது நித்ய விபூதியிலேயல்லது லீலாவிபூதியிலன்று. ஸ்ரீமாம்பள்ளம் ஸ்வாமி தம்மடி பணிந்தவர்களுக்கு ஸ்வஸாம்யாபத்தியை இந்நிலத்திலேயே செய்து வைத்த வதிசயம் ஆச்சரியமானது. இதைச் சிறிது விவரித்தேயாகவேண்டு மிங்கு. மாம்பள்ளம் ஸ்வாமி வேதவேதாந்த வைஜயந்தீபாடசாலையில் உபாத்யாய பத வியை யலங்கரித்துக் கொண்டு ஏறக்குறைய இருபது ஸம்வத்ஸரம் காஞ்சீவாஸம் செய்தருளினர். இடையில் சில மாதங்கள் ஆழ்வார் திருநகரியிலுமெழுந்தருளி யிருந்தார். அங்கும் பலரைத் திருத்திப் பணிகொண்ட பெருமையைப் பிறகு விஜ் ஞாபிக்கிறேன். காஞ்சீபுரியில் எழுந்தருளியிருந்த காலத்தில் பலபேர்களுக்கு வேதம், திவ்யப்ரபந்நம், ஆசார்ய திவ்யஸூக்திகள், ஸம்ஸ்க்ருத ஸாஹித்யம் இவற்றைத் தாம் ஒருவரே பரிபூர்த்தியாக அதிகரிப்பித்து இருபது பேர்களை வேதாத்யயந ஸம்பந்நர்களாகவும் பத்துபேர்களை உபயவேதநிர்வாஹகர்களாகவும் ஆக்கியருளினர். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு உவே. (அல்லது) உபயவே. என்கிற வ்யபதேசம் ப்ரஸித்தமாக வழங்கி வருகிறது. உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களென்றபடி. உபயவேதங்களையும் அதிகரித்தாலல்லது உபயவே தாந்த ப்ரவர்த்தகாசார்யத்வம் புஷ்கலமாகாது; ஸம்ஸ்க்ருத வேதத்தை அத்யயநம் செய்தவர்களுக்குத் தமிழ்வேதம் வெகு தூரத்திலிருக்கும்; அவ்வளவேயன்று; அதில் த்வேஷமுமிருக்கும். தமிழ் வேதத்தை யதிகரித்தவர்கள் ஸம்ஸ்க்ருத வேத வைதேசிகர்களாகவே யிருப்பர்கள். இரண்டு வேதங்களையும் இரண்டு கண்களாகக் கொண்டு இரண்டையும் ஸமமாகவே அதிகரித்து இரண்டிலும் ஸமமான வல்லமை பெற்றிருப்பவர்கள் பண்டைக்காலத்தில் விசேஷமாக இருந்திருப்பர்களோ என் னவோ அறியோம். இப்படிப்பட்ட அதிகாரிகளை இக்காலத்தில் ஸேவிக்க வேணு மானால் சின்னகாஞ்சியிலும் ஸ்ரீபெரும்பூதூரிலுமே ஸேவிக்க முடியும். ஸ்ரீபெரும் பூதூரில் மாம்பள்ளம் ஸ்வாமிக்கு ஸப்ரஹ்மசாரிகளா யிருந்தவர்கள் சிலர் இந்த

வகையில் பரிகணிதர்களாயிருந்தார்கள்; கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத் காழியூர் ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமி [கீழே பக்கம் 17ல் ஸேவைஸாதிப்பவர்] சாஸ்த்ரஜ்ஞரா யிருந்ததோடு உபயவேதங்களிலும் வல்லவராயுமிருந்தார். வைகுண்டவாஸியான பின்னப்பாக்கம் ராகவாசார்ய ஸ்வாமி யென்பவரும் உபயவேதங்களிலும் நல்ல விரகராயிருந்தார். அப்படிப்பட்ட உபயவேதாதிகாரிகளில் இப்போது வயோவ்ருத்த ச்ரேணியில் விளங்குமவர் (அடியேனுடைய ஸம்பந்தியான) ஸ்ரீ உவே. மணவாள ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி யொருவரே. இந்த ஸ்வாமிக்கு இப்போது எண்பத்தைந்து திருநக்ஷத்ரங்களுக்கு மேலாகியிருந்தாலும் இப்போதும் ஆச்சரியமான உபஸ்திதியுளது. இப்படிப்பட்ட ப்ராசீநர்களின் கதை யிருக்கட்டும். இப்போதுள்ள வர்த்திஷ்ணுக்களில் உபயவேதங்களிலும் பரிபூர்த்தியாகத் தேறினவர்கள் ஸ்ரீமாம்பள்ளம் ஸ்வாமியின் பரமக்ருபையினுல் பத்துபேர்கள் விளங்கி வருகிறுர்கள். ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீ உவே. கற்பூரம் பட்டப்பா ஸ்வாமி யென்கிற வேங்க



தி. அ. பு. ஸ்ரீநிவாஸாசாரியர். 1 கோ. [க.] அண்ணன் ராமாநுஜாசாரியர். 2
தி. வி. சிங்கராசாரியர். 3 மா. கு. நரஸிம்ஹாசாரியர். 4
மாம்பள்ளம் பாஷ்யகாராசாரியர். 5

டாசாரியரும், ஸ்ரீ உவே. தி. க. பார்த்தஸாரதி ஸ்வாமியும் பரிகணநீயர்கள். இவ்விருவரும் மாம்பள்ளம் ஸ்வாமியின் அந்தேவாஸிகளல்லராயினும் ப்ரக்ருதம் அடியேன் விவரிக்கும் விஷயத்தில் முந்துற முன்னம் இவர்களையே ஸ்மரிக்க நேர்ந்தது.

இவர்களின் திருவுருவப்படங்களை மேற்பகுதியில் ஸேவிக்க ப்ராப்தமாகும். மாம் பள்ளம் ஸ்வாமியின் க்ருபாகடாக்ஷத்தினலே அபிவிருத்தியடைந்தவர்களும், நமது வேதவேதாந்த வைஜயந்தீ வித்யாலயத்திற்கு அணிவிளக்காக விளங்குகின்றவர் களுமான விலக்ஷண வ்யக்திகளைப்பற்றி இங்கு விஜ்ஞாபிக்க விரும்புகிறேன்.

முன்னம் ஒரு வார்த்தை முக்கியமாக விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் கலாபேத வ்யவஹாரம் ஏற்பட்டிருப்பது ப்ரஸித்தம். தென்கலை யார்கள் தென்கலையாகிய தமிழ்வேதத்தோடு நிற்காமல் வடகலையாகிய ஸம்ஸ்க்ருத வேதத்தையும் அதிகரிக்கிறார்களென்பதும், வடகலையார்கள் வடகலையாகிய ஸம்ஸ் க்ருத வேதத்தோடு நிற்காமல் தென்கலையாகிய தமிழ் வேதத்தையும் அதிகரிக்கிறார் களென்பதும் தெரிந்த விஷயம். ஆனல் இந்த இருவகை யோக்யதைகளும் வெவ் வேறு வ்யக்திகளிடத்தில் காணலாகுமேயல்லது ஒரே வ்யக்தியினிடத்தில் உபய வேத பாண்டித்யமும் காண்பது அரிதென்பது புநருக்தம். வடகலை ஸம்ப்ரதாயஸ் தர்களில் ஸம்ஸ்க்ருத வேதமோதினவர்கள் விசேஷமாக ஸேவை ஸாதிக்கிறார்கள். திவ்யப்ரபந்த மோதினவர்களும் *க்வசித் க்வசித்தென்கிற கணக்கிலே விரளமாக ஸேவை ஸாதிக்கிறார்கள். அந்த ஸம்ப்ரதாயஸ்தர்களில் ஒரு வ்யக்தியாவது உபய வேதங்களையும் ஒரே ரீதியாக அதிகரித்திருப்பதுண்டோவென்று அடியேன் பல விடங்களிலும் விசாரித்து வருவதுண்டு. பவிஷ்யத்காலச் செய்தி தெரியாது. பூத காலத்திலும் வர்த்தமாந காலத்திலும் அப்படிப்பட்டவொரு நபர்கூட அந்த ஸம்ப்ரதாயஸ்தர்களில் இல்லையென்று திண்ணமாகச் சொல்லலாம். ஸம்ஸ்க்ருத வேத வித்துக்கள் த்ராவிட வேதத்தில் மாத்ஸர்யங்கொண்டே யிருப்பர்கள். த்ரா விட வேதமதிகரித்தவர்கள் ஸம்ஸ்க்ருத வேத தூஷகர்களாகவுமிருப்பர்கள். இவ் விஷயத்தை திருவஹீந்திரபுரத்தில் இற்றைக்கும் கட்கூடாகக் காணலாம். அந்த வூரை விசேஷித்துச் சொல்ல வேண்டியதில்லை. எந்த வூரிலும் இப்படியேதான்.

ஸுப்ரஸித்தராக எழுந்தருளியிருந்த (பிரபல அட்வகேட்) வி. வி. ஸ்ரீநிவா ஸய்யங்கார் ஸ்வாமி யென்பவர் காஞ்சியில் தமது க்ருஹத்தில் ஒரு ஸமயம் ஒரு பெரிய விசேஷம் நடத்தினபோது, உபயவேதங்களையும் ஏகரீதியாக அதிகரித்தவர் களை வரவழைத்து விசேஷ ஸத்காரங்கள் செய்யத் திருவுள்ளம்பற்றி அந்த மநோ ரதத்தை அடியேனிடம் ஏகாந்தமாக ஸாதித்து "இப்படிப்பட்ட விசிஷ்டாதிகாரி கள் தேவரீருக்குத் தெரிந்திருப்பர்களே; அவர்களின் விலாஸங்களை யெழுதிக் கொடுத்தால் நல்லது" என்றார். அடியேன் 10, 12 திருநாமங்களை யெழுதிக் கொடுத்தேன். அவர்களில் ஒருவர்கூட வடகலைஸம்ப்ரதாயஸ்தராக இல்லாமையைக் கண்டு "உபயஸம்பிரதாயத்திலும் இருப்பவர்களை எழுதித் தரவேணும்" என்றார். "பூமண்டலத்திற்குள் உபயவேதாதிகாரிகளாக இருப்பவர்கள் இப்போது அடி யேனல் தெரிவிக்கப்பட்ட இந்த வ்யக்திகளேயொழிய வேறு வ்யக்தி அடியோடு கிடையாது; இதில் ஸந்தேஹமிருந்தால் தேவரீருடைய ஆப்தர்கள் பலரையும் கேட்டுப் பார்க்கலாம்" என்று விண்ணப்பஞ் செய்தேன். "அய்யா, கிருஷ்ண தாதாசாரியர் ஸ்வாமி எப்படி?" என்று கேட்டார்; அவர் இரண்டு மூன்று காண்டங்கள் ஸம்ஹிதை மட்டும் ஓதியிருந்தார்; திவ்யப்ரபந்தத்தில் புஸ்தகபாடம்" என்று உண்மையை யுரைத்தேன். ஸ்வஸம்ப்ரதாயத்தில் உபயவேதத்திலும் பரிபூர்ணதிகாரியான நபர் ஒருவர்கூட இல்லையென்கிற உண்மையை அந்த V. V. ஸ்வாமி தெரிந்து கொண்டு தாம் கொண்டிருந்த ஸத்காரமநோரதத்தை விட்டு விட்டார். அந்த வருத்தத்தினல் சுதேசமித்திரன் பத்திரிகையில் அந்த V. V. ஸ்வாமி நீண்டதொரு வியாஸமெழுதிப் பிரசுரித்திருப்பது பிரஸித்தம். அந்த வியாஸத்தில் "வடகலையார்கள் அநாதிகாலமாகவே திவ்யப்ரபந்தத்தில் ஆஸ்தையற்றவர்களாயிருப்பது மிகவும் வருந்தத்தக்கது" என்று எழுதியிருக்கிறார். இது 18 வருடங்களுக்கு முந்தியசெய்தி. அதன்பிறகும் அதேநிலைமைதானுள்ளது.

கீழே குறித்த ஸ்ரீமத் V. V. ஸ்ரீநிவாஸய்யங்காருடைய அந்த வியாஸம் 22—7—1938-ல் வெளிவந்த சுதேசமித்திரன் பத்திரிகையில் காணத்தக்கது.

கீழ் 103-ஆம் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ள உருவப்படத்தில் நின்று கொண்டிருக்கின்ற இருவரைப்பற்றி மாத்திரம் இங்குத் தெரிவிக்கிறேன். முதலில் நிற்பவர் ஸ்ரீமான் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீநிவாஸாசாரியென்பவன் அடியேனுடைய தங்கை குமாரன். இவன் க்ரமாந்தம் வேதமோதி திவ்யப்ரபந்தத்தில் இரண்டாயிரம் அதிகரித்திருப்பவன். ஸகல ஸ்தோத்ரங்களையும் ரஹஸ்யங்களையும் கற்றிருப்பவன். வேதபாராயணாதி கைங்கரியங்களில் நிஷ்ணாதன். மற்றொரு கோடியில் நிற்பவர் ஸ்ரீமான் மாம்பள்ளம் திருமலை விஞ்சிமூர் பாஷ்யகாராசாரியர். ஸ்ரீபெரும்பூதூரில் வேதபாராயண கோஷ்டிக்கு நிர்வாஹகராக எழுந்தருளியிருந்த மாம்பள்ளம் சிங்கராசாரியர் ஸ்வாமியின் ஜ்யேஷ்டகுமாரர் இவர். ஸ்ரீபெரும்பூதூரிலேயே க்ரமாந்தம் வேதமோதி அவ்விடத்துப் பாடசாலையில் காவ்யசம்புக்களும் வாசித்தவர். பூர்வாபரப்ரயோக ப்ரக்ரியைகளில் வல்லவர். தருமசாஸ்த்ர நுட்பங்களுமுணர்ந்தவர். அஸ்மதுபாத்யாயபாதரான மாம்பள்ளம் ஸ்வாமிக்கு அத்யந்தஸந்நிஹிதஜ்ஞாதியாய் புத்ரஸ்தாநீயரானவர். இவர் காஞ்சியில் வேதபாராயண கைங்கரிய நிரதர்.



1. தி. வி. சிங்கராசாரியர். 2. ஸ்ரீபெரும்பூதூர் மணவாள ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி. 3. (அடியேன்). 4. ஸ்ரீபெரும்பூதூர் கற்பூரம் வெங்கடாசாரியர். 5. தி. அ. தொட்டயாசாரியர். 6. கோ. க. அண்ணன் ராமாநுஜாசாரியர். 7. மா. கு. நரஸிம்ஹாசாரியர். 8. ஸ்ரீபெரும்பூதூர் தி. க. பார்த்தஸாரதி ஐயங்கார். 9. தி. ந. ச. திருவேங்கடாசாரியர்.

முன்பக்கத்து கோஷ்டியில் ஸேவைஸாதிப்பவர்கள் உபயவேதாதிகாரிகள். இவர்களைப்பற்றித் தனித்தனியாக விசேஷங்களைத் தெரிவிக்கிறேன். அடியேனுடைய வலது கை பக்கத்தில் எழுந்தருளியிருப்பவரான ஸ்ரீ உவே. ஸ்ரீபெரும்பூதூர் மணவாள ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமியைப்பற்றி கீழ் 103-ஆம் பக்கத்திலேயே விஜ்ஞாபித்திருக்கிறேன். இந்த ஸ்வாமி அடியேனுக்கு ஸம்பந்தியானவர். [கநிஷ்டபுத்ரியின் மாமனார்]. இந்த ஸ்வாமி 85 திருநக்ஷத்ரங்களுக்கு மேற்பட்டவராயினும் இற்றைக்கும் நிரூடியாகப் பாராயணங்கள் செய்து போருமவர். ஸ்ரீ உவே. கற்பூரம் பட்டப்பா ஸ்வாமியென்கிற வேங்கடாசாரியர்; ஸ்ரீ உவே. தி. க. பார்த்தஸாரதி ஐயங்கார் இவ்விருவரைப்பற்றியும் கீழ் 103-ஆம் பக்கத்திலேயே சுருக்கமாகத் தெரிவித்திருக்கிறேன். இவ்விருவரும் ஸ்ரீபெரும்பூதூர் ஸ்திரவாஸிகள். பட்டப்பாஸ்வாமி உபயவேதாதிகாரியாயிருப்பதோடு மற்றும் பல யோக்யதைகளும் படைத்தவர். எம்பெருமானார் ஸன்னிதியில் விசேஷ கைங்கர்யதுரந்தரர். தி. க. பார்த்தஸாரதியும் விசேஷயோக்யதை படைத்தவர். அவருடைய திருத்தகப்பனார் (வைகுண்டவாஸி) அஷ்டகோத்ரம் ராமாநுஜாசாரியர் ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்தவர். அந்த ஸ்வாமியும் உபயவேதங்களிலும் மஹாஸமர்த்தராய் பகவத் விஷயாதிகாரியுமாயிருந்தவர். அடியேன் அத்யயநம் பண்ணுகிற காலத்தில் அந்த ஸ்வாமியைக் காஞ்சீபுரத்திலே சில வருஷங்கள் எழுந்தருளியிருக்கச் செய்து அவருடைய விசேஷக்ருபையைப் பெற்றிருக்கிறேன்.

இனி காஞ்சீ ஸ்திரவாஸிகளான உபயவேதாதிகாரிகளைப்பற்றித் தெரிவிக்கிறேன். ஸ்ரீ தி. வி. சிங்கராசாரியர். (மாதாமஹ) ஜீயர்ஸ்வாமிக்கு இவர் மற்றொரு தௌஹித்ரர். (இதை கீழ் மூன்றாவது பக்கத்திலேயே தெரிவித்திருக்கிறேன்). இவர் மாதாமஹ ஜீயர் ஸ்வாமி திருவடிகளில் அந்தரங்க கைங்கரியம் பண்ணி ஸ்வாமி ஸன்னிதியிலேயே திவ்யப்ரபந்தத்தைப் பூர்த்தியாக அதிகரித்தவர். அப்போதே காவ்யநாடக அலங்காரங்களும் வாசித்தவர். மாம்பள்ளம் ஸ்வாமி ஸன்னிதியிலே க்ரமாந்தம் ஓதினவர். ஸகல ஸ்தோத்ரங்களும் ரஹஸ்யங்களுமதிகரித்தவர். தேவப்பெருமாள் ஸன்னிதியில் அத்யாபக கைங்கர்ய துரந்தரராயுமிருப்பவர். வேதபாராயண கைங்கர்யத்திலும் நிஷ்ணாதர். ஸ்ரீ தி. அ. தொட்டயாசாரியர் என்னுடைய இளையமாமனாரின் மூத்தபுதல்வர். இவரும் கீழே விவரித்த வண்ணம் யோக்யதைகள் பெற்றவர். ஸ்ரீ கோ. க. அண்ணன் ராமாநுஜாசாரியர். கீழே பக்கம் 9-ல் ப்ரஹ்மசர்யாச்ரமத்தில் ஸேவை ஸாதிக்கின்றவரும் எனக்கு ஸஹாத்யாயியுமான வாதிகேஸரி யென்பவருடைய ஜ்யேஷ்ட புத்திரர். இவர் வயதில் சிறியவராயினும் யோக்யதைகளில் மிகப்பெரியவர் கண்ணெச்சில் படாமைக்காக விஸ்தரித்தெழுதாமல் நிறுத்திக் கொள்ளுகிறேன். மேன்மேலும் மிக்க பெரும்புகழ்படைக்க வேண்டியவரிவர். ஸ்ரீ மா. கு. நரஸிம்ஹாசாரியர். இவர் மிக்க இளமையிலேயே காஞ்சீபுரம் வந்து சேர்ந்து நமது பாடசாலையில் அந்வயித்து மாம்பள்ளம் ஸ்வாமியின் விசேஷகடாக்ஷத்திற்குப் பாத்திரமானவர். உபயவேத ஸ்தோத்ர ரஹஸ்யாதிகளில் நல்ல விரகர். விசேஷித்து க்ரமாந்தம் வெகு நன்றாகச் சொல்லவல்லவர். ஸ்ரீ தி. ந. ச. திருவேங்கடாசாரியர். (இவர் சிங்கம்பூண்டி ராஜூ ஸ்வாமியென்று ப்ரஸித்தர்) இவர் மாம்பள்ளம் ஸ்வாமி பக்கலிலே திவ்யப்ரபந்தம் பூர்த்தியாக அதிகரித்தவர். வேதமும் சில காண்டங்கள் அத்யயநம் செய்தவர். காவ்யநாடகாலங்காரங்களில் வல்லவராய் உத்தம பகவத் விஷயாதிகாரியாயிருப்பவர். காஞ்சீ தென்னாசார்ய தர்சநநிர்வாஹகர்களிலொருவர். பரமஸாத்விகர். திருவஹீந்திரபுரத்தில் மணவாளமாமுனிகள் ஸன்னிதியை [பார்லிமெண்டுவரை வழக்காடி] ஸ்தாபித்தவரான கீர்த்திமூர்த்தி. திருமலைநல்லான் சக்ரவர்த்தி ராமாநுஜாசாரிய ஸ்வாமியின் ஸ்வீக்ருதகுமாரரிவர். ஆக இவர்களெல்லாரும் நமது பாடசாலைக்கு அணிவிளக்காய்த் திகழுமவர்கள்.

## (பிருதாவளியளித்தல்)

பரமஸந்தோஷச் செய்தியொன்று இங்கு விஜ்ஞாபிக்கிறேன். ஸமீப காலத்தில் (அதாவது) 14—3—56 தேதி முதல் 30—3—56 தேதி வரையில் அடியேனுடைய குடிசையில் நடந்தேறின பஞ்சஷஷ்டி வத்ஸரபூர்த்தி விழாவின் முடிவில் இந்த ஸ்வாமிகளுக்கெல்லாம் அடியேனுடைய க்ருதஜ்ஞதாப்ரகாசந ரூபமாக பிருதங்கள் வழங்கியிருக்கிறேன். அந்த பிருதங்களை இங்கே விஜ்ஞாபிக்கிறேன்.

1. ஸ்ரீ உவே. மணவாள ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி, உபயவேதஸார்வபௌமர்.
2. ,, கற்பூரம் வேங்கடாசார்யர், உபயவேததுரந்தரர்.
3. ,, தி. க. பார்த்தஸாரதி ஐயங்கார், உபயவேதவிபூஷணர்.
4. ,, தி. வி. சிங்கராசாரியர், உபயவேதஸிம்ஹம்.
5. ,, தி. அ. தொட்டயாசாரியர், உபயவேதசக்ரவர்த்தி.
6. ,, மா. கு. நரஸிம்ஹாசாரியர், உபயவேதகண்டீரவர்.
7. ,, கோ. க. அ. ராமாநுஜாசாரியர், உபயவேதகேஸரி.
8. ,, தி. ந. ச. திருவேங்கடாசார்யர், ஸத்ஸம்ப்ரதாயதிவாகரர்.

அடியேனுக்குத் தெரிந்தவரையில் இன்னும் மூவர் உபயவேத பாரங்கதர்களாக விளங்குகின்றார்கள். (1) மதுரை கனபாடி சேஷாத்ரி ஐயங்கார். இவர் ஸம்ஸ்க்ருத வேதத்தில் மிகச்சிறந்த கனபாடியாயிருப்பதோடு திவ்யப்ரபந்தத்திலும் நல்லவிரகர். (2) திருவாலி பார்த்தஸாரதி ஐயங்கார். இவர் சில ஸம்வத்ஸரங்களாக சென்னைத் தியாகராயநகரில் வாழ்ந்து வருகிறார். இவரும் மிகவுயர்ந்த கனபாடியாய் திவ்ய ப்ரபந்தத்திலும் பாரங்கதர். உபயவேதங்களிலும் ஸஹோர்க்கத்திப் பரீக்ஷை கொடுக்கவல்லவர். (3) ஸ்ரீபெரும்பூதூர். உவே. அத்தங்கி. தெட்டு. திருமலாசாரியர் ஸ்வாமி. இவரும் உபயவேதங்களிலும் பூர்ணாதிகாரி. ஆக இம்மஹாநுபாவர்கள் யாவரும் நீடூழிகாலம் திசைவிளக்காய் விளங்கவேணுமென்று பகவத் பாகவத ஸந்நிதியிலே பிரார்த்தித்துக்கொண்டு மேல் செல்லுகிறேன்.

ஸ்ரீமான் மணவாள திருமலாசாரியர். இவருடைய உருவப்படம் மேலே பக்கம் 116ல் காணலாகும். இவர் என்னுடைய இளைய ஜாமாதா. ஸ்ரீபெரும்பூதூரில் ஸம்ஹிதை மூலம் அத்யயனம் செய்து காஞ்சீபுரியில் வந்து சேர்ந்து மாம்பள்ளம் ஸ்வாமி ஸந்நிதியில் பதக்ரமாதிகள் அதிகரித்தவர். ஸ்தோத்ர ரஹஸ்யங்களைப் பூர்த்தியாகவோதி திவ்ய ப்ரபந்தத்திலும் அநேக பாகம் அதிகரித்தவர். ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ஸம்ஸ்க்ருத ஸாஹித்ய க்ரந்தங்களும் வாசித்தவர். திருத்தகப்பனாரைப் போலவே வேதபாராயண கைங்கரியத்தில் நிஷ்ணாதர். நன்றாகச் சொல்ல வல்லவர்களில் பரிகணிதர். நமது பாடசாலை முதலானவற்றின் கார்ய நிர்வாஹகர்.

ஸ்ரீ திருமலை ஈச்சம்பாடி சடகோபாசாரியர். இவரும் மாம்பள்ளம் ஸ்வாமி திருவருளுக்கு இலக்கானவர்களில் பரிகணிதர். மாம்பள்ளம் ஸ்வாமி அத்யாபநம் ஆரம்பித்தவன்றே தொடங்கி அந்வயித்திருந்து க்ரமாந்தம் அதிகரித்து நன்றாகப் பாராயணம் செய்ய வல்லவர்களில் பரிகணிதர். தேவப் பெருமாள் ஸந்நிதி அத்யாபகர்களில் ஒருவர். பால்யத்தில் சடகோப நிலய பாடசாலையில் ஸாஹித்யமும் ஸித்தாந்த கௌமுதியும் வாசித்தவர். சிலகாலமாய் பாம்பேநகரில் வாழ்கிறார்.

மாம்பள்ளம் ஸ்வாமியிடத்தில் ப்ரஹ்மவித்யாக்ரஹணம் செய்தவர்களில் ஒருவர் மாத்திரமே நம்முடைய தௌர்பாக்யவசத்தினால் இவ்விபூதியைவிட்டு அகன்றார். அவருடைய திருநாமம் ஸ்ரீ காழியூர் தி. த. ரங்காசார்ய ஸ்வாமி யென்பது.

அவருடைய திருவுருவத்தை இதன்கீழ்விளங்கும் காலக்ஷேபகோஷ்டியில் ஸேவிக்க இந்தகோஷ்டியில் கீழ்வரிசையில் முதலில்ஸேவைஸாதிப்பவர் அந்த ரங்காசார்யரே அவர் வியாகரணசாஸ்த்ரமும் வாசித்திருந்தார். நாலாயிரதிவ்யப்ரபந்தமுமதிகரித்து தேவப்பெருமாள் ஸன்னிதியில் அத்யாபக கைங்கரிய நிஷ்டராகவுமிருந்தார்.



1930ஆம் வருஷத்தில் நமது வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் நடந்த திருமந்த்ரார்த்த காலக்ஷேப கோஷ்டி

அவர் மாம்பள்ளம் ஸ்வாமி ஸன்னிதியில் ஸம்ஹிதைமட்டும் அத்யயனம் செய்து பலவாண்டுகள் வேதபாராயண கைங்கரியங்களிலும் அந்வயித்திருந்தார். அவரொருவர் தவிர மற்றவர்கள் பெரும்பாலும் இவ்விபூதிக்கு அணிவிளக்காயிருந்துகொண்டு பகவத் கைங்கர்ய நிரதர்களாயிருக்கின்றனர்.



கோதாவரி ஜில்லா ஏலூரில் நடந்தவொரு வைதிக பரிஷத்தின் ஒருபகுதி

இவ்வுருவப்படத்தில் அடியேனுடைய வலதுகைப்பக்கத்தில் முதல்வராக உட்கார்ந்திருப்பவர் ஸ்ரீமான் கோ. க. அண்ணன்ராகவாசாரியரென்பவர். [இவர்க்கு ஸ்ரீநிவாஸாசாரியரென்கிற பெயர் உலகவழக்கிலுள்ளது. 'ஜடப்ரோல் சீமாச்சு' என்று ஸ்வகீயர்களின் கோஷ்டியில் வழங்கப்படுவர்]. இவர் நமது பாடசாலை ஏற்படுவதற்கு முன்னமே தமது திருத்தகப்பனரிடத்தில் ப்ராஹ்மணம் முழுவதும் மிக்க இளமையிலேயே ஓதியிருந்து பிறகு நமது பாடசாலையில் ஸம்ஹிதா பதக்ரமங்களை மாம்பள்ளம் ஸ்வாமி ஸன்னிதியில் ஓதினர். திவ்ய ப்ரபந்தத்தையும் உசிதமாக அதிகரித்து ஆசார்ய திவ்ய ஸூக்திகளிலும் பரிசயம் கொண்டவர். ப்ராஸங்கிகமாக இங்கே தெரிவித்துக் கொள்வதாவது, மேலே கண்ட ஏலூர் பரிஷத்தின் படத்தில் அடியேனுடைய வலது கையின் அடுத்த பக்கத்தில் ஸேவை ஸாதிப்பவர் நூஜிவீடு ஸம்ஸ்தானத்தில் வாழும் நடாதூர் சடகோபாசாரியர் என்பவர். இவர் ஸ்ரீவான மாமலை ஸ்வாமி திருவடி; ஸாஹித்யத்தில் நல்ல வ்யுத்பந்நர். ஸ்ரீராமாயண பகவத் விஷயாதிகளை நன்கு அதிகரித்துப் பரமரஸிகரானவர். இளமை தொடங்கி அடியேனுக்குப் பரமாப்தர். தமது பெரிய தகப்பனர் (வைகுண்டவாஸி) ராமாநுஜாசார்யருடைய நியமனத்தினல் நமது பாடசாலைக்கும் யதோசிதம் உதவி செய்து வருபவர்.

ஸ்ரீமான். (வைகுண்டவாஸி) நாட்டேரி பரனூர் ஸ்ரீநிவாஸாசாரியர். காஞ்சீ ப்ராந்தத்தில் நாட்டேரி யென்னு மக்ரஹாரத்தில் தோன்றி அவ்விடத்திலேயே பரி

பூர்த்தியாக வேதாத்யயநம் செய்தவிவர் காஞ்சீபுரியிலேயே ஸ்திரவாஸ ரஸிகராகிப் பத்தெட்டு வருஷம் எமது வேதபாராயண கைங்கரியத்திற்கு மிகவும் ஸஹகாரியா யிருந்தார். இவர் நன்றாகச் சொல்ல வல்லவர்களில் ஒருவராயிருந்தபடியால் இவரு டைய ஸஹயோகம் எங்களுக்கு மிகவும் பயன்பட்டது. அந்த கால விசேஷத்தை இப்போது நினைக்கும்போது வருத்தமே யுண்டாகிறது.

ஸ்ரீமான் (வைகுண்டவாஸி) புதுத்துறை ஸ்ரீரங்காசாரியர். இவர் திருவாலி திருநகரி ஸமீபத்தில் புதுத்துறையில் ஜனித்து, காழிச்சீராம விண்ணகரம் வேதபாடசாலை யில் பரிபூர்ணமாக அத்யயனம் செய்து கனபாடியாகவுமிருந்தார். இவர் ஒருகால் யாத்ராவசமாகக் காஞ்சிக்கு வந்தபோது இவர் காஞ்சியிலேயே வஸிப்பது நல மென்று தோன்றி இவர்க்கு அஸ்மத்குல கூடஸ்தர் ஸன்னிதியில் திருவாராதன கைங்கரியமளித்து இவரை இவ்விடத்திலேயே நிறுத்திக்கொண்டேன். நான்கு வருஷ காலமிருந்து எங்களுக்கு மிகவும் உபகாரகராயிருந்தார்.

ஸ்ரீ அனந்தேரி ஸ்ரீநிவாஸாசாரியர். இப்போது சிலவாண்டுகளாகத் திருவல்லிக் கேணியில் வாழுமிவர் காஞ்சியில் பலவருஷங்கள் நமது பாடசாலையில் அந்வயித் திருந்து க்ரமாந்தம் பூர்த்தி செய்துகொண்டவர். இவருடைய மாமனர் ஸ்ரீ உவே (வைகுண்டவாஸி) தாமல் விஜயராகவாசாரியர் ஸ்வாமி யென்பவர் இளமையில் வேறிடங்களில் வேதாத்யயனத்தைப் பூர்த்தியாகச்செய்து ஸமர்த்தரானவர். அந்த ஸ்வாமி அடியோங்கள் அத்யயநம் ஆரம்பிப்பதற்குப் பலவாண்டுகள் முன்னமே காஞ்சீபுரியில் நித்யவாஸமாக வந்து சேர்ந்திருந்தபடியால் அவர் எங்களுடைய அத்யயநத்திற்கும் ஸந்நிதி பாராயணங்களுக்கும் மிக வுதவியாயிருந்து வந்தார். நமது பாடசாலையில் அவரும் உதவியாசிரியராக இருபது வருஷகாலம் இருந்து வந்தார். அவரிடத்திலும் அடியேன் க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ணியிருப்பவன். கீழே (பக்கம் 43ல்) ஸேவை ஸாதித்தருளாநின்ற ஸ்ரீமதுபயவே. வித்வான். அ. வீ. நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியின் திருத்தம்பியாரான அகரம் ஸ்தல சயனத் துறைவார் ஸ்வாமியும் வேதாத்யயநஸம்பந்நர்களில் மிகச் சிறந்தவர். அவரும் நமது பாடசாலையில் பல வருஷங்கள் உபாத்யாய பதவியை யலங்கரித்திருந்து நாலைந்து வருஷங்களுக்கு முன் பரமபதித்தார். இந்த ஸ்வாமி ஸம்ஸ்க்ருத ஸாஹித்யத்தில் மிக வல்லவராய் திவ்யப்ரபந்தமுமோதி பகவத் விஷயாதிகாரியாய் விளங்கினவர். இவரிடத்திலும் பெருநன்றி பாராட்டுகிறேன்.

ஆக இவ்வளவும் சிறப்பித்துக் கூறப்பட்டவர்கள் மாம்பள்ளம் ஸ்வாமியின் கீர்த்திக்கு விஜயத்வஜமாய் விளங்குமவர்கள். உண்மையில் இவர்களால்தான் தற்காலம் காஞ்சீபுரியானது வைதிகஸ்ரீ விளங்க நின்றது. நமது பாடசாலையில் அசநாச்சாதந ஸௌகர்யங்களைப் பண்ணிவைத்து தேசாந்தரி வித்யார்த்திகளை வரவழைத்து ஆதரித்துப் பலவருஷகாலம் அத்யயநம் நடத்தி வைக்கப்பட்டது. அமுதுபடி ரேஷன் ஏற்பட்டபோது அதற்கு விச்சேதமுண்டாயிற்று. அப்போது தேசாந்தரி வித்யார்த்திகள் அரைகுறையான யோக்யதைகள் ஸம்பாதித்தவர் களாய் ஜீவிகார்த்தமாக வெவ்வேறு தொழில்களில் அமர்ந்து பிரிந்து போயினர். புதிதாக வேதாத்யயனம் செய்பவர்கள் எங்குமே துர்லபர்களாக இருக்கின்றார்கள். ஆனாலும் "ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல்வாழி.......செய்ய மறைதன்னுடனே சேர்ந்து" என்று இங்ஙனே பலபடி பூருவர்கள் செய்தருளியிருக்கும் மங்களா சாஸந பலத்தினால் ஒரு குறையு மிராதென்றே நம்பியிருக்கிறபடி. ஆண்டாள் "திங்கள் மும்மாரிபெய்து" என்றருளிச் செய்ததை உபபாதிக்கும்போது "வேதமோதிய வேதியர்க்கு ஓர்மழை" என்று முந்துற முன்னம் இதுவே சொல்லப்படுகிறது. ஆகவே உலகுக்கு வேதாத்யயனத்தினால்தான் ஸுபிக்ஷமேற்படவேணும். பரம காருணிக பகவத் ஸங்கல்பத்தினால் இது குறையற நடந்து வருமாக.

ஸ்ரீமாம்பள்ளம் ஸ்வாமி அடியோமுக்கு அத்யயனம் சொல்லிவைத்தபோது அவரிடத்தில் அடியேன் அநுபவித்த அதிசயங்களை யெல்லாம் எழுதிக்கொண்டு போனால் அதுவொரு மஹாபாரதமாகும். நூல் விரிவுக்கஞ்சிச் சிலவற்றைமட்டு மெழுதுகின்றேன். சந்தை சொல்லுவதை நியமேந பின்மாலை வேளைகளிலேயே நடத்தி வருவர். ஆலோசிப்பது, மயங்குவது, ஸம்சயிப்பது, விபரீதமாகச் சொல்லுவது, ஜடைபோடுவது இத்யாதி தோஷங்களிலே ஒன்றுக்கும் லவலேசமுமிடமில்லாதபடி ஸுபரிஷ்க்ருதமாகச் சந்தை சொல்லுவர். வீதியில் செல்லுகிறவர்கள் வேதமறியாதவர்களும் வேதத்தில் பகையுள்ளவர்களுங்கூட ஸ்தப்தர்களாய் நின்றுகொண்டே கேட்டுக் களிப்பர்கள். காலை ஏழுமணி முதல் பதினொருமணி வரைக்கும் கூடவே யிருந்து ஆவ்ருத்தி சொல்லி வைப்பர். பல பாடசாலைகளில் உபாத்யாயர்கள் வித்யார்த்திகளிடம் வேத புஸ்தகத்தைக் கொடுத்து 'இதைப் பார்த்துத் தப்பாமல் சொல்லுங்கள்' என்று கட்டளையிட்டுவிட்டுத் தாம் சயனிப்பர்கள், பலகாரியங்கள் பார்க்கப் போய்விடுவர்கள். மாம்பள்ளம் ஸ்வாமியிடத்தில் இந்த வழக்கம் ஒரு நாளும் கண்டதில்லை. வித்யார்த்திகளின் கையில் புஸ்தகம் கண்டால் "நான் இருக்கப் புத்தகம் எதற்கு?" என்று சொல்லி நிர்தாக்ஷிண்யமாகப் பறித்து அப்பாலெறிந்து விடுவர்.

அடியேனுக்கு முதலில் ஏழெட்டுமாதம் வேதம் பிடிபடவில்லை; ஸம்ஹிதையோடு கூடவே பதக்ரமங்களையும் சொல்லிக் கொடுத்து வந்தபடியால் ஸம்ஹிதையில் ஒருவிதமான ஸ்வரம், பதத்தில் மற்றொருவிதமான ஸ்வரம், க்ரமத்தில் விலக்ஷணமான பத்ததி, த்ரிக்ரமமென்பது, ப்ரக்ரஹமென்பது, அவக்ரஹமென்பது இப்படியாக பேதப்பட்டு வருவதில் காட்டிலே கண்ணைக்கட்டிவிட்டது போலிருந்ததடியேனுக்கு. எதாகிலும் சாக்கு போக்கு சொல்லி அத்யயனத்தில் நின்றும் விலகிக்கொள்ளலாமாவென்றும் அடிக்கடி தோன்றினதுண்டு; பதக்ரமங்களை விட்டு ஸம்ஹிதையை மட்டும் அத்யயனம் செய்வோமா என்றும் நினைத்ததுண்டு. பதக்ரம மோதாவிட்டால் ஸன்னிதி புறப்பாடுகளில் வேதபாராயணம் செய்ய முடியாதேயென்று பதக்ரமமோதுவதிலும் அபிநிவேசம் அறவில்லை. இன்னது செய்வதென்றே தோன்றாமல் மிகவும் திகைத்திருந்தேன். ப்ரமாதீச௵ ஆவணி மாதத்தில் திருவாதிரையன்று அத்யயநம் தொடங்கினது. உடனே ஐப்பசி மாதத்தில் பொய்கையாழ்வாருத்ஸவத்திலேயே புறப்பாட்டில் க்ரமபாராயணம் ஆரம்பம் செய்தாயிற்று. அப்போது ஒரு ப்ரச்நந்தான் பதக்ரமங்களோடு முடிவு பெற்றிருந்தது. அந்தவொரு ப்ரச்நத்தை வைத்துக்கொண்டே பொய்கையாழ்வாருடைய பத்துநாளுத்ஸவத்திலும் திருவீதிபாராயணத்தை வாத்யார்ஸ்வாமி வெகு ஆச்சரியமாகச் செய்வித்தருளினர். அடுத்த பங்குனி மாதத்தில் ஸ்ரீயதோக்தகாரிக்கு ப்ரஹ்மோத்ஸவம் ப்ராப்தமாயிற்று. அப்போது நான்கு ப்ரச்நங்கள் மட்டுமே க்ரமத்தோடு ஆயிருந்தது. அந்த நான்கு ப்ரச்நங்களைக் கொண்டே அந்த ப்ரஹ்மோத்ஸவத்திலும் ஆச்சரியமாகக் கைங்கரியம் செய்வித்தருளினர் நம்உபாத்யாயஸ்வாமி. நாலைந்து காண்டங்கள் நிறுத்திப் பாராயணஞ்செய்து தலைக்கட்டக் கூடியதான ப்ரஹ்மோத்ஸவத்தை நான்கு ப்ரச்நங்களைக்கொண்டே முடிக்க நேர்ந்தது. அப்போதுதான் இந்த வேதம் அடியேனுக்குப் பிடிபட ஆரம்பித்தது. அந்த நான்கு ப்ரச்நங்களையே தினந்தோறும் திருப்பித் திருப்பி ஆர அமரப் பாராயணம் செய்ய நேர்ந்தபடியால் பதஸ்வரூபங்களைப்பற்றின விமர்சம் செய்ய ப்ராப்தமாகித் தெளிவு ஏற்படத் தொடங்கிற்று. வித்யாரண்ய பாஷ்யத்தையும் பட்டபாஸ்கர பாஷ்யத்தையும் சேகரித்துக் கொண்டு ஒவ்வொரு பதத்தைப்பற்றியும் ஆராய்ச்சி செய்யத் தொடங்கினதில் பரமத்ருப்தி விளைந்ததுடன் வைதிகவுலகுக்கும் விலக்ஷணமான வுபகாரம்

செய்ய ஸௌகரியமேற்பட்டது. அதைப்பற்றி மேலே விவரிக்கலாகும். அந்தஃகரண சுத்தியுடன் விஜ்ஞாபிப்பதொன்றே; திருவிருத்தத்தில் "பெருங்கேழலார் தம் பெருங்கண்மலர்ப் புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தாரிவ்வகாலம், ஒருவர் நம்போல் வருங் கேழ்பவருளரே" என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறபடி, மாம்பள்ளம் ஸ்வாமியின் பரமபவித்திரமான கடாக்ஷவீக்ஷணமொன்றுதான் அடியேனுக்கு விளைந்த வேதாத்யயநமஹா ஸம்பத்திக்குத் தலையான காரணம். "एकयैव गुरोर्दृष्ट्या द्वाभ्यां वाऽपि लभेत यत्। न तत्तिसृभिरष्टाभिस्सहस्रेणापि कस्यचित् — ஏகயைவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம் வாபி லபேத யத், ந தத் திஸ்ருபிரஷ்டாபிஸ் ஸஹஸ்ரேணாபி கஸ்யசித்." என்று தேசிகன் பணித்தபடி ஆசார்யனுடைய வெளிக்கண் பார்வையொன்றே ஸகல ச்ரேயஸ்ஸுக்களுக்கும் மூலகந்தமாகும்; அத்தோடு உட்கண்கடாக்ஷமும் கூடிவிட்டால் "இல்லையெனக்கெதிரில்லையெனக்கெதிரில்லையெனக்கெதிரே" என்று கூத்தாடக் குறையில்லை. அடியேனிடத்தில் உபயகடாக்ஷங்களையும் குறையறச் செய்தருளினவர்களில் விசேஷித்துக் குலாவத்தக்கவர் மாம்பள்ளம் ஸ்வாமியே. ஏதோ உத்ஸாஹத்தினால் அடியேன் அத்யயனத்தில் இறங்கினேனேயொழிய அதற்குப்போதுமான அவகாசம் சிறிதுமிருந்ததில்லை.

அடியேன் பலபல துறைகளில் க்ரந்தங்களெழுத ஆரம்பித்ததும் அதே ஸமயத்தில்தான். அத்யயனம் ஆரம்பித்தநாள் தொடங்கி முடித்தநாள் வரையில் ஸ்ரீமத் காதிஸ்வாமி வடநாட்டிலேயே ப்ரபல யாத்திரையில் எழுந்தருளியிருந்தபடியால் அந்த ஸ்வாமியின் நியமனங்களை சிரஸாவஹித்து நிர்வஹிக்க வேண்டிய காரியங்களும் பலபல விருந்தன. மஞ்ஜுபாஷிணீ என்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையோடுங்கூட ப்ரஹ்மவித்யாஎன்கிற தமிழ்ப்பத்திரிகையும் புதிதாக ஆரம்பித்து நடத்தி வரும்படி அப்போது ஸ்வாமி நியமனமாகியிருந்தது. அவைதவிர ஸ்வாமியின் அச்சுக்கூடத்தில் அநேக க்ரந்தமுத்ரணங்களையும் பொறுப்பாகக் கவனித்துக்கொள்ள வேண்டியிருந்தது. இதர திவ்யதேச மஹோத்ஸவ பரிபாலனங்களையும் விடாமல் செய்து போர வேண்டியிருந்தது. இவ்வண்ணமாக ஏற்பட்டிருந்த கார்ய நிர்ப்பந்தங்கள் எண்ணிறந்தவை. இவற்றினிடையே வேதத்தை ஆவ்ருத்தி சொல்வதற்கு அவகாசம் அரிதாகவேயிருக்கும். "अष्टवर्षं ब्राह्मणमुपनयीत तमध्यापयीत" என்றபடி ப்ராப்த காலத்தில் [அதாவது *கிளரொளி யிளமையில்] அத்யயநம் பண்ணினாலே அஹோராத்ரமும் உருப்போட வேண்டியிருக்கும். வேதாத்யயநத்திற்கு நிலமல்லாத வயஸ்ஸிலே அடியேன் வேதமோதத் தொடங்கி அதற்குப் போதுமான அவகாசமும் கிடைக்காமல் மிகத் தளர்ந்தேன். பின்மாலை வேளையும், காலை 7 மணிமுதல் 11 மணிவரைக்கும் மற்றொரு வேளையும் ஆக இவ்வளவுகாலமே அடியேனுடைய வேதாத்யயனத்திற்குக் கிடைத்த அவகாசம். இந்த ஸ்வல்பாவகாசத்தில் என்ன ஓதமுடியும்? மாம்பள்ளம் ஸ்வாமியோ "மஹாப்ரபோ! அழுதாலும் பிள்ளை அவளே பெற்றாக வேணும்" என்றிப்படி விசித்ர விசித்ரமாக ஸாதிப்பர். அநத்யயநதினங்களில் வாயைத் திறக்கவே கூடாதென்று கடுமையாகக் கண்டிப்பர். இப்படிப்பட்ட நிலைமையில், ஸாக்ஷாத் பரப்ரஹ்மஸ்வரூபியான அந்த ஸ்வாமியின் கருணைகனமான கடாக்ஷமொன்றே கார்யகரமாயிற்று. மஹாத்மாக்களின் கடாக்ஷத்திற்குக் கார்யகரத்வமுண்டென்பதை உண்மையில் அந்த ஸ்வாமி பக்கலிலேதான் கண்டேன். "இத்தனை பேர்களும் கைங்கர்ய நிர்வாஹகர்களாக வேணும்" என்று அந்த ஸ்வாமி குளிரக் கடாக்ஷித்தருளினவிதம் வாசாமகோசரம். இதில் அடியேனுடைய ஆனந்தத்தை அந்தர்யாமியே அறிவன்.

அத்யயனமாரம்பித்து ஐந்து ஸம்வத்ஸரம் வரையில் மாதாமஹ ஜீயர் ஸ்வாமி காஞ்சியிலேயே எழுந்தருளியிருந்தார். அடியேன் வேதமோதவிழிந்தது

அந்த ஸ்வாமிக்கு மிகவும் அநிஷ்டமாயிருந்தது. தாம் மஹாபரிச்ரமங்கள் பட்டுக் கற்பித்தருளின கல்விகள் இந்த வேதாக்நியில் பஸ்மமாய் விடுமேயென்று திகிலடைந்து விட்டார். "புத்திரனுக்குச் சொல்லி வைத்தேன்; அவன் விறகு தொட்டி வியாபாரத்திலும் கிராமக்கணக்கு வேலையிலும் இறங்கி விட்டான்; பேரனுக்குச் சொல்லி வைத்தேன்; இவன் வேதம் ஜடைபோட இறங்கி விட்டான்" என்று கண்ணீர் விட்டுக் கொண்டே பலரிடத்திலும் மிகவும் அழுவர் ஜீயர்தாதா. மைஸூரில் ஆட்கொண்டவில்லி கோவிந்தாசாரியர் என்பவர் ப்ரஸித்தர். அவர் லௌகிக வைதிக உபயகோஷ்டியிலும் ஸுப்ரஸித்தர். நமது ஜீயர்ஸ்வாமிக்கு சிஷ்ய ப்ராயர். அடிக்கடி ஜீயர் ஸ்வாமியை ஸேவிக்கக் காஞ்சிக்கு வருவர். அவர் ஒரு விசை காஞ்சிக்கு வந்தபோது மடத்திலிறங்கி ஸ்வாமியைத் தெண்டனிட்டுக் குசலப்ரச்நம் பண்ணினபோது "பேரன் அண்ணு பாங்கா?" என்று கேட்டதும் ஜீயர் ஸ்வாமி விக்கிவிக்கி யழுகிறார். அதைக்கண்ட அவர்க்கு விபரீத சங்கை யுதித்தது. (அடியேனை உயிர் மாய்ந்தேனுகவெண்ணி) "என்ன! என்ன! எத்தனை நாளாயிற்று? அடியேனுக்கு ஒன்றும் தெரிவிக்கவேயில்லையே" என்று அவரும் அழுதுகொண்டே வினவுகிறார். அப்போது பக்கத்திலிருந்த ஸ்ரீஸ்வாமி கிங்கரனை விஞ்சிமூர் (அப்பளாம்) ராமாநுஜாசாரி "திருப்பேரனார்க்கு ஒரு ஆபத்துமில்லை; பாங்காகவேயிருக்கிறார்; ஏதோ அவரிடத்தில் ஸ்வாமிக்குத் திருவுள்ளக் கன்றுதல்" என்று சொல்ல, தேறி நின்று. பிறகு ஸ்நாநாதிகளை முடித்துக் கொண்டு போஜநமுமான பிறகு ஸாவகாசமாக விசாரிக்கையில் "அடியேன் வேதமோதுவது அநேக யோக்யதைகள் நஷ்டமாவதற்கும் அப்ராப்தமாவதற்கும் ஹேது" என்று ஜீயர் ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டு அந்த ஆட்கொண்டவில்லி ஸ்வாமி என்னிடமோடி வந்து குசலப்ரச்நங்கள் செய்து விட்டு "தேவரீர் இளமையிலேயே வேதாத்யயநம் செய்திருந்தால் அது உசிதமாயிருக்கும்; இப்போது அதில் இறங்குவது உசிதமேயன்று; ஜீயர் ஸ்வாமியும் அபரிமிதமாக க்லேசப்படுகிறார்; தேவரீர் இதை விட்டுவிட வேணும்" என்று கையைப் பிடித்துக் கொண்டு நிர்ப்பந்தமாகக் கூறத்தொடங்கினர். மைஸூரில் அந்த ஸ்வாமியின் பங்களாவுக்கு அடியேன் ஒருமுறை போயிருக்கிறேன்; அந்த பங்களாவுக்கு "வேதக்ருஹம்" என்று விலாஸமிட்டிருக்கிறார்; அவருடைய தபால் விலாஸத்திலும் வேதக்ருஹமென்பது உண்டு; இதையறிந்திருந்த அடியேன் "வேதக்ருஹத்தில் வாழ்கிற தேவரீர் இப்படிச் சொல்லலாமா?" என்று கேட்கிறேன். அதற்கு அவர் சொல்லுகிறார்—"என்னுடைய தேவிக்கு வேதம்மா என்று பெயர்; அவளுடைய ப்ரீதிக்காக 'வேதக்ருஹமென்று யாரோ சிலர் பெயரிட்டார்கள்; வேதத்தைப் பற்றின பெயரன்று; எனக்கு வேதத்தில் விருப்பமுமில்லை. தேவரீர் வேதமோதுவதை நிறுத்திக் கொண்டால்தான் தாதாவுக்கு ப்ரியமாயிருக்கும்" என்று. எதற்கும் அடியேன் இணங்கவில்லை. மாம்பள்ளம் ஸ்வாமியின் கடாக்ஷம் அமோகமாதலால் அது இத்தகைய பலபல இடையூறுகளையெல்லாம் அநாயாஸமாகவே அகற்றியது. ஜீயர் ஸ்வாமிக்கும் இதில் க்ரமேண அளவுகடந்த ப்ரீதியுண்டாயிற்று. ஸன்னிதிகளில் வேதபாராயண கோஷ்டி லோகோத்தரமாக நடந்துவரத் தொடங்கினபடியால் அடிக்கடி அதை ஆனந்தமாகக் கடாக்ஷித்து *பொலிக பொலிகவென்று பலகால் மங்களாசாஸனமும் செய்தருளப்ராப்தமாயிற்று.

ஜீயர் ஸ்வாமிக்குத் திருமேனியில் அபாடவம் தோன்றத் தொடங்கின பிறகு பின்மாலை வேளைகளில் திருக்கண்வளர்த்திக்கு இடையூறாக மடத்தில் அத்யயநகோஷம் செய்ய அஸௌகரியமுண்டாயிற்று. அதனால் அதே வீதியில் ஸ்ரீஉவே. சாத்துப்படி ஆராவமுதய்யங்காருடைய திருமாளிகை வாசல் திண்ணை மிகவும் விசாலமாயிருந்தபடியால் அதிலே அவர் பந்தல் போட்டுக் கொடுத்து அவ்விடத்தில் பாடசாலையை நடத்தி வரும்படி மிகுந்த ஆதரவோடு கோரினபடி

யால் இரண்டொரு ஸம்வத்ஸரம் அங்கே நடைபெற்றது. ஸ்ரீ உவே. ஜடப்ரோல் கோ. க. அ. திருவேங்கடாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி)க்கு வடவண்டை மாடவீதி கீழ்கோடியிலும் ஒரு திருமாளிகையுண்டு; அது அப்போது காலியாயிருந்தபடியால் ஒரு வருஷகாலம் அதிலும் பாடசாலை நடைபெற்றது. இப்படி ஜங்கம பாடசாலையாக இராமல் ஸ்தாவர பாடசாலையாக இருக்க வேணுமென்று தோன்றிக் கீழண்டை மாடவீதியின் முனையில் மேற்குபார்த்த இரண்டு க்ருஹங்களை விலைக்கு வாங்கி ஒன்றைப் பாடசாலையாகவும் மற்றொன்றைப் பாடசாலைக்குச் சேர்ந்த ஹாஸ்டலாகவும் 1916—18 வருஷங்களில் நிர்மாணம் செய்வித்தேன். இவையிரண்டும் மூன்றுமித்தையடுக்கு உள்ளவையாதலால் ஏறக்குறைய அறுபதினாயிரம் ரூபாவரையில் செலவுசெய்து பரமஸுந்தர மந்திரமாகவும் அதிரம்ய ஹர்ம்யமாகவும் நிர்மாணம் செய்விக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஸமயத்தில் அடியேனுக்கு சென்னைப்பட்டணம் இன்ன திக்கிலிருக்கிறதென்பதும் தெரியாது. ஒருவரிடம் சென்று ஒரு பைஸா யாசனை செய்யாமலே திசைதொறும் விளங்குகின்ற பக்தசிகாமணிகளும் பாகவதோத்தமர்களும் சிஷ்யவர்க்கங்களும் செய்தியறிந்து மகிழ்ந்து வழங்கிய பொருளைக்கொண்டும் கடன் வாங்கியும் நிர்மாணம் செய்யப்பட்டவிது அடியேனுடைய க்ரந்தரசனைகள் போலவே ஸத்யஸங்கல்பனுடைய ஸங்கல்பமாத்ரத்தினாலமைந்ததென்னில் இது ஆத்மஸ்துதியாகக் கொள்ளத்தக்கதன்று. ஆத்மானந்த பரீவாஹவிஜ்ஞாபநமத்தனை. மேலேசொன்ன இரண்டு பவனங்களும் சாச்வதமாகக் காப்பாற்றப்பட வேண்டி, சென்னையில் பிரபல வியாபாரிகளாக வாழ்கின்ற ஹோ அண்ட் கோ தலைவர்களான உப்பட்டூர் பெருமாள் செட்டி அண்டு ஸன்ஸ் அவர்களுக்கு ஸர்வஸ்வாதீநமாக ஆக்கிவைத்து இற்றைக்கு ஐந்து வருஷமாகிறது. பாடசாலைக்கட்டிடம் வித்யாபவனமாகவே விளங்கி வருகிறது. ஹாஸ்டல்கட்டிடம் ராமானுஜகூடமாகி தேசாந்தரிகளுக்கு ஸுகவாஸஸ்தானமாக உபயோகப்பட்டு வருகிறது. வித்யாலயத்தின் ஸ்தலவைசால்யத்திற்குத் தக்கபடி மேன்மேலும் வித்யார்த்திகள் சேர்ந்து வித்யாபிவிருத்தியாவதற்கு இடமில்லாமலிருக்கிறதே யென்கிற குறையைப் பெருந்தேவி மணவாளனை பேரருளாளன் தீர்த்து வைக்க ஸங்கல்பித்தருள வேணும்.

நமது பாடசாலைக்குச் சொந்தமாக திவ்ய பவனங்களிரண்டு ஏற்பட்டபின்பு பாடசாலையில் உபய வேதவேதாந்த ப்ரவசநம் அபிவிருத்தியடைய ஆரம்பித்தது. ஸந்நிதிவீதியில் நம்பிள்ளை ஸன்னிதி அமைந்த அதிசயத்தைப்பற்றி மேலே ப்ரஸ்தாவிக்கப்ராப்தமாகும். அந்த ஸன்னிதி அமைவதற்கு முன்பு ப்ரவசனங்கள் பாடசாலையிலேயே நடந்துவந்தன. அந்த ஸமயத்தில் அந்வயித்திருந்த கோஷ்டியாரின் திருவுருவப்பட மொன்று கீழே பக்கம் 108ல் பிரசுரம் செய்யப்பட்டிருக்கின்றது. நம்பிள்ளை ஸன்னிதி அமைந்த பிறகு பாடசாலையைச் சேர்ந்த வேதாந்த ப்ரவசந விபாகம் மட்டும் நம்பிள்ளை ஸன்னிதிக்கு மாற்றப்பட்டது. அந்த கோஷ்டியின் ஒரு பகுதி அடுத்தபக்கத்தில் காட்சி தருகின்றது. மற்றொரு பகுதி 117ஆம் பக்கத்தில் காணத்தக்கது. பக்கம் 115ல் காணும் உருவப்படத்தில் அடியேனுடைய வலதுகைப் புறத்தில் இருப்பவர் ஸ்ரீசைல க்ருஷ்ணமாசார்ய ரென்பவர் மாம்பள்ளம் ஸ்வாமியின் பாகிநேயர். இவர் இளமையில் ஸ்ரீபெரும்பூதூர் வித்யாலயத்தில் ஸாஹித்யமும் ந்யாய ப்ரகரணமும் அதிகரித்து வேதவேதாந்த வித்யாக்ரஹணத்திற்காகக் காஞ்சியில் ஸ்திரவாஸமாக வந்து சேர்ந்தார். மாதுலரான மாம்பள்ளம் ஸ்வாமி ஸன்னிதியிலே திவ்யப்ரபந்த ஸ்தோத்ரங்களைப் பூர்த்தியாக அதிகரித்து ஸம்ஹிதையில் சில காண்டங்களும் அருணகாடகாதிகளும் ஓதி இப்போது வேதாந்த நிஷ்ணாதரா யிருந்து வருகிறார். நல்ல வ்யுத்பத்தியும் வாக்மித்வமு முடையவர். ஸகல ரஹஸ்யங்களிலும் ஸகல ஸ்தோத்ரங்களிலும் மிக வல்லவர். குன்றபாக்கத்தில் ப்ரஸித்த ந்யாய வேதாத்த வித்வந்மணியாக எழுந்தருளியிருந்த (வைகுண்ட

வாஸி) ஸ்ரீமதுபயவே. அனந்தாண்பிள்ளை ராமாநுஜாசார்யஸ்வாமியின் பௌத்ரர். இவருடைய வலதுகைப் புறத்திலிருப்பவர் கபிஸ்தலத்தி லெழுந்தருளியிருந்த



1. கோயில் பிரதிவாதிபயங்கரம் கண்ணமாசாரியரென்கிற ராமாநுஜாசாரியர்.
2. திருமலை அனந்தாண் பிள்ளை கிருஷ்ணமாசாரியர்.
4. காழியூர் தி. த. சேஷாத்ரி ஐயங்கார்.
5. ஸ்ரீபெரும்பூதூர் கிடாம்பி ரங்கஸாமி ஐயங்கார்.

கோயில் பிரதிவாதி பயங்கரம் வித்வான் ஸ்ரீநிவாஸா சார்ய ஸ்வாமியின் கநிஷ்ட புத்ரர். திவ்யப்ரபந்த ரஹஸ்யாதிகளைப் பரிபூர்த்தியாக அதிகரித்தவர். தமிழிலக்கண விலக்கியங்களில் நல்விரகர். ஆங்கிலத்திலும் தேர்ச்சி பெற்றுப் போதநாசிரியராக இருந்து வருவதோடு வேதாந்த வித்யா நிரதருமாக வுள்ளார். அடியேனுடைய இடதுகைப் புறத்திலிருப்பவர் காழியூர் திருமலை தட்டை சேஷாத்ரி ஐயங்காரென்பவர். காழியூரென்னு மக்ரஹாரத்தில் ஞான மனுட்டானமிவை நன்றாகவே யுடையராயிருந்த (வைகுண்டவாஸி) பட்டப்பா ஸ்வாமியென்று ப்ரஸித்தரான தட்டை சீமாச்சார் ஸ்வாமியின் ஜ்யேஷ்ட புத்ரரான ஸ்ரீகோபாலாசார்ய ஸ்வாமியின் புதல்வரானவிவர் தாதாஸன்னிதியிலும் திருத்தகப்பனார் ஸன்னிதியிலும் திவ்யப்ரபந்த ஸ்தோத்ராதிகளை நன்கு அதிகரித்து ஆங்கிலமும் பயின்று போதனாசிரியரா யிருப்பதோடு வேதாந்த வித்யாக்ரஹண சீலருமாக வுள்ளார். இவரும் விலக்ஷணாதிகாரி. இவருடைய பக்கத்திலிருப்பவர் ஸ்ரீபெரும்

பூதூர் கலாசாலையில் நெடுநாள் ஸாஹித்ய சாஸ்த்ரோபாத்யாயராக எழுந்தருளி யிருந்த (வைகுண்டவாஸி) ஸ்ரீமத் கிடாம்பி நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியின் த்விதீய குமாரர்; ஸம்ஸ்க்ருத ஸாஹித்யாதிகளில் நல்லநிபுணர். ஹிந்தீவிசாரதர். தெலுங்கு பாஷையிலும் பண்டிதர். தற்காலம் சென்னைமா நகரில் லௌகிக வித்யாலயத்தில் போதநாசிரியராக இருந்துவருகிறார். இவர் நெடுநாள் காஞ்சீவாஸம் செய்துவந்த போது நமது பாடசாலையைச்சேர்ந்த காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருந்தவர்.



அடியேனுடைய ஆழ்வார்திருநகரி ஸம்பந்திஸ்வாமியும்
அவருடைய மூத்த குமாரனும் அடியேனுடைய குமாரனும் சின்னஜாமாதாவும்.

இங்கே ஸேவை ஸாதித்தருளா நின்ற ஆழ்வார் திருநகரி ஸம்பந்தி ஸ்வாமி யான ஸ்ரீ உவே. இளையவில்லி சடகோபாசாரியர் ஸ்வாமியின் வித்யா வைபவங் களைப்பற்றிக் கீழ் (பக்கம் 41ல்) விஜ்ஞாபனம் செய்திருக்கின்றேன். இந்த ஸ்வாமி திவ்ய ஸூக்தி ஸுதாநிதி யென்கிற விருதைச் சிலவாண்டுகள் முன்னமே சூட்டப் பெற்றிருக்கின்றார். ஸம்ப்ரதாயார்த்தங்களை அதிகம்பீரமான ஸரணியில் உபந்ய ஸிக்கவல்லாரில் இந்த ஸ்வாமி அத்விதீயர். இவர்க்கு மடியேனுக்கு மிடையில் விளங்குகின்ற இவருடைய மூத்த திருக்குமாரன் சிரஞ்சீவி பூவராஹன் தீபாதுத் பந்நப்ரதீப மென்னத்தகுந்தவன்.

அடுத்த 117 ஆம் பக்கத்தில் காணும் காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருக் குமவர்களில் பல பேர்களைப்பற்றித் தெரிவிக்க வேண்டியவை விசேஷமாக வுண்டு. இதற்கு, மேற்பகுதிகளில் அவகாசம் ப்ராப்தமாகுமென்று இப்போது நிற்கிறேன்.

## நித்யப்ரதக்ஷிண கைங்கர்யம்

இடையில் ப்ராஸங்கிகமாக வந்தவை நிற்க. மாம்பள்ளம்ஸ்வாமியின் பரம க்ருபையினால் நேர்ந்த முக்கியமான வொரு விசேஷத்தை விஜ்ஞாபிக்கிறேன். அடியேனுக்கும் அடியேனைச்சேர்ந்த சிலர்க்கும் [அதாவது கீழ்ப்பககங்களில் குறிக்கப்பட்டவர்களுக்கும்] மாம்பள்ளம் ஸ்வாமியின் நிர்ஹேதுக க்ருபையொன்றினாலேயே நவநிதி கிடைத்தாற்போலே இப்பிறப்பில் ப்ரதீக்ஷாலேசமுமின்றிக்கே வேதம் கிடைத்தமையினால் காஞ்சீபுரியில் எந்த திவ்ய தேசத்தில் எந்த வுத்ஸவம் நடந்தாலும் சோர்வு சோம்பலின்றிக்கே திரண்டு சென்று பாராயணம் செய்து வருவதோடு நில்லாமல் ஸந்நிஹிதஸ்தலங்களான கூரம் திருப்புட்குழி ஸ்ரீபெரும்பூதூர் திருவல்லிக்கேணி திருநீர்மலை, திருக்கடிகை பள்ளிகொண்டை முதலான விடங்களிலும் விசேஷோத்ஸவஸந்தர்ப்பங்களிற் சென்று பாராயணம் செய்து வருபவர்களாயிருந்தோம். கார்த்திகைமீ ஹஸ்தநக்ஷத்ரத்தில் கூரத்தில் ஆழ்வானுக்கு வனபோஜநோத்ஸவம் வெகு சிறப்பாக நடந்துகொண்டிருந்தது; (இப்போதும் நடக்கிறது). ஸித்தார்த்தி வருஷத்தில் (1919 ம்ஸூ) கார்த்திகை ஹஸ்தத்தினன்று நடைபெற்ற வனபோஜநோத்ஸவம் ஸேவிக்கவும் அதில் வேதபாராயணம் செய்யவும் மாம்பள்ளம்ஸ்வாமியை முன்னிட்டுக்கொண்டு எல்லாருமாகக் கூரம் சென்றிருந்தோம். அவ்விடத்திலுள்ள பெரியார்கள், ஆழ்வானுக்குத் திருமஞ்சனமாகி ஆஸ்தானம் கண்டருளும் ஸமயத்தில் ஓர் உபந்யாஸம் செய்யவேண்டுமென்று அடியேனுக்கு நியமித்தருளினார்கள். அந்த நியமனத்தைச் சிரஸாவஹித்துச் செய்த உபந்யாஸத்திலே ஆழ்வானுடைய பெருமைகளிலொன்றை விவரிக்குமிடத்து பகவத்விஷயத்தில் [திருவாய்மொழியீட்டில் 7-10-5-ல்] *பலரடியார் முன்பருளிய* என்ற இரண்டாமடிக்குச்சேர ஆழ்வானுடைய அற்புதமான இதிஹாஸமொன்று காட்டப்பட்டுள்ளதை எடுத்து விவரித்தேன். அதாவது,

அக்காலத்திலே அரசாண்டுவந்த சோழராஜன் வைஷ்ணவத்ரோஹியாகையாலே ஆங்காங்குள்ள விஷ்ணுப்ரதிமைகளை யெடுத்து எறிந்துவிடவேணுமென்று முயன்றபோது அவனுக்கு இஷ்டரானவர்கள் 'மந்த்ரபூர்வகமாக ப்ரதிஷ்டை செய்யப்பட்ட விஷ்ணு பிம்பங்களை யழியச் செய்தால் ஊருக்குப் பெருத்த தீங்கு விளையும்' என்று சொல்ல, அதுகேட்ட சோழன் 'அந்த ப்ரதிமைகளில் தைவசக்தியை உத்வாஸனம்பண்ணி யழியச்செய்வோம்' என்று நிச்சயித்து ஒரு ப்ராஹ்மணனுக்குப் பணங்கள் கொடுத்து 'நீ அத்ருச்யாஞ்ஜனமிட்டுக்கொண்டு உத்வாஸநம் பண்ணு' என்று கட்டளையிட, அவனும் திவ்ய தேசங்களிலே சென்று அப்படியே அத்ருச்யாஞ்ஜனமிட்டுக்கொண்டு உத்வாஸநம்பண்ணி பகவத் பிம்பங்களைக் கடலிலே யெடுத்தெறிகிற செய்தியை எம்பெருமானார் திருச்செவிசாத்தி 'நாம் நெடுநாளாக இத்திருவரங்கம்பெரியகோயிலை விடாதே நோக்கிக்கொண்டு போருகிறோம்; இவ்விடத்துக்கும் அழிவுவரும்படி ஆஸுரவர்க்கம் மேவிடாநின்றது; இனிச் செய்யவேண்டியதென்?' என்று வியாகுலப்பட்டுப் பெரியநம்பியோடே சிந்தித்திருக்க, அதற்குப் பெரியநம்பி யருளிச்செய்தாராம்—*சுற்றி நாம் வலஞ்செய்ய நம் துயர்கெடுங்கடிதே* என்று ஆழ்வார் ஸாதிக்கிறபடியாலே நான் பெருமாளுடைய எல்லையிலே ஒரு ப்ரதக்ஷிணம் வருவதாக உத்தேசிக்கிறேன்; உம்முடைய சிஷ்யர்களில் ஒருவரை என் பின்னே அனுப்பவேணும்; என் பின்னே வாராநின்றால் ஒருவன் பின்னே போகிறோமென்று தன்னெஞ்சில்படாதே நிழல்போலே என்னைப் பின்செல்பவனாக இருக்கவேணும்; அப்படிப்பட்டவொரு சிஷ்யனைப் பார்த்தனுப்பும்' என்றாராம்; இப்படிப்பட்ட ஆத்மகுணபரிபூர்ணரான சிஷ்யர் கூரத்தாழ்வானொருவரே என்பது எம்பெருமானார்க்கு நன்கு தெரிந்திருந்தும் இதனைப் பெரியநம்பி திரு

வாக்கினால் வெளியிடுவிக்கவேணுமென்றெண்ணிக்கொண்டு நம்பியைநோக்கி 'இப்படிப்பட்ட சிஷ்யர் இவ்விடத்திலிருப்பதாகத் தெரியவில்லையே' என்று சொல்லி நிற்க, 'நம் கூரத்தாழ்வானையனுப்பலாகாதோ?' என்று நம்பி நியமித்தருள, அருகேயிருந்த ஆழ்வான் இதைக் கேட்டு நம்பிகள் நமதுஸ்வரூபத்தினுண்மையை இங்ஙனேயறிந்து பலசிஷ்யர்களின் முன்னே இப்படியருளிச் செய்யும் படியான பாக்கியம் பெற்றோமே! என்று பெருமகிழ்ச்சி யடைந்து நம்பிகளின் திருவுள்ளப்படியே ப்ரதக்ஷிணத்திற்குப் பின்னே சென்றார்—என்பது.

"பலரடியார் முன்பருளிய" என்ற திருவாய்மொழிப் பாசுரத்திற்கு இது மிகவும் பொருத்தமான இதிஹாஸமன்றோ. இவ்விதிஹாஸம் குருபரம்பராப்ரபாவம் முதலிய நூல்களில் காணக்கிடைக்காமல் அபூர்வமானதாகையாலே இதனை விரித்துரைத்து "வாசாமகோசரமஹாகுண தேசிகாக்ர்ய கூராதிநாத" இத்யாதியான யதிராஜவிம்சதிச்லோகத்தை அன்று அவ்விடத்தில் உபந்யஸித்தேன். அப்போது ச்ரோதாக்களுக்கெல்லாம் பரமானந்த முண்டாயிற்று. அங்கு உத்ஸவம் ஸேவித்துத் திரும்பும்போது மாம்பள்ளம் ஸ்வாமியும் தாமல் விஜயராகவாசார்ய ஸ்வாமியும் அடியேனும் ஆக மூவரும் ஒரு வகுப்பாக வந்து கொண்டிருக்கிறோம். அப்போது மாம்பள்ளம் ஸ்வாமி கூரத்தில் நடந்த உபந்யாஸத்தை ரஸித்து அநுவதித்து வருகையில் "ஆழ்வானுடைய இந்த இதிஹாஸத்தில் ஆழ்வானுடைய ஒப்பற்ற ஆத்மகுண பரிபூர்த்தி விளங்குவதோடு ப்ரதக்ஷிணத்தின் ப்ரபாவமும் விளங்குகின்றதல்லவா? நாமும் நம்முடைய பாடசாலையில் தினப்படியாக ப்ரதக்ஷிண கைங்கரியம் ஏற்பாடு செய்து அத்யயந தினங்களில் வேதபாராயணமும் அநத்யயநதினங்களில் ஸ்தோத்ர பாராயணமும் செய்துவந்தால் சிரமப்பட்டு அதிகரித்தவை மறவாமலிருப்பதோடு ஸுக்ருத விசேஷமுமுண்டாம்; நாட்டுக்கும் க்ஷேமம் விளையும்" இத்யாதிகள் ஸாதித்தார். தாமல் விஜயராகவாசாரியர் ஸ்வாமி இதை மிகவும் ஆமோதித்தார். அடியேனுக்கும் அபரிமிதமான உத்ஸாஹமுண்டாயிற்று. ஸஹாத்யாயிகளும் நன்றேயென்று இசைந்தார்கள்.

இதற்கு நாள்பார்க்கவேண்டிய அவச்யமேயில்லையென்று சொல்லி அன்று மாலையே ப்ரதக்ஷிண கைங்கர்ய ப்ராரம்பமாயிற்று. அப்போது இக்கைங்கர்யத்தில் பதினைந்து திருநாமங்கள் அந்வயித்தார்கள். கார்த்திகைமாதம் சித்திரை நக்ஷத்திரத்தில் க்ருஷ்ண ஏகாதசியினன்று இரவு 7 மணிக்கு மாம்பள்ளம் ஸ்வாமியினால் *சுபேந மநஸா த்யாதமாய் வெகு கம்பீரமான திருமிடற்றோசையுடன் ப்ராரம்பம்செய்யப்பட்ட இந்த ப்ரதக்ஷிண பாராயண கைங்கரியம் அவருடைய திருவடி பலத்தாலும் திருவாக்கின் ப்ரபாவத்தாலும் அவிச்சிந்நமாக நடந்து வருகிறது. ஆரம்பித்த புதுமையில் இரண்டு ஸம்வத்ஸரம்வரை நித்யம் பின்மாலையிலும் இரவிலுமாக இரண்டு வேளையிலும் நடந்து வந்தது. இராக்காலங்களில் உத்ஸவாதிகளால் அடிக்கடி உபரோதமும் சிரமமும் நேர்ந்துகொண்டிருந்ததனால் பின்மாலை ஒரு வேளை மட்டும் நிரந்தரமாக நடந்து வந்தால் போதும் என்று மாம்பள்ளம் ஸ்வாமி நியமித்தருள அவ்வண்ணமாகவே நடந்து வருகிறது. தேவப்பெருமாளுடைய வைசாகோத்ஸவத்தில் 10, 12 நாட்களும், மணவாள மாமுனிகளின் ஐப்பசித் திருமூலமஹோத்ஸவத்தில் 5, 6 நாட்களுமே இந்த நித்யப்ரதக்ஷிண கைங்கரியத்திற்கு விராம மேற்படும். சில நிமித்த விசேஷங்களினால் கதாசித் பின்மாலை வேளையில் நடத்த அஸௌகரிய மேற்பட்டால் அன்றிரவு தவறாமல் நடைபெறும். மழைபெய்தாலும் குடைபிடித்துக்கொண்டாவது இந்த கைங்கரியத்தை நிறுத்தாமல் நடத்தி வருவதில் ஒவ்வொருவரும் ஸ்வயம் மஹோத்ஸாஹிகளாக இருந்து வருவது மாம்பள்ளம் ஸ்வாமியின் மஹிமையினாலத்தனை.



நித்யப்ரதக்ஷிண பாராயண கோஷ்டியின் ஸமய விசேஷக் காட்சி (29-3-56)

வீதியில் பெருமாளெழுந்தருளினல் எவ்விதமாக க்ரமபாராயணம் நடைபெறுமோ அவ்விதமாகவே நடந்து வருகின்றது. தினப்படியாக நடந்து வருமிந்த பாராயணத்தில் அநத்யயநமென்று கொண்டாடவேண்டிய ஆவச்யகதை இல்லையாயினும் ஆசார்ய திவ்ய ஸூக்திகளான ஸ்தோத்ரங்களேயும் ஏறக்குறைய இரண்டாயிரம் ச்லோகம் வரையில் நமது பாடசாலையில் அந்வயித்தவர்களெல்லாரும் அதிகரித்திருந்தபடியால் அந்த யோக்யதையும் ப்ரமுஷிதமாகாமல் பரிமளிக்கவேண்டியதற்காக அநத்யயந தினங்களிலும் ப்ரதோஷ காலங்களிலும் ஸ்தோத்ர பாராயணஞ் செய்துகொண்டு திருவீதி வலம்வரவேணுமென்று மாம்பள்ளம் ஸ்வாமி நியமித்தருளினபடி. இந்த ப்ரதக்ஷிண கைங்கரிய மாரம்பித்து முப்பத்தாறுண்டு பூர்த்தியாகி முப்பத்தேழாமாண்டு நடைபெற்று வருகிறது. இருபத்தைந்தாமாண்டு பூர்த்தியானபோது இதற்கு வெள்ளிவிழாக் கொண்டாட்டம் நடைபெற்று, பிறகு வருஷந்தோறும் கார்த்திகை மாதத்துச் சித்திரை நன்னுளுக்கு முன்னம் ஐந்து நாள் பாராயண விசேஷங்களுடன் சிறப்பான கொண்டாட்டம் நடத்தப்பட்டு வருகின்றது. இது அவசியமன்ருகிலும் பெரியார்களின் நியமனத்தினல் நடந்து வருகிறது. அந்த ஸமயத்தில் விசேஷகோஷ்டி சேரும்.

காஞ்சீப்ராந்தத்திலுள்ள அக்ரஹாரங்களிலும் மற்றும் நகரங்களிலுமுள்ள ஆஸ்திகர்கள் இந்த ப்ரதக்ஷிண கோஷ்டியை ஸேவிப்பதற்கென்றே குதூஹலங்

கொண்டு காஞ்சிக்கு வந்து மாடவீதிகளிலும் ஸன்னிதி வீதியிலும் ஆனைகட்டி வீதியிலும் சயனித்திருந்து பின்மாலை கோஷ்டியை யநுபவித்துவிட்டு ஆனந்த மாகப் புறப்பட்டுப் போவார்கள். நல்ல காரியங்களிலே பொறுமை கொண்டிருப் பதும் தாக்ஷிண்யங்களைச் செய்வதும் கருவிலே திருவிலாத சிலர்க்கு இயற்கையாயினும் பரம்பரையாக வேதத்திலே அபிமானமுள்ளவர்களும் ஆஸ்திகர்களுமான பலர் இந்த கைங்கரியத்திலே அபரிமிதமான ஆதரம் காட்டி வருவதுண்டு. ஸ்ரீ காஞ்சீ காமகோடி சங்கராசார்ய ஸ்வாமி பாதாள் மூன்று வருஷகாலமாக காஞ்சியிலேயே விஜயம் செய்திருப்பதால் நாநாதேசங்களிலிருந்து அப்பெரியவர்களை தரிசிக்க வருகின்ற வைதிகலௌகிகர்கள் யாவரும் ஒருவர் தப்பாமல் இந்த கோஷ்டியை வணங்கி வழிபட்டு மஹத்தான ஆதரமும் ஆனந்தமும் காட்டிப் போவார்கள். வேத மோதினவர்களாயிருந்தால் அன்னவர்கள் பாராயணத்திலும் கலந்துகொண்டு களிப்பர்கள்.

இந்தத் திருவீதி பாராயண கைங்கரியத்தில் அந்வயித்தவர்களின் கோஷ்டியை ஸேவிக்க விருப்பத்தினால் இந்த வைதிகோத்தமர்களை வெளியூர்களி லும் ஸமய விசேஷங்களில் எழுந்தருளப்பண்ணி உபய வேதபாராயணங்களையும் நடத்தி ஆனந்திக்கிறார்கள் சில மஹான்கள். அப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களில் எடுத்த இரண்டு திருவுருவப்படங்களைக் காட்டுவோமிங்கு.

1. நெல்லூரில்நடந்த கோஷ்டி. (பக்கம் 122 காண்க)
2. கள்ளக்குறிச்சியில் நடந்த கோஷ்டி. (பக்கம் 125 காண்க)

நெல்லூரில் ஸ்ரீ மதுபயவே சக்ரவர்த்தி வெங்கடாசாரியர் ஸ்வாமி ஸ்ரீ வைஷ் ணவ குலதிலகராய் ஆஸ்திகாக்ரேஸராராய் எழுந்தருளியிருக்கிறார். இவ்வுருவப் படத்தில் அடியேனுடைய வலக்கையையொட்டி எழுந்தருளியிருப்பவர் அந்த ஸ்வாமியே. அவர் லௌகிக உத்யோகத்திலிருந்து விச்ராந்தராய் நெல்லூரில் ஸ்ரீ ரங்கநாயகன் ஸன்னிதியருகே எழுந்தருளியிருக்கிறார். இந்த ஸ்வாமி ஆழ்வார் அருளிச்செயல்களில் ஆழ்ந்தவர். பகவத்விஷயாதிகாரி. 1951-ஆம் வருஷத்தில் அடியேனுடைய பதரிகாச்ரம யாத்திரையில் அந்வயித்திருந்தார். ஸஹவாஸ யோக்யர்களில் தலைசிறந்த இந்த ஸ்வாமிக்கு 1954ஹு புரட்டாசி மாதத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் ப்ராப்தமாயிற்று. ச்ருதீதிஹாஸபுராண திவ்யப்ரபந்த பாராயணங்களை மிகச்சிறப்பாக நடத்திவைத்தார். அதற்குத் தகுந்த அதிகாரிகளுடன் அடியேன் ஒருவாரம் அங்கே விடைகொண்டிருந்து அவரையும் மகிழ்வித்து அடியேனும் மகிழ்ந்தேன். அப்போது அங்கு தினப்படியாக வித்வத் கோஷ்டியும் நடைபெற்றது. வெகு விலக்ஷணமாக அமைந்த ஸமய விசேஷம் அது. [அவ்விடத்தில் மூலபேட்டையில் ஸம்ஸ்க்ருத காலேஜ் ஒன்று சிறப்பாக நடந்து வருகிறதென்று இளமை தொடங்கியே கேட்டிருந்தேன். அதையும் அப்போதுதான் அவலோகனம் செய்யவும், அவ்விடத்து வித்வான்களின் ப்ரீதிப்ரகர்ஷத்தைப்பெற்று உபந்யஸிக்கவும்ப்ராப்தமாயிற்று.] இவ்விடத்து திரு வுருவப்படத்தில் வேறு சில மஹான்களும் ஸேவைஸாதித்தாலும் நமது பாட சாலையில் அந்வயித்தவர்களே பெரும்பான்மையாக வுள்ளார்களென்பது குறிக் கொள்ளத் தக்கது. அந்தத் திருவுருவப்படத்தில் சக்ரவர்த்தி வேங்கடாசார்ய ஸ்வாமிக்கு வலது கைப்புறத்தில் வீற்றிருப்பவர் ஸ்ரீ உவே. மங்களம்பாடி. தி. ந. ச. ஸ்ரீநிவாஸ ராமாநுஜாசாரியர் ஸ்வாமி உத்தம விலக்ஷணாதிகாரியென்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இந்த ஸ்வாமி ஸ்ரீமத் திருப்பதி புரிசை ஸ்ரீ ரங்கா சார்ய ஸ்வாமி திருவடிகளில் வாழ்ந்து நியாய வேதாந்தங்களையும் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் அதிகரித்து ப்ரவசநத்திலும் ப்ரவீணராய் விளங்குமவர், அடியே னுக்குப் பரமாப்தர். ரஸிக வித்வான்களில் அக்ரகண்யரான இந்த ஸ்வாமி ஸாத் விகர்களுக்கு ஸஹவாஸ யோக்யராவர்.



ஸ்ரீமான் உ.வே. (நெல்லூர்) சக்ரவர்த்தி வேங்கடாசாரியர் ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவ கோஷ்டி

தென்னுற்காடு ஜில்லாவில் கள்ளக்குறிச்சியென்பது சிறந்த வூர். அவ்விடத்தில் ஸ்ரீமத்உவே. T. A. (ஆராவமுது) தாதாசாரியர் ஸ்வாமி ப்ரஸித்தரான வக்கீல். ஸம்ஸ்க்ருதத்திலும் காவ்ய நாடகாலங்காரங்களை வரியடைவே கற்று ஆழ்ந்த வ்யுத்பத்தி ஸம்பாதித்தவர். ஸ்ரீராமாயணத்தில் விசேஷோபந்யாஸங்கள் செய்து போருவதில் சதுரர். திருப்பதியில் வாழ்ந்த அடியேனது சிறியதகப்பனர்க்கு ஜாமாதாவுமாவர். இந்த ஸ்வாமி அடியேனுக்கு இளமை தொடங்கியே பரமாப்தர். இவர் நமது பாடசாலையிலும் அதைச் சேர்ந்தவர்களிடத்திலும் இயற்கையாகவே மஹத்தான ப்ரீதி விச்வாஸமுடையவர். இந்த ஸ்வாமி நம்முடைய பாடசாலை அப்படியே கள்ளக்குறிச்சிக்கு வரவேணுமென்று வெகு காலமாக மநோரதித்திருந்தார்; அந்த மநோரதம் நான்கு வருஷங்களுக்குமுன் நிறைவேறியது. அதைப்பற்றிச் சுருககமாக விஜ்ஞாபிக்கிறேன். அவ்வூரில் தில்லை கோவிந்தராஜப்பெருமாள் ஸன்னிதியொன்று புராதனமாகவுண்டு. அந்த ஸன்னிதியை ஜீர்ணோத்தாரணம் செய்து நித்ய நைமித்திகங்களான ஸகலோத்ஸவங்களையும் நடத்தி வைக்க நம் தாதாசாரியர் ஸ்வாமி பாரிப்புக் கொண்டிருந்தார். இவருடைய மநோரதத்தை எம்பெருமான் குறையற நிறைவேற்றுவித்த விசேஷம் மேலே விசதமாகும். இந்த ஸ்வாமியைப்பற்றிச் சில வார்த்தைகளை இங்கே விஜ்ஞாபிக்க விரும்புகிறேன். சென்ற ஸம்வத்ஸரத்தில் அடியேன் விசேஷ கோஷ்டியுடன் நடத்திவைத்த ஸப்தபுண்யபுரீவாக்யஜ்ஞ யாத்திரை யென்னும் பவித்ர யாத்திரையில் இந்த ஸ்வாமி பூர்த்தியாக அந்வயித்திருந்து லௌகிக கார்ய நிர்வாஹங்களை யெல்லாம் வெகு ஜாகரூகதையுடன் கவனித்து வந்தார். ஏறக்குறைய மூன்று மாதகாலம் இவரோடு நெருங்கிப்பழக நேர்ந்தபோது.



ஸ்ரீ உவே. திருக்கோவலூர் ஆராவமுது
தாதாசாரியர் ஸ்வாமி (அட்வொகேட்)
கள்ளக்குறிச்சி

சேலம் ஜில்லா ஆத்தூரில் வாழும்ஸ்ரீமான் வைஷ்ணவரத்னம் V. கேசவலு நாயுடு என்கிற பாகவதோத்தமர் கள்ளக்குறிச்சியிலும் நெடுநாளைத் தொடர்பு உடையவராதலால் அவ்விடத்து ஸன்னிதியை இவர் விசேஷமாக அபிமானித்துப் பலவாயிரம் ரூபாய்கள் செலவு செய்து விசேஷத்திருப் பணிகளை நடத்தி நேற்று நந்தன௵ ஆனி மாதத்தில் (1952 ஜூன்௴) வெகு விபவமாக ஐந்துநாள் ஸம்ப்ரோக்ஷணை நடப்பித்தார். அதற்குத் திருக்கோவலூரெம்பெருமானும் எழுந்தருளியிருந்து மிகச்சிறப்புகள் நடந்தன. அந்த ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் நமது பாடசாலையின் ஆதரவிலேயே நடைபெற்றது. இந்த கோஷ்டியை ஸேவித்தாலும் பெரும்பாலும் நம் பாடசாலை ஸ்வாமிகளையெல்லாம் ஸேவித்ததாகும். இந்த கோஷ்டியில் ஒருவரிருவர் அந்வயிக்கப் பெறாதவர்களுமுளர். வெளியூர்களிலிருந்து வந்து அந்வயித்தவர்களும் சிலருளர்.



ஸ்ரீமான் V. கேசவலு நாயுடு, ஆத்தூர்
ஸ்ரீதரன் மோடார்ஸர்விஸ் ப்ரொப்ரைடர்

இந்த கோஷ்டியில் ஸேவை ஸாதிக்கின்ற அனைவரும் விசிஷ்டாதிகாரிகளே. இப்படி ஆங்காங்கு விசேஷ காலங்களில் விசிஷ்டாதிகாரிகள் கோஷ்டியாகச் சேர்ந்து அநுபவிப்பதற்கும், அநுபோக்தாக்களை ஆனந்தப்படுத்துவதற்கும் கீர்த்திமூர்த்தியான மாம்பள்ளம் ஸ்வாமியே காரணபூதர்—என்பதொன்றே இங்கு விவக்ஷிதம். அந்த மஹான் காஞ்சீபுரியை அநுக்ரஹித்தருளாதிருந்தால் இவ்வூர் எவ்விதமான சீர்கேட்டையடைந்திருக்குமென்பதை அடியேன் எடுத்துரைக்க வேணுமோ?

கேசவலு நாயுடு
டர்பு உடையவ
தலால் அவ்வி
த்து ஸன்னி
யை இவர்
சேஷமாக அபி
ணித்துப் பலவா
ரம் ரூபாய்கள்
செலவு செய்து
சேஷத்திருப்
ணிகளை நடத்தி
கேற்று நந்தன ஞு
ஜுன் மாதத்தில்
1952 ஜுன் மீ)
வெகு விபவமாக
ருக்தாள் ஸம்ப்
ரோக்ஷணை நடப்
பித்தார். அதற்குத்
திருக்கோவலூர்
எம்பெருமானும்
எழுந்தருளியிருந்து
மிகச் சிறப்புகள்
நடந்தன. அந்த
ஸம்ப்ரோக்ஷண
மஹோத்ஸவம்
நமது பாடசாலை
யின் ஆதரவிலே
யே நடைபெற்றது.
இந்த கோஷ்டியை
ஸேவித்தாலும்
பெரும்பாலும் நம்
பாடசாலை ஸ்வாமி
களையெல்லாம்
ஸேவித்ததாகும்.
இந்த கோஷ்டியில்
ஒருவரிருவர் அந்வ
யிக்கப் பெறுதவர்
களுமுளர். வெளி
யூர்களிலிருந்து
வந்து அந்வயித்த
வர்களும் சிலருளர்.
திகாரிகளே. இப்
ஷ்டியாகச் சேர்ந்து
ற்றும் கீர்த்திமூர்த்தி
இங்கு விவக்ஷிதம்.
வ்வூர் எவ்விதமான
வேணுமோ?



கள்ளக்குறிச்சி இல்லே கோவிந்தராஜன் ஸன்னிதியில் நடந்த ஸம்ப்ரோக்ஷணமஹோத்ஸவத்தில் சேர்ந்த உபயவேதகோஷ்டி

கீழ் பக்கம் 97ல் ஸேவைஸாதிக்கின்ற மாம்பள்ளம் ஸ்வாமியின் திருவுருவப் படம் அத்யந்தம் அநாரோக்யநிலைமையில் ஏறியருளப்பண்ணினதாகையாலே த்ருப்தி கரமாக அமையவில்லை. ஆஜாநுபாஹுவாய் உதாரகம்பீர மநோஹரமூர்த்தியாக ஸேவை ஸாதித்தருளின அந்த மஹாசார்யருடைய திருக்கோலமே பாவியேன் முன்னிற்கும். இந்த ஸ்வாமி ஆழ்வார் திருநகரியிலும் வைதிகஸ்ரீயை வளர்க்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி அங்கே சென்று ஏழெட்டு மாதகாலமெழுந் தருளியிருந்து பலர்க்கு மூன்றாவது காண்டத்தைப் பதக்ரமங்களோடுங்கூட ஓது வித்து அவ்விடத்திலும் ஸுப்ரபாதத்தில் நித்யப்ரதக்ஷிண கைங்கர்யத்தை ப்ராரம் பித்து வைத்தார். இரண்டொரு ஸம்வத்ஸரம் அவ்விடத்திலும் அழகாக நடந்து வந்தது. அந்த ஒரு காண்டத்தை வைத்துக்கொண்டு அங்கு ஸந்நிதியிலும் வேத பாராயண கைங்கரியத்தைப் பத்துப்பிள்ளைகள் சிலகாலம் நடத்தி வந்தார்கள். அது ஓங்கி வளர்வதற்கு அவகாசமில்லாமற் போயிற்று. மாம்பள்ளம் ஸ்வாமி திருக்குருகூரிலிருந்து காஞ்சிக்குத் திரும்பும்போது மிகுந்த அநாரோக்யத்துடனே திரும்பினர். சில மாதங்கள் சயனத்திலிருந்து அஸ்மதாதிகளை அகதிகளாக்கி விண்ணுலகமெய்தினர். எனினும் கோஷ்டிகள் நடைபெறும்போது முன்னே அந்த ஸ்வாமி எழுந்தருள்வதாகவே அடியேனுடைய அத்யவஸாயம்.

## நமது பாடசாலைக்குச் சிறந்த உதவி ஏற்படுதல்

ஸ்ரீகாதி ஸ்வாமி பல வருஷங்கள் காஞ்சிக்குத் திரும்பாமலே வடநாட் டில் விசேஷ வைபவங்களுடன் சிஷ்யோஜ்ஜீவநார்த்தமும் மதப்ரசாரார்த்தமு மான ஸஞ்சாரத்தைச்செய்து முடித்து, தென்னாட்டுத் திருப்பதிகளை யெல்லாம் மங்களாசாஸனம் செய்தருளத் திருவுள்ளம்பற்றி, ரைல்மார்க்க மன்றிக்கே வண்டி மார்க்கமாகவே மடாதிபதிகளைப்போல விசேஷ யாத்திரை செய்தருளினரென்பது உலகமறிந்ததேயாகும். அது காலயுக்தி வருஷத்தில் நடந்தது. அப்போது திரு நாராயண புரத்தை முதன்முதலாக ஸேவித்து அங்கிருந்து மதுரைக்கு வந்து சேர்ந்து பாண்டிநாடு, மலைநாடு, சோழநாடு, நடுநாடு, தொண்டை நாடு ஆகிய இவற்றிலுள்ள திவ்ய தேசங்களில் ஒன்று தப்பாமல் ஸகல திவ்ய தேசங்களையும் மங்களாசாஸனம் செய்தருள ப்ராப்தமாயிற்று. அந்த ஸமயத்தில் சில வித்யார்த்தி களுடன் அடியேன் கூடவே யிருந்து பெருமாளுடைய காலை மாலைத் திருவாராத னங்களில் உபய வேதபாராயணம் நடத்திக்கொண்டு போக நேர்ந்தது. அப்போது திருக்கோட்டியூர் ஸேவித்து அங்கிருந்து திருப்புல்லாணிக்குச் சென்றுகொண் டிருக்கையில், செட்டி நாட்டு க்ராமங்களிலொன்றாகிய சோழபுரம் என்னுமூரில் மஹா தனிகரான நாட்டுக்கோட்டை செட்டி யொருவர் யானை குதிரை முதலான பரிகரங்க ளோடு யாத்திரை நடப்பதைக்கண்டு மகிழ்ந்து இரண்டு நாள் அங்கே தங்கியிருந்து போகும்படி எங்களை நிறுத்திவிட்டார். அவருடைய ஸொந்தக்ராமம் ஒக்கூ ரென்பது. அது மேலேசொன்ன சோழபுரத்திற்கு ஸமீபத்திலுள்ளது. அந்த செட்டியாருடைய பெயர் சி. கரு. சி. கரு. அண்ணாமலை செட்டியா ரென்கிற சிந்தா மணி செட்டியாரென்பது. அவர் சோழபுரத்திலும் வஸதிகளுள்ளவராதலால் எங்களை அங்கே நிறுத்தி விசேஷமாக ஆராதித்தார். அப்போது ஓர் உபந்யாஸம் நடத்தவேணுமென்று பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீகாதி ஸ்வாமி அடியேனுக்கு நிய மனம் தந்தருளினர். அடியேன் *காசின்வாய்க் கரம்விற்கிலும்* என்கிற திருக் கோட்டியூர்ப் பாசுரத்தை யெடுத்துக்கொண்டு நீண்டதொரு உபந்யாஸம் செய்ய, அந்த செட்டியாருக்கு என்மீது அளவு கடந்த அன்பு உண்டாகி, நான் காஞ்சீ புரத்தில் வேத வேதாந்த பாடசாலை நடத்தி வருவதைத் தெரிந்துகொண்டு அதில் தன்னை நியமிக்கவேணுமென்று கேட்டுக்கொண்டார். அப்படியே நியமிக்க, பத்து வருஷகாலம் அவருடைய விசேஷ ஆதரவில் நமது பாடசாலை நடந்து வந்தது. இதன் தொடர்ச்சியான விஷயங்கள் அடுத்த பகுதியில் தெரிவிக்கப்படும்.

## ஸ்ரீரங்கத்திலும் ப்ரபாதபாராயண ப்ரதிஷ்டாபநம்

ஸுப்ரபாத காலத்தில் காஞ்சியில் திருவீதி பாராயணம் நடந்து வருவது போல் மற்றும் அனேக திவ்யதேசங்களில் நடந்து வருமாறு செய்யவேணுமென்று அடியேனுக்கு அபரிமிதமான அபிலாஷையிருந்தது. வேதபாராயணத்திற்கு ஸௌகரியமில்லாமற் போனாலும் ஸ்தோத்ரபாராயணமாவது நடந்து வரும்படி செய்யவேணுமென்றாசையுண்டு. நான்கு ஸம்வத்ஸரங்களுக்கு முன் இவ்வாசையை ஸ்ரீரங்கத்தில் வாழும் அஸ்மத் ஸுஹ்ருன்மணியான ஸ்ரீ உவே. மெ. ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமிக்குத் தெரிவித்தேன். கீர்த்திமூர்த்தியான சிங்கமையங்காருடைய பாடசாலையின் மூலமாக இவ்வாசை இனிது நிறைவேறுமென்று தெரிந்து கொண்ட அடியேன் இங்குள்ள ஸப்ரஹ்மசாரிகளெல்லாரோடுங்கூட நம்பெருமாள் ஸன்னிதிக்கு விடைகொண்டு மாடமாளிகை சூழ் திருவீதியான சித்திரைவீதியில் இரண்டு நாள் வேதபாராயணமும் ஒருநாள் ஸ்தோத்ரபாராயணமும் நடத்தி வைத்தது முதலாக அவ்விடத்தில் தினப்படியாய் அவிச்சின்னமாய் வீதிபாராயண கோஷ்டி நடைபெற்று வருகிற அதிசயம் அவரவர்கள் அநுபவித்து ஆனந்திக்கத்தக்கது. காஞ்சியில் அத்யயன தினங்களில்வேதபாராயணம், அனத்யயனதினங்களில் ஸ்தோத்ரபாடம் என்று வைத்துக் கொண்டிருப்பது போலல்லாமல் அவ்விடத்தில் தினந்தோறும் மூன்று கோஷ்டிகள் நடைபெற்று வருகின்றன; முன்னே ஸ்தோத்ரபாட கோஷ்டி புறப்படும்; பிறகு யஜுர் வேத பாராயண கோஷ்டி; அதன் பிறகு ஸாமவேத கோஷ்டி. இவ்வண்ணமாக நான்கு ஸம்வத்ஸரமாய் அவிச்சின்னமாக நடந்துவருகின்றது. அந்தப் பாடசாலையின் நிர்வாஹகரான ஸ்ரீ உவே. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி இந்த கைங்கர்ய நிர்வாஹத்தில் திடமான ஊக்கமுடையவராயிருந்து வருகிறார். பாடசாலையின் காரியங்களில் இது



ஸ்ரீமான் உவே. பண்டிதராஜ மெ. ஸுந்தரராஜாசாரியர் ஸ்வாமி ஸ்ரீரங்கம்

வொரு முக்கியமான காரியமென்று திட்டம் செய்திருக்கிறார். ஆகவே பாடசாலை போலவே இந்த கைங்கரியமும் நீடூழி நடைபெறும். மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீமத் ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமி தாம் முன்னின்று ச்ரத்தையோடு இதை நடத்தி வருகிறபடியால் இது நித்ய ஸ்ரீர் நித்யமங்களமாக நடைபெற்று வருமென்னத் தட்டில்லை.

இங்கு ப்ராஸங்கிகமாக அந்த ஸ்வாமியைப்பற்றிச் சில வார்த்தைகள் விஜ்ஞாபிக்கிறேன். கீழ் பக்கம் 36ல் காலக்ஷேப கோஷ்டீ நிர்வாஹகராக ஸேவை ஸாதித்தருளாநின்ற (வைகுண்டவாஸி) ஸ்ரீமெய்யு வையங்கார் ஸ்வாமியின் புத்ரரத்நமாகிய இவர் அந்த காலக்ஷேப கோஷ்டியிலே ப்ரஹ்மசர்யாச்ரமியாய்க் காட்சி தருகின்றார். "திநாந்தே நிஹிதம் தேஜஸ் ஸவித்ரேவ ஹுதாசந:" என்ற கணக்கிலே திருத்தகப்பனாருடைய ஸகல யோக்யதைகளையும் ஜ்யோதிஷ ஆயுர்வேத முட்படப் பெற்றிருக்கின்றவிவர்*திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கத்திற்கு மணி விளக்காய் விளங்குகின்றார். இவருடைய ஸஹயோகமும் அடியேனுடைய க்ரந்தமாலா ப்ரகாசநங்களுக்கு உதவியளிக்கின்றது.

## வேதலக்ஷண க்ரந்த ரசனை

அடியேன் இருபத்திரண்டு வயதுக்குமேல் வேதாத்யயன மாரம்பித்த காலத்தில் பதக்ரமங்கள் ஓதுவதையும் ஸம்ஹிதையோடு கூடவே வைத்துக் கொண்டபடியால் ஸ்வரபேதங்கள் முதலானவை பிடிபடாமல் மிகவும் சிரமப்பட்டேனென்றும், பிறகு வெகு விமர்சங்கள்செய்து தெளிவுபெற்றேனென்றும், வேதலக்ஷண க்ரந்தங்களுமெழுதி வைதிக வுலகுக்கு உபகரிக்கப்பெற்றேனென்றும் கீழே (பக்கம் 111ல்) எழுதியிருந்தேன். இதைப்பற்றின தத்துவங்களை வைதிகர்களும் வித்வான்களும் நன்கு தெரிந்துகொள்ளும்படி சிறிது விவரிக்கிறேன். வேதத்தில் ப்ரவேச மில்லாதவர்களுங்கூட இவ்விஷயத்தை அவகாஹித்துக் கொள்ளுமாறு எழுதுகின்றேன். திவ்யப்ரபந்தத்தைச் சொல்லுகிறவர்கள் பாசுரத்தை நெடுகச் சொல்லிக்கொண்டு போகிறார்கள்; அதில் சொற்களைப் பிரிப்பதென்கிற பணியில் இறங்குவாரில்லை. வேதத்தை ஸம்ஹிதை மட்டும் ஓதுகிறவர்களுக்கும் விசேஷமான சிரமம் கிடையாது. சிறுவர்களுக்கு ஸந்தியாவந்தன மந்த்ரம் கற்பிப்பவர்கள் பதக்ரமங்களுடன் வேதாத்யயனம் செய்யாதவர்களாயிருந்தால் சிறுவர்களுக்குப் பதங்களை யொடித்துச் சொல்லித் தரும்போது தப்புந் தவறுமாக ஒடித்துச் சொல்லிக்கொடுப்பது வழக்கம். உதாரணமாக ஒன்றிரண்டு கேண்மின். * இமம் மே வருண ச்ருதீஹவம்* என்கிற மந்த்ரத்தில் * अहेडमानो वरुणेह बोधि उरुशंस मा न: * என்றவிடத்தில் उरुशंस (உருசம்ஸ) என்பது ஸம்போதநாந்தமான ஒரு முழுப்பதம். இதற்குமேல் மா, ந: என்பன இரண்டு தனிப்பதங்கள். ஆங்காங்கு ஸந்த்யாவந்தநம் சொல்லி வைப்பவர்கள் உருசம் ஸமாந: என்றே பெரும்பாலும் சொல்லி வைக்கிறார்கள். அத்யயனம் செய்கிறவரையில் அடியேனும் இப்படித்தான் சொல்லி வந்தேன். ஆபோ ஹிஷ்டா மயோபுவ ஸ்தா ந ஊர்ஜே*என்கிற மந்த்ரத்தில் "ஆப:, ஹி, ஸ்த, மயோபுவ:, தா:, ந:, ஊர்ஜே" என்று பதவிபாகம். இதை (ஆபோஹிஷ்டா:, மயோபுவ:, ஸ்தாந:) என்றும், (ஆபோஹிஷ்டாம் அயோபுவ:, ஸ்தாந:) என்றும் சொல்லிக்கொடுப்பது பெரும்பான்மையான வழக்கம். இவ்விதமாக ஸந்த்யாவந்தநமந்த்ரம், தர்ப்பணமந்த்ரம் முதலானவற்றில் அபரிமிதமான பிறழ்வுகளுண்டு. அத்யயநம் செய்யாத உபாத்யாயர்கள் சொல்லிவரும் பூர்வாபர ப்ரயோக மந்த்ரங்களில் காணும் பிறழ்வுகளை எண்ணவே முடியாது. ஸம்ஹிதை மட்டும் அத்யயநம் செய்தவர்கள் பிறர்க்கு அத்யாபநம் செய்விக்கவே முடியாது. கதை சொல்லுகிற வழக்கம்; ஒருவர் ஸம்ஹிதை மட்டும் ஓதியிருந்து அத்யாபநம்

செய்யத் தொடங்கினாராம்; இரண்டாவது காண்டம் ஆறாவது ப்ரச்நம் ஆரம்பித்தாராம்; * समिधो यजति वसन्तमेवर्तूनाम् * என்று ஆரம்பம்; இங்கு (வஸந்தம், ஏவ, ருதூநாம்) என்று பதவிபாகம்: இது அவர்க்குத் தெரியாமையாலே "ஸமிதோ யஜதி வஸந்தமே" என்று நீட்டினாராம்; அதைக்கேட்டவொரு வைதிகர் 'பதமோதாத பாவமே' என்று நீட்டினாராம். இங்ஙனே பல கதைகளுண்டு. ஆகவே ஸம்ஹிதை மட்டும் ஓதிவைப்பது பலவகையான அபாயங்களுக்கும் அனர்த்தங்களுக்கும் ஹேதுவானது. பதமும் க்ரமமும் குருமுகமாக ஓதினாலன்றிப் பயன்படாது, இவை ஓதினாலுங்கூட பதஸ்வரூபங்களில் பலவிதமான ஸந்தேஹங்களும் மறதிகளும் எப்படிப்பட்டவர்களுக்கும் உண்டாகியே தீரும்.

மேலே யெடுத்துக் காட்டின (ஆபோ ஹிஷ்டாமயோபுவஸ் தா ந:) என்கிற மந்த்ரத்தில் (தா:, ந:) என்று பதவிபாக மென்று கீழே தெரிவித்தேன். வேதத்தில் (தா:) என்று விஸர்க்காந்தமான பதம்போலவே (தா) என்று ஆகாராந்தமாய் விஸர்க்கமில்லாததான பதமும் பலவிடங்களில் வருவதுண்டு. இப்படி பல நூற்றுக் கணக்கான பதங்கள் சிலவிடங்களில் விஸர்க்காந்தமாகவும் சில விடங்களில் அவிஸர்க்காந்தமாகவும் வரும். அஜா, அங்யா, அமேத்யா, அரிஷ்டா, ஆதித்யா, ஆசா, இமா, இஷா, உத்தரா, உத்தமா, உபஹூதா, ஏநா, க்ருஷ்ணா, தக்ஷிணா, ப்ரஜா, யா, ஸாத்யா—இப்படி பலநூறு பதங்கள் சிலவிடங்களில் அவிஸர்க்காந்தமாகவும் சிலவிடங்களில் விஸர்க்காந்தமாகவும் ஓதப்படும். விஸர்க்கத்திற்கு ஸந்திவசாத் லோபமாகையாலே எங்கே விஸர்க்காந்தம்? எங்கே அவிஸர்க்காந்தம்? என்று ஸந்தேஹமுண்டாகும். விஸர்க்க விஷயமான ஸந்தேஹம் ஒன்றுமட்டுமல்ல. ப்ரக்ரஹம், அவக்ரஹம், விலங்க்யம், அவர்ணி ஆவர்ணி, நபரம், தபரம்.... என்றிப்படி வைதிக கோஷ்டிகளில் ப்ரஸித்தமான பலவ்யவஹாரங்களில் அபரிமிதமான ஸந்தேஹ ப்ரஸக்திகளுண்டு. அவை வேதமோதினவர்களுக்கே தெரியவரும். அப்படிப்பட்ட ஸந்தேஹங்கள் பலகாலம் குருகுலத்தில் சிரமப்பட்டு ஓதினவர்களுக்கு உண்டாகமாட்டா வென்றாலும், உண்டானால் பரிஹரித்துக்கொள்ளும் வழியொன்று இருந்து தீரவேண்டும். இதற்காக முன்னோர்கள் ஸப்தலக்ஷணம் முதலான சில பல நூல்களை யெழுதிவைத்திருக்கிறார்கள். இவை பெரும்பாலும் அச்சிடப்பட்டு மிருக்கின்றன. இவற்றைச் சந்தை சொல்லிக் கண்ட பாடம் செய்து கொண்டிருப்பவர்களு முள்ளார்கள். அந்த லக்ஷண நூல்களை அடியேன் பூர்த்தியாகப் பரிசீலனம் செய்ய நேர்ந்தது. பரிசீலனம் செய்ததில் அடியேன் மனத்தில் என்னபட்டதென்றால், "வேதமோதுகிறவர்கள் பெரும்பாலும் வேதமொன்றிலேயே போதைப் போக்குகிறவர்களாயும் ஸம்ஸ்க்ருத பாஷையிலோ சாஸ்த்ரங்களிலோ ப்ரவேச மற்றவர்களாயுமே யிருப்பர்களாதலால் அப்படிப்பட்டவர்கள் 'இந்த பதம் இன்னவிடத்தில் இப்படி, இன்னவிடத்தில் இப்படி' என்று திடமாக நெஞ்சில் பதியவைத்துக்கொள்வதற்காக இந்த ஸப்த லக்ஷணாதி க்ரந்தங்களை எழுதிவைத்தார்கள்; அவ்யுத்பந்நர்களுக்கு இவை உபயோகப்பட்டாலும் வ்யுத்பந்நர்களுக்கு த்ருப்திகரங்களாகமாட்டா" என்று பட்டது. சில வித்வான்களிடத்தில் இதைப்பற்றி வலிதாக ப்ரஸ்தாவம் செய்ததில் அவர்களும் இவ்வபிப்ராயத்தையே போஷித்துப் பேசினார்கள். "வேத பதங்களில் எவ்விதமான பிறழ்வும் ஏற்படாதபடிக்கு ரக்ஷைசெய்ய விரும்பின முன்னோர்களுக்கு இந்த வழிதான் ஸௌகரமாகத் தோன்றிற்று; உண்மையில் அக்ஷரராசிகளை அபாயமின்றிக் காப்பாற்றுவதற்கு இதுதான் ஸாத்யமான மார்க்கம்" என்றும் சொன்னார்கள் வித்வான்கள். ஆநுபூர்வி ஒன்றாயிருக்கச் செய்தே பதஸ்வரூபங்களில் பல வேறுபாடுகள் ஏற்படுவதானது அர்த்தத்தை யநுஸரித்தேயாதலால் அர்த்தாநுஸாரேண பதவ்யவஸ்தை பண்ணி ஒரு லக்ஷணக்ரந்த மெழுதவேணுமென்று ஆசைகொண்டேன். ஸம்

ஹிதாபதக்ரமங்களை அத்யயநம் பண்ணும்போதே வித்யாரண்ய, பட்டபாஸ்கர பாஷ்யங்களைப் பன்முறை பராமர்சம் செய்தேனாதலால் அதனாலேற்பட்ட விவேகத்தை ஸ்வாநுபவத்தோடு நிறுத்திக்கொள்ளாமல் பராநுபவத்திற்கும் யோக்யமாக்கி வைப்போமென்று துணிந்து வேதாத்யயநஸர்வஸ்வம் என்றொரு க்ரந்தத்தை வடமொழியில் எழுதினேன். வெகு விஸ்தாரமாக வெழுதப்பட்டவதில் ஒரு பகுதியை க்ரந்தலிபியில் அச்சிட்டு வெளியிட்டேன். அதில் உபக்ரமத்தி லெழுதின சில ச்லோகங்களை இங்கு விஜ்ஞாபிக்கிறேன் ;

1. द्वाविंशाद्वयसः परं भगवतीमध्येतुकामस्त्रयीम् आरब्धाध्ययनो यदीयकृपया दासः क्रमान्तं यजुः ।
अध्यैष्ट स्फुटनिश्चयैस्सुमधुरम्, सोऽयं प्रसिद्धो महान् माम्बळ्ळाभिजनस्सुदर्शनगुरुर्जागर्तु चित्ते मम ॥

2. लोके वेदाध्ययननिरतैः प्रायशः शास्त्रसिन्धौ व्यासङ्गो न क्रियत इति यत्सत्यमेवैतदास्ताम् ।
ये वेदज्ञास्समधिगतसच्छास्त्रबोधाश्च, तेऽपि प्रायो वेदे पदगमनिकां चर्चितुं नोत्सहन्ते ॥

3. अत्यल्पज्ञोऽपि दासोऽय माचार्यानुग्रहोज्ज्वलः । वैदिकेषु पदेष्वद्य विवृणोति विमर्शनम् ॥

இந்த மூன்று ச்லோகங்களின் கருத்துச் சுருக்கம் வருமாறு ;—(1) இருபத்திரண்டு வயதுக்குமேல் யஜுர் வேதத்தை யோதத் தொடங்கி எதிலும் எள்ளளவும் ஸந்தேஹமில்லாதபடி க்ரமாந்தமாக எவருடைய திருவருளினால் ஓதி முடித்தேனோ அந்த மஹாசார்யரான மாம்பள்ளம் ஸுதர்சநாசார்ய ஸ்வாமி என்னுள்ளத்துள்ளே வாழவேணும். (2) உலகில் வேதாத்யயநம் செய்பவர்கள் பெரும்பாலும் சாஸ்த்ரக் கடலில் அவகாஹிக்கப் பெறுவதில்லை யென்பது வாஸ்தவம் ; அதுநிற்க ; வேதத்தையும் ஓதி சாஸ்த்ரஜ்ஞானமும் பெற்றவர்களும் சிலருண்டே, அன்னவர்களுங்கூட தங்களுடைய சாஸ்த்ரஜ்ஞானத்தை அனேகமாய் வேதத்தில் உபயோகப்படுத்துவதில்லை. அடியேன் மிகவும் அல்பஜ்ஞனே யாகிலும் ஆசார்யாநுக்ரஹத்தினால் வைதிக பதங்களில் சில ஆராய்ச்சிகளைச் செய்ய இறங்குகின்றேன் என்பதாம்.

இப்படிப்பட்ட பீடிகையுடனே முதலில் சுருக்கமாக 145 பக்கங்கள் கொண்டதாக ஸர்வஸ்வக்ரந்தத்தின் ஒரு பகுதியை அச்சிட்டு வெளியிட்டேன். இதில் ஆனந்தமடைந்தவர்கள் பலர் ; அஸூயை கொண்டவர்கள் சிலர். அகாலத்தில் வேதமோதத்தொடங்கி அதை ஸாதித்துக் கொண்டதுமல்லாமல் வேதலக்ஷணக்ரந்தமு மெழுதத் தொடங்கின விதுவே பலர்க்கு ஆனந்த ஹேதுவாகவும் சிலர்க்கு அஸூயா ஹேதுவுமாகத் தொடங்கிற்று. இதன் விளைவு ஸாமான்யமாக நிற்கவில்லை ; அபரிமிதமாயிற்று. இது இற்றைக்கு இருபத்தெட்டு வருஷங்களுக்குமுன்பு நிகழ்ந்ததாயினும் இதுவொரு மஹாபாரதம் போன்றதாகையால் இதனுடைய ஸாராம்சங்களை ஏடுபடுத்தி வைப்பது நன்றென்று தோன்றுகின்றது.

வேதமொன்றில் மட்டுமல்ல ; எந்த விஷயத்திலுமே அடியேன் ஆர அமர ஆராய்ச்சி செய்வதில் இளமையிலிருந்தே அபிநிவேசமுடையவன். விவாஹத்தில் பச்சை கல்யாணத்தினன்று*வாரணமாயிரம் ஸேவித்துச் சீர்பாடல் பாடும்போது "சீர்பாடீ கணிமண்பா டப்போமே" என்று பத்திருபது தடவை பெருந்திரளாய் கோஷித்து வருவது நெடுநாளாகவே ஸ்ரீவைஷ்ணவக்ருஹங்களிலெல்லா முள்ளது. ஒரு ஸமயம் ஒரு பெரிய கோஷ்டியில் பல மஹான்கள் கூடி "அர்த்தமில்லாமல் இப்படி சொல்லிக்கொண்டு வருகிறோமே ; இதன் உண்மை ஸ்வரூபமென்ன ? சீர்பாடிக் களிமண் பாடுவதாவது என்ன ?" என்று விசாரம் செய்துகொண்டிருந்தார்கள். அப்போது அடியேன் எல்லாவிதத்திலும் மிகச்சிறியேன் ; ஆலோசித்

தில் "சீர்பாடிக் களிமின் களிப்போமே" என்றிருந்த வார்த்தையே இப்படி திரிந்திருக்கவேணுமென்று தோன்றி அதைப் பெரியார்களிடத்தில் விண்ணப்பம் செய்துகொண்டபோது "இது சிறந்த ஆராய்ச்சி; இப்படித் தானிருக்கத் தகுதி" என்று பல மஹான்களும் அபிநந்தித்தார்கள். சீர்பாடிக் களிமின்—சீர்பாடல்பாடி ஸம்பந்திகளான நீங்கள் ஸந்தோஷப்படுங்கள்; களிப்போம்—ப்ரதிஸம்பந்திகளான நாமும் ஸந்தோஷப்படுவோம் என்றபடி. இது அடியேனுடைய நாச்சியார் திருமொழி திவ்யார்த்த தீபிகையிலும் விளக்கப்பட்டிருக்கின்றது. இத்தகைய ஆராய்ச்சிகளை நூறல்ல, ஆயிரக்கணக்கான விஷயங்களிற் செய்திருக்கிறேன். அவையெல்லாம் அடியேனுடைய நூல்களிலும் பத்ரிகைகளிலும் அனேகமாக வெளிவந்தே யிருக்கின்றன. வேத பதங்களிற் செய்த விமர்சங்களையும் ஸர்வஸ்வ க்ரந்தத்தின் மூலமாக வெளியிடுவதற்கு முன்னம் மஞ்ஜு பாஷிணீ பத்ரிகையில் தொடர்ச்சியாக வெளியிட்டு வந்தேன. ஸ்மார்த்தர்களில் சிலர் வேதமுமோதி சாஸ்த்ரமும் வாசித்தவர்களிருப்பதால் அவர்கள் அவற்றை வாசித்துப் பார்த்து மிகவுமுகந்து இவை தனிப்புஸ்தக ரூபமாக வெளிவரவேண்டியது அவசியம் என்று தெரிவிக்க, அதை யநுஸரித்தே வேதாத்யயந ஸர்வஸ்வமென்று வெளியிட்டேன்; அப்புத்தகத்தின் முன்னுரையிலும் இதை விஜ்ஞாபனம் செய்திருக்கிறேன்.

இந்த ஸர்வஸ்வக்ரந்தம் அச்சாகி வெளியாவதற்கு முன்னமே சில பாரங்களை மன்னார்குடி, சேனங்குளம், திருக்குடந்தை முதலான விடங்களில் வேதமோதினவர்களும் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுமான சில மஹான்களுக்கு அனுப்பி அபிப்ராயம் கேட்டிருந்தேன். சேனங்குளத்தில் ப்ரஸித்தர்களாயிருந்த ஸ்ரீ உவே. கனபாடி அனந்தாசார்ய ஸ்வாமி அண்ணாத்துறை கனபாடி ஸ்வாமி முதலான விசேஷஜ்ஞர்கள் "வேதம் அவதரித்தநாள் முதல் இன்றுவரையில் இப்படிப்பட்ட விமர்சங்களைக் கண்டதேயில்லை" என்று "யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசா: ப்ரதிபேதிரே" என்ற கணக்கில் தெரிவித்திருந்தார்கள். அவையெல்லாம் அச்சிலேறிக் கிடப்பதால் மறைந்துபோன அவர்களைப்பற்றி இது ஆரோபிதமாக எழுதப்படுகின்றதென்று யாரும் நினைக்க இடமில்லை. இப்போதும் ஜீவித்திருக்கின்ற இரண்டு விசிஷ்ட வ்யக்திகள் தங்களுடைய ஸந்தோஷ பரிவாஹமாக எழுதினவற்றைக் காட்டுகின்றேன் காண்மின். திருவையாறு ஸம்ஸ்க்ருத காலேஜில் வியாகரணசாஸ்த்ர ப்ரவசநநிரதராயிருந்து சில வருஷங்களாக விச்ராந்தி பெற்றுக் காஞ்சீபுரியில் ஆனைகட்டி வீதியில் வாஸம் செய்துகொண்டிருக்கின்ற ஸ்ரீ உவே வேளியநல்லூர் ஸ்ரீநிவாஸதாதாசாரியர் என்பவர் பூர்த்தியாக வேதமோதினவர்; வ்யாகரணப்ரவசநமே போதுபோக்காக இருந்தவர். இவர் ஸர்வஸ்வ க்ரந்தத்தைப் பூர்த்தியாக வாசித்துப்பார்த்து அபேக்ஷா நிரபேக்ஷமாக ஸ்வயமேவ எழுதி யனுப்பிய அபிநந்தநபத்ரிகை பலகால் அச்சாகி வெளிவந்திருக்கின்றது; அதாவது.

"विद्वद्वैदिकहृदयंगमं वेदाध्ययनसर्वस्वमपश्यम् । द्रमिडवेदान्तादिष्विव वेदेऽपि ऊहापोहक्षमं स्वामिनां पाण्डित्यप्रकर्षमवगत्य विस्मयसागरे निमग्नोऽस्मि । अध्येत्रा पण्डितेन केनापि इयताऽपि कालेन स्वप्नेऽपि मात्रयाऽपि अचिन्तितः * उपागुरित्यादौ कृतो विचारो न केवलं दासस्य, अपितु पण्डितानामशेषाणामपि हृदयमावर्जयति । कमलाकान्तकरुणापरीवाहकटाक्षभाजनानां नास्त्यसाध्यं नाम किमपीति मन्यमाना विस्मयाद्विरमामः ॥ वे. र. श्रीनिवासताताचार्यः ।"

இந்த பத்ரிகையின் ஸாரமான விஷயம் யாதெனில்; வேதமோதினவொருவராலும் இந்நாள் வரையில் கனவிலும் ஈஷத்தும் சிந்திக்கப்படாததான விஷய விஸ்தரம் ஸர்வஸ்வ நூலில் இருப்பதாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

(2) மன்னார்குடி அக்ரஹாரம் வேதபாடசாலையில் நெடுநாளாக வேதோபாத்யாயராக இருந்து வருகிற ஸலக்ஷண கனபாடி ஸ்ரீ உவே. நரஸிம்ஹாசாரியர் எழுதிய கடிதமாவது—

"....श्रीमदित्याद्यनन्तबिरुदैकनिवासभूतानाम् श्रुतमात्रेण आबालवृद्धं विस्मयजनकविलक्षणकल्याणगुणगणविभूषितानाम् अनवरतम् अत्यन्ताश्चर्यापादकग्रन्थकरणेन कालमशेषम् अमोघीकुर्वाणानां श्रीमतां तत्रभवतां चरणनलिनयोः नरसिंहाख्यदासस्य प्रणतिसहस्रसमर्पणपूर्वकमिदं विज्ञापनम्। तत्रभवद्भिरनुगृहीतो वेदाध्ययन सर्वस्वाभिधो ग्रन्थो दासेन बहुवारं सावधानं समदर्शि। तद्विषये दासस्याशयमावेदयितुमारभ्यते चेत् अद्य लघीयस्यामस्यां पत्रिकायाम् अवकाशो न लभ्येत। परंतु प्राचीनलक्षणान्तर्गताः तत्त्यक्ताश्च बहवो विषया दासवत् किञ्चिज्ज्ञानाम्, अन्येषामनधीतवेदानामपि विनैव क्लेशलेशमपि अवगन्तव्यतया विचारिता इत्येव केवलमावेद्यतेऽधुना। अस्मिन्विषये दासस्य आनन्दं विस्तरेण निवेदयितुमद्य न शक्यत इति भृशं क्लिश्ये!

इत्थं तत्रभवद्विधेयचरमविधेयः सलक्षणघनपाठी—नरसिंहाचार्यदासः। राजमन्नार् सन्निधि। 14-10-31".

இப்படிப்பட்ட அபிநந்தநபத்ரிகைகளை அவரவர்கள் தாமாகவே எழுதியனுப்பிக்கொண்டிருந்தார்கள். திருக்குடந்தையில் அக்நிஹோத்ர வ்யபதேசிகளான தாதாசார்ய வம்சஸ்தர்கள் ஒருவரிருவர் மட்டும் இதில் அபரிமிதமான அஸூயையை வஹித்து அதை உள்ளே யடக்கிக் கொள்ளமாட்டாமல் வெளிக்காட்டவும் முயன்று நமது ஸர்வஸ்வக்ரந்தத்திற்குக் கண்டனம் வெளியிடவேணுமென்று கருதி, திருக்குடந்தையிலேயே ஒரு வித்வத்ஸபை கூட்ட நினைத்துத் துண்டு விளம்பரமொன்று வெளியிட்டார்கள்; "காஞ்சீபுரம் அண்ணங்கராசாரியர் ஸமீபகாலத்தில் வேதாத்யயந ஸர்வஸ்வமென்று ஒரு க்ரந்தமெழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்; ப்ராசீந லக்ஷணக்ரந்தங்களை அவமதித்துப் புதிதாக எழுதப்பட்ட இந்த லக்ஷணக்ரந்தம் தலையெடுக்க வொட்டாதபடி நாம் செய்யவேண்டியது அவசியமாயிருக்கின்றது; இன்ன தேதியில் இன்ன காலத்தில் இன்ன இடத்தில் கூடப்போகிற வித்வத் ஸதஸ்ஸுக்கு எல்லாரும் விஜயம் செய்யவேணும்" என்று அந்த துண்டு விளம்பரத்தில் வெளியிடப்பட்டது. அந்த திருக்குடந்தையிலேயே அடியேனிடத்தில் அபரிமிதமான ப்ரீதி விச்வாஸமுள்ளவர்கள் பலருளரென்பது முதற்பகுதியிலேயே விரிவாக விவரிக்கப்பட்டிருக்கிறதல்லவா? அப்படிப்பட்ட ஸஹ்ருதயஸஹ்ருந்மணிகள் அந்த விளம்பரத்தை மறுத்து [இந்த ஸதஸ்ஸு அவசியமற்றது என்று தெரிவித்து] உடனே பதில் விளம்பரமச்சிட்டார்கள். அதிலிருந்து அவ்விடத்தில் ஸயூத்யகலஹம் மிகவும் முற்றியது. அப்போது அக்நிஹோத்ரிகள் அந்தரங்கஸபை யென்று ஒரு ஸபைகூட்டி "அண்ணங்கராசாரியர் வடகலை ஸம்பிரதாயத்திற்கு எதிராக அனேக க்ரந்தங்களை வெளியிட்டுக்கொண்டு வருவதால் ப்ரக்ருதம் நமக்குள் இருபிளவு ஏற்படவே கூடாது; நாமெல்லோரும் ஐகமத்யமாயிருந்து அவருடைய ஸர்வஸ்வக்ரந்தத்தைக் கண்டிக்கவே வேணும" என்று பேசினார்கள்; அதையும் ஸயூத்யர்களே கண்டித்து பதில் பிரசுரம் வெளியிட்டார்கள். அதாவது, "அண்ணங்கராசாரியர் ஸ்வயமாக எந்த கண்டன க்ரந்தமும் எழுதுவதில்லை; அவர்களுடைய ஸம்ப்ரதாயத்தை தூஷித்து யாராவது ஏதேனுமெழுதினால் அதற்கு அவர் மறுப்பு எழுதி வெளியிடுகிறார். இது அவரவர்களுக்கு ப்ராப்தமேயொழிய அப்ராப்தமன்று. அதற்கும் இதற்கும் யாதொரு

ஸம்பந்தமுமில்லை. இவர்களுக்கு சக்தியிருந்தால் அண்ணங்கராசாரியர் வெளியிட்டு வருகிற ஸம்ப்ரதாயார்த்த விஷயகங்களான க்ரந்தங்களுக்கு மறுப்பு எழுதி வெளியிடட்டும். அதை விட்டு இவர்கள் அநாவச்யகமான வழியில் இறங்குவது மிகவும் தகுதியற்றது" என்று பிரசுரம் செய்தார்கள்.

இப்படிப்பட்ட பிரசுரங்கள் துண்டுப்பிரசுரங்களோடு நில்லாமல் சிறு புத்தகங்களாகவும் அப்போது திருக்குடந்தையில் வெளிவந்தன. அக்காலத்தில் அங்கு ஸயுக்த்யர்களுக்குள் ஏற்பட்ட மநஸ்தாபம் இன்று வரையிலும் சாந்தமாகவில்லையென்பது உலகமறிந்தது. பிறகு அக்நிஹோத்ரிகள் பலாத்காரமாகவே அங்கு ஒரு ஸதஸ்ஸு நடத்தினார்கள். எதிர்க்கக்ஷிக்காரர்கள் அந்த ஸதஸ்ஸிலும் சென்று ஆக்ஷேபங்களைச் செய்தார்கள். இதுவொரு பெரிய பாரதமான கதை. இவையெல்லாம் அக்காலத்தில் வெகு விரிவாக அச்சேறி யிருப்பதால் இங்கு இன்னமும் விவரிக்க வேண்டாவென்று விடுக்கிறேன். கடைசியாக அக்நிஹோத்ரிகள் வேதாத்யயநஸர்வஸ்வவிமர்சமென்றொரு சுவடியை நமது ஸர்வஸ்வ நூலுக்கு பதிலாகத் தமிழிலெழுதி அதை அவர்கள் அச்சிடாமல் கையெழுத்துக் காபியாகவே காஞ்சீபுரத்தில் (வைகுண்டவாஸி) அய்யா. க்ருஷ்ணதாதாசாரியர் என்கிற தங்களுடைய ஜ்ஞாதிக்கு அனுப்பியிருந்தார்கள். அதை அவர் அடியேனுக்குக் காண்பிக்க, அப்போதே அதை சதமுகமாகக் கண்டித்து ஸர்வஸ்வ ஸம்ரக்ஷணீ என்கிற க்ரந்தம் 140 பக்கங்களில் வெளிவந்தது. அதைக்கண்ட அக்நிஹோத்ரிகள் வேதலக்ஷண ஸித்தாஞ்ஜநமென்றொரு நூலையெழுதி அச்சிட்டு வெளியிட்டார்கள். அதை அவர்கள் கேவலம் அஸூயையினால் வெளியிட்டிருந்தாலும், தைவகார்யம் தனிப்பட்டதாகையால் அவர்கள் அந்த சுவடியின் ஆரம்பத்தில் இங்ஙனே எழுதி வெளியிடும்படி பகவான் செய்வித்தான். அதாவது,

> "வேதாத்யயநஸர்வஸ்வமியற்றிய ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி மிகுந்த பரிச்ரமத்துடன் இந்த க்ரந்தத்தை வெளியிட்டுள்ளாரென விளங்குகின்றது. நாம் விசாரணமேடையில் இதுவரையில் காணுதிருந்த விஷயங்களை விசாரத்தில் கொண்டு வந்ததற்கு இந்த ஸ்வாமியிடம் பூர்ணமான க்ருதஜ்ஞதையை அநுஸந்திக்கிறோம்"

என்பதுவே அவர்களுடைய ஆரம்பம். அந்த நூலுக்கும் ப்ரத்யக்ஷர கண்டனமாக ஸர்வஸ்வரக்ஷா என்கிற க்ரந்தம் உடனே வெளியிடப்பட்டது. இப்படிப்பட்ட க்ரந்த சர்ச்சைகள் 1930 ஷுத்தில் அங்குரித்து மூன்று வருஷகாலம் மிகமிக வளர்ந்து சென்றன. ஸர்வஸ்வகவசம், அஸூயாபரமௌஷதம், சாஸ்த்ரஜ்ஞாநசாணபலகம், பரமார்த்தபரித்ராணம் என்றிப்படி பல க்ரந்தங்கள் அப்போது வெளியிடப்பட்டன. 1931 ஷுல் காஞ்சீ வைசாகோத்ஸவ ஸமயத்தில் ஸந்நிதி வீதியில் ஆரணி ஜாகீர்தார் மாளிகையில் இதற்காக வாக்யார்த்த ஸபையும் ஒன்று கூட்டப்பட்டது. அப்போது திருக்குடந்தையிலிருந்து வாக்கின் வாககிணுகத் திரண்டுருண்டு வந்தார்கள். ஸுப்ரஸித்தராயிருந்த ஸ்ரீமத் வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்காரென்கிற மஹான் இந்த ஸபைக்குத் தலைமை வஹித்தார். இந்த ஸபை இரண்டுநாள் நடைபெற வேணுமென்று ஏற்பாடாகியிருந்தது. அப்படியே இரணடுநாள் நடந்தது. முதல் நாளில், அடியேனுடைய ஸர்வஸ்வ நூலிலுள்ள விஷயங்களை விரிவாக எடுத்துரைக்கும்படி ஸபையார்கள் அடியேனுக்கு நியமிக்க, அப்படியே எடுத்துரைக்கப்பட்டது. ஸபைத்தலைவரான வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் அவ்வளவையும் கேட்டு "இந்த ஸபையில் நான் தலையிடவேண்டிய அவசியமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை; அண்ணங்கராசாரியர் போயிருக்கிற மார்க்கத்தில் ஆக்ஷேபணைகள் உதிக்கவேண்டிய அவசியமொன்றும் எனக்குத் தோன்றவில்லை; நாளைய தினம் ஸபைக்கு நான் வரப்போகிறதில்லை" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். அந்த ஸ்வாமியில்லாமலே மறுநாளும் ஸபை நடந்தது. அதிலிருந்து

க்ரந்தச் சண்டைகள் மிக வளர்ந்தன. மறுபடியும் மன்னார்குடியிலும் அக்ரஹார பாடசாலையிலேயே இதைப்பற்றி இரண்டுநாள் ஸபை நடந்தது. அதன் முடிவை (வைகுண்டவாஸி) சேனங்குளம் அண்ணைத்துறை கனபாடிகள் முதலானோர் நிஷ்பக்ஷபாதமாக அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள். அவை மேலே வெளிவரும்.

இந்த விவாதம் தேசமெங்கும் பரவி விட்டது. கேவலம் கலாவைஷம்யத்தினால் இந்த விவாதம் வீணாகக் கிளப்பப்பட்டதென்று தெரிந்து கொண்ட பல ப்ரபல வித்வான்கள் வேதாத்யயந ஸர்வஸ்வத்தைக் கடாக்ஷித்தருளி இதில் தங்களுடைய அபிப்ராயங்களை ஒருவர்க்கும் அஞ்சாமல் கூசாமல் வெளியிட்டார்கள். ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமி, மைஸூர் லக்ஷ்மீபுரம் ஸ்வாமி, மண்டயம் தேவசிகாமணி ஸ்வாமி, ஸ்ரீரங்கம் எம்பார் ஸ்வாமி ஆக நால்வரும் ஸுப்ரஸித்த வித்வத்வரிஷ்டர்களாய்க் கீர்த்தி பெற்றிருந்தவர்கள் அடியேனுடைய ஸர்வஸ்வ க்ரந்தத்தை மிகவும் ப்ராமாணிகமென்று அபிநந்தனம் செய்து வெளியிட்டவர்கள். அந்த அபிநந்தன பத்ரிகைகள் அக்காலத்திலேயே பல பத்ரிகைகளிலும் புத்தகங்களிலும் ஏறியிருந்தாலும் இந்தச் சரிதை நூலில் ஏறி விளங்க வேண்டியது அவசியமாதலால் இங்கு அவை சுருக்கமாகப் பிரசுரிக்கப்படுகின்றன. இந்த அபிநந்தன பத்ரிகைகள் வெளிவந்த பிறகே பிரதிபக்ஷிகளானவர்கள் வெட்கமும் பீதியுமடைந்து விரதரானார்கள்.



ஸ்ரீமதுபயவே மஹாமஹோபாத்யாய திருப்பதி கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி)

ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமியின் அபிநந்தந பத்ரிகையின் ஸாராம்சம் இது—அநாதி ஸம்ப்ரதாய பரம்பரையாய் ஓதப்பட்டு வருகின்ற வைதிக பதபாட க்ரமத்தை ஸம்ரக்ஷிக்க எண்ணங் கொண்ட முன்னோர்களான வேதலக்ஷணகாரர்கள் முன்பின் எழுத்துக்களைக் காட்டுவதாகிய சில அடையாளங்களைக் குறிப்

பிடுதல் போன்ற உபாயத்தினால் பதஸ்வரூபங்களைத் தெரிவிப்பவர்களாய் பத பாட ஸரணியை ஸம்ரக்ஷித்திருக்கிறார்களென்பது ப்ரஸித்தமான விஷயம். ஆனால் ஸம்ஹிதையின் ஆநுபூர்வி முதலானவை ஒத்திருக்கச் செய்தேயும் ஆங்காங்கு பதஸ்வரூபங்கள் வேறுவேறு விதமாக இருப்பதற்கு என்ன காரணம்? என்பது போன்ற சங்கைகள் விமர்சகர்களுக்கு உண்டாகியே தீருமாதலால் அந்த சங்கைகளைப் போக்குவதற்கு அந்த லக்ஷண க்ரந்தங்கள் ப்ரவர்த்திக்கவேயில்லை. அப்படிப்பட்ட சங்கைகளை நீக்குவதற்காக ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரால் இயற்றி வெளியிடப்பட்டு வருகின்ற வேதாத்யயநஸர்வஸ்வ க்ரந்தமானது ஒவ்வொரு பதஸ்வரூபத்தையும் நிஷ்கர்ஷிக்கும் விஷயத்தில் அர்த்தப்பொருத்தமாகிற காரண விசேஷத்தை நன்கு நிரூபிக்கின்றது. அதாவது ஒவ்வொரு பதஸ்வரூபத்தையும் திடமாக தரித்துக் கொள்வதற்கு அர்த்தாநுகுண்யமாகிற உபாயத்தைக் காட்டுகிறதென்றபடி. இதுவரையில் ஒருவராலும் வெளியிடப்படாததும் நெஞ்சைக் கவர்வதுமாகிய ஆராய்ச்சி முறைமைகளை நாம் அந்தந்த ஸ்தலவிசேஷங்களில் வாசிக்கக் கேட்டு மிகவும் ஆனந்தப்படுகிறோம் என்று இதனால் தெரிவித்துக் கொள்ளப்பட்டது என்பதாம்.

ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமியின் ஸம்ஸ்க்ருத வியாஸம் வருமாறு :—

श्री. उ. वे. महामहोपाध्याय: तिरुपतिनगरनिवासी कपिस्थलम्. देशिकाचार्यस्वामी अभिनन्दति ।

पद्मावतीसमेतश्रीश्रीनिवासपरब्रह्मणे नम: । ५—१—१९३३

सुप्रसिद्धमेतत् यत् अनादिसंप्रदायसिद्धवेदपदपाठक्रमसंरक्षणाय प्रवृत्ता: प्राञ्चो वेदलक्षणप्रणेतार: पूर्वापरवर्णात्मकतत्तदभिज्ञानप्रदर्शनरूपोपायेन पदस्वरूपयाथात्म्यपरिज्ञानमुत्पादयन्त: तं क्रमं समरक्षन्निति । परन्तु सत्यपि आनुपूर्व्यादिसाम्ये तत्रतत्र पदस्वरूपादिभेद: किन्निबन्धन इत्यादिशङ्कां विमर्शकहृदयसाक्षिकमङ्कुरन्तीं शमयितुं न प्रभवन्ति तानीमानि लक्षणशास्त्राणि । तादृशी: शङ्का: शमयितु श्रीप्रतिवादिभयङ्कर - अण्णङ्गराचार्यै: प्रणीय प्रकाश्यमानो वेदाध्ययनसर्वस्वनामा ग्रन्थ: तत्तत्पदस्वरूपनिष्कर्षेषु अर्थानुगुण्यरूपं निमित्तविशेषं प्रकाशयन्, अर्थात् तत्रतत्र पदस्वरूपनिर्धारणे अर्थानुगुण्यरूपमुपायान्तरमपि प्रदर्शयन् अपूर्वया मनोहरया विचारशैल्या तत्रतत्र स्थलविशेषेष्वस्माभिराकर्णितया मनो धिनोतितमामस्माकमित्यावेदयिता—कपिस्थलोपपदो देशिकाचार्य:, तिरुपति ।

ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமியின் இந்தமதிப்புரை வியாஸம் சுருக்கமாக இருந்தாலும் ஸப்தலக்ஷணதிகளான பூர்வக்ரந்தங்களின் தன்மையையும் அடியேனுடைய வேதாத்யயந ஸர்வஸ்வத்தின்போகதையும் உள்ளபடியறிந்து அதை உலகுக்கு எடுத்துக்காட்டி யிருப்பதானது அந்த கபிஸ்தலம் ஸ்வாமியின் அத்புதமான மேதையை விளக்குகிறது. அந்த ஸ்வாமியினிடம் அடியேன் விடைகொண்டு இதைப்பற்றி ப்ரஸ்தாவித்தபோது அவர் ஸர்வஸ்வக்ரந்தத்தை வாசிக்கச்சொல்லிப் பலபலவிடங்களில் கேட்டருளும்போதே தம்முடைய அத்புதமான விமர்சசக்தியை உபயோகித்தபடியை அடியேன் நேரில் அநுபவித்து விஸ்மயப்பட்டேன். ஸப்த லக்ஷணக்ரந்தம் அவ்யுத்பந்நர்களுக்காகவே ஏற்பட்டதென்பதை அந்த ஸ்வாமி வெகுநன்றாகக் கண்டறிந்தார். *யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷியாகையாலே அந்த ஸ்வாமியிடத்திலும் ப்ரதிபக்ஷிகளுக்கு அப்போது அபரிமிதமான த்வேஷமுண்டாயிற்று. சிலர் நேரில் வந்து அந்த ஸ்வாமியை நிந்தித்தவர்களுமுண்டு. எதையும் அந்த மஹான் லக்ஷியம் செய்தவரல்லர்.

ஸ்ரீரங்கத்தில் மஹாவித்வத்ஸார்வபௌமராயெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி தென்னாட்டிலும் வடநாட்டிலும் மிகவும் ப்ரஸித்தர். இவரிடத்தில் நியாய சாஸ்த்ரத்தை ப்ராமாண்ய வாதாந்தமதிகரித்து உத்தீர்ணரானவர்கள் பலர். ஸ்ரீ கோஷ்டீபுரம் ஸ்வாமியென்று ப்ரஸித்தரான திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி, திருவஹீந்திரபுரம் அஷ்டகோத்ரம் கச்சிக்கிடாம்பி பாஷ்யகாராசார்ய ஸ்வாமி, உத்தமசீலி ரங்கஸாமி ஐயங்கார் ஸ்வாமி முதலான பலர் இந்த ஸ்வாமியின் கீர்த்திக்கு விஜயஸ்தம்பமாக விளங்கினவர்கள். இந்த ஸ்வாமியின் திவ்யசரித்திரம் பரமபவித்திரமானது. அதைப்பற்றிப் பிறகு விஜ்ஞாபனம் செய்து கொள்ளுகிறேன். இந்த ஸ்வாமி சாஸ்த்ரீய விஷயங்களை விமர்சிப்பதில் அத்விதீய நிபுணராகையாலே அடியேனுடைய ஸர்வஸ்வக்ரந்தத்தைப் பூர்த்தியாக இரண்டு மூன்று நாட்களில் கடாக்ஷித்தருளி விரிவான அபிநந்தந பத்ரிகையொன்று அநுக்ரஹித்தருளினார். அது அப்போதே பிரசுரமாகியிருக்கிறது. அதிலிருந்து ஆத்யந்த வார்த்தைகளை மட்டும் இங்கு எடுத்துக் காட்டுகிறேன். “अस्मत्प्रियमित्रमणीनाम् उभयवेदवेदान्तविद्वद्वराणां श्रीकाञ्चीप्रतिवादिभयंकरस्वामिनां सर्वतोमुखवैशारद्यप्रदीपिकायमानं वेदाध्ययनसर्वस्वं नाम ग्रन्थं पर्यवैक्षिषि ; नूनमयं ग्रन्थो वैदिकलोकस्य अपूर्वमन्यादृशम् अनुपममुपकारमादधातीति प्रत्येति ममान्तःकरणम् । इतः पूर्वं भूयांसोऽपि वैदिका विद्वांसोऽवतीर्णा एतादृशे परमपावने वर्त्मनि नैव मनो व्यापारयामासुरिति दूये । वैदिकजनभाग्यभूम्ना एतादृशे वर्त्मनि पदं विन्यस्य विलक्षणमुपकारं विरचयद्भ्य एतेभ्यस्सर्वस्वकारेभ्यः वृथैव केचिदभ्यसूयन्ते इति विज्ञाय दूयेतमां च ॥ शास्त्रीयया सरण्या अर्थानुगुण्यमुपपाद्य पदस्वरूपनिर्धारणे प्रवृत्तोऽयं सर्वस्वग्रन्थः सर्वस्मिन्नपि विषये सुमनोमनोहर इति साधु प्रतिपद्ये । ………वस्तुतो बहुग्रन्थपर्यवेक्षणपरिशीलनपूर्वकम् अत्यन्तमभिनन्दनीयया प्रणाल्या लिखितोऽयं ग्रन्थो मितज्ञबहुज्ञसाधारण्येन सर्वेषामपि अक्षरास्यानां वैदिकानां महोपकाराय कल्पत इति विस्रब्धं ब्रूमः । तैत्तिरीयसंहितायाम् अधीयमानः पदविभागस्सर्वोऽपि शास्त्रीयकारणमूलक एवेति, व्यत्ययशास्त्रप्रवेशो नात्र मात्रयाऽप्यस्तीति, अत एव विमर्शकुशलानां व्युत्पन्नानां वदिकानां संदेहस्थलेषु विमर्शबलेनैव तत्तत्पदस्वरूपयाथात्म्यमवधारयितुमनपाया योग्यतेति च सर्वस्वकाराणाममीषां सिद्धान्तः अप्रकम्प्य एवेति च एतत्सर्वस्वग्रन्थपरामर्शतः प्रतिपद्यामहे वयम् । इति श्रीरङ्गम्. एम्बार्. कृष्णमाचार्यः ।
वडताल (बरोडा)



ஸ்ரீமத் உபயவே. வித்வத் ஸார்வபௌம எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி. (வைகுண்டவாஸி)

இந்த ஸ்வாமியின் விரிவான மதிப்புரையில் நமது ஸர்வஸ்வ நூலிலிருந்து பலவிடங்கள் எடுத்துக்காட்டப்பட்டு அவை ஆக்ஷேபகர்களான எதிரிகளின் புத்திக்கு அடியோடு எட்டாதவையென்று நிரூபிக்கப்பட்டிருக்கின்றது.

मैसूरुसंस्थान - महाविद्वान्· महामहोपाध्यायः पण्डितरत्नम्.
श्री. उ. वे. लक्ष्मीपुरम् श्रीनिवासाचार्यस्वामी अभिनन्दति ।

अथेदानीं श्रीमद्भिः काञ्चीपुराभिजनैः प्रतिवादिभयङ्कर - अण्णङ्गराचार्यैः प्रणीतस्य वेदाध्ययनसर्वस्वनाम्नः प्रबन्धस्य परिशीलनेन अयमस्माकमभिप्रायस्समुदित-स्समुचितः । यथा—'स्वाध्यायोऽध्येतव्य' इति विधिना विहितो वेदाभ्यासो "वेदस्वीकरणं पूर्वं विचारोऽध्ययनं जपः । तद्दानं चैव शिष्येभ्यो वेदाभ्यासो हि पञ्चधा" इति दक्षादिभिरुपबृंहितः । तस्यैतस्य प्रपञ्चस्य परमुद्दे-श्यमेतत्, यत् निधिसदृशस्य वेदस्य परिपालनं नाम । तदेतत्परिपालनं बहुभिः प्रकारैः शिक्षाकारादिभिः कृतमपि केवलमानुपूर्वीविशिष्टवर्णदृष्ट्यैव कृतं नार्थदृष्ट्येत्यभि-सन्धाय एतैः पुनराचार्यवर्यैः साहित्यविज्ञान - शास्त्र-विज्ञान - वेदाध्ययन लक्षणविज्ञान - लोकविज्ञानादिसर्व-सम्पत्समृद्धैः प्राचीनं परिष्करणं न हि खलु केवलं पारम्परिकसंस्कारमूलं किन्तु वेदार्थविज्ञानैकमूलमिति अत्र सम्यक् प्रदर्श्यते । एतादृश एव वर्त्मनि प्रयतमाना यास्कप्रभृतयो ये निरुक्ताद्यङ्गप्रवक्तारो महानुभावाः प्राच्याः, तेषामपि सरण्यनुसरणेन अनितरसाधारणीयं पुरुषेणावश्यकर्तव्ये वेदोपकारे प्रवृत्तिः वेदं तदर्थं तदनुसन्धातारम् अनुष्ठातारं सर्वस्याप्यन्तरात्मानं परमात्मानं च परिपालयतीत्यध्यवस्यति—



ஸ்ரீமத் மஹாமஹோபாத்யாய
லக்ஷ்மீபுரம், ஸ்ரீநிவாஸாசாரியார்
ஸ்வாமி 'வைகுண்டவாஸி.

महामहोपाध्यायः पण्डिरत्नम् लक्ष्मीपुरम्.
श्रीनिवासाचार्यः, महीसुरनगरनिवासी ।

இந்த லக்ஷ்மீபுரம் ஸ்வாமி மஹாவைதிகரே யொழிய லௌகிகரல்லர்.
திருமேனியில் லௌகிகக் கோலம் காண்கிறதேயென்று சிலர் ஆலோசிக்கக் கூடும்.
அந்த கோலம் மஹா மஹோபாத்யாய பிருதத்தை ஏற்றுக்கொண்டபோது ஸ்வீ
கரித்த கோலமென்று கேள்வி. இந்த மஹாவித்வான் அனேக தர்சநங்களில்
ஆழ்ந்து உயர்ந்த பல க்ரந்தங்களை இயற்றி வெளியிட்டிருக்கிறார். இந்த ஸ்வாமி
யோடு அடியேனுக்கு மிக நெருங்கிய பரிசயம் ஏற்பட்டது. அதற்கு வேதாத்ய
யநஸர்வஸ்வ க்ரந்தமே மூலகாரணமானது. அந்தஸ்வாமியின் மேதை எந்த விஷயத்
திலும் தாராளமாக ப்ரவேசித்துக் கொண்டிருந்தபடியால் வேத லக்ஷண விமர்சத்
திலும் அடியேனுடைய வேண்டுகோளுக்காகவே இறங்கி பரிபூர்ணமாகப் பராமர்
சித்து அளவுகடந்த ஆனந்தமடைந்தார். தாம் பல துறைகளில் க்ரந்தங்களெழுதி
யிருந்தும் இப்படிப்பட்ட க்ரந்த மெழுதப் பெறவில்லையே யென்று குறையுற்றார்.

இவவண்ணமாக அனேகவித்வத்வரிஷ்டர்கள் ஸர்வஸ்வக்ரந்தத்தை நன்கு ஆராய்ந்து தம்தம் அபிப்ராயவிசேஷங்களை வெளியிட்டபின்பு திருக்குடந்தை ப்ரதிபக்ஷிகள் வேறு சிலரைக் கிளப்பி அவர்கள் மூலமாக நிந்தைச் சுவடிகளை யெழுதுவித்துப் பிரசுரம் செய்வித்தல் என்கிற காரியத்திலே ஊன்றினர்கள். அப்போது வெளிவந்த கண்டன மண்டன முண்டனநூல்கள் அபரிமிதம். அவரவர்களின் துர்வாதங்களைச் சோம்பாமல் கண்டித்துப் பொருட்செலவு பாராமல் அச்சிட்டு வெளியிட்டுக்கொண்டே யிருக்க நேர்ந்தது. அப்படிப்பட்ட வாதவிவாத நூல்கள் இற்றைக்கும் நமது க்ரந்தமாலா புஸ்தகாலயத்தில் கிடைக்கும்.

திருக்குடந்தையில் வாழ்ந்த ஸ்ரீமத். அபிநவ பட்ட பாணேத்யாதி பிருதபூஷிதரான ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியர் என்பவரைப்பற்றிக் கீழே பக்கம் 27ல் ப்ரஸ்தாவம் செய்திருக்கிறேன். இவருடைய உருவப்படமும் அங்கே காணலாகும். இவர் மிகச் சிறந்த பண்டிதர். இவர் சில வருஷங்கள் சென்னையில் வாழ்ந்தார். அப்போது திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டிக்கு ஸமய விசேஷங்களில் வருவர். அந்த ப்ரஸக்தியினல் அவருக்கும் எனக்கும் மிகுந்த நட்பு உண்டாகியிருந்தது. அவர் ஸம்ப்ரதாய விஷயங்களில் ப்ரவேசமேயில்லாமலிருந்தவர். கலாவைஷம்யமென்பது அவர்க்கு அடியோடு தெரியாது. குணக்ராஹியாயிருந்தபடியாலே அடியேன் வெளியிடும் க்ரந்தங்களையெல்லாம் பெற்று மகிழ்வதோடு நிற்காமல் மகிழ்ச்சியின் பரீவாஹமான கடிதங்களும் பல எழுதிக்கொண்டிருப்பர். அங்ஙனம் பரமஸ்நிக்தராயிருந்த அவரையும் அக்நிஹோத்ரிகள் அடியேனுக்கு ப்ரதித்வந்த்வியாக்கி அவரைக்கொண்டும் சில தூஷணச்சுவடிகளை வெளிபிடுவித்தார்கள். அவர்க்கோ வேதத்தில் ப்ரவேசமே கிடையாது. வேத விஷயத்தில் எழுத முன்வருவதற்கு அவர் இசையவில்லை; “எதையாவது எழுதி வெளியிட்டு அண்ணங்கராசாரியர்க்கு பங்கத்தை விளைக்கவேண்டியது” என்று ப்ரதிபக்ஷிகளால் மிகவும் வேண்டிக்கொள்ளப்பட்ட அவர் ‘‘அண்ணங்கராசார்யஸ்ய அபசப்தநாநி” என்று பெயரிட்டு ஒரு துண்டுக் காகிதம் வெளியிட்டார். அடியேன் வடமொழியில் எழுதி வெளியிட்டிருந்த சில க்ரந்தங்களில் அபசப்தங்கள் [வியாகரணவிருத்த ப்ரயோகங்கள்] இருப்பதாகச் சிலவிடங்களை யெடுத்துக்காட்டி தூஷித்திருந்தார். அது எனக்குக் கிடைத்த ஒரு வாரத்திற்குள் “ரஸிகபுதரஞ்ஜநம்” என்று பெயருள்ளவொரு வடமொழிநூலை அதற்கு மறுப்பாக வெளியிட்டேன். பிறகு சில மாதங்கள் பொறுத்து அவர் மர்மப்ரகாச மென்றொரு புத்தகத்தை அபரிமித நிந்தாபரிஹாஸ பூரிதமாக்கி வெளியிட்டார். அதை ஒரு வருஷம் காஞ்சீ வைசாகோத்ஸவத்தில் கருடஸேவையன்று கோஷ்டிகளில் விநியோகம் செய்தார்கள். உடனே திருத்தேர் மஹோத்ஸவத்திற்குள் உபதேசரஸாயன மென்றும் உபதேசரஸாயநஸார மென்றும் மறுப்புகளை யச்சிட்டு வெளியிட்டேன். அவரவர்கள் மாதக்கணக்கிலும் வருஷக்கணக்கிலும் பலர்கூடிப் பரிச்ரமப்பட்டு ஏழெட்டுபக்கம் அச்சிட்டுக்கொண்டுவந்து “இத்தோடு அண்ணங்கராசாரியர்தலை மடிந்துவிட்டது பாருங்கள்” என்று சொல்லிக்கொண்டே கோஷ்டிகளில் அதை விநியோகம் செய்து கொக்கரித்திருப்பர்கள். மூன்ருவது நாளிலேயே முப்பது பக்கம் ஐம்பது பக்கம் நூறுபக்கம் இப்படியாக மறுப்பு நூல்களை வெளியிட்டு அவர்கள் வாசாமகோசரமான வருத்தத்திற்கு ஆளாகியே ஊர்சென்று சேரும்படி செய்திடுவேன். கீழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸாசாரியர் என்றொருவர் இருந்தார். அவர் காலஞ்சென்று பத்தெட்டு வருஷமாகிறது. அவர் தேவப்பெருமாளுடைய பெரிய உத்ஸவங்கள் தோறும் ஸ்ரீரங்கத்திலிருந்தோ சென்னையிலிருந்தோ காஞ்சிக்கு வருவர். வருகிறபோதெல்லாம் என் விஷயமான தூஷணைகளை நிரப்பித் துண்டுப் பிரசுரமச்சிட்டுக் கட்டு கட்டாகக் கட்டிக் கொண்டுவந்து தன்கையினலேயே விநியோகிப்

பர் பாவம்! இத்தோடு அண்ணங்கராசாரியர் மடிந்து விட்டார்' என்றும் சொல்லிக் கொண்டிருப்பர். மூன்றுவது நாளிலேயே சுடச்சுட பதில் புத்தகத்தைப் பெற்றுக் கொண்டு தலைமறையப் போய்விடுவர். திருக்குடந்தையில் வாழும் ஸ்ரீமத். சின்னூமைசலிபாட்டராசாரியரென்பவரும் சில வருஷங்களில் இதே ரீதியாக விருந்து வந்தார். இங்ஙனே ஒவ்வொரு ஸமயத்திலும் கிளர்ந்த மஹாநுபாவர்களுக்குத் தக்க வாய்மூடி போடுவதற்காக அடியேன் செலவுசெய்த ரூபாய் ஏறக்குறைய இருபதினுயிரமிருக்கும். உண்மையில் இன்னும் அதிகமாகவே யிருக்கும். இவ்வளவுக்கும் மூலம் வேதாத்யயந ஸர்வஸ்வநூலை அடியேன் எழுதி வெளியிட்டதேயாகும். அப்போது யார் யார் என்னென்ன நிந்தைக் கந்தைகளை வெளியிட்டார்களென்பதையும், அவற்றுக்கு அடியேன் வெளியிட்ட பதில்களையும் பற்றிச் சிறிது விரிவாகத் தெரிவிக்கவேணுமென்று குதூஹலமுண்டு. அதை இந்தப்பகுதியில் வைத்துக் கொள்ளவில்லை. அது அவசியமற்றதென்றே விட்டிடுகிறேன்.

இங்கு முக்கியமாக ஒரு விஷயம் தெரிவிக்கிறேன். பதினெட்டாவது வயதிலிருந்து இற்றைநாள் வரையில் அடியேனை நோக்கி எதிரம்புகோத்த வித்வான்களும் பண்டிதர்களும் பாமரர்களும் நூற்றுக்கணக்கில்தா னிருப்பர்கள். அடியேனுக்குப் பரமாப்தரும் ஸுஹ்ருதயருமான ஸ்ரீமத். D. ராமஸ்வாமி ஐயங்காரென்பவர் ஒரு ஸமயம் ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டிருப்பதில் ஸாரமான வார்த்தைகளை இங்கு ஆனந்தபூர்வமாக உதாஹரிக்கிறேன்; அல்லது நினைப்பூட்டுகிறேன்;

ஸ்ரீமத் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி க்ரந்தங்களை யெழுதி ப்ரசுரிப்பது நூற்றுக் கணக்கானது. எந்த விஷயத்தை யெடுத்துக்கொண்டாலும் அந்த விஷயத்தில் இவர் காட்டும் நிருபணங்களில் இவரை வெல்பவர் கிடையாது. இந்த ஸ்வாமி கையாண்ட விஷயங்களோ அனேகம்; இவை பல துறைகளிலுள்ளவை என்பதையும் ஞாபகப்படுத்துகிறேன். வாதப்போர் நடத்துவதில் இந்த ஸ்வாமிக்கு வெகு உத்ஸாஹம். இதனுல் ஸ்வாமியாலும் ஸ்வாமி விஷயமாகவும் அனேக ரஸமற்ற க்ரந்தங்கள் உற்பத்தியாகியிருக்கின்றன. இவற்றுக்கெல்லாம் காரணம் ஸ்வாமியின் அபார சக்தியே யாகும். இவ்வளவு சக்திவாய்ந்த ஒரு மஹா புருஷர் விஷயத்தில் அசூயையையும் பொறுமையையும் எத்திக்கிலிருந்துமெதிர்பார்க்கலாம். ஆனுல் எவ்வித வாதப்போரிலும் ஸ்வாமி பின்வாங்கவே மாட்டார். இவருடைய வாதமே கடைசியாக ஓங்கி நிற்கும். இந்த ரீதியில் அனேகம் உள்ளன. விஷயங்களைத் தேங்காய் உடைப்பதுபோல வெட்டொன்று துண்டிரண்டென்று உடைத்துக் காட்டுவர்."

இப்படியாக அந்தஅட்வகேட்மஹான் ஸ்வாநுபவத்தை உள்ளபடி எழுதி உலகமெங்கும் பரவச் செய்திருக்கிறுர். இது நிற்க. அடியேன் முக்கியமானவொரு விஷயம் இங்கே விஜ்ஞாபிக்கிறேன். இதுவே அற்புதமானது. ஸ்ரீவைஷ்ணவ மண்டலியில் (தத்ராபி) தென்னுசார்ய ஸம்ப்ரதாயத்தில் நிகரற்ற மஹா ப்ராஜ்ஞராக விளங்கின மஹான் ஸ்ரீமத் காரப்பங்காடு சிங்கப்பெருமாள்ஸ்வாமி. முதற்பகுதியில் (பக்கம் 32, 33ல்) ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸ்ரீமத் திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமியோடு அடியேன் வார்த்தையாட நேருங்காலங்களில் அவர் இந்த ஸ்வாமியைப்பற்றி அதிமாத்ரம் ப்ரசம்ஸித்துக்கூறுவர். உபய வேதாந்த க்ரந்தங்களிலும், ப்ராசீநக்ரந்தங்கள் நவீந க்ரந்தங்கள் என்கிற வாசியில்லாமல் அனைத்திலும் மஹா ப்ராஜ்ஞரென்று கொண்டாடிக் கூறுவர். இந்த ஸ்வாமியை ஸேவிக்கப்பெறவேணுமென்று அடியேன் நெடுநாள் குதூஹலித்திருந்தேன். இந்த ஸ்வாமி ஸ்ரீரங்கத்தில் நித்யவாஸமாக எழுந்தருளியிருந்து உபயவேதாந்தப்ரவசநம் செய்தருளாநின்றுரென்று கேள்விப்பட்டு இந்த மஹா ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே ஒரு பரியாயம் ஸ்ரீரங்கத்திற்கு விடைகொண்டேன். அங்கு சிங்கப்

பெருமாள் ஸ்வாமி வானமாமலை மடத்தில் வாஸமாக எழுந்தருளியிருந்தார். ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மடத்தில் காலைமாலை வேளைகளில் உபய வேதாந்த ப்ரவசநம் வெகு ஆச்சரியமாகச் செய்தருளாநின்றார். சில வேளைகள் தங்கியிருந்து கேட்டுக்களிக்கப்பெற்றேன் அப்போது அந்த சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் அளவுகடந்த ஸௌசீல்யகுணத்தை யநுபவிக்க ப்ராப்தமாயிற்று. லோகாபிராமமான வார்த்தைகளிலும் சாஸ்த்ரார்த்தங்கள் வெளிவரும்படி வார்த்தையாடியருள்வர். அந்தஸ்வாமிக்கு ஜ்யோதிச் சாஸ்த்ரத்திலும் அபாரமான பாண்டித்ய முண்டென்பது அப்போது அறியலாயிற்று. ஒருநாள் அந்த ஸ்வாமி அடியேனுடைய ஒரு நோட் புத்தகத்தில் எனது ஜாதகம் குறிக்கப்பட்டிருந்ததைக் கடாக்ஷித்தருளி அதீதாநாகத பலன்களையெல்லாம் தெரிவித்தருளத்தொடங்கினார். சோதிடத்தில் எத்தனை ச்லோகங்களுண்டோ, எத்தனை பாட்டுக்களுண்டோ அத்தனையும் அந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களாயிருந்தனவென்பதை அந்த க்ஷணத்தில் கண்டறிந்து வியந்தேன். அப்போது அந்த ஸ்வாமி அழுத்தம் திருத்தமாக ஒரு விஷயம் ஸாதித்தார்; அதை உலகமெல்லாம் அறிந்தேயிருக்கின்றது. அதாவது,



ஸ்ரீமதுபயவே. அப்ரமேயவித்யாநிதி—காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி (வைகுண்டவாஸி)

"பிரதிவாதி பயங்கரரென்கிற குடிப்பெயர் உமக்கு அந்வர்த்தமாகவேயிருக்கும்; உலகத்திலுள்ள வித்வான்கள் யாவரும் தாமாகவே வந்து உம்முடைய வாக்கில்மாட்டிக்கொள்வர்கள். இதை நீர்பரீக்ஷையாகப் பார்க்கலாம். வேண்டியவர்கள்வேண்டாதவர்கள் என்கிற வாசியில்லாமல்பெரும்பாலும் எல்லாருமேவந்து உம்மிடம் சிக்கிக்கொள்வர்கள். சிக்கிக்கொள்வதோடு நிற்கமாட்டார்கள்; திக்குமுக்கலாடி நிற்பர்கள். சனிக்கிழமையை செவ்வாய்க்கிழமையாக நீர் சொல்லிவிட்டாலும் அது செவ்வாய்க்கிழமையாகவே ஆய்விடும். இத்தால் நீர் விதண்டா

வாதம் செய்வீரென்றதாகாது ; எத்தனை வித்வான்கள் திரண்டு போராடினாலும் உம்முடைய வாதந்தான் ஸித்தாந்தமாக நிற்கும்.''

என்று சொல்லி இதற்குப் பல ச்லோகங்களும் பல பாட்டுக்களும் ஸாதித்தார்.

"உலகத்தில் சோதிடர்கள் சொல்லுகிறபடியெல்லாம் பலிக்கிறதென்று நிர்ப்பந்தமில்லை ; சில வார்த்தைகள் விபரீமாவதுமுண்டு ; இப்போது நான் உமக்குப் பல விஷயங்கள் சொல்லியிருக்கிறேன் ; அவற்றில் மற்ற விஷயங்கள் பழுதுபட்டாலும் இந்தவொரு விஷயம்மட்டும் பழுதுபடவேமாட்டாதென்று சபதம் செய்வேன் ; நூற்றுக்கணக்கான வித்வான்கள் உம்மிடம் வந்து மாட்டிக்கொண்டே தீருவர்கள். நான்கூட ஒருகால் உம்மிடத்தில் மாட்டிக்கொள்வேனோ! என்கிற அச்சமும் உண்டாகியிருக்கின்றது. ஆனால் எனக்கு விஷயம் தெரிந்துவிட்டபடியால் நான் ஜாகரூகனாகவே யிருந்திடுவேன். இன்னும் நான் பத்திருபது வருஷங்களாவது ஜீவித்திருப்பேன். அடிக்கடி நாம் சந்திக்க நேருமே. அவ்வப்போதுகளில் நானே இதைப்பற்றின யோகக்ஷேம விசாரம் செய்வேன்'' என்றும் ஸாதித்கார். இது 40 வருஷமாகிறது.

அந்த ஸ்வாமியின் அந்தத் திருவாக்கு அவ்விடத்திலேயே அன்றைக்கே பலிக்க ஆரம்பித்தது. அப்போது அங்கு ஸ்ரீமத் புத்தங்கோட்டம் சீமாச்சார்ஸ்வாமி யென்று ஸுப்ரஸித்தரான ஜ்ஞாநாநுஷ்டாநசீலர் எழுந்தருளியிருந்தார். அந்த ஸ்வாமி அஹோபில மடத்து ஆஸ்தாந வித்வானென்றும் விளங்கி வந்தார். அந்த ஸ்வாமியின் பரிசயம் அடியேனுக்கு அதற்கு முன்பு கிடையாது. அடியேன் காவேரிக்காகச்சென்று கொண்டிருக்கையில் அந்த ஸ்வாமி ஒரு திருமாளிகை வாசல் திண்ணையில் எழுந்தருளியிருந்து சிலர்க்கு யாதவாப்யுதயபாடம் ஸாதித்துவருகிறார். வீதியூடே சென்று கொண்டிருந்தவடியேனைப் பரமப்ரேமத்துடன் கடாக்ஷித்து அழைத்துக் குசலப்ரச்நம்பண்ணி உட்காரச் செய்தார். பிறகு பாடம் நடந்துகொண்டிருக்கிறது. அதில் முதல் ஸர்க்க முடிவில் ஒரு ச்லோகரத்நம் ;



ஸ்ரீமதுபயவே. புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி, ஸ்ரீரங்கம் (வைகுண்டவாஸி)

" आश्वास्य वागमृतवृष्टिभिरादितेयान् दैतेयभारनमितां धरणीं च देवीम् ।
आविर्बुभूषुरनघो वसुदेवपत्न्यां पद्मापतिः प्रणिदधे समयं दयाया: ॥ "

[ஆச்வாஸ்ய வாகம்ருதவ்ருஷ்டிபிராதிதேயாந்
தைதேயபாரநமிதாம் தரணீஞ்ச தேவீம்,
ஆவிர்புபூஷுரநகோ வஸுதேவபத்ந்யாம்
பத்மாபதி: ப்ரணிததே ஸமயம் தயாயா.] என்று.

பூபாரத்தையும் அஸுரோபத்ரவத்தையும் நீக்கும்படி பூமிதேவியாலும் தேவதைகளாலும் பிரார்த்திக்கப்பட்ட க்ஷீராப்திநாதன் அவர்களைத் தேற்றியனுப்பி, தான் தேவகிப் பிராட்டியாரிடம் பிறந்து தனது தயையை வெளிப்படுத்த உத்தேசித்தான்—என்பது இந்த ச்லோகத்தின் தாற்பரியம். இதில் [अनघ:—அநக:] என்னும் விசேஷணம் பகவானுக்குள்ளது. அகில ஹேயப்ரத்யநீகனென்று வேதாந்தங்கள் போற்றநின்ற பெருமானுக்கு இல்லையாகச் சொல்லப்படுகிற அகம்(अघम्) எதுவென்று சங்கை வரக்கூடும். இதன் வியாக்கியானத்தில் அப்பயதீக்ஷிதர் " अनघ:—निरवद्य: ; तत्तत्कर्मानुरोधितया वैषम्यनैर्घृण्यदोषरहित: ।" என்றெழுதியுள்ளார். அவரவர்கள் செய்யும் புண்ய பாபரூப கருமங்களைப் பின் செல்பவனுதலால் வைஷம்ய நைர்க்ருண்யங்களாகிற தோஷங்களில்லாதவன்—என்பது இந்த வியாக்கியான வாக்கியத்தின் பொருள். பகவான் ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுகிற காலத்திலே இப்படிப்பட்ட தோஷங்களுக்கு சங்கையும் பரிஹாரமும் சாரீரகமீமாம்ஸையில் ஏற்பட்டிருப்பது வாஸ்தவம். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தரசதகத்தில் *நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷிந், வைஷம்யநிர்க்ருணதயோர் ந கலு ப்ரஸக்தி: தத் ப்ரஹ்மஸூத்ரஸசிவாச்ச்ருதயோ க்ருணந்தி* என்கிற ச்லோகத்தினுல் இதனை விசதீகரித்தருளினுர். இங்கு ஜகத்ஸ்ருஷ்டியைச் சொல்லுகிற ப்ரகரணமாக இருந்தால் இங்ஙனே பொருள் பணிக்கத்தகும். இது அந்த ப்ரகரணமன்று; பகவான் தன்னுடைய திருவவதார ப்ரகரணமென்பது ஸ்பஷ்டம். இந்த ப்ரகரணத்தில் (அநக:) என்பதற்கு வைஷம்ய நைர்க்ருண்ய தோஷமில்லாதவன் என்று பொருள் கூறுவது ஏலாது. இவ்விஷயத்தை அந்த புத்தங்கோட்டம் ஸ்வாமி விமர்சியாமல் வியாக்கியானத்திலுள்ளபடியே பாடம் சொல்லிக்கொண்டிருந்தார். இதைக் கேட்டுக்கொண்டிருந்த அடியேன் "இங்கே ஒரு விவக்ஷையுண்டு, விஜ்ஞாபிக்கலாமோ?" என்றேன்; அவ்விடத்து வியாக்கியான பங்க்தி பொருந்தாதென்பதை விஜ்ஞாபித்தேன். பரிகராலங்காரம் அமைய அருளிச்செய்யப்பட்ட (அநக:) என்னும் விசேஷணத்திற்கு வைஷம்ய நைர்க்ருண்ய தோஷமில்லாதவனென்கிற பொருள் அப்ரஸக்தமெனறு உபபாதித்தேன். வெகுகாலமாய்விட்டபடியால் மேன்மேலும் நடந்த உக்திப்ரத்யுக்திகள் நன்ருக நினைவில்லை. "அப்பய தீக்ஷிதர் எவ்வளவு வியாபகர்; அவருடைய வியாக்கியானத்திற்கா குற்றங்குறை கூறுகின்றீர்; (அநக:) என்பதற்கு வேறு எவ்விதமாக அர்த்தம் சொல்ல முடியும்; நீர் சொல்லும் பார்ப்போம்" என்ருர். "அஸ்மதாதிகளுடைய பிறப்புக்குக் கர்மம் காரணம்; கர்மவச்யத்வமாகிற தோஷம் நமக்குண்டு; எம்பெருமான் க்ருபாவச்யனுகிப் பிறக்கிருனேயொழியக் கர்மவச்யனுகிப் பிறப்பதில்லை. ஆகவே கர்மவச்யத்வமாகிற தோஷமில்லாதவன் என்பதே இங்குப் பொருத்தமான பொருள்; இந்த ரீதியில் மற்றும் சில பொருள்களும் சொலலலாம்; தீக்ஷிதர் எழுதியுள்ள பொருள் இவ்விடத்திற்குப் பொருந்தாதுதான்" என்று அரைமணிகாலம் விவரித்து விண்ணப்பம் செய்தேன். அதனமேல் அந்த ஸ்வாமி சிற்றத்தோடு சில வார்த்தைகள் ஸாதிக்க "*சேஷம் கோபேந பூரயத் என்பது தெரிந்ததுதானே" என்றேன். அதைக்கேட்ட

வுடனே அவர்க்கு இன்னமும் அளவுகடந்த சீற்றமுண்டாகிவிட்டது. அந்தோ! வைரஸ்யமதிகரித்துவிட்டதே யென்று உடனே அடியேன் அகன்றுவிட்டேன். அப்போது ஸாயம்ஸந்த்யாஸமயம். ஒரு நாழிகை கழித்து அடியேன் ஸன்னிதிக்குள் விடைகொண்டேன்; அப்போது வஸந்தோத்ஸவமென்று ஞாபகம். அங்கே அடியேன் ஒரு பக்கமாக இருந்துகொண்டிருக்கையில், அந்த புத்தங்கோட்டம் ஸ்வாமியும் அங்குப் பெருமாள் ஸேவைக்காக வந்து அப்போது அங்கு உபஸ்திதர்களாயிருந்த சில வித்வான்களுக்கு அடியேனைச் சுட்டிக்காட்டி “இந்த பிள்ளையாண்டான் யாரோ தெரியவில்லை; என்னிடம் வலுவில் வந்து *சேஷம் கோபேந பூரயேத்* என்கிறார்; எனக்கு ஆறவேயில்லை; என்று பெருமிடறு செய்து பலபல ஸாதிக்கிறார். அவர்களெல்லாரும் விஷயமென்ன? என்று கேட்க; அதற்கு அவர் “விஷயம் எதுவாவதிருக்கட்டும்; இவருடைய வயது என்ன? இவர் வந்து என்னை சேஷம்கோபேநபூரயேத் என்பதா? இது என்ன த்ருஷ்டத்தனம்!” என்று கத்துகிறார்.

அப்போது அங்கு எழுந்தருளியிருந்த மஹாப்ராஜ்ஞரான ஸ்ரீமத் பரமஹம்ஸ. பௌண்டரீகபுரம் ஸ்வாமி “தேவரீருக்கு கோபமுண்டானபடியாலன்றோ அவர் சேஷம் கோபேந பூரயேத் என்று சொல்லியிருக்க வேண்டும்; தேவரீருக்கு கோபமுண்டானது வாஸ்தவந்தானே; எதனாலுண்டாயிற்று? நடந்தவிஷயத்தை நாங்கள் தெரிந்துகொள்ளும்படி ஸாதிக்கலாகாதோ?” என்றார். பிறகு, நடந்த விஷய சர்ச்சைகளை அந்த ஸ்வாமியே விரித்துரைக்க நேர்ந்தது. அடியேன் விஜ்ஞாபித்தவற்றையும் அந்த புத்தங்கோட்டம் ஸ்வாமியே அநுவதிக்க ப்ராப்தமாயிற்று. எல்லாவற்றையும் கேட்ட பௌண்டரீகபுரம் ஸ்வாமி “அந்த பிள்ளையாண்டான் சொன்னதில் அவத்யம் ஒன்றுமில்லையே; அதன்மேல் இவ்வளவு மநஸ்தாபம் வளருவதற்கு ஹேதுவேயில்லையே. அப்படியும் சொல்லலாமென்று தேவரீர் ஒரே வார்த்தையில் முடித்திருக்கலாமே” என்று ஸாதித்தார். அப்போது பக்கத்திலிருந்த மற்றொரு வித்வான் “அப்படியும் சொல்லலாமென்று சொன்னால் அந்த பிள்ளையாண்டான் விட்டுவிடுவரோ? அப்படித்தான் சொல்லவேணும்; வேறுவிதமாகச் சொல்லக்கூடாதென்பதன்றோ அவருடைய அபிப்ராயம்” என்றார். இப்படியாக வார்த்தைகளின்மேல் வார்த்தை மிகமிக வளர்ந்து சென்றது. தீக்ஷிதர் எழுதியிருப்பது ரஸமன்று என்றே பலரும் முடிவு செய்தார்கள். இவ்விஷயம்—அப்போது நடந்துகொண்டிருந்த ஸுப்ரஸித்தமான வேதாந்த தீபிகா பத்ரிகையில் வெளிவந்துமுள்ளது. புத்தங்கோட்டம் ஸ்வாமியோடு அன்று தொடக்கமான வாதம் அவ்வளவோடு நின்றுவிடாமல் மற்றும்பல விஷயங்களிலும் பெருகியிருக்கின்றது. பரஸ்பரம் பல க்ரந்த ரசனைகளும் ஏற்பட்டுவிட்டது. “ரக்ஷாவிலோசநபாவப்ரகாசிகை” “நமஸ்கார தத்வ விஜயத்வஜம்’ முதலான அடியேனது க்ரந்தங்கள் உலகமறிந்தவை. இவற்றைப்பற்றின விவரணம் மேற்பகுதியிலாகும்.

ஸ்ரீரங்கத்தில் அன்று நடந்த நிகழ்ச்சியை அன்றிரவே சிங்கப்பெருமாள் ஸ்வாமி கேட்டருளி அடியேனைத் தேடிக்கொண்டு எழுந்தருளிவிட்டார். “நான் சொன்னது எப்படி?” என்று கேட்டருளினர். *வாசமர்த்தோ நுதாவதி* என்று விஜ்ஞாபித்தேன். வேதலக்ஷணக்ரந்த விவாத விஸ்தரத்தில் ப்ராஸங்கிகமாக ப்ராப்தமான விஷயமிது. ப்ரஸங்காத் மற்றொரு விஷயமுமிங்கு விஜ்ஞாபிக்கிறேன். சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் நெருங்கின—மிகநெருங்கின உறவினரானவொரு ஸ்வாமி ஸமீபகாலத்தில் அடியேனை நோக்கி அம்புதொடுக்க ஆரம்பித்தார்; கீழே விவரித்த விஷயங்களையெல்லாம் அவர்க்கு ஸஸாக்ஷிகமாகவும் தெரிவித்து ‘இந்த ப்ரவ்ருத்தி தேவரீருக்கு வேண்டா; இது மிகவும் ஸாபாயம்; இப்படிப்பட்ட

ப்ரவ்ருத்தியை அறவே விட்டுவிடுவது நன்று' என்று எவ்வளவோ சொல்லியும், பல ஆப்தர்களைக்கொண்டு சொல்லுவித்தும் கேளாமல் தம்முடைய ப்ரவ்ருத்தியைச் சிறிது வளரவிட்டாரவர். *சசால சாபஞ்ச முமோச* என்னுமளவானவாறே கையெழுத்தில்லாதபடி ஒரு நிந்தைக்கந்தையைக் கிளப்பிவிட்டு விச்ராந்தராயினர். இவ்விஷயம் ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி யென்னும் க்ரந்தத்தினால் விசதமாகும். அடியேன் வெளியிட்ட அறுபத்துநான்கு வார்த்தாமாலைகளில் இதுவொன்று என்பதையும் இங்கு நினைப்பூட்டுகிறேன். சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் அமுதவாக்கை ஸத்யமாக்கினவர்கள் இதுகாறும் நூற்றுக்கணக்கில்தான் தேறுவர்கள். அவர்களில் அந்யராகாமே அந்யதமராகைக்கு பாக்கியம் பண்ணி வைத்தார் அந்த மஹாநுபாவர்.

இனி ப்ராஸங்கிகத்தை விட்டு ப்ரக்ருதத்தில் செல்லுகிறேன். வேதாத்யயநஸர்வஸ்வநூல் தோன்றியதிலிருந்து க்ரந்தச்சண்டைகள் வளர்ந்து சென்றாலும் உண்மையில் அடியேனுக்குப் பரமஸந்தோஷமேயாயிற்று. ப்ரதிவாதங்கள் விளையாமலிருந்தால் அடியேனுக்கு வேதத்திலும் வேதபாஷ்யங்களிலும் வேதலக்ஷணங்களிலும் இவ்வளவு அவகாஹனம் உண்டாக அவகாசமேயிராது. பரமகாருணிகனான பகவான் இந்த அவகாஹநாதிசயத்தை யநுக்ரஹிப்பதற்காகவே சிலரைக் கொண்டு பரத்யவஸ்தாநம் செய்வித்தருளினனென்று திண்ணமாக வெண்ணினேன். வேதாத்யயநஸர்வஸ்வத்தில் அடியேன் எழுதின விஷயம் என்ன? அதில் எதிரிகளுக்கு எவ்விதமான ஆக்ஷேபம்? அதற்கு அடியேனுடைய ஸமாதானம் எப்படிப்பட்டது? என்கிற இவ்விஷயங்களை வேதாத்யயநம் செய்யாதவர்களுங்கூட [விவேகிகளாயிருப்பவர்கள்] தெரிந்துகொள்ளுமாறு செய்யவேணுமென்பது அடியேனுடைய அவா. காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகளின் ஸன்னிதானத்தில் சிலமாதங்களுக்கு முன்பு வார்த்தையாடிக் கொண்டிருக்கையில் ப்ராஸங்கிகமாக இவ்விஷயத்தை ப்ரஸ்தாவிக்க நேர்ந்தது. பலவருஷங்களுக்கு முன்பு வேதலக்ஷண விஷயமாக ப்ரபல விவாதம் நடந்ததென்று மட்டும் அவாள் கேள்விப்பட்டிருந்தார்களேயல்லது இன்னபடியான விவாதமென்று கேள்விப்பட்டதில்லை. அதை அன்று அடியேன் இரண்டு மூன்று மணிகாலம் விசதமாக எடுத்துச் சொல்லக் கேட்டு அவாளுடைய அந்தரங்கம் மிகவும் ப்ரஸந்நமாயிற்று. அப்போதே கிடைத்தவொரு ஆஜ்ஞையைக் கொண்டு பதபாடபரித்ராணம் என்றொருக்ரந்தத்தை ஸம்ஸ்க்ருதத்தில் எழுத ஆரம்பித்து தேவநாகரலிபியில் அச்சிட்டுக்கொண்டிருக்கிறேன். வேதத்தில் அடியேனுடைய விமர்சங்கள்யாவும் இதில் விளக்கமாக வெளிவருகின்றன. இதில் பரிச்சேதங்களுக்கு ஆஹ்நிகம் என்று பெயரிட்டிருக்கிறேன். ஒன்பது ஆஹ்நிகங்களை [நவாஹ்நிகம் என்று] ஒரு பகுதியாக ஸமீபகாலத்தில் [அதாவது துன்முகிவருஷப் பிறப்பன்று] அடியேனுடைய வைதிகமநோஹரா பத்திரிகையின் மூலமாக வெளியிட்டிருக்கின்றேன். அந்தக்ரந்தமும் பூர்த்தியாக வேதாத்யயநம் செய்தவர்களுக்குத்தான் பொருள்படும். வ்யுத்பந்நர்களாய் விவேகிகளானயாவரும் ப்ரக்ருதவிவாத விஷயத்தைப் புரிந்துகொள்ளுமாறு இங்கு ஸம்க்ஷேபமாகத் தெரிவிக்கிறேன்.

வேதபாராயணம் பண்ணிக்கொண்டு போகும்போது கவனித்தால் [*தே இதி தே; * ஏதே இத்யேதே; யே இதி யே; சக்ரே இதி சக்ரே] என்றிப்படி அநேகமாக ஓதப்படுவது காதில் விழும். இதற்கு ப்ரக்ரஹம் என்று பெயர்; வியாகரணத்தில் ப்ரக்ருஹ்ய ஸம்ஜ்ஞை யென்று சொல்லப்படுகிறதல்லவா? ஈகாராந்தமாகவும் ஊகாராந்தமாகவும் ஏகாராந்தமாகவும் வருகிற த்விவசநாந்த பதங்களுக்கு வைதிகர்கள் ப்ரக்ரஹபாடம் பண்ணுகிறார்களென்று வைத்துக் கொள்ளுங்கள். கீழே நாம் *தே, ஏதே, யே, சக்ரே என்று எடுத்துக் காட்டிய

நான்கு பதங்களை மட்டும் வைத்துக்கொண்டு பேசுவோமிங்கு. இந்த பதங்களுக்கு [தே இதிதே, யே இதியே.........] என்று ஓதுகிற ப்ரக்ரஹ பாடமானது ஸர்வத்ர கிடையாது. சில விடங்களிலுண்டு, சில விடங்களில் இல்லை. இதற்கு என்ன காரணமென்றால், தே-ஏதே-யே-சக்ரே இத்யாதி பதங்களுக்கு த்விவசநாந்தத்வம் நியதமன்று. தச்சப்தத்தின் மீது [ஸ: தௌ தே] என்னும்போது (தே) என்பது பஹுவசநமாகிறது. [துப்யம் தே, தவ தே] என்று சொல்லும்போது ஏக வசநமாகிறது. இப்படி ஏகவசனமாகவும் பஹுவசனமாகவும் உள்ள விடங்களில் [தே இதி தே] என்று ப்ரக்ரஹ மோத ப்ரஸக்தியில்லை. ஸா தே தா:, தாம் தே தா:, தத் தே தாநி என்னும்போது வருகிற (தே) என்பதற்கு மட்டுமே ப்ரக்ரஹ மோதுவது. இதற்குத் தானே த்விவசநாந்தத்வமுள்ளது. ஏதே, யே என்கிற பதங்களுக்கு த்விவசநாந்தத்வம் போலவே பஹுவசநாந்தத்வமு முண்டாதலால் த்விவசநார்த்தத்தில் அவை ப்ரயுக்தமான விடங்களில்தான் அவற்றுக்கு ப்ரக்ரஹ மோதுவது. சக்ரே என்று (ஏகவசந) திஙந்த ஸுபந்த ரூபமு முண்டாதலால் அப்படி வருமிடங்களில் ப்ரக்ரஹமோத ப்ரஸக்தியில்லை. [சக்ரம் சக்ரே சக்ராணி] என்னும்போது அதுவே த்விவசநாந்தமாதலால் அதற்கு ப்ரக்ரஹ முண்டு. இப்படி நூற்றுக் கணக்கான பதங்கள் வேதத்தில் வருவதால், எது த்விவசநாந்தம், எது இதரவசநாந்தம் என்று நிர்ணயிப்பது அஸாத்யமாகையாலே அத்யயந பரம்பரையில் வருகிறபடி ஓதப்பட்டு வருகிறது. தைத்திரீய ப்ராதிசாக்ய மென்னும் உயர்ந்த லக்ஷண க்ரந்தத்தில் நான்காவது அத்யாயம் முழுவதும் ப்ரக்ரஹத்தை நிஷ்கர்ஷிக்கவே ப்ரவர்த்தித்தது. அதில் சொல்லியிருக்கிற விதம் அவ்யுத்பந்நர்களுக்கே உபயோகப்படும்படியுள்ளது. அதில் * न रुन्धे नित्यम्—नोपस्थे- न शार्याते * [ந ருந்தே நித்யம். நோபஸ்தே. ந சார்யாதே] என்றிப்படி பலஸூத்ரங்கள் காணப்படுகின்றன. ருந்தே என்பது வேதத்தில் ஆயிரந் தடவை வருகிறது. எந்த இடத்திலும் இது ஏகவசநாந்தமான திஙந்தபதமே யொழிய வேறன்று. இது ஏகாராந்தமாயிருக்கையாலே [ருந்தே இதி ருந்தே] என்று ப்ரக்ரஹம் சொல்லிவிடப் போகிறார்களே யென்று "ந ருந்தே நித்யம்" என்று ஸூத்ரமியற்றப்பட்டது. உபஸ்தே என்பது ஸப்தம்யேகவசநாந்தம்; இதற்கும் ப்ரக்ரஹப்ரஸக்தியேயில்லை. ஆனாலும் ஏகாராந்தமாயிருக்கையாலே ப்ரக்ரஹம் சொல்லிவிடப் போகிறார்களே யென்று "நோபஸ்தே" என்று ஸூத்ரமியற்றப்பட்டது. சார்யாதே என்பது ஒரு வைதிகபதம். இது தத்திதாந்தபதம். ஸப்தம்யேக வசனம். 'சர்யாதி' என்றொருவர்; அவருடையது சார்யாதம்; शर्यातेरिदम् - शार्यातं कर्म ; तस्मिन् என்று விவக்ஷையாதலால் இங்கும் ப்ரக்ரஹப்ரஸக்தியில்லை. இதைத் தெரிந்து கொள்ள மாட்டாதவர்களுக்கு இங்கே ப்ரக்ரஹ ப்ரமமுண்டாக ஸாமக்ரியுண்டு; [சார்யாதே இதி சார்யாதே] என்று ப்ரக்ரஹம் சொல்லிவிடப் போகிறார்களே யென்று "ந சார்யாதே" என்னும் ஸூத்ரமியற்றப்பட்டது. இன்னமும் * न ग्रामी वर्चसी मिथुनी मासे लोके धत्ते * இத்யாதி ஸூத்ரங்களையும் நோக்கும்போது ஸர்வாத்மநா அப்ரஸக்த ப்ரதிஷேதம் பண்ணியிருக்கையாலே கேவலம் வேதாப்யாஸ ஜடர்களான அவ்யுத்பந்நர்களை யுத்தேசித்தே இப்படிப்பட்ட ஸூத்ரராசிகள் இயற்றப்பட்டனவென்று நிர்ணயிக்கக் குறையில்லை. உண்மையில் ஸம்ஸ்க்ருத வ்யுத்பத்தியில்லாதவர்களான வேதாத்யயநபரர்களுக்கு உபயோகப்படவேணுமானால் இப்படித்தானே சொல்லித் தீரவேண்டும் என்பது பல வித்வான்களின் கொள்கை. மிகவுயர்ந்த வித்வந்மணிகளால் இயற்றப்பட்டதான ப்ராதிசாக்ய ஸப்தலக்ஷணாதிகள் அவ்யுத்பந்நர்களுக்குப் பயன்படவும் மாட்டாது. சாஸ்த்ராவகாஹந மிருந்தாலொழிய இந்த லக்ஷண க்ரந்தங்களைப் பூர்த்தியாக உபயோகங்கொள்ள முடியாதென்பது திண்ணம். ஆனாலும் * ந ருந்தே நித்யம்; நோபஸ்தே; ந சார்யாதே; ந க்ராமீ

வர்ச்சஸீ மிதுநீ மாஸே லோகே தத்தே, चित्रा वपर:, न देपर: * என்றிப்படிப்பட்ட ஸூத்ரங்களை வ்யுத்பத்திலேசமுமில்லாதவர்களும் கண்டபாடம் செய்து வைத்துக் கொண்டு ஸந்தேஹ பரிஹாரமடைந்து வருவதைக் காண்கிறோம். அந்த வழியைத் தடுக்கவேணுமென்பது அடியேனுடைய எண்ணமன்று. அந்த வழியுமிருக்கட்டும். வித்வான்களுக்குப் பயன்படக்கூடிய வழியுமிருப்பதால் அதை இதுவரை ஒருவரும் விமர்சித்து வெளியிட்டிராமையினால் இவ்வரியபெரிய காரியத்தை நாம் செய்து வைப்போமென்று தோன்றித் துணிந்து இதில் இறங்கினேன்.

கீழே விவரித்த ப்ரக்ரஹ விஷயமான ஸந்தேஹமொன்றேயன்று வேதத்தில்; ஸந்தேஹாஸ்பதங்கள் மற்றும் பலவுண்டு; [ஹோத்ரா தேவா:] என்று ஓரிடம்; இங்கு (ஹோத்ரா) என்று ஆகாராந்தமான பதமா? அல்லது (ஹோத்ரா:) என்று விஸர்க்காந்தமானபதமா? என்று ஸந்தேஹம். வேதத்தில் இருவகையான பதங்களும் வருவதால், எங்கே விஸர்க்கம்? எங்கே அவிஸர்க்கம்? என்று ஸந்தேஹ முண்டாகியே தீரும். இப்படி விஸர்க்க ததபாவங்களைப்பற்றின ஸந்தேஹங்கள் நூற்றுக்கணக்கான விடங்களிலுண்டு. [அக்ஷய ஆயுஷ்மதே; அதிரிக்த ஏவாதிரிக்தம்] என்பனபோன்ற இடங்கள் பல; இங்கே (அக்ஷயே) என்று பதமா? (அக்ஷய:) என்று பதமா? (அதிரிக்தே) என்று பதமா? (அதிரிக்த:) என்று பதமா? என்று ஸந்தேஹமுண்டாகியேதீரும். வேதத்தில் இவ்விரண்டு வகையான பதங்களும் கலசிக்கலசி வருவதால் ஸந்தேஹம் அவர்ஜநீயம். [அபிஜித்யா ஏதயைவ: அபிஜித்யா இத்யாஹு:- அவருத்த்யா அதோ; அவருத்த்யா ஆரண்யா:] என்பன போன்ற இடங்கள் பல; இவ்விடங்களில் (அபிஜித்யை) என்று பதமா? (அபிஜித்யா:) என்று பதமா? (அவருத்த்யை) என்று பதமா? (அவருத்த்யா:) என்று பதமா? என்று ஸந்தேஹ முண்டாகியே தீரும். வேதத்தில் இவ்விரண்டு வகையான பதங்களும் வருவதால் ஸந்தேஹியாமலிருக்க முடியாது. [ஆஸந்தீம் ஆஸந்தீ] என்று இரண்டு பதங்கள். இவற்றில் (ஆஸந்தீமித்யா—ஸந்தீம்) என்று ஒன்றுக்கு வேஷ்டநம் ஓதப்படுகின்றது. (ஆஸந்தீ) என்கிற மற்றொன்றுக்கு வேஷ்டநமில்லை. (ப்ராணய) என்பதற்கு வேஷ்டநமுண்டு; (அப்ராணய) என்பதற்கு வேஷ்டநமில்லை. (ராத்ரீபி:) (சசீபி:) என்பவற்றுக்கு வேஷ்டநமுண்டு; (பத்நீபி:) என்பதற்கு வேஷ்டநமில்லை. இப்படி வேஷ்டந ஸந்தேஹங்கள் அபரிமிதம். [ஜ்யோதிஷா பூவம்—பராபூவம்] என்னுமிடங்களில் ஓரிடத்தில் (அபூவம்) என்று பதம்; மற்றோரிடத்தில் (பூவம்) என்று பதம். இங்கும் ஸந்தேஹம் அவர்ஜநீயம். [தந்நிரவபத், தாந்நிரவபத்] என்பன போன்ற இடங்களில் (தம்) என்று பதமா? (தத்) என்று பதமா? (தாம்) என்று பதமா? (தாந்) என்று பதமா? என்கிற ஸந்தேஹங்கள் எப்படிப்பட்டவர்களுக்கும் அவர்ஜநீயம். ஆக இப்படிப்பட்ட ஸந்தேஹ ப்ரகாரங்கள் வேதத்தில் எண்ணிறந்தவை யுண்டு. தொட்டவிடமெல்லாம் ஸந்தேஹாவகாச முள்ளதே. இந்த ஸந்தேஹங்களெல்லாம் ப்ராதிசாக்ய ஸப்தலக்ஷண ஷட்விம்சதி ஸூத்ராதி நாநா க்ரந்தங்களைச் செய்த முன்னோர்களால் பரிஹரிக்கப்பட்டே யிருக்கின்றன. எவ்விதமாகப் பரிஹரிக்கப் பட்டிருக்கின்றன வென்பதை வித்வான்கள் விமர்சித்தால் அர்த்த மார்க்கத்தில் அடியோடு ப்ரவேசியாமலேதான் பரிஹரிக்கப் பட்டிருக்கின்றனவென்று எளிதாக உணருவர்கள். வஸ்து ஸ்திதியில், பதஸ்வரூபங்களில் பேதம் ஏற்பட்டிருப்பது அர்த்த வசத்தினாலே யாதலால் அர்த்த வுண்மையைக் காட்டி ஸந்தேஹ பரிஹாரம் செய்வது ரஸிக்கத் தக்கதே. "திலீபாநந்தரம் ராஜ்யே தந்நிசம்ய ப்ரதிஷ்டிதம்" என்கிற ரகுவம்ச ச்லோகத்தில் (தந்நிசம்ய) என்னுமிடத்தில் (தம் நிசம்ய, தத் நிசம்ய) என்று இருவகையாகவும் பதம்பிரிக்க யோக்யதையுண்டு; ஆனாலும் அர்த்தச் சேர்த்தியை நோக்கி (தத்) என்கிற பதவிபாகத்தைத் தள்ளி (தம்) என்றே பதம் கொள்ளப்படுகிறது. இவ்விதமாகவேதான்

வேதத்திலும் அர்த்தச் சேர்த்திக்கு இணங்கவே பதஸ்வரூபத்தில் உச்சாவச பேதங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த அர்த்தச் சேர்த்தியை விளக்குவது தான் அடியேனுடைய ஸர்வஸ்வக்ரந்தத்தின் க்ருத்யம்.

இவ்வழியில் எதிரிகள் எவ்விதமான ஆக்ஷேபத்தைக் கிளப்பினர்களென்பதையும் தெரிந்துகொள்ள வித்வான்கள் ஆசைப்படுவர்களாதலால் அதையும் தெரிவிக்கிறேன். எதிரிகளின் ஆக்ஷேபம் ஒன்றே; வேதம் எதற்கும் கட்டுப்பட்டதன்று. *ச்சந்தஸி பஹுலம்* இத்யாதி சாஸ்த்ரங்களினல் வேதத்தில் நாநாவிதங்களான விபர்யயங்கள் ஸம்பாவிதங்களாகையாலும், காண்கையாலும் அர்த்தச் சேர்த்திக்கிணங்க பதஸ்வரூபங்களை நிர்ணயிப்பதென்பது அஸாத்யம். ரகுவம்சமாக மேகஸந்தேசங்கள் போன்றதன்று வேதம். தம் என்று வரவேண்டுமிடத்தில் தாம் என்றோ தத் என்றோ தாந் என்றோ வரக்கூடும். அஸ்யா:, தஸ்யா: என்று வரவேண்டுமிடங்களில் அஸ்யை, தஸ்யை என்றும் வரக்கூடும். இப்படி பலவகையான விபர்யயங்களுக்கு இடமிருப்பதால் அர்த்தச் சேர்த்தியைக் கொண்டும் விமர்ச பலத்தைக் கொண்டும் வேதத்தில் யாதொன்றும் நிர்ணயம் செய்ய இயலாது. ஸந்தேஹமுண்டானல் ஸப்தலக்ஷணாதிகளே சரணம்—என்கிறவிதுவே எதிரிகளின் ப்ரத்யவஸ்தாந ப்ரகாரம். இதற்குச்சேர வேதத்திலுள்ள சிலசில வ்யத்யயங்களை யெடுத்துக் காட்டுவதும் செய்தார்கள்.

இதற்குமேல் அடியேன் வஜ்ரகுடாரமாக ப்ரயோகித்த ப்ரஹ்மாஸ்த்ரம் யாதெனில்; வேதத்தில் *ச்சந்தஸி பஹுலம்* இத்யாதி சாஸ்த்ரப்படி விபர்யயங்கள் நூற்றுக்கணக்காகவேயுண்டு; ஆயிரக்கணக்காகவு முண்டென்று கொள்வோம். அப்படிப்பட்ட வ்யத்யயங்களினல் நம்முடைய நிர்ணயங்களுக்கு அணுமாத்ரமும் இடையூறு கிடையாது. ஸப்தலக்ஷணாதி புராதந லக்ஷணக்ரந்தங்களும் அடியேனுடைய லக்ஷணக்ரந்தமும் ஸம்ஹிதையைப் பற்றியல்ல; பதஸரணியைப் பற்றியே. அந்த பதஸரணியில் வ்யத்யயமென்பது லவலேசமும் கிடையாது. இருக்குமானல் இப்பணியில் அடியேன் இறங்கவே முடியாதுதான். உண்மையில் பொருளுக்குப் பொருத்தமாகவே பதபாடமிருப்பதாலும், அதில் ஒரு வ்யத்யயமும் எதிரிகளால் காட்டமுடியாதாகையாலும், அவர்கள் காட்டியிருக்கிற வ்யத்யயங்களெல்லாம் அந்யதாஜ்ஞாந மூலகங்களே யாகையாலும், அதை நாம் சரமாரியாகக் கண்டித்திருப்பதாலும் எதிரிகள் வாய்திறக்க விஷயமில்லை—என்பதே. ஆக இந்த விவாத விஷயத்தின் தத்துவம் சுருக்கமாக முடிந்துவிட்டது. வ்யத்யய பஹுளமான வேதத்தில் நம்முடைய விமர்ச சக்தி பயன்படாதென்பது ப்ரதித்வந்த்விகளான அக்நிஹோத்ரிகளின் வாதம். பதஸரணியில் ஸந்தேஹாஸ்பத ஸ்தலங்களிலேயே நம்முடைய விமர்சமாகையாலும் அதில் வ்யத்யய லேசமும் கிடையாதாகையாலும் நம்முடைய விமர்ச சக்தி ஸர்வாத்மநா ஸார்த்தகம்—என்பது அடியேனுடைய அப்ரகம்ப்யமாய் ஜயசீலமான ப்ரதிவாதம். இதைப்பற்றியே மன்னார்குடி அக்ரஹாரத்திலும் இரண்டுநாள் ஸபை நடந்தது. அதைப்பற்றி அப்போது அச்சாகி வெளிவந்த மத்யஸ்த கனபாடிகளின் பத்ரிகைகள் நாடுநகரமும் நன்கு பரவியிருப்பதால் அதைப்பற்றின விரிவு இங்குக் கொள்ளப்படவில்லை.

கடைசியாக அடியேன் பரமார்த்த பரித்ராணம் என்கிற ஸம்ஸ்க்ருத க்ரந்தத்தை வெளியிட்டு வைதிகவுலகுக்கு எனது விமர்சஸரணியின் தத்துவத்தை விளக்கினேன். அதன் ஆரம்பத்திலுள்ள ச்லோகங்கள் இவை;—

प्रामाणिकमनोभोग्यं प्रकृष्टार्थप्रकाशकम् । परमार्थपरित्राणं प्रेक्ष्यतां प्राज्ञपुंगवैः ॥

मन्नार्गुडिक्षेत्रमहासभायां यत्तावदस्माभिरभाषि सूक्ष्मम् ।

तत्सम्यगत्र प्रतिपाद्यतेऽद्य प्राज्ञा महान्तो हृदि धारयन्तु ॥

இந்த பரமார்த்த பரித்ராண க்ரந்தத்தோடு வேதலக்ஷண விசார விவாதங்கள் சாந்தமாயின. வேதலக்ஷண விஷயமாகவே பதபாடபரித்ராண மென்கிற க்ரந்தம் தற்போது வெளிவந்துகொண்டிருப்பதால் அதனால் வைதிக வித்வான்கள் பலபல நுட்பங்களையறிந்துகொள்ளலாம். ஸ்ரீமத்பரமஹம்ஸ கோழியாலம் ஸ்வாமியின் திருத்தம்பியாரான ஸ்ரீ உவே. ஸ்ரீநிவாஸாசாரியர் [தற்காலம் ஸ்ரீரங்கப்ராந்தத்தில் வஸிப்பவர்] இரண்டு மூன்று வருஷகாலம் அடியேனோடு ஸஹபாடியாயிருந்து வேதாத்யயந ருசியினால் சடகோப நிலய பாடசாலையை விட்டு நீங்கி அவ்வூரிலேயே பரிபூர்ணமாக வேதமோதினார். பிறகு வேதாந்த சாஸ்த்ரத்திலும் நிஷ்ணாதரானார். இவர் எனக்கு 'பஹி: ப்ராண இவாபர:' என்னும்படி யிருந்தவர். இவர் இந்த வேதாத்யயந ஸர்வஸ்வ விவாதங்கள் நடந்த காலத்தில் மைஸூர் ஸ்ரீபரகால மடாஸ்தாநத்தில் நற்போது போக்கிக்கொண்டு சிலவாண்டுகள் வாழ்ந்து வந்தார். அப்போது இந்த வேதலக்ஷண க்ரந்தங்களையெல்லாம்பெற்று அடிக்கடி ஸ்ரீமத் பரகால ஸ்வாமி திருவடிகளிலும் இதன் தத்துவங்களை விண்ணப்பம் செய்து ஸ்ரீஸ்வாமிக்கு அடியேனிடத்தில் பரம க்ருபையும் நிரதிசய ப்ரீதியுமுண்டாகும்படி செய்து வருவதாகக் கடிதங்கள் எழுதிக்கொண்டிருந்தார். இவர் அப்போது எழுதிய கடிதமொன்று பண்டே அச்சாகி வெளிவந்திருக்கின்றது. அதாவது,

“பரமார்த்த பரித்ராண க்ரந்தத்தை அஸக்ருத் ஸேவித்தேன். *யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை* என்றகாலம் முதலாக இன்றுவரையில் ஒருவராலும் விமர்சிக்கப்படாத அத்யாச்சர்யமான விஷயங்களை இவ்வளவு அழகாக விமர்சித்தெழுதி லோகோபகாரம் செய்திருப்பதற்கு நான் என்ன ப்ரத்யுபகாரம் பண்ணப்போகிறேன்.” என்று.

இந்த இருள்தருமா ஞாலத்தில் நட்பும் பகையும் மாறி மாறி நடந்து செல்கின்றனவென்பது ஸர்வாநுபவ ஸாக்ஷிகம். ஒரொரு ஸமய விசேஷங்களிலே ஈடுபாடுண்டாகி ப்ரேமபரீவாஹரூபேண தங்களை மறந்து ஏதேதோ எழுதிவிடுகிறார்கள். பிறகு உபாதி விசேஷங்களாலே மாச்சரியம் கொண்டாடத் தொடங்கி அம்புதொடுக்கிறார்கள். மறுபடியும் ப்ரபோத முண்டாகப்பெற்று, வீணாகமாச்சரியம் கொண்டோமேயென்று அநுதபிக்கிறார்கள். அவ்யாப்யவ்ருத்திகளான இந்த ஸ்வபாவ விசேஷங்களை நாம் சில வ்யக்திவிசேஷங்களிலே அநுபவித்து வருகிறபடியால் எதிலும் வெறுப்புமில்லை, உகப்புமில்லை; வியப்புமில்லை. நடந்தவிஷயங்களை உலகுக்கு உணர்த்தி வைப்போமென்று இவ்வளவும் எழுதினபடியத்தனை.

இவ்விரண்டாம் பகுதியில் பெரும்பாலும் அடியேனுடைய வேதாத்யயந ப்ரவ்ருத்திகளும் அதன் பலன்களும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இப்பிறவியில் நமக்கு வேதாத்யயந பாக்கியமில்லையென்று முடித்துக்கொண்டபிறகு எதிர்பாராத முறையில் அந்த பாக்யம் அபரிமிதமாக வாய்த்ததனாலுண்டான ஆனந்தம் அளவிட முடியாதது. ஜன்மதரித்திரனுக்கு நவநிதிகளும் கிடைத்தாலுண்டாகுமாநந்தமும் இவ்வானந்தத்திற்கு இணையாகாது. இவ்வானந்தம் திருக்குடந்தை அக்நிஹோத்ரி ஸ்வாமிகளால் சதமுகமாகவும் ஸஹஸ்ரமுகமாகவும் அபிவிருத்திசெய்விக்கப்பட்டதென்பதுதான் வஸ்துஸ்திதி. இதற்காக அவர்களிடத்தில் அடியேன் பரிபூர்ண க்ருதஜ்ஞதையுடையேன். வேதம் ஸ்வதந்திரமென்றும், அது ஒரு கட்டுப்பாட்டுக்கு அடங்காததென்றும், அதில் நம்முடைய ஆராய்ச்சி விலை செல்லாதென்றும் நினைத்திருப்பார் மலிந்த இவ்வுலகில், வேதத்தில் பதபாடம் மட்டும் ஸ்வதந்திரமன்றென்றும், அது சாஸ்த்ர வரம்புக்கு மிகவும் அடங்கியதேயென்றும், அதில் நம்முடைய ஆராய்ச்சி தாராளமாக விலைசெல்லுமென்றும் ஸ்தாபித்து வெற்றிபெற்றவன் கடல்சூழ்ந்த மண்ணுலகில் அடியேனொருவனே யென்பதை மாச்சரியமற்ற மஹான்கள் அறிவார்கள். ... ... ... ... *

இரண்டாம் பகுதி முற்றிற்று.

---

ஸ்ரீ:

# தானே யெழுதிய தன்சரிதை

## — மூன்றும் பகுதி —

### ரைவதக கிரி யாத்திரை

அடியேன் சிசுபாலவத மஹா காவ்யமென்கிற மாக காவியம் வாசிக்கும் போது அதில் நான்காவது ஸர்க்கத்தில் ரைவதக கிரி வர்ணனம் வெகு அற்புத மாகநிகழ்வதை மகிழ்ந்து வாசித்துக்கொண்டிருந்தேன்; அதில் பத்தாவது சுலோகம்

"मुदे मुरारेरमरैस्सुमेरोरानीय यस्योपचितस्य शृङ्गैः ।
भवन्ति नोद्दामगिरां कवीनाम् उच्छ्रायसौन्दर्यगुणा मृषोद्याः ॥

முதே முராரே ரமரைஸ் ஸுமேரோ ராநீய யஸ்யோ பசிதஸ்ய ச்ருங்கை:
பவந்தி நோத்தாமகிராம் கவீநாம் உச்ச்ராய ஸௌந்தர்யகுணா ம்ருஷோத்யா:"

என்பது. கண்ணபிரானுடைய ஸந்தோஷத்தின் பொருட்டுத் தேவர்களால் மேரு மலையின் சிகரங்களைக் கொணர்ந்து அபிவிருத்தி செய்யப்பட்டதான ரைவதக மலையின் உயர்த்தியையும் அழகையும் வருணிக்கிற கவிவாக்குக்கள் பொய்யுரை யாகமாட்டா வென்பது இந்தச் சுலோகத்தின் கருத்து. கவிகள் எதைப் பேசினாலும் அதிசயோக்தி யலங்காரத்தில் வைத்துப் பேசுவது இயல்பாதலால் இல்லாததை ஏறிட்டுச் சொல்லுகிறார்க ளென்னுங் காரணத்தினால், பொய் சொல்லுகிறவர்க ளென்கிற அபக்க்யாதி பெரும்பாலும் கவிகளுக்கெல்லா முண்டு; ஆனால் ரைவதக பர்வத விஷயத்தில் மட்டும் அந்த அபக்க்யாதிக்கு அவகாசமே கிடையாது; கவிகள் ஸத்யவாதிகளே யொழிய அஸத்தியவாதிகளல்லர் என்று இந்த ச்லோகத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தின் வியாக்கியானத்தில் மல்லிநாதர் "मेरुशृङ्गासम्बन्धेऽपि सम्बन्धकथनादतिशयोक्तिः" என்றெழுதி முடித்திருக்கிறார். ஸ்வபாவோக்தி யலங்காரமென்று எழுதாமல் அதிசயோக்தி யலங்காரமென்றே எழுதிவைத்தார். அதிசயோக்திக்கு ஆஸ்பதமில்லை என்று மூலத்தில் முக்த கண்ட மாகச் சொல்லப்பட்டிருக்க, அவ்விடத்திலேயே அதிசயோக்தியென்று எழுதி வைப்பது பொருந்துமோவென்று வித்யார்த்தி தசையில் விசாரம் செய்துகொண் டிருந்தேன். மலையின் உயர்த்தியைப்பற்றியும் அழகு முதலிய குணங்களைப்பற்றி யும் அதிசயோக்திக்கு இடமில்லை யென்பது மூலகாரருடைய அபிப்ராயம். மேரு பர்வதத்திலிருந்து சிகரங்களைக் கொணர்ந்து அபிவிருத்தி செய்ததாகச் சொல்லப் பட்ட விஷயம் இல்லாததைச் சொல்லுவதே யாதலால் இந்த அம்சத்தில் அதிச யோக்தியென்றது பொருந்தும் என்று பண்டிதர்கள் ஸமாதானம் சொல்லு வார்கள். அது நிற்க. அந்த ரைவதக மலையைப்பற்றி விசேஷ வர்ணனைகளை அற்புதமாக வாசித்தபோது, இந்த மலை வாஸ்தவமாக பூலோகத்திலுள்ளதானால் அங்கே சென்று இதை அவசியம் நாம் கண்டு களிக்கவேண்டுமென்று ஆசை கிளர்ந்தது. மாககாவியம் வாசித்து முடித்தபிறகுங்கூட நெடுநாள்வரையில் இந்த மநோரதம் நெஞ்சில் ஒரு பக்கத்தில் அபரிமிதமாக இருந்துகொண்டே யிருந்தது.

ரைவதக பர்வதமென்பது குஜராத் மண்டலத்தில் [குர்ஜரதேசத்தில்] ஜூநாகட் என்கிற ஸ்டேஷனுக்கருகில் உள்ளது. ப்ரபாஸ க்ஷேத்திரம் போகிற வழியிலுள்ளதென்று கொள்க. அந்த தேசத்தார்களால் கிரிநார் என்று வழங்கப் படுகிற அந்த மலையின்மேல் வெகுதூரத்திற்கப்பால் ஒரு ஸ்ரீவைஷ்ணவ மந்திர முள்ளது. அதற்கு பத்தரசட்டி (पत्थरचट्टी) யென்று பெயர். அவ்விடத்தில் ஒரு ஸம்ப்ரோக்ஷணம் செய்ய ப்ராப்தமாயிற்று. அஸ்மதாசார்யரான ஸ்ரீகாதிஸ்வாமி யின் திருவடி ஸம்பந்திகள் அந்த ஸ்தானத்திற்கு அத்யக்ஷர்களாதலால் அவர்கள்

ஸ்ரீ ஸ்வாமியை அவ்விட மெழுந்தருள ப்ரார்த்தித்திருந்தார்கள். ஸ்வாமி அப்போது மார்வாட ப்ராந்தத்தில் பெரிய ஜைத்ரயாத்ரை செய்து கொண்டிருந்தபடியால் அங்கே யெழுந்தருள ஸௌகரியப்படாமல் அடியேனுக்கு ஸ்ரீமுக மநுக்ரஹித்தருளினார்—'தேவப்பெருமாள் ஸந்நிதி அர்ச்சகருடனும் ஸாவேத வைதிகஸ்வாமிகளுடனும் அங்கே நீ சென்று அந்த ஸம்ப்ரோக்ஷணத்தைப் பூர்த்திசெய்வித்து வருவது' என்று நியமித்தருளியிருந்தார். தேவப்பெருமாள் ஸந்நிதியில் உயர்ந்த அர்ச்சகராக இற்றைக்கும் ஸேவை ஸாதித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீநிவாஸ பட்டரையும் நமது பாடசாலையில் உபயவேத நிர்வாஹகர்களா யிருப்பவர்களையும் இரண்டொரு பரிசாரகர்களையும் அழைத்துக்கொண்டு அவ்விடம் செல்ல நேர்ந்தது. பாம்பே, அஹமதாபாத், ராஜகோட், ஜைடல்ஸர் முதலான விடங்களைக் கடந்து வெகுதூரத்திற்கப்பால் போகவேண்டியதாயிற்று. ஸ்ரீ காதிஸ்வாமி அடியோங்களுடைய வருகையைப்பற்றி முன்னாடியே ஆங்காங்குத் தெரிவித்தருளி யிருந்தபடியால் எங்கும் விசேஷமாக உபசரிக்கப்பெற்று (கிரிநார் என்கிற) ரைவதக பர்வதத்தின் அடிவாரம் சென்று சேர்ந்தோம். மாலை நான்கு மணிக்கு மலையேற ஆரம்பித்தோம். மலைப்படிகளின் அழகு வாசாமகோசரம். மேடுபள்ள மில்லாமல் ஸமரீதியில் அகலமான படிகள் பல்லாயிரக் கணக்கிலுள்ளன. அப்போது வயது முப்பதுக்கு ஸந்நிஹிதமாகையால் சிரமமென்பது அடியோடு தோன்றாமல் வெகு உத்ஸாஹமாக நடந்து செல்லுகிறபடி. ஆறுமணிக்கு சந்திரோதயமாக ஆச்சர்யமான நிலா ஒளிர்கின்றது. போகப்போக வழி மாளவேயில்லை. இரவு பதினொருமணியாகியும் குறிப்பிட்ட ஸ்தலம் வரவில்லை. ஏகாகாரமாக ஏழுமணிகாலம் ஏற்றமாகவே நடந்தபடியால் சிரமம் தோன்றத் தொடங்கியது. இடையில் இளைப்பாற முடியாதபடி அன்றிரவே அந்த பத்தர்சட்டி ஸ்தானம் சேரவேண்டிய அவசியமிருந்தது. வெகு சிரமத்தோடு சென்றுகொண்டிருக்கையில் மிகப் பெரிய கோவிலும் ப்ராகார கோபுர மண்டபாதிகளும் தென்பட்டன. அவற்றைக் கண்டவுடனே "मन्ये प्राप्तास्म तं देशम्— மந்யே ப்ராப்தாஸ் ஸ்ம தம் தேசம்" என்றாற்போலே நினைத்து ஆனந்தமாக அந்தக் கோவில் வாசலுக்குப் போனதும் "இதுவொரு ஜைநமந்திரம்; இதுவன்று ப்ராப்யஸ்தலம்; இன்னும் இரண்டு மூன்று மணிகாலம் நடந்து சென்றே அந்த ஸ்தானம் சேரவேணும்" என்றார்கள். அச்சொல் செவிப்பட்டவுடனே அசக்தி அதிகரிக்கத் தொடங்கிற்று; கால் விழுந்திட்டது. ஆனாலும் சென்று சேர்ந்தாகவேண்டும்; ஸுந்தரபாஹுஸ்தவத்தை யநுஸந்தித்துக் கொண்டே நடந்துசெல்ல வாரம்பித்தோம். அபர ராத்ரியில் குறிப்பிட்டவிடத்தை யடையலானோம்.

அவ்விடம் ஏகாந்த ப்ரதேசமாய் அதிரமணீய ஸ்தலமாயிருந்தது. நீர்வாய்ப்பும் நிழல்வாய்ப்பும் வருணிக்க முடியாததே. அங்கே வடதேசத்துப் பண்டிதர்கள் இருபது முப்பதுபேர்கள் இதம்பரமாக வந்திருந்தார்கள். மூன்றுநாள் அங்கே தங்கியிருக்க நேர்ந்தது. அப்போதைய ஆனந்தாநுபவம் முப்பத்தைந்து வருஷமானாலும் அடியேனுக்கு தினப்படியாக நினைவுக்கு வருவதுண்டு. அடிக்கடி இங்கு வரவேணுமென்று அப்போது உத்கண்டை யுண்டாயிற்று. ஆனாலும் மறுமுறை அங்குச் செல்ல நேர்படவில்லை. அதுநிற்க. அங்கிருந்து திரும்புகையில் ப்ரபாஸ க்ஷேத்திரம் ஸேவிக்கவும், கூடவந்தவர்களின் திருப்திக்காக வடநாட்டிலுள்ள ஸகல க்ஷேத்ர தீர்த்தங்களையும் ஸேவிக்கவும் குதூஹலமுண்டாயிற்று. ப்ரபாஸ க்ஷேத்திரத்திற்குப் போகும் வழியில் குராஸா என்பது ஒரு ஸ்ரீவைஷ்ணவஸ்தான விசேஷம். 'லுஸாலா' என்னும் ஸ்டேஷனிலிருந்து இரண்டொருமைல் தூரத்திலுள்ளது அது. அங்கிருந்து ஒரு உத்தராதி ஸந்யாஸி ரைவதக பர்வதத்திற்கு வந்திருந்தவர் குராஸாவுக்கு அவசியம் வந்து போகவேணுமென்று அழைத்ததனால் அவ்விடம் போக நேர்ந்தது. அவ்விடத்திய ஒரு ஆனந்தச் செய்தியை எழுதுவதற்காகவே இவ்வளவும் அவதாரிகையாக எழுதிற்றென்று கொள்ளலாம்.

அவ்விடத்தில் த்ரிதண்டீ, ரகுநாதஸ்வாமீ என்பவர் எண்பது வயது உள்ளவர் மடாதிபதியாக இருக்கிறார். இவர் இளமையில் ஸ்மார்த்தராக இருந்தவர். ஒருஸமயம் இவர் ப்ருந்தாவனம் போனபோது அங்கே கீர்த்திமூர்த்தியான கோவர்த்தனம் (ஆத்ய) ரங்காசார்ய ஸ்வாமியின் பகவத் விஷய ப்ரவசந கோஷ்டியில் யாத்ருச்சிகமாக ஒருவேளை அந்வயித்திருந்து அன்றே அந்த ஸ்வாமியின் திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தரானார். அந்த ஸ்வாமி மூமுக்ஷுப்படி ஸ்ரீ வசநபூஷணம் முதலான ஏழெட்டு ரஹஸ்யங்களை வடதேசத்தார்க்கு உபயோகப்படும்படி ஸம்ஸ்க்ருதத்திலும் ஹிந்தியிலும் வசனரூபமாக அநுவாதம் செய்தருளி ஸ்வசிஷ்யர்கள் பலர்க்கு உபதேசித்துக் கொண்டிருந்தபடியால் இந்த ரகுநாதபண்டிதரும் அந்த உபதேசங்களைப் பெற்று, ஸ்வயம் சிறந்த வித்வானாகையாலே உத்தீர்ணாதிகாரியாகவு மிருந்தார். கோவர்த்தநம் ஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளினபிறகு இவர் உத்தமாச்ரம ஸ்வீகாரம் செய்துகொண்டு குராஸாவில் ஸ்தாநபதியாக அமர்ந்தார். நான் குராஸாவுக்குப் போயிருந்த ஸமயம் இவர் பக்ஷவாதத்தினால் சிரமப்பட்டுக்கொண்டு படுக்கையாகவே யிருந்தார். மஹாதனிகராகையாலே 25 ரூ. 35 ரூ. 50 ரூ. 60 ரூ. இப்படியாகப் பணத்தை வைத்துப் பல முடிப்புகள் கட்டித் தலையணையின்கீழும் மெத்தையின்கீழும் மறைத்து வைத்துக் கொண்டிருந்து ஸத்பாத்ரங்களில் விநியோகித்து வருவர். சிறிதும் எழுந்திருக்க முடியாதபடி சயனமாகவே யிருந்துவருகிறார்.

அவ்விடம் நான் வந்திருப்பதையறிந்து அருகே வரவழைத்து ஒரு நாற்காலியில் என்னை உட்காரச்செய்து குசலப்ரச்நங்கள் பண்ணிப் பிறகு தம்முடைய பூர்வ வ்ருத்தங்களையெல்லாம் சொல்லி, ரஹஸ்ய வாக்யங்களில் கடினமான விடங்களையெடுத்துக் கேள்வி கேட்பர்; விசதமாக பதில் சொன்னவாறே படுக்கையில் மறைத்து வைத்திருக்கும் பண முடிப்புகளில் ஒன்றையெடுத்து ஆனந்தக்கண்ணீர் பெருக்கிக்கொண்டே கொடுப்பர்; மறுபடியும் ஒரு கேள்வி கேட்பர்; பதில் பெற்றவாறே மற்றொரு பண முடிப்பையெடுத்துத் தருவர். இப்படியாக அவர் தாம் சயனத்தில் சேமித்து வைத்திருந்த பண முடிப்புகளையெல்லாம் கொடுத்தாய் விட்டது. ப்ரபாஸதீர்த்தம் சென்று ஸேவித்து விட்டு மறுபடியும் இவ்விடம் வந்தே போகவேணுமென்று நிர்ப்பந்தித்தார். அப்படியேயென்று சொல்லிப் புறப்பட்டுப்போய் ப்ரபாஸதீர்த்தத்தில் இரண்டுநாள் இருந்து விட்டுத் திரும்பி வருகையில் அந்த மடாதிபதி மஹாந்த் ஆசார்யன் திருவடி சேர்ந்து விட்டதாக ஸ்டேஷனிலேயே தெரியவந்து திரும்பி விட்டோம். ஸம்பிரதாயத்தில் அந்த மடாதிபதிக்கு இருந்த தெளிந்த ஞானம் மிகமிக வியக்கத்தக்கதாயிருந்தது. த்ராவிட பாஷாகந்தமும் தெரியாதவர்களுக்கு த்ராவிட வேதாந்த ஸம்பிரதாயார்த்தங்களை ஸ்ரீகோவர்த்தநம் ஸ்வாமி தெளிய வுணர்த்தியிருந்த வைகரி விலக்ஷண பகவத் ஸங்கல்பத்தினாலமைந்தது என்றே சொல்லத்தக்கது. கோவர்த்தநம் ஸ்வாமி திருவடிகளில் ஸாக்ஷாத்தாக ஆச்ரயித்துக் காலக்ஷேபம் செய்தவர்கள் நூற்றுக்கணக்கான பண்டிதர்களென்று கேள்வி. அன்னவர்களில் ஏழெட்டு பண்டிதர்களோடு நெருங்கி ஸம்பாஷிக்க எனக்கு நேர்ந்ததுண்டு. கருடத்வஜாசாரியென்கிற வொரு ப்ரஹ்மசாரி தொண்ணூறு வயதுள்ளவர் அந்த யாத்திரையில் ஓரிடத்தில் ஸ்நேஹமானார். அவர்க்கு, பகவத் விஷயத்திலும் ரஹஸ்ய க்ரந்தங்களிலுமிருந்த பாண்டித்யம் தென்னாட்டில் ஒருவர்க்கு மிருந்ததில்லையென்று திடமாகச் சொல்லலாம். உத்தராதிகளெனப்படுகிற வடதேசத்தார் ஸந்தியாவந்தனம் செய்வதில்லை, மாதாபித்ருச்ராத்தங்களையும் பண்ணுவதில்லை என்று நம் தேசத்தவர்கள் பழித்துக் கொண்டிருப்பர்கள். அவர்களில் பலர் ஜன்மஸித்தமான ஆசார்யபக்தி பாகவதபக்தி முதலியவற்றால் ஸித்தி பெற்றிருக்கிற விதம் நிகரற்றது. ப்ராஸங்கிகமானவிது நிற்க.



குராஸா மஹந்த் பாகவதாசாரி

கீழே ப்ரஸ்தாவித்த குராஸா என்கிற ஸ்தானத்தில் இப்போது ஸ்வாமி பதவியை வஹிக்குமவர் பாகவதாசாரி யென்பவர். இவர் ஸ்ரீ காதி ஸ்வாமியின் தக்ஷிண திவ்ய தேச யாத்திரையில் பத்து மாஸ காலம் கூடவே யிருந்து என்னிடத்தில் வேதாந்த ப்ரகரணம் வாசித்தவர். இவர் அங்கு ஸ்தாகபதியாக அமர்ந்து இருபத்தைந்து வருஷமாகிறது. ஸம்ப்ரதாய ப்ரசாரத்தில் ஊற்றமின்றிக்கே ஒருவாறு இருந்து வருகிறார்.

இவ்விடத்திலிருந்து த்வாரகைக்குச் சென்று ஸேவித்து வருவது எளிதேயாயினும் அந்த ஸமயம் எமக்கு த்வாரகா யாத்திரை ப்ராப்தமாகவில்லை. த்வாரகா க்ஷேத்திரம் இப்போது அடியோடு கிடையாதென்று சிலரும், அது கடலில் மூழ்கிப் போய்விட்டதென்று சிலரும் பொய்யாகச் சொல்லிக் கொண்டிருந்ததை மெய்யென்று நம்பியதனால் அப்போது அவ்விடம் போகாமலே திரும்பினோம். பிறகு எட்டு பர்யாயம் த்வாரகை சென்று ஸேவித்துவர ப்ராப்தமாயிற்று. த்வாரகை கிடையாதென்றோ கடலில் மூழ்கிவிட்டதென்றோ சொல்லுவது மிகவும் தவறு. எளிதாகச் சென்று ஸேவிக்கக் கூடியதாகவே இத்தலம் விளங்குகின்றது. கோமதீ த்வாரகையென்றும், பேட்த்வாரகை யென்றும், டாகோர் த்வாரகையென்றும், ஸுதாமாபுரி த்வாரகையென்றும், ஸ்ரீநாத த்வாரகையென்றும் ஐந்து த்வாரகைகள் சொல்லுகிறார்கள். இவ்வைந்து த்வாரகைகளையும் அநாயாஸமாகவும் ஆச்சரியமாகவும் ஸேவிப்பதற்கு ஸௌகரியம் வெகு நன்றாகவுண்டு. இவற்றுள் முதலதான கோமதீ த்வாரகை யென்னுமிடமே முக்கியமான த்வாரகையாகும். "சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதிக்கு என்னை யுய்த்திடுமின்" என்று ஆண்டாளும் "மதிள்துவராபதியும்" என்று பெரியாழ்வாரும் மங்களா சாஸனம் செய்தருளிய தலம் கோமதீ த்வாரகை யென்பதேயாம். ஸந்நிதியின் பரிஸரத்தில் கோமதீநதி கடலோடு ஸங்கமமாகிப் பெருகுவதனால் இந்த க்ஷேத்திரம் கோமதீ த்வாரகையென்றே வழங்கப்பட்டு வருகிறது. அங்கு ஸந்நிதியின் ஸந்நிவேசம் வெகு அற்புதமானது. காணக் கண்ணாயிரம் வேணும். ஸாக்ஷாத் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா எழுந்தருளியிருந்த தலம் இதுவேயென்று மனம் தேறும்படியான ஸந்நிவேசம் அமைந்துளது. இவ்விடத்தில் ரைல்ஸ்டேஷனுக்கும் பெருமாள் ஸந்நிதிக்கும் இடையில் 'தோதாத்ரிமடம்' என்று ப்ரஸித்தமான ஒரு பெரிய தோட்டமிருக்கிறது. அங்கே தேசாந்தரி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு வாஸயோக்யமான விடுதிகள் வெகு ரமணீயங்களாக இருக்கின்றன. நல்ல தீர்த்தம் கிடைப்பதொன்றே இவ்விடத்தில் அரிது. இத்தலத்தைவிட டாகோர்த்வாரகையும் ஸ்ரீநாதத்வாரகையும் ஸகலவித ஸௌகரியங்களும் நன்கு பொருந்திய ஸ்தல விசேஷங்கள். அவ்விடங்களிலேயே நித்யவாஸம் செய்யவும் குதூஹலமுண்டாகும். டாகோர்த்வாரகாப் ப்ராந்த்தில் 'வடதால்' என்றொரு ஊர் உள்ளது. இவ்விடத்தில் வெகு காலமாகவே ஸம்ஸ்க்ருத பாடசாலை யொன்றுண்டு. அதன் மூலமாக ஸம்ஸ்க்ருதம்பயின்று



உத்தீர்ணர்களான பண்டிதர்கள் அந்த ப்ராந்தத்தில் பலர் காணப்படுவர்கள். அவர்கள் பெரும்பாலும் ஸ்வாமிநாராயண ஸம்ப்ரதாயஸ்தர்களென்று வழங்கப் படுகிறார்கள். கீழ் இரண்டாம் பகுதியில் பக்கம் 136ல் ஸேவை ஸாதிக்கின்ற ஸ்ரீ மதுபயவே வித்வத் ஸார்வபௌம. (ஸ்ரீரங்கம்) எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி இந்த வடதாவில் பல ஸம்வத்ஸரங்கள் எழுந்தருளியிருந்து சாஸ்த்ர ப்ரவசநம் செய்து பலபேர்களை உத்தீர்ணர்களாக ஆக்கினதுமல்லாமல் பல பல க்ரந்தங்களை ஸ்வயமெழுதியும் வியாக்கியானங்கள் ஸாதித்தும் ஜீர்ணோத்தாரணங்கள் செய்தும் தேவநாகராக்ஷரத்தில் முத்ரணம் செய்வித்தருளியிருக்கிறார். அவையெல்லாம் அதிமாநுஷக்ருத்யமாகவே காணப்படும். அந்த ஸ்வாமியின் ஸ்தானத்தில் இப்போது ஸ்ரீஉவே. திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம் [சின்ன க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் மூத்த திருக்குமாரர்] அண்ணங்கராசாரியர் அமர்ந்திருந்து பாடப்ரவசனங்கள் செய்து வருகிறார். க்ரந்த ப்ரணயந முத்ரணாதிகளும் சிறப்பாகச் செய்து வருகிறார். ஆளவந்தாரருளிச்செய்த ஸித்தித்ரயத்திற்குச் சிறந்த வியாக்கியான மெழுதி வெளியிட்டிருப்பவர் இவரே. இவர் நியாய வேதாந்தங்களில் ஆழ்ந்த ப்ரஜ்ஞை யுடையவர். இதை யிங்கு ப்ராஸங்கிகமாகத் தெரிவித்துக் கொண்டபடி.

குஜராத் தேசமென்றும் ஸௌராஷ்ட்ரப்ராந்தமென்றும் வழங்கப்படுகிற அஹமதாபாத் பரிஸரத்தில் பல பகுதிகளில் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்களான அங்காட்டினர் மலிந்திருப்பதை அந்தயாத்திரையில் கண்டு மிக வுகப்பும் வியப்புமடைந்தேன். திருநாராயணபுரத்திலெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண பிள்ளை அக்காரக்கனி பாஷ்யகாராசார்ய ஸ்வாமி, ராமாநுஜாசார்ய ஸ்வாமியென்கிற இரு ஸஹோதரர்கள் இந்த ப்ராந்தத்தில் எழுந்தருளி ஸம்ப்ரதாய ப்ரசாரத்தை வெகு சிறப்பாகச் செய்தருளினதன் பலனாக இந்த ஸௌராஷ்ட்ர மண்டலத்தில் பலவாயிரக் கணக்கான ஸ்ரீவைஷ்ணவர்கள் அபிவ்ருத்தியடைந்திருக்கிறார்கள். மேலே ப்ரஸ்தாவித்த அக்காரக்கனி ராமாநுஜாசார்ய ஸ்வாமி அடியேனுடைய ஜ்யேஷ்ட ஜாமாதாவின் திருத்தகப்பனாராவர். அந்த ஸ்வாமி உபயவேதாந்த விசாரதராக எழுந்தருளியிருந்து ஜ்யேஷ்டப்ராதா



ஸ்ரீமத் திருமலை அனந்தாண் பிள்ளை (திருநாராயணபுரம்) அக்காரக்கனி ராமாநுஜாசார்ய ஸ்வாமியும் பாஷ்யகாராசார்ய ஸ்வாமியும் (வைகுண்டவாஸிகள்)

வுடன் வடதேச யாத்திரையாகப் புறப்பட்டு மார்க்கக்ரமத்தில் உஜ்ஜயினிக்கு எழுந்தருளி அங்கே ஸம்ப்ரதாயார்த்த ப்ரவசனங்கள்செய்தருளினபோது அங்குள்ளார் பலர் ஈடுபட்டு ஆச்ரயித்து ஆதரிக்கத் தொடங்கினார்கள். அன்னவர்களில் இப்போது ப்ரஸித்தியுடன் விளங்குமவர் கருடத்வஜாசாரியென்பவர். இவர் அக்காரகனி ஸ்வாமியின் பரமக்ருபைக்குப் பாத்ரபூதராகி அவ்விடத்தில் ஸிப்ராநதிக்கரையில் மிகப்பெரிய ராமாநுஜகூடம் ஏற்படுத்தி அப்யாகதர்களை ஆதரித்து வருகிறார். அக்காரக்கனி ஸ்வாமிக்கு முன்பு, கீர்த்திமூர்த்தியான திருப்பதி புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி முதலான சில மஹான்களும் குர்ஜர தேசத்திற்கெழுந்தருளி ஸம்ப்ரதாயப்ரசாரம் செய்தருளியிருந்தாலும் இந்த ஸ்வாமியே விசிஷ்ய பலபல நகரங்களையும் க்ராமங்களையும் ஸ்ரீவைஷ்ணவமயமாக ஆக்கினவர். இந்த ப்ராந்தங்களிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் ஆசார்ய பக்திச்செல்வம் அப்ரமேயமானது.



உஜ்ஜயினீ ராமகாட் ராமாநுஜகூடம்
மஹந்த் கருடத்வஜாசாரி

அடியேனுடைய ரைவதகபர்வத யாத்திரையானது அந்த ஸமயம் வெகு சிறப்பாக நடைபெற்றது. உத்தேச்யமாகக் கொண்ட ஸம்ப்ரோக்ஷண கார்யத்தை முடித்துக்கொண்டு பதினைந்து நாளில் ஸ்வஸ்தானம் திரும்ப வேணுமென்கிற மநோரதத்துடன் புறப்பட்டது. ஆனால் இரண்டு மாதகாலம் வடநாடு முழுவதும் அப்போது யாத்திரை செய்து ஆனந்திக்க ப்ராப்தமாயிற்று. த்வாரகை, சித்ரகூடம், பதரிகாச்ரமம் ஆகிய மூன்று ஸ்தலங்கள் தவிர மற்றெல்லா ஸ்தலங்களிலும் அப்போது யாத்திரை நடந்தது. அந்த ஸமயத்தில், வடநாட்டுக்கு வருஷந்தோறும் இரண்டொரு மாஸ காலமாவது வந்து ஆங்காங்கு க்ஷேத்ர தீர்த்தங்களை ஸேவிக்க வேணுமென்கிற குதூஹலமுண்டாயிற்று. இந்த மநோரதம் வருஷந்தோறும் நிறைவேறாவிடினும் இரண்டு வருஷங்களுக்கொருமுறை தவறாமல் நிறைவேறி வருகிறது. கீழ் இரண்டாம் பகுதியில் (பக்கம் 88ல்) விஜ்ஞாபனம் செய்திருப்பதை மறுபடியும் அநுவதிக்கிறேன்—“இந்தத் தன்சரிதை யெழுதுகிற ஸமயம் வரையில் அடியேனுக்கு பதரிகாச்ரம யாத்திரை மூன்று பர்யாயமும் ஹரித்வார ஹ்ருஷீகேசம் வரையில் யாத்திரை பத்தொன்பது பர்யாயமும் ப்ராப்தமாகி யிருக்கிறது” என்று. எம்பெருமானுடைய ஸங்கல்பத்தினால் இனியும் யாத்திரை ப்ராப்தமானால் அது இருபதாவதாகும். நடந்த பத்தொன்பது யாத்திரைகளில் ஐந்து பர்யாயம் வெகு சிறப்பாகவும் அத்யந்தம் உத்ஸாஹமாகவும் பரமானந்தமாகவும் நடைபெற்றது. அவற்றுள் ரைவதகபர்வத யாத்திரையென்று கீழே ப்ரஸ்தாவித்ததுதான் முதலது. மற்ற நான்கு யாத்திரைகளில் முதல் மூன்று யாத்திரை

களிலும் பதரிகாச்ரமம்வரைக்கும் சென்று ஸேவித்துவர ப்ராப்தமாயிற்று. கடைசி யாத்திரைதான் ஸப்தபுண்யபுரீவாக்யஜ்ஞ யாத்திரையென்று ப்ரஸித்தமான பவித்ர யாத்திரை. அதில் என்னோடு கூடவந்தவர்கள் பலர் வதரி வணங்கி வந்தார்கள். நிற்க.

## திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரை யெழுதியது

நாலாயிர திவ்ய ப்ரபந்தங்களுக்குப் பூர்வாசாரியர்களின் வியாக்கியானங்கள் தேனும் பாலு மழுதுமாக இருந்தாலும் அவற்றை யதிகரிப்பதற்கு அனேக யோக்யதைகள் வேண்டியிருப்பதாலும், ஆசார்ய ஸந்நிதியில் பலகாலம் துவண்டு கேட்டறிய வேண்டியிருப்பதாலும் திவ்யப்ரபந்தார்த்த விசேஷங்களைத் தெரிந்து கொண்டு ஆனந்திக்கும் பாக்கியத்தைப் பலர் இழக்கவேண்டி யிருக்கிறதென்று கண்ட வடியேன், பூர்வாசார்ய வியாக்கியானங்களைத் தழுவி எளியதெளிய நடையில் திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை யென்கிற உரையை யெழுதவேணுமென்று பத்தொன்பதாவது வயதிலேயே ஆசைகொண்டேன். முதன்முதலாக இராமாநுச நூற்றந்தாதிக்கு எழுதி வெளியிட்டேன். அதைக் கண்ணுற்ற மஹான்கள் பலரும் "இக்காலத்திற்கு அவச்யமான பணியே யிது; இங்ஙனமே நாலாயிரத்திற்கும் உரை அமைந்தால் அது விலக்ஷணமான லோகோபகாரமாகும்" என்று தெரிவிக்கவே, திருப்பல்லாண்டு தொடங்கி க்ரமேண ஸகல திவ்யப்ரபந்தங்களுக்கும் எழுதி மாதாந்த ஸஞ்சிகையாக வெளியிட்டுவரத் தொடங்கினேன். மிக விரிவாக எழுதினால் அச்சிடுவதில் சிரமமேற்படுமென்று கருதி முதலில் சிறிது சுருக்கமாக வெழுதி [அதாவது, பதவுரையும் பொழிப்புரையுமாக வெழுதி] வெளியிட்டுவந்தேன். சென்னையில் பந்தர் தெருவில் பிரபல வாழைப்பழ வியாபாரிகளான ஸ்ரீமான்கள் M. R. கோவிந்தஸாமி நாயுடு, கன்னைய நாயுடு என்கிற ஸஹோதரர்களிருவர், மாதாந்த ஸஞ்சிகையாக வெளிவந்து கொண்டிருக்கு மிவ்வுரையை சந்தாதாரர்களான முறையில் வாங்கி வாசித்துவந்தவர்கள் 'இவ்வுரை இப்படி சுருக்கமாகவன்றிக்கே விரிவாக அமையும்படி பிரார்த்திக்கவேண்டும்' என்றுகொண்டு காஞ்சிக்கு நேரில் வந்து "இந்த திவ்யார்த்த தீபிகையை அச்சிடுங் கைங்கரியத்தை அடியோங்கள் பொறுப்பாக ஏற்றுக்கொள்ளுகிறோம்; ஸ்வாமிக்கு எவ்வளவு விரிவாக எழுதலாமென்று திருவுள்ளமுண்டோ, அவ்வளவும் விரிவாக எழுதியனுப்பிக் கொண்டே யிருந்தால் தாமதமின்றி அச்சிடுவித்து மாதாந்த ஸஞ்சிகையாகவே வெளியிட்டு வருகிறோம்; இந்த வேண்டுகோளை அவசியம் பூர்த்திசெய்தருள வேணும்" என்று வேண்டிக்கொண்டார்கள். அப்போது முதலாயிரத்திற்கு தீபிகையுரை முடிந்திருக்கிறது. ஆயினும் மறுபடியும் திருப்பல்லாண்டு தொடங்கியே விரிவாக எழுதித் தரவேணுமென்று அவர்கள் கோரினபடியால் அப்படியே எழுதித்தர இசைந்து இரவும் பகலும் அதுவே பணியாகத் தொண்டுசெய்து வந்தேன். மாதந்தோறும் தவறாமல் நூறு பக்கங்கள்கொண்ட ஸஞ்சிகையொன்று 'திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை' என்னும் பெயரினால் வெளிவந்து 1930-ஆம் வருஷத்தில் திருவாய்மொழியாயிரம் தவிர மற்ற மூவாயிரத்திற்கும் தீபிகையுரை அச்சாகி முடிவுபெற்றது.

தீபிகையுரை யெழுதும்போது வேறு பல கார்ய விசேஷங்களினால் சில ஸமயம் என்னால் காலதாமத மேற்படும். அப்படிப்பட்ட ஸமயங்களில் மேலே ப்ரஸ்தாபித்த M. R. நாயுடு அவர்கள் தபால்மேல் தபாலாக எழுதியும் தந்தி கொடுத்தும் நேரில் புறப்பட்டு வந்தும் "தாமதம் செய்தாலெப்படி? மாதந்தோறும் தவறாது ஸஞ்சிகை வெளிவந்தாகவேண்டுமே" என்று விரைவுறுத்தி வந்ததனாலேயே இந்த திவ்யார்த்த தீபிகையுரை இடையூறின்றியும் துரிதமாகவும் முடிவு பெற்றது. மூவாயிரத்திற்கு உரை வெளியிட்டு முடித்தபிறகு, திருவாய்மொழிக்கு

இங்ஙனே எழுதலாமா வேண்டாமா வென்கிற ஆலோசனையினால் இடையில் எழுதத் தடைபட்டிருந்தது. திருவாய்மொழிக்குப் பல வியாக்கியானங்கள் அவதரித்திருப்பதால் நம்முடைய தீபிகையுரை வேண்டாமென்று எண்ணி நிறுத்தப்பட்டிருந்தது. அப்போது பல திசைகளிலிருந்தும் பலபல ஆப்தர்கள் "திருவாய்மொழிக்குத்தான் முக்கியமாகத் தீபிகையுரை அமையவேண்டும்" என்று கடிதங்கள் எழுதியும் நேரில் தெரிவித்தும் அபிநிவேசாதிசயத்தைக் காட்டினபடியால் பிறகு திருவாய்மொழிக்கும் திவ்யார்த்ததீபிகையுரை யெழுதிமுடித்து வெளியிடப்பட்டது. முதலாயிரம், பெரிய திருமொழியாயிரம், இயற்பா ஆயிரம் ஆகிய மூவாயிரத்திற்கும் திவ்யார்த்த தீபிகையுரை தோன்றியவாற்றை நினைக்கும்போது மிகுந்த வியப்பு உண்டாகிறது. அதே ஸமயத்தில்தான் வேதாத்யயனம் செய்ய ஆரம்பித்து அது தீவ்ரமாக நடந்துகொண்டிருக்கிறது. முற்பகல் முழுவதும் வேத சிந்தனையாயிருக்கும். பிற்பகலிலும் இரவிலும் திவ்யார்த்த தீபிகா லேகன சிந்தனையாயிருக்கும். நாள்தோறும், பெரிய வுருவமான காகிதத்தில் நூறு பக்கங்களுக்குக் குறையாமல் எழுதியாகும். அதை அச்சிட அனுப்பினால் அடுத்த நாளிலேயே அச்சாகி கற்றை கற்றையாக ப்ரூப் (Proof) வந்து விடும்; அதைத் திருத்தியனுப்புவதா? மேலே உரையெழுதுவதா? என்று தோன்றாமல் திணறி நிற்கவேண்டியதாகும். அந்த ஸமயத்தில் இடை யிடையில் மற்றும் அனேக நூல்களும் எழுதி வெளியிடப்பட்டு வந்தன. அவை, ஸ்தோத்திரங்களுக்கு வியாக்கியானங்களும் ப்ராப்தமாகிற விவாதக்ரந்தங்களுக்கு வடமொழி தென்மொழி ப்ரத்யாக்யானங்களுமாம். அவையும் மேலே குறித்த M. R. நாயுடு அவர்களாலேயே அச்சிட்டு வெளியிடப்பட்டன. அவற்றைப்பற்றி மேலே விவரிக்க நேரும். உண்மையில் M. R. நாயுடு அவர்களை எம்பெருமான் தானே ப்ரேரணம்பண்ணி அபரிமிதமான பொருட்செலவைக் கணிசியாமல் மிகவுயர்ந்த காகிதத்திலும் வெகு அழகிய அச்சிலும் பதிப்பிக்கச் செய்தருளினான். திருவாய்மொழியாயிரத்தின் தீபிகைப் பதிப்பும், மூவாயிர வியாக்கியானத்தின் மறு பதிப்புகளும் அவ்விதமாக அமையவில்லை யென்பதை உலகம் கண்டிருக்குமே. தவிர, M. R. நாயுடு அவர்கள் செய்வித்த பதிப்புகளில் எவ்வளவு சிரமப்பட்டுத் தேடிப்பார்த்தாலும் அச்சுப்பிழை யென்பது ஒன்றுகூடக் காணக்கிடைக்காதென்று ப்ரதிஜ்ஞை பண்ணிச் சொல்லலாம். என்னுடைய புத்திப்பிசகினால் ஏற்பட்ட பிழைகள் காணக்கிடைக்குமானாலும் அச்சுப்பிழை காணக்கிடைக்கவேமாட்டாதென்பது அப்பதிப்பிற்குத் தன்னேற்றம். திருவாய் மொழியாயிரத்திற்குத் தீபிகையுரை வெகு நிதானமாக எழுதப்பட்டுப் பலவூர்களில் பல அச்சுக் கூடங்களில் பதிப்பிக்கப்பெற்றது. பெரும்பாலும் வடதேச யாத்திரைகளிலேயே திருவாய்மொழி தீபிகை எழுதப்பட்டது. பதரிகாச்ரம யாத்திரை மூன்று தடவை ப்ராப்தமாயிற்றென்று விஜ்ஞாபித்திருந்தேனே. அந்த மூன்று யாத்திரைகளிலும் வழிகளிலெல்லாம் திருவாய்மொழி தீபிகை எழுதப்பட்டுவந்தது. இதில் ஒரு ஆனந்தமான விஷயம் தெரிவிக்கிறேன். திருவாய்மொழி ஏழாம்பத்தின் தீபிகை வெளியான பிறகு இடையில் சில காலம் எட்டாம்பத்து ஆரம்பிக்கப்படாமலே யிருந்தது. தேவகோட்டையில் ராஜாஜீ பிரஸ் நடத்திவரும் ஸ்ரீ உவே. T. பார்த்தஸாரதி ஐயங்கார் (அட்வகேட்) அவர்கள் பரமஸ்நிக்தராகித் திருவாய்மொழி தீபிகையைச் சீக்கிரமாக முடித்து உதவவேணுமே யென்று பலகால் வற்புறுத்தி எழுதச்செய்து தமது அச்சுக் கூடத்திலேயே அச்சிடத் தொடங்கினார். வெவ்வேறு காரியங்களினால் இடையில் எழுதத் தடைபட்டுவிட்டது. அப்போது ஒருநாள் கனவில் அந்த ஸ்வாமி மகிழ மாலையை யணிந்துகொண்டு நம்மாழ்வார் போலக் காட்சி தந்து 'விரைவில் எழுதி முடிக்க வேணும்; துரிதமாக எழுதி வெளியிடவேணும்' என்று கூறி மறைந்தார். இது அந்த ஸ்வாமியின் ரிகார்டுகளில் ஏறியிருக்கும் விஷயம். 12, 13 வருஷங்களுக்கு முற்பட்ட விஷயமிது.

நாலாயிரத்திற்கு மமைந்த இவ்வுரை இதுகாறும் பல பதிப்புகளேறி உலகமெங்கும் பரவியுள்ளது. த்வீபாந்தரங்களிலும் பிரசாரம் பெற்றிருக்கின்றது. அக்காலத்தில் உலகம் நிறைந்த புகழாளர்களாய் விளங்கின மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி. சாமிநாதையரவர்கள், ஸேதுஸம்ஸ்தான மஹாவித்வான் ராமநாதபுரம் R. ராகவையங்கார்ஸ்வாமிகள் முதலானோர் தீபிகையுரையைப்பற்றித் தங்களுடைய பேரானந்தத்தை உலகறிய வெளியிட்டிருந்தார்கள். ஸ்ரீ ராகவையங்காருடைய மதிப்புரை யொன்றுமட்டும் ஈண்டு வெளியிடப்படுகின்றது.

## ஸ்ரீ. உ. வே. ரா. இராகவையங்கார் ஸ்வாமியின் மதிப்புரை

"ஸ்ரீ காஞ்சீநகரத்து ஸ்ரீ வைஷ்ணவ பரமாசார்ய குலதிலகராகவும் உபய வேத வேதாந்த வித்வத் சிகாமணியாகவும் விளங்குகின்ற ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளால் இனிது இயற்றப்பெற்றுள்ள திவ்யார்த்த தீபிகையென்னும் பெரிய நூலை யான்பலபகுதிகளில்படித்துப்பார்த்துள்ளேன். நம் பூருவாசாரியர்கள் அருளிச்செய்த வியாக்கியானங்கள் அறிதற் கரியனவாய் அதிக வடமொழிக் கலப்புடையனவாயிருத்தலை நோக்கி நம் தமிழ்மக்கள் எளிதினுணர்ந்து கொள்ளும் வண்ணம் இனிய தமிழ் நடையில் நூற்பொருளை நன்கு விளக்கி இவ்விரிவுரை நிற்றலைக்கண்டு நாடொறுங் கழிபேருவகை யடையாநின்றேன். இவ்வாசிரியரது உரைநடை வடமொழி தென்மொழிகளில் இவர்கட்குள்ள அரிய பெரிய பயிற்சியையும் நுணுகிய ஆராய்ச்சியின் திறத்தையும் நன்கு புலப்படுத்துகின்றது. தமிழ் வல்லுநர் பலர் இவ்விரிவுரையைக் கற்று மிகவும் அன்புகூர்ந்து பாராட்டுதலையும் யான் பலவூர்களிற் கண்டுளேன். இவ்வினிய தமிழ் விரிவுரையின் பெருந்தகுதியை நோக்கி இவரை திவ்யப்ரபந்தப் பேராசிரியர் என்றே சிறப்பித்துக் கூறுவேனெனின், அது கற்றோர் பலர்க்கும் உடன்பாடேயாம். இருமொழிப் புலமையும் நூற்கடலாழ் பொருள்களைப் பிறர்க் கெடுத்துரைக்கும் வன்மையும் பாஷ்யம் போல நூல்கட்கு விரிவுரை யெழுதுந் திறனும் கவியியற்றும் பெற்றியும்; இவ்வாசிரியர்பால் நிறைந்து விளங்குகின்றன. இத்தகைய



ஸேதுபதி ஆஸ்தான மஹாவித்வான்
ரா. ராகவையங்கார்ஸ்வாமி (வைகுண்டவாஸி)

பெரியார் இன்னும் பல அறிவுவிளக்க நூல்களை இயற்றி உலகிற்கு உபகரித்து நீடூழி வாழுமாறு பரதெய்வத்தின் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

ரா. இராகவையங்கார் ".

இவ்வுரை வெளிவரத் தொடங்கியபோதே, மதுரையில் நெடுங்காலமாக நடைபெற்றுவரும் செந்தமிழ்ப் பத்திரிகைக்கு ஆசிரியராக (அப்போது) எழுந்தருளியிருந்த மஹாவித்வான். திரு. நாராயணையங்கார்ஸ்வாமிகள் அப்பத்திரிகையில் இவ்வுரைநடையைப்பற்றி மிகமிகக் கொண்டாடியெழுதி அடியேனுக்குச் செந்தமிழ்ச் செல்வர் என்னும் விருதை யளித்தார்.

## — சென்னையில் உபந்யாஸ ஸபையில் அந்வயம் —

திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரை தோன்றுவதற்கும் இது அச்சாகி உலகமெங்கும் பரவுவதற்கும் காரணபூதர்களான (மேலே ப்ரஸ்தாவித்த) M. R. நாயுடு அவர்களும், மற்றும் பல பெரியார்களும் என்னிடத்தில் வைத்திருந்த அளவு கடந்த அன்பினால் என்னை சென்னைமாநகரிலேயே வந்திருக்கும்படிக்கும் அங்கே உபந்யாஸங்கள் செய்து கொண்டிருக்கும்படிக்கும் 1925ஆம் ௵ முதலாக அடிக்கடி வற்புறுத்தி வந்தார்கள். சென்னையிலேயே ஸ்திரவாஸம் செய்யாவிட்டாலும் அடிக்கடி வந்தாகிலும் உபந்யாஸங்கள் செய்துபோக வேணுமென்று நிர்ப்பந்தித்துக் கொண்டிருந்தார்கள். கதாசித் கார்யார்த்தமாக அடியேன் சென்னைக்குப் போய்வர நேர்ந்தாலும் காலையில் சென்று மாலையில் திரும்புவது வழக்கமாதலாலும், சென்னையில் வாஸம் சிறிதும் ருசித்திராமையாலும் அவர்களின் கோரிக்கைக்குச் சிறிதும் உடன்படாமலே காலம் கடத்தி வந்தேன். "अन्यो ह्यन्यच्चिन्तयति स्वच्छन्दं विदधाम्यहम्—அந்யோ ஹ்யந்யச் சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம்யஹம்" என்கிற எம்பெருமானுடைய திருவுள்ளம் தனிப்பட்டதாதலாலும் ஆர்க்கும் அறிவரிதாதலாலும் அவனுடைய ஸங்கல்பத்தின்படி 1931ஆம் வருஷத்தில் அவர்களது கோரிக்கை நிறைவேறத் தொடங்கிற்று. கீழ் இரண்டாம் பகுதியில் (பக்கம் 126ல்) "நமது பாடசாலைக்குச் சிறந்த உதவி ஏற்படுதல்" என்னும் மகுடத்தின்கீழ்த் தெரிவித்திருந்தபடி நாட்டுக்கோட்டை செட்டியாரொருவருடைய சிறந்தவுதவியினால் 1920௵ முதல் 1930௵ வரையில் நமது பாடசாலை நிர்விசாரமாக நடந்து வந்தது. அதற்குமுன் சென்னைமாநகரில் சில சாரிடிகளின் உதவியினாலும் சில உதாரர்களின் நன்கொடையினாலும் நடந்து வந்தது. நாட்டுக்கோட்டை செட்டியாருடைய உதவி ஏற்பட்டது முதல் இதரர்களின் உதவிகளெல்லாம் நிராகரிக்கப்பட்டு விட்டன. நாட்டுக்கோட்டை செட்டியார் தம்முடைய உதவிக்கு சாச்வதமான ஏற்பாடு ஒன்றும் செய்யாமலே அகஸ்மாத்தாகக் காலம் சென்றுவிட்டபடியால் நமது பாடசாலைக்கு அவர் மாதந்தோறும் செய்து வந்த பொருளுதவி 1930ம் வருஷத்தில் நின்று விட்டது. அதனால் அப்போது பாடசாலையின் நிர்வாஹம் சிரமப்பட்டது. பாடசாலைக் கட்டிடங்கள் காரணமாகக் கடனாளியாகவுமிருந்தேன். அந்த ஸமயம் பாடசாலையின் நிர்வாஹத்தை எவ்விதமாகச் செய்வதென்று விசார முண்டாயிற்று. நாட்டுக்கோட்டை செட்டியாரின் உதவி ஏற்படுவதற்கு முன்பு உதவி செய்து கொண்டிருந்தவர்களுக்குத் தெரிவித்ததில், அவரவர்கள் தாம்தாம் செய்து கொண்டிருந்த உதவிகளை வேறு வழிகளில் செலுத்திவிட்டதாகத் தெரிவித்து விட்டார்கள். வட இந்தியாவில் சில சில நகரங்களில் சிலபல ஸேட்டுகள் தெரிந்தவர்களிருந்ததனால் அவர்களுக்குத் தெரிவித்துப் பார்ப்போமென்று ஆலோசித்ததில், வெகு தூரதேசஸ்தர்களான அவர்கள் நீண்டகாலம் ஸ்திரமாக உதவிசெய்துவர இசையமாட்டார்களென்று தெரிந்தது. மேலும் அது பர்யாயமாக யாசகவ்ருத்தியில் சேருமதாகையாலே அதில் உத்கட ப்ரவ்ருத்தி

யுண்டாகவில்லை. மிகவும் ஆப்தர்களாயிருந்த (மேலே ப்ரஸ்தாவித்த) M. R. நாயுடு அவர்களோடே கலந்து ஆலோசித்ததில், அவர்கள் தங்களுடைய நெடுநாளைய மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ள இதுதான் சமயமென்று துணிந்து "எங்களுடைய கோரிக்கையும் நிறைவேறி ஸ்வாமியினுடைய கவலையும் தீரும்படியான வழியைத்தான் நாங்கள் விஜ்ஞாபனம் செய்யக்கூடும். எம்பெருமான் எங்களுடைய ப்ரார்த்தனைக்கு ப்ரஸன்னனாகியே நாட்டுக்கோட்டை செட்டியின் உதவியை விலக்கி வைத்தார்; அதைப்பற்றி ஸ்வாமி சிறிதும் கவலை கொள்ளவேண்டாம். திருவல்லிக்கேணியிலே ஸ்வாமிக்கு உகப்பான ஜாகையை அமர்த்திக் கொடுக்கிறோம்; அவ்விடத்தில் வாஸம் வைத்துக்கொண்டு அங்கும் டவுனிலும் உபந்யாஸங்கள் ஸாதித்து வரவேண்டியது; பாடசாலையின் நிர்வாஹத்திற்குக் குறையில்லாதபடி நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம்; கடன்களும் அவலீலையாகத் தீர்ந்துவிடும்; வேறுவிதமான ஆலோசனை எதுவும் செய்யவேண்டாம்" என்று இதையே வற்புறுத்திச் சொல்லத் தொடங்கினார்கள். அவர்கள் எவ்வளவு சொல்லியும், காஞ்சீவாஸத்தையும் பெருந்தேவிமணவாளனை பேரருளாளனுடைய அநுபவங்களையும் விட்டுவருவதற்கு ஈஷத்தும் இசைவு உண்டாகவில்லை. அடிக்கடி வந்து போவதை வைத்துக்கொள்வதும் ச்ரமஹேதுவாகும் என்று தோன்றினபடியால் அவ்விதமாகவும் ஒப்புக்கொள்ள ருசியுண்டாகவில்லை. ஸர்வாத்மநா இது ஸாத்யமன்று என்றே சொல்லி மறுத்துவிட்டேன். அவர்களுடைய நிர்ப்பந்தமோ அதிகரிக்க ஆரம்பித்தது. கிம்பஹுநா? கடைசியாக சென்னை யுபந்யாஸ ஸபையில் வாரந்தோறும் வந்து சனிக்கிழமை மாலையிலும் ஞாயிற்றுக்கிழமை காலையிலும் உபந்யாஸம் செய்து வருவதாக அங்கீகரிக்க நேர்ந்தது. இது அநிர்வசநீயமான பகவத்ஸங்கல்பமொன்றாலேயே ஏற்பட்ட ஸம்பவமென்பதில் ஸந்தேஹமில்லை. 1931ஆம் ஹூத்தில் ஜூலை மாதத்தில் முதல்வாரத்தில் அவ்விடத்து உபந்யாஸ ஸபையில் அந்வயம் தொடக்கமாயிற்று. சென்னையிலும் மற்றும் பலபல விடங்களிலும் உயர்ந்த பதவிகளில் வாழும் மஹான்களின் அருளையோ ஆசீர்வாதத்தையோ மங்களாசாஸனத்தையோ அபிநந்தனங்களையோ அபிமானத்தையோ பெறுவதற்கு இதுவே மூலகாரணமாயிற்று.

அடியேனுடைய வர்ழ்க்கையில் சென்னை யுபந்யாஸ மஹாஸபையில் அந்வயம் என்னுமிந்த விஷயம் ஒரு தனிப்பட்ட ஸம்பவ மென்றே சொல்ல வேணும். இளமையில் ஸ்வஸ்தானத்தில் நம்மாழ்வார் ஸந்நிதியிலும் மணவாள மாமுனிகள் ஸந்நிதியிலும், உலகளந்த பெருமாள் ஸந்நிதி ஸ்ரீயதோக்தகாரி ஸந்நிதி முதலான பகவத் ஸந்நிதிகளிலும் விசேஷ கோஷ்டிகள் நடைபெறுகிற ஸமயங்களில் தைரியமாக வெழுந்து உபந்யாஸங்கள் செய்து போந்ததுண்டு. அதில் பலர் ஆனந்தப்படுவர்கள், சிலர் 'இதென்ன புது வழக்கம்? இவன்தான் கற்றானோ?' என்று பல சொல்லி அதி க்ஷேபமும் செய்வர்கள். ஆனாலும் உகப்பவர்கள் பலரிருந்தபடியாலே மேலே குறித்த ஸந்நிதிகளில் இருபது வயதுக்குள்ளாகவே நூற்றுக்கணக்கான உபந்யாஸங்கள் செய்ய நேர்ந்திருக்கிறது. ஒரு ஸமயம் திருமங்கையாழ்வாருத்ஸவம் ஸேவிக்கத் திருவாலி திருநகரிக்கு விடை கொண்டிருந்தபோது [17ஆவது வயதில் என்று ஞாபகம்] அங்கும் பல பெரியார்கள் நியமிக்க கோஷ்டியிலேயே சில உபந்யாஸங்கள் செய்ய ப்ராப்தமானதுண்டு. அப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களில் சில மஹான்கள் "பிள்ளாய்! உன் சரக்குகள் பெரிய நகரங்களில் விலைச் செல்லவேண்டும்" என்று ஸாதிக்கக் கேட்டதுண்டு. அதுவொரு பெரிய ஆசீர்வாதம் போலவே தோன்றிற்று. சென்னையில் இப்போது பல மஹான்கள் ஆங்காங்கு உபந்யாஸகர்களாய்ச் சிறந்த கீர்த்தியுடன் ப்ரதிஷ்டிதர்களாயிருந்தாலும் அக்காலத்தில் மிகச் சிலரே உபந்யாஸகர்களாக விளங்கியிருந்தார்கள். அந்த ஸமயத்திலே அடியேன் சென்னையில் உபந்யாஸம்

செய்ய ஆரம்பித்தது பலபல மஹான்களின் மங்களாசாஸன பலத்தினால் ஓங்கி வளர ஆரம்பித்தது.

எண்ணிறந்த மஹான்களின் மங்களாசாஸனம் ஒரு புறமிருக்க, நாடுநகரமும் நன்கறிந்த நற்புகழ் நிதியான நம் எஸ். வரதாசார்ய ஸ்வாமிகள் அவ்வுபந்யாஸ ஸபைக்கு அடிக்கடி யெழுந்தருளி மானஸிகமாக மட்டுமன்றிக்கே வாசிகமாகவும் பலகால் செய்த மங்களாசாஸன பலமே மிகச் சிறந்து விளங்குவதாம். இந்த ஸ்வாமியின் திருவுருவப் படம் கீழே முதற்பகுதியில் (பக்கம் 57ல்) பிரசுரிக்கப் பட்டிருந்தாலும் அரைகுறையான திருமேனியானவதில் பரிபூர்ண த்ருப்தியில்லாமல் பரிபூர்ணமான இத்திருமேனி இங்கே பிரசுரிக்கப்படுகிறது.



ஸ்ரீ மதுபயவே ஸர் S. வரதாசார்ய ஸ்வாமி
(ரிடைர்ட் பெடரல் கோர்ட்டு ஜட்ஜ்.) மயிலாப்பூர்

எழும்பூரில் ஸ்ரீமான் T. ரங்காசாரியர் ஸ்வாமியென்று பிரபல அட்வகேட் எழுந்தருளியிருந்தது ப்ரஸித்தமானது அக்காலத்தில் காஞ்சீபுரம் தேவப்பெருமாள் ஸன்னிதிக்கு தர்மகர்த்தாக்களுக்குமேல் தணிக்கை செய்வதற்காக ‘ஸுபர்வேஷன் போர்ட்’ என்று ஒரு ஸமிதி ஏற்படுத்தப்பட்டு, அதில் தென்கலையில் ஒருவர் வடகலையில் ஒருவர், ஸ்ரீவைஷ்ணவரல்லாதாரில் ஒருவர்—என்று மூன்று நபர்கள் அமர்ந்திருக்கும்படி சென்னை ஹைகோர்ட்டாரால் நிபந்தனை செய்யப்பட்டிருந்தது. அந்த ஸமிதியில், மேலே ப்ரஸ்தாவித்த T. ரங்காசார்யஸ்வாமி தென்கலை ஸ்தானத்தைப் பூர்த்தி செய்யத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். இந்த வியாஜத்தினால் அந்தஸ்வாமி அடிக்கடி காஞ்சீபுரிக்கு எழுந்தருள்வதை வைத்துக்கொண்டிருந்தபடியாலே அங்கு வருகிற ஸமயவிசேஷங்களில் நமது பாடசாலையைக் கடாக்ஷிப்பதும் அநுக்ரஹிப்பதுமாக இருந்தார். அந்த ஸ்வாமியோடு நெருங்கின பழக்கம் ஏற்பட்டிருந்தது. அவரும் நெடுநாள் உபந்யாஸஸபைக்கு எழுந்தருளி அபிமானிக்க ப்ராப்தமாயிற்று. இரண்டு மூன்று வருஷங்களான பிறகு நம்முடைய தௌர்ப்

பாக்கியத்தினால் அந்த மஹானுக்கு அநிர்வசநீயமானவொரு வியாதி ஏற்பட்டு மிகவும் ச்ரமப்பட நேர்ந்தது. வாயைத்திறந்து வார்த்தை சொல்ல முடியாதபடியாய் விட்டது. அந்த நிலைமையிலுங்கூட அனேகநாள் உபந்யாஸ ச்ரவணத்திற்கு வந்து கொண்டே யிருப்பர். அவருடைய மங்களாசாஸனமும் அடிக்கடி நினைக்கலாகிறது. அந்த மஹான் அசித்கல்பராகவே சிலவருஷங்கள் சயனத்திலிருந்து விட்டார்.



ஸ்ரீ உவே. எஸ். வாஸுதேவாசார்ய மஹர்ஷி ஸ்வாமி
(வைகுண்டவாஸி)

அந்த ஸ்வாமியின் மங்களாசாஸனத்திற்கு அடுத்தபடியாக ஸ்ரீமதிதயாதி (மாம்பலம்) வாஸுதேவாசார்ய மஹர்ஷி ஸ்வாமியின் மங்களாசாஸனம் குறிப்பிடத்தக்கது. இந்த மஹாஸ்வாமியின் ஜ்ஞாநாநுஷ்டானங்களைப் பற்றியும் ஸர்வபூத ஸௌஹார்த ஸௌஜந்யங்களைப் பற்றியும் எவ்வளவு எழுதினாலும் த்ருப்தி பிறவாது. இந்த ஸ்வாமியும் சென்னையுபந்யாஸ ஸபைக்கு அடிக்கடி யெழுந்தருளி மங்களாசாஸனம் செய்தருளுவர். தாம் ஸம்பாதகராகவிருந்து நடத்திக்கொண்டிருந்த வேதாந்த தீபிகையென்னும் மாதப்பத்ரிகையில் 19-4 ௵ மே ௴ வெளிவந்த இதழில் பிரசுரம் செய்தருளியிருக்கும் ஒரு வ்யாஸத்தை இங்கெடுத்துக் காட்டுகிறேன் — அதனால் அந்த உபந்யாஸ ஸபையின் பல வரலாறுகள் அறியலாகுமென்று. அந்த வ்யாஸம் மேலே வெளிவருகிறது. இடையில் ஒரு விஜ்ஞாபனம்;--இவையெல்லாம் ஸ்வப்ரதிஷ்டைக்காக பிரசுரிக்கப்படுகிறதென்று சிலர் கருதவும் பரிஹஸிக்கவும் கூடும். தன்சரிதையென்று மகுடம் வைத்து எழுதத் தொடங்கினவிதில் எவையெவை

எழுத ப்ராப்தமாகின்றனவோ அவற்றையெல்லாம் எழுதித்தானேயாக வேண்டும். அஸத்யமாகவோ ஆரோபிதமாகவோ இதில் ஒரு சிறு விஷயமும் புகுத்தப்படுவதில்லை. ஒவ்வொன்றும் ஸாக்ஷியங்களுடன் கூடியவையாதலால் வேறுவிதமான சங்கைக்கு ஆஸ்பதமில்லை. ஸ்வப்ரதிஷ்டையில் விருப்பமென்பது பழிக்கத் தக்கதாகவோ வெறுக்கத்தக்கதாகவோ ஆகாது அது ஆசம்ஸநீயமானதன்றோ. "பெரியார்களின் திருவுள்ளத்திலே நாம் ஒரு பொருளாகப் பட்டிருக்கவேணும்" என்றும் "அவர்களுடைய அபிநந்தனம் நமக்கு ப்ராப்தமாக வேணும்" என்றும் ஆசம்ஸியாத நபர்களுமுண்டோ? அந்த ஆசம்ஸை நாம் எதிர்பாராமலே நிறைவேறியிருந்தால் ஸந்தோஷமாகத் தெரிவித்துக்கொள்வதில் என்ன பிசகு? 'இது மெய்யுரை தானா? பொய்யுரையா?' என்பதொன்றை மட்டும் அவரவர்கள் ஆராய்ந்து கொள்ளுதல் நன்று.

வேதாந்ததீபிகா பத்ரிகையில் ஸ்ரீ வாஸுதேவாசார்ய மஹர்ஷி ஸ்வாமியால் வெளியிடப்பட்ட வியாஸம் வருமாறு:—

### "ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி

பிரதிவாதி பயங்கரம் அண்ணனுடைய ஸந்ததியில் தோன்றினவரும், அந்தத் திருவம்சத்திற்கு ஏற்ற ஞான அனுட்டானங்கள் நிரம்பப்பெற்றவரும், காஞ்சீ நகரத்தில் எழுந்தருளியிருப்பவரும் நாடெங்கும் பரவிய நற்புகழ் பெற்றவருமான ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியைப் பற்றித் தெரிந்து கொள்ளாதவர்களும், அவருடைய கல்வித்திறத்திலும் உபந்யாஸ சைலியிலும் க்ரந்தலேகந வைகரியிலும் ஈடுபடாதவர்களும் பெரும்பாலும் இருக்கமாட்டார்களென்றெண்ணுகிறேன். இந்த ஸ்வாமி ஸம்ஸ்க்ருத பாஷையிலும் தமிழ்ப் பாஷையிலும் இயற்றி வெளியிட்டிருக்கின்றவும் நாளுக்குநாள் வெளியிட்டுக்கொண்டிருக்கின்றவுமான பற்பல அரும்பெரும் நூல்களிலே இவருடைய உபய பாஷா ப்ராவீண்யம் ஒப்பற்றதென்பது உலகமறிந்ததாகும். ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளிலும் ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளிலும் அநேக பாகங்களுக்கு இந்த ஸ்வாமியின் அருமையான வியாக்யானங்கள் வெளிவந்து பண்டிதர்கள் பாமரர்களென்கிற வாசியில்லாமல் எல்லோருக்கும் மிகப் பயன்பட்டுக் கொண்டிருப்பது பற்றி நாம் அதிகமாகச் சொல்லத் தேவையில்லை. தவிரவும் ஸ்ரீ காஞ்சியில் 'வேதவேதாந்த வைஜயந்தீ' யென்கிற ஸம்ஸ்க்ருத பாடசாலையை ஸ்தாபித்து அதன் மூலமாகப் பல ஸ்ரீ வைஷ்ணவ வித்யார்த்திகளுக்கு உபய வேத வேதாந்த ப்ரவசந கைங்கர்யத்தை ஆச்சரியமாக இந்த ஸ்வாமி நடத்தி வருகின்ற விசேஷமும் ப்ரஸித்தமானதே. இப்படிப்பட்ட அதிசயங்களெல்லாவற்றுக்கும் மேலாக இந்த ஸ்வாமி மூன்று வருஷகாலமாய் சென்னை மாநகரில் பிரதி சனிக்கிழமை மாலை, ஞாயிற்றுக்கிழமை காலைகளில் அருளிச்செய்து கொண்டு வருகிற அமுதமொழி மயமான உபந்யாஸங்களின் சிறப்பு விலக்ஷணமானது. இவ்விஷயத்தைப்பற்றி இங்குக் கொஞ்சம் விவரமாக எழுத விரும்புகின்றேன். சென்னைப் பட்டணத்தில் வித்வான்களுடைய உபந்யாஸங்களை அடிக்கடி நடத்திவைக்க அநேக ஸபைகளும் சாடிகளும் ஏற்பட்டிருக்கின்றன. அப்படிப்பட்ட ஸபைகளுள் "பகவத்பக்த ப்ரஸங்கசபா" என்பது ஒன்று. மற்ற எல்லா ஸபைகளைவிட இந்த ஸபையே முதன் முதலாக ஏற்பட்டதென்றும் இது சிறந்த பிரமுகர்களால் ஸ்தாபிக்கப்பட்டதென்றும் தெரியவருகிறது. இந்த ஸபையில் அநேக வித்வான்களுடைய ஹரிகதா காலக்ஷேபங்களும், ஸங்கீதக் கச்சேரிகளும் உபந்யாஸங்களும் விசேஷமாக நடந்திருக்கின்றன. ப்ரஸித்தர்களாயிருந்த ப்ரம்மஸ்ரீ பஞ்சாபகேச சாஸ்த்ரியாரவர்கள், பருத்தியூர் கிருஷ்ணசாஸ்த்ரியாரவர்கள், பண்டிட் லக்ஷ்மணசாரவர்கள் முதலான மஹான்கள் இந்த ஸபையில் காலக்ஷேபங்கள் நடத்தியிருக்கின்றார்கள். தங்கசாலை வீதியிலுள்ள தொண்டைமண்

டலம் ஹைஸ்கூல் ஹாலில் இந்த ஸபையின் காரியங்கள் நடந்து வருகின்றன. அந்த ஹால் ஆயிரக்கணக்கான ஜனங்கள் வீற்றிருக்கக்கூடிய மிக விசாலம் அமைந்தது. 1931ஆம் வருஷம் ஜூலை மாதத்தில் ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமி இந்தஸபையில் உபந்யாஸங்கள் செய்தருள வரவழைக்கப்பட்டார். உடையவர் வைபவம், பாகவதர்களின் வைபவம், தேவப்பெருமாள் வைபவம் போன்ற தனித்தனி விஷயங்களில் பத்தெட்டு உபந்யாஸங்கள் நடந்த பின்பு ஸ்ரீமத் ராமாயண உபன்யாஸங்களை விரிவாகக் கேட்க விரும்பின அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 1931 ஹு ஆகஸ்டு மாஸத்தில் ஸ்வாமி ஸ்ரீமத் ராமாயண உபந்யாஸம் நடத்த ஆரம்பித்தார். புஸ்தகம் வைத்துக் கொள்ளாமலும் கைக்குறிப்புகளுமில்லாமலும் கங்கா ப்ரவாஹம் போல் ஸ்வாமி ஸாதித்துவரும் உபந்யாஸங்களைக்கேட்டு அதிசயப்படாதவர்கள் யாருமில்லை. வால்மீகி ராமாயணம், கம்பராமாயணம் பிள்ளைப்பெருமாளையங்கார் பாடல்கள் திருக்கோவையார் முதலான தமிழ்க்கிளவி நூல்கள் காவ்ய நாடக அலங்கார ச்லோகங்கள், ஸகல ஆசார்ய ஸ்ரீஸூக்திகள், ச்ருதி இதிஹாஸ புராணங்கள் ஆகிய இவ்வளவையும் இனிமையாகப் பொழிந்து கொண்டு ஸ்வாமி நிகழ்த்தும் உபந்யாஸங்கள் மிகவும் அருமையானவை. இப்படிப்பட்ட அமைப்புடன் ஸ்ரீராமாயண விசேஷார்த்த உபந்யாஸம் இதுவரை எங்கும் கேட்டதில்லை யென்றே பலரும் அபிப்பிராயப்படுகிறார்கள். புருஷர்களும் ஸ்திரீகளுமாய் சுமார் ஆயிரம் ஜனங்கள் கேட்டுக் களித்து வருகிறார்கள். ஆங்கிலத்தில் B.A., M.A. முதலான பட்டப் பரீக்ஷைகள் தேறினவர்களும், தமிழ்ப்பண்டிதர்களும் வடமொழிப் புலவர்களும் பலவகை உத்யோகஸ்தர்களும் வியாபாரிகளும் அநேக மத ஸம்பிரதாயஸ்தர்களும் திரண்டு மிக்க குதூஹலங்கொண்டு கேட்டுக் களிக்கும்படியாக நடத்தப்பட்டு வருகின்ற இவ் வுபந்யாஸத்தில் இப்போது (1934 ஹு மே மீ) விபீஷணசரணாகதி நடந்து வருகின்றது இந்த சரணாகதி விஷயத்தில் மாத்திரம் இதுவரை பன்னிரண்டு உபந்யாஸங்கள் நடந்திருக்கின்றன. சென்ற மாத முடிவில் ஸ்ரீமத் வேதாந்த தேசிகனுடைய ஹம்ஸஸந்தேச காவியத்தின் ஸாரப்பொருள் இரண்டு உபந்யாஸங்களில் வெகுரமணீயமாக எடுத்துரைக்கப்பட்டது. அப்போது முக்கியமாகக் கையாளப்பட்ட சுலோகங்கள் தெலுங்கு லிபியில் தனிப்பதிப்பாக வெளியிடப்பட்டு முள்ளது. சனிக்கிழமைகளில் மாலை 6 மணிமுதல் 8 மணிவரையிலும், ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 8 மணிமுதல் 10 மணிவரையிலும் இவ்வுபன்யாஸங்கள் நடந்து வருகின்றன. ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு வாரம் விடுமுறையாகும். கீழ் நடந்த மூன்று வருஷங்களிலும் மார்கழி மாதத்தில் முப்பது நாளும் திருப்பாவை விசேஷார்த்த ஸ்வாபதேசார்த்த அந்யாபதேசார்த்த உபன்யாஸங்கள் வெகு அருமையாக ஸ்வாமியால் நடத்தப்பட்டன. உபய பாஷையிலும் ஸகல க்ரந்தங்களிலும் உபய வேதாந்தங்களிலும் மிகவும் பாராட்டத் தகுந்த வல்லமை பெற்று ஆங்காங்குப் பொருத்தமான மேற்கோள்களை விளக்கி, சிறியவர்களுக்கும் நெஞ்சில் நன்கு பதியுமாறு எளிதாகவும், அழகாகவும், கம்பீரமாகவும் அமுத மொழிகளை அளித்து வருகின்ற அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் இப்படியே பல்லாண்டு பல்லாண்டாக எழுந்தருளியிருந்து உலகினரை உய்விக்க வேண்டுமென்று எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றேன் "—இது வேதாந்த தீபிகையில் வெளிவந்த வியாஸம்.

ஸ்ரீவாஸுதேவாசார்ய மஹர்ஷி ஸ்வாமியிடத்தில் அடியேன் அநுபவித்த நற்குணங்கள் வேறெங்கும் காணாதவையே. அஸூயையென்பதை அடியோடு அறியார். ஒருவரிடத்தும் குறைகூறார். கலாவைஷம்யத்தைக் கலாமாத்ரமுமுடையரல்லர். ஸகல பூர்வாசார்யர்களிடத்திலும் ஸமமான ப்ராவண்யமுடையவர். நவீனர்கள் கொண்டாடும் விவாதங்களிலே சிறிதும் தலையிட்டவரல்லர். தாம் சொன்னதோ எழுதியதோ அப்ராமாணிகமென்று ஒருவர் நிரூபித்தால்

உடனே அதை மாற்றிக்கொள்வர்- இப்படி அனேக குணங்களை இந்த ஸ்வாமி பக்கலிலே ஆச்சரியமாக அநுபவித்திருக்கிறேன். இந்த ஸ்வாமியோடு அடியே னுக்கு ஸ்நேஹம் ஏற்பட்டவிதம் அது வளர்ந்தவிதம் முதலானவற்றைப்பற்றி விசேஷமாக எழுதவிருப்பமுண்டு; அது வேறு ப்ரகரணத்திலேயாகும்.

சென்னையில் M. D. ப்ரதர்ஸ் என்று ப்ரஸித்தி பெற்ற ஸஹோதரர் நால்வர் மஹா ரஸிகர்கள். இவர்கள் முறையே துரைஸாமி ஐயங்கார், சக்ரவர்த்தி ஐயங்கார், சேஷாத்ரி ஐயங்கார், ஸுதர்சநமையங்கார் என்று திருநாமமுடையவர்கள். சென்னையில் அடியேனுடையஉபந்யாஸம் ஆரம்பித்த காலத்தில் இவர்கள் நால்வரும் ஏக குடும்பமாக வாழ்ந்தவர்களாதலால் நால்வரும் ஸகுடும்பமாக உபந்யாஸங்களுக்குத் தவறாது வருவதும், தத்தம் ஸ்நேஹிதர்கள் பலரையும் அந்வயிக்கச் செய்வதுமாயிருந்து அந்த உபந்யாஸ ஸபையை மிகவும் அபிவிருத்திக்குக் கொண்டுவந்தார்கள். இவர்களில் தலைவரான துரைஸாமி ஐயங்காரென்பவர் இரண்டொரு வருஷ காலத்தில் ஆசாரியன் திருவடியடைந்துவிட்டார். பிறகு மற்ற மூவரும் பத்து பதினைந்து வருஷகாலம் ஐகமத்யத்தில் குறைவின்றிவாழ்ந்து வந்தபடியால் இவர்களுக்குள் விபாகம் ஏற்படுகிற வரையில் அந்த ஸபையை விசேஷமாக அபிமானித்து ஆதரித்து வந்தார்கள். ஸர்வகநிஷ்டரான ஸ்ரீ ஸுதர்சனமையங்கார் ஸ்வாமி மஹாமேதாவியும் பரம ரஸிகருமாகையாலே இற்றைக்கும் ஸபையில் அபிமானத்தை விடாமல் பாதுகாத்து வருபவர். அடியேன் உபந்யாஸார்த்தமாகச் சென்னைக்குச் சென்று சிலமாதங்கள் வரையில் விடுதி விடுதியாகச் சில உபந்யாஸங்கள் நடத்தப்பட்டு வந்தன. பிறகு, ஸ்ரீ ராமாயணம் போன்ற பெரிய க்ரந்தமொன்று தொடங்க வேணுமென்று ஸபையார் கோரியிருந்த காலத்தில் இந்த உபந்யாஸ



ஸ்ரீமத் M. ஸுதர்சனமையங்கார் (M. D. Bros.) மதராஸ்.

நிர்ப்பந்தத்தில் நின்றும் விலகிக்கொள்ளவேணுமென்கிற எண்ணமுண்டாயிற்றடியேனுக்கு. இளமை தொடங்கியே அடியேன் பேரருளாளனுடைய அநுபவத்தில் பழுத்தவனுகையாலே, சென்னை நகரப் போக்குவரத்து அதற்கு மிகவும் இடையூறாயிருப்பதையும் அனேக மஹோத்ஸவங்களை யிழக்க நேருவதையும் நோக்கி இந்த நிர்ப்பந்தத்திலிருந்து விலகிக்கொள்ள விருப்பமுண்டாயிற்று. அந்த ஸமயத்தில் சில மஹான்கள் முன்னின்று "இந்த உபந்யாஸக்ரமங்கள் நீண்ட காலம் நடந்து வரவேண்டும்; முதலிலே இங்கு எழுந்தருளாமலே யிருந்தால் இப்போது எங்கள் கோரிக்கைக்கு ப்ரஸக்தியே யிராது; சில மாதங்கள் ருசிகாட்டியான பிறகு இனி இடையில் விலகிக்கொள்வது தகவே தகாது" என்று வற்புறுத்தி உபந்யாஸங்கள் தொடர்ந்து நடந்துவரச் செய்தார்கள். அப்படிப்பட்டவர்களில் மேலே குறித்த ஸ்ரீ ஸுதர்சனமையங்கார் முன்னணியில் நின்றவர். ஸ்ரீ காஞ்சியில் நம்பிள்ளை ஸன்னிதி ப்ரதிஷ்டாபனம் முதலான அபூர்வ விலக்ஷண க்ருத்ய விசேஷங்கள் நடைபெற வேண்டிய பகவத்ஸங்கல்பமிருந்தபடியாலே அடியேனும் அதற்கு உடன்படலாயிற்று. சென்னையில் பிரபல வியாபாரியாய் புகழுடம்புடன் விளங்கும் ஊரா ஸ்ரீ ராமுலு செட்டியாரென்பவரும் வெகு ஆதர விசேஷங்கள் காட்டி அபிமானித்திருந்தவர். அந்த செட்டியார் நீண்ட காலம் வாழ்ந்திருக்க வேண்டியவர் தைவ



சென்னை பிரபல வியாபாரி

ஊரா. ஸ்ரீ ராமுலு செட்டியார் (காலஞ் சென்றவர்.)

துர்விபாகத்தினால் அகாலத்தில் ஆசார்யன் திருவடிகளைச் சார்ந்து விட்டார். நம்முடைய உபந்யாஸ ஸபையில் அவர் பத்து வருஷகாலம் மட்டுமே அந்வயித்து அநுபவித்தார். பாடசாலை ஸம்பந்தமான கடன் தொல்லையினாலும் கவலையினாலும் நான் சென்னைக்குச் செல்ல நேர்ந்ததென்று முன்னமே தெரிவித்திருக்கிறேன். மேலே குறித்த ஸ்ரீ ராமுலு செட்டியார் அபேக்ஷா நிரபேக்ஷமாகக் கடன்களைத் தீர்த்துவைத்துப் பாடசாலையும் குறையற நடந்துவர ஏற்பாடுகள் செய்வித்தார். அவருடைய மஹோபகாரங்கள் ஒரு நாளும் மறக்கத் தகாதவை. கீழ் முதற்பகுதியில் பக்கம் 53ல் ஸேவை ஸாதிக்கின்ற மயிலை அட்வகேட் S. கோபால ஸ்வாமி ஐயங்காரென்பவர் மூன்று வருஷகாலம் சென்னை யுபந்யாஸ ஸபையை ஒரு க்ஷணமும் தவறாமல் அலங்கரித்து வந்த விதம் மிகவும் அதிசயிக்கத்தக்கது. எழுபதுக்கு மேற்பட்ட திருநக்ஷத்ரங்களாகியும் சிரமம் பாராமல் பலபல ஆப்தர்களுடன் வந்து சேருவர். சனிக்கிழமை மாலை அடியேன் மதராஸ் சென்று சேருவதற்குள் அங்கு எனது ஜாகையில் முன்னாடியே வந்திருந்து ஸேவை ஸாதிப்பர். அந்த ஸ்வாமியோடு பத்து நிமிஷம் பேசினால் அந்தப் பேச்சே உபந்யாஸத்திற்கு விஷயமளிக்கும். வீண்வம்புப் பேச்சாக ஓரக்ஷரமும் பேசார். அவரைக் காணும்போதெல்லாம் அடியேனுக்கு "ऋषिर्हि दीर्घश्रुत्तमः" என்கிற தைத்திரீயாரண்யக வாக்யமே நினைவுக்குவரும். பஹுச்ருதரென்கிற வ்யபதேசத்திற்கு அந்த ஸ்வாமி யொருவரே அர்ஹராவர். அவருடைய சரமகதி வெகு ஆச்சரியமானது; அதைத் தெரிவிக்கிறேன். அவர் மூன்று வருஷகாலம் மார்கழி மாதத்தில் தவறாமல் திருப்பாவை யுபந்யாஸங்களையும் அநுபவித்து வந்தார். மூன்றாவது வருஷம் அநுபவித்துக் கொண்டிருக்கையில் "மாலே மணிவண்ணா" என்கிற பாசுரத்தின் உபந்யாஸத்தை அன்றுகாலை கேட்டுவிட்டு அடியேனோடு கூடவே எனது ஜாகைக் கெழுந்தருளி "ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளை ஸேவித்ததாக ஞாபகமே யில்லை; எந்த யுகாந்தரத்தில் ஸேவித்திருப்பேனோ அறியேன்; மார்கழி நீராட்டம் அடியோடு ஸேவித்ததேயில்லை; இன்றிரவு புறப்பட்டுப்போய் இரண்டொரு நாளிருந்து ஸேவித்துவிட்டு * சிற்றஞ் சிறுகாலைக்கு இவ்விடம் வந்து சேர்ந்து விடுகிறேன்; நியமனம் தந்தருளவேணும்" என்று சொல்லிவிட்டு அன்றிரவே புறப்பட்டு இடையில் ஸ்ரீ ரங்கநாதனை ஸேவித்துவிட்டு ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் போனார் ஒரு நாள் பூர்த்தியாக அவ்விடத்தில் நீராட்ட வுத்ஸவம் ஸேவித்துவிட்டு இரவு எட்டு மணிக்கு, தாம் தங்கியிருந்த க்ருஹத்தின் மாடிமேல் சென்று ஏதோ அநுஸந்தானம் செய்துகொண்டு உலாவிக் கொண்டிருந்தார். உதவிக்காக உடனழைத்துக் கொண்டு போயிருந்த வொருவரும் கூடவே யிருக்கிறார். உலாவிக்கொண்டே யிருந்தவர் திடீரென்று படுக்கை போடச்சொல்லி அதில் சாய்ந்து "கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர், சோதிமணி மாடம் தோன்றுமூர், நீதியாய் நல்ல பத்தர் வாழுமூர், நான்மறைகளோதுமூர், வில்லிபுத்தூர் வேதக் கோனூர்" என்கிற பாசுரத்தை யநுஸந்தித்து விட்டு அடுத்த பாசுரம் ஆரம்பித்து "பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும்" என்னுமளவும் சொன்னவாறே அதே க்ஷணத்தில் திருநாட்டுக் கெழுந்தருளினார். இந்த ஸம்பவத்தை அப்போது வெகு ஆச்சரியமாகச் சொல்லிக்கொண்டார்கள். வாசகர்களே! இந்த ஸ்வாமி இன்னாரென்பதை மறந்திருக்கமாட்டீர்கள்; நம்முடைய எஸ். வரதாசார்ய ஸ்வாமியின் மாதுலர். இந்த மஹானுக்கு ஆண்டாளுடைய க்ருபாதிசயம் இங்ஙனே பரிபக்குவ மானதில் வியப்பொன்றுமில்லை. "ஆண்டாளை ஸேவித்து விட்டுச் சிற்றஞ் சிறுகாலைக்கு அவசியம் வந்து சேருகிறேன்" என்று ஸாதித்து எழுந்தருளினவராதலால் தவறாது வந்திடுவரென்று ஆதரத்தோடு எதிர்பார்த்திருந்த வடியேன் அன்று உபந்யாஸ ஸபையில் சென்று சேர்ந்து உபந்யாஸத்தை முடித்த வுடனே இந்த அத்யாஹிதச் செய்தியைக் கேட்க ப்ராப்தமாயிற்று. அந்த ஸ்வாமியின் வியோகத்தினால் உபந்

பிரஹ்மஸ்ரீ T. S. நடேச சாஸ்திரியார்
சென்னை அட்வகேட் (பரலோகவாஸி).

யாஸ ஸபையின் சோபை மிகவும் குன்றியதென்றே பலரும் சொல்ல நேர்ந்தது. மற்றும் பல ரஸிகர்களும் மேதாவிகளும் அட்வகேட்டுகளும் உபந்யாஸ ஸபையை அலங்கரித்தாலும் அந்த கோபாலஸ்வாமி ஐயங்காருடைய ஸ்தானத்தைப் பூர்த்திசெய்ய வல்லாராருமில்லை. அடியேன் அந்வயித்திருந்த அந்த உபந்யாஸ ஸபைக்கு பகவத் கதா ப்ரஸங்க ஸபையென்று பெயர். B. K. P. ஸபா என்று வழங்குவர். அந்த ஸபைக்கு ப்ரஹ்ம ஸ்ரீ T. S. நடேச சாஸ்த்ரியார், B.A.B.L. ப்ரபல அட்வகேட் அவர்கள் நெடுங்காலம் வைஸ் பிரஸிடெண்டாக இருந்து வந்தார். (காலஞ்சென்ற) M. முனுசாமி நாயுடு அவர்கள், (காலஞ் சென்ற) K. ஸ்ரீராமுலு நாயுடு அவர்கள் ஆகிய இருவரும் ஸெகிரிடெரிகளாக இருந்து வந்தார்கள். மேலே குறித்த நடேச சாஸ்திரியார் உபந்யாஸங்களுக்குத் தவறுது விஜயம் செய்வர். இவர் ஏழெட்டு வருஷங்களுக்கு முன்பு காலஞ் சென்றார். சிலமாதங்கள் படுக்கையிலிருந்தார். அதுவரைக்கும் ஒருவேளை தவறுமல் உபந்யாஸம் கேட்க வருவர். இவர்க்கு சைவப் பற்று ஸஹஜமாக இருந்தாலும் வைஷ்ணவத்வேஷம் சிறிதும் கிடையாது. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயங்களையும் இதிஹாஸங்களையும் கேட்க மிகவும் குதூஹலமுள்ளவர். ஒரு ஸமயம் திருமழிசை யாழ்வாருடைய வரலாறுகளை உபந்யஸிக்க நேர்ந்தபோது அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த இந்த சாஸ்த்ரியாருக்குச் சிறிது மனோவிகாரம் ஏற்பட்டது. அதனால் இரண்டொருவாரம் உபந்யாஸ கோஷ்டிக்கு வாராமலிருந்து பிறகு க்ரமேண வரத்தொடங்கினர். அப்போது அவர் என்னிடம் ஏகாந்தமாகச் சொன்ன சிலவார்த்தைகளை இங்குத் தெரிவிக்கிறேன். "திருமழிசை யாழ்வார் சரித்திரத்தை ஏற்கெனவே நான் கேளாதவனல்லேன்; என்னுடைய தமையனர் பஞ்சாபகேச சாஸ்திரியாரென்பவர் ஹரிகதா காலக்ஷேப நிபுணர். இதே தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில் அவரும் திருமழிசையாழ்வார் சரித்திரத்தை ஹரிகதா காலக்ஷேப முறையில் நாலைந்து தடவை சொல்லக் கேட்டிருக்கிறேன். பண்டிட் லக்ஷ்மணசார் அவர்களிடத்திலும் கேட்டிருக்கிறேன். அவர்கள் சிவபெருமானைப் பற்றிச் சிறிது குறைவாகச் சொல்ல நேருமிடங்களில் பாட்டுகளைப் பாடித் தளுக்காகப் போய்விடுவர்கள். தாங்கள் கற்பனையாக வொன்றும் சொல்லவில்லையென்பதும், உள்ளதையே சொல்லியிருக்கிறீர்களென்பதும் எனக்குத் தெரியாமையில்லை. ஆனாலும் என்னைப்போன்ற சைவப்பற்று உள்ளவர்களும் பலர்

இங்கு வந்து ஆனந்தமாகக் கேட்டுக்கொண்டிருப்பதால் எங்கள் தலை தொங்காத படிக்குப் பேசினால் நலமாயிருக்குமென்று ஸன்னிதானத்தில் விஜ்ஞாபனம் செய்து கொள்ளுகிறேன்" என்றார். அதை ஹிதவார்த்தையாகக் கொண்டேன். ஸபைகளில் பல மதஸ்தர்களும் சேருவதுண்டாகையாலே ஒருவர் மனமும் நோவாத படிக்குச் சொல்ல வேணுமென்று மேலே குறித்த S. கோபாலஸ்வாமி ஐயங்காரும் பலகால் சொல்லுவர். சில ஸமயங்களில் உத்ஸாஹ மிகுதியினால் ஆடம்பரமாகச் சொல்ல நேர்ந்துவிடும். எப்படியோ 25 ஆண்டுகள் கடத்தி விட்டேன்.

திருவாய்மொழியில் (2—2—4) * தேவுமெப் பொருளும் படைக்கப், பூவில் நான்முகனைப் படைத்த, தேவனெம்பெருமானுக்கல்லால், பூவும் பூசனையும் தகுமே * என்ற பாட்டின் ஈடு முப்பத்தாறாயிரத்திலே "[ பூவும் பூசனையும் தகுமே.] சிக்குத் தலையனுக்குப் பூத்தகாது ; பிச்சை யுண்ணிக்குப் பூசனை தகாது." என்கிற பங்க்தியுள்ளது. மணவாளமாமுனிகள் இவ்விடம் வரும்போது "இவ்வளவு பாவனமான இம் மஹாக்ரந்தத்தில் இந்த பங்க்தி இருக்கவேண்டியது அவசியமோ?" என்று ஸாதித்து, உடனே "இதைச் சொல்ல நாமார்?" என்றும் ஸாதிப்பர் என்று பெரியார் சொல்லக் கேட்டதுண்டு. மணவாளமா முனிகளுக்கென்று அஸாதாரணமாக வாய்த்த ப்ரக்ருதியை நம் போன்ற பாமரர்கள் அநுபாஷிக்கவும் அர்ஹரோ? ரஜஸ்தமோ குணங்கள் ஈஷத்தும் தலைகாட்டாத அவருடைய திவ்ய ஸூக்திகளில் ஸததபரிசயம் பண்ணினாலும் அந்த நடை எழுத்திலும் வாக்கிலும் புகுவது அரிதன்றோ. ததீயாராதனை பண்ணி எல்லாரையும் ஸமரூபமாக த்ருப்தி பண்ணி வைப்பதில் எவ்வளவு அருமையுண்டோ, அவ்வளவு அருமையுண்டு பல மதத்தினர் கூடும் ஸபைகளில் பேசிப் பலரையும் ஸமரூபமாக மகிழ்விப்பதில். மேலே குறித்த நடேச சாஸ்திரியாரவர்கள் என்னைப்பற்றி ஒருஸமயம் ஆங்கிலத்தில் எழுதிப் பிரசுரம் செய்திருப்பதாவது—

Although our Swamigal is born in and is an ardent exponent of the Sri Vaishnava Sampradayam he has absolutely no prejudice against others. In fact, the Swamigal's habit is to deliver upanyasams which would be liked and eagerly enjoyed by people of all sects. I believe that the present publication will be greatly useful in making us understand the esoteric Thathvas of Sri Vishnava Sampradayam. Bhaktas are aware that any number of such books cannot do full justice to the Swami's upanyasams. It is to be hoped that by the Grace of God, several such books will come out in the future. Our Swamigal also should have the full span of life and glorify our sabha for a long time. Bhagavad Bhakthi and Bhagavatha Bhakthi should increase and Dharma should get firmly established. This is my humble prayer.

இதன் மொழி பெயர்ப்பு வருமாறு ;—

நமது ஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் தோன்றி அந்த ஸம்பிரதாயத்தையே ப்ரவசனம் செய்பவரானாலும் இதர ஸம்பிரதாயங்களில் பகையோ பழிப்போ சிறிதும் உடையவரன்று ; எல்லா மதத்தினர்களும் விரும்பி ஆவலோடு கேட்கும்படியான உபந்யாஸங்களையே ஸ்வாமி செய்வது வழக்கம். வைஷ்ணவ ஸம்பிரதாயத்திலுள்ள மருமமான தத்துவங்களை யுணருவதற்கு ஸ்வாமியின் நூல்கள் மிகவும் உபயோகமானதென்று என்னுடைய நம்பிக்கை. ஸ்வாமிகளின் உபந்யாஸங்கள் எத்தனை புத்தகங்கள் வெளியிட்டாலும் முடியாதவையென்பது பக்தர்களுக்குத் தெரியும். பகவத் க்ருபையினால் இப்படியே அநேக புஸ்தகங்களும் மேன்மேலும் வெளிவரவேணும். ஸ்வாமிகளும் தீர்க்காயுள் வாய்ந்து நீண்ட காலம்

நமது சபையைச் சிறப்பிக்கவேணும். உலகில் பகவத் பக்தியும் பாகவத பக்தியும் ஓங்கி தருமமும் நிலைபெற வேணும். இதுவே எனது பிரார்த்தனை".



உயர்திருவாளர் A. ஷண்முக ஸுந்தர முதலியாரவர்கள்
சென்னை B. K. P. ஸபா தலைமைக் காரியதரிசி

மேலே குறித்த சென்னை யுபந்யாஸ ஸபையில் பழைய ஸெகிரிடெரிகள் காலஞ்சென்ற பிறகு ஸ்ரீமான்களான A. ஷண்முக சுந்தர முதலியாரவர்களும் K. ஸஞ்சீவி நாயுடு அவர்களும் அந்த ஸபைக்கு ஸெகிரிடெரிகளாக நியமிக்கப்பட்டார்கள். இவர்களுள் முதலியாரவர்கள் ஸபையின் காரியங்களை முன்னின்று வெகு திறமையாகக் கவனிப்பவர். இவர் பெரிய பதவியில் உத்யோகம் பார்த்தவர். நெடுநாள் ஹானரரி ப்ரெஸிடென்ஸி மேஜிஸ்ட்ரேட் ஸ்தானத்தையும் பரிபாலித்தவர். தற்காலம் இரண்டு மூன்று வருஷகாலமாக என்னுடைய உபந்யாஸங்கள் மேலேகுறித்த B K. P. ஸபா மூலமாகவல்லாமல் வேறொருஸபையின் மூலமாகப் பழைய இடத்திலேயே [தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலிலேயே] நடந்து வருகின்றனவாகையாலே இப்போது அந்த B. K. P. ஸபைக்கும் எனக்கும் ஸம்பந்த மில்லாமற்போனலும் பல வருஷங்கள் என்னை பஹுமுகமாக வாதரித்த அந்தஸபையினிடத்திலும் அந்த ஸபையின் ஸெகிரிடெரிகளிடத்திலும் நான் இடையறாத நன்றியறிவு கொண்டவனே. மேலேகுறித்த ஷண்முகசுந்தர முதலியாரவர்களின் பெருமேன்மையும் பெருமதிப்பும் மிகச் சிறந்தவை. அந்த ஸபையின் மூலமாகவும் அந்த ஸெகிரிடெரிகள் மூலமாகவும் எனக்கு ஏற்பட்ட அதிசயங்கள் என்னை எஞ்ஞான்றும் நன்றியறிவுடையவனாகச் செய்யவல்லவை.

அந்த ஸபையின் மூலமாக நடந்த என்னுடைய உபந்யாஸங்கள் மொத்தம் மூவாயிரத்திற்கு மேற்பட்டவையென்று கணக்கெடுக்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீராமாயணோபந்யாஸங்கள் இரண்டு பர்யாயம் நடந்து இரண்டு பட்டாபிஷேகங்கள் நடத்தப்பட்டன. ஸ்ரீபாகவதம் ஒருமுறை பூர்த்தியாகி பத்து வருஷங்களுக்கிப்பால் மறுமுறை யாரம்பித்து நடந்து வருகிறது. ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னம், சதுச்ச்லோகி, அஷ்டச்லோகி, அமலனாதிபிரான், திருமந்த்ரார்த்தம், ஆசார்யஹ்ருதயம், பகவத்கீதை—இவற்றின் உபந்யாஸங்கள் பூர்த்தியாகியிருக்கின்றன. பகவத் விஷயம் ஸ்ரீவசநபூஷணம் இவற்றின் உபந்யாஸங்கள் நடந்து வருகின்றன. இடையிடையில் ஸமய விசேஷாநுகுணமாகப் பல உபந்யாஸங்கள் [கைசிகமாஹாத்மியம் போன்றவை] நைமித்திகங்களாக நடந்திருக்கின்றன. 1936-ஆம் வருஷத்திலிருந்து ஞாயிற்றுக்கிழமைதோறும் காலை வேளையில் பகவத் விஷயோபந்யாஸம் நடத்துவதென்று ஆரம்பித்து திருப்பல்லாண்டும் கண்ணிநுண் சிறுத்தாம்புமான பிறகு திருவாய்மொழி தொடங்கி இடையறாமல் நடந்து வருகிறது. இப்போது ஏழாம்பத்தில் *கற்பாரிராமபிரானை யாரம்பிக்க வேண்டிய ஸந்தர்ப்பத்திலுள்ளது. ஆறும்பத்து முடிவில் *உலகமுண்டபெரு

வாயன் நடந்து கொண்டிருந்தபோது “இப்பதிகம் திருவேங்கடமுடையான் விஷயமாகையாலே திருமலையில் கோஷ்டியாய்ச் சென்று அங்கே சாத்துமுறை நடத்த வேணும்” என்று பக்தவர்க்கங்கள் அபிப்ராயப்பட அப்படியே நடந்தேறியது.

உலகமுண்டபெருவாயா உலப்பில்கீர்த்தியம்மானே*
நிலவுஞ்சுடர்சூழொளிமூர்த்தி நெடியாயடியேனாருயிரே*
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே*
குலதொலடியேனுன்பாதம் கூடுமாறுகூறாயே.



திருமலையில் நடந்த *உலகமுண்டபெருவாயன் சாத்துமுறை கோஷ்டி

அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா!*
நிகரில்புகழாயுலகம்மூன்றுடையாய் என்னையாள்வானே!*
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே!*
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.

அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர்வாழ்மினென்றென்றருள்கொடுக்கும்*
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன்*
முடிப்பான்சொன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும்*
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள் நிலாவுவரே.

இதுவும் திருமலையில் நடந்த சாத்துமுறை கோஷ்டி



உலகப் பிரசித்தரான ஸ்ரீமான் ,K. வெங்கடஸாமி நாயுடு B.A. B.L. (மாஜி மினிஸ்டர்) அவர்கள் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் சிறந்த நிர்வாஹகராகையாலே அவர் குடும்பத்துடன் திருமலைக்கு வந்திருந்து இந்த * உலகமுண்ட பெருவாயன் சாத்து முறையை வெகு சிறப்பாக நடத்தி வைத்தார். இந்த சாத்துமுறை திருவேங்கடமுடையானுடைய மூலஸ்தானத்திலேயே நடக்கப் போகிறதென்றும், அபூர்வமான விசேஷ மரியாதைகள் நடந்து விடுமென்றும் ப்ரமித்த சில விஷமிகள் மேலதிகாரிகளுக்கு மஹஜர்நாமா எழுதிக்கொண்டு இதைத் தடை செய்ய முயன்றார்கள். அவர்களுடைய ப்ரமத்திற்குச் சிறிதும் விஷயமில்லை. இது உபந்யாஸ க்ரமமேயொழிய ஸன்னிதிகளில் நடப்பதுபோன்ற சாத்துமுறைக்ரமமன்று; இது மூலஸ்தானத்தில் நடத்தமுடியாது. ஸன்னிதி யதிகாரிகளெல்லாரும் உடனிருந்து த்வஜஸ்தம்பத்தருகில் பெரிய திருமண்டபத்தில் நடப்பித்தார்கள். அபூர்வமான விசேஷ மரியாதைகள் பெறவேணுமென்கிற ஆசை ஹ்ருதயத்தில் ஒரு மூலையிலுமிருந்ததில்லை. ஆனாலும் அதிகாரிகள் பரமப்ரீதியுடன் ஔசித்யத்தை

மீறுமல் திருவேங்கடமுடையானுடைய பரமாநுக்ரஹத்தைப் பெறுவித்தார்கள். மேலே ப்ரஸ்தாவித்த K. வெங்கடஸாமி நாயுடு அவர்களின் குடும்பத்தைப்பற்றி ப்ராஸங்கிகமாகச் சில வார்த்தைகள் எழுதலாகிறது. சென்னை அப்பா அண்டு கம்பெனியாரென்று இவர்களுக்கு ப்ரஸித்தி. இவருடைய தகப்பனர் ஸ்ரீமான் K. பாஷ்ய நாயுடு என்பவர் 30 வருஷங்களுக்கு முன்பு ஆசார்யன் திருவடி சார்ந்தார். அவருடைய ஸஹோதரரான K. நாராயணப்ப நாயுடுகாரு என்பவர் பல வருஷங்களாகவே நம்முடைய உபந்யாஸ ஸபையில் ஸஹ குடும்பமாக ஈடுபட்டவர். இவர் சிலவாண்டுகள் ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானுர் ஸன்னிதியில் தர்மகர்த்தாவாக விளங்கிப் புகழ்பெற்றவர். அவ்விடத்தில் திருவவதாரஸ்தலத்தில் மஹாமண்டப நிர்மாணம் இவருடைய சாச்வத கீர்த்தித்வஜமாக விளங்கிவருகிறது. இவருடைய தமையனர் குமாரரும் ஸ்ரீ வேங்கடஸாமி நாயுடுவின் ஸஹோதரருமான ஸ்ரீமான் K. வெங்கடராமாநுஜுலு நாயுடு ஸ்ரீபெரும்பூதூர் தேவஸ்தான தர்மகர்த்த பதவியை நிர்வஹித்து வருவதோடு உத்தம ஸ்ரீவைஷ்ணவ மணியாக விளங்கி வருகிருர். இவர்கள் யாவரும் சென்னை யுபந்யாஸ ஸபைக்குப் பரிவர்கள். இது நிற்க.



சென்னை அப்பா அண்டு கம்பெனித் தலைவர் ஸ்ரீமான் கே. நாராயணப்ப நாயுடு அவர்கள் (1956 ஏப்ரல் மாதத்தில் ஆசார்யன் திருவடி சார்ந்தவர்)

அதன் பிறகு ஏழாம்பத்தில் இரண்டாவது பதிகம் *கங்குலும் பகலும் உபந்யாஸம் முடியும்போது அதன் சாத்துமுறை திருவரங்கம் பெரியகோயிலில் சென்று நடத்த வேணுமென்று பக்தவர்க்கங்கள் அபிப்ராயப்பட அதுவும் அப்படியே நடைபெற்றது. முதல்நாள் ஸாயங்காலமும் மறுநாள் காலையுமாக இரண்டு வேளைகளில் பெரிய திருவடி மஹாமண்டபத்தின் முன்னணியில் ஸ்தலாசார்ய புருஷர்கள் யாவரும் உடனிருந்து நடத்திவைத்தார்கள். அங்கிருந்து திருமாலிருஞ் சோலைக்குச் சென்று, ஆண்டாள் மனோரதித்த * நாறுநறும்பொழிற் பாசுரப்படியே நூறு தடாவில் வெண்ணெயும் நூறுதடாநிறைந்த அக்காரவடிசிலும் கண்டருளப்பண்ணி வரவேணுமென்று ஏற்கெனவே விரும்பி அதற்குரிய விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சென்னை பக்தமணிகள் யாவரும் இதில் அளவுகடந்த ஊக்கங்கொண்டு அபரிமிதமான ச்ரத்தையைக் காட்டினார்கள். மதுரையில் நெடுநாளாக அடியேனுக்குப் பரமாப்தர்களாகவும், “அபிமானதுங்கன் செல்வனைப் போல” என்றதற்கு ப்ரத்யக்ஷநிதர்சந பூதர்களாகவும் விளங்காநின்ற மஹான்களிருவர், மேலே ப்ரஸ்தாவித்த திருமாலிருஞ் சோலைக் கைங்கரியத்தை வெகு சிறப்பாக

நடத்தி வைத்தவர்களாதலால் அந்த மஹான்களிருவரையும் அடியேன் நிச்சலும் நினைப்பவன் அவர்களைப் பற்றி விரிவாக எழுத வேண்டிய விசேஷங்கள் பலவுண்டு. அது வேறு ப்ரகரணத்திலாகும். அவ்விருவருடைய திருநாமம் 1. ஸ்ரீ உவே. R. நரஸிம்ஹய்யங்கார்ஸ்வாமி. 2. ஸ்ரீ உவே S. ஸுந்தர ராஜய்யங்கார் ஸ்வாமி. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமிக்கு 'ராவ் பஹதூர்' என்கிற லௌகிக பிருதமும் 'மநீஷிமாந்ய' என்கிற வைதிகபிருதமுமுண்டு. இவர் நெடுநாள் வக்கீலாகவிருந்து இப்போது (எண்பது திருநக்ஷத்ரமாகையாலே) விச்ராந்தி பெற்றிருப்பவர். மதுரை ஸத்ஸம்ப்ரதாய ஸபைக்கு நிரந்தர அக்ராஸநாதிபதியாக எழுந்தருளியிருப்பவர் இந்த ஸ்வாமி. (அடுத்த பக்கத்தில் இருப்பவரான) ஸ்ரீமான் S. ஸுந்தரராஜய்யங்கார் அந்த சபைக்கு நிரந்தரகார்யதர்சியாயிருப்பவர். இவ்விருவரும் பெருமுயற்சிகள் கொண்டதனாலேயே திருமாலிருஞ்சோலையில் வெண்ணெயும் அக்காரவடிசிலும் அழகர் அதிபோக்யமாக அமுதுசெய்தருளவும் அபரிமித கோஷ்டிகள் அநுபவித்துக்களிக்கவும் ப்ராப்தமாயிற்று.



ஸ்ரீவே. ராவ்பஹதூர். மநீஷிமாந்ய. R. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமி, மதுரை.

இதற்குப்பிறகு உபந்யாஸஸபை வேறுபட்ட விஷயத்தைச் சுருக்கமாக இங்குத் தெரிவிக்கிறேன். என்னுடைய உபந்யாஸங்களை அன்போடும் ஆதரவோடும் நடப்பித்து வந்த B. K. P. ஸபையார் பலவகைச் செலவுகளையும் நிர்வஹித்துக்

கொண்டு போவதற்காக டிக்கெட்டு நிபந்தனைவைத்து உபந்யாஸங்களை நடத்தி வந்தார்கள். இருபத்து மூன்று வருஷகாலம் டிக்கெட்டு நிபந்தனையோடுதான் நடந்தது. இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன் எனக்கு ஒரு அபிப்பிராயம் தோன்றியது—டிக்கெட்டு நிபந்தனையை நிர்ப்பந்தமாக வைக்காமல் அபேக்ஷையுள்ள அகிஞ்சனர்களும் கேட்கும்படி நடத்திவர வேணுமென்று. ஆனால் இவ்வபிப்ராயம் 23 வருஷமாக உண்டாகாமல் திடீரென்று அப்போது உண்டானதற்கு என்ன காரணமென்று சிலர் கேட்கக்கூடும். இதைப்பற்றி நானே ஸபையில் விளக்கமாகத் தெரிவித்தேன். அதாவது, *கங்குலும்பகலின் சாத்துமுறையை பக்தவர்க்கங்களெல்லாரும் கூடி ஸ்ரீரங்கத்திலே ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதி முன்னிலையிலே இரண்டுநாள் நடத்தி வைத்தகாலத்தில் அடியேன் ஸ்ரீரங்கநாச்சியாரை ஸேவிக்கப் போனபோது அங்கிருந்த அந்தரங்க கைங்கரியபரர்கள் மிகவும் கொண்டாடி, "இங்கே இரண்டுநாள் வெகு ஆனந்தமாக அநுபவித்தோம்; நாங்கள் மதராஸுக்குவந்து ஸ்வாமியின் காலக்ஷேபங்களைக்கேட்க விரும்பினால் அது எங்களுக்கு ப்ராப்தமாகிறதில்லை; காசுகொடுத்து டிக்கெட்டு பெற்றுக் கொள் என்கிறார்கள். ஸ்வாமி இவ்விடத்தில் வந்து ஸாதித்ததுபோல அங்கேயும் யாவரும் அநுபவிக்கும்படி உபந்யாஸங்கள்செய்தால் ஸ்ரீரங்கநாச்சியார் திருவுள்ளத்திற்கு மிகவும் உகப்பாயிருக்கும்" என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடனே அடியேனுக்கு இது ஸ்ரீரங்கநாச்சியாருடைய நியமனம் என்று பட்டது. பிறகு சென்னையில் வந்து உபந்யாஸம் செய்யும்பொழுது இதைப் பலருமறிய ஸபையில்



ஸ்ரீமாந்.உ.வே. S. ஸுந்தரராஜய்யங்கார் (வக்கீல்)
மதுரை.

கூறி ஸபையதிகாரிகளிடத்திலும் தெரிவித்துக் கொண்டேன்; டிக்கெட் இருந்தால்தான் உபந்யாஸங்களுக்கு வரலாமென்கிற நிர்ப்பந்தம் கூடாது; Free ஆகவும் விடவேண்டுமென்று. ஸபை யதிகாரிகளுக்கு அது ஸௌகரியப்படாததால் 2, 3 மாதங்கள் உபந்யாஸம் நின்றிருந்தது. பிறகு பக்தவர்க்கங்கள் மிகவும் வருத்தமடைந்து வேறு ஸபையையாவது ஸ்தாபித்து அதன் மூலமாகப் பழையபடியே உபந்யாஸங்களைக் குறைவில்லாமல் நடப்பித்து வர வேணுமென்று முயன்று வந்தார்கள். அதன் பயனாக ஸத்காலக்ஷேபஸபா என்றொரு புதிய ஸபை ஸ்தாபிக்கப்பட்டது. அதன் மூலமாக 1954ளு அக்டோபர்மீ முதற்கொண்டு அடியேனுடைய உபந்யாஸங்கள் முன்போலவே தொண்டைமண்டலம் ஸ்கூல் ஹாலிலேயே சனி ஞாயிறுகளிலும், ஸமயாநுகுணமாக இதர கிழமைகளிலும் நடத்தப்பட்டு வருகின்றன. இப்போது என்னை ஆதரிக்கிற ஸபை மட்டும் வேறேயொழிய உபந்யாஸம் செய்யுமிடம் அதுவேதான். மார்கழி மாதத்தில் மட்டும் சில ஸௌகரியங்களை நோக்கி வேறு ஹால்களில் திருப்பாவை யுபந்யாஸம் நடத்தி வைக்கப்பட்டது. மற்றபடி வாரந்தோறும் நடைபெறும் உபந்யாஸங்கள் பழையபடியே தொண்டைமண்டலம் ஸ்கூல் ஹாலிலேயே நடந்து வருகின்றன. வ்யவஸ்தையில்லாமல் கண்டவர்களும் கண்டபடி வந்து புகுந்து அதிக்ரமங்கள் செய்யாமைக்காகவும், ஸபையின் காரியங்கள் ஒழுங்காக நடைபெற்று வருவதற்காகவும் இப்போதும் பிரவேசச்சீட்டு நிபந்தனையுண்டு. ஆனால் கேட்க விருப்பமுள்ளவர்கள் தடையின்றி உள்ளேபுக அனுமதிக்கப்படுகிறார்கள்.



ஸ்ரீ V. ராஜகோபாலாசாரியர், M.L.
ஸத்காலக்ஷேப ஸபையின் பிரஸிடெண்ட்

புதிய ஸபையாகிய இந்த ஸத்காலக்ஷேப ஸபைக்கு ஸ்ரீமான் உவே. V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமி M.L. [சென்னைப் பிரபல அட்வகேட்] நிரந்தர அக்ராஸநாதிபதியாக அமர்ந்திருக்கிறார். இந்த ஸ்வாமியின் ஸ்வக்ராமம் திருக்கண்ணபுரத்திற்கு ஸமீபத்திலுள்ள உபய வேதாந்தபுரம். இந்த ஸ்வாமி இருபது வருஷங்களுக்கு மேலாகவே நம்முடைய உபந்யாஸ கோஷ்டிக்குத் தவறாமல் எழுந்தருள்பவர்; ஆஸ்திகாக்ரேஸரர். நம் பூர்வாசார்ய திவ்ய ஸூக்திகளில் ஆழ்ந்த அவகாஹனமுள்ளவர். இந்த ஸ்வாமியின் அக்ராஸனாதிபத்யத்தில் நடந்து வருகின்ற ஸத்கால

க்ஷேப ஸபையின் நன்மைகளைப்பற்றி நாம் இங்கு விவரித்தெழுத வேண்டியதுண்டோ? இரண்டு மஹான்கள் வைஸ்பிரஸிடெண்டு ஸ்தானத்தில் அமர்ந்திருக்கின்றார்கள். 1. ஸ்ரீமான் G. முஸலப்பரெட்டியார், அட்வகேட். 2. ஸ்ரீமான் நாதெள்ள ஸம்பத்து செட்டியார், பிரபல வியாபாரி. இவ்விருவருங்கூட பழைய அபிமானிகளே. இவர்களுள் முஸலப்ப ரெட்டியார் பலவருஷங்களாக உபங்யாஸ கோஷ்டியை இடையறாது அநுபவித்து வருபவர். தவிர, பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளில் ஆழ்ந்த அவகாஹனமுள்ளவர். இதிஹாஸ புராணங்களையும் வெகு ஊக்கத்துடன் ஆராய்ச்சிசெய்பவர். இவர் தொண்டைமண்டலம் ஸ்கூல் வாசலிலேயே க்ருஹமுள்ளவராதலாலும் உபங்யாஸங்களை விடாமல் அநுபவிக்க இவர்க்கு அதிக ஸௌகரியமுள்ளது.

ஸ்ரீமான் கொஞ்சேடி ஸுப்ராயலு செட்டியார் இந்த ஸபைக்குத் தலைமைக் கார்யதர்சியாக இருந்து வருகிறார். ஸ்ரீமான் V. R. எதிராஜ செட்டியென்பவர் மற்றொரு காரியதர்சியாக இருந்து வருகிறார். இவ்விருவரும் சென்னையில் என்னுடைய உபங்யாஸம் ஆரம்பமானது முதற்கொண்டே அந்வயித்திருப்பவர்கள். ஸ்ரீமான் P. N. துரைஸாமி நாயுடு என்பவர் இந்த ஸபைக்கு தனாதிகாரி ஸ்தானம் வஹிப்பவர். இவரும் ஆதியிலிருந்தே உபங்யாஸ கோஷ்டியில் அந்வயித்திருப்பவரே. மற்றும் பல மஹான்களும் இந்த ஸபைக்கு உறுப்பினராக அமைந்திருக்கிறார்கள். நேற்று மார்கழி மாதத்தில் திருப்பாவை யுபங்யாஸத்திற்கு வெள்ளிவிழாக் கொண்டாட்டம் நடைபெற்றபோது இந்த ஸபையின் அங்கத்தினர் யாவரும் கூடியிருந்த குழுவின் உருவப்படம் அடுத்த பக்கத்தில் விளங்குகின்றது. அதில் யாவரும் காணத்தக்கவராவர். அவர்கள் யாவரும் ப்ரஸித்தர்களான பக்தமணிகளாதலால் அவர்களைப்பற்றி இங்குத் தெரிவிக்க வேண்டியதென்னவிருக்கிறது. அவர்களெல்லாரும் நீடூழிவாழ்ந்து பகவத் பாகவத ஆசார்ய பக்தி ஸம்பத்தை நாடோறும் அபிவிருத்தி செய்துகொண்டு ஸத்காலக்ஷேபபரர்களாயிருந்துவரவேண்டுமென்று ஆசாஸிக்கிறோம். ஸ்ரீமான் கராலபாடி. ராதாக்ருஷ்ணய்யா என்பவர் மிகச் சிறந்த அபிமானி. அவரைப்பற்றித் தனிப்பட எழுதவேண்டும்.



ஸ்ரீமான். ஸி. ஸுப்ராயலு செட்டி
ஸத்காலக்ஷேப ஸபையின் ஸெக்ரிடெரி



புதிதாக ஸ்தாபிக்கப்பட்ட ஸத்காலக்ஷேப ஸபையின் மெம்பர்களின் ஸமாஜம்

உபந்யாஸ ஸபையில் வேற்றுமை விளைந்திருக்க வேண்டியதில்லை. "दुर्विज्ञानस्वहृदयमहो दैवमत्र प्रमाणम्—துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்" என்கிறபடியே ஆர்க்குமறிவரிதான எம்பெருமான் திருவுள்ளத்தினாலேயே விளங்கததத்தனை. ஸபை வேறுபட்டாலும் ஸ்தலம் வேறுபடாமல் நடந்து வருவது குறிக்கொள்ளத்தக்கது. 1931-ஆம் ௵ முதலாக, எந்த நாட்டிலுள்ளவர்களும் பெரும்பாலும் இந்த உபந்யாஸ மண்டபத்திற் பிரவேசித்து ச்ரவணம் செய்தவர்களேயாவர். "இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும்" என்று பெரியாழ்வார் ஸாதிக்கிறபடி ஆஸேதுசீதாசலமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் தமிழ்ப் பாஷையறியாதவர்களுங்கூட அனேகமாய் ச்ரோத்ருகோடியில் அந்வயித்துப் போவர்கள். திருவல்லிக்கேணியில் ஸுப்ரஸித்தராயிருந்த ஸ்ரீமத் M. O. பார்த்தஸாரதி ஐயங்காருடைய மைத்துனர் (Late) ஸ்ரீ உவே. அளசிங்கராசாரியர் ஸ்வாமி அனேக வருஷங்கள் இவ்வுபந்யாஸ மண்டபத்திற்கு வந்து கொண்டிருந்தார். அப்போது அந்த ஸ்வாமி அடிக்கடி ஒரு வார்த்தை சொல்லுவர்—"த்வீபாந்தரங்களில் தோன்றின பாச்சாத்யர்களாயிருந்தாலும் அவர்களுங்கூட இந்த ஸபா மண்டபத்தில் தங்கள் வாழ்நாளில் ஒரு நாளாவது புகுந்து புறப்பட வேண்டும்" என்று. இப்படி ப்ரேம பரவசர்களாய்ப் பல பெரியோர்கள் பேசின பேச்சுக்கள் பலபல. அப்போதிருந்த பெரியோர்களில் ஏறக்குறைய நூறு மஹான்கள் நாளடைவில் காலகதி யடைந்து விட்டார்கள்.

உத்தமாச்ரமியான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. இளங்காடு ஸ்வாமி யென்பவர் காஞ்சியில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தார். [இந்த ஸ்வாமிக்கு ரங்கூன் ஜீயர்ஸ்வாமி யென்று ஒரு ப்ரக்யாதியுண்டு. ப்ரத்யபிஜ்ஞைக்காக இது தெரிவித்தபடி.] அந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்திலிருந்தே மிகவும் பரிசிதராகையாலே நெருங்கிப்பழகுவதுண்டு. அவர் அடிக்கடி ஸாதித்துக் கொண்டிருப்பர்-"அண்ணா! ஒரு நாளைக்கு என்னை சென்னைப்பட்டணத்து உபந்யாஸ மண்டபத்தில் கொண்டுபோய் உடகார வைக்க வேணுமே" என்று. அதற்கு அடியேன் ஒன்றும் பதில் சொல்லாமலே யிருந்துவந்தேன். ஒரு ஸமயம் அந்த ஸ்வாமி சென்னை மயிலாப்பூரிலுள்ள சில பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி மயிலைக்கு எழுந்தருளும்படியாயிருந்தது. அபபோது மார்கழி மாதம். திருப்பாவையுபந்யாஸம் தினப்படி மாலைவேளைகளில் நடந்து கொண்டிருப்பதைத் தெரிந்துகொண்டு ஸதுபாயத்தினால் அவ்விடத்திற்கு ஸஹாயராய் எழுந்தருளிவிட்டார். முன்னாடி தெரிவித்தருளாமையால ஆஸனஸமவிதாநம் ஒன்றும் பண்ண முடியாமலிருந்தது. பரம ஸௌலப்யததாலே ஒரு நாற்காலியிலே வீற்றிருந்தார். உபந்யாஸம் முடிந்தபிறகு ஸ்ரீ ஸ்வாமி ஸாதித்த வார்த்தைகள் வெளியிடத்தகாதவை. ஆயினும் அவர் நெஞ்சுகனிந்து ஸாதித்தவை யென்னுங் காரணத்தினால் அவற்றைச் சுருக்கமாக இங்குத் தெரிவிக்கிறேன்.

இளங்காடு யதீந்த்ரஸ்வாமி சென்னைஸபையில் ஸாதித்த வார்த்தைகள்—

"அண்ணாவை பூர்வாச்ரமத்திலிருந்தே யறிவேன்; இவர் வித்யார்த்தியாய் புஸ்தகத்தைக் கையிலெடுத்துக்கொண்டு ஸந்நிதிவீதியில் போகும் போதெல்லாம் நான் ப்ரேமத்துடன் பார்த்தவன். எனக்கும் இவர்க்கும் வயதில் 15, 20 வருஷம் ஏற்றத்தாழ்வு உண்டு. ஆனால் இளமையில் அடிக்கடி நான் என்ன நினைக்கிற வழக்கமென்றால் 'நாம் இவரைவிட தாழ்ந்த வயதாயும் பெண்ணாயும் பிறவாமற் போனோமே' யென்று நினைப்பது வழக்கம். இவரைக் கணவனாகக் கொள்ளும்படியான ஒரு பெண்மணியாய்ப் பிறவாமல் போனோமே யென்று மிகவும் குறைப்பட்டிருந்தேன். இங்கே உபந்யாஸ மண்டபத்திற்கு வந்தபிறகு என்மனத்தில் தோன்றியதையும் ஸத்தியமாக உங்களிடம் சொல்லுகிறேன்,

ஒரு செட்டியாராகவோ நாயுடுவாகவோ முதலியாராகவோ இந்த பேட்டையில் பிறவாமற்போனோமே யென்கிற குறைதோன்றிற்று, பிராமணனாய்ப்பிறந்தால் உபந்யாஸம் மட்டும் கேட்டுப் போவேன்: மேலே சொன்ன ஜாதிகளில் பிறந்தால், இவருக்கு இங்கே இரண்டு பக்கத்திலும் திருக்கச்சி நம்பி கைங்கரியம் செய்கிறார்களே, அது செய்ய பாக்கியம் பெறுவேன். ப்ராஹ்மண ஜன்மம் அஹங்கார ஜன்ம மல்லவா? கைங்கரியம் செய்ய ருசியுண்டாக மாட்டாதே?" இப்படி அநுபாஷிக்கவும் தகாத வார்த்தைகளையே மேன்மேலும் தொடர்ச்சியாக அரைமணிகாலம் ஸாதித்துக்கொண்டு போனார். அப்போது அங்கு என் திருத்தாயார் முன்னணியில் உட்கார்ந்திருப்பதைக் கடாக்ஷித்துவிட்டார். உடனே 'அம்மா, அலமேலுவா?' என்று ஆரம்பித்து ஏதேதோ ஸாதித்தார். அப்போது அந்தஸ்வாமியினுடைய ப்ரேமத்தின் கனத்தைக் கண்டு யாவருமே வியந்தார்கள். அந்த ஸ்வாமி மறுநாளே வேலூருக்கு எழுந்தருளிவிட்டார். அவ்விடத்தில் புராண ப்ரவசனத்திற்காக பக்தர்களால் அழைக்கப்பட்டு அங்கே சென்று சேர்ந்து சில வருஷங்கள் ஸ்ரீராமாயண ப்ரவசனம் செய்து கொண்டிருந்தார். அங்கே போய்ச்சேர்ந்தவுடனே அங்குள்ள பெரியமனிதர்களிடத்தில் அடியேனைப்பற்றி விசேஷமாக ஸாதித்து "கிழவனான நான் இங்கே ப்ரவசனம் செய்வது கிடக்கட்டும்: காஞ்சீபுரம் அண்ணாவை இங்கே வரவழைத்து அவரிடத்தில் நீங்கள் கேட்கவேணும்" என்று ப்ரரோசனம் செய்தார். "बोद्धारो मत्सरग्रस्ताः —போத்தாரோ மத்ஸரக்ரஸ்தா:" என்று பர்த்ருஹரி சொன்னபடி, படித்தவர்களுக்கு தாமே மேன்மைபெற வேணுமென்கிற விருப்பமும் இதர பண்டிதர்களை இழித்துரைப்பதும் உலகில் பெரும்பான்மையான இயல்பு. இத்தகைய துர்க்குணத்தை அந்தமஹாஸ்வாமி அறவே



வேலூரில் வெகுகாலம்
போலீஸ் டெப்டி ஸூப்ரண்டெண்டாக
இருந்த ஸ்ரீரங்கம். ராஜகோபாலய்யங்கார்.
(வைகுண்டவாஸி.)

அகற்றினவர் என்கிற மகிழ்ச்சியினால் இங்கு இந்த விஸ்தரம் கொள்ளப்பட்டது. அந்த ஸ்வாமி வேலூரில் அடியேனைப்பற்றிச் செய்தருளின ப்ரசாரத்தினால் நேர்ந்த நன்மைகளை ஸம்க்ஷேபமாகத் தெரிவிக்கிறேன். அப்போதுவேலூரில் ஸ்ரீரங்கம் உவே. ராஜகோபாலய்யங்கா ரென்பவர் போலீஸ் இலாகாவில் உயர்ந்த அதிகாரத்தில் இருந்து வந்தார். அவர்க்கும் அடியேனுக்கும் பரிசயமே யிருந்ததில்லை. மேலே குறித்த உத்தமாச்ரமிஸ்வாமி அந்த ராஜகோபாலையங்காரைத் தம்மிடம் வரவழைத்து அடியேனைப்பற்றி மிகமிகச்சொல்லி அவர்க்கு அடியேனிடத்தில் அபரிமிதமான ப்ராவண்யத்தை உண்டாக்கி விட்டார். அவர் அடிக்கடி என்னைக்காணக் காஞ்சீபுரத்திற்கு வருவதும் சென்னையில் உபந்யாஸங்கள் கேட்க வருவதுமாயிருந்தார் இரண்டொரு மாதத்திற்குள்ளேயே எம்மிருவர்க்கும் நிரவதிகமான நட்பு ஏற்பட்டு விட்டது. சென்னைக்கு வருவது போல் வேலூருக்கும் வாரந்தோறும் வந்து ஸ்ரீராமாயணோபந்யாஸங்கள் செய்ய வேணுமென்று நிர்ப்பந்திக்கத் தொடங்கினார். பிறகு மாதத்தில் இரண்டு முறை சென்று நான்கு உபந்யாஸங்கள் செய்து வருவதாக அங்கீகாரம் செய்து அப்படியே நடத்த வேண்டியதாயிற்று. மூன்று நான்கு வருஷகாலம் அவ்விதமாக நடந்து பட்டாபிஷேகம் செய்யப்பட்டது. அப்போது அந்த ராஜகோபாலையங்கார் தம்முடைய அதிகாரம் செல்லுமிடங்களான அர்க்கோணம் வாலாஜா ராணிபேட்டை ஆற்காடு காட்பாடி பள்ளிகொண்டை ஆம்பூர் வாணியம்பாடி முதலான பலவிடங்களில் அடிக்கடி தனிப்பட்ட உபந்யாஸங்கள் நடத்த ஏற்பாடு செய்வித்து என்னை நாடு நகரமும் நன்கறிந்த நபராக ஆக்கிவைத்தார். வேலூரில் ஸ்ரீராமாயண பட்டாபிஷேகம் ஆவதற்கு முன்னமே அந்த ஸ்வாமி உத்யோகத்தில் நின்றும் விச்ராந்தி பெற்று ஸ்ரீரங்கத்திற்கு நித்யவாஸமாக எழுந்தருளினார். ஆயினும் அடிக்கடி காஞ்சீபுரத்திற்கும் சென்னைக்கும் வந்து சேருவர். அவர்க்கும் எனக்கும் தேஹ ஸம்பந்தம் அணுவளவுமில்லையாகிலும் சிறந்த பந்துக்களினும் மேலாகவே கலந்து பழகினார். அவருடைய தேவியாரும் புத்ர புத்ரீ பௌத்ர தௌஹித்ராதிகளும் இப்போது குளித்தலையில் வாழ்ந்து வருகிறார்கள். திருக்குமாரன் ஸ்ரீமான் R. ஸ்ரீநிவாஸன் (M. B. B.S.) என்பவன் சிறந்த டாக்டர் பதவியில் அமர்ந்து குணங்களில் திருத் தந்தையாரை விஞ்சி விளங்குகின்றான். இற்றைக்கும் இவர்கள் யாவரும் எனது குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே பழகி வருகின்றார்கள்.

மேலே ப்ரஸ்தாவித்த ராஜகோபாலையங்கார் ஸ்வாமி உத்யோகத்திலிருந்தபோது ஒருமுறை வடநாட்டு க்ஷேத்ர தீர்த்த யாத்திரை செய்துவர விரும்பி என்னையழைத்தார். அப்போது பத்தெட்டு பேர்களுடன் வெகு ஆனந்தமான யாத்திரை நடைபெற்றது. அந்தயாத்திரை இருபதுநாளில் முடிவுபெற்றது. பவஹூ ஆவணிமீ 6உ முதலாக 26உ வரையில் (22-8-34 to 11-9-34) நடந்தது. மதராஸில் புறப்பட்டு பண்டராபூர் என்கிற பாண்டுரங்கம், பாம்பே, நாஸிக்பஞ்சவடி, புஷ்கரம், தேஹளி (அதாவது டெல்லி), ஹரித்வாரம், ஹ்ருஷீகேசம், லக்ஷ்மணஜூலா, ப்ருந்தாவனம், மதுரா, கோகுலம், கோவர்த்தனம், ப்ரயாகம், அயோத்யா, காசி, கயா, கல்கத்தா, ஜகந்நாதம் ஸிம்ஹாசலம் ஆக இவ்வளவு ஸ்தலங்களைக் கண்டு மீண்டு காஞ்சியில் தேவப்பெருமாளுடைய திருவடிவாரத்திற்கு வந்து சேர்ந்தாயிற்று. இந்த விஷயங்களை யிட்டுச் சிலச்லோகங்களை யெழுதும்படி அந்த ஸ்வாமி நியமித்தார். அப்படியே பத்தெட்டு சுலோகங்களினால் இந்த யாத்ராமார்க்கத்தை முத்ராலங்கார ரீதியில் காட்டினேன். ச்லோகங்களின் அமைப்பு எப்படிப்பட்டதென்றால், யாத்திரை விஷயமாக இதில் யாதொன்றும் சொல்லப்படவில்லை: முழுவதும் ஸ்ரீராமபிரான் விஷயமான ஸ்தோத்ரமாகவே அமைக்கப்பட்டது. ஸ்ரீராமபிரானுடைய திருக்கல்யாண குணங்களை வருணிக்கும்படியான விசேஷணங்கள் ஒவ்வொருச்லோகத்திலும் அனேகங்கள் இடப்பட்டன. இந்த ரசநாஸந்நிவேச விசேஷத்தில் கிரம

மாக ஒவ்வொரு ஸ்தலத்தினுடையவும் பெயர்கள் புகுந்திருக்கின்றன. அர்த்தமோ ஸ்ரீராமசந்திரனுடைய குணநுபவமேயன்றி வேறில்லை. ஊர்களின் பெயர்கள் சொல்வடிவத்தில் புகுந்திருக்கின்றன. இதற்கு யாத்ராஸ்தோத்ராம்ருதமென்று பெயர். இது அப்போதே தமிழுரையுடன் அச்சிடப்பட்டு சென்னையிலும் வேலூரிலும் உபந்யஸிக்கவும் பட்டது. பண்டித ஜநமனோவிநோதார்த்தமாக அது இவ்விடத்திலும் சேர்க்கப்படுகிறது.

## யாத்ராஸ்தோத்ராம்ருதம்

योऽस्मानुन्मदरासभोपमजनानुद्धर्तुमत्रागतः कीर्त्या यस्य विशुद्धया समजनि क्ष्मा पाण्डुरङ्गं शिति ।
अम्बाम्बेत्यभिकूजतां दिशति यो मातुर्मुखेनोत्तरं सोऽव्यात् खण्डितनासिकाशरवधूद्घुष्टप्रभावः प्रभुः ॥ १

யோஸ்மாந் உந்மதராஸபோபமஜநாந் உத்தர்த்துமத்ராகதஃ
கீர்த்யா யஸ்ய விசுத்தயா ஸமஜநி க்ஷ்மா பாண்டுரங்கம் சிதி |
அம்பாம்பேத்யபிகூஜதாம் திசதி யோ மாதுர் முகேநோத்தரம்
ஸோவ்யாத் கண்டிதநாஸிகாசரவதூத்குஷ்டப்ரபாவஃ ப்ரபுஃ 1

(உரை.)—இந்த ச்லோகத்தில் முதல் மூன்று பாதங்கள் பகவானுடைய ஸாதாரண குணங்களைச் சொல்லுவன; நான்காவது பாதம் ஸ்ரீராமபிரானுடைய அஸாதாரணமானவொரு பெருமையைச் சொல்லுவது. ஒவ்வொரு பாதத்திலும் கீழே கோடு இடப்பெற்ற எழுத்துக்கள் ஒவ்வொரு ஊரின் பெயரைக் குறிக்கும். 1. மதராஸில் புறப்பட்டு, 2. 'பண்ட்ராப்பூர்' என வழங்கப்படுகின்ற பாண்டுரங்க க்ஷேத்ரத்தைத் தொழுது, 3. பாம்பேயில் [ஸ்ரீகாதி ஸ்வாமியின் திருப்ரதிஷ்டையாகிய] திருவேங்கடமுடையானை ஸேவித்து, 4. நாஸிக் என்று ப்ரஸித்தமான பஞ்சவட க்ஷேத்ரத்தைப் பணிந்தமை சப்தத: இந்த ச்லோகத்தில் ஸூசிதமாயிற்று. [யஃ உந்மதராஸபோபமஜநாந் அஸ்மாந் உத்தர்த்தும் அத்ர ஆகதஃ] மதங்கொண்ட கழுதை போன்றவர்களான நம்மைச் சீர்திருத்தவே இவ்வுலகின்கண் வந்து அவதரித்தவன் எம்பிரான் என்றபடி. उन्मद - उद्भूतमदः ; रासभः गर्दभः ; उपमा येषां ते । [யஸ்ய விசுத்தயா கீர்த்யா க்ஷ்மா பாண்டுஃ ஸமஜநி] எம்பெருமானது விசுத்தமான கீர்த்தியினால் பூமண்டலம் முழுதும் வெண்ணிறமாயிற்று. கவிகள் கீர்த்தியை வெண்ணிறத்ததாக வருணிப்பது மரபு. [யஸ்ய அங்கம் சிதி]. எம்பெருமானது திருமேனி நீலமேகச்யாமளமென்றவாறு. [அம்ப! அம்ப! இதி அபிகூஜதாம் உத்தரம் மாதுஃ முகேந திசதி] * தாயும் தந்தையுமாயிவ்வுலகினில்வாயுமீசனென்கிறபடியே எம்பெருமானே தாயும் தந்தையுமாக உருவெடுத்திருக்கின்றானென்பது சாஸ்த்ரார்த்தமாதலால், அம்மா! அம்மா! என்றழைப்பவர்களுக்கு எம்பெருமான் தாய்க் குரலாலே உத்தரமுரைப்பன் என்கிறது. "அண்ணா என்றழைத்தபோது ஆண் குரலாலே ஏனென்னும்; அம்மாவென்றழைத்தபோது பெண் குரலாலே ஏனென்னும்" என்று நம்பிள்ளை அருளிச்செய்யும்படி. [கண்டிதநாஸிகாஆசரவதூஉத்குஷ்டப்ரபாவஃ ஸஃ ப்ரபுஃ அவ்யாத்] ஸ்ரீராமபிரானுடைய பெருமைகளை நாம் தெரிந்துகொள்ள வேண்டுமானால் சூர்ப்பணகையின் வாய்கொண்டு அறியவேணுமத்தனை. அவள் மூக்கும் காது மறுப்புண்டு கரனிடம் ஓடும்போது ராமலக்ஷ்மணர்களை நிந்தித்து முறையிடவேண்டியிருக்க அது செய்யாதே "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ" என்று தொடங்கி ஸ்ரீ தாசரதிகளின் வடிவழகு முதலியவற்றைப்பற்றி அற்புதமாகப்பேசினாளன்றோ. இப்படிப்பட்ட ஸ்ரீராமபிரான் நம்மைக் காத்தருளவேணுமென்றதாயிற்று. 1

यस्योत्फुल्लविशालपुष्करदृशा पूता शबर्युद्भवौ यो वातात्मज देहलीन सकलस्वात्मीयमूर्त्यादिकः ।
यो वा राक्षसनायकेन मुषितां देवीं हरिद्वारतः संतोष्य स्वयमप्यथ प्रमुमुदे सोऽस्मद्गती राघवः ॥ २

யஸ்யோத்புல்லவிசாலபுஷ்கரத்ருசா பூதா சபர்யுத்பபௌ
யோ வாதாத்மஜதேஹலீநஸகலஸ்வாத்மீய மூர்த்யாதிகஃ—
யோ வா ராக்ஷஸநாயகேந முஷிதாம் தேவீம் ஹரித்வாரதஃ
ஸந்தோஷ்ய ஸ்வயமப்யத ப்ரமுமுதே ஸோஸ்மத்கதீ ராகவஃ. 2

இந்த ச்லோகத்திலும் கீழே கோடு இடப்பெற்ற எழுத்துக்கள் ஒவ்வொரு ஊரின் பெயரைக் குறிக்கும். (நாஸிக் பஞ்சவடிக்குப் பிறகு). 5. புஷ்கர க்ஷேத்திரம் பணிந்து, 6. தேஹலீ என்கிற டில்லியிற் புகுந்து, ஹரித்வாரத்தில் அவகாஹித்தமை இதில் ஸூசிதமாயிற்று. ஸ்ரீராமபிரானுடைய செந்தாமரைக் கண்ணோக்கத்தினால் சபரி பரிசுத்தியடந்தமை முதற் பாதத்தில் கூறப்பட்டது. (புஷ்கரம் என்று தாமரைப்பூவுக்குப் பெயர்.) "சக்ஷுஷா தவ ஸௌம்யேன பூதாஸ்மி ரகுநந்தந" என்கிற ஸ்ரீராமாயண ச்லோகம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. அனுமானுடைய திவ்ய சரீரத்திலே ஸ்ரீராமபிரானுடைய திருவுருவம் முதலானவை லயித்துக் கிடந்தமை இரண்டாம் பாதத்தில் சொல்லப்பட்டது. இராவணனால் கவரப்பட்டு அசோக வனத்தில் வருந்திக் கிடந்த பிராட்டியைத் திருவடி மூலமாக உகப்பித்துத் தானும் உகந்த இராமபிரான் நமக்குத் தஞ்சம் என்று உத்தரார்த்தத்தில் கூறப்பட்டதாயிற்று. ஹரித்வாரதஃ—குரங்கு வழியாக என்றபடி. ஹரி—குரங்குக்கும் பெயர். (2)

श्रीरामं हृदि चिन्तयेयमनिशं यो वा हृषीकेश सत्संघैस्सेवितपादपद्मयुगलः साक्षाद्धि नारायणः ।
श्रीमल्लक्ष्मणतीर्थयोगिगुरुराट्श्रीशैलपूर्णाह्वयोपज्ञस्वीयकथाविशेषकथनो यः पप्रथे भूतले ॥ ३

ஸ்ரீராமம் ஹ்ருதி சிந்தயேயமநிசம் யோ வா ஹ்ருஷீகேசஸத்
ஸங்கைஸ் ஸேவிதபாதபத்மயுகளஸ் ஸாக்ஷாத்ஹி நாராயணஃ |
ஸ்ரீமல்லக்ஷ்மணதீர்த்தயோகிகுருராட் ஸ்ரீசைலபூர்ணாஹ்வயோ -
பஜ்ஞஸ்வீயகதாவிசேஷகதநோ யஃ பப்ரதே பூதலே. 3

இதில், (ஹரித்வாரத்திற்குப் பிறகு) 8, ஹ்ருஷீகேசம் ஸேவித்து, 9 பதரீ நாராயணனை ஸாக்ஷாத்கரிக்க ஆசைப்பட்டு, 10. லக்ஷ்மணஜூலா என்கிற லக்ஷ்மண தீர்த்தம்வரையில் சென்று மீண்டமை ஸூசிதமாயிற்று. [ஹ்ருஷீகேசஸத்ஸங்கைஃ ஸேவிதபாதபத்மயுகளஃ] இந்த்ரிய நிக்ரஹம் செய்த முனிவர்குழாம் வணங்கப்பெற்ற திருவடித் தாமரையிணையை யுடையவன் இராமபிரான் என்றபடி. (ஹ்ருஷீகம் என்று இந்திரியத்திற்குப் பெயர்; ஈச - அவற்றை அடக்கியாள்பவர்; யோகிகளைச் சொன்னவாறு). [ஸ்ரீமல்லக்ஷ்மணதீர்த்த-இத்யாதி.] ஸ்ரீமல்லக்ஷ்மண என்று எம்பெருமானாரைச் சொன்னபடி, அவராகிற, தீர்த்தயோகி - பரிசுத்த ஸந்யாஸி; அவருக்கு குருராட்- சிறந்த ஆசார்யரான ஸ்ரீசைலபூர்ணாஹ்வய - திருமலைநம்பி; = அந்த ஆசிரியர் முதலாக ஸ்ரீராமாயண விசேஷார்த்த வியாக்கியானங்கள் இவ்வுலகில் பரவத்தொடங்கினவென்பது இங்குக் கூறப்படுகின்றது. "படிகொண்ட கீர்த்தி யிராமாயணமென்னும் பத்திவெள்ளம் குடிகொண்ட கோயிலிராமாநுசன்" எனப்பட்ட எம்பெருமானார்க்கும் அத் திருமலைநம்பியே ஸ்ரீராமாயணார்த்த உபதேச கர்த்தாவென்பதும், ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய பரம்பரையில் "பிதாமஹஸ்யாபி பிதமஹாய ப்ராசேதஸாதேச பலப்ரதாய, ஸ்ரீபாஷ்யகாரோத்தம தேசிகாய ஸ்ரீசைலபூர்ணாய நமோநமஸ்தாத்" என்று அவ்வாசிரியருடைய தனியனே முதன்மைபெற்றிருக்கின்றதென்பதும் இங்கு அறியத்தக்கன. ... ... ... 3

सद्वृन्दावनदीक्षणेन मधुरां वाचं जनन्यां वदन् वृद्धाय त्रिजटाय गोकुलशतं दत्त्वा वनं प्रस्थितः ।
आगोवर्धनसीमभूमिनिरते काकासुरे दारुणे कारुण्यं कलयन् रघूद्वहमणिर्जेजेतु सीतापतिः ॥ ४

ஸந்ப்ருந்தாவநதீக்ஷணேந மதுராம் வாசம் ஜநந்யாம் வதந்
வ்ருத்தாய த்ரிஜடாய கோகுலசதம் தத்வா வநம் ப்ரஸ்திதঃ |
ஆகோவர்த்தநஸீமபூமிநிரதே காகாஸுரே தாருணே
காருண்யம் கலயந் ரகூத்வஹமணிர் ஜேஜேது ஸீதாபதிঃ. 4

இதில் (லக்ஷ்மணஜூலாவிற்குப் பிறகு) 11. பிருந்தாவனம், 12. மதுரா, 13. கோகுலம், 14. கோவர்த்தனம் ஆக நான்கு தலங்கள் ஸேவிக்கப்பட்டமை ஸூசிதமாகிறது. [ஸந்ப்ருந்த அவந நீக்ஷணேந] கைகேயி இராமபிரானை வநவாஸஞ் செல்லுமாறு ஏவியபோது, அதனல் சிறிதும் முகவிகாரமின்றி, ஸத்துக்களின் திரளை ரக்ஷிக்கவேணுமென்று கங்கணங்கட்டிக்கொண்டு ஸந்தோஷமாகப் புறப்பட்டமை இங்குச் சொல்லப்படுகிறது. [ஜநந்யாம் மதுராம் வாசம் வதந்] "மன்னவன் பணியன்ருகில் நும்பணி மறுப்பனேவென், பின்னவன்பெற்ற செல்வமடியனேன் பெற்றதன்ரே....மின்னெளிர்கானமின்றே போகின்றேன் விடையுங்கொண்டேன்" (கம்பர்) என்று மதுரமான சொல்லைக் கைகேயியிடத்துச் சொன்னனி ராமன். [வ்ருத்தாய த்ரிஜடாய கோகுலசதம் தத்வா வநம் ப்ரஸ்திதঃ] பெருமான் காட்டுக்குப் புறப்படும்போது அநேக தானங்கள் செய்வதைக்கண்ட பெருங்கிழவனன த்ரிஜடனென்னும் அந்தணனெருவன் வந்து யாசிக்க அவனுக்கு அளவில்லாத பசுக்களைத் தானஞ்செய்த வரலாறு இங்குக் கூறப்பட்டது. [ஆகோவர்த்தநஸீமபூமிநிரதே தாருணே காகாஸுரே காருண்யம் கலயந்] மஹாபராதியான கொடிய காகாசுரன் பக்கலிலே கருணை புரிந்தமை இங்குச்சொல்லப்படுகிறது. ஆகஸ்—குற்றம்; வர்த்தனம்—அதனை அதிகமாகச் செய்தல். ஸீமபூமிநிரதே—குற்றத்தை அளவில்லாமல் செய்வதற்கு எது எல்லை நிலமோ அவ்வளவும் செய்து தீர்த்தவன் காகாசுரன் என்றபடி. அப்படிப்பட்டவனிடத்திலும் அருள்செய்த இராமபிரானுக்குப் பல்லாண்டு என்றதாயிற்று.

स्वामिन् पैतृकदीप्रयागफलभूतात्मन् ! अयोध्यापुरीवास्तव्याखिलजन्तुसंचयसमुद्धारैकबद्धादर ।
राकाशीतकरावलेपहरणोदञ्चत्प्रथश्रीमुख श्रीमन् पालय तुंगया करुणया संसारिणो मादृशान् ॥ ५

ஸ்வாமிந் ! பைத்ருகதீப்ரயாகபலபூதாத்மந் ! அயோத்யாபுரீ
வாஸ்தவ்யாகிலஜந்துஸஞ்சய ஸமுத்தாரைகபத்தாதர |
ராகாசீதகராவலேபஹரணோதஞ்சத்ப்ரதஸ்ரீமுக
ஸ்ரீமந் ! பாலய துங்கயா கருணயா ஸம்ஸாரிணோ மாத்ருசாந். 5

இதில் (கோவர்த்தனத்திற்குப் பிறகு) 15. ப்ரயாகம் (அலஹாபாத்), 16 அயோத்யா, 17. காசி, 18. கயா ஆக நான்கு க்ஷேத்திரங்கள் ஸேவிக்கப்பட்டமை ஸூசிதமாகிறது. [பைத்ருக தீப்ரயாகபலபூதாத்மந்] தகப்பனுகிய தசரதன் அநுஷ்டித்த ஒளிமிக்க யாகத்தின் பயனுய்த் தோன்றினவனே! என்றபடி. [அயோத்யாபுர்த்யாதி.] "எல்லையில் சீர்த்தயரதன்றன் மகனய்த் தோன்றிற்றது முதலாத் தன்னுலகம் புக்கதீரு" என்று குலசேகரப்பெருமாளருளிச்செய்த கட்டளையிலே இவ்விரண்டு பாதங்கள் அமைந்தன. *அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றினமை இரண்டாவது பாதத்தில் அநுஸந்திக்கப்பட்டது [ராகாசீதகரேத்யாதி.] ராகா என்று பௌர்ணமாஸிக்குப் பெயர். சீதகரன்—சந்திரன்; பூர்ண சந்திரனுடைய செருக்கையடக்குவதில் புகழ்பெற்ற திருமுகமண்டலத்தையுடையவனே!

என்றபடி. [துங்கயா கருணயா] இத்யாதி. ஸம்ஸாரிகளான அடியோங்களை உயர்ந்த கருணையினல் காத்தருளவேணுமென்றதாயிற்று. ... .. 5

यन्नामस्मरणं पुनः कलिकथाकालुष्यकूलंकषं येनैकेन महात्मना विजयते सर्वं जगन्नाथवत् ।
तादृक्षाप्रतिमप्रभाव भगवन् हे रामसिंहाचलप्रख्याते वरदप्रभो जयजयानेकाञ्चितश्रीपते ॥ ६

யந்நாமஸ்மரணம் புநः கலிகதாகாலுஷ்யகூலங்கஷம்
யேநைகேந மஹாத்மநா விஜயதே ஸர்வம் ஜகந்நாதவத் |
தாத்ருக்ஷாப்ரதிமப்ரபாவ பகவந் ஹேராமஸிம்ஹாசல
ப்ரக்க்யாதே ! வரதப்ரபோ ! ஜயஜயாநேகாஞ்சித ஸ்ரீபதே. 6

இதில் (கயாக்ஷேத்ரத்திலிருந்து) 19. கல்கத்தா நகரஞ்சென்று, அங்கிருந்து 20 ஜகந்நாதபுரி, 21, ஸிம்ஹாசலம் இவை ஸேவித்து முடிவாகக் காஞ்சீபுரியில் வரதப்ரபுவின் திருவடிவாரத்தில்சென்று சேர்ந்தமை ஸூசிதமாகிறது. [யந்நாம ஸ்மரண மித்யாதி.] ஸ்ரீராமபிரானுடைய திருநாமஸ்மரணம் கலிபுருஷகோலாஹலத்தை வேரறுப்பதாமென்றபடி. [யேந ஏகேந மஹாத்மநா ஸர்வம் ஜகத் நாதவத் விஜயதே] ஸ்ரீராமபிரானொருவனலேயே ஸகல ஜகத்தும் நாதனேடுகூடினதாக ஆகின்றதென்றபடி. [தாத்ருக்ஷாப்ரதிமேத்யாதி.] அப்படிப்பட்ட ஒப்பற்ற வைபவமுடையவனே! [ஹேராமஸிம்ஹ !—அசலப்ரக்க்யாதே !] ஸ்ரீராமஸிம்ஹமே! ஒரு நாளும் அழிவில்லாத புகழையுடையவனே! என்றபடி. [அநேக அஞ்சித!] பலரால் பூஜிக்கப்பட்டவனே! இந்த ஸம்போதனம் இராமபிரானுக்கும் ஒக்கும்; ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாளுக்குமொக்கும்; க்ருதயுகத்தில் நான்முகனலும், த்ரேதாயுகத்தில் கஜேந்திராழ்வானலும், த்வாபரயுகத்தில் ப்ருஹஸ்பதியாலும், கலியுகத்தில் ஆதிசேஷனலும் ஆராதிக்கப்படுபவர் தேவப்பெருமாள்.

ஜய ஜய என்று தலைக்கட்டிற்றாயிற்று. ... ... 6

இந்த யாத்திரையில் நேர்ந்த புண்யநதிகளின் பெயர்களை அமையவைத்து
ஸ்ரீராமபிரானுடைய ஸ்தோத்ரரூபமாக இயற்றப்பட்ட
ச்லோகங்கள் மூன்று.

यत्पादांबुजसेविनामनिशमस्त्युत्तुङ्गभद्रावलिः व्रीडां यन्मुखकान्तिदर्शनवशात् द्राक्चन्द्रभागाहते ।
शार्ङ्गोज्जृंभितसायकैः अरिवधूबृन्दं दशां वैधवीं येनानाय्यमुना हि दाशरथिना सर्वे सनाथा वयम् ॥ १

யத்பாதாம்புஜஸேவிநாமநிசமஸ்த்யுத்துங்கபத்ராவலிः
வ்ரீடாம் யந்முககாந்திதர்சநவசாத் த்ராக் சந்த்ரபாகாஹதே
சார்ங்கோஜ்ஜ்ருப்பிதஸாயகைः அரிவதூப்ருந்தம் தசாம் வைதவீம்
யேநாநாய்யமுநாஹி தாசரதிநா ஸர்வே ஸநாதா வயம். 1

இதில் துங்கபத்ராநதி. (பண்டர்பூரிலுள்ள) சந்த்ரபாகாநதி, யமுநாநதி ஆக மூன்று நதிகளில் அவகாஹிக்கப்பெற்றமை ஸூசிதமாயிற்று. இராமபிரானுடைய திருவடித்தாமரைகளைத் தொழுமவர்கட்கு எப்போதும் சிறந்த க்ஷேமபரம்பரைகள் உண்டு என்பது முதல்பாதத்தின் கருத்து. ஸ்ரீராமபிரானுடைய திருமுகவொளியைக்கண்டு சந்திரனெளியானது வெட்கமடைகின்றதென்பது இரண்டாம் பாதத்தின் கருத்து. இராமபிரானுடைய சார்ங்கவில்லில் நின்று கிளம்பிய அம்புகளால்

சத்ருஸ்த்ரீகள் வைதவ்யதசையை அடைவிக்கப்பட்டார்களென்பது மூன்ருமடியின் கருத்து. இப்படிப்பட்ட ஸ்ரீ ராமபிரானுல் நாமெல்லோரும் நாதனையுடையோமாகிரோமென்று தலைக்கட்டப்பட்டது. (நான்காம் பாதத்தில், "அநாயி அமுநா" என்று பதம்பிரியும். ஸந்தியில் யமுநாநதியின் பெயர் தோற்றும்.) ... ... 1

स्वर्गगां वलिसद्मचाऽऽश्रुततमां ख्यातिर्यदीया शुभा सर्वेषांच सरस्वती सुमनसां यत्कीर्तनाच्छस्यते ।
चर्या यस्यहि फल्गुनीरसकथाशुश्रूषणच्छेदिनी सोऽयं नस्सरयूतटीसुरतरुः श्रीरामचन्द्रो गतिः ॥ २

ஸ்வர்கங்காம் பலிஸத்ம சாச்நுததமாம் க்யாதிர் யதீயா சுபா
ஸர்வேஷாஞ்ச ஸரஸ்வதீ ஸுமநஸாம் யத்கீர்த்தநாத் சஸ்யதே |
சர்யா யஸ்ய ஹி பல்குநீரஸகதாசுச்ரூஷணச்சேதிநீ •
ஸோயம் நஸ் ஸரயூதடீஸுரதரு: ஸ்ரீராமசந்த்ரோ கதி: 2

இதில், கங்காநதி, ஸரஸ்வதீநதி ஸரயூநதி (கயாக்ஷேத்ரத்தின்கண்) பல்குநீ நதி ஆகிய நான்கு நதிகள் நேர்பட்டமை ஸூசிதமாகிறது. இராமபிரானுடைய நற்புகழ் விண்ணுலகம் மண்ணுலகம் கீழுலகமாகிய மூவுலகங்களிலும் மிகவும் வியாபித்ததென்பது முதலடியின் கருத்து. (ஸ்வர்க்கம்—காம் என்று பதச்சேதம். காம்—பூமியை என்றபடி. " गौरिला कुम्भिनी क्षमा " என்பது அமரகோசம். உலகத்தில் ஸகல கவிகளினுடையவும் வாக்கானது இராமபிரானைப்பற்றிப் பேசினல்தான் சிறப்புப் பெறுகின்றதென்பது இராண்டாம் பாதத்தின் கருத்து. ஸ்ரீ ராமபிரானுடைய சரித்திரமாகிய ஸ்ரீ ராமாயணமானது மற்ற க்ஷுத்ரகதைகளைக் கேட்பதில் ஆசையைப்போக்குகின்றதென்பது மூன்ரும் பாதத்தின் கருத்து, (பல்கு—நீரஸ—என்று ஸமாஸ விச்சேதம்). ஆக, இப்படிப்பட்ட பெருமைவாய்ந்தவனும் ஸரயூ நதிக்கரையில் தோன்றின கற்பகத் தரு போன்றவனுமான ஸ்ரீ ராமபிரான நமக்குத் தஞ்சமென்று தலைக்கட்டிற்ருயிற்று. ... 2

यत्संगोदावरीतिं भजति मुनिवधूशापपापद्रुमौघे कृष्णांम्भोदोपमश्रीरघुकुलतिलकस्यांघ्रिरेणुस्स एव ।
संसारोद्वेगवत्यास्सकलजनततेः पावनो बोभवीति ध्यात्वा तद्रामपादं विलसतु विरजा लोक एष ह्यशेषः ॥ ३

யத்ஸங்கோதாவரீதிம் பஜதி முநிவதூசாபபாபத்ருமௌகே
க்ருஷ்ணும்போதோபமஸ்ரீரகுகுலதிலகஸ்யாங்க்ரிரேணுஸ் ஸ ஏவ ;
ஸம்ஸாரோத்வேகவத்யாஸ் ஸகலஜநததே: பாவநோ போபவீதி
த்யாத்வா தத்ராமபாதம் விலஸது விரஜா லோக ஏஷ ஹ்யசேஷ:. 3

இதில் கோதாவரீநதியும் க்ருஷ்ணநதியும் நேர்பட்டமை பூர்வார்த்தத்தில் ஸூசிதமாகிறது. யாத்திரை முடிந்து காஞ்சியில் போய்ச்சேர்ந்து வேகவதியைக் கண்டமை மூன்ரும்பாதத்தில் ஸூசிதமாகிறது. எல்லா நதிகளுக்கும் தலையான விரஜாநதியின் ஸ்மரணம் நான்காவது பாதத்தில் அமைக்கப்பட்டது. [யத்ஸங்க: முநிவதூசாபபாபத்ருமௌகே தாவரீதிம் பஜதி] இரண்டாவது பாதத்தில் கூறப்பட்ட ஸ்ரீ ராம பாததூளியானது இங்கு யச்சப்தத்தால் குறிக்கப்படும். ஸ்ரீ ராமபாத ரஜஸ் ஸங்கமானது அஹல்யையின் சாபமாகிற மரத்தொகுதியிலே காட்டுத்தீயின் தன்மையை அடைகின்றதென்றவிதனுல் அஹல்யா சாபமோக்ஷ வ்ருத்தாந்தம் அநுஸந்திக்கப்பட்டதாயிற்று. அந்த ஸ்ரீ ராமன் காளமேகத்திருவுருவன் என்றது இரண்டாம் பாதத்தில். அப்பெருமானது அப்படிப்பட்ட ஸ்ரீ பாததூளியொன்றே ஸம்ஸாரத்தில் அருவருப்புடைய ஸகல ஜனங்களுக்கும் பாபஹரமாகின்றதென்று மூன்

ரும் பாதத்தில் உரைக்கப்பட்டது. அப்படிப்பட்ட பெருமைவாய்ந்த ஸ்ரீராமபிரானுடைய திருவடியை ஸகலலோகமும் தியானித்து சுத்தஸாத்விகமாகக் கடவதென்று தலைக்கட்டப்பட்டது. தாவः—காட்டுத்தீ. விரஜா:—'விகதரஜோகுண:' என்றபடி. 'தூளியற்றதாக' என்கிற அர்த்தமும் தொனிக்கும். தூளியைச் சிந்திக்கத் தூளி தொலையுமென்பது ஒரு சமத்காரம். இவ்வொன்பது ச்லோகங்களிலும் வெகு விசேஷார்த்தங்கள் அமைந்து கிடக்கின்றன. ஸாதாரண சப்தார்த்தமே இங்குக் குறிப்பிடப்பட்டது. ஸம்ஸ்க்ருத பாஷாரஸிகசிகாமணிகள் ஊன்றி ஆழ்ந்து அசேஷவிசேஷார்த்தங்களையும் உய்த்துணர்க. ... 3

— யாத்ரா ஸ்தோத்ராம்ருதம் முற்றிற்று —

உபந்யாஸ ஸபையில் நியதமாக நடைபெறும் உபந்யாஸங்கள் தவிர விசேஷப்படியான நைமித்திக உபந்யாஸங்களும் அவ்வப் போதுகளில் நடந்து கொண்டிருக்கும். அப்போது சேரும் கோஷ்டி தனிப்பட்டதாயிருக்கும். மதராஸ், தவிர, நாற்றிசையிலும் வெளியூர்களில் நியத காலங்களில் உபந்யாஸங்கள் நடந்து வருகின்றன. அந்த விவரணங்களை இங்கே வைத்துக்கொண்டால் வீணாக நூல் வளரும் இச்சரிதை நூலை ஆவலோடும் அன்போடும் வாசிக்கின்ற ஆப்தர்கள் பலர் "நமது ஊருக்கு வந்து நடத்தும் உபந்யாஸ விசேஷங்களைப்பற்றி ஒன்றுமே யெழுதாமல் விட்டுவிட்டாரே" என்று குறைபடவுங் கூடும். அதற்கு நம்மால் பரிஹாரம் செய்ய இயலாதுதான்.



விசேஷோபந்யாஸ ஸபா கோஷ்டிகளில் ஒன்று.

பலவூர்களில் வ்யபதிஷ்டர்களான பல பெரியோர்களுடைய பரம க்ருபைக்கும் ப்ரீதி விச்வாஸங்களுக்கும் நட்புக்கும் பாத்திரமாகப் பெற்ற பாக்ய விசேஷங்களைப்பற்றி அநதிஸம்க்ஷேபவிஸ்தரமாக எழுத வேணுமென்கிற விருப்பமிருப்பதால் அவற்றைப்பற்றிச் சிறிது எழுதத்தொடங்குகிறேன்

க ஸ்ரீராமபிரா
கமாகக் கடவ
தரஜோகுண:'
ம். துளியைச்
பது ச்லோகங்
ர். ஸாதாரண
திகாமணிகள்
... 3

நாங்கள் தவிர
களில் நடந்து
க்கும். மதராஸ்,
ங்கள் நடந்து
வ் விநைக நூல்
ஆப்தர்கள் பலர்
ன்றுமே யெழு
மல் பரிஹாரம்



ய பரம க்ருபைக்
பாக்ய விசேஷங்
ற விருப்பமிருப்ப

## பெரியோர்களின் க்ருபா ஸ்நேஹ ப்ரேம விசேஷங்கள்.



ஸ்ரீ உவே. அத்தங்கி (கவிபூஷண)
குமாரதாதாசார்யஸ்வாமி. திருவல்லிக்கேணி.
(வைகுண்டவாஸி)

திருவல்லிக்கேணியில் ஸ்ரீமத். அத்தங்கிகுமாரதாதாசார்யஸ்வாமி யென்று ஸுப்ரஸித்தரானவித்வந்மணி எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி ஸாஹித்ய க்ரந்தங்களில் நிகரற்ற மஹா வித்வான். ஸகல காவ்யநாட காலங்கார க்ரந்தங்களும் இந்த ஸ்வாமிக்கு வாசோவிதேயங்களாயிருந்தன. வ்யாகரண வேதாந்த விரகர். கவித்வத்தில் மஹா நிபுணரென்பதை 'கவி பூஷணர்' என்னும் இவருடைய பிருதமே விளக்கி நிற்கும். இந்த ஸ்வாமியால் இயற்றி வெளியிடப்பட்டிருக்கின்ற உத்தரராமசரித வியாக்கியானம் முதலான சில க்ரந்தங்களினால் இவர் சிறந்த க்ராந்திகர் என்பது தெற்றென விளங்கும். இந்த ஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளி முப்பது வருஷங்களுக்கு மேல் ஆய்விட்டாலும் இவருடைய கீர்த்தி நிகரற்றது. இவருடைய பரிஸரத்தில் எப்போதும் பலவித்வான்கள் கூடியே யிருப்பர்கள். இவருடைய ஸகாசத்தில் ஏதாவது விஷய விசாரங்கள் நடந்து கொண்டே யிருக்கும். மஹாதனிகராகையால் ஸத்பாத்ர விநியோகங்களை விசேஷமாக நடத்திக் கொண்டேயிருப்பர். இவரிடத்தில் பரத்வம் அதிகமாயும் ஸௌலப்யம் குறைவாயுமிருக்குமென்று சிலர் சொல்லுவதுண்டு. இந்த ஸ்வாமியினுடைய க்ருபைக்கு அடியேன் பாத்திரமாகப் பெற்றவரலாற்றைச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீகாதிஸ்வாமி வடநாட்டில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கையில் வல்லப மதஸ்தர்களோடு சிறிது விவாதம் ஸம்பவித்தது. பம்பாய்மாநகரில் "பூலேச்வர், படாமந்திர்" என்கிறவிடத்தில் மிகவும் ப்ரதிஷ்டிதராயிருந்த வல்லபாசாரியர் "பட்ட ஸ்ரீபலபத்ர சர்மா" என்பவரைக் கொண்டு 'ஸித்தாந்த ஸித்தாபகா' என்றொரு விசிஷ்டாத்வைதமத கண்டன க்ரந்தத்தை வெளியிட்டார். அந்த பண்டிதர் 'கவிகாவ்யரத்நாகரர்' என்று விருது பெற்றவர். அவருடைய அந்த க்ரந்தத்திற்கு ஸ்ரீகாதிஸ்வாமி 'படபாநல:' என்னும் பெயருள்ள மறுப்புநூலையெழுதி வெளியிட்டிருந்தார். அதில் ஒரு வார்த்தை எழுதப்பட்டிருந்தது. (அதாவது) "இவர் வெறும் கவியேயொழிய சாஸ்த்ரஜ்ஞரல்லரென்பது இவர் வஹிக்கும் விருதினலேயேஸ்பஷ்டமாகிறது" என்று. அதைக்கடாக்ஷித்த அத்தங்கிஸ்வாமி இந்த தூஷணம் கவிபூஷணரான தம்மையும் ஸ்பர்சிக்கிறதென்று கருதிச் சீற்றங்

கொண்டு ஸ்ரீகாதிஸ்வாமியின் நூலைக் கண்டிக்க ஆசை கொண்டு, விஷயத்தி லிறங்கிக் கண்டனமெழுதினால் அது நன்றாயிராதென்று கருதி அதிலிறங்காமல் வியாகரணப் பிழைகள் இருப்பதாக எடுத்துக்காட்டி தூஷித்து ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிட்டிருந்தார். அந்தஸமயத்தில் ஸ்ரீகாதிஸ்வாமி வெகுதூரதேசத்தில் யாத்திரை செய்து கொண்டிருந்தார். அத்தங்கி ஸ்வாமியின் துண்டுப் பிரசுரத்தை அடியேன் பார்த்தவுடனே மிகவும் கொதிப்பு உண்டாயிற்று. அப்போது மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையை வெள்ளிக்கிழமை தோறும் நடத்திக் கொண்டிருக்கிறேன். அதில், கவிபூஷணருடைய தூஷணங்களுக் கெல்லாம் மறுவாய் திறக்க முடியாத படிக்கு ஆணித்தரமான மறுப்புகளை யெழுதி வெளியிட்டேன். வசனரூபமாக வன்றிக்கே ஐம்பது சுலோகங்களினால் மறுத்திட்டேன். அந்தச்லோகமாலிகையின் முடிவில்

"कवीन् भूषय त्वं सखे! तेऽथ वा त्वां भृशं भूषयन्तु क्षतिर्नस्ततो न।

विमुह्यन्नकाण्डे वृथा श्राम्यसीति प्रकामं विषीदन्ति पृथ्व्यामभिज्ञाः॥"

என்கிற ச்லோகமிட்டிருந்தேன் ஸ்ரீகாதிஸ்வாமிக்கு மஞ்ஜுபாஷிணீ மூலமாய் இந்த பதிலுரை கிடைத்ததேயொழிய அத்தங்கிஸ்வாமியின் துண்டுப் பிரசுரம் கிடைக்கவில்லை ஸ்வாமி அடியேனதுமறுப்புரையைக்கடாக்ஷித்தருளிப் பரமக்ருபை பொங்கி ஸ்ரீமுகம் ஸாதித்தருளினார். அதுநிற்க. அத்தங்கிஸ்வாமி அடியேனுடைய மறுப்புரைகளை மஞ்ஜுபாஷிணியில் கடாக்ஷித்தருளி, அது முதலாக விசேஷப்ரீதி செய்தருளி அடிக்கடி ஸந்திக்கவும் ஸம்பாஷிக்கவும் நியமித்திருந்தார். முதலில் என்னுடைய மறுப்புரையைப் பார்த்தவுடனே அவர்க்குக் கொதிப்பு உண்டாகி அதற்கு மறுப்பெழுதி வெளியிடவேணுமென்று தோன்றியதாம். அவர்க்கு இரண்டு திருக்குமாரர்கள். இருவரும் நன்றாக வாசித்தவர்கள். ஒரு திருக்குமாரர் சிறந்த பண்டிதராயிருந்தார். இதற்கு நீ கண்டன மெழுத வேண்டியதென்று அவர்க்கு நியமித்தருளினாராம். கீழ் முதற்பகுதியில் பக்கம் 43ல் ஸேவைஸாதிக் கின்ற ஸ்ரீஉவே. வித்வான் அ. வீ. நரஸிம்ஹாசாரியர்ஸ்வாமி அப்போது அந்த அத்தங்கிஸ்வாமி திருமாளிகையிலேயே குடிவாழ்ந்து அவர்க்கு ப்ரேமபாத்ரமா யிருந்தபடியால் அவருக்கும் நியமித்திருந்தாராம். அவ்விருவரும் அடியேனுடைய மறுப்புச்லோகமாலிகையை ஆழ்ந்து பார்த்து அத்தங்கிஸ்வாமியினிடம் சொன்னார் களாம்;—"இதற்கு நாம் மறுப்பெழுதி வெளியிட்டால் மூன்றாநாளிலேயே அண்ணங்கராசாரியரிடமிருந்து சரமாரியாக பதில் வெளிவந்துவிடும்; அவர் சாஸ்த்ரீயஸரணியிலேயே போயிருக்கிறபடியால் அடுத்தபடியாக நாம் விச்ராந்தி பெற்று நிற்பதைவிட இப்போதே விச்ராந்தி கொள்வது நன்று" என்றார்களாம். இதை பிறகு அத்தங்கிஸ்வாமி திருவாக்கினாலேயே கேட்டறிந்தேன். மேலே ப்ரஸ்தாவித்த அ. வீ. நரஸிம்ஹாசாரியர் போலவே ஸ்ரீஉவே. பண்டித அ. மு. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியும் அத்தங்கிஸ்வாமிக்கு இளமை தொடங்கியே அந்த ரங்கப்ரியராக இருந்து வந்தவர். அதனால் இந்த ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமிக்கு என்னிடத்தில் மிகவும் அத்ருப்தியிருந்தது அத்தங்கிஸ்வாமியும் அவருடைய திருக்குமாரர்களும் அடியேனிடத்தில் பரமப்ரீதர்களாயிருக்கச் செய்தேயும் இந்த ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி மட்டும் தாம் அத்தங்கிஸ்வாமியிடத்தில் வைத்திருந்த ப்ராவண்யாதிசயத்தாலே வெகுநாள்வரை என்னிடத்தில் அப்ரீதராகவேயிருந்தார். நாளடைவில் பரமப்ரீதியை வஹித்து அடியேனுடைய ஸகலகார்யங்களுக்கும் நாளைக்கும் ஸஹாயகராக இருந்து வருகிறார். அடுத்தபக்கத்திலுள்ள வுருவப்படத் தில் என்னுடைய இருபக்கங்களிலும் ஸேவை ஸாதிக்கின்ற இருவரையும் பற்றிச் சிறிது விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். மேலே ப்ரஸ்தாவித்த அ. மு. ஸ்ரீ.

ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத கலாசாலையில் ஸாஹித்ய வியாகரணங்கள் வாசித்து விமர்சகுசலராய் ஏறக்குறைய நாற்பது வருஷகாலமாய்த் திருவல்லிக்கேணியில் நித்யவாஸரஸிகராயிருந்து வருகிறார். பெரும்பாலும் அத்தங்கிஸ்வாமி திருமாளிகையே இவர்க்கு வாஸஸ்தானமாயிருக்கும். அடியேன் உபந்யாஸார்த்தமாக சென்னைக்குப் போகத்தொடங்கின பிறகே இவருடைய ஸந்நிகர்ஷம் விசேஷமாகவுண்டாயிற்று. அடியேன் இருபது வயதிலிருந்தே முத்ரணங்கள் நடத்திக்கொண்டு வந்தாலும் அவை பெரும்பாலும் ஆப்தர்களான இதரர்கள் மூலமாகவே நடத்தப்பட்டு வந்தன. ஸொந்தமான பொறுப்பில் நடக்க ஆரம்பித்தது 1931ஆம் வருஷத்திற்குப்பிறகுதான். அப்போதுதான் க்ரந்தமாலை



ஸ்ரீ உவே. அ. மு. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி (திருவல்லிக்கேணி)

ஸ்ரீ உவே. திருமலை அனந்தாண்பிள்ளை அக்காரக்கனி ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமி (ஜ்யேஷ்ட ஜாமாதா)

ஆபீஸ் ஸ்தாபிக்கப்பட்டு அனேக க்ரந்தமாலைகள் அச்சிட ஆரம்பித்தது. அப்போது தமிழ் மணிப்ரவாள க்ரந்தங்களின் ப்ரூப்திருத்தங்களுக்கு அ.மு. ஸ்ரீ. ஸ்வாமியின் ஸாஹாய்யம் மஹோபகாரகமாக இருந்தது. ஸம்ஸ்க்ருதக்ரந்த சோதனங்களுக்கு (இங்கே காண்கிற உருவப்படத்தில்) என்னுடைய மற்றொரு பக்கத்தில் வீற்றிருக்கின்ற ஜ்யேஷ்டஜாமாதாவின் ஸஹயோகம் விசேஷித்துக் கார்யகரமாயிருந்துவருகின்றது. இதைப்பற்றி மேலே விரிவாகத் தெரிவிக்க ப்ராப்தமாகும்.

கோயம்புத்தூரில் ஸ்ரீசைலசக்ரவர்த்தியாசார்ய ஸ்வாமி ஸுப்ரஸித்தராக எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி வக்கீலாக விளங்கிவந்தாலும் உயர்ந்த வித்வத்கோஷ்டியில் பரிகணநீயர். காவ்யநாடகாலங்கார க்ரந்தங்கள் யாவற்றையும்



ஸ்ரீமதுபயவே ஸ்ரீசைலசக்ரவர்த்தியாசார்யஸ்வாமி
(கோயம்புத்தூர்) வைகுண்டவாஸி

கண்டபாடமாக வைத்துக் கொண்டிருந்தவர். சாஸ்த்ரங்களின் தத்துவங்களை நன்கறிந்தவர். "ஸாரஸ்வத ஸாரஜ்ஞர்" என்று குலாவப்பட்டிருந்தவர். ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயங்களை ப்ரவசனமும் செய்தவர். ரஸிகசக்ரவர்த்தியென்று கொண்டாடப் பட்டிருந்தவர். இந்த ஸ்வாமி ஒருஸமயம் திருவேங்கடமுடையானுடைய ப்ரஹ்மோத்ஸவம் ஸேவிக்கத் திருமலைக்கு எழுந்தருளியிருந்தார். அப்போது அடியேனும் அங்கு விடை கொண்டிருந்தேன். அந்த ஸ்வாமியின் பரிசயம் அங்குத்தான் ப்ரப்ரதமமாக வாய்த்தது. அடியேன் மிக வியக்கும்படியான யோக்யதை அந்த ஸ்வாமி பக்கலில் அதிசயிதமாகக் குடிகொண்டிருந்ததையறிந்து அவரிடத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டேன். பிறகு அந்த ஸ்வாமி காஞ்சிக்கும் சென்னைக்கும் அடிக்கடி யெழுந்தருளி ஸேவைஸாதித்துக் கொண்டிருந்தார். அடியேனையும் கோயம்புத்தூருக்கு மூன்று பர்யாயம் வரவழைத்து அங்கே விசேஷ ஸபைகள் சேர்த்து உபந்யாஸங்கள் நடத்தி வைத்தார். அந்த ஸ்வாமி இன்னும் பலவாண்டுகள் இவ்விபூதியில் எழுந்தருளியிருக்கலாம். ஆனால் இந்நிலவுலகின் தௌர்ப்பாக்யத்தினால் 10, 15 ஆண்டுகட்கு முன்னமே திருநாட்டுக்கெழுந்தருளி விட்டார். அவருடைய க்ருபா ஸ்நேஹ ப்ரேமங்களை அடியேன் ஐந்தாறு வருஷங்கள் மட்டுமே அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. அவருடைய திருக்குமாரர்களிருவர் இப்போது ப்ரதிஷ்டிதர்களாய் விளங்குகின்றனர்கள். இந்த ஸ்வாமியால் ஸ்ரீராமாயணாதிகளில் சில ஆராய்ச்சிகள் க்ரந்தரூபமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. சில பகுதிகள் அச்சிடப்பட்டிருப்பதாகவும் கேள்வி.

அந்த ஆராய்ச்சிகள் விசேஷமாக ஆங்கிலத்தில் அவதரித்திருப்பதாகக் கேள்வி. தற்காலம் கோயம்புத்தூரில் ப்ரஸித்த ப்ராஜ்ஞராக ஸேவை ஸாதித்தருளாநின்ற ஸ்ரீமத் வேதவ்யாஸபட்டர் திருமலை ஐயங்கார் ஸ்வாமி, மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீசைலசக்ரவர்த்யாசார்ய ஸ்வாமி பக்கலில் வேதாந்த ச்ரவணம் பண்ணி ஸ்வரூப க்ரந்தங்களும் ஸேவித்து அவ்விடத்தில் ப்ரவசந நிரதராகவும் எழுந்தருளியிருக்கிறார். இந்த ஸ்வாமியும் அடியேனுக்கு *பஹி: ப்ராண இவாபர:. அடியேனுடைய தக்ஷிணோத்தரதேச யாத்திரைகளில் சில பர்யாயங்கள் ஸஹாந்வயித்திருந்து பரமஸ்நிக்தரானவர். காஞ்சிக்கும் சென்னைக்கும் அடிக்கடியெழுந்தருளி பந்துநிர்விசேஷமாக அநுக்ரஹிப்பவர். அனேகமாக மார்கழி மாதங்களில் சென்னைக்கெழுந்தருளி உசாத்துணையாயிருக்குமவர். இந்த ஸ்வாமி சிஷ்யஸம்பந்நராகையாலே ஸ்வஸ்தானத்தில் அனேகமாக ஸ்வரூபக்ரந்தங்களின் ப்ரவசனமே போதுபோக்காக எழுந்தருளியிருப்பவர். இந்த ஸ்வாமிக்கு ஆங்கில பாஷையிலும் பரிபூர்ண ப்ரவேசமுண்டாகையால் இவருடைய யோக்யதை காலாநுகுணமாக மிகவும் பரிமளிக்கின்றது. ஸஹவாஸ யோக்யரான வ்யக்திவிசேஷமிவர். இப்படிப்பட்ட மஹான்களினுடைய பரிசயத்தை உலகுக்குச் செய்விக்க வேண்டியதையே முக்கியமாகக் கொண்டு இந்தத் தன் சரிதையெழுத விருப்பங்கொண்டேனென்பது மறக்கத்தக்கதன்று. முற்காலங்களில் பலநாடுகளில் பலமஹான்கள் அவதரித்திருந்தார்கள்; அவர்களைப்பற்றி நாம் ஒன்றுமே தெரிந்துகொள்ள முடியாமலன்றோ இருக்கிறது. அக்குறை தீரவேணுமென்பதே முக்கியமான உத்தேச்யம். அடியேனுடைய இளமை முதல் வர்த்தமான காலம்வரையில் ஸேவைஸாதிக்கும் பெரியார்களைப் பெரும்பாலும் இதில் அநுபவிக்கிறேன். சில பெரியார்களின் திருவுருவப்படங்கள் கிடைக்கப்பெறாமல் அதற்காக முயன்று வருகின்றேன்.



ஸ்ரீமதுபயவே வேதவ்யாஸபட்டர் திருமலை ஐயங்கார் (கோவை)

அடியேனறிந்த ஸகல மஹான்களினுடையவும் திருவுருவப்படங்களை சேகரித்து வெளியிடவேணுமென்கிற அபிநிவேசம் அடியேனுக்கு இன்று நேற்றல்ல; முப்பது வருஷமாகவேயுண்டு. அன்றுமுதலாகவே பல மஹநீயர்களின் திருவுருவப்படங்களை ஸம்பாதித்து ப்ளாக்கு செய்வித்து அம்ருதலஹரீ, ஸ்ரீராமாநுஜன் முதலான பத்ரிகைகளிலும் சில புத்தகங்களிலும் வெளியிடுவித்துமிருக்கிறேன். வெகுகாலமாய்விட்டபடியால் அந்தப்ளாக்குகள் மலினமாய்ப் போகவே புதிதாகச் செய்விக்கவும் நேர்ந்தது. இந்தத் தன்சரிதையில் சேர்ப்பதற்கென்றே ஏறக்குறைய நூறு மஹான்களின் திருவுருவப்படங்களை வெகு சிரமப்பட்டு ஸம்பாதித்தேன். ஆனாலும் இதில் த்ருப்தி பிறக்கவில்லை. இன்னும் அனேகமஹான்கள்

அடியேனுடைய ஸ்ம்ருதிஸரணியில் எழுந்தருளியிருக்கின்றார்கள். தென்கலையார் வடகலையாரென்கிற வாசியில்லாமல் ப்ரதிஷ்டிதர்களான எல்லாருடையவும் திருவுருவப்படங்கள் இச் சரிதை நூலில் சேர்ந்து திகழவேணுமென்பது அடியேனுடைய அவா. இவ்வபிநிவேசத்தை நாநாதேசங்களிலுள்ள அடியேனுடைய ஆப்தர்களுக்கும் ஸௌஹ்ருத்துக்களுக்கும் சோம்பாமல் அடிக்கடி தெரிவித்துக்கொண்டுமிருக்கிறேன். இச்சரிதையை நான்கு பகுதிகளில் முடிப்பதாக முன்பு விஜ்ஞாபித்திருந்தாலும் அப்படியொரு நிர்ப்பந்தமில்லை. அடியேனுடைய ஆசைதீர உத்தேசியர்களின் திருவுருவப்படங்களெல்லாம் இதில் வெளிவரவேணுமென்பதே முக்கியமான கருத்து. என் வாழ்க்கையில் என்சரிதையில் தொடர்புள்ளவர்களை விடேன்.

கோயம்புத்தூரில் மஹாதனிகரும் மஹாதார்மிகருமான C. V. வெங்கடரமணையங்காரென்பவரை உலகமெல்லாம் நன்கறியும். அந்த ஸ்வாமி பரமபதித்துப் பத்து வருஷமாகிறது. அதற்குமுன் பதினைந்து வருஷகாலம் அந்த ஸ்வாமியோடு மிக நெருங்கிய பழக்கமிருந்ததடியேனுக்கு. அவர் வடகலை ஸம்ப்ரதாயஸ்தரானாலும் கலாபேத ப்ரதிபத்தியைச் சிறிதும் கொள்ளாமல் ஸர்வபூதஸௌஹ்ருத்தாக இருந்தவர். அவருடைய ஜாமாதா ஸ்ரீஉவே C. R. ராமஸ்வாமி ஐயங்கார் (அட்வகேட்) இங்கே ஸேவை ஸாதிக்கிறார் காண்மின். இந்த ஸ்வாமி ஸ்ரீமத் பரமஹம்ஸ வானமாமலை ஸ்வாமி திருவடி ஸம்பந்தம் பெற்றவர். விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவோத்தமர். திவ்யப்ரபந்த வியாக்கியானங்கள் ரஹஸ்ய வியாக்கியானங்கள் முதலான ஸ்வரூபக்ரந்தங்களையெல்லாம் பன்முறைஸேவித்தவர். மேலே ப்ரஸ்தாவித்த பட்டர் ஸ்வாமியின் க்ருபைக்குப் பாத்ரபூதராய் ஸகலார்த்தங்களும் கேட்டவர். ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரஜ்ஞரென்று திண்ணமாகச் சொல்லலாம். இந்த ஸ்வாமியோடு நெருங்கிய பழக்கம் அடியேனுக்கு அனேக ஸம்வத்ஸரங்களாகவுண்டு. அடிக்கடி சென்னையுபந்யாஸ ஸபைக்கு எழுந்தருளியநுக்ரஹிப்பவர். விசேஷகாலங்களில் காசிக்குஞ்



ஸ்ரீமதுபயவே C. R. ராமஸ்வாமி ஐயங்கார், B.A., B.L., கோயம்புத்தூர்

மெழுந்தருளி நீர்மையில் தலைநின்றிருப்பர். இப்படிப்பட்ட மஹான்கள் *வையம் மன்னிவீற்றிருந்து விண்ணுமாள்வர்மண்ணூடே* என்கிற மங்களாசாஸனத்திற்கு உரியவர்கள். பிற்காலத்தில் இவர்களுடைய ஸ்தானத்தைப் பூர்த்திபண்ண வல்லவர்களில்லையே யென்கிற குறை அடியேனை இப்போதே நலிகின்றது



ஸ்ரீமதுபயவே. வித்வத்வரிஷ்டர்; வங்கீபுரம் நவநீதம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி. உப்பிலியப்பன் ஸன்னிதி (வைகுண்டவாஸி).

திருக்குடந்தை ஸமீபத்திலுள்ள திருவிண்ணகரென்கிற உப்பிலியப்பன் ஸன்னிதியில் நவநீதம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தரான மஹான் எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி 10, 12 ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு திருநாட்டுக் கெழுந்தருளினவர். இந்த ஸ்வாமியினுடைய க்ருபைக்கு அடியேன் மிக்க இளமையிலேயே இலக்காகப் பெற்றவன். மஹா ஜ்ஞாநாதிகராயும் சிஷ்டவரிஷ்டராயு மெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமியை ஸேவிப்பதற்கென்றே அடியேன் சிலஸமயம் திருவிண்ணகர்க்கு விடை கொண்டிருக்கிறேன். ஸ்வாமியும் பன்முறை காஞ்சிக்கெழுந்தருளிப் பரமாநுக்ரஹம் செய்தருளியிருக்கிறார். ஸ்வாமி அனேக க்ரந்தங்களை முத்ரணம் செய்வித்தருளியிருக்கிறார். மஹாபாரதம், ச்ருதப்ரகாசிகைக்கு வியாக்கியானமான பாவப்ரகாசிகை, ஸவ்யாக்க்யானமான மீமாம்ஸாபாதுகை முதலான க்ரந்தரத்னங்களை க்ரந்தலிபியிலும், நயமயூகமாலிகை, சாரீரக சாஸ்த்ரார்த்த தீபிகை முதலான க்ரந்தங்களை தேவநாகராக்ஷரத்திலும் பதிப்

பித்த மஹோபகாரகர். ஸ்வாமியின் திருக்குமாரர்களிருவர் சிறந்த வித்யா நிதிகளாக விளங்கி வருகிறுர்களென்பது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது. மூத்த புதல்வரான ஸ்ரீஉவே. வ. ந. ஸ்ரீராமதேசிகாசாரியர் வடமொழி தென்மொழிக் கடலில் பரிபூர்ண பாரங்கதர். இளைய புதல்வரான ஸ்ரீமான் சேஷாத்ரி வடமொழியிலும் ஆங்கிலத்திலும் மிக்க தேர்ச்சிபெற்று அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் உயர்ந்த ஆசிரியராக விளங்கி வருகிறுர். இவ்விரு புதல்வர்களும் ஸகலவிதத்திலும் திருத்தந்தையாரை அதிசயித்தவர்களென்றுல் மிகையாகாது.

திருவஹீந்திரபுரத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீஉவே. கச்சிக்கிடாம்பி. பாஷ்யகாராசார்ய ஸ்வாமி ஏழெட்டு வருஷங்களுக்கு முன்னமே திருநாட்டுக்கெழுந்தருளினவராகையாலே அந்த ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவமண்டலம் நன்கறியும். இந்த ஸ்வாமி ந்யாய சாஸ்த்ரத்திலும் உபய வேதாந்தங்களிலும் நிஷ்ணுதர். ஸ்வாமியினுடைய பரிசயம் அடியேனுக்கு முப்பது ஸம்வத்ஸரங்களுக்கு மேலுண்டு. ஆனுல் மிக நெருங்கிப் பழகி வார்த்தையாட அதிகமாக நேர்ந்ததில்லை. ஆங்காங்கு திவ்ய தேசங்களில் உத்ஸவ காலங்களில் ஸேவை ஸாதிப்பர். ஏற்கெனவே ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸ்ரீரங்கம் எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் ப்ரசம்ஸையை இந்த ஸ்வாமி சில ஸமயங்களில் செய்தருளக் கேட்டிருக்கிறேனுதலால் இவர்க்கு அந்த ஸ்வாமி ஸன்னிதியில் சாஸ்த்ராத்யயனங்கள் நடந்ததாக அடியேன் க்ரஹித்திருப்பதுண்டு. அடியேனுடைய வேதாசார்யரான மாம்பள்ளம் ஸ்வாமி இந்த ஸ்வாமியினுடைய வித்யாபரிச்ரமங்களைப் பற்றி அடிக்கடி ஸாதிப்பதோடு இந்த ஸ்வாமி ஆழ்ந்த ஞானமுடையவரென்றும் சில ஸந்தர்ப்பங்களில் ஸாதிக்கக் கேட்டிருக்கிறேனுதலால் இந்த ஸ்வாமியை விசிஷ்ட வித்வானென்று போற்றுவனடியேன். ஒரு ஸமயம் திருவரங்


ஸ்ரீமதுபயவே. ந்யாயவேதாந்த வித்வான்.
திருவயிந்திரபுரம், கச்சிக்கிடாம்பி.
பாஷ்யகாராசார்ய ஸ்வாமி. (வைகுண்டவாஸி)

நம் பெரிய கோயிலில் எம்பெருமானார் ஸன்னிதியில் பெரியார்களுடைய நியமனத்தினால் அடியேன் ஏதோ உபந்யஸித்துக்கொண்டிருக்கையில் * अत्ता चराचर ग्रहणात् —அத்தா சராசரக்ரஹணாத்* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தை யுதாஹரித்துச் சொல்ல நேர்ந்தது. இந்த ஸ்வாமியும் அப்போது அந்த கோஷ்டியிலெழுந்தருளியிருந்தார். "சராசர க்ரஹணாத்" என்பதற்கு அடியேன் பொருள் விவரிக்கும்போது, இந்த ஸூத்ரத்திற்கு விஷய வாக்யமான "यस्य ब्रह्म च क्षत्रं च—யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச" இத்யாதிச்ருதியில் ப்ரஹ்மக்ஷத்ர சப்தங்களுக்கு ஸமஸ்த சராசரங்களும் பொருளாக க்ரஹிக்கப்படுகின்றமையாலே என்று அர்த்தமாக விஜ்ஞாபித்தேன். இந்த ஸ்வாமி அப்போதே 'ஸ்ரீபாஷ்யத்தில் இப்படி அர்த்தம் ஸாதிக்கப்பட்டிருக்கவில்லையே' என்று ஸாதித்து "சராசரங்களை யெல்லாம் பகவான் க்ரஸிக்கிறபடியாலே" என்றுதான் ஸ்ரீபாஷ்யத்தில் விவரணமுள்ளதென்று ஸாதித்தார். கூட இருந்த சில வித்வான்களும் அப்படித்தானென்றார்கள். அவர்களையெல்லாம் மறுத்துச்சொல்ல அடியேனுக்கு அப்போது தைரியம் போதாமையாலே "அடியேன் த்ருடமாக க்ரஹித்திருக்கிற அர்த்தத்தை அடியேன் விஜ்ஞாபித்தேன்; பிறகு ஸ்ரீகோசங்களை வைத்துக் கொண்டு ஆராய்ச்சி செய்வோம்" என்று சொல்லி மேல் விஷயத்திற்குச் சென்று விட்டேன். பிறகு அந்த ஸ்வாமி வேகமாக எழுந்தருளி ஸ்ரீபாஷ்ய ஸ்ரீகோசத்தை ஸம்பாதித்துக் கொணர்ந்து.

"अत्रोच्यते * अत्ता चराचरग्रहणात् * अत्ता परमात्मैव; कुतः?

चराचरग्रहणात्—चराचरस्य कृत्स्नस्य अत्तृत्वं हि तस्यैव संभवति ।"

என்கிற ஸ்ரீபாஷ்ய ஸூக்திகளைக் காட்டி யருளி தாம் ஸாதித்த அர்த்தத்திற்கு அநுகுணமாக ஸ்ரீபாஷ்ய ஸூக்தியிருப்பதாக நிரூபித்தார். அங்கேயே இரண்டு மூன்றுவரிகளுக்குமேல் "कृत्स्नं चराचरं जगदिह अदनीयौदनत्वेन गृह्यते" என்று ஸ்ரீபாஷ்ய ஸூக்தியிருப்பதையும், வேதாந்த தீபத்தில் "सूत्रार्थः-ब्रह्मक्षत्रौदनस्यात्ता परमात्मा ; ब्रह्मक्षत्रशब्देन चराचरस्य कृत्स्नस्य जगतो ग्रहणात्" என்றிருப்பதையும் அடியேன் எடுத்துக்காட்டினேன் அதற்குமேல் அந்த ஸ்வாமி வேதாந்த ஸாரத்தில் 'अत्ता परमपुरुषः ; ब्रह्मक्षत्रोपलक्षितस्य चराचरस्य कृत्स्नस्य मृत्यूपसेचनत्वेन अदनीयतया ग्रहणात्" என்றிருக்கிற ஸ்ரீஸூக்தியை எடுத்துக்காட்டியருளுகிறார். சூழ்ந்திருக்கிற வித்வான்கள் "ஸ்ரீபாஷ்யகாரருக்கு இரண்டுவகையும் திருவுள்ளமானதேயென்று கொள்ளலாமே; இதில் விவாதத்திற்கே ப்ரஸக்தியில்லையே யென்கிறார்கள். ஸ்ரீபாஷ்ய தீபஸாரங்களாகிற மூன்று க்ரந்தங்களுக்கும் ஒரே வகையான அர்த்தந்தான் அபிப்ரேதம் என்று அடியேன் விஜ்ஞாபனம் செய்து நின்றுவிட்டேன். அந்த ஸ்வாமி சில மாதங்களுக்குப் பிறகு ஸ்ரீகாஞ்சிக் கெழுந்தருளியிருந்தபோது "நீசொன்னது உபபந்நமாகவே பட்டது; ஆனால் இவ்விடத்தில் ப்ரமிப்பதற்கு ஸாமக்ரியுண்டு" என்று கனிந்த திருவுள்ளத்தோடு ஸாதித்தார். ஸூத்ரத்திலுள்ள க்ரஹணசப்தத்திற்கு பகவான் செய்கிற சராசரக்ரஹணம் [அதாவது சராசரங்களையெல்லாம் உட்கொள்ளுதல்] அர்த்தம் என்று பலர் மயங்கக் கூடியதே; அப்படி அர்த்தம் கொண்டால் ஸூத்ரத்தை நிர்வஹிக்கவே ஸாத்யமாகாது என்றும் ஸாதித்தார். இந்த ஸ்வாமியினுடைய அத்விதீயரான திருக்குமாரர் ஸ்ரீஉவே. யாமுநாசார்யரென்பவர் திருத்தகப்பனார் பக்கலிலேயே ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களெல்லாமதிகரித்துச் சிறந்த ஜ்ஞானவானாய்த் திருமலை திருப்பதி ஸம்ஸ்க்ருத கலாசாலையில் திவ்யப்ரபந்த ப்ரவசநகர்த்தராயிருக்கின்றார். ஸம்ப்ரதாய க்ரந்தப்ரவசநமும் செய்து போருகிறார்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸ்ரீமதுபயவே. மேலைவாத்யார் திருமலை ஐயங்கார் ஸ்வாமி ப்ரஸித்த வித்வானுக எழுந்தருளியிருந்தார். இந்த ஸ்வாமி திருநாட்டுக்



(வைகுண்டவாஸி) ஸ்ரீமதுபயவே. ஸ்ரீவில்லிபுத்தூர் வித்வான் மேலைவாத்யார் திருமலை ஐயங்கார் ஸ்வாமியின் காலக்ஷேபகோஷ்டி.

கெழுந்தருளிப் பத்து வருஷமாகிறது. இவர் அடிக்கடி காஞ்சீப்ராந்த மெழுந் தருள்வர். ரஸிகவித்வான்களில் இந்த ஸ்வாமி முன்னணியில் நிற்பவராக விளங் கினவர். இவர்க்கு ஆசுகவி யென்று விருதுண்டு. இருபத்தைந்து வருஷகாலமாக பெரும்பாலும் ஆண்டுதோறும் மதுரையில் நடைபெற்று வரும் ஸத்ஸம்ப்ரதாய ஸபைக்கு இந்த ஸ்வாமி தவருமல் எழுந்தருள்வது வழக்கமாயிருந்தது. அப்போது ஸ்வாமியின கவிதா சாதுர்யத்தை ஸப்யர்கள் அபரிமிதமாக வநுபவித்துக் களிப் பர்கள். ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸுப்ரஸித்த ஜ்ஞாநாநுஷ்டாந நிதியாக எழுந்தருளி யிருந்த ஸ்ரீமத் சிறுபுலியூரண்ணன் ஸ்வாமி திருவடிகளிலே பழுக்க ஸேவித் திருந்து தர்ம சாஸ்த்ராதிகளிலும் அபூர்வமான விஷயங்களை க்ரஹித்திருந்தவர் இந்த ஸ்வாமி. திருமலை திருப்பதியில் ஏறக்குறைய இருபது ஸம்வத்ஸரகாலமாகச் சிறிய கேள்வி ஜீயர் ஸ்தானத்தை யலங்கரித்தருளா நின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ. சின்னஜீயர் ஸ்வாமிக்குப் பூர்வாச்ரமத்தில் மாதுலராவர் இந்த ஸ்வாமி. முப்பது வருஷங்களுக்கு மேலாகவே இந்த ஸ்வாமியின் ப்ரீதி விசேஷங்களைப் பெற்றிருக் கிறேன். அடியேனுக்கு இவர் மாதந்தோறும் நான்கு ஸ்ரீமுகங்களுக்குக் குறை யாமல் ஸாதித்துக் கொண்டிருப்பர். எல்லாம் ச்லோகரூபமாகவே எழுதியருள்வர். இவர் காஞ்சியில் வைசாகோத்ஸவத்தையும், திருமலையில் திருவேங்கடமுடை யானுத்ஸவத்தையும் பலகாலெழுந்தருளி ஸேவித்திருக்கிருர். 'நீசனேன் நிறை யொன்றுமிலே னென்றிருக்கிற அடியேன் விஷயத்திலும் இந்த ஸ்வாமி வாசாம கோசர ப்ரேம விசேஷத்தினுல் தம்முடைய திருவாக்கைச் செலுத்திப் பலபல

கவிதைகளை இயற்றியிருக்கிறார். அவை அச்சிடப்பட்டு மிருக்கின்றன. இந்த ஸ்வாமி வேதாத்யயநமும் செய்திருந்தது விசேஷித்துக் குறிப்பிடத் தகுந்தது.



(நூஜிவீடு ஸம்ஸ்தான ஸமீபம்) பொம்மலூரில் நடந்த வித்வத் பரிஷத்து

ஹைதராபாத்தில் சிலவாண்டுகட்கு முன்பு ஒரு க்ரது நடைபெற்றது. அதற்காகக் காஞ்சீ, வானமாமலை முதலான விடங்களிலிருந்து பல வித்வான்களும் வைதிகர்களும் ஆஹூதர்களாய் அவ்விடம் வந்திருந்தார்கள். கீழ் இரண்டாம் பகுதியில் (பக்கம் 109ல்) ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸ்ரீமத் நூஜிவீடு நடாதூர் சடகோபாசாரியரும் அப்போது அவ்விடத்திற்கு வந்திருந்தார். அவ்விடத்தில் க்ரது ஸமாப்தமானவுடனே அவரவர்கள் தம்தம் ஸ்தானங்களுக்குத் திரும்பிப் போகையில் மேலே குறித்த சடகோபாசாரியர் தக்ஷிணதேசீய வித்வான்களை ஸ்வஸ்தானத்திற்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோய் ஒரு பண்டித பரிஷத்து நடத்தி ஸத்கரிக்க வேணுமென்று ஆசைகொண்டு அப்படியே பிரார்த்தித்து அழைத்துக்கொண்டு போனார். இவர் உபபங்கரான ஜாகீர்தாரராகையாலே நூஜிவீடு தவிர வேறு சில ஊர்களிலும் ஆஸ்பதமுடையவர். நூஜிவீடு ஸ்டேஷன் ஸமீபத்தில் 'பொம்மலூரு கண்ட்ரிக' என்பது இவருடைய சிறந்த க்ராமம். அவ்விடத்தில் பெரிய தோட்டத்திற்குள் மஹரிஷிகளின் ஆச்ரமம் போன்றது இவருடைய வஸதி. வைசால்யத்தில் குறையில்லை. அவ்விடத்தில் தாமழைத்துவந்த வித்வான்களைக்கொண்டு ஒரு நாள் பரிஷத்து வெகு சிறப்பாக நடத்தி பரத்வாஜாச்ரம ததீயாராதனமும் செய்வித்து லோகோத்தரமாக ஸன்மானித்தார். அப்போதைய பரிஷத்தில் ஸேவை ஸாதிக்கின்றவர்களில் சில பெரியார்களைப்பற்றி மட்டும் விஜ்ஞாபிக்கிறேன். இவ்விடத்து உருவப்படத்தில் அடியேனுடைய வலக்கையை யொட்டி வீற்றிருப்

பவரே ப்ரஸ்துத சடகோபாசாரியர். அவருடைய வலது கையை யொட்டி வீற்றிருப்பவர் ஸ்ரீமதுபயவே. வானமாமலை. வித்வான் கோபாலையங்கார் ஸ்வாமி. இந்த ஸ்வாமி சிறந்த சாஸ்த்ரஜ்ஞர். வானமாமலையிலுள்ள ஸ்ரீராமாநுஜ வித்யாலயத்தில் இந்த ஸ்வாமி ப்ரதாநோபாத்யாய பதவியை அலங்கரித்து வருகிறார். நல்ல நிரூபண நிபுணரான பண்டிதர். அந்த வுருவப்படத்தில் அடியேனுடைய இடக்கையை யொட்டி வீற்றிருப்பவர் ஸ்ரீஉவே. கிடாம்பி. வெங்கட நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி. நூஜிவீடு ஸம்ஸ்தானத்தில் வெகுகாலம் ப்ரபலவித்வானாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத். (வைகுண்டவாஸி) கிடாம்பி. கோபால க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் ஜ்யேஷ்ட புத்ரரிவர். வியாகரண வேதாந்தங்களில் உத்தீர்ண பண்டிதர். திருத்தகப்பனாரிடத்திலேயே பகவத் விஷயத்தை நன்றாக அதிகரித்து ப்ரவசனத்திலும் சக்தரானவர். சில வருஷங்களாக இவர் நெல்லூர் ஸ்ரீரங்கநாயகன் ஸந்நிதியில் இதிஹாஸ புராண பகவத்விஷய ப்ரவசனங்கள் செய்துவருகின்றார். ஒரு பர்யாயம் இந்த ஸ்வாமி அடியேனுடைய பதரிகாச்ரம யாத்திரையில் அந்வயித்திருந்தபடியால் *அஹம் வேத்மி மஹாத்மாநம்.



மூன்றாவதான பதரிகாச்ரம யாத்திரையில் அந்வயித்த ஸ்வாமிகள்.

அடியேனுடைய மூன்றாவதான பதரிகாச்ரம யாத்திரையிலெடுத்த உருவப் படங்களில் ஒன்று இங்கே காணத்தக்கது. இதில் இந்தவெங்கடநரஸிம்ஹாசார்ய ஸ்வாமி இரண்டாவது வரிசையில் முதலில் நன்றாக ஸேவை ஸாதிக்கிறார்.

பொம்மலூருருவப்படத்தில் வெங்கடநரஸிம்ஹாசார்யருடைய இடதுகையையொட்டி வீற்றிருப்பவர் ஸ்ரீ உ.வே. வானமாமலை வித்வான் சடகோபய்யங்கார் ஸ்வாமி.



ஸ்ரீ உ.வே. வானமாமலை. வித்வான்
வா ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி

அந்த ஸ்வாமி ஜ்ஞாநாதிகராயிருப்பதோடு வயோதிகருமாயிருக்கையாலே அவரைப்பற்றிச் சிறியேன் எழுத அர்ஹதையற்றவன். சாஸ்த்ர ஜ்ஞாநஸூரபியான ஸம்ப்ரதாயஜ்ஞானமமைந்த இந்த மஹா ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாடுகிறேன். இந்த ஸ்வாமியின் இடது திருக்கையையொட்டி வீற்றிருப்பவர் வானமாமலைமடம் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ உ.வே. தே. திருமலாசாரியர் ஸ்வாமி யென்பார். நெடுநாளாக அடியேன் இந்த ஸ்வாமியினுடைய ஹார்த ஸௌஹார்தபாத்ரபூதனென்பதை விசிஷ்ய விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன். வானமாமலையில் பரம்பரையாகவே சிறந்த வித்வன்மணிகளுள்ளார்களென்பது ஸுப்ரஸித்தம். அடியேனறிந்து பல வித்வான்கள் அந்தர்த்தானமாய் விட்டார்கள். இற்றைக்கும் ஏழெட்டு வித்வான்கள் அவ்விடத்தில் ஸேவை ஸாதித்து வருவது ஸந்தோஷாஸ்பதம். ஸ்ரீ உ.வே. வாத்யார் ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி யென்கிற வித்வான் ந்யாய வேதாந்தங்களில் மிகத் தேர்ச்சிபெற்று விளங்குகின்றார். அடியேன் இளமை தொடங்கியே இந்த ஸ்வாமியின் பரமக்ருபைக்குப் பாத்திரமானவன். இந்த ஸ்வாமி அடியேனுக்கு ஸாதித்திருக்கிற ஸ்ரீமுகங்கள் பல நூற்றுக் கணக்கில் தேறும் அந்த ஸ்வாமிக்கு அடியேனெழுதிய விஜ்ஞாபனங்களுமப்படியே. உபய வேதாந்தரஹஸ்யாதிகளில் நுட்பமான பல விஷயங்களைப் பெரியார் பக்கலில் கேட்ட பஹுச்ருதரிவர். நெடுநாளாகப் பரம்பரையாய் இப்படிப்பட்ட வித்வன்மணிகளால் நிறைந்து விளங்கிக்கொண்டிருக்கின்ற வானமாமலை க்ஷேத்திரத்தில் ஸம்ஸ்க்ருத வித்யா ப்ரசாரம் மேன்மேலும் அபிவிருத்தியடைந்துவர வேண்டியது மிக அவசியமானது. ஆனால் பாஷாந்தர ப்ரசாரபாஹுள்யத்தினால் ஸம்ஸ்க்ருத வித்யை எங்குமே மலினமாகி வருகின்றது. இது ஸம்ஸ்க்ருதாபிமானிகளுக்கு அபரிஹார்யமான சோகம். இதைப்பற்றி நினைக்கும்போதும் எழுதும்போதும் அடியேனுக்குண்டாகிற நிர்வேதம் அபரிமிதம். ஸ்ரீவானமாமலையில் தற்காலம் ஆஸ்தானத்தை யலங்கரித்தருளாநின்ற ஸ்ரீஸ்வாமி அப்ரதிம வித்வத்ஸார்வ



பௌமராகையாலும், ஸம்ஸ்க்ருத வித்யாபிவிருத்தியில் விசேஷச்ரத்தை கொண்டவராகையாலும் அடியேன்போல்வாருடைய நிர்வேதம் நாளடைவில் தலைமடியும் என்கிற நம்பிக்கையுண்டு.

வானமாமலையிலெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ உவே. வித்வான் N. S. சடகோபய்யங்கார் ஸ்வாமி அடியேனுக்கு இளமையிலிருந்து பரமஸ்நிக்தர். ஸ்ரீமத்பரமஹம்ஸ சின்ன கலியன் ஸ்வாமியின் பரமக்ருபாப்ரவாஹம் அடியேன்மீது ப்ரஸரிக்கும் நாள் தொடங்கியே (ப்ரஸ்துத) சடகோபய்யங்கார் ஸ்வாமியின் ஹார்த ஸௌஹார்த விசேஷத்திற்குப் பாத்ரபூதனுயிருந்து வருகிறேன்.

வானமாமலையில் திருவவதரித்து 25, 30 வருஷங்களுக்கு மேலாக ஸகிந்தராபாத் மஹாநகரத்தில் ஸ்ரீலக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியில் ஸர்வாதிகாரி ஸ்தானத்திலெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமத் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் குணுதிசயங்களை யறியாதவர்கள் துர்லபரென்றே சொல்லவேணும். இந்த ஸ்வாமி ஸ்ரீமத்பரமஹம்ஸ. சின்னகலியன் ஸ்வாமி திருவடிகளில் பழுக்க ஸேவித்திருந்து ஸகலார்த்தங்களும் கேட்ட மஹான். அந்த ஸ்வாமியின் திவ்யாஜ்ஞா பரிபாலனுர்த்தமாகவே ஸ்வஸ்தான வாஸத்தை விட்டுவிட்டு அந்யத்ர வஸித்துவருகிறுர். இந்த ஸ்வாமியும் இவருடைய திருக்குமாரரான ஸ்ரீ தெய்வநாயகமையங்காரும் நம்முடைய வாக்குக்கு அடங்காத நற்குண நற்செய்திகளை யுடையவர்கள். "परोपकाराय सतां विभूतयः- பரோபகாராய ஸதாம் விபூதய:" என்று ஓலைப்புறத்திலே கேட்டிருக்கிறோமத்தனை. வஸ்துத: ப்ரத்யக்ஷீகரிப்பது இவர்களிடத்திலே. இவ்விஷயம் பலர்க்கும் அநுபவ ஸாக்ஷிகமாயிருக்குமாகையாலே இங்கு இதனை விஸ்தரிக்க அவசியமில்லை யென்று நினைக்கிறேன். அடியேனுக்கு இவர்களுடைய பழக்கம் இருபது வருஷங்களுக்கு மேலாகவுண்டு. *வல்வினையேனையீர்கின்ற குணங்களையுடையரான இவர்களுக்குப் பல்லாண்டு பாடுவதொன்றே அடியேனுக்குற்றதாகத் தோன்றிற்று. இவர்களுடைய பரமப்ரீதியின் பலனுக, ஸ்ரீவைஷ்ணவ மஹாமணியான ஒரு மஹானுடைய அவ்யாஜஸௌஹார்தம் அடியேனுக்கு நெடுநாளாகக் கிடைத்திருக்கிறது. அந்த மஹானே ஸ்ரீமத் முடும்பை ஸௌந்தரராஜய்யங்கார் ஸ்வாமி யென்பவர்.



ஸ்ரீமதுபயவே. வானமாமலை தே. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி. (ஸகிந்தராபாத். ஸ்ரீலக்ஷ்மீநாராயணன் ஸன்னிதி யதிகாரி.)

இப்பெரியார் ஸ்ரீபெரும்பூதூர் ப்ராந்தத்தில் அவதரித்தவரேயாயினும் நெடுநாளாக ஹைதராபாத் மஹாநகரத்தில் ப்ரதிஷ்டிதராக விளங்கி வருகின்றார். ஹைதராபாத் நகரத்திற்கே மிகச் சிறந்த பூஷணமாக விளங்கி வருகின்றார். இந்த ஸ்வாமியின் க்ருஷிபலமாக ஆங்காங்கு அனேக நற்காரியங்கள் நடைபெற்று வருகின்றன. ஸமீப காலத்தில் ஹைதராபாதில் நிர்மாணமாகியிருக்கின்ற பாலாஜீபவன மென்னும் மிக வுயர்ந்த ஸ்தான விசேஷம் இந்த ஸ்வாமியின் ப்ரயத்னபலனுகவே நிறைவேறியது. ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீவானமாமலை ஸ்வாமியின் திருவடிகளான விவர்க்கு ஆசார்ய பக்தி மிகச் சீரியது. அதனுலேயே "அரியதெளிதாகும்" என்கிற பூதத்தார் பாசுரம் இந்த ஸ்வாமி விஷயத்தில் நன்கு பலித்து வருகின்றது. வயோவ்ருத்தரான இந்த ஸ்வாமி இன்னும் நீண்டகாலம் இவ்விபூதியை அலங்கரித்திருந்து அரிய பெரிய பல நற்காரியங்களை நிறைவேற்றி வைக்கவேணுமென்று ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுவதும் மங்களாசாஸனம் செய்யக் கடமைப்பட்டது. நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயமும் ஸநாதநதருமமும் உலகமெல்லாம் பரவவேணு மென்கிற பாரிப்பு இந்த ஸ்வாமியின் திருவுள்ளத்தைக் கபளீகரித்திருக்கின்ற தென்பதை இந்த ஸ்வாமி அடிக்கடி அடியேனுக்கெழுதும் ஸ்ரீமுகங்களினுல் நன்கறிகின்றேன்.



ஸ்ரீ உவே. M. ஸௌந்தர ராஜய்யங்கார் ஸ்வாமி ஹைதராபாத்.

ஹைதராபாத் நகரத்தில் 'ஸீதாராம்பாக்' என்னுமிடம் மிகவுயர்ந்த ஸ்தான விசேஷமென்பதையும், அடியேன் இளமையில் அவ்விடத்தில் பத்தெட்டு மாஸ காலம் ஸ்ரீகாதி ஸ்வாமி திருவடி வாரத்தில் வாழ நேர்ந்த தென்பதையும் முதற்பகுதியில் பக்கம் 28ல் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அந்த ஸீதாராம்பாக்கில் அந்த நாட்டு ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகள் விசேஷமாக விளங்குகிறார்கள். அவர்கள் விலக்ஷணர்களாகவுமிருக்கிறார்கள். த்ராவிடர்களும் ஆந்திரர்களுமுள்ளார்கள். அக்காலத்தில் அவர்கள் ஸாமான்யமாக ஸம்ஸ்க்ருத பாடங்கள் வாசித்துக் கொண்டிருந்தார்கள். அது ஒரு பாடசாலையாக ஏற்பட்டு அது நாளடைவில் அபிவிருத்தியடையத் தொடங்கிற்று. நைஜாம்ப்ராந்தத்திலுள்ள நாநாக்ராமங்களிலிருந்து பல வித்யார்த்திகள் அங்கு வந்து சேர்ந்து சாஸ்த்ரங்களும் வாசிக்கத் தொடங்கினர்கள். 70, 80 வித்யார்த்திகளுக்குமேல் சேர்ந்து உயர்தரக் கலாசாலையாகவும் விளங்கிற்று. இந்தக் கலாசாலையின் மூலமாக வாசித்துத் தேறின பண்டிதர்கள் அந்த ப்ராந்தத்தில் பலருள்ளார்கள். அவர்களில் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதிகாரிகளு மிருக்கின்றார்கள். பல ஸேட்டுக்கள் அபிமானித்து விசேஷ ஸஹாயம் செய்ததோடு அரசாங்கத்தாரும் சிறந்த வுதவிகள் (க்ராண்டு) புரிந்ததனுல் இக்கலாசாலை நல்ல ப்ரதிஷ்டையை யடைந்தது. அவ்வூரில் ஹிமாயத் நகரில் ஸமீபகாலத்தில் அமைந்த பாலாஜீபவனத்தில் இக்கலாசாலை ஆதரிக்கப்பட்டதென்றும், தேச ப்ரஸித்தரான மஹநீய ராஷ்ட்ரபதி ராஜேந்த்ரப்ரஸாத் அவர்கள் 2—7—56ல் இதில் அந்வயித்துக்கொண்டாரென்றும் கேட்டுமகிழ்கிறோம். இதெல்லாம் இந்த ஸௌந்தர ராஜய்யங்கார் ஸ்வாமியின் க்ருஷிபலனே.

ஸ்ரீமான் உவே. S. ராகவய்யங்கார் ஸ்வாமியை லௌகிகர்களும் வைதிகர்களும் நன்கறிவர்கள். இந்த ஸ்வாமிக்கு 'ராவ்ஸாஹிப்' என்கிற டைடல் உண்டு. மிகவுயர்ந்த உத்யோகத்தில் அமர்ந்திருந்து 10, 12 வருஷமாக விச்ராந்தராய் தியாகராய நகரில் ஸதா ஸத்க்ரந்த காலக்ஷேபமே போதுபோக்காக வாழ்ந்து வருகிறார். இந்த ஸ்வாமியின் ஸஹோதரர்களும் உயர்ந்தபதவிகளில் இருந்து இப்போது விச்ராந்தர்களாயிருக்கின்றார்கள். 25 வருஷங்களுக்கு மேலாக இந்த ஸ்வாமியின் பரம ப்ரீதி பாத்ரமாயிருந்து வருகிறேனடியேன். அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் வாரந்தோறும் தவறாமல் ப்ரேமகனமான ஸ்ரீமுகங்களை ப்ரஸாதித்துக் கொண்டேயிருப்பரிவர். இந்த ஸ்வாமிக்கு ஸம்ஸ்க்ருத பாஷையிலும் தாராளமான ப்ரவேசமுண்டாதலால் உபய வேதாந்த க்ரந்தங்களையும் ஸதா அவலோகனஞ் செய்துகொண்டும் அவற்றில் விமர்சங்களைச் செய்துகொண்டுமிருப்பர். இவர் அடியேனுக்கு ஸாதிக்கிற ஸ்ரீமுகங்களெல்லாவற்றிலும் பெரும்பாலும் ஸத்விஷய சர்ச்சைகளைத்தான் செய்துகொண்டிருப்பர். அந்த ஸ்ரீமுகங்களை அப்படியே அச்சிட்டு வெளியிடவேணுமென்கிற விருப்பமும் அடியேனுக்கு மிகமிக உண்டாவதுண்டு. ஆனால் இதுவரை அது நிறைவேறவில்லை. அடியேனெழுதிய ஸகல க்ரந்தங்களையும் [திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுட்பட, ஸகலஸ்தோத்ர வியாக்கியானங்களுட்பட, வாதக்ரந்தாதிகளுமுட்பட] ஒரெழுத்துவிடாமல் கடாக்ஷித்தருளியிருப்பவர்களில் இந்த ஸ்வாமி ப்ரதம பரிகணநீயரென்று திண்ணமாக வெண்ணியிருக்கிறேன். இந்த ஸ்வாமியோடு நேரில் வார்த்தையாடும்போதும், இவருடைய கடிதங்களைக் காணும்போதும் இது அடியேனுக்கு ஸ்பஷ்டமாக விளங்கும். சென்ற வருஷத்தில் இந்த ஸ்வாமி ஒரு பெரிய காரியம் செய்தருளி யிருக்கிறார். அதாவது, அடியேன் ஸம்ப்ரதாயார்த்த தத்வ விஷயமாக எழுதி வெளியிட்டிருந்த சில நூல்களிலிருந்து அனேக முக்க்ய விஷயங்களைத் திரட்டித் தொகுத்து ஸத்ஸம்ப்ரதாயார்த்தஸாரநிதி யென்னும் புத்தகத்தை 10—1—55ல் வெளியிட்டிருக்கிறார். அதில் அவருடைய முகவுரையிலிருந்து சில வாசகங்களை ஸங்க்ரஹிக்கிறேன் ;—



ஸ்ரீமத். ராவ்ஸாஹிப்
S. ராகவையங்கார் ஸ்வாமி
தியாகராயநகர்.

(ஸ்ரீ. S. ராகவையங்கார் ஸ்வாமியின் முகவுரை.)

" காஞ்சீபுரம் ஸ்வாமி பல பாஷைகளிலும் பல துறைகளிலும் நூல்களை உபகரித்து வருகிறாரென்பது யாவருமறிந்ததே. அவற்றைப் பெரும்பாலும் அடியேன் ஸேவிக்க பாக்யம் பெற்றிருக்கிறேன். ஸ்வாமியால் தெலுங்கு ஹிந்தி பாஷைகளிலும் பிரசுரிக்கப்படுகிற புத்தகங்களைப் பார்க்க அடியேனுக்கு அவகாசமில்லா

விட்டாலும் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் ஸ்வாமியால் பிரசுரம் செய்யப்படுகிற பத்ரிகைகளோ புத்தகங்களோ யாவும் அப்போதப்போது தவருமல் அடியேனுடைய அநுபவத்திற்கு வந்துகொண்டிருக்கின்றன; அடியேன் பரமாநந்த ஸந்தோஹத்துடனநுபவித்துக்கொண்டிருக்கிறேன். ஸ்வாமி பல துறைகளில் நூல்களை உபகரித்திருப்பதாக முன்னம் தெரிவித்தேனல்லவா? அந்த துறைகளில் விவாதத் துறை என்பதும் ஒன்று பிறர் வழி தவறி ஏதாவது எழுதியிருந்தால் ஸ்வாமி அதைப்பார்த்து வாளாவிருப்பவரல்லர். தகுந்த ப்ரமாண யுக்திகளைக்கொண்டு அதை உடனே கண்டித்து வெளியிட்டுவிட்டே திருக்கண் வளர்ந்தருள்வர். ஸ்வாமியின் வைபவங்களில் இது அநந்ய ஸாதாரணவைபவமாகக் காண்கிறது. ஸ்ரீமத் ஸ்வாமியால் ஸம்ப்ரதாயார்த்த விசாரங்களில் சிறுசிறு நூல்களாகப் பல புத்தகங்கள் வெளியிடப்பட்டிருப்பதால் இவை பிற்காலத்தவர்களுக்குக் கிடைக்க வழியில்லாமல் போகுமென்றும், அப்படியாகாமல் எக்காலத்திலுள்ளவர்களுக்கும் அவைகளை அநுபவிக்கும்படியாகச் செய்துவைக்க வேணுமென்றும் சில ஆப்தர்கள் அடியேனிடம் ப்ரஸ்தாவம் செய்வதுண்டு. அடியேனும் இதை அவச்யமானதென்றே யெண்ணி எவ்விதமாகச் செய்யலாமென்று யோஜித்து ஸ்வாமியின் சில க்ரந்தங்களிலிருந்து அனேக விஷயங்களைத் திரட்டி ஒன்றுசேர்த்து ஒரு புத்தகமாக்கி அதிலேயே எல்லா விஷயங்களையும் எல்லாரும் கண்ணாடிபோல் காணும்படியாக்கவேண்டி ஸந்ஸம்ப்ரதாயார்த்தஸாரநிதி தொகுத்தேன் ஸ்வாமியினுடைய ஸகல க்ரந்தங்களிலுமுள்ள ஸகலார்த்தங்களும் இச்சிறு நூலில் அடங்கிவிட்டனவென்று எண்ணவும் சொல்லவும் முடியாது. உண்மையில் பெருங்கடல் போன்றவையான ஸ்வாமியின் க்ரந்தங்களிலிருந்து ஸகல விஷயங்களையும் தொகுப்பதென்பது அஸாத்யமே. ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு காரணார்த்தமாக அவதரித்ததன்றே ஒவ்வொரு க்ரந்தமும். அப்படிப்பட்ட பல க்ரந்தங்களிலுள்ள இன்பசுவைகளை ஒரே நூலில் தொகுப்பதென்பது எப்படி ஸாத்யமாகும்? ஆனாலும் இந்த தொகுப்பானது ஸாரக்ராஹிகளுக்குப் பேருதவி புரியுமென்று திடமாக நம்புகிறேன்.” (S. ராகவையங்கார் ஸ்வாமியின் முகவுரையின் ஸங்க்ரஹமிது.)

ப்ராஸங்கிகமாக இங்கு ஒரு விஜ்ஞாபனம். அடியேன் இது காறும் நானூறு க்ரந்தங்களுக்குமேல் எழுதியிருக்கிறேனென்பதை ஆப்தர்கள் பலருமறிவர். அவை பெரும்பாலும் அச்சிடப்பட்டவையே. அச்சிடப்படாதவை மிகச் சிலவேயிருக்கும். இந்த 400 க்ரந்தங்களில், பிறருடைய நூல்களுக்கு மறுப்பாக எழுதப்பட்ட நூல்கள் குறைந்தபக்ஷம் நூறு தேறும். இவை எல்லாம் இப்போது கிடைக்க வழியில்லாமலிருக்கிறது. சிலவற்றில் நாலைந்து பிரதிகளேயிருக்கும். சிலவற்றில் ஒரே பிரதி தானிருக்கும். சிலவற்றிற்கு ஒரு பிரதியுமில்லாதிருக்கும். இவை விவாதச் சுவடிகள்தானேயென்று சிலர் நினைத்தாலும் விவேகிகளான பல மஹான்கள் இவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் காண ஆசைப்படுகிறார்கள். அடியேனும் சில ஸமயங்களில் அப் புத்தகங்களை யெடுத்துப் பார்க்கும்போது “இவ்வளவு விஷயங்களல்லவா வெளியிடப்பட்டிருக்கின்றன” என்று எனக்குள்ளே நானே வியந்துகொள்வதுண்டு. எந்த க்ரந்தத்தை யாருடைய ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக எக்காலத்தில் வெளியிட்டோ மென்பதை அடியேனே மறந்து போயிருக்கிறேன். இவை ஒவ்வொன்றும் எக்காலத்திலுள்ளவர்களுக்கும் மிகவும் உபயோகமானவை யென்பதை அடியேன் எண்ணியிருப்பது தவிர, மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீ ராகவையங்கார் ஸ்வாமி, மதுரை நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமி போல்வாரான பலமஹநீயர்களின் ஸ்ரீமுகங்களினாலும் உணர்ந்து வருகிறேன். அவற்றுள் ஒரு சிறு நூலுங்கூட துர்லபமாகாதபடிக்கு எல்லாவற்றையும் மறுபதிப்புச் செய்விக்கவேணுமென்னும் குதூஹலமுடையார் பல மஹான்களும் ஆப்தர்களுமிருக்கிறார்கள்- இதில் அடியேனுக்கு உத்கடமான ருசியில்லாமையினாலே இக்காரியம் தடைபட்டு வருகின்றது.

ஸகல தேசத்தவர்களும் மிகவிரும்பி வாசிக்கக்கூடிய வியாக்கியான நூல்களையே பெரும்பாலும் அடியேன் எழுதுவதோடு மறுபதிப்பும் செய்வித்து வருகின்றேன்.

திருநாங்கூரில் பல மஹான்கள் எழுந்தருளியிருந்தார்கள். அங்கு வைகுந்த விண்ணகரம் ஸன்னிதி வீதியில் பிரதிவாதி பயங்கரம் பெரிய கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் சின்ன க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் ப்ரஸித்தர்களாயிருந்த மஹநீயர்கள். பெரிய க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி அபார வித்யா நிதியாக எழுந்தருளியிருந்தவர். சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவராயிருந்ததோடு மஹாகவீச்வரராய் அனேக காவியங்கள் ஸ்தோத்ரங்கள் அருளிச்செய்திருந்தார். இந்த ஸ்வாமி அடியேனுடைய இளமையில் பல வருஷங்கள் ஸ்ரீகாஞ்சியி லெழுந்தருளியிருந்தபடியால் இந்த ஸ்வாமியிடத்திலும் சில நாடகங்கள் வாசிக்க நேர்ந்ததடியேனுக்கு. இந்த ஸ்வாமியின் திருவுருவப்படத்தை ஸம்பாதிக்க முயன்று கொண்டிருக்கிறேன். இந்த ஸ்வாமி திருநாங்கூரில் குலகூடஸ்தர் ஸன்னிதியைத் திரு ப்ரதிஷ்டை செய்திருந்தார். 30 வருஷங்களுக்கு முன்பு சரமஸமயத்தில் உத்தமாச்ரமியாகித் திருநாட்டுக்கெழுந்தருளினார். சின்ன க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி சென்னைமா நகரில் தங்கசாலைவீதி மாதவசெட்டி சாரிடியில் பல வருஷங்கள் ப்ரவசனம் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தவராதலால் இவரைப் பலர் அறிந்திருப்பர்கள். தற்காலம் திருநாங்கூரில் எம்பார். ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி [இங்கே ஸேவை ஸாதிப்பவர்] சிஷ்டராய் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகராக எழுந்தருளியிருக்கிறார். இவருடைய திருத்தகப்பனார் [ஸ்ரீ ஸுந்தராசார்ய ஸ்வாமி] திருமலை திருப்பதியில் சில வருஷங்கள் சின்ன ஜீயர் ஆஸ்தானத்தை யலங்கரித்தருளியிருந்தார். இந்த ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி சிறுபுலியூர் திவ்ய தேசத்தில் திரு



ஸ்ரீமதுபயவே. எம்பார். ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி
திருநாங்கூர்.

மூலந்தோறும் எழுந்தருளி மணவாளமா முனிகளின் திருக்ஷேத்ர பரிபாலனத்தை ஸத்ஸம்ப்ரதாயார்த்த ப்ரவசன முகத்தால் செய்து வருகிறார். இப்படி பதினைந்து வருஷங்களுக்கு மேலாக நடந்து வருகிறது. ஐப்பசி மாதத்தில் மாமுனிகளின் உத்ஸவத்தில் பூர்த்தியாகவே அங்கிருந்து கொண்டு விசேஷ ப்ரவசனம் செய்து போருகிறார். இது ஒரு தார்மிகருடைய சாச்வத ஏற்பாட்டினால் நடைபெற்று வருகின்றது. இதற்கு நித்யஸ்ரீர் நித்யமங்களமென்று பல்லாண்டுபாட ப்ராப்தம். திவ்யதேசங்கள் தோறும் இப்படிப்பட்ட வ்யவஸ்தை ஏற்பட்டால் நலம். இது எம்பெருமான் திருவுள்ளத்தில் படவேணும். இந்த ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி ஏறக்குறைய அடியேனுக்கு ஸமானவயஸ்கராதலால் இளமை தொடங்கியே இருவரும் நெருங்கின பழக்கமுடையோம். உபந்யாஸார்த்தமாக அடியேன் தெற்கே எந்த திவ்ய தேசத்திற்கு விடை கொண்டாலும் ஆங்காங்கு இந்த ஸ்வாமி நியமேந ஸேவை ஸாதித்தருள்வரென்பதே இவருடைய ப்ரீதிப்ரகர்ஷ ப்ரவாஹ ஸூசகம். பட்டர் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் "श्रीरङ्गपालनकर्मठाः- ஸ்ரீ ரங்கபாலநகர்மடா:" என்றருளிச் செய்த கணக்கிலே திவ்ய தேசத்தைக் காக்குமியல்வினர்கள் இக்காலத்தில் மிகவும் துர்லபர்களாயினர். இந்த ஸ்வாமி அத்தகைய உத்தமாதிகாரியாய் விளங்குமவர். திருநாங்கூரில் பல திவ்ய தேசங்கள் விளங்குவது போல ஸ்ரீகாஞ்சியிலும் பல திவ்ய தேசங்கள் விளங்குகின்றனவென்பது ப்ரஸித்தம். அவ்விடத்தில் ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதி பரிஸரத்தில் வாழ்ந்துகொண்டு திவ்யதேச பரிபாலன பராயணராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீ உ.வே. பிள்ளை லோகம் திருவேங்கடாசார்ய ஸ்வாமி ஸமீப காலத்தில் திருநாட்டுக் கெழுந்தருளினவர். "மண்டினாருய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தை ஸேவிக்கும் போதுகளில் அடியேனுக்கு இந்த ஸ்வாமியின் நினைவு வருவதுண்டு. ஸ்ரீகாஞ்சீ திவ்ய தேசங்களில் ஐம்பது ஸம்வத்ஸரகாலம் பெருபாலும் வாசிக கைங்கர்யம் செய்து கொண்டிருந்த இந்த ஸ்வாமி அடியேனுக்கு தேஹபந்துவுமாவர். ஸ்ரீவைஷ்ணவசிஷ்ய ஸம்பத்து முள்ளவர். ஸ்வாமியின் மூத்ததிருக்குமாரரான ஸ்ரீ உ.வே. பிள்ளை லோகம் பாஷ்யகாராசாரியர் [நியாய சிரோமணி] உபய வேதாந்த ப்ரவீணராய் திருவல்லிக்கேணி முதலான விடங்களில் வெகு நாளாகவே ஸம்ப்ரதாயக்ரந்த ப்ரவசனம் செய்துகொண்டு பலர்க்கும் மநோரஞ்ஜகராக விளங்கி வருகிறார். இவருடைய ஸஹோதரரும் அபிவிருத்திக்கு வரவேண்டியவர்.



ஸ்ரீமதுபயவே யதீந்த்ர ப்ரவணப்ரபாவம் பிள்ளை லோகம். திருவேங்கடாசார்ய ஸ்வாமி (வைகுண்டவாஸி.)

இருபதாவது வயதிலிருந்து இதுகாறும் அடியேன் மதுரைக்கு நாற்பது பர்யாயங்களுக்குமேல் விடைகொள்ள நேர்ந்திருக்கிறது. அவ்விடத்தில் கூடலழகர் ஸன்னிதி வாசலில் விஷ்ணுசித்தராமாநுஜ ஸபையென்று ஒரு ஸபையை நாற்பது வருஷங்களுக்கு முன்பு சில பெரியார்கள்கூடி ஏற்படுத்தியிருந்தார்கள்.

அந்த ஸபை 10, 12 வருஷகாலம் சிறப்பாக நடைபெற்று வந்தது. அப்போது வருஷந்தோறும் அவ்விடம் விடை கொள்ள ஆரம்பமாயிற்று. இங்கே ஸேவை ஸாதிக்கின்ற ஸ்ரீ உ.வே. ராமஸ்வாமி ஐயங்காருடைய பரமக்ருபைக்கே முதன் முதலாக அங்கு அடியேன் பாத்திரமாயினேன். இந்த ஸ்வாமி அட்வகேட் எனினும் ஸம்ஸ்க்ருதத்தில் ஆழ்ந்த ப்ரவேசமுடையவராய் ஸ்ரீபாஷ்யபகவத் விஷயாதி உபயவேதாந்த க்ரந்தங்களையும் வரியடைவே கற்றவர். திருமலைதிருப்பதியில் இப்போது சின்னஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸாதுராமாநுஜாசார்யஸ்வாமி யென்னும் திருநாமத்துடனே மதுரையில் சில ஸம்வத்ஸரங்கள் எழுந்தருளியிருந்து உபயவேதாந்த ரஹஸ்யாதி ப்ரவசனங்கள் செய்தருளின காலத்திலே, இந்த ராமஸ்வாமி ஐயங்கார் அந்த ஸ்வாமி பக்கலிலே ஸ்வரூப க்ரந்தங்களை யதிகரிக்கப்பெற்றாரென்று கேள்வி. இந்த ஸ்வாமி பரமபதித்துப் பதினைந்து இருபது வருஷங்களுக்கு மேலாகிறது. இப்போது மதுரையில் விளங்கிவரும் ஸத்ஸம்பிரதாய ஸபைக்கும் இந்த ஸ்வாமி பலவாண்டுகள் நிரந்தர அக்ராஸநராக எழுந்தருளியிருந்தபடியால் இவரோடு அடியேனுக்கு மிக நெருங்கிய பழக்கமிருந்ததனால் இவருடைய ஆழ்ந்த ஞானத்தை அடிக்கடி கண்டு வியந்தவனடியேன். இவருடைய திருக்குமாரர் ஸ்ரீமான் ஆராவமுது என்பவர் (அட்வகேட்) பத்தெட்டு வருஷகாலமாக மதுரையில் வாஸத்தை விட்டு சென்னையில் ப்ராக்டிஸ் செய்து வருகிறார். இவரும் ஸம்ஸ்க்ருதத்தில் ஆழ்ந்த ப்ரவேசமுள்ள மஹாமேதாவி. பித்ருபுத்ரர்களான இவ்விருவரும் அடியேனுடைய அனேக க்ரந்தங்களை ஆழ்ந்து பார்த்துப் பத்ரிகா மூலமாகவும் நேரிலும் சர்ச்சைகள் செய்தவர்களாதலால் இவர்களுடைய ப்ரஜ்ஞாப்ரதிபாவிலாஸங்களை அடியேன் உள்ளபடியுணர அவகாசமேற்பட்டது. இந்த ராமஸ்வாமி ஐயங்கார் திருநாட்டுக்கெழுந்தருளின பிறகு மதுரை ஸத்ஸம்ப்ரதாய ஸபைக்கு செந்தமிழ்ப்பத்ராதிபரான ஸ்ரீமதுபயவே. நாரணையங்கார் ஸ்வாமி சிலவருஷகாலம் அக்ராஸநாதிபதிஸ்தானத்தை யலங்கரித்திருந்தார். அந்தஸ்வாமி வடமொழி தென்மொழிக் கடலில் மிகமிக ஆழ்ந்தவர் என்பதைத் தமிழுலகம் முழுதுமுணரும். தமிழில் ஸாக்ஷாத் அகஸ்த்ய மஹர்ஷியே யென்று சொல்லவேணும். வடமொழியில் சாஸ்த்ரஜ்ஞானத்தோடு கூடிய பாண்டித்யம் பொருந்தியவர். இவ்வளவு பாண்டித்யமுடையரான அந்தஸ்வாமியிடத்தில் அஹங்காரலேசமும் காணமுடியாமலிருந்தது விசேஷித்துக் குறிப்பிடத்தகுந்தது. பரமஸாத்விகரென்று சில மஹான்களைக் கொண்டாடுவதுண்டே; அன்னவர்களில் இந்த ஸ்வாமியே ப்ரதம பரிகணநீயராயிருந்தவர். "நீசனேன் நிறையொன்றுமிலேன்" என்கிற அநுஸந்தானத்தை ஹ்ருதயபூர்வகமாகக் கொண்டிருந்தவர் இந்த ஸ்வாமி என்பதைப் பலகால் அறிந்திருக்கிறேன். நம் பூர்வாசார்ய திவ்யஸூக்திகளையெல்லாம் குருமுகமாக வரியடைவேகற்ற பெருமையும் இந்த ஸ்வாமிக்கு உண்டு.



ஸ்ரீமதுபயவே மதுரை ராமஸ்வாமி ஐயங்கார் (வைகுண்டவாஸி)

முதற்பகுதியில் (பக்கம் 58ல்) ஆக்கூராண்டவனைப்பற்றி ஒரு விஷயம் ப்ரஸ்தாவம் செய்திருக்கிறேன். அந்த காலத்தில் இந்த ஸ்வாமி க்ருஹஸ்தராயிருந்தார் ஆங்காங்கு பெரும்பாலும் ஸ்ரீ ராமாயண ப்ரவசனம் செய்து கொண்டிருந்தார். காஞ்சீபுரத்திலும் அப்படியே யிருந்தகாலத்தில் ஸ்ரீமத் தேரழுந்தூராண்டவனை யாச்ரயித்து அவரிடத்தில் ஸ்வரூபக்ரந்தங்கள் பயின்றார். அந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளின பின் இவரே உத்தமாச்ரமியாகி ஸ்ரீரங்கத்தில் ஆண்டவனாஸ்தானத்தில் அபிஷிக்தரானார். இந்த ஸ்வாமி க்ருஹஸ்தராய்க் காஞ்சிவாஸம் செய்தருளின காலத்தில் கலாவைஷம்யச் செய்திகளில் தலையிட்டவரல்லர். ஸர்வபூதஸுஹ்ருத்தாகவே வாழ்ந்தார். ஆக்கூராண்டவனென்று திருநாமம் பெற்றபிறகு அடியேன் கோயிலுக்கு விடைகொள்ளுங் காலங்களில் ஸன்னிதியில் இந்த ஸ்வாமியை ஸந்திக்க ப்ராப்தமாகும். "ஆச்ரமத்திற்கு வரக்கூடாதென்று ஸங்கல்பமிருந்தால் ஸரி; அப்படி இல்லையானால் ஒரு ஸமயம் வந்து போனால் நல்லது" என்று நியமனமாயிற்று. அப்போது ஆச்ரமத்தில் காலை வேளைகளில் சில்லரை ரஹஸ்யம் காலக்ஷேபம் நடந்து வருவதாகத் தெரிந்து சுச்ரூஷையுடனே மறுநாள் காலை அவ்விடம் விடை கொண்டேன். அப்போது தேசிக ரஹஸ்யங்களில் ரஹஸ்ய ரத்நாவளியென்கிறவொரு சிறு ரஹஸ்யம் காலக்ஷேபமாகிறது. அடியேன் தெண்டன் ஸமர்ப்பித்து விட்டு உட்கார்ந்தேன். ஆண்டவன் காலக்ஷேபத்தை நிறுத்தி விட்டு லோகாபிராமமான வார்த்தைகளை உரையாடத் தொடங்கினார். "அடியேன் காலக்ஷேப ஸ்ரீஸூக்திகளைக் கேட்டு ஆனந்திக்க வேணுமென்கிற அபிலாஷையோடு விடை கொண்டேன்; ஸாமாந்ய வார்த்தாலாபங்களுக்கு வேண்டிய அவகாசமிருப்பதால் பிற்பாடு ஆகலாமே; இப்போது காலக்ஷேபமே நடைபெறலாமே" என்று விஜ்ஞாபித்தேன். அதற்கு ஆண்டவன் புன்முறுவல் செய்து கொண்டே "இதில் உங்கள் ஸம்ப்ரதாயத்திற்கும் எங்கள் ஸம்ப்ரதாயத்திற்கும் ஒரு வாசியுண்டு; (அதாவது) உங்கள் ஸம்ப்ரதாயஸ்தர்கள் ஸ்வரூபக்ரந்த ப்ரவசனம் செய்யும்போது இதரர்கள் யார் வந்து ச்ரவணம் செய்தாலும் ஸம்மதிக்கிறார்கள்; எங்கள் ஸம்ப்ரதாயத்தில் அப்படியில்லை. இவ்விடத்தில் அந்வயமுள்ளவர்கள் தவிர மற்ற பேர்கள் வந்திருந்து ச்ரவணம் செய்வதை அனுமதிப்பதில்லையென்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்று ஸாதித்தார். இதற்கு அடியேன் "ஸ்ரீமத் தேரழுந்தூராண்டவன் இப்படி வைத்துக் கொண்டிருந்ததாகத் தெரியவில்லையே; அந்த ஸ்வாமியின் ப்ரவசநகோஷ்டியில் அடி



ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஆக்கூராண்டவன்
(வைகுண்டவாஸி)

யேன் அனேகபர்யாயம் விடை கொண்டிருந்ததை தேவரீரும் கடாக்ஷித்திருப்ப
துண்டே'' என்று விஜ்ஞாபித்தேன். அதற்கு அந்த ஸ்வாமி "क्वचित्तेजोविशेषेण
प्रत्यवायो न विद्यते—க்வசித் தேஜோவிசேஷேண ப்ரத்யவாயோ ந வித்யதே.'' என்று
ஸாதித்தார். அதற்குமேல் அடியேன் "ஸ்வாமி இப்படி ஸாதிப்பது நன்றாயில்
லேயே; அடியேன் ஏதாவது அதிகப்ரஸங்கமாக இடையில் கேள்விகள் கேட்பே
னென்று திருவுள்ளமாகில், ஸத்யம் சபே; ஸ்வாமி ஸாதிக்கும் ஸ்ரீஸூக்திகளைக்
கேட்டுக் கொண்டிருந்து இடையிலோ முடிவிலோ ஒன்றும் வாய்திறவாமல் எழுந்து
செல்லுகிறேன் அடியேனுக்காக ப்ரவசனத்தை நிறுத்துவது வேண்டா''
என்று விஜ்ஞாபித்தேன். அடியேனுடைய இந்த வார்த்தையினுல் ஆண்டவன்
திருவுள்ளத்தில் சிறிது விக்ருதியுண்டாயிற்று; அதன் பிறகு ஸாதித்தார்—'தேவர்
ப்ரதிவாதிபயங்கரராகையாலே தேவரிடத்தில் பயத்தினுல் நான் காலக்ஷேபத்தை
நிறுத்தி விட்டதாக நினைத்தாப் போலிருக்கிறது. அப்படி நினைக்க வேண்டாம்.
எங்கள் ஸம்ப்ரதாயவ்யவஸ்தை எப்படியாவதிருக்கட்டும். இன்று ப்ரவசனத்தை
நடத்துகிறேன். இருந்து கேட்பது; ஏதாவது கேள்வி கேட்க வேணுமென்று
தோன்றினுலும் அவச்யம் கேட்க வேண்டியது' என்று. இப்படி ஸாதித்துவிட்டு
ப்ரவசனமும் ஆரம்பித்து நடத்தினுர். அன்று, ரஹஸ்யரத்நாவளி யென்றொரு
சிறு ரஹஸ்யம் ப்ரவசநமாயிற்று. இது முப்பது வார்தைகள் கொண்டது.
முப்பது வார்த்தைகளையும் முப்பதே நிமிஷத்தில் ப்ரவசனம் செய்தருளினுர்.
அடுத்த ரஹஸ்யமான ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயமென்பது இந்த ரஹஸ்யத்திற்கு
வியாக்கியானமாக அவதரித்திருக்கையாலே அது நாளைக்கு ஆகும்; அதில்
விசதமாகச் சொல்லலாமென்று இன்று ஸம்க்ஷேபித்துக் கொண்டேனென்று
ஸாதித்தார். "ஏதேனும் கேள்வி கேட்க வேண்டுமென்று தோன்றினுலும்
அவசியம் கேட்க வேண்டியது'' என்று ஆண்டவன் நியமித்திருந்தும் அடியேன்
ஒன்றும் வாய் திறக்கவில்லை. "நாளைக்கு விஸ்தாரமாக நடக்கும்; அவசியம்
எழுந்தருளவேணும்'' என்று நியமித்தார். அடியேன் இன்றே புறப்பட்டு
அங்யத்ர விடைகொள்ள வேண்டியிருக்கையாலே நியமித்தருள வேணுமென்று
சொல்லித் தெண்டன் ஸமர்ப்பித்து விட்டு எழுந்தேன். அப்போது சில வார்த்தை
கள் தாமாகவே ஸாதித்தருளினுர். "அண்ணு! தேவருடைய க்ரந்தங்களெல்லாம்
எனக்குக் கிடைத்ததில்லை; சில க்ரந்தங்களை மட்டும் யாரோ சிலர் கொண்டு வந்து
காட்டக் காணநேர்ந்ததுண்டு; "தேசிகனுடைய சில்லரை ரஹஸ்யங்களெல்லாம்
பிள்ளை லோகாசார்யருடைய ரஹஸ்யங்களையே தழுவி அந்தச் சாயையிலேயே
அருளிச்செய்யப்பட்டிருக்கின்றன'' என்று தேவரீர் எழுதியிருப்பதாகப் பார்த்த
ஞாபகம் வருகிறது. அப்படித்தான் இவ்விடத்து அபிப்ராயமோ?'' என்று கேட்ட
ருளினுர். அதற்கு அடியேன் விஜ்ஞாபித்தேன்—"இதைப்பற்றி ஸ்வல்பமாக விண்
ணப்பம் செய்யத் தொடங்கினுலும் வார்த்தை வளர்ந்து விடுமென்று அஞ்சுகிறேன்.
அடியேன் எது எழுதினுலும் பர்யாப்தமான உபபத்திகளை விளங்கக்காட்டி ஸம்சய
விபர்யயமற எழுதுவது வழக்கம்; ஸ்வாமி ஏதோ அடியேனெழுதியதைக் கடா
க்ஷித்தருளினதாக ஸாதிப்பதால் கடாக்ஷித்தருளின புத்தகத்திலோ பத்ரிகை
யிலோ உபபத்திகளையும் பூர்த்தியாகக் கடாக்ஷித்தேயிருக்கக்கூடும். 'அப்படித்
தான் இவ்விடத்து அபிப்ராயமோ?' என்று ஸ்வாமி கேட்டருள்வதைப் பார்த்தால்
அடியேன் அநபிப்ரேதமானதையும் எழுதுவதுண்டென்று ஸ்வாமி கருதியிருப்ப
தாகத் தோன்றுகிறது. மிகச்சிறு விஷயமொன்று எழுதினுலும் மனச்சாக்ஷியை
மீறி யெழுதுவது கிடையாது; அடியேனெழுதியுள்ள விஷயங்களுள் ஸ்வாமி எந்த
விஷயத்தைப்பற்றி சர்ச்சிக்க விரும்பினுலும் த்ருப்திகரமாக விடையளிக்க ஸஜ்
ஜனுயிருக்கிறேன். இப்போது விடைபெற்றுக் கொள்ளுகிறேன்; அவகாச
மிருந்து நியமித்தருளினுல் பிற்பகலில் விடைகொள்ளுகிறேன்'' என்றேன். அப்
படியே அவசியம் வரவேணுமென்று நியமித்தாயிற்று. நியமனப்படியே பிற்

பகலில் விடைகொண்டேன். ஆண்டவனும் அடியேனைப் பரமக்ருபையோடு ப்ரதீக்ஷித்துக் கொண்டிருந்தார். அடியேன் சென்றவுடனே ஸாரமாக ஒரு வார்த்தையருளிச்செய்தார். (அதாவது) 'நான் ஜிஜ்ஞாஸுவாயும் கேட்கவில்லை. விஜிகீஷுவாயும் கேட்கவில்லை. நான் காஞ்சியிலிருந்த காலத்தில் உம்முடைய உபயாஸங்களைச் சில ஸமயங்களில் கேட்டிருக்கிறேன்; வெகுநாளாய் விட்டது. உம்முடைய உக்திகளை ச்ரவணம் பண்ணவேணுமென்கிற அபேக்ஷையினால்மட்டுமே சில கேட்கிறேன்; வாதப்ரதிவாத முறையிலே போகாமல் ஸரஸமாய்ச் சொல்லவேணும்'' என்று. அடியேன் அப்படியேயென்றிசைந்த பிறகு சில கேள்விகள் கேட்டருளினார். முன்னடியே ஒரு காகிதத்தில் குறிப்பிட்டுக் கொண்டிருந்து அதை வைத்துக்கொண்டே கேட்டருளினார். விநயமுடன் விடையுரைகளை விஜ்ஞாபித்துக்கொண்டே வந்தேன். அந்த வினவிடைகள் மூன்று நான்கு மணிகாலம் நடந்தன. அவற்றுள் சிலவற்றை மட்டும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன்.

ஆண்டவன்;—ஸ்ரீ வைகுண்டகத்யத்தில் *ப்ரணம்ய உத்தாயோத்தாய புந:புந: ப்ரணம்ய* என்று ஸாதித்திருப்பதற்கு என்ன கதி சொல்லுகிறீர்கள்?

அடியேன்;—அடைவுபடப் பரிமாறுமிடம், அடைவுகெடப் பரிமாறுமிடம் என்று இரண்டு ஸ்தானங்கள். இவ்விபூதியானது அடைவுபடப் பரிமாறுமிடம்; ஸ்ரீவைகுண்டமாகிற அவ்விபூதியானது அடைவுகெடப் பரிமாறுமிடம். ஸ்ரீவைகுண்டகத்யமருளிச்செய்த பாஷ்யகாரர்தாமே நித்யக்ரந்தமுமருளிச் செய்திருக்கிறார். இதில் "आराधनाभिमुखो भवेति मूलमन्त्रेण प्रार्थ्य मूलमन्त्रेण दण्डवत्प्रणम्य उत्थाय स्वागतं निवेद्य यावदाराधनसमाप्ति सान्निध्ययाचनं कुर्यात्'' என்று ஸாதித்திருக்கிறார். இந்த ஸ்ரீஸூக்தியில் "தண்டவந் ப்ரணம்ய உத்தாய'' என்றிருப்பதைத் திருவுள்ளம் பற்றியருள வேணும்.

ஆண்டவன்—நீங்கள் பகவத்க்ருபையை நிர்ஹேதுகமென்கிறீர்களாமே; இது எப்படி? எம்பெருமானுடைய க்ருபை ஒரு காரணமுமில்லாமல் தானே தோன்றுகின்றதென்றால் அது என்றைக்கும் எல்லார்விஷயத்திலும் தோன்றலாமே; எல்லாருமே அந்த க்ருபைக்குப் பாத்ரபூதர்களாயிருக்க வேண்டுமே; அப்படி காணாமையாலும், சில காலவிசேஷங்களில் சில அதிகாரிகள்மீது மட்டும் அருள்தோன்றக் காண்கையாலும் அப்போது ஒரு ஹேதுவை முன்னிட்டே தோன்றினதாகக் கொள்ளவேண்டுமல்லவா? ஆகவே பகவத்க்ருபையை ஸஹேதுகமென்ன வேணுமேயொழிய நிர்ஹேதுகமென்று எப்படி சொல்ல முடியும்?

அடியேன்—பகவத்க்ருபை ஸஹேதுகந்தானென்று சொல்லுகிறவர்களை நாங்கள் கண்டிப்பதில்லை, வெறுப்பதுமில்லை. எங்களுடைய கொள்கை இவ்வளவே; (அதாவது) அவனது மிகக் கனத்த அருளுக்கு ஹேதுவாக நம்மிடத்தில் என்ன கைம்முதலுள்ளதென்று ஆராய்ந்து பார்த்தால் ஒரு அணுமாத்திரம் கிடைக்கக்கூடும்; யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம் என்று சில ஸுக்ருத விசேஷங்கள் தேறக்கூடும். புத்திபூர்வகமாகவும் சில ஸுக்ருதங்கள் செய்கிறோமென்றும் வைத்துக் கொள்வோம். இவை காரணமாக எம்பெருமானுடைய அருள் நம்மீது தோன்றிற்றென்றால் இதைக்கொண்டு அது ஸஹேதுகம் என்று சொல்லிவிடலாமோ? கொடிய தண்டனைகளுக்கு உரிய பாவங்களையன்றோ நாம் மலைமலையாகச் செய்து போருவது. இதில் அதிஸ்வல்பமான ஸுக்ருதம் கலந்திருப்பது கொண்டு எம்பெருமான் அருள் செய்தானென்றால் அநுக்ரஹோந்முகனான அவன் திருவுள்ளத்தால் ஸஹேதுகமானால் ஆகலாம். "எந்நன்றி செய்தேனா என்னெஞ்சில் திகழ்வதுவே!—என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே—வெறிதேயருள் செய்வர்'' என்றிவை போலும் பாசுரங்களை

யநுஸந்தித்துக் கொண்டிருக்கிற நாம் ஸஹேதுகமென்று நினைப்பதெப்படி. அநல்பமான பேற்றுக்கு அத்யல்பமான காரியத்தை ஹேதுவாகச் சொல்லப் பொருந்தாது என்பதே எங்களுடைய கொள்கை. "निदानं तत्रापि स्वयमखिलनिर्माणनिपुणः—நிதாநம் தத்ராபி ஸ்வயமகிலநிர்மாணநிபுண:" என்கிற தேசிக திவ்ய ஸூக்தியும் உண்மையாக நம்மிடத்தில் ஹேதுலேசமும் கிடையாதென்று காட்டுகிறது.

[இந்த தேசிக ஸ்ரீஸூக்தியை விஜ்ஞாபித்தபோது ஆண்டவன் ஒன்று ஸாதித்தார்; உங்களுடைய கொள்கையை மட்டும் எடுத்துரைத்தால் போதும்; இதில் தேசிக ஸூக்திகளைக் கலந்து கொள்ளவேண்டாமென்று. அதற்கடியேன் விஜ்ஞாபித்தேன்—தேசிகனுடைய கொள்கை வேறு, எங்களுடைய கொள்கை வேறு என்று ஸாமான்ய ஜனங்கள் நினைத்திருப்பதுண்டு; அப்படி ஸ்வாமி திருவுள்ளத்திலும் படக்கூடாது என்பதற்காகவே தேசிக திவ்யஸூக்தியை ஸம்வாதமாகக் காட்டுவது என்றேன். இதைக்கேட்டு ஸ்மயமாநமுகாம்போஜரானார் ஆண்டவன்.]

ஆண்டவன்—ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாக பகவத்க்ருபைக்கு ஒரு ஹேதுவைக் கல்பித்துத்தானே யாகவேண்டும்; ஆகவே அதை ஸஹேதுகமென்று ஒப்புக்கொண்டால் என்ன பாதகம்?

அடியேன்—கீழே அடியேன் விஜ்ஞாபனம் செய்ததில் இதற்கு ஸமாதானம் அடங்கியேயுள்ளது. மீண்டும் ஸாரமாக விஜ்ஞாபிக்கிறேன். எம்பெருமானை வசீகரிப்பதற்கு உபாயமாக சாஸ்த்ரங்களில் கர்மஜ்ஞாநபக்தி ப்ரபத்திகள் கூறப்பட்டுள்ளனவென்பது ப்ரஸித்தம். சேதநர்களை ரக்ஷித்தருள்வதில் இயற்கையாகவே ருசியுடையனான எம்பெருமான் "संसारतन्त्रवाहित्वाद्रक्ष्यापेक्षां प्रतीक्षते—ஸம்ஸார தந்த்ரவாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்கிறபடியே இத்தலையில் சிறிது எதிர்பார்க்கிறானென்று சொல்லி வைத்தது ஒரு பக்கத்தில். மற்றொரு பக்கத்தில் எம்பெருமானுடைய திருவாக்கைப் பார்த்தாலோ "नासौ पुरुषकारेण नचाप्यन्येन हेतुना । केवलं स्वेच्छयैवाहं प्रेक्षे कञ्चित्कदाचन—நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந." [நான் புருஷகாரத்தைக் கொண்டும் கடாக்ஷிப்பதில்லை, வேறு எந்த ஹேதுவையிட்டும் கடாக்ஷிப்பதில்லை; என்றைக்கோவொருநாள் யாரோவொரு அதிகாரியை என் இச்சையினாலேயே நான் கடாக்ஷிப்பேன்.] என்று காண்கிறது. இங்ஙனம் பேசுகின்ற எம்பெருமானது திருவருளை ஸஹேதுகமென்று நினைக்க நாமார்? நம்பக்கல் கைம்முதல் கொண்டே எம்பெருமான் நம்மைக் காத்தருள்கின்றானென்று நாம் கொள்வது மிகவும் ஹேயமாகும். "மருவித்தொழும் மனமே தந்தாய்—என்னைத் தீமனங் கெடுத்தாய்" என்று நாம் அநுஸந்திப்பது அர்த்தசூந்யமாக வொண்ணாது. "स्वामिन् स्वशेषं स्ववशं स्वभरत्वेन निर्भरम् । स्वदत्तस्वधिया स्वार्थं स्वस्मिन् न्यस्यसि मां स्वयम्—ஸ்வாமிந் ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யஸி மாம் ஸ்வயம்." என்கிற தேசிக திவ்ய ஸூக்தியொன்றை மட்டும் கவனித்தால் நம்மிடத்தில் ஒரு கைம்முதலுமில்லை, எதுவும் அத்தலையாலே வந்தது என்னுமிடம் ஸ்பஷ்டமாகிறதே.

ஆண்டவன்—நாம் அநுஸந்திக்கவேண்டிய க்ரமம் இதுதான்; அகிஞ்சந: என்றுதான் நாம் சொல்லிக்கொள்ளவேண்டும்; ஆனாலும் சாஸ்த்ரார்த்தம் அதுவாகுமா?

அடியேன்—நாம் அநுஸந்திக்கிற க்ரமம் வேறு, சாஸ்த்ரார்த்த தத்துவம் வேறு என்று கொள்ளுகிற முறை அடியோங்களிடமில்லை. இதரர்கள் வ்யாவஹா

ரிகதசை பாரமார்த்திகதசை என்று இரண்டு கொள்வது போல் எம்பெருமானுர் திருவடி ஸம்பந்திகளான நாமும் கொள்ளவேணுமோ?*அமர்யாத: க்ஷுத்ர:* இத்யாதிகளாலே நைச்யாநுஸந்தானம் செய்துகொள்வது ஸ்வரூபப்ராப்தம் ஆழ்வார்களுமாசாரியர்களும் சாஸ்த்ரார்த்தமாகத் தெரிவித்தருளின அர்த்த விசேஷங்களையு மெல்லாம் 'இவை வெறும் அநுஸந்தானமே யொழிய சாஸ்த்ரார்த்தமன்று" என்று சொல்லி விடுவது யுக்தமாக அடியேனுக்குத் தோன்றவில்லை.

ஆண்டவன்—ப்ரபத்தியை உபாயமென்று சொல்லுகிறவர்களை தேவரீர் விசேஷமாகப் பரிஹஸித்தெழுதியிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அது நியாயமாகுமா? திருக்கச்சி நம்பி ஆறு வார்த்தைகளில் "மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத்" என்பது ஒரு வார்த்தை யல்லவா? பாஷ்யகாரரும் ஸ்ரீவைகுண்டகத்யத்தில் "तत्प्राप्तये च तत्पादांबुजद्वयप्रपत्तेरन्यत् न मे कल्पकोटिसहस्रेणापि साधनमस्तीति मन्वानः" என்று ஸாதித்திருக்கவில்லையா?

அடியேன்—ப்ரபத்தியை உபாயமென்பவர்களைப்பற்றி அடியேன் எழுதியிருப்பது இவ்வளவே; (அதாவது) 'கடையில் சென்று எண்ணெய் வாங்கிக் கொண்டுவா' என்று கட்டளையிடப்பெற்றவொருவன் அது வாங்கக் கோணியையோ கூடையையோ எடுத்துக்கொண்டு புறப்பட்டானுகில் 'எண்ணெயின் ஸ்வரூபத்தையே இவன் தெரிந்துகொள்ளவில்லை போலும்' என்று நினைக்கத் தடையில்லாதாப்போலே ப்ரபத்தி உபாயமென்று சொல்லப்புகுமவர்கள் ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையே உள்ளபடியறிந்திலர்போலுமென்றே நினைக்கவேண்டியதாகும். ப்ரபத்தியாவது என்ன? *த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி: சரணுகதி:* *ததேகோபாயதாயாச்ஞா* என்றும் சாஸ்த்ரம் சொல்லுகிறது. எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்குமதுவே ப்ரபத்தி யென்பது. இத்தகையதான ப்ரபத்தி தன்னிடத்தில் உபாயத்வத்தை எங்ஙனே ஸஹிக்கும்? ப்ரபத்தியென்கிற வஸ்து தேறும்போதே அதன் அநுபாயத்வமும் தேறியே தீருமே. பொதுவாக உபேயத்திற்கு ஒரு உபாயம் வேணுமென்றுண்டு. அது இதர விஷயங்களிலே யல்லது பகவத் விஷயத்திலன்று; திருவடிகளே உபேயம், திருவடிகளே உபாயம். திருவடிகளைப் பணிகை உபாயமென்பதும் திருவடிகளே உபாயமென்பதும் பர்யாயமேயொழிய வேறன்று.

ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் ஜீவ பரிச்சேதத்தில் *இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம்புநஸ் ஸஹகாரிணும்* என்றுள்ளது. எம்பெருமானொருவனையே உபாயமாகக் கொள்வதாகிற இந்த ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வ புத்தியைத் தடைசெய்கின்றது; ப்ரபத்திக்கே உபாயத்வ மில்லாதபோது அதன் ஸஹகாரிகளானவற்றுக்கு அது இல்லை யென்னுமிடம் தனிப்படச் சொல்லவேணுமோ? என்பது இந்த ச்லோகார்த்தம். இங்கு மற்றொரு வாதம். ஸித்தோபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் உபாயம் இருவகைப்படும்; எம்பெருமான் ஸித்தோபாயமானுலும் ஸாத்யோபாயமாக ஒன்றை அங்கீகரித்தேயாகவேண்டுமென்பர். இதற்கு ஸமாதானமாவது-ஸாத்யோபாயமென்ருல் "சேதநனுடைய முயற்சியால் ஸாத்யமான உபாயம்" என்று தானே பொருளாகும். உண்மையில் இது சேதநக்ருதியாலே ஸாத்யமானதா? என்று ஆராய்ந்தால் மேலெழுந்த வாரியில் அப்படிச் சொல்லலாமாயினும் *இசைவித்தென்னை யுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே* என்பது போன்ற பல பாசுரங்களைக் கண்டால் இது நம்முடைய முயற்சியால் ஸாத்ய மன்றிக்கே ஸர்வேச்வரனுடைய க்ருஷிபலமாகவே விளையுமதாக உண்மை தெரிவதால் ஸாத்யோபாயமென்கிற வ்யபதேசமும் இதற்கு ஏலாது. இவ்விஷயம் "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்டி அவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்ற பிள்ளை லோகா

சார்யருடைய ஸ்ரீஸூக்திக்குச் சார்பாக தேசிகன் பணித்த *நிதாநம் தத்ராபி ஸ்வயம கில நிர்மாண நிபுண:* இத்யாதி பரச்சத ஸ்ரீஸூக்தி ஸம்வாதியாகும். *வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதிவசோபி மே நோதியாத்* என்ற கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியும் தெளிவு பெறுத்தும். இதில் ஸாரமான ஒரு வார்த்தை. ரத்னம் என்கிற ஒரு வஸ்துவை எடுத்துக்கொள்வோம். இது ஜீவனத்திற்கு உபாயமா? அன்றோ? என்று விசாரம் வரின், ஒரு அதிகாரிக்கு உபாயம், மற்றொரு அதிகாரிக்கு அநுபாயம் என்றுதானே சொல்லவேண்டியதாகிறது, ஏனெனின்; வாணிஜ்யத்தை ஜீவிகையாகவுடையவர்கள் ரத்னத்தை விற்று ஜீவிக்கக் காண்கிறோமாதலால் அத்தகைய அதிகாரிகளுக்கு ரத்னம் உபாயமே. சக்ரவர்த்திபோல்வாரிடத்தில் அந்த ரத்னம் இருக்குமாகில் அது ஜீவநோபாயமாக ஆக்கப்படுகின்றதன்றே. ஸ்வயம் போக்யமாகவன்றோ அணியப்படுகின்றது. இப்படி எந்த வஸ்துவும் அதிகாரி பேதத்தாலே உபாயமாகவும் போக்யமாகவும் நிற்கும். ப்ரபத்தியை நாம் உபாயமாகக் கொள்ளப் பிறந்தோமல்லோம், "ப்ரபத்தியை" என்று விசேஷித்துச் சொல்லவேண்டியதுமில்லை; எதுவும் நமக்கு உபாயமன்று. எந்த நன்மையும் ஸ்வரூபத்தில் சேர்ந்ததாகவே கொள்ளப்படுகிறது.

ஸ்ரீபாஷ்யகாரரின் சில ஸ்ரீஸூக்திகளையும் காணலாம்; *உபபத்தேச் ச* (3-2-4.) என்கிற ப்ரஹ்ம ஸூத்திரத்தின் பாஷ்யத்திலே—"प्राप्यस्य परमपुरुषस्य स्वप्राप्तौ स्वस्यैवोपायत्वोपपत्तेः * नायमात्मा प्रवचनेन लभ्यः ...... तनूं स्वाम् * इति अनन्योपायत्वश्रवणात्" என்றும், *अमृतस्यैष सेतुः* इति अमृतस्य स्वस्य स्वयमेव प्रापक इति सेतुत्वव्यपदेशोपपत्तेश्च" என்றும்; *பலமத உபபத்தே:* (3—2—37.) என்கிற ஸூத்திரத்தின் பாஷ்யத்திலே—"स एव हि सर्वज्ञस्सर्वशक्तिर्महोदारो यागदानहोमादिभिरुपासनेन च आराधित ऐहिकामुष्मिक भोगजातं स्वस्वरूपावाप्तिरूपमपवर्गं च दातुमीष्टे; न ह्यचेतनं कर्म क्षणध्वंसि कालान्तरभाविफलसाधनं भवितुमर्हति" என்றும் அருளிச் செய்துள்ளார். இந்த ஸ்ரீஸூக்திகளை யநுஸரித்தே தேசிகனும் கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷையிலே * निजकर्मादि भक्त्यन्तं कुर्यात्प्रीत्यैव कारितः। उपायतां परित्यज्य न्यस्येद्देवे तु तामभी.* என்கிற ச்லோக வியாக்கியானத்தில்-"स्वयं स्वादुत्वात् क्षणिकस्य कालान्तरभाविफलसाधनत्वानुपपत्तिदर्शनाच्च नास्य स्वव्यापारे मोक्षोपायताबुद्धिरपि स्यादिति भावः; अन्ततः तैस्तैराराधितो भगवानेव हि सर्वत्रोपायः" என்றருளிச்செய்தார். ஆக இவ்வளவும் அடியேன் பெரியதோர் உபந்யாஸம் போல் விஜ்ஞாபித்தேன். இவ்வளவையும் கேட்டருளி,

ஆண்டவன்—இந்த விஷயங்களெல்லாம் தேவரீருடைய அனேக க்ரந்தங்களில் அதிவிஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டிருக்கக்கூடும். ஆனாலும் நேரில் சொல்லக் கேட்கிறபோது உண்டாகிற தெளிவு எழுத்தில் பார்ப்பதனாலுண்டாகாதென் நினைக்கிறேன். இப்போது நான் கேட்கப்பெற்ற விஷயங்கள் மிகவும் ரமணீயங்களாயிருப்பதோடு ப்ராமாணிகங்களாயுமிருக்கின்றன. ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளிலும் அவற்றின் வியாக்கியானங்களிலும் ஈடுபாடுள்ளவர்களுக்கே இவ்வர்த்த விசேஷங்கள் ருசிக்கும். இன்று எனக்கு ஸுதினமென்று நினைக்கிறேன்............

இதற்குமேலும் சில விஷயங்களில் சர்ச்சை நடந்தது. விஸ்தரபயத்தாலே அவற்றையெல்லாம் வரையாது விடுக்கின்றேன். ஆக்கூராண்டவனுக்கு அடுத்தபடியாக அவ்வாஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற ஸ்ரீமத் தென்பரையாண்டவன்ப்ரசம்ஸை கீழ் முதற்பகுதியில் 66, 67 பக்கங்களில் உள்ளது. அந்த ஸ்வாமி

ஸன்னிதியில் ஒரு பர்யாயமே அணுக நேர்ந்தது. சற்றுப்போது லோகாபிராம வார்த்தா லாபங்களோடே முடிந்தது. அந்த ஸ்வாமியின் பரமானுக்ரஹம் ஸ்ரீ முகவிச்ராந்தம். அந்த ஸ்ரீ முகம் கீழ் முதற்பகுதியில் பக்கம் 67ல் காணத்தக்கது.

ஸ்ரீமதுபயவே. திருமலையத்தங்கி தெட்டு தாதாசார்ய ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் (கீர்த்தி மூர்த்திகளான) காழியூர் ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி, பின்னப்பாக்கம் திருவேங்கடாசார்ய ஸ்வாமி முதலான உத்துங்க வித்வான்களிடத்தில் சாஸ்த்ரங்களை யதிகரித்து உபய வேதாந்த ஸம்ப்ரதாயங்களிலும் நிஷ்ணாதராய் சிஷ்ய ஸம்பத்தோடும் கூடியவராய் விளங்குபவர். அனேக ஸம்வத்ஸரகாலமாக ஸ்ரீகாஞ்சியில் ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதி பரிஸரத்தில் காஞ்சீபுரீ திலகராக விளங்கி வருகிறார். அடியேனுக்கு இளமை தொடங்கி "प्राणेभ्योऽपि गरीयांस" என்னும்படி விளங்கும் வித்வத் ஸுஹ்ருந்மணிகளிலே இந்த ஸ்வாமி யொருவர் ஸங்நிக்ருஷ்டராய் விளங்குபவர்.



ஸ்ரீமதுபயவே. வித்வான். திருமலை அத்தங்கி. தெட்டு. தாதாசார்ய ஸ்வாமி.

ஸ்ரீபெரும்பூதூரில் அடியேனுக்கு ஸம்பந்தம் ஏற்படுவதற்கு முன்பும் அவ்விடம் அடியேன் அடிக்கடி விடைகொள்ள நேரும்; சித்திரை யுத்ஸவத்திற்குச் சென்று பூர்த்தியாக இருந்து அநுபவித்து வர ப்ராப்தமாகும். அப்படி விடைகொள்ளும் ஸமயங்களில் பெரும்பாலும் இந்த ஸ்வாமியின் திருமாளிகை அடியேனுக்குத் தஞ்சமாக இருந்தது. வடமொழியில் க்ருஹத்திற்கு 'சரணம்' என்றொரு பெயருண்டு. அதைக் கொண்டு அடியேன் இந்த ஸ்வாமியிடத்தில் அப்போது விநோதமாகச் சொல்லும் வார்த்தையொன்றுண்டு; (அதாவது) "இது தேவரீருடைய சரணம்; அடியேனுக்கு சரணம்" என்று. "தே ஹி நோ திவஸா கதா:" என்று வருந்தவேண்டிய காலமிக்காலம். ஸ்ரீபெரும்பூதூரின் புராதநஸ்திதியையும் இதாநீந்தநஸ்திதியையும் நினைக்க நினைக்க உண்மையில் சோகம் மிகுகின்றது. அப்போது ஊர் முழுவதும் வித்வான்களாலும் உபயவேதாந்த க்ரந்த காலக்ஷேப கோஷ்டிகளாலும் நிறைந்து விளங்கும். பாடசாலைக்குள் நுழைந்தால் எழுபதெண்பது வித்யார்த்திகள் நாநாசாஸ்த்ரவ்யாஸங்கிகளாய்க் காணப்படுவர்கள். உபாத்யாயர்களும் திக்கஜங்களாகவும் ஸிம்ஹங்களாகவும் முழங்கிக் கொண்டிருப்பர்கள்.

இப்போதைய நிலைமையை நோக்குங்கால் "पुरा यत्र स्रोतः पुलिनमधुना तत्र सरिताम्—புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம்." என்கிற பவபூதி மஹாகவிச்லோகமே நினைவுக்கு வருகின்றது. நம்போல்வார் இதற்கு என்செய்ய இயலும்? எம்பெருமானுர் திருவுள்ளமென்று கைகூப்பி நிற்குமத்தனை.

இதர ஸம்ப்ரதாயங்களில் மடாதிபதிகளாயுள்ள மஹான்களின் மஹாக்ருபைக்கு இளமை தொடங்கியே இலக்காகும் பாக்கியமுடையேன். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீவானமாமலை ஸ்வாமிகளையும் திருக்குறுங்குடி ஸ்வாமிகளையும் ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமிகளையும் பற்றி ஏற்கெனவே விஜ்ஞாபித்தாயிற்று. ஸ்ரீமதஹோபில மடாதிபதிகளுள் ஸ்ரீ ஸ்ரீ இஞ்சிமேட்டழகிய சிங்கரைப்பற்றியும் விஜ்ஞாபித்தாயிற்று. (அது முதற்பகுதி பக்கம் 56ல் காணத்தக்கது.) அந்த ஸ்வாமிக்குமுன் நாற்பத்தோராவது பட்டத்தில் ஆஸ்தானமலங்கரித்திருந்த அழகியசிங்கர் இங்கே ஸேவை ஸாதித்தருள்கின்ருர். இந்த ஸ்வாமி தேவப்பெருமாளை மங்களாசாஸனம் செய்தருள்வதற்காக ஏறக்குறைய முப்பது ஸம்வத்ஸரங்களுக்குமுன்பு ஸ்ரீகாஞ்சீபுரிக்கு எழுந்தருளியிருந்தபோது அந்த ஸ்வாமியோடு அடியேனுக்கு முன்பரிசயமில்லாமையாலே அடியேன் அணுகாமலேயிருந்தேன். ஆனுலும் ஸ்ரீஸ்வாமி பேரருளாளன் ஸன்னிதி மங்களாசாஸனத்திற்கு எழுந்தருளினபோது பலருடன் கூடியிருந்து களித்தேன். மடத்திற்கு விடை கொண்டு தண்டன் ஸமர்ப்பிக்கப் பெறுமலிருந்தேன். அப்படியிருக்க, ஸ்ரீகார்யதுரந்தரராயிருப்பவரை நியமித்தருளி அடியேனைத் தம் திருவடி வாரத்திற்கு வரவழைத்தருளிக் குளிரக் கடாக்ஷித்தருளினர். 'பொருளல்லாதவென்னை இங்ஙனே பொருளாக்கியருள்வதற்கு என்ன திருவுள்ளமோ?' என்று வினவினேன். அதற்கு அருளிச்செய்தபடி; "ஒரு ஸமயம் ஸந்நிதியில் பருத்திப்பட்டு திருவேங்கடாசாரியார் வார்த்தையாடிக் கொண்டிருந்தபோது உம்மோடு தமக்கிருந்த ஸ்நேஹபாவங்களைப்பற்றி வெகு விசேஷமாகச் சொன்னர்; அதுவுமல்லாமல் இங்கிருந்து பிரசுரமாகிற க்ரந்தங்களும் ஸன்னிதிக்கு வந்து கொண்டிருப்பதால் அவற்றைப் பார்க்கிறபோது எனக்கும் ப்ரீதி விளைந்ததுண்டு; இஞ்சிமேடு ரங்கநாதாசாரியரும் ரொம்ப சொல்லக் கேட்டிருக்கிறேன்; அப்போதிலிருந்து நேரில் ஸந்திக்க வேணுமென்கிற உத்கண்டையிருந்தது. இவ்வூருக்கு வந்துகூட அந்த உத்கண்டை நிறைவேறவில்லையென்ருல் நன்ருயிருக்குமோ?" இத்யாதி.


ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமதஹோபிலமடம் 41-வது பட்டத்தில் அபிஷிக்தராயிருந்த மஹாஸ்வாமி

பிறகு க்ரமேண அபரிமிதமான க்ருபாப்ரவாஹம் பெருகத் தொடங்கிற்று. திருவரங்கம் பெரியகோயிலுக்கு எழுந்தருளியான பிறகு அடியேன் அவ்விடம்

விடைகொள்ளும்போதெல்லாம் ஸன்னிதிக்கு விடைகொண்டு அநுக்ரஹத்தைப் பெற்றே வருவது. இந்த மஹாஸ்வாமி ஸாதித்தருளின வார்த்தையில் "பருத்திப் பட்டு திருவேங்கடாசாரியர்" என்று நிர்தேசிக்கப்பட்ட ஸ்வாமியைப்பற்றி அடியேன் கீழ் முதற்பகுதியிலேயே விஜ்ஞாபித்திருக்க வேண்டும். பல மஹான்களின் ப்ரஸ்தாவங்கள் விடுபட்டுப்போன ரீதியில் அந்த மஹானுடைய ப்ரஸ்தாவமும் விடுபட்டுப் போனது உண்மையில் அத்யந்த சோசநீயம். அந்த ஸ்வாமி இன்னாரென்பதைப் பெரும்பாலும் உலகமறியும். அறியாதவர்களுக்கு அறிவிக்கவேண்டியது அவசியமாகிறது. இப்போது அஹோபிலமடாஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற அழகியசிங்கருக்கு [பூர்வாச்ரமத்தில்] ஸாக்ஷாத் திருத்தகப்பனார் அந்த ஸ்வாமி. அவரோடு அடியேனுக்கு முப்பது ஸம்வத்ஸரம் இடையறாத பரிசயமிருந்தது. அந்த ஸ்வாமிக்கு காஞ்சியில் ஸன்னிதி வீதியில் பதினாறுகால் மண்டபத்தருகில் திருமாளிகை (அத்யாபி) இருப்பதனால் அவர் வருஷத்தில் நாலாறுமாதகாலம் காஞ்சீவாஸமாகவேயிருப்பர். பரமவிலக்ஷணரான அந்த ஸ்வாமிக்கு ஆழ்வார்திருவடிகளிலும் ஆழ்வாரருளிச் செயல்களிலும் நிகரற்ற ப்ராவண்யமுண்டு. அதனால் காஞ்சீவாஸம் செய்தருளும் நாட்களில் அந்த ஸ்வாமி தினப்படியாகவே ஆழ்வார் ஸன்னிதிக்கெழுந்தருளி மங்களாசாஸனம் செய்வது தவறமாட்டார். அப்படிப்பட்ட மஹானுக்கு தைவவசமாக ஒரு அபசரிதம் நேர்ந்துவிட்டது. (அதாவது) தேவப்பெருமாள் ஸன்னிதியிலெழுந்தருளியிருக்கிற நம்மாழ்வாருடைய திருமண்காப்பை தாதாசாரியர்கள் 1908ம் வருஷத்தில் [47. வருஷங்களுக்கு முன்பு] மாற்ற முயன்று பிரபலமான கலாவைஷம்யச்சண்டையையுண்டு பண்ணினார்கள். அப்போது நீதிமன்றத்தில் நடந்த வியாஜ்ஜியத்தில் இந்த ஸ்வாமியைப் பொய்ஸாக்ஷி சொல்லும்படி ஸ்ரீயூத்த்யர்கள் நிர்ப்பந்தித்தார்கள். "நான் பலவருஷங்களாக நம்மாழ்வாரை வடகலைத்திருமணோடு கூடியவராகவே ஸேவித்து வருகிறேன்" என்று சொல்லும்படி கோரினார்கள். அதற்கு இந்த ஸ்வாமி உடன்படவேயில்லை. ஆனாலும் தர்சனரக்ஷார்த்தமாகப் பொய் சொன்னால் பாதகமில்லையென்று சொல்லி அதிமாத்ரம் நிர்ப்பந்திக்க, இது அநிவார்யமென்றுகொண்டு நீதிமன்றத்தில் ஸாக்ஷியாகச் சென்று அப்படியே சொல்லி விட்டார். அந்த ஸ்வாமி உண்மையில் மஹாப்ராமாணிகராகையாலே "ஐயோ! இப்படி மனச்சாக்ஷிக்கு அத்யந்தவிருத்தமாகப் பொய்சொல்ல நேர்ந்து விட்டதே" என்று மிகவும் அநுதபித்து, உடனே நம்மாழ்வார் ஸன்னிதிக்கு வந்து வாசலில் கதறிக்கதறி யழுது "அக்ருத்யாநாஞ்ச கரணம் க்ருத்யாநாம் வர்ஜநஞ்ச மே, க்ஷமஸ்வ" என்று உரக்கக் கத்திகொண்டு மாலை 3 மணிமுதல் 6 மணிவரை ஸாஷ்டாங்கப்ரணாம பரம்பரைகளைச் செய்து கொண்டிருந்தார். அப்போது நம்மாழ்வார் ஸந்நிதிக்காரரான திருமணி ராகவாசாரியர் இதைக் கேள்விப்பட்டு ஸந்நிதிக்கு வந்து "கோர்ட்டில் மனம் போனபடி பொய் சொல்லிவிட்டு இங்கே தண்டால் வாங்க வந்தீரோ?" என்று சொல்லி அந்த ஸ்வாமியை ப்ரஹரிக்கப் போனார். [அந்த ஸமயம் அடியேன் கூடவேயிருந்தேன்; இந்த வ்ருத்தாந்தத்தை இங்கு எழுதுவது அந்த பருத்திப்பட்டு ஸ்வாமிக்கு ஒருகுறை கூறுவதற்காகவன்று; அவருடைய வொரு மஹத்தான ப்ரபாவத்தை வெளியிடுவதற்கே யென்றுணர்க.] தம்மை ப்ரஹரிக்க வந்த திருமணி ராகவாசார்யரை நோக்கி இந்த ஸ்வாமி ஸாதித்ததாவது—"கோர்ட்டில் அடியேன் பொய் சொன்னது வாஸ்தவம்; அதனால் ஆழ்வார் வடகலையாய் விடப்போகிறதில்லை. அடியேன்மீது தேவரீருக்கு எவ்வளவு சீற்றமுண்டோ அவ்வளவு சீற்றத்திற்குப் பரிஹாரமாக அடியேனை எவ்வளவு ப்ரஹரித்தாலும் ஸம்மதம்; அதை அடியேன் ஆக்ஷேபிக்கவில்லை. இத்தனை நாளும்போல் இனியும் அடியேன் ஆழ்வாரை ஸேவித்துப் போகும்படி இவ்வளவு க்ருபை செய்தருள வேணும்" என்று. இதைக்கேட்டவுடனே அவரும் ப்ரஸந்நராய் விட்டார். இந்த ஸ்வாமிக்கு ஆழ்வாரிடத்தில் இவ்வளவு பக்தியிருக்

கிறதேயென்று வியந்து உடனே திருக்காப்புநீக்கி உள்ளே யழைத்துக்கொண்டு போய் ஆழ்வாரை அரைமணிகாலம் ஸேவை பண்ணிவைத்து அவரை ஆனந்த ஸாகரநிமக்நராக்கி விட்டார். இது நடந்து 47 வருஷங்களானாலும் அடியேனுக்கு இன்று போலிருக்கிறது. அந்த திருவேங்கடாசார்ய ஸ்வாமியின் ஸ்வஸ்தானம் தேவனார் விளாகமென்பது. அது உப்பிலியப்பன் ஸந்நிதியின் தெருக்கோடியிலுள்ளது. அந்த ஸ்வாமி அடியேனைப் பதினைந்தாவது வயதிலிருந்தே அநுக்ரஹிக்கத்தொடங்கினவர். அடியேனுடைய திருத்தகப்பனாரிடம் அவர் வாசித்தவராம். இந்த ஸ்வாமியின் ஜ்யேஷ்டபுத்ர ரத்னமாய் மஹாஜ்ஞாநாதிகரானவரே தற்போது ஸ்ரீ அஹோபிலமடா ஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்றார். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் பலகால் காஞ்சிக் கெழுந்தருள்வதும், சிலகாலம் அங்கே வஸிப்பதுமுண்டு. அக்காலத்திலிருந்தே அவருடைய ஸௌஹார்தத்திற்குப் பாத்திரனாயிருந்து வருபவனடியேன். சிறந்த சாஸ்த்ரஜ்ஞராயும் உபயவேதாந்தங்களையும் ஆச்சரியமாக நிர்வஹிக்க சக்தராயுமெழுந்தருளியிருக்கின்ற இந்த மஹாஸ்வாமியை சென்ற ஸம்வத்ஸரத்தில் ஸ்ரீ ராஜமன்னார் ஸந்நிதியிலும் இந்த ஸம்வத்ஸரத்தில் ஸ்ரீ காஞ்சியிலும் அணுகி தண்டன் ஸமர்ப்பிக்க வாய்த்தது. பூர்வாச்ரமத்தில் காணாத பலவகையான சாதுர்யங்களைக் கண்டு விஸ்மயப்பட்டேன். நம்முடைய வைதிகபத்ததியை ஸம்ரக்ஷிப்பதில் ஸ்ரீஸ்வாமிக்கு இருக்கும் ச்ரத்தை நிகரற்றது. ஸ்வாமியின் சிந்தனையில் அஹோராத்ரமும் இந்த விசாரமே நிகழ்வதாகப் பலர் சொல்லுகிறார்கள். ஸ்வாமி செய்தருளுங் காரியங்களினாலும் இது வ்யக்தமாகத் தெரிய வருகின்றது. இந்த ஸ்வாமிக்கு முன்பு பட்டாபிஷிக்தராயெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகியசிங்கர் ஸ்ரீமதுராந்தகத்தில் ஸ்தாபித்தருளின ஸம்ஸ்க்ருத மஹாவித்



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வர்த்தமாந
ஸ்ரீமத் ஹோபில மடாதிபதி ஸ்வாமி
43-ஆவது பட்டம்

யாலயத்தை இவர் அபிவிருத்தி செய்து போருவதுமல்லாமல் மற்றும் பல விடங்களில் சாகாவித்யாலயங்களை ஏற்படுத்தி ஜீவனோபாயமான வித்யையையும் சேர்த்து அபிவிருத்தி செய்வித்து வருவது மிகவும் கொண்டாடத்தக்கது. அநவரதம் யாத்திரையிலேயே யெழுந்தருளியிருந்து சிஷ்யவர்க்கங்களை உஜ்ஜீவிக்கச் செய்தருள்வதில் ஆஸ்தை கொண்டிருப்பது விசேஷித்துக் குலாவத்தக்கது. மடத்தின் சார்பாக 'ந்ருஸிம்ஹப்ரியா' என்றொரு பத்ரிகை முன் ஸ்வாமியின் காலத்திலிருந்தே ஆரம்பிக்கப்பட்டுத் தொடர்ந்து நடந்து வருகின்றது. இது லோகத்திற்கு மஹத்தான உபகாரமே. ஆனால் பத்ரிகாநிர்வாஹசதுரர்களாய் மத்யஸ்த புத்திகளாய் விவேகிகளாய்ச் சிறந்த பண்டிதர்களானவர்களைக் கொண்டு நடப்பித்தால் இன்னமும் லோகோபகாரம் மிகும் என்று விஜ்ஞாபிக்க வேண்டியதாயிற்று. சில வருஷங்களுக்குமுன்பு இப்பத்ரிகையில் அஸம்பத்தமான விஷயங்கள் எழுதப்பட்டு வந்ததின்மேல் அடியேன் அவற்றைக் கண்டித்துப் பல ஸஞ்சிகைகளை வெளியிட நேர்ந்ததென்பது பலர்க்கும் நினைவிலிருக்கும். மடத்தில் ஈடு முப்பத்தாறாயிரப்படி காலக்ஷேபம் நடந்து வருகிறதென்று ஒருபுறம் பிரசுரம் செய்துகொண்டு, அந்த மஹாக்ரந்தத்திலுள்ள அர்த்தவிசேஷங்களை தூஷிக்கும் வியாஸங்களைப் பத்ரிகையில் பிரசுரித்துக் கொண்டிருக்க அனுமதி யளித்திருந்தது அநுசிதமென்று தெரிவித்துவிட்டு "இனி இப்பத்ரிகையை அடியேனுக்கு அனுப்பவேண்டாம்" என்கிற விஜ்ஞாபனத்தை உலகமறிய வெளியிட்டு நின்றேன். அதன் பிறகு அப்பத்ரிகையின் ரீதி எவ்வாறாயிருக்கிறதென்பதை யறியேன்.



ஸ்ரீமத் பரமஹம்ஸ. ராஜகுரு (வர்த்தமான) ஸ்ரீபரகாலமடாதிபதி ஸ்வாமி; மைஸூர்.

மைஸூர் மஹாநகரத்தில் ராஜகுரு. ஸ்ரீ ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர பரகாலமடாஸ்தானத்தை இப்போது அலங்கரித்தருளாநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீலக்ஷ்மீ ஹயவதநபாதுகா ஸேவக ஸ்ரீமதபிநவரங்கநாத ப்ரஹ்மதந்த்ரபரகால யதீந்த்ர ஸ்வாமியின் பரமக்ருபாப்ரவாஹத்தில் அடியேன் மக்நனாயிருக்கும் விதத்தை எழுதும் வகையறிகின்றிலேன். நிர்ஹேதுகக்ருபை யென்று ஒன்றுண்டு என்பதை அடியேன் உண்மையில் இந்த மஹா ஸ்வாமியின் க்ருபையைக் கொண்டே நிஷ்கர்ஷித்தேன். கீழ் இரண்டாம் பகுதியின் முடிவில் பக்கம் 148ல் விஜ்ஞாபித்திருக்கிறபடி அடியேனுடைய பால்யஸ்நிக்தரான ஸ்ரீ உவே. கோழியாலம் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்ரீ ஸ்வாமி ஸன்னிதியில் சில வருஷங்கள் வாழ்ந்தபோது அவருடைய ப்ரோத்ஸாஹநத்தினால் அடியேனுடைய அநேக க்ரந்தங்களை ஸ்ரீஸ்வாமி தம்முடைய ஸன்னிதிக்கு வரவழைத்திருந்தார். அந்த ஸமயத்தில் க்ருபையொன்

றும் தோன்றப் பெற்றதில்லை. அப்பால் 10, 12 வருடங்கள் கடந்தபின் ஆகஸ்மிகமாகவே பரமக்ருபை பெருகப்புக்கது. ஸ்ரீமான். ஆலூர் ராமாசார் என்றொரு பண்டிதர் ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் வேதாந்தமதிகரித்துக் கொண்டு பகவதாராதந நிரதராயிருந்தார். [அவர் இப்போது நைஜாம் ப்ராந்தத்தில் ஸ்வக்ராமத்தில் வஸித்துக் கொண்டிருக்கிறார்.] அவர் அடியேனுக்கு ஸ்வாமியின் திவ்யாஜ்ஞையைத் தெரிவித்திருந்தார். அப்போது அடியேன் உத்தரதேச க்ஷேத்ர தீர்த்தயாத்ராபரனாய் ஹரித்வாரத்தில் இருக்கையில் அங்கே அந்த ஸ்ரீமுக பத்ரிகை கிடைத்தது. உடனே ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்கு வரவேணுமென்கிற திவ்யசாஸனம் அதில் காணப்பட்டது. அப்போது உத்திஷ்டமான யாத்திரை பாதியுமாகாமலிருந்தபடியால் உடனே புறப்பட்டு விடைகொள்ள முடியாமல் "लभेत वा प्रार्थयिता न वा श्रियं श्रिया दुरापः कथमीप्सितो भवेत्—லபேத வா ப்ரார்த்தயிதா நவா ச்ரியம் ச்ரியா துராப: கதமீப்ஸிதோ பவேத்" என்கிற சாகுந்தல ச்லோகத்தை யெழுதி ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்கு விஜ்ஞாபன மனுப்பிவிட்டேன். காலக்ரமத்தில் யாத்திரை முடிந்து அடியேன ஸ்வஸ்தானம் சேர்ந்தபிறகு மீண்டும் ஸ்ரீமுகம் கிடைத்தும் பல மாதங்கள் வரையில் அடியேன் ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்கு விடைகொள்ள அவகாசப்படாமலே யிருந்தது. மடத்தில் முன்னே யிருந்த ஸ்வாமிகள் எழுதிவைத்திருந்த சில வியாக்கியான க்ரந்தங்களை அடியேன் மூலமாக அச்சிடுவிக்கத் திருவுள்ளம்பற்றி யிருந்த ஸ்ரீபரகால ஸ்வாமி இதைப்பற்றின நியமனம் தந்தருள்வதற்காகவே அடியேனை நேரில் வரும்படி ஆஜ்ஞாபிக்கிறாரென்று தெரிந்துகொண்டு, அந்த நியமனத்தைக் குறையற நிறைவேற்றுவிப்பதாக விண்ணப்பமெழுதிக் கொண்டேன். ஏழெட்டு ஸம்வத்ஸரகாலம் அநேக ஸஹஸ்ரரூப்யவ்யய ஸாத்யமான முத்ரணங்களை அநந்யப்ரயோஜநனாய்ச் செய்து வைத்தேன். இந்த முத்ரணம் அடியேன் மூலமாக நடைபெறலாகாதென்று தடைசெய்ய தக்ஷிணதேச ப்ராந்தங்களிலிருந்து பலர் ஸ்ரீபரகால ஸ்வாமி ஸன்னிதிக்கு நேரில் சென்றும் கடிதங்களெழுதியும் ப்ரபலப்ரயத்நங்கள் செய்தார்கள். அன்னவர்களின் வார்த்தைகளை ஸ்ரீஸ்வாமி சிறிதும் செவியேற்கவில்லை. "உங்களால் வீணாக அஸூயைப்பட முடியுமேயல்லது ஒரு கார்யமும் செய்ய முடியாது; உசிதமோ அநுசிதமோ, என்னிஷ்டப்படி நான செய்து போரும் காரியங்களில் நீங்கள் ஏதுக்குத் தலையிடுகிறீர்கள்?" என்று இதையே ஒவ்வொருவரிடமும் ஸாதித்துப் போகவிட்டருளினார். இந்த விஷயத்தை ஸ்ரீஸ்வாமி திருவாக்கிலிருந்தே கேட்டவனடியேன்.

நாலைந்து பர்யாயம் ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்கு விடைகொள்ள நேர்ந்தது. ஸ்வாமியினுடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களைப்பற்றி அடியேன் க்ரஹித்த அம்சங்களை இங்கு ஸம்க்ஷேபமாகவாவது எழுதாவிடில் அடியேனுடைய ஆத்மா தரிக்ககில்லாது. ஸ்வாமி நாநாசாஸ்த்ரங்களில் நிஷ்ணாதரென்பது ஸ்வாமியருளிச்செய்து வெளிவந்திருக்கிற க்ரந்த ரத்னங்களினால் வித்வான்கள் யாவருமறிந்ததாகும். மிகச் சிறந்த க்ராந்திகத்வமும், சாஸ்த்ரார்த்தங்களில் ஆழ்ந்த விமர்ச சக்தியும் ஸ்வாமி பக்கலிலே ஈடுமெடுப்புமில்லாதபடி குடிகொண்டிருக்கிறது. அசக்திமலிந்த இந்த திருநக்ஷத்ரத்திலும் க்ரந்தரசனைக்குக் குறையில்லை. அநுஷ்டாந ஸம்பத்தைப்பற்றிப் பேசப்புக்காலோ அதைப்பற்றி அடியேன் போல்வார் பேச அதிகாரிகளே யல்லர். பூமண்டலத்தில் இப்படியொரு அநுஷ்டாதாவைக்கண்டதில்லை என்று ஒரே வார்த்தையில் முடித்துவிடலாமத்தனை. ஆனாலும் சிறிதேனும் விவரித்தெழுதினாலொழிய மநஸ்த்ருப்தி பிறவாது. நன்றாக ஸூர்யோதயமான பிறகு திருககண் மலர்ந்து எழுந்திருப்பாரும், காலை 7, 8 மணிக்குமேல் சயனத்தைவிட்டெழுந்திருப்பாருமான யதிகளுமுள்ளார்கள். ஸ்ரீஸ்வாமியின் அநுஷ்டானக்ரமங்கள் அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் ஒரு நிமிஷமும் ஏற்றத்தாழ்வின்றிக்கே மணிக்கணக்காக நடைபெற்று வருவது அதிசயங்களில் மேலான அதிசயமாகும்.

அபரராத்ரியில் ஸரியாக மூன்றுமணிக்குத் துயிலெழுந்து அநுட்டானமாரம்பித்து பஞ்சகால பராயணத்வத்திலே அற்பமும் வழுவின்றிக்கே இரவு பத்துமணி வரையில் அநுஸ்யூதமாக ஆசரித்தருளுகிற கார்யக்ரமம் இந்நிலத்தில் மற்றெவராலும் அநுகரிக்க ஆசைப்படவும் முடியாததே. நித்யம் த்ரிகால ஸ்நானத்திற்கு ஒரு நாளும் ப்ரச்யுதி கிடையாது. கதாசித் திருமேனியில் அஸ்வாஸ்த்யமுண்டானாலும் அநுகல்பத்தை அவலம்பிப்பதென்பது இதுவரையில் கிடையாது. "மைஸூர் எங்கே! காஞ்சி எங்கே!, வெகு தூர தேசஸ்தனை நீ நித்யமும் கூடவிருந்து பார்த்தாயோ?" என்று சிலர் கேட்கக்கூடும். அடியேன் கூடவிருந்து ஸேவித்தது சிலநாட்களே யிருக்குமானாலும் இது ஜகத்ப்ரஸித்தமான விஷயம். மாதந்தோறும் வாரந்தோறும் அடியேனுக்குச் செவிப்பட்டுக்கொண்டே யிருக்கிற விஷயமிது. மநுஷ்யர்களாய்ப் பிறந்தவர்கள் வைஷ்ணவர்களாய்ப் பிறந்தவர்கள் தங்கள் வாழ்நாளில் ஒரு நாளாவது மடத்தில் சென்றிருந்து ஸ்ரீஸ்வாமியின் திநசர்யாக்ரமங்களைக் கண்ணாரக் கண்டு களிப்பது ஜந்மஸாபல்ய ப்ரதமாகும். இது தவிர, ஸ்ரீஸ்வாமியினாலேற்படுத்தப்பட்டிருக்கிற சாச்வததார்மிக கார்ய ஸமிதிகள் அபரிமிதங்கள். பலவழிகளாலே செய்தருளும் வித்யாபிவிருத்திகளும் வாசாமகோசரங்கள். ஸ்ரீஸ்வாமியின் ஸகல வைபவங்களையும் ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவஸமயத்தில் ஸம்ஸ்க்ருதம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று பாஷைகளிலும் மடம் ஸ்ரீகார்ய துரந்தர ஸ்வாமி நியமனத்தினால் அடியேனெழுதி அச்சிட்டு வெளியிட்டிருப்பதால் அவற்றால் தெளியக் கண்டு கொள்க. மிகச்சிறிய விஷயமொன்று மிகுந்த வருத்தத்துடன் இங்கே விஜ்ஞாபிக்கலாகிறது. 3, 4 வருஷங்களுக்கு முன்பு ஸோலாபூரில் நேர்ந்த பாத்ரபத்ய விவாதத்தில் சில தத்துவங்களை உலகுக்கு உணர்த்தவேண்டி 'ராமாநுஜதயாபாத்ரபத்ய சரித்ரம்' என்கிற புத்தகம் அடியேனால் பல பாஷைகளில் வெளியிடப்பட்டது. அதில் ஸ்ரீபரகாலமடத்தைப்பற்றியும் சில வுண்மைகள் வெளியிட நேர்ந்தது. அந்த அம்சத்திற்கு மாத்திரம் பதிலெழுத முன்வந்த பரகாலமட ஸ்ரீகார்யகர்த்தா "ராமாநுஜ தயாபாத்ர பத்யதத்வநிரூபணம்" என்றொரு சிறு சுவடியை வெளியிட்டார். அதற்கு பதில் எழுதி வெளியிட்டவொரு பண்டிதர் பாத்ரபத்ய சரித்ர ப்ரதிஷ்டையில் 27-ஆம் பக்கத்தில் கீழ் வருமாறு எழுதியிருந்தார்; (அதாவது) "रामानुजदयापात्रश्लोकः सर्वैः निर्विवादमनुसन्धीयते" என்று கஸ்தூரிஸ்வாமி எழுதியிருப்பதானது ஸந்நிதி விஷயமன்று, வடகலையாருடைய மடங்களிலும் க்ருஹங்களிலும் அந்தத் தனியன் நிர்விவாதமாக அநுஸந்திக்கப்பட்டு வருவதாகச் சொன்னதேயொழிய வேறில்லை—என்னில்; இதுவும் அஸம்பாவிதம். அஹோபிலமடத்தின் செய்தி ஜகத்விதிதமாகையால் அதைப்பற்றி இங்கு ஒன்றும் சொல்லத் தேவையில்லை. பரகாலமடத்தில் வர்த்தமாநஸ்வாமிக்கு முந்தின பல ஸ்வாமிகள் காலத்தில் திவ்ய ப்ரபந்தஸேவை தலைகாட்டினதே கிடையாது. வர்த்தமாந ஸ்வாமி ஆஸ்தானமலங்கரித்த பிறகும் பல வருஷங்கள் வரையில் மடத்தில் திவ்ய ப்ரபந்தப் பேச்சே கிடையாது. காஞ்சீபுரத்திலிருந்து அய்யா. ரகுநாததாதாசாரியரும், சாமா திருமலை தாதாசாரியரும் அங்கு போயிருந்தபோது "ஸ்ரீ வைஷ்ணவ மடமென்றும் தத்ராபி வேதாந்த தேசிக ஸம்பந்தம் பெற்ற மடமென்றும் பேர் வைத்துக்கொண்டு ஸ்மார்த்த மாத்வாதி மடங்கள்போல் திவ்ய ப்ரபந்த ஸம்பந்தமே யில்லாமல் இப்படியுமிருக்கலாமா?" என்று பல தடவை ஆக்ரோசித்ததனால் வெகு சிரமத்துடன் ஒரு அத்யாபகரை வரவழைத்து வைத்து மடத்தில் திவ்ய ப்ரபந்த ப்ரவசநம் நடக்கட்டுமென்று அநுமதிக்கலாயிற்று. இப்போதும் மடாதிபதி ஸ்வாமியின் திருவாக்கில் பாசுராநுஸந்தானம் எந்த ஸந்தர்ப்பத்திலும் காணமுடியாது; ராமாநுஜா பாத்ராநுஸந்தானமும் அப்படியேதான். இதைக் கடாக்ஷித்த பிறகு இனி மாறுதல் ஏற்பட்டால் க்ஷேமமே" என்பது. இதிலிருந்து ஸ்ரீஸ்வாமியின் திருவுள்ளத்திலுண்டாகியிருக்கிற ஸ்வல்ப விக்ருதியை, தத்வஸ்திதியையுணர்ந்த ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவனே நீக்கியருளவேணும்.

அடியேன்பால் பரமக்ருபையுள்ளவர்களும், அடியேனுடைய பரமபக்திக்குப் பாத்ர பூதர்களுமான மடாதிபதிகளின் ச்ரேணியில் ப்ரதமஸ்தானம் காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான பெரியவாளுடையதேயாகும். இப்பெரியவாளைப் பற்றித் தெரிந்துகொள்ளாதவர்கள் பூமண்டலத்திற்குள் எந்த ப்ராந்தத்திலுமிருக்கமாட்டார்கள். த்வீபாந்தரத்திலுள்ளவர்களுங்கூட ஸ்ரீ ஸ்வாமிகளின் வைபவங்களைக் கேட்டு வந்து பணிந்து போகின்றார்களென்றால் பாரதவர்ஷே பரதகண்டே ஜம்பூத்வீபே உள்ளவர்களைப்பற்றிச் சொல்லவேண்டியதுண்டோ? மூன்று நான்கு வருஷமாகக் காஞ்சீபுரியில் அடியேனுடைய வீதியின் ஸமீபத்திலேயே ஸ்வாமிகள் விஜயம் செய்திருப்பதால் தினப்படியாக ஸ்ரீபாத ஸேவைக்கு வந்து போகும் லௌகிக வைதிகப் பெரியார்களை அநவரதம் கண்டுகொண்டிருக்கிறோம். ஸ்வாமிகளிடத்தில் அத்புதமான தெய்வ சக்தி விளங்குகின்றதென்றே அனைவரும் அபிப்ராயப்படுகிறார்கள். பரத்வத்திற்கோ எல்லையில்லை; ஸௌலப்யத்தைப் பார்த்தாலோ பரத்வலேசமுமிருப்பதாக நினைக்கவே முடியாது. ஸ்வாமிக்கு அத்வைத ஸித்தாந்தத்தில் அபிநிவேசமிருந்தாலும் இதரஸித்தாந்தங்களில் அப்ரீதிலேசமும் கிடையாது. எந்தமதஸ்தர்களாயிருந்தாலும் அவர்களிடத்தில் யோக்யதை சிறிது



ஸ்ரீமத் பரமஹம்ஸ, காஞ்சீ காமகோடி பீடாதிபதி (வர்த்தமாந) சங்கராசார்ய ஸ்வாமிகள்

கண்டாலுங்கூட ஹார்தப்ரீதியைச் செய்வது ஸ்வாமிக்கு இயல்வாக அமைந்தது. அந்தந்த மதஸ்தர்கள் ஸ்ரீஸ்வாமியை அணுகும்போது 'இப்பெரியவாள் நம்முடைய மதத்தைச் சேர்ந்தவர் போலிருக்கிறதே' என்று தான் நினைக்கும்படியாயிருக்கும். இப்பெருமைகளெல்லாம் உலகர் பெரும்பாலும் அநுபவித்தவையும் அநுபவித்துக்கொண்டிருப்பவையுமாதலால் இங்கு நாம் விஸ்தரிக்கவேண்டிய அவசியமேயில்லை. வைதிக பத்ததியை நிஷ்கண்டகமாக்கி ப்ரதிஷ்டாபனம் செய்வதிலும் வைதிகர்களை ஸர்வப்ரகாரத்தாலும் ஆதரிப்பதிலும் ஸ்வாமிக்கிருக்கும் ஆஸ்தை இணையற்றது. இரவும் பகலும் இது விஷயமான சிந்தையொன்றுதான் ஸ்வாமிகளின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டிருக்கின்றது. ஸர்வபூதஸுஹ்ருத்தான இப்பெரியவாளுடைய அப்ரதிம ஸௌஹார்தத்தை யான் பெற்றிருக்கிறேனென்பதைத் தனிப்பட்ட செருக்குடன் வெளியிட்டுக்கொள்ள விருப்பமுடையேன்.

இப்பெரியவாள் சென்றவருஷத்திற்கு முன் வருஷத்தில் ஐப்பசி மாதத்தில், நாடெங்குமுள்ள வைதிகர்களுக்கு [த்ரிமதஸ்தர்களுக்கும்] ஒரு கட்டளையிட்டிருந்தார்கள்; அதாவது, "அவரவர்கள் தம்தமக்கு ஸௌகரியமான விடத்திலிருந்து கொண்டு தசோபநிஷத்துக்களைப் பாராயணம் செய்துவரவேண்டியது; சில பேர்களைக் கூட்டி அர்த்த ப்ரவசனமும் செய்ய ஸௌகரியமிருந்தால் அதையும் செய்வது" என்பதாக. இவ்வண்ணமான கட்டளை நம்முடைய வேத வேதாந்த வைஜயந்தீவித்யாலயஸ்தர்களுக்கும் கிடைத்திருந்தது. கட்டளையின்படியே சிலர் அதைப் பாராயணம் செய்தார்கள். ஆஜ்ஞையில் அர்த்த ப்ரவசநமும் சேர்ந்திருந்தபடியாலே ஒவ்வோருபநிஷத்தின் ஸாரத்தை ஒவ்வொரு நாளில் ப்ரவசனம் செய்துவரவேணுமென்று சிலர் அடியேனைக் கேட்டுக்கொண்டார்கள். அதற்கிசைந்து அப்போது தினந்தோறும் பகலில் மூன்றுமணி முதல் ஐந்துமணி வரையில் நம் பிள்ளை ஸன்னிதியில் அந்த ப்ரவசனம் நடத்தப்பட்டு வந்தது. இதை முன்னடி ஸ்வாமிகளின் ஸன்னிதானத்தில் தெரிவித்து மடத்திலேயே இதை நடத்திவரலாமென்று நினைக்கிறேனென்றேன்; அதற்கு ஸ்வாமிகள் "இங்கு வேண்டாம்; நம் பிள்ளை ஸன்னிதியிலேயே நடக்கட்டும்; நானும் அவ்விடமேவந்து ச்ரவணம் செய்கிறேன்" என்று சொல்லி அப்படியே அந்த பத்து நாளும் 3 மணிக்கென்றால் இரண்டே முக்கால்மணிக்கே விஜயஞ்செய்து கொண்டிருந்ததைக் கண்டவர்கள் "இப்படி அஹந்தையும் மமதையுமற்ற மடாதிபதிகள் உலகிலுண்டோ?" என்று விஸ்மயஸ்திமிதரானார்கள். ஸ்ரீஸ்வாமிகளின் ஒவ்வொரு குணத்தையும் பற்றிப் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். பகவத் கீதையில் நான்காமத்யாயத்தில் "यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत । अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम्—யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத, அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்" என்னும் ச்லோகத்தில் "ஆத்மாநம் ஸ்ருஜாமி" என்பதற்கு ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம் என்கிற கீதையின்படியே ஜ்ஞானிகளை யனுப்புகிறேன்' என்று அந்தரங்கப் பொருள் சொல்லுவதுண்டு; அதர்மம் தலையெடுத்து தர்மம் குன்றிப்போகிற காலந்தோறும் தர்மஸ்தாபநார்த்தமாக ஞானிகளை அவதரிக்கச் செய்கிறேன் என்று பகவான் சொல்லுகிறான். அப்படிப்பட்ட ஞானிகளில் தற்காலம் ஸ்ரீஸ்வாமிகளை ஒருவராக உலகம் மதிக்கின்றது. ஏறக்குறைய இருபது வருஷங்களாக ஸ்ரீஸ்வாமியின் பரமப்ரீதிக்குப் பாத்திரமாயிருந்து வருகிற யான் ஸ்வாமிகள் காஞ்சியில் நித்யவாஸமாக வந்து சேர்ந்த பிறகே "இவாள் ஜ்ஞாநவைராக்ய நிதிகள்" என்றறியும் பாக்கியம் பெறலாயிற்று. ஸ்ரீஸ்வாமிகளின் மூலமாகப் பலபல மஹான்களுடையவும் ப்ராஜ்ஞர்களுடையவும் பரிசயமும் பெறலாயிற்று.

மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்யகலாநிதி ப்ரஹ்மஸ்ரீ சாமிநாதையரவர்களைத் தமிழுலகில் அறியாதவர்களுமில்லை, போற்றாதவர்களுமில்லை. நமக்கு ப்ரத்யக்ஷமான அகஸ்த்யரிவர் என்றால் மிகையாகாது. இப்பெரியார் பரகதியடைந்து பதினைந்து வருஷங்களுக்கு மேலாய் விட்டாலும் தமிழுலகம் முழுவதும் இப்பெரி

யாரை நீடூழி நிச்சலும் நினைக்கும்படியான மஹத்தர காரியங்கள் இவரால் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. கீழே பலகால் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருக்கின்ற (மயிலை) S. கோபால ஸ்வாமி ஐயங்காருடன் இப்பெரியார் பலதடவைகளில் நம்முடைய சென்னை யுபந்யாஸ கோஷ்டிக்கு விஜயம் செய்து கொண்டிருந்தார்கள். பிறகு வயோதிகத்தினால் இடையிடையில் ஸௌகரியப்படுகிற ஸமயங்களில் வருவதாக வைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளிலும், நம்பிள்ளை முதலான ஆசாரியர்களின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிலும் அளவுகடந்த அன்பு இருந்தது. வியாக்கியான பங்க்திகளைச் சொல்லக்கேட்டால் "இன்னும் சொல்லுங்கள், இன்னும் சொல்லுங்கள்" என்று கேட்டுக்கேட்டுக் கண்ணீர் பெருக்குவர். ஐயோ! நான் வைஷ்ணவனாகப் பிறவாமல்போனேனே!" என்றும் சில ஸமயங்களில் சொல்லிக்கொள்வர். அவர் உபந்யாஸஸபைக்கு வருகிறபோதெல்லாம் முடிவில் பத்தெட்டு நிமிஷமாவது தம்முடைய சொற்பொழிவை நிகழ்த்துவர். ஒருநாள் சொன்னதை மட்டும் இங்குத் தெரிவிக்கிறேன் ;



மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி. ப்ரஹ்மஸ்ரீ. சாமிநாதையர். (பரலோகவாஸி).

"வைஷ்ணவர்களுக்கு உவே. என்றொரு பட்டமுண்டு. ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சிறு காகிதமொன்று எழுதினாலும் அந்தப்பட்டமில்லாமல் எழுதுவதில்லை. உவே. என்றால் என்ன அர்த்தம் என்பது முதலில் எனக்கு விளங்காமலிருந்தது. ஸி. பி. என்றும் கே. ஆர். என்றும் இப்படி இன்ஷல்கள் இருப்பது போல (உவே.) என்பது சிலர்க்கு இன்ஷல் போலும் என்று எண்ணியிருந்தேன். ஸ்ரீவைஷ்ணவர்களனைவர்க்கும் இப்படி நியதமாக எழுதப்படுவதைக் கண்டபின் இது இன்ஷல் அல்ல; சிறப்பான பட்டப்பெயர் போலும் என்று நினைத்து, என்னிடம் வருகிற சில வைஷ்ணவர்களை உவே. யென்றால் என்ன அர்த்தமென்று கேட்டேன், பலர் சொல்லவில்லை ; ஒரு பெரியார் 'உவே. யென்றால் உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யரென்று பொருள்" என்று சொல்லி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸம்ஸ்க்ருத வேதாந்தம், திராவிட வேதாந்தம் என்னுமிவையிரண்டும் இரண்டு கண்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றனவென்று விவரித்தார். அதைக் கேட்டதும் எனக்கு வெகு வியப்பும் உகப்புமுண்டாயிற்று.

தமிழ்ப்பிரபந்தத்தை வேதாந்த நூலாகக் கொள்ளுகிறவர்களுமிருக்கிறார்களே யென்று உள்ளம் பூரித்தேன். உவே. யென்கிற இந்த பட்டம் பெறுவதற்கு உரிய குலத்திலே எனக்குப் பிறவி நேராமல் போயிற்றேயென்று மிகமிக வருந்தினேன். எனக்கு உவே. என்பது பட்டப்பெயராகக் கிடைக்காமற் போனாலும் இன்ஷலாகக் கிடைத்திருக்கிறதேயென்று மகிழ்ச்சிகொண்டேன். நான் உமையாள்புரம் வெங்கடராமய்யரின் புதல்வனுகையாலே எனக்கு தெய்வ வசமாகவே உவே. பட்டம் கிடைத்துவிட்டது. திவ்யப்பிரபந்தங்களுக்கு வியாக்கியானங்களருளிச் செய்த ஆசாரியர்களைப்போன்ற ஸர்வஜ்ஞர்கள் எந்த ஸம்பிரதாயத்திலுமில்லையென்று சபதம் பண்ணிச் சொல்லுவேன். இதை நான் எனது நூல்களிற் பன் முறையும் எழுதியுள்ளேன். திவ்யப்பிரபந்தங்களெல்லாவற்றிற்கும் பூருவர்களியற்றிய வியாக்கியானங்களை நான் வாசித்திருந்தாலும் அவற்றை அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளிடத்தில் ஒருமுறை பாடம் கேட்கவேணுமென்னுமவா எனக்கு அந்தரங்கமாகவுண்டு. இன்று இங்கு நான் காலக்ஷேபங் கேட்ட பாட்டில்*சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான், இனியுனது வாயலகிலின்னடிசில் வைப்பாரை நாடாயே*என்றுள்ளதல்லவா? இதே நிலைமையிலிருக்கின்ற யான் இந்த அவாவை வெளியிடவும் வெள்கவேண்டியவன். மிகச் சிறிதே எஞ்சியுள்ள என் ஆயுளில் இன்னுஞ் சில மாதங்களாவது இங்கு வந்து இந்தப் பிரவசனத்தைக் கேட்டுக்களிக்க இறைவன் அருள் செய்தாற்போதும்.'' என்று கூறி நின்றார். இப்பெரியார் பரிசோதித்துப் பதிப்பித்து வெளியிட்டுள்ள தமிழிலக்கண இலக்கிய நூல்கள் எண்ணிறந்தவை. மேலே உதாஹரித்த இவரது சொற்பொழிவில் இப்புல்லறிவாளனைப்பற்றிப் பெருமதிப்பாகப் பேசினது கொண்டு நான் செருக்குறுவேனல்லேன். இப்பெரியாருடைய அறிவில் ஏகதேசமும் நான் ஸம்பாதித்துக் கொண்டவனல்லேன். அன்பு பேசுவிக்கப் பேசின பேச்சுக்கள் அவை என்னுமிடத்தை உள்ளபடியுணர்வேன்- அத்தனையன்பு உண்டாகப்பெற்ற பாக்கியத்திற்குமட்டும் உள்ளம் பூரிக்கின்றேன்.

கோதாவரி ஜில்லாவில் நரஸாபூர் என்பது மிகச்சிறந்த ஸ்ரீவைஷ்ணவநகரம். அவ்விடத்தில், ஸ்ரீ உவே. மந்தஸா ராமானுஜாசார்ய ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான மஹான் எழுந்தருளியிருக்கிறார். இந்த ஸ்வாமி நியாயவேதாந்தங்களில் வாக்யார்த்தம் சொல்லவல்ல மஹாபண்டிதர். தெலுங்கு தேசங்களில் அடியேன் உபந்யாஸார்த்தமாகப்போகுமிடங்களில் பெரும்பாலும் இந்த ஸ்வாமி யெழுந்தருளி அநுக்ரஹிப்பர். இந்த ஸ்வாமியின் திருவடிவாரத்தில் விளங்குகின்ற இருவரும் இவருடைய கீர்த்திக்கு ஜயத்வஜமானவர்கள். ஒருவர் ஸ்ரீமந்நாராயணாசார்ய ஸ்வாமி. இவர் உத்தமாச்ரமியாய் பதரிகாச்ரமத்தில் மதஸ்தாபனம் செய்து வருகிறார் மற்றொருவரான ஸ்ரீ உவே. தெ. கம். கோபாலாசார்யரென்கிற வித்வானும் அவர்க்கு உசாத்துணையாயிருந்து வருகிறார். இம்மூவரும் அடியேனுக்கு ப்ராணநிர்விசேஷர்கள்.



அடியேன் மிக்க இளமை தொடங்கியே ஸ்ரீரங்கத்திற்குப் பலகால் விடை கொள்ளத் தொடங்கினவனுதலால், திருச்சிராப்பள்ளியிலிருந்து அவ்விடத்திற்கு அடிக்கடி யெழுந்தருளும் ஸ்ரீ உவே. ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமியை இளமையிலேயே அங்கு பலகால் ஸேவித்திருந்தேன். ஆனுலும் வெகுநாள் வரையில் நெருங்கிப் பேசும் பாக்கியம் பெற்றிலேன். அந்த ஸ்வாமி பிரபல அட்வகேட்டாதலால், ஸம்ஸ்க்ருதமும் ஏதோ ஸாமான்யமாக வாசித்திருப்பர் என்றெண்ணி நெருங்குவதற்கு ஆசைப்படாமலேயிருந்தேன். ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ பௌண்டரீகபுரம் ஸ்வாமியென்கிற உத்தமாச்ரமிகள் மஹாஜ்ஞாநாதிகராக எழுந்தருளியிருந்தார். அந்த ஸ்வாமியின் ஜ்ஞாநாநுஷ்டானங்களைப்பற்றி அடியேன் எழுத அதிகாரியேயல்லேன். நாடோறும் மூன்று ஸந்த்யைகளிலும் அஷ்டோத்தரஸஹஸ்ராவ்ருத்தி திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ர ஜபம் செய்தருளும் பெருமை அந்த ஸ்வாமிக்கு அஸாதாரணமாக விளங்கியிருந்தது. "रूपमेवास्यैतन्महिमानं व्याचष्टे" என்னும்படி யெழுந்தருளியிருந்தார். கீழ் இரண்டாம் பகுதியின் முடிவில் ஸ்ரீமத்உவே. புத்தங்கோட்டம் ஸீமாச்சார் ஸ்வாமியோடு யாதவாப்யுதயச்லோக விசேஷத்தின் வியாக்கியான பங்கிதி ஸம்பந்தமாய் நேர்ந்ததாகத் தெரிவிக்கப்பட்ட விவாதகாலத்தில் (கீழ் பக்கம் 143ல் தெரிவித்திருந்தபடி) இந்த பௌண்டரீகபுரம் மஹாஸ்வாமியின் கடாக்ஷவிசேஷத்திற்குப் பாத்திரமாயினேன். அந்நாள் தொடங்கி ஸந்நிதியில் ஸேவை ஸாதிக்கும் ஸந்தர்ப்பங்களில் கதாசித் குளிரக் கடாக்ஷித்து அழைத்துக் குசலம் வினவியருள்வர். மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீ கோபாலாசார்யர் அந்த மஹாஸ்வாமி ஸன்னிதியிலே விசேஷமாக நெருங்கிக் கொண்டிருந்ததைக் கண்டிருந்தேனடியேன். அதனுல் ஒருஸமயம் அந்த மஹா ஸ்வாமியையே கேட்டேன் "ஏ. வி. கோபாலாசார்யர் ஸம்ஸ்க்ருதத்தில் நல்ல



ஸ்ரீமதுபயவே வைதிக லௌகிக வித்யாஸாகர.
ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமி
திருச்சிராப்பள்ளி

ப்ரவேசமுடையவர்தானே?" என்று. அதற்கு அந்த ஸ்வாமி "அதென்ன அப்படி கேட்கிறீரே? அவர் பரிகணித வித்வத்கோஷ்டியில் சேர்ந்தவரன்றோ? அவருடைய ஆங்க்லஜ்ஞானத்தை நானறியேன். ஸம்ஸ்க்ருத வித்யாஸாகரத்தில் ஆழ்ந்தவர்" என்று மிகவும் ப்ரசம்ஸித்து ஸாதித்தார். ஸ்ரீபாஷ்யத்திற்போலவே சங்கரபாஷ்யாதிகளிலும் தேர்ச்சியுள்ளவரென்றும் ஸாதித்தார். அதன் பிறகு கோபாலாசார்ய ஸ்வாமியோடு ஸக்யம் அங்குரித்தது. அது தினேதினே (அல்லது) க்ஷணேக்ஷணே வளர்ந்து வந்தது. அந்த ஸ்வாமி ஒருஸமயம் தம் திருத்தகப்பனாரோடுகூட காஞ்சிக்கு எழுந்தருளியிருந்து விசேஷகடாக்ஷம் செய்தார். அது முதலாகப் பரஸ்பரம் கடிதங்களெழுதிக் கொள்வது தொடக்கமாயிற்று.

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு கோயிலில் மணவாளமாமுனிகள் ஸன்னிதியில் ஐப்பசி மஹோத்ஸவத்தில் இரண்டுநாள் அடியேனை வரவழைத்து உபந்யாஸங்கள் நடப்பித்துக் கொண்டிருந்தார்கள். அப்படி நாலைந்து ஸம்வத்ஸரம் நடந்தது. பிறகு காஞ்சீமஹோத்ஸவத்தை விட்டு அவ்விடம் விடைகொள்ள முடியாமல் நிறுத்திக்கொண்டேன். அது நடந்து கொண்டிருந்த வருஷங்களில் ஸ்ரீகோபாலாசார்ய ஸ்வாமி அவ்விடத்திற்கெழுந்தருளி ச்ரோதாவாக இருந்து தம்முடைய ப்ரீதிப்ரகர்ஷத்தை கோஷ்டியிலேயே பெரிய உபந்யாஸமாகப் பேசி வெளியிடுவர். ஸ்ரீவில்லிபுத்தூர் முதலான விடங்களிலும் இப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்கள் ஏற்பட்டதுண்டு. இருபது ஸம்வத்ஸரங்களுக்கு மேலாக மிக வளர்ந்து சென்ற அந்த ப்ரீதிப்ரகர்ஷம் இடையில் இரண்டு மூன்று ஸம்வத்ஸரம் தைவதுர்விபாகத்தாலே விபரீதமாகியிருந்தது. சோசநீயமான அந்த ஸம்பவத்தை இதில் அடியேன் விரிவாக விஜ்ஞாபிக்க விரும்பவில்லை. அதிஸம்க்ஷேபமாக விஜ்ஞாபிக்கிறேன். கீழ் இரண்டாம்பகுதியில் (பக்கம் 138ல்) கீழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸாசாரியரென்றொருவரை ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அதற்கு முன்பும் முதற்பகுதியின் முடிவில் (பக்கம் 79ல்) அவரையும் இந்த ஸ்ரீகோபாலாசார்ய ஸ்வாமியையும் சேர்த்து ப்ரஸ்தாவித்திருக்கிறேன். [நண்பர்கள் மறுபடியுமொருமுறை அந்த கட்டத்தையெடுத்து வாசித்துப் பார்க்க வேணும்.]

அக்காலத்தில் திருவஹீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசார்யரென்பவர் தென்னாசார்ய நிந்தாமயமாகச் சில புத்தகங்களை வெளியிட்டுக் கொண்டிருந்தார். அவற்றில் ச்ருதப்ரகாசிகாசார்யருமுட்பட தூஷிக்கப்பட்டு வந்தார். அந்த நிந்தாக்ரந்திகளைத் தென்னாசார்ய வகுப்பினர் யாரும் கண்ணெடுத்துப் பார்ப்பதுமில்லை. அடியேன் அவற்றைப் பார்க்க நேர்ந்தமையால் அஸங்கதோக்தி புஞ்ஜமயமான அவருடைய நூல்களையெல்லாம் உடனுக்குடனே கண்டித்து மறுப்பு நூல்கள் வெளியிட்டுக் கொண்டு வந்தேன். 1927ஆம வருஷத்திற்குமேல் இரண்டு வருஷ காலம் இப்பணி ப்ரபலமாக நடந்து வந்தது. அப்போது "ஸத்ஸம்ப்ரதாயார்த்த ரத்னமாலா" என்னும் பெயர்பூண்ட ஸஞ்சிகை பிரசுரம் செய்ய ஆரம்பிக்கப்பட்டு "முதல் ரத்னம், இரண்டாம் ரத்னம், மூன்றாம் ரத்னம்" என்றிப்படி பல பகுதிகள் வெளியிடப்பட்டு வந்தன. இப்போதும் அவை ஏகதேசம் கிடைக்கும். அவற்றுக்கு மறுப்பெழுதுவதாக ஆரம்பித்தவவர் முடிவாக க்ஷாமணபத்ரிகை யெழுதிக் கொண்டு அஞ்ஜலிசெய்து கையொழிந்து நின்றார். அந்த க்ஷாமணபத்ரிகை வெளிவந்ததைக் கண்டவரான (மேலே ப்ரஸ்தாவித்த) கீழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்ரீரங்கத்திலிருந்து காஞ்சீ ப்ராந்தம் ஓடிவந்து ஸ்வகீய ஸம்ப்ரதாயஸ்த பண்டிதர்கள் பலரிடத்தில் "இப்படிகூட ஒரு வித்வான் க்ஷாமணபத்ரிகை யெழுதிக்கொள்ளுகிற அநியாயமுண்டா? தனக்கு எழுத சக்தியில்லையானால் தான் வாளா கிடக்கக்கூடாதா? நமக்கெல்லார்க்கும் லஜ்ஜையாகும்படி இப்படி க்ஷாமணபத்ரிகை யெழுதிவிட்டால் என்ன அர்த்தம்? அவர் தொலையட்டும். நீங்கள் யாராவது அண்ணங்கராசாரியருடைய நூல்களையெல்லாம் கண்டித்தெழுதி வெளியிட முன்வரவேண்டும். எவ்வளவு எழுதினாலும் நான் அச்சிட்டு வைக்கி

றேன். இதற்காக மாஸபத்ரிகையே ஒன்று ஆரம்பித்து விடுகிறேன்'' என்று வெகு உத்வேகத்தைக்காட்டி உத்கோஷித்தார். இவருடைய கோரிக்கைக்கு யாரும் இணங்கவில்லை. அதனால் அவர் காஞ்சீப்ராந்தவாஸிகளான வித்வான்களை சபித்துக்கொண்டே ஸ்ரீரங்கம் சென்றார். [ஸ்ரீரங்கத்தில் ஆண்டவனாச்ரமத்திலேயே அவர் வஸித்து வந்ததாகக் கேள்வி.] ஸ்ரீரங்கம் சென்றபின் [மேலே ப்ரஸ்தாவித்த] ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமியையணுகி "தேவரீரே சரணம்; தேவரீரும் கைவிட்டால் நம்முடைய தர்சனமே பாழாய்ப் போய்விடும்'' என்று முறையிட்டுக்கொள்ள, இந்த ஸ்வாமி அவர்க்குக் கைகொடுக்க இசைந்தார். பிறகு இந்த ஸ்வாமியை ஆசிரியராகக்கொண்ட மாஸபத்ரிகையொன்று வெளிவர ஆரம்பமாயிற்று. "அண்ணங்கராசாரியருடைய நூல்களைக் கண்டிப்பதற்காகவே இப்பத்ரிகை [ஸ்ரீதேசிகஸூக்திஸம்ரக்ஷிணீ] ஆரம்பிக்கப்படுகிறது; தேசிகதர்சந துரந்தரர்களான பண்டிதர்களெல்லாரும் இதற்கு விஷயப்ரதாநம் பண்ண வேணும்'' என்று அதில் வெளியிடப்பட்டிருந்தது. "अभिनिवेशवशीकृतचेतसां बहुविदामपि संभवति भ्रमः—அபிநிவேசவசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரமঃ." என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி பழுதுபடாமைக்காக ஸ்ரீகோபாலாசார்ய ஸ்வாமியும் அடியேன்மீது எதிரம்புகோக்கத் தொடங்கிவிட்டார். இதெல்லாம் மிகமிக நன்மைக்காகவேயென்று நிச்சயித்த அடியேன் அப்போது "தேசிகஸூக்திஜயத்வஜமாலா'' என்றொரு மாஸபத்ரிகையை வெளியிடத்தொடங்கி மேற்சொன்ன ஸம்ரக்ஷிணீ பத்ரிகையில் வெளிவருகிற விஷயங்களையெல்லாம் உடனுக்குடனே கண்டித்து ப்ரசுரம் செய்து வந்தேன். என்னுடைய பரமபக்திக்கு லக்ஷ்யமாயிருந்த கோபாலாசார்ய ஸ்வாமியை விஷயவிசார பத்ததியில் அதிமாத்ரம் இறக்கிப்பேச நேர்ந்துவிட்டது. அந்த ஸ்வாமியும் தமது பரமப்ரீதிக்கு ஏகலக்ஷ்யமாகக் கொண்டிருந்த அடியேனை அளவுகடந்து நிந்திக்க நேர்ந்துவிட்டது. இவையெல்லாம் அச்சேறிக் கிடப்பதால் இவற்றை ஸமய விசேஷங்களில் எடுத்துப் பார்க்க அந்தஸ்வாமிக்கும் எனக்கும் ப்ராப்தமாகும். இவற்றை தஹனம்செய்துவிட வேணுமென்கிற குதூஹலமும் இருவர்க்கு முண்டாகும். உலகமெங்கும் பரவியிருக்கிற புத்தகங்களை யார் தஹனம் செய்வது. இடையில் இரண்டு மூன்று வருஷகாலம் இத்தகைய க்ரந்தச்சண்டை வளர்ந்து சென்று கொண்டிருக்கையில் திடீரென்று ஒருநாள் ஸ்ரீகோபாலாசார்ய ஸ்வாமி ஸன்னிதியிலிருந்து அருள்வடிவமான ஒரு ஸ்ரீமுகம் கிடைத்தது. அது என்னுடைய க்ரந்தங்களிலேயே சேர்த்து வெளியிடப்பட்டிருக்கின்றது. அது க்ஷாமணபத்ரிகையின் வடிவத்திலிருந்தாலும் பரமாநுக்ரஹ பத்ரிகையென்றே அடியேன் கொள்ளக் கடமைப்பட்டவன். ஆதியிலிருந்து அந்த ஸ்வாமிக்கும் அடியேனுக்கு மிருந்த நிகரற்ற நேசத்தை உலகமெல்லாமறிந்திருந்தபடியால் இடையில் மாச்சரியம் வளர்ந்திருந்த காலத்தில் பல மஹான்கள் அடியேனை நோக்கி "இது என்ன ஆச்சரியம்! அந்த ஸ்வாமிக்கும் தேவரீருக்குமா இப்படிப்பட்ட வாதயுத்தம்?'' என்பர்கள். அவர்களுக்கு அடியேன் என்ன பதில் சொல்லி வந்தேனென்றால், திருவாய்மொழியில் (10—6—1) *இருள்தருமா ஞாலத்துள்* என்றவிடத்து ஈட்டில் "ஸம்ஸாரமாகிறது.......... ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானையுமிறே எதிரிடப்பண்ணிற்று'' என்றுள்ள ஸ்ரீஸூக்தியையெடுத்துக்காட்டி இவ்விருள்தருமாஞாலத்தில் அஸம்பாவிதமானது எதுவுமில்லையென்று சொல்லி வந்தேன். அப்போதைய மாத்ஸர்ய வியாஜத்தினால் அடியேன் அனேக தத்வார்த்தங்களைப்பற்றின ஆராய்ச்சிகளை வெளியிட ப்ராப்தமாயிற்று. கோபாலாசார்ய ஸ்வாமி உண்மையில் மஹாவிவேகியும் பரமரஸிகருமாதலால் இடைக்காலத்து ஔபாதிகமான மாச்சரியத்தை அறவே மறந்து ப்ராசீநமான நிருபாதிக ஸௌஹார்தத்தையே சதமுகமாகவும் ஸஹஸ்ரமுகமாகவும் போஷித்துப் பரிபாலித்து வருகிறார். இந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகங்கள் பல நூற்றுக்கணக்கிலன்றோ அடியேனுக்கு ப்ராப்தமாகியிருக்கின்றன. ப்ராதமிக ஸௌஹார்த

காலத்திலும் இடையில் மாத்ஸர்யகாலத்திலும், அநந்தர [வர்த்தமாந] ஸௌஹார்த காலத்திலும், பலபல விஷயங்களிலன்றே விசாரங்கள் நிகழ்ந்திருக்கின்றன. அவற்றில் சிலவற்றை மட்டும் இங்கெடுத்து விஜ்ஞாபிக்கிறேன்.

"एकयैव गुरोर्दृष्ट्या द्वाभ्यां वाऽपि लभेत यत् । न तत्त्रिभिरष्टाभिस्सहस्रेणापि कस्यचित् ॥"

என்பது தேசிகனுடைய ஸுபாஷிதநீவியிலுள்ளவொரு ச்லோகம். இதற்கு கோபாலாசாரியர் ஸ்வாமி அர்த்தம் எழுதி வெளியிட்டார்—ஆசாரியனுடைய உட்கண்ணாகிய ஒருகண்ணாலோ வெளிக்கண்ணுமாகிய இரண்டுகண்களாலோ அடையக்கூடிய பேற்றை சிவனுடைய முக்கண்களாலும், பிரமனுடைய எட்டுக்கண்களாலும், இந்திரனுடைய ஆயிரங்கண்களாலும் அடையமுடியாது—என்று. இதைக் கண்டவுடனே அடியேன் எழுதினேன்—இந்திரன் ஆயிரங்கண்ணனென்று ப்ரஸித்தியுடையவனாயினும் இந்த ஸ்தலத்தில் இந்திரனை ஸ்மரிக்க நியாயமில்லை. ப்ரக்ருதச்லோகத்தில் ஜ்ஞானவிகாஸத்தை யுண்டுபண்ணுவது விஷயம். சதுர்முக ப்ரஹ்மா ஸரஸ்வதீவல்லபனாய் நான்கு வேதங்களையும் கரைகண்டவனாகையாலே ஜ்ஞானவிகாஸனத்தில் அவனுக்கு ப்ரஸக்தியுண்டு; பரமசிவன் ஸர்வஜ்ஞனென்று பேர்பெற்றவனாகையாலும், "ईशानात् ज्ञानमन्विच्छेत्" என்று சொல்லப்பட்டவனாகையாலும், நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "நுண்ணுணர்வின் நீலார்கண்டத்தம்மான்" என்று ஞானச்சிறப்பைக்காட்டி அருளிச்செய்திருக்கையாலும் அவனுக்கும் ஜ்ஞாநவிகாஸனத்தில் ப்ரஸக்தி உண்டு. இந்த பத்ததியில் இந்திரன் நினைவுக்குவர ப்ரஸக்தியே கிடையாது. மேலும் இங்கே சிவனை முன்னே சொல்லி, அவனிலும் மேம்பட்ட பிரமனை அதற்கடுத்தபடியாகச் சொல்லி, இவ்விருவர்களிலும் தண்ணியனான இந்திரனை அதன்பிறகு சொல்ல ஔசித்யமுமில்லை. ஆகவே, "ஸஹஸ்ரசீர்ஷாபுருஷஃ ஸஹஸ்ராக்ஷஃ" என்று புருஷஸூக்தத்திலும், "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க் கண்களாயிரத்தாய்" என்று திருவாய்மொழியிலும் ஆயிரம் திருக்கண்களையுடையவனாகச் சொல்லப்பட்ட ஸ்ரீமந் நாராயணனே இங்குப் பொருளாகத்தகும். ஆசார்யனுடைய கடாக்ஷத்தாலே உண்டாகும்பேறு திரிமூர்த்திகளின் கடாக்ஷத்தாலுமுண்டாகாது என்று சொல்லுவதே இங்கு வக்தாவுக்கு உத்தேச்யமானது; இதுதான் ரஸவத்தரம்—என்பதை வெகு விரிவாக எழுதி வெளியிட்டேன். இதை அந்த கோபாலாசார்ய ஸ்வாமி கடாக்ஷித்து ப்ராமாணிகராகையாலே உள்ளமுருகி "இப்படி உண்மையான அர்த்தம் ப்ரதிவாதிபயங்கர குலதிலகருக்கன்றி வேறு யாருக்கு ஸ்புரிக்கும்?" என்று சொல்லி வைகுண்ட ஏகாதசியன்று ஸ்ரீரங்கம் ஆயிரக்கால் மண்டபத்தருகில் ஆயிரம் பேரெதிரில் அடியேனைத் தழுவிக்கொண்டு ஆனந்தபாஷ்பம் பெருக்கினாரென்பதை அடியேன் நாள்தோறும் நினைப்பவன். 'தேசிக பக்தர்களான வித்வான்கள் பல பேர்களிருந்தும் ஒருவரும் இதைக் கண்டு பிடித்துத் தெரிவிக்கவில்லையே' என்றும் வருந்தினார். அந்த ஸ்வாமி ஒரு புரட்டாசி மாதத்தில் வெளிவந்த ஆசார்ய ஜயந்திமலரென்னும் ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில் "தேசிக காவியங்களின் ஸர்வரஞ்ஜகத்வம்" என்றொரு வியாஸம் வெளியிட்டார். அதில், ஹம்ஸ ஸந்தேச காவ்யத்திலிருந்து (1—49) "नित्यावासं वृषभमचलं सुन्दराख्यस्य विष्णोः.........पाथो दिव्यं पशुपति-जटास्पर्शशून्यं विभाति" என்கிற ச்லோகத்தையுதாஹரித்து இதற்குத் தாத்பர்யமெழுதினார். திருமாலிருஞ்சோலைமலையில் பெருகும் நூபுரகங்கையானது அழகருடைய திருவடிச்சிலம்புகளிலிருந்து வருகின்ற கங்கையேயானாலும் பகவானான பசுபதியினுடைய சிரஸ்ஸ்பர்சமாகிற சுத்தியேற்றம் இதற்கில்லையென்று தேசிகன் நூபுர கங்கையினுடைய நிஹீநதையைப் பேசுகிறார் என்று இவ்விதமான அர்த்தந்தான் (ப்ராசீந) ஸ்ரீபரகால ஸ்வாமியினுடைய ரஸாஸ்வாதிநியென்கிற வியாக்கியானத்திலுமுள்ளதாகவும் எழுதினார். தேசிகனுடைய ஸூக்திக்கு இதுதான் யதாவஸ்

திகமான அர்த்தமென்று இந்த ஸ்வாமி அபிப்ராயப்பட்டதுமாத்திரமேயன்றிக்கே ஸ்ரீமதஹோபில மடாதிபதி ஸ்வாமிகளும் மடத்து வித்வான்களும் இதையே பரமார்த்தமாக நினைத்து தங்கள் பத்ரிகையில் இதை ஆதரித்து அச்சிட்டு உலகம் பரவ வெளியிட்டு விட்டார்கள். இதை அடியேன் விமர்சிக்க எழுந்து ஆர அமர விமர்சித்து எழுதினதாவது :—

*நித்யாவாஸமென்று தொடங்கியுள்ள ஹம்ஸ ஸந்தேச ச்லோகத்தினல் தூதுவிடப்படுகிற ஹம்ஸத்தை நோக்கித் திருமாலிருஞ் சோலையழகரை வழியிடையில் ஸேவிக்குமாறு கூறப்படுகிறது. அங்குப் பெருகுகிற சிலம்பாறென்கிற நூபுரகங்கையானது ஒன்ருன கங்கையிற் காட்டிலும் புனிதமானதென்று கொண்டாடப்படுகிறது. கங்கைக்கு பசுபதி ஜடாஸ்பர்சமாகிற ஒரு குறையுண்டு; நூபுரகங்கைக்கு அக்குறைதானும் கிடையாதென்று புகழ்ச்சியே இங்குள்ளது. ச்லோகத்திலிருந்து இப்பொருள் ச்ரமப்பட்டு அறியக்கூடியதன்று; அநாயாஸமாக அறியக்கிடக்கும் பொருள் இதுவே. ‘இந்த நூபுர கங்கையானது எம்பெருமானுடைய திருவடியினின்று பெருகுகின்ற கங்கையேயாயினும் பரமசிவனுடைய சிரஸ்ஸம்பந்தம் பெருதபடியினலே சுத்தியோகம் சூந்யமாகப்பெற்றது’ என்று ஒரு பெரிய குறையையேற்றி தேசிகன் இந்த ச்லோகம் பணித்திருப்பதாக எழுதுவது ஸங்கதமாகாது. எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தமான கங்கைக்கு பசுபதியின் சிரஸ் ஸம்பந்தத்தினல் சுத்தி ஏற்பட்டதாகவும் அது கங்கைக்கு ஓர் ஏற்றமாகவும் காட்டி அப்படிப்பட்ட ஏற்றம் நூபுர கங்கைக்கு இல்லையென்று இங்கே குறைகூறப்படுகிறதாகப் பொருள் விவரிப்பது ஸ்ரீவைஷ்ணவ ப்ருந்தத்தில் ஒருவராலும் ஏற்கத்தக்கதாகாது. தேசிக திவ்யஸூக்திக்கு இது நேர் விபரீதமுமாகும். தேசிகனுடைய தேஹளீச ஸ்துதியில் 12, 13ஆம் ச்லோகங்களை யநுஸந்தித்தால் இப்பொருள் அஸங்கதமென்று எளிதாக அறுதியிடலாகும். * सत्कुर्वतां तव पदं चतुराननत्वं पादोदकं च शिरसा वहतां शिवत्वम् * என்றும், * पादसरोजतस्ते मन्दाकिनी विगलिता मकरन्दधारा ... पुण्या बभूव पुरशासनमौलिमाला * என்றும் அந்த க்ரந்தத்திலுள்ளதன்றே. வரதராஜபஞ்சாசத்திலும் * विमलेन यस्य पादोदकेन विधृतेन शिवा भवन्ति * என்று சமத்காரமாகவும் அருளிச்செய்தார். இவற்றுக்கெல்லாம் சிகரமாக ஸ்தோத்ர பாஷ்யத்தில் *यस्य पादोदकेन • स शिवः स्वशिरोधृतेन* என்றவிடத்தில் அபார்த்த நிரஸந பூர்வகமாகவும் யதார்த்தமான பொருள் நிலைநாட்டப்பட்டிருக்கிறது. அங்கு முடிவான ஸ்ரீஸூக்தி ‘अत एव * हरस्य गात्रसंस्पर्शात्पवित्रत्वमुपागता * इत्यत्रापि हरस्य शुद्धिप्रदत्वमुपागतेति बोद्धव्यम्” என்றுள்ளது. ஸ்ரீபரகால ஸ்வாமியின் ரஸாஸ்வாதிநியில் வேறுவிதமாகப் பொருள் செய்யப்பட்டிருப்பதாக எழுதினதும் தவறு. கங்கையிற் காட்டிலும் நூபுர கங்கைக்கு மிகுந்த ஏற்றமுண்டென்பதையே அந்த வ்யாக்க்யாதாவும் விரிவாக எழுதியிருக்கிறார்—என்று அடியேன் விபுலநிரூபணம்செய்து எழுதி வெளியிட்ட பின்பு கோபாலாசார்ய ஸ்வாமி பரமானந்தத்துடன் உத்தரபத்ரிகையெழுதிக்கொண்டார் (அதாவது)—“ஸ்வாமியினுடைய நிரதிசயப்ரேமாவிஷ்காரங்களால் அளவுகடந்த ஆனந்தமடைகிறேன். ஹம்ஸ ஸந்தேச ச்லோகத்தைப் பற்றி அனேக வருஷங்களுக்குமுந்தி ஸேவித்திருந்த ஞாபகங்களைமட்டும் கொண்டு க்ரந்தத்தை இப்போது பார்க்காமல் எழுதியதில் தவறுதல் நேர்ந்தது. அதற்கு க்ஷமையை அடியேன் ப்ரார்த்திக்க வேண்டியதே” என்று (6—11—52ல்) எழுதிக்கொண்டார். இவ்விஷயம் அம்ருதலஹரி 111லும், ஸ்ரீராமாநுஜன் 47லும் விசதமாகக் காணக்கூடியது.

அதிகரணஸாராவளியில் ஒரு விஷயம்: இதைச் சிறுவிஷயமென்றும் நினைக்கலாம், மிகப்பெரிய விஷயமென்றும் நினைக்கலாம். इह, इति என்கிற இரண்டு

லகுவான அக்ஷரங்களைப்பற்றினதாகையாலே சிறிதென்று நினைக்கலாம். இதை ஆராய்ந்தது பெரிய காரியமாகையாலே மிகப்பெரிதென்று நினைக்கலாம். இவ் விஷயத்தில் அடியேனுடைய (ஸ்ரீராமாநுஜன்—45ல்) "ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷா" என்கிற நீண்டதோர் வியாஸத்தின் ஒருபகுதி வருமாறு :—

"இந்த ப்ரஸங்கத்தில் யாத்ருச்சிகமாக இவர்களுக்கு ஒரு நிதி கிடைக்கிறது: அதை இவர்கள் பெற்று மகிழ்வது நலம். பல வருஷங்களுக்கு முன்பு (அதாவது) மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி வேதாந்ததீபிகைக்கு ஆசிரியராயிருந்த காலத்தில் அதிகரணஸாராவளிக்கு ஒரு மணிப்ரவாள வியாக்கியான மெழுதித்தர வேணுமென்றும், அதைத்தாம் வேதாந்ததீபிகையில் வெளியிட்டு ஆனந்திக்கப் பெறவேணுமென்றும் அடியேனுக்குத் தெரிவித்திருந்தார். அப்படியே அடியேன் எழுதியனுப்பிக் கொண்டிருந்தேன். அது வேதாந்ததீபிகையின் சில ஸஞ்சிகை களில் அச்சாகி வந்தது. [பிறகு சிலருடைய மாச்சரியத்தினால் அந்த ப்ரகாசநம் நிறுத்தப்பட்டு நின்றது—என்பது நிற்க.] நாம் அந்த வியாக்கியான மெழுது கையில் *வ்ருத்திக்ரந்தேது ஜைமிந்யுபரசிந்தயா* (15) என்கிற ச்லோகத்தின் நாலாவது பாதம் * निर्वाहस्तूपचारात् क्वचिदिह घटते ह्येकतात्पर्ययोग: * என்றிருப்பதில் அநுபபத்தி சங்கை தோன்றிற்று. இஹ என்பது மூன்றாவது பாதத்திலேயே யிருக்கிறது; அது மறு படியும் நான்காவது பாதத்தில் இருக்கச் சிறிதும் அவசியமில்லை. அநாவச்யகத்வம் மாத்திரமேயன்று; அந்வயிக்கவும்மாட்டாது. इति घटते ह्येकतात्पर्ययोग: என்று பாட மிருந்தால் நன்கு பொருந்துகிறது. இப்படித்தான் பாடமிருந்திருக்கும்; அச்சுப் பிழையாக இஹ என்று விழுந்திருக்கும்; ஆனாலும் ஸஹஸா நாம் திருத்திவிடத் தகாது; பெரியார்களைக் கேட்போம்—என்றெண்ணிப் பல பெரியார்களிடம் விஜ் ஞாபித்துக்கொண்டேன். इह என்பதை யடித்து इति யென்றே திருப்புட்குழி ஸ்வாமி திருக்கையால் திருத்தியிருந்த அச்சுப்புத்தகத்தையும் திருத்தமாகவே எழுதப்பட்டிருந்த ஓலை ஸ்ரீகோசங்களிரண்டையும் ஸேவிக்க நேர்ந்தது. அப் போது அடியேன்கொண்ட ஆனந்தத்திற்கு அளவில்லை. அதே ஸமயத்தில், திருக் குடந்தையில் ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அதிகரணஸாராவளியை (ஸுந்தராசார்ய?) வியாக்கியானத்தோடு சுத்தப் பதிப்பாக அச்சிடுவதாய் ப்ரசுரஞ் செய்து சில பாரங்களை யச்சிட்டு மாதிரிக்காப்பியாக ப்ரகாசனம் செய்திருந்தார். அதில் இந்த *வ்ருத்திக்ரந்தேது ச்லோகமும் அடங்கியிருந்தது. அதிலும் (இஹ கடதே) என்கிற அபத்த பாடமே யிருந்தது. அப்போது அந்த R. V. K. ஸ்வாமி எம்மோடு ஸௌஹார்தத்தை விட்டு மாறுபட்டிருந்த ஸமயமாதலால் அவருடைய தவறுகளை எடுத்துக்காட்டிப் பல ப்ரசுரங்களை நாம் செய்த அடைவிலே (இஹ கட்தே) என்னு மிந்தத்தவறையும் எடுத்துக்காட்டி இது தவறுதானென்பதை விரிவாக நிரூபித்தும் எழுதிப் பத்திரிகையில் வெளியிட்டோம். அதைக் கடாக்ஷித்த அந்த மஹாமஹோ பாத்யாயர் உண்மையில் மஹாவிவேகியாகையால் உள்ளம்பூரித்து 'இப்படிப்பட்ட மஹோபகாரம் வேறு யாரால் செய்யமுடியும்? தேசிகனைத் தாங்குகிற வித்வான் கள் நாங்களே என்று வீணுகக் கொக்கரிக்கின்ற வித்வான்களில் ஒருவர்கூட இந்த ஸூக்ஷ்மமான தவறை எடுத்துக்காட்ட சக்தரல்லர்'.........இத்யாதியாக விரிவாயெழுதி நீண்ட ஸ்ரீமுகமநுக்ரஹித்து, இடையில் ஏறிட்டுக்கொண்டிருந்த மாத்ஸர்யத்தை அறவே விட்டுப் பழைய ஸௌஹார்தத்தை முன்னிலும் அதிசயித மாக்கிக்கொண்டார். இது ஜகத்விக்க்யாதமான விஷயம். அதன் பிறகு நாம் ஸ்ரீதேசிகக்ரந்தமாலை யச்சிட்டபோது (இதி கடதே) என்கிற ஸாதுபாடத்தையே வெளியிட்டோம். அந்த ஸமயத்தில் ஸ்ரீமதஹோபில மடத்தின் மூலமாக அதிகரண ஸாராவளி இரண்டு வியாக்யானங்களோடுகூட வெகு அழகாகப் பதிப்பிக்கப்பட்டு வந்தது. தந்முத்ரண நிர்வாஹகர்களுக்கும் அந்த R. V. கிருஷ்ணமாசார்ய ஸ்வா மியே இந்த ஸாதுபாடத்தைத் தெரிவித்து அதிலும் இப்பாடமே வெளிவரும்படி

செய்திருக்கிறார் 1939 ஆம் வருஷத்தில். இவ்வளவு நடந்திருந்தும் இப்போது ந்ருஸிம்ஹப்ரியையானது ஸாமரஸ்யாவகாஹந வியாஸத்தின் தொடக்கத்திலேயே ‘क्वचिदिह घटते’ என்று பழைய அபத்த பாடத்தையே ப்ரசுரம் செய்திருக்கிறது. ‘ஜாகரூகர்களாயிருந்து நிர்வஹிக்கக்கூடிய திறமைபெற்ற மஹாபண்டிதர்களைக் கொண்டு ந்ருஸிம்ஹப்ரியையை அநவத்யகந்தமாக வெளியிடுவித்து வரவேணுமென்று நாம் அடிக்கடி செய்து வருகிற ஸமுத்போதனம் நிஷ்ப்பலமாகிறதே யென்கிற நிர்வேதத்தை நாம் வெளியிடாமலிருக்க முடியுமா? இவர்களுடைய ஆர்ஜவம் இவ்வொரு விஷயத்திலாவது வெளிவருமா? ‘இவன் சொல்லி நாம் திருத்திக்கொள்வதா? என்கிற ஆக்ரஹமே கொண்டு இனி இவர்கள் இதிலும் வாதாடப் போகிறார்கள்; மடத்துப்பதிப்பிலும் (இதி கடதே) என்கிற பாடமே தைவாதீனமாய் ஏறியிருப்பதால் அப்பாடத்தைப் பழிக்கத் துணியார்கள். (இஹ கடதே) என்கிற பாடமும் நன்றுதானென்று வாதிக்க எழுவர்கள். ‘இஹ கடதே’ என்கிற பாடம் ஒரு படியாலும் பொருந்தாது. கீழே *நிர்வாஹஸ்தூபசாராத் க்வசித்* என்று தனி வாக்யமாக முடிந்திட்டது. அதன்மேல் (இதி) என்றது ஆகவே என்றபடி. இது தான் இங்கு அவசியமிருக்கவேண்டிய பதம். இஹ என்றால் அசடுதட்டியே தீரும். வியாக்கியானங்களும் இங்குக் கை விளக்கேற்றிக் காட்டுகின்றன. இப்படியாக, சிறியனவும் பெரியனவுமாக ஸ்ரீதேசிகஸூக்தி மருமங்கள் பலவற்றை நம்மிடமறிய நிற்கின்ற இவர்கள் மீண்டு மீண்டும் நம்மோடு எதிரம்பு கோக்க வருவதும் க்ஷாமண பத்ரிகை யெழுதிக்கொண்டு ஓய்வதுமாக இவையும் ப்ரவாஹதோ நித்யமாம்படி பகவத் ஸங்கல்பம் காணா நின்றோம். இந்தப் பாடஸ்காலித்ய விஷயம் ஒரு சிறு அக்ஷரத்தைப் பற்றியதேயாயினும் இதன் அருமையையுணர்ந்த R. V. K. ஸ்வாமி மஹாநிதி பெற்றதாகவே நினைத்து மகிழ்ந்தார்.”

ஆக இவ்வளவும் அடியேன் 5, 6 வருஷங்களுக்குமுன் எழுதிய வியாஸம். இதற்குமேல் ஸ்ரீகோபாலாசார்யஸ்வாமி “இதை அச்சுப் பிழையென்று விட்டுவிடவும்” என்று லகுவாக எழுதி முடித்துக்கொண்டார். எல்லாப் பண்டிதர்களும் இப்படி ப்ராமாணிக பத்ததியை அவலம்பிக்க முடியாதன்றோ. இதைப் பற்றி அஹோபில மடத்துப் பத்ரிகையில் [ஆசார்ய ஜயந்திமலரில்] நாரணமங்கலம் சிரோமணி யென்பாரொருவர் பெயரையிட்டு “இஹ பாடம் இதி பாடம் இரண்டுமுண்டு. அவரவர்களுக்கு எதில் ருசியோ அதை பரிக்ரஹித்துக் கொள்ளலாம்.” என்று வெளியிடப்பட்டது. அதன்மேல் அடியேன் எழுதியுள்ளதாவது—இங்கு இவ்விஷயத்தில் எழுதவேண்டியவர் ஸ்ரீமத் ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமியே தவிர வ்ருதாச்ரமப்படும் சில வ்யக்திகளுக்கு இங்கு என்ன ப்ரவேசம்? தேசிக திவ்ய ஸூக்திகளை இவர்கள் பரம்பரயாவன்றிக்கே இடையிலே இழுத்துப்போட்டுக் கொண்டு கற்கத் தொடங்கினபடியாலே தப்புப்பாடங்களே இவர்களுக்கு மலிந்திருக்கின்றன.” இத்யாதி.

இப்படிப்பட்ட விஷயங்கள் அடியேனுடைய இளமை தொடங்கி இன்றளவும் ஆயிரக்கணக்கில் வெளிவந்திருக்கின்றன. அவை அனேக பத்ரிகைகளில் சிதறிக்கிடப்பதால் எல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து வெளியிடவேண்டிய காரியம் மிகப்பெரிதாயிருக்கின்றது. இது நிற்க.

ஸ்ரீகோபாலாசார்ய ஸ்வாமியைப்போன்ற வித்யாபரிச்ராந்தர் மிகவும் துர்லபர். தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் ஆங்கிலத்திலும் இந்த ஸ்வாமி எழுதி வெளியிட்டிருப்பவை அபரிமிதம். இப்போது இந்த ஸ்வாமியின் திருநக்ஷத்ரம் எண்பதுக்கு வெகு தூரம் மேற்பட்டிருக்கிறது. இந்த திருநக்ஷத்திரத்திலும் சோர்வு சோம்பலின்றி இரவும்பகலும் எழுதி வருகின்றாரென்பது மிகவும் அதிசயிக்கத் தக்கதேயாம். சென்றவாண்டில் நேத்ரசிகித்ஸை செய்துகொண்டு மிகுந்த உத்ஸாஹத்துடன் காரியங்களைச் செய்து வருகிறார். இவர்க்குப் பல்லாண்டு பாடுவதே நமது கடமை.

புதுடில்லியில் நம்நாட்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் பலர் உத்யோகார்த்தமாகச் சென்று வாழ்கிறார்கள். அவர்களில் அனேகர் சிறந்த ஆஸ்திகர்களாகவே விளங்குகின்றார்கள். அவ்விடத்தில் 'ஸ்ரீவைஷ்ணவ மஹாஸபா' என்னும் பெயரால் ஒரு ஸபையை நெடுநாளைக்கு முன்னமே பலபெரியார்கூடி ஸ்தாபித்திருக்கிறார்கள். அந்த ஸபையின் மூலமாகவும் வேறு ஸமாஜங்களின் மூலமாகவும் தென்னாட்டிலிருந்து பண்டிதர்களை ஸமயவிசேஷங்களில் வரவழைத்து ப்ரவசனங்களைச் செய்விக்கிறார்கள். அடியேன் ஹரித்வாரம் ஹ்ருஷீகேசம் போகிறபோதெல்லாம் டில்லி வழியாகவே போவது வழக்கமாதலால் அப்படி போகிற ஸமயங்களில் ஒருநாள் மட்டும் தங்கி ஒரு மூலையில் சிலருடைய கோரிக்கையின்மேல் எதையோ சொல்லிவிட்டுப் போய் விடுவேன். பன்னிரண்டு வருஷங்களுக்குமுன் அவ்விடத்து ஸ்ரீவைஷ்ணவ மஹாஸபையார் யாவரும் சேர்ந்து ஒரு பத்ரிகையனுப்பினார்கள்; "டில்லி மாநகரையும் சென்னைமாநகராகவே கொண்டு அபிமானிக்க வேணும்; யாத்ராவ்யாஜத்தாலே யெழுந்தருளாமல் எங்களுக்கென்றே இதம்பரமாக எழுந்தருளிச் சிலநாள்கள் இவ்விடத்தில் தங்கியிருந்து ப்ரவசனங்கள் செய்ய



ஸ்ரீமதுபயவே S. R. S. ராகவன் ஸ்வாமி
(புதுடில்லி)

வேணும்" என்றெழுதியிருந்தார்கள். கீழே (பக்கம் 190ல்) ஸேவை ஸாதிக்கின்ற (கோயம்புத்தூர்) ஸ்ரீசைலசக்ரவர்த்யாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரரொருவர் டில்லியில் உயர்ந்த உத்யோகஸ்தராயிருப்பதால் அவரும் அந்த ஸபையின் அங்கத்தினராகி அடிக்கடி நிர்ப்பந்தமாகத் தெரிவித்து வந்தார். அதன்மேல், யாத்ரார்த்தமாகவன்றிக்கே இதம்பரமாகவே டில்லிக்கு விடைகொண்டு சிலநாட்கள் தங்கியிருந்து ப்ரவசனங்கள் செய்ய ப்ராப்தமாயிற்று. நமது ஸ்ரீஉவே. எஸ். வரதா

சார்ய ஸ்வாமி அப்போது அவ்விடத்தில் எழுந்தருளியிருந்தார். வெகுகாலத்து நண்பரான ஸ்ரீமத் வி வி. ராஜன் (Post Master General) என்பவரும் அங்கேயிருந்தார். மற்றும் பல மஹநீயர்களும் விசேஷமான ஆதரவுகாட்டிக் கூடியிருந்து குளிர்ந்திருந்தார்கள். இவர்களுள், முன்பக்கத்தில்ஸேவைஸாதிக்கின்ற ஸ்ரீமத். S.R.S. ராகவன் என்னும் மஹநீயரோடு ப்ரப்ரதமமான உறவு அங்குரதசையிலேயே அளவு கடந்ததாகவுண்டாயிற்று. அவ்விடத்தில் மஹோந்நத பதவியில் அமர்ந்திருக்கின்ற ஸ்ரீமத் K. S. க்ருஷ்ணன் ஸ்வாமியின் ப்ரேமமும் அப்ரமேயமாகத் தோன்றிற்று. ஸ்ரீ உவே. C. S. பார்த்தஸாரதி ஐயங்கார், B.A, B.L., என்கிற மஹானும் அவ்விடத்தில் உயர்ந்த ஸ்தானத்தை யலங்கரித்து விளங்குகின்றார். இந்த ஸ்வாமியின் அபிமானமும் அதிசயித்தது. இத்தகைய பெரியார்களின் பெருமைகளையும், இவர்கள் அடியேனிடத்துள்ள நிகரற்ற அன்பினல் அடியேனுக்குச் செய்துவைத்த சிறப்புக்களும் நாடு நகரமும் நன்கறிந்தவையேயாயினும் க்ருதஜ்ஞதைக்காக அடியேன் சிறிதாவது தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டவனல்லவோ? அவற்றுக்கு அவகாசம் க்ரமேணமேற்பகுதியில் ப்ராப்தமாகும்.



ஸ்ரீஉவே. டாக்டர் K. S. க்ருஷ்ணன், F.R.S.
(புதுடில்லி)

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் தானேயெழுதிய தன்சரிதையில் மூன்றும்பகுதி முற்றிற்று.

ஸ்ரீ:

# தானே யெழுதிய தன்சரிதை

## — நான்காம் பகுதி —

[ஸிம்ஹாவலோகநந்யாயேந கீழ்நோக்கிச் சில விண்ணப்பங்கள் செய்தல்]

ஆப்தநண்பர்களே! மூன்றும் பகுதியை முடித்து வெளியிட்டு வெகு மாதங்களாயின. சென்ற கார்த்திகை மாதத்திலேயே நான்காம் பகுதியை யெழுதி முடித்து வெளியிடுவதாயிருக்கையில் எதிர்பாராமல் வேறுவகையான காரிய நிர்ப்பந்தங்கள் தவிர்க்க முடியாதபடி நேர்ந்தன. அதைப்பற்றி மேலே தெரிவிக்கலாகும். ஸம்வத்ஸராதியாகிய (1—4—57) இன்றுதான் நான்காவது பகுதியை எழுதத்தொடங்கலாயிற்று. இடையில் பத்தெட்டு மாதங்களுக்குமேல் கடந்து விட்டன. இப்படி தெய்விகமாக நேர்ந்த தாமதத்தில் நேர்ந்தவொரு மகிழ்ச்சிச் செய்தியை ஆப்தர்களிடம் விஜ்ஞாபனம் செய்யாமலிருக்க முடியவில்லை. குதூஹலத்தோடு விஜ்ஞாபனம் செய்கிறேன். பல நூற்றுக்கணக்கான பெரியார்கள் "தன் சரிதையில் நான்காவது பகுதியை ஏன் இன்னும் வெளியிடவில்லை. ஒவ்வொரு மாதத்திலும் ஆவலோடு அதை யெதிர்பார்த்து ஏமாற்றமடைந்து நிற்கிறோம்" என்றெழுதுபவர்கள் பலர். "தன்சரிதையை மூன்றுவது பகுதியோடு முடித்துக் கொண்டதாகத் தெரிகிறது; நான்காவது பகுதியையும் விரைவில் வெளியிட்டே யாகவேண்டும்" என்று தெரிவிப்பவர்கள் பலர். "தன்சரிதையில் நான்காவது பகுதி வெளியிடப்பட்டே யிருக்கும்; ஆனல் அது எமக்குக் கிடைக்கவில்லை. உடனே அனுப்பச் செய்ய வேணும்" என்று நியமிப்பவர்கள் பலர். இந்த வகைகளில் மற்றும் எத்தனேயோ வகையாக ஸ்ரீமுகங்கள் ஸாதித்திருப்பவர்கள் பல நூற்றுக்கணக்கில் தேறுவர்கள். 'இந்தத் தன்சரிதையைக் கண்ணெடுத்தும் பாரார்கள்' என்று எங்தெந்த மஹான்களையிட்டு நாம் எண்ணியிருந்தோமோ அந்த மஹான்களுங்கூட மேலே தெரிவித்தபடி ஸ்ரீமுகங்கள் ஸாதிக்கப்பெற்றோம்.



(தன்சரிதையாளர்)

பல மஹான்கள் கடிதங்களெழுதாமல் நேரில்காண நேர்ந்தபோது "தன் சரிதையை முடிக்காமலே யிருக்கிறதே, என்ன காரணம்?" என்று கேட்பதுண்டு; அவர்களுக்கு அடியேன் விடுத்த விடை; 'பூர்வாசாரியர்களின் சரிதைகளை எவ்வளவு விரிவாகவெழுதி வெளியிட்டாலும் பயனுண்டு: இந்த அல்பனுடைய சரிதையை முடித்தாலென்ன? இடையில் விட்டிட்டாலென்ன? இதில் என்ன

விசாரம்?' என்பதே. இதற்கு ஒவ்வொருவரும் ஸாதித்தது ஏகரீதியாயிருந்தது; (அதாவது) "அப்படிச் சொல்ல வேண்டாம்; பூர்வாசாரியர்களின் வைபவ ப்ரக்ரியை ஒரு விதமானது; இது ஒரு விதமானது. இதிலிருந்து அனேக விஷயங்கள் தெரிந்து கொண்டு உள்ளம் பூரிக்க ப்ராப்தமாகிறது. நான்கு பகுதிகள் என்று ஓரளவிலே நிறுத்தாமல் எத்தனை பகுதிகள் எழுதி வெளியிட்டுக் கொண்டே போனாலும் ருசி சிறிதும் குன்றாமல் பார்த்துக் கொண்டே போக ஆவல் கொண்டிருப்பவர்களே அதிகம் என்பதை நன்கறிந்து சொல்லுகிறோம்" என்றே அவரவர்கள் சொல்லக் கேட்டபடி. இதிலிருந்து அடியேனுக்கு உண்டான மகிழ்ச்சியின் மிகுதியை என்னவென்றெழுதுவது? இது டம்பார்த்தமாக எழுதிக் கொண்டதன்று; உள்ளே அடக்கி வைத்துக்கொள்ள முடியாத ஸந்தோஷாதிசயமே இத்தனையும் எழுதி வைத்தது.

இடையில் இரண்டு சோகஸம்பவங்கள். (1) இத் தன்சரிதை முதற்பகுதியின் முடிவில் (பக்கம் 75ல்) திருவல்லிக்கேணி வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் பெருமைகளை விளக்கியிருந்தேன். (2) மூன்றாம் பகுதியில் (பக்கம் 213ல்) ஸ்ரீமத் திருமலை அத்தங்கி தெட்டு தாதாசார்ய ஸ்வாமியின் பெருமைகளை விளக்கியிருந்தேன். இவ்விரு மஹான்களும் இவ்விபூதியை விட்டு அகன்ற விஷயம் சோசநீயமானது. வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளினது ப்ராப்தகாலமென்று ஒருவாறு ஆறுதலடையலாம். தெட்டு தாதாசார்ய ஸ்வாமி இன்னும் இருபதாண்டு எழுந்தருளியிருக்கலாம்; இம்மண்ணுலகின் பாக்கியக் குறைவே. இது நிற்க.

---

## நமது கிரந்தமாலா நிலய வெளியீடுகளின் விளம்பரம்:

**1. நாலாயிர திவ்யப் பிரபந்தம்:**

இது மூலம் மட்டும் உயர்ந்த முறையில் அனேக அநுபந்தங்களுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஆழ்வார்களின் வைபவங்கள், ஆழ்வார்கள் பாடிய திவ்ய தேசங்களுக்கு வழிகாட்டுதல் முதலிய விசேஷங்கள், பாசுரங்களில் ஆழ்வார்கள் அநுஸந்தித்த பகவத் கதைகளின் விவரணங்கள் முதலியன கொண்ட பதினான்கு அநுபந்தங்கள் இதில் சேர்ந்திருக்கின்றன. ... ... ... ... ... விலை ரூ. 5-0-0.

**2. நாலாயிர திவ்யப் பிரபந்த வுரை:**

ஆழ்வார்களருளிய நாலாயிரம் பாசுரங்களுக்கும் திவ்யார்த்த தீபிகையென்கிற விரிவான வுரை பல பகுதிகளாக வெளியிடப்பட்டிருக்கின்றது. இதைப்பற்றி இந்தத் தன்சரிதை மூன்றாம் பகுதியில் 155—157 பக்கங்களிற் காண்க. ஏககாலத்தில் நாலாயிரத்திற்கும் பூர்த்தியான தீபிகையுரை வாங்குவதானால் மொத்தம் விலை கமிஷன் கழித்து 50 ரூபா. தனித்தனிப் பிரபந்தங்களுக்கும் தனியே உரை கிடைக்கும்.

3. திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார் திருமொழிக்கும் தீபிகையுரை ரூ. 4-8-0 திருப்பாவைக்கு ரூ. 1-8-0. நாச்சியார் திருமொழிக்கு ரூ. 2-0-0. பெருமாள் திருமொழி, திருச்சந்த விருத்தம், திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதி பிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு இவற்றுக்கு ரூ. 5-0-0. இவையெல்லாம் சேர்ந்து முதலாயிரம் என வழங்கப்பெறும்.

4. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இரண்டாவதாயிரம் திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழி. இவ்வாயிரத்தின் தீபிகை யுரையை ஏககாலத்தில் வாங்கினால் திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டகம் உட்பட விலை ரூ. 12-0-0. தனித்தனி வால்யங்களும் கிடைக்கும் முதலிரண்டு பத்துக்களுக்கு (அதாவது 200 பாசுரங்களுக்கு) 3-0-0. மூன்று நான்கு ஐந்து பத்துக்களுக்கு ரூ. 2-8-0. ஆறு ஏழு பத்துக்களுக்கு ரூ. 2-8-0. எட்டு, ஒன்பது பத்துக்களுக்கு ரூ. 2-8-0. பத்து, பதினோராம் பத்து, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் ஆகிய இவற்றுக்கு ரூ. 3-0-0. (இதன் தொடர்ச்சி 236 பக்கம் பார்க்க)

கீழ் மூன்றாம் பகுதியில் (பக்கம் 204ல்) திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம் பெரியகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியை ப்ரஸ்தாவித்து "இந்த ஸ்வாமியின் திருவுருவப்படத்தை ஸம்பாதிக்க முயன்று கொண்டிருக்கிறேன்" என்றெழுதியிருந்தேன். அம்முயற்சி ஸபலமாயிற்று. இவ்விடத்தில் அந்த ஸ்வாமியின் திருவுருவம் ஸேவிக்க ப்ராப்தமாகிறது. இந்த ஸ்வாமி காஞ்சியில் பல ஸம்வத்ஸரங்கள் எழுந்தருளியிருந்தாரென்பதையும் இவரிடத்திலும் அடியேன் சில நாடக க்ரந்தங்கள் வாசிக்க நேர்ந்ததென்பதையும் முன்னமே யெழுதியிருக்கிறேன். இந்த ஸ்வாமியைப் பற்றி அடியேன் நினையாத நாளே கிடையாது. விசாகபட்டணத்தில் ஸுப்ரஸித்த வித்வச்சிகாமணியாக எழுந்தருளியிருந்த மஹாமஹோபாத்யாய பரவஸ்து ரங்காசார்யஸ்வாமிக்கு இந்த திருநாங்கூர். க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி மாப்பிள்ளை முறையாவர். ஆகவே இவர் விசாகபட்டணத்திலேயே சில வாண்டுகள் வஸித்திருந்து அந்த ஸ்வாமியிடத்தில் பல கலைகள் பயின்றார். ப்ராஸங்கிகமாக அந்த ஸ்வாமியின் பாண்டித்ய ப்ரபாவத்தைச் சிறிது தெரிவிக்கிறேன். அவரை சதுச்சாஸ்த்ரங்களிலும் சதுஷ்ஷஷ்டி கலைகளிலும் வல்லவரென்று சொல்லுவர்கள். அவர் மிகப் பெரியதொரு ஸம்ஸ்க்ருதகோசம் எழுதியிருக்கிறார். அதில் அ, ஆ என்னுமிரண்டெழுத்தை ஆதியிலேயுடைய ஸம்ஸ்க்ருத பதங்கள் மட்டுமே அச்சாகியிருக்கின்றன (தெலுங்கு லிபியில்). மற்ற பதங்களும் பூர்த்தியாக எழுதப்பட்டுப் பல பீரோக்களில் அடுக்கப்பட்டிருப்பதை நேரில் பார்த்திருக்கிறேன். இதைப் பூர்த்தியாக அச்சிடுவதற்குத் திருமலை திருப்பதி தேவஸ்தானம் அங்கீகரித்திருப்பதாகக் கேள்வி. இந்த கோசத்தை ஊன்றிப் பார்க்கும்போது இதை யெழுதிய



ஸ்ரீமதுபய-வேதாந்த வித்வான் திருநாங்கூர்.
பெரிய க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி
(வைகுண்டவாஸி)

பரவஸ்து ஸ்வாமி ‘ஜங்கம புஸ்தகாலயம்’ என்று சொல்லக் கூடியவர் என்பது நன்கு புலப்படும். ஆனால் இப்பெரியார்க்கு ஒரு குறையுண்டு. ஸ்ரீவைஷ்ணவ ஸதாசார்ய திவ்யக்ரந்தங்களிலே அபிநிவேச மில்லாமையே அது. இதைப்பற்றி அடியேனுக்கு நேரில் தெரியாதாதலால் நிற்கிறேன்.



ஸ்ரீமதுபயவே ம்ஹாமஹோபாத்யாய பரவஸ்து ரங்காசார்ய ஸ்வாமி விசாகபட்டணம் (வைகுண்டவாஸி)

இந்த ரங்காசார்ய ஸ்வாமியின் பௌத்ரர் ஸ்ரீமான் பட்டநாத ஸ்வாமியென்பவர் (வைகுண்டவாஸி) மிகச்சிறந்த வித்வானாக விளங்கினர். இவர் கும்பகோணம் கவர்ன்மெண்டு காலேஜில் சில வருஷங்கள் லெக்செரராக விளங்கினர். அப்போது நமது மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையை வரவழைத்துக் கொண்டு அதற்குச் சில வியாஸங்களு மெழுதிக்கொண்டிருந்தார். அந்த வியாஸங்கள் பெரும்பாலும் ஸ்ரீவைஷ்ணவ ஸத்ஸம்ப்ரதாய விப்ரதீபங்களாகவேயிருக்கும். அவற்றுக்கு அப்போதப்போது அடியேன் மறுப்புகளெழுதி வெளியிட்டுக் கொண்டேயிருந்தேன். அப்போது இரண்டொரு வருஷகாலம் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் இவர்க்கும் அடியேனுக்கும் ஓயாத வாத விவாதங்கள் நடந்து கொண்டிருந்தன. அந்த ஸமயத்தில் அவர்க்கே மிகுந்த அநுதாபம் உண்டாயிற்று. அதே சமயத்தில் அவர் அகஸ்மாத்தாகப் பரமபத மடைந்துவிட்டார். வாத ப்ரதிவாதங்கள் நடந்த திருக்கட்டும். அவர் மிகச்சிறந்த மேதாவியாயும் லேகன குசலராயும் சாஸ்த்ரஜ்ஞராயும் விளங்கினர். அவர் வெகு காலம் ஜீவித்திருந்தால் லோகோபகாரம் மிகமிக ஏற்பட்டிருக்கும்.

---

5. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் மூன்ருவதாயிரம்—இயற்பா. இவ்வாயிரத்தில் பொய்கையார் பூதத்தார் பேயார் அருளிச்செய்த மூன்று திருவந்தாதிகள், திருமழிசைப்பிரானருளிய நான்முகன் திருவந்தாதி, நம்மாழ்வா ரருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி. திருமங்கையாழ்வா ரருளிச்செய்த திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல். திருவரங்கத்தமுதனு ரருளிச்செய்த இராமானுச நூற்றந்தாதி ஆக 10 பிரபந்தங்கள் அடங்கியுள்ளன. இவற்றுக்கு தீபிகையுரை ரூ. 10-0-0. இவ்வாயிரம் மூன்று வால்யமாகவும் கிடைக்கும்.

6. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் நான்காவதாயிரம்—திருவாய்மொழி. இது நம்மாழ்வாரருளிச் செய்தது, ஆயிரத்து நூற்றிரண்டு பாசுரங்கள் கொண்டது. இதற்கு தீபிகையுரை ரூ. 22-0-0. ஒவ்வொரு நூறு பாசுரம் தனித்தனியாகவும் கிடைக்கும்.

**7. நித்யாநுஸந்தான வுரை :**

ஏறக்குறைய நானூறு பாசுரங்களை ஸாரமாக வெடுத்து நம் முன்னோர்கள் நித்யாநுஸந்தானமென்று பெயரிட்டிருப்பது ப்ரஸித்தம். திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை, நீராட்டம், பூச்சூடல், காப்பிடல், செனனியோங்கு, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு, கோயில் திருவாய்மொழி, இராமாநுச நூற்றந்தாதி, உபதேசரத்தினமாலை; திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப்பிரபந்தம், ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்தகாதை. இவற்றுக்கு எளிய தெளியவுரை இதில் அடங்கியுள்ளது. ரூ. 3-0-0. (தொடர்ச்சி பக்கம் 240.)

கீழ் மூன்றும் பகுதியில் (பக்கம் 158ல்) "சென்னையில் உபந்யாஸ ஸபையில் அந்வயம்" என்று ஆரம்பித்து எழுதி வருகையில் பல பெரியோர்களைப்பற்றி (உருவப்படங்களுடன்) பல செய்திகள் தெரிவித்திருக்கிறேன். அந்த ப்ரகரணத்தில் மற்றும் சில பெரியார்களைப்பற்றித் தெரிவித்திருக்க வேண்டிய அவசியமிருந்தது. ஞாபகக் குறைவினால் விடுபட்டவற்றை இங்குத் தெரிவிக்க ஆவல் கிளர்கின்றது. லௌகிகத்தில் உத்துங்கபதவிகளில் அமர்ந்திருந்து விச்ராந்தர்களான மஹான்களில் மிகச் சிறந்தவரான ப்ரஹ்மஸ்ரீ T. M. க்ருஷ்ணஸ்வாமி ஐயரவர்களை அறியாதவர்கள் மிகச் சிலரே யாவர். இப்பெரியார் மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி. (பரலோக வாஸி) சாமிநாதய்யரவர்களைப் போலவே பரம ஸௌலப்ய மூர்த்தியாய் சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹால் உபந்யாஸ கோஷ்டியை ஸமய விசேஷங்களில் அலங்கரிப்பர். இம்மஹானுக்குத் திருப்புகழ்மணி யென்று ஒரு விருது உண்டு. இது உண்மையில் இவர்க்கு அந்வர்த்தமான பிருது. நாளைக்கும் இப்பெரியார் திருப்புகழ் பஜனையில் அத்விதீயமான ப்ரக்யாதி வாய்ந்து விளங்குபவர். இவர் ஒரு விசை தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலில் விஜயஞ்செய்து உபந்யாஸமுடிவில் முடிவுரை பேசினபோது, நாம் விநோதமாக வொன்று சொன்னதுண்டு; (அதாவது)—"இப்பெரியார்க்குத் திருப்புகழ்மணி யென்கிற விருது இடையிலே வந்ததென்று யாரும் நினைக்க வொண்ணாதபடி யன்றோ இவர்க்கு T. M. என்கிற இன்ஷல் இயற்கையாகவே அமைந்திருக்கின்றது T. திருப்புகழ்; M மணி. என்பதுதானே அந்த ஸம்க்ஷேபமான இரண்டெழுத்துகளுக்கு வியாக்கியானம்" என்று சொன்னேன். இச்சொல்



ப்ரஹ்மஸ்ரீ. T. M. கிருஷ்ணசாமி ஐயரவர்கள். (திருப்புகழ்மணி)

ஸபையார்களுக்கு மட்டுமன்றிக்கே அப்பெரியார்க்கும் மிகுந்த விஸ்மயத்தை விளைத்தது. இவ்விஷயம் அதுவரையில் தம்முடைய புத்திக்கும் எட்டியிருக்கவில்லை யென்று உகந்து பாராட்டிக்கூறினர். அவர்களுடைய ப்ரேமவிசேஷங்களைப் பற்றி அடிக்கடி ஸ்மரிக்கலாகிறது.

வடநாட்டில் காசி முதலான க்ஷேத்திரங்களிலிருந்தும் ஸமய விசேஷங் களில் பல பெரியார்கள் தக்ஷிணதேச ப்ராந்தம் வருவதுண்டே ஸஞ்சார க்ரமத்தில். அப்படிப்பட்டவர்களும் பெரும்பாலும் செய்தி தெரிந்துகொண்டு தொண்டமண்டலம் ஸ்கூல்ஹால் உபந்யாஸ கோஷ்டிக்கு விஜயம் செய்து போவதுண்டு. இவ்விதமாக விஜயம் செய்துபோன மஹான்கள் இது வரையில் 70, 80 நபர்கள் தேறக் கூடும். அவர்களுக்குத் தமிழ்ப் பாஷை தெரியாததலால் அன்று அவர்களுக்காக ஸம்ஸ்க்ருத பாஷையிலோ ஹிந்தி பாஷை யிலோ அன்றைய உபந்யாஸத்தின் ஸாராம்சம் எடுத்துரைக்க நேரும். அதனால் அவர்கள் பரமத்ருப்தி யடைந்து போவர்கள். அப் படிப்பட்டவர்களில் சில மஹான் களின் உருவப்படங்களே நமக்குக் கிடைத்துள்ளன. பல பேர்களைப் பற்றி நினைவு வைத்துக்கொள்ள வும் ஸாத்யமாகவில்லை. சிலரைப் பற்றி மட்டும் இங்குத் தெரிவிக்கி றேன். இங்கே காட்சி தருபவர் காசியில் 'பூலாநாலா' என்னு மிடத்தில் மாத்வ மடாதிபதியாக இருந்தவர். இவர் பரகதியடைந்து பத்து வருடங்களுக்கு மேலாகிறது. இவர் ஸரஸ்வதீகடாக்ஷத்தையும் லக்ஷ்மீகடாக்ஷத்தையும் வெகு விசேஷமாகப் பெற்றவர். அனேக தர்சன க்ரந்தங்களில் ஆழ்ந்த ஞானம் பெற்று தார்சநிக க்ரந்தங் கள் பலவும் இயற்றி வெளியிட் டிருக்கின்றார். தர்க்க சாஸ்த்ரத் திலும் சில நூல்கள் பிரசுரம் செய்திருக்கின்றார். சாஸ்த்ரங்களில் வாதம் பண்ண வல்ல உத்தண்ட பண்டிதர். இவர் இருபது வருடங்களுக்கு முன் ஸபரிவாரராக சென்னை மாநகர் வந்திருந்து தங்கசாலை வீதியில் தங்கியிருந்தார். அப்போது மார்கழிமாதம். அவருடைய பரிசயம் நமக்கு அடியோடிருந்ததில்லை. ஆனாலும் செய்தி யறிந்துகொண்டு காலக்ஷேப கோஷ்டிக்குத் தாம் வரவிரும்பியிருப்பதை ஆஸ்தாந பண்டிதர் மூலமாக நமக்குத் தெரிவித்தார். உடனே நாம் நேரில் சென்று வார்த்தையாட அவருடைய பரத்வ ஸௌலப்யங்களை யறிந்து மிகவும் ஆனந்திக்க லாயிற்று. இந்த ஸம்பவம் 1936 ஆம் வருஷத்திலென்று ஞாபகம். அன்றைய



காசீ. மாத்வ மடாதிபதி. கோஸ்வாமி தாமோதரலால்ஜீ (பரலோகவாஸி)

தினம் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில் அரையர் ஸேவைநடத்த ஏற்பாடாகி யிருந்தது. ப்ராஸங்கிகமாக இந்த அரையர் ஸேவையைப்பற்றி இங்குச்சிறிது தெரிவிக்கலாகிறது. கோயில்ஸ்ரீ வில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி முதலிய சில திவ்ய தேசங்களில் மட்டுமே இப்போது அரையர் ஸேவை என்கிற க்ரமம் நடைபெற்று வருகின்றதென்பது ப்ரஸித்தமான விஷயம். அவர்கள் தங்களுக்குரிய சிரோபூஷணமொன்று [குல்லாய்] அணிந்துகொண்டு கையில் தாளமுங்கொண்டு தேவகானத்தில் திவ்யப்ரபந்தப் பாசுரங்களை ஸேவிப்பர்கள். வழக்கமாகச் சில பாசுரங்களுக்கு வியாக்கியானம் ஸேவிப்பதோடு அபிநயிப்பதுமுண்டு. இது மார்கழி மாதத்தில் பகற்பத்து இராப்பத்து என்னப்படுகிற திருவத்யயநோத்ஸவத்தில் வெகு விசேஷமாக நடைபெற்று வருவதாம். ஸ்ரீமந் நாதமுனிகள் காலந்தொடங்கி இது நடந்துவருவதாக ஸம்ப்ரதாயம். முதன் முதலாக அடியேன் ஸ்ரீரங்கம் விடைகொண்டிருந்தபோது அங்குத் திருவத்யயநோத்ஸவத்தில் இந்த அரையர் ஸேவையிலே யீடுபட்டு, அந்தோ! அரையர் திருவம்சத்தில் ஜனிக்கப் பெறாமல் போனேனே! என்று மிக வருந்தினதுண்டு. யாரேனுமொரு அரையர் நம்மை ஸ்வீகாரம் செய்து கொள்வரா? என்றும் விசாரித்துப் பார்த்ததுண்டு. உள்ளத்தில் மிகப் பெரிதாக இருந்த இக்குறையை எம்பெருமான் ஒருவாறு தீர்த்தருளினது என்னுள்ளமொன்றையே ஸாக்ஷியாகக்கொண்ட ஸந்தோஷமாகும்.




சென்னைமா நகர்க் காலக்ஷேப ஸபையில் மார்கழி மாதந்தோறும் ஒருநாள் இந்த அரையர் ஸேவை நடத்தப்பட்டு வருகின்றது. அரையர்களின் அநுகாரம் பரிபூர்ணமாக நடந்து வருகின்றது. மார்கழி பிறந்தவுடனேயே 'அரையர் ஸேவை என்றைக்கு? அரையர் ஸேவை என்றைக்கு? என்று பக்த வர்க்கங்கள் வெகு குதூஹலமாகக் கேட்டுக்கொண்டு அந்நாளை எதிர்பார்த்திருந்து மிகப்பெருந்திரளாக வந்துகூடி யநுபவிப்பது நாளைக்கும் வழக்கமாயிருந்து வருகிறது. அன்று அடியேன் அரையர்கோலங்கொண்டே காட்சி தருவேன். பரஸ்துதரான மாத்வ மடாதிபதி அரையர் ஸேவை நடைபெறுமன்று காலக்ஷேப ஸபைக்கு விஜயஞ் செய்து தாம் பரமானந்த ஸந்தோஹ கந்தலித ஸ்வாந்தரானமையை அப்போதே யெழுந்து ஸம்ஸ்க்ருத பாஷையில் வெளியிட்டார். அப்போதிருந்து அவருடைய

ஸ்நேஹம் நமக்கு அதிகமாக ஓங்கி வளர்ந்தது. பிறகு இருமுறை அவருடைய வேண்டுகோளுக்காகவே காசிக்குச் செல்ல நேர்ந்தது. நாம் பதிப்பித்த ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலையின் முத்ரணத்திற்கு மஹோபகாரகர்களில் இந்த மஹான் தலைவராயிருந்தார்.

காசியில் ராஜமந்திரம் என்கிற இடத்தில் ஸ்ரீதேவநாயகாசாரி யென்கிற ஸ்ரீவைஷ்ணவ பண்டிதர் ப்ரஸித்தராக விளங்கிவருகிறார். இவரும் சில தடவைகள் தக்ஷிண ப்ராந்தம் வந்து சென்னைக் காலக்ஷேப ஸபையிலும் அந்வயித்தவர். இவர் ஸ்ரீமத் காதிஸ்வாயின் திருவடி ஸம்பந்தம் பெற்றவர். இவர் வியாகரண சாஸ்த்ரத்தில் பரிபூர்ண பாண்டியத்யம் பெற்று மிகவும் வாக்மியாயிருப்பவர். இப்போது வேதாந்த சாஸ்திரத்திலும் அவகாஹித்தவர். இவருடைய முயற்சியால் காசியில் ஸ்ரீ ராமாநுஜ வித்யாலயம் என்கிற ஸ்ரீவைஷ்ணவ பாடசாலை ஏற்பட்டு ஏறக்குறைய இருபது ஸம்வத்ஸரங்களாக நல்லமுறையில் நடந்து வருகின்றது. இந்த கலா சாலையிலிருந்து உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர்கள் பலர் ஸாமாந்ய சாஸ்த்ரங்களிலும் விசிஷ்டாத்வைத வேதாந்தத்திலும் உத்தீர்ணர்களாகியிருக்கின்றனர். இப்பண்டிதர் வடநாடுகளில் இதிஹாஸ புராண ப்ரவசனம் செய்வதில் மிகவும் ப்ரக்க்யாதர். வடநாட்டில் ஸுப்ரஸித்த விரக்த வித்வத் வரேண்யரான கரபாத்ரி ஸ்வாமி யென்கிற அத்வைதி ஸந்ந்யாஸி இந்த தேவநாயகாசாரிக்கு 'உத்தரதேசீய ராமாநுஜர்' என்று விருதளித்திருக்கிறார். இவரிடம் வியாகரணம் பயின்று தேறியவர்கள் காசியில் பலருளர். காசியில் கங்கைக்கரையருகில் இவர் வாழ்பவராதலால் காசிக்குச் செல்லும் நமது நாட்டு ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகள் இவருடைய உதவியை நாடி ஸுகமாக வாழலாமங்கு. 'ராஜமந்திர்' என்று ப்ரஸித்தமானவிடமே இவருடைய வாஸஸ்தானம்



ஸ்ரீமத். வியாகரணாசார்ய.
தேவநாயகாசாரீ ; காசீ.

அடியேனுக்கு ஸ்ரீபதரிகாச்ரம பர்யந்தமான வடநாட்டு யாத்திரை பல முறை கிடைத்திருக்கிறதென்று முன்னமே (பக்கம் 88-லும், பக்கம் 154-லும்) விஜ்ஞாபித்திருக்கின்றேன். ஸாளக்ராம க்ஷேத்ர யாத்திரை ஒரு பர்யாயங்கூட நேர்ந்ததில்லை. ஆனால் சென்று ஸேவிக்க வேணுமென்கிற குதூஹலம் மிகமிக வுண்டு. ஸாளக்ராமம் போகிறவழியில் காட்மண்டு என்பதொரு ஸ்தலமுள்ளது. அவ்விடத்திலே வஸிப்பவர் இந்த மஹந்து. இவர் எனக்கு அபரிசிதராயிருந்தும் தாமாகவே எனக்கு அடிக்கடி கடிதங்கள் எழுதிக்கொண்டிருந்தார். ஸாளக்ராமம் வந்து ஸேவிக்க வேணுமென்று ஒவ்வொரு கடிதத்திலும் எழுதிக்கொண்டிருந்தார். காட்மண்டுவரையில் எளிதாக வந்துவிடலாமென்றும், அவ்விடம் வந்துவிட்டால் அங்கிருந்து தாம் ஸாளக்ராம யாத்திரையை ஸௌகர்யமாக நடத்தி வைக்க முடியுமென்றும் மாசந்தோறும் சோம்பாது எழுதிக்கொண்டிருந்தார். இது இருபது வருடங்களுக்கு முற்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறபடி. அந்த ஸமயத்தில் பல மாதங்கள் அவர்க்கு நான் பதில் எழுதாமலே யிருந்துவிட்டேன். அதனால் அவர் மிகவும் பரிதபித்து முன்னடி தெரிவிப்பதும் செய்யாமலே நேராகக் காஞ்சீபுரம் வந்தார். அன்று நான் சென்னையில் உபந்யாஸத்திற்காக வந்திருந்தபடியால் அதைத் தெரிந்துகொண்டு உடனே இவர் காஞ்சியில் நின்றும் புறப்பட்டு சென்னை வந்து சேர்ந்து உபந்யாஸ ஸபைக்கும் வந்து சேர்ந்து ஒருபுறமாக உட்கார்ந்துகொண்டார். இவரை நான் முன்பு பார்த்ததில்லை யாதலால் இவரை இன்னாரென்று தெரிந்துகொள்ளா திருந்தேன். ஸ்ரீபெரும்பூதூர், திருமழிசை முதலான விடங்களில் சில உத்தராதி வைஷ்ணவர்கள் வாஸம் செய்வதுண்டாகையால் அன்னவர்களில் இவரொருவர் போலும் என்றும் நினைத்துவிட்டேன். உபந்யாஸ முடிவில் இவர் எழுந்து அருகே வந்து ஸ்ரீஸாளக்ராமத் திருமூர்த்திகள் நிரம்பியிருந்த வொரு சிறு பெட்டியைக் கையிலே கொடுத்து நமஸ்கரித்து நின்றார். நீர் யார்? எவ்விடம்? என்று ஹிந்தியில் விசாரிக்கையில், அவருக்கு நான் எழுதியிருந்த கடிதங்களை ஒன்றுவிடாமல் அவர் என் கையில் கொடுத்து ஒன்றும் பேசாமலே நின்றார். உடனே அவரை நான் இன்னாரென்று தெரிந்துகொண்டு ‘திடீரென்று இவ்விடம் வந்த காரணமென்ன?’ என்று வினவினேன். அவர் கண்ணீர் பெருகநின்று “பல மாதங்களாய் ஸ்வாமி அடியேனை உபேக்ஷித்திருக்கும் காரணம் தெரியவில்லை; நேரில் ப்ரார்த்

நேபாள மஹந்து—ராமாநுஜதாஸ் ஸாளக்ராம க்ஷேத்ர மார்க்கத்திலுள்ள ஒரு மஹான்.

தித்து ஸாளக்ராம க்ஷேத்ரத்திற்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவதற்காகவே வந்தேன். இது நல்ல ஸமயம். ஒருவாரத்திற்குள் அவசியம் புறப்பட்டு எழுந்தருளவே வேணும். இந்த யாத்திரைக்காக ஆகும் செலவுகளெல்லாம் என்னுடையவை; ஒன்றும் ஆலோசியாமல் புறப்படவேணும். இந்த ஸபையிலேயே வாக்தானம் செய்யவேணும்" என்றார். அப்போது உபந்யாஸ கோஷ்டி கலையவில்லை. யாவரும் உட்கார்ந்துகொண்டேயிருக்கிறார்கள். இவ்வளவையும் செவியுற்று அதிசயப்படுகிறார்கள். பிறகு நான் அவரைக் கேட்கின்றேன்— எனக்கு ப்ராப்தமாகவேண்டிய ஸ்ரீஸாளக்ராம யாத்திரையைப்பற்றி உமக்கு ஏதுக்காக இவ்வளவு விசாரம்?" என்றேன். அதற்கு அவர் சொன்னது—"சில வருஷங்களுக்குமுன் ஸ்வாமியை அடியேன் ஸ்ரீஜகந்நாதபுரியில் ஸேவித்திருக்கிறேன். ஆனால் நெருங்கிப் பழக ப்ராப்தமாகவில்லை. அதுமுதல் ஸ்வாமி அடிக்கடி கனவில் காட்சிதந்து எனக்கு ஸாளக்ராம யாத்திரையை நடத்திவைக்கவேணுமென்று அபேக்ஷையைக் காட்டி வருவதால் இதை பகவானுடைய நியமனமாகக்கொண்டு அடியேன் விஜ்ஞாபனங்களெழுதிக்கொண்டேன். வெகுநாளாய் ஸ்ரீமுகம் வருவதே நின்றுவிட்டபடியால் எப்படியாவது அழைத்துக்கொண்டு போகவேணுமென்கிற உறுதியுடன் வந்திருக்கின்றேன்" என்றார்.

இது ஸ்ரீஸாளக்ராம பகவானுடைய பரமாநுக்ரஹ பரீவாஹமேயென்று கொண்ட அடியேன் இதற்கு எவ்விதமான தடையும் சொல்லலாகாதென்றும், இந்த ஸமயம் அவசியம் சென்று ஸேவித்தே வரவேணுமென்றும் உறுதிகொண்டேன். அப்போது உபந்யாஸ ஸபையாரும் ஒருவர் தப்பாமல் 'இந்த ஸமயத்தை இழக்கவே கூடாது; இரண்டு மூன்று மாதங்களானாலும் அவசியம் இந்த யாத்திரையை நடத்தி முடிப்பதே நலம்; எம்பெருமானே நேரில் வந்து அழைப்பது போலன்றோ வுள்ளது' என்று கூறினார்கள். சிலர் தாங்களும் உடன் வருவதாகச் சொன்னார்கள். நாலைந்து நாள்களுக்குள்ளாகவே பிரயாணப்படுவதென்று உறுதி செய்து 'இரண்டு மாதங்கள் வரையில் உபந்யாஸத்திற்கு விராமம்' என்று சொல்லியுமாயிற்று. உடனே காஞ்சீபுரம் வந்து சேர்ந்தவளவிலே, அஸ்மதாசார்யரான ஸ்ரீகாதிஸ்வாமி அப்போது திருமேனியில் அபரிமிதமான அசக்தியுடன் (Chapra) சப்ரா என்னுமூரிலே [காசீ ப்ராந்தத்திலே] எழுந்தருளியிருக்கிறபடியாதலால் அங்கிருந்து தந்தி ஸமாசாரம் கிடைக்க, ஸ்ரீஸ்வாமி திருக்குமாரரையழைத்துக்கொண்டு அங்கே செல்லவேண்டியதாயிற்று. அன்றைக்கே புறப்படலாயிற்று. நேபாள மஹந்து சென்னையிலிருந்து திருமழிசை முதலான சில திவ்ய தேசங்களை ஸேவித்துக்கொண்டு இரண்டு மூன்று நாளில் காஞ்சிவந்து சேருவதாகச் சொல்லிப் பிரிந்து போனவராதலால் அவரைச் சந்திக்கமுடியாமலே நான் சப்ரா சென்றுவிட்டேன். அந்த மஹந்து 3, 4 நாளில் காஞ்சீபுரம் வந்து சேர்ந்திருந்தார்.

---

நான் சென்றவிடத்துச் செய்தியைச் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். சப்ரா சென்று சேர்ந்து ஸ்ரீஸ்வாமியின் திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவிக்கவும் வார்த்தையாடவும் ப்ராப்தமாயிற்று. "இங்கிருந்து புறப்பட்டுக் காஞ்சிக் கெழுந்தருளவேணும்" என்று பிரார்த்திக்கையில் 'அப்படித்தான் உத்தேசம்; இரண்டு நாளில் புறப்படுவோம்' என்று ஸாதித்து, காலை பத்துமணியிலிருந்து மாலை ஐந்துமணி வரையில் அநேக யோகக்ஷேம விசாரங்கள் செய்துகொண்டு வார்த்தையாடிக்கொண்டேயிருக்கையில் 'எல்லாரும் சற்று எழுந்து அப்பால் போயிருங்கள்' என்று நியமித்துவிட்டு ஸந்தியாவந்தனம் செய்தருளிப் படுக்கையை விரிக்கச் சொல்லி சயனித்துக்கொண்டு தியானத்தில் அமர்ந்துவிட்டார். ஆறுமணிக்கு மேல் எல்லாரும் வந்து அருகேயிருந்து 'திருமேனியின் நிலை என்ன?' என்று கேட்கையில் 'ஒன்றுமில்லை' என்று ஸாதித்ததுதான் கடைசியான திருவாக்கு. பிறகு இரண்டு நாழிகைக்குள் திருநாடலங்கரித்தாயிற்று. இந்தச் செய்தி அன்றிரவே காஞ்சிக்குத் தெரியவந்தபடியால் இதைச் செவியுற்ற நேபாள மஹந்து இந்த ஸந்தர்ப்பத்தில் ஸாளக்ராம யாத்திரை நடைபெருதென்று தானே முடிவு செய்துகொண்டு ஸ்வஸ்தானம் சென்று சேர்ந்துவிட்டார். அவருடைய உருவப் படத்தை மட்டும் பிறகு வரவழைத்துக்கொண்டேன். அதன்பிறகு அவரோடு பத்ரவ்யவஹாரங்கள் விசேஷமாக நடைபெறவில்லை. அவர் இப்போது ஜீவித்திருக்கிறுரா இல்லையா? என்பதையும் தெரிந்துகொள்ள முடியாமலிருக்கிறது. ஸாளக்ராம யாத்திரையில் எம்பெருமானுடைய திருவுள்ளம் இவ்வளவேபோலும் என்று எண்ணலாயிற்று. சப்ராவுக்குச் சென்று ஸ்ரீஸ்வாமியோடு வார்த்தையாடுகையில் இந்த ஸம்பவங்களையெல்லாம் விஜ்ஞாபித்து 'ஸாளக்ராம பகவானுடைய ஸேவை அடியேனுக்கு விரைவில் ப்ராப்தமாகும் போலிருக்கிறது' என்றேன். அதற்கு ஸ்வாமி ஸாதித்தபடி—'ஸாளக்ராம யாத்திரைக்கு நான் இரண்டு மூன்று தடவை ஸங்கல்பம் செய்தேன்; ஸௌகரிய மேற்படவில்லை. மிகவும் ச்ரமஸாத்யமான யாத்திரை; எனக்கு நேராத குறைதீர உனக்காவது நேரட்டும்' என்பதாக. அடியேனும் அதன்பிறகு மூன்று நான்கு பரியாயம் ஸாளக்ராமஞ் செல்ல முயற்சிகள் செய்தேன். இனி இப்பிறவியில் இந்த ப்ராப்தியில்லையென்று முடிவு செய்துகொண்டேன். ஆனாலும் ஸத்யகாமனும் ஸத்ய ஸங்கல்பனுமான எம்பெருமானுடைய திருவுள்ளத்தை யாரேயறிவார்? *அந்யோஹ்யந்யச் சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம்யஹம்* என்னுமவனுடைய திருவுள்ளத்தினால் ப்ராப்தமாகவுங்கூடும். "விதிவாய்க்கின்று காப்பாரார்?".

சென்னையில் உபந்யாஸ கோஷ்டி ஆரம்பித்தது முதலாக ஸ்ரீமான் உ. வே. பண்டித. A. கிருஷ்ணஸ்வாமி ஐயங்காருடைய ஸஹயோகம் கிடைத்தது. இவர் திருவத்திபுரம் ஸமீபத்திலுள்ள அனக்காவூரில் ஜனித்தவர். சென்னை

---

மயிலையில் ஒரு வித்யாசாலையில் உபாத்யாயராக இருந்துவந்தார். ஸமீபகாலத்தில் தான் விச்ராந்தராகி ஸ்வக்ராமமேசென்று சேர்ந்திருக்கிறார். இரண்டு வருஷமாகிறது. அதற்கு முன்வரையில் ஒரு வேளை தவறாமல் சென்னை யுபந்யாஸகோஷ்டியில் நியமேந அந்வயிப்பவர்களில் இவர் தலைவராவர். மற்றவர்களைப்போல் வெறு மனேயிருந்து கேட்டுப் போகிறவ ரல்லரிவர். உபந்யாஸங்களுக்கு நோட்டெடுப்பவரிவர் என்றே ப்ரஸித்தி. ஒவ்வொரு வேளையிலும் ஒவ்வொரு நோட்புக் வாங்கி வந்து அதைப் பூர்த்திசெய்து கொண்டு போவர். இங்ஙனமாக இவர் எழுதிச் சேமித்து வைத்திருக்கிற நோட் புத்தகங்கள் ஒரு பீரோ நிரம்பியிருக்கும். ஆனால் அவற்றைப் பிறர் வாசித்துப் பார்த்து விஷயங்களைப் புரிந்துகொள்ள முடியுமாவென்பது ஸந்தேஹமே. தம் மனத்திற்குமட்டும் புரியும்படியான அளவில் ஏதோ குறிப்பு அமைத்திருக்கிறார். அவர் தாமே அதை எல்லார்க்கும் புரிந்துகொள்ளலாம்படி விசதீகரித்து எழுதி வைப்பாராகில் உலகுக்கு ஒருவாறு பயன்படும். ஆனால் ஆங்காங்கு நாம் எடுத்துரைக்கும் ச்ருதி ஸ்மிருதி இதிஹாஸபுராண பஞ்சராத்ர திவ்ய ப்ரபந்த காவ்யநாடகாதி மேற்கோள்களைப் பூர்த்தி செய்யாது விட்டிருப்பதாகத் தெரியவருவதால் நம்முடைய மனோரதம் நிறைவேறுவது ச்ரமப்படுமென்றே நினைக்கலாகிறது. இது நிற்க. இந்த க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஏறக்குறைய இருபத்துநான்கு வருஷகாலம் அடியேனுடைய வுபந்யாஸ கோஷ்டியில் அந்வயித்திருக்கிறார். ஐந்தாறுமைல் தூரத்திலிருந்து ஸைகலில் வருவர். ஆப்ஸண்டும் லேட்டு மாகாதபடி காலத்தில் வந்து சேர்ந்துவிடுவர். 1931-ஆம் வஷத்தில் ஜூலை மாதத்தில் சென்னை யுபந்யாஸ கோஷ்டி தொடக்கமாயிற்றென்று முன்னமே (பக்கம் 159ல்) தெரிவித்திருக்



ஸ்ரீமான். உ. வே. பண்டித.
A. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்
அனக்காவூர்.

கிறேன். ஆரம்பத்தில் இரண்டொருநாள் மட்டுமே இவர்க்குத் தெரியாமலிருந்தது. தெரிந்து கொண்டதுமுதல் தவறாது தாம் அந்வயித்திருந்தது மட்டுமல்லாமல், தமக்குப் பல பெரியார்களோடு பழக்கமுண்டாதலால் அவரவர்களுக்கும் தெரிவித்து ஸமயவிசேஷங்களில் பல மஹான்களையும் ஸபைக்கு விஜயம் செய்யும்படி அழைத்துக்கொண்டு வருவர். இடையில் இவர்க்குப் புத்ரவியோக சோகம் தைவதுர்விபாகத்தினால் ஏற்பட்டது. ஏகபுத்ர விஷயமாதலால் மிகவும் சோகிக்கத் தக்கதாயிருந்தது. அந்த ப்ரபல சோகத்தையும் ஸ்வல்பகாலத்திலேயே மறந்துவிட்டது இவரிடத்தில் நான் கண்ட தனிப்பெருமை. ஸமீபகாலத்தில் ஸஹோதரருடைய குமாரனை ஸ்வீகாரம் செய்துகொண்டு இனிது வாழ்கின்றார்.

ஸ்ரீ உவே. மங்கலம் ராமாநுஜய்யங்காரென்பவர் பலவாண்டுகளாக சென்னையில் வாழ்பவர். பத்து வருஷங்களாக நம்முடைய உபந்யாஸ கோஷ்டியில் அந்வயிப்பவர். இவருடைய பகவத் பாகவத பக்தியையும் ஆசார்ய ப்ராவண்யத்தையும் தர்மருசியையும் மற்றும் பல திருக்குணங்களையும் விசேஷித்து விநயஸம்பத்தியையும் நினைக்கும்போது "இந்தளத்திலே தாமரை பூத்தாற்போலே" என்று நம ஆசார்யர்களருளிச்செய்யும் ஸ்ரீஸூக்தியே நமக்கு நினைவுக்கு வருகிறது. ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமத ஹோபிலமடாதிபதி ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கரின் திருவடி ஸம்பந்தம் பெற்றவரிவர். அந்த மஹாஸ்வாமியினுடைய கடாக்ஷவீக்ஷணம் இவரிடத்தில் மிகவும் பரிபக்வமாகி யிருக்கின்றது. ஒரு பர்யாயம் நம்முடைய வடநாட்டுத்திருப்பதி யாத்திரையிலும் மலைநாட்டுத் திருப்பதி யாத்திரையிலும் அந்வயித்திருந்தார். கீழ் மூன்றும் பகுதியில் (பக்கம் 198ல்) பதிப்பித்துள்ள பதரிகாச்ரம யாத்ரா ஸமஷ்டி படத்திலும் இவருடைய திருவுருவம் காணலாம். அப்போது இவருடைய திருக்குணங்களை விசேஷித்து அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. ஸகல கார்ய நிர்வாஹங்களையும் இவர்க்கு அதீனமாக்கி நிர்விசாரனய்



ஸ்ரீமதுபயவே. மங்கலம் ராமாநுஜய்யங்கார் ஸ்வாமி,
சென்னை

யாத்திரை செய்தேன். ஆத்ம பந்துவாக மட்டுமன்றிக்கே தேஹபந்துக்களிலு மொருவர் என்னும்படியாகப் புரையறக் கலந்து பழகும் சீலம் இவருடையது. இவருடைய திருவுருவப்படத்தை நோக்கும்போதே இவருடைய விநயஸம்பத்து முழுவதும் வடிவிலே தொடை கொள்ளலாம்படியிருக்குமாகையாலே இங்கு நான் விசேஷித்து எழுத வேண்டியதுமில்லை. இம்மண்ணுலகில் அக்ருத்ரிமப்ரக்ருதிகளென்று மிகச் சிலரையே நாம் கொண்டாட முடிகிறது. அப்படிப்பட்டவர்களில் முதன்மையாகப் பரிகணிக்கத்தக்க விவருடைய பகவத்பாகவதாசார்ய ப்ராவண்ய ஸம்ருத்திக்குப் பல்லாண்டு பாடி நிற்கிறேன்.

கீழே மூன்றாம் பகுதியில் (பக்கம் 159ல்)—“ அடியேனுடைய வாழ்க்கையில் சென்னை யுபந்யாஸ மஹாஸபையில் அந்வயமென்னுமிந்த விஷயம் ஒரு தனிப்பட்டஸம்பவமென்றே சொல்லவேணும்” என்று எழுதியிருக்கிறேன். அதிலிருந்தே அடியேனுக்குப் பல பல மஹநீயர்களின் பரிசயமும் ஸஹவாஸமும் ஏற்பட்டபடியினால் அப்படிப்பட்ட மஹான்களின் பெருமைகளை விளக்க வேணுமென்கிற உத்தேசமே இந்தத் தன் சரிதை யெழுதுவதற்கு மூலகாரணமென்பதை எத்தனை தடவை யெழுதினாலும் புநருக்தியாகாது. இங்கே ஸேவை ஸாதிக்கின்ற ஸ்ரீமத் K. S. கிருஷ்ணன் ஸ்வாமியைப் பற்றிக் கீழ் மூன்றாம் பகுதியின் முடிவில் சிறிதளவு ப்ரஸ்தாவம் செய்திருக்கிறேன். இந்த மஹான் நிகரற்ற மேதாவியாகக் கொண்டாடப்படுகிறார். நம் நாட்டினர் மட்டுமன்றிக்கே மேல்நாட்டினரும் இப்பெரியாரை விசேஷமாக மெச்சி வரு



ஸ்ரீமதுபயவே டாக்டர் ஸர். K. S. கிருஷ்ணன், F.R.S.
“பத்மவிபூஷண” புதுடில்லி

கின்றனர். லண்டன் அமெரிக்கா முதலான த்வீபாந்தரங்களில் இம்மஹான் அடிக்கடி சென்று அங்குள்ள மேதாவிகளுக்கும் பல வழிகளில் ஸதுபாயங்கள் காட்டி வருகின்றனராம். இவருடைய ஸௌலப்யத்தைக் கண்டாலோ இத்தகைய பரத்துவங்களெல்லாம் பொய்யென்றே நினைக்கும்படியாயிருக்கும். சென்ற விக்ருதிவருஷம் முதலாக வருஷந்தோறும் பங்குனி மாதத்தில் நமது க்ருஹத்தில் நடத்தப்பட்டு வரும் ஜன்மநக்ஷத்ர விசேஷத்திற்குத் தவருது எழுந்தருளியிருந்து உபந்யாஸமுஞ் செய்து செவிக்கினிய செஞ்சொற்களால் யாவரையும் உகப்பித்து வருகிருர். அப்படியே சென்னை யுபந்யாஸ கோஷ்டியையும் அலங்கரித்து அங்கும் மங்களாசாஸனரூப ஸ்ரீஸூக்திகளைப் பொழிந்து ஸபையாரை யுகப்பித்துப் போருகின்ருர். இதுதவிர நமது அம்ருதலஹரீ பத்ரிகைக்கும் அப்போதப்போது மிகச் சிறந்த வியாஸங்களை உதவி வருகின்ருர். அவற்றை வாசித்துப் பார்ப்பவர்கள் “இந்த ஸ்வாமி நமது ஸம்பிரதாய க்ரந்தங்களிலேயே ஊடாடுகிறவராகக் காண்கிறதேயொழிய லௌகிகக் கல்விப்பயிற்சியில் இவர்க்கு அவகாசமேயிராதுபோல் தோன்றுகிறதே” என்பர்கள். இவர்க்கு ஆங்கிலத்தில் கரைகண்ட ஞானமென்பதை என்போல்வார் தெரிந்து கொள்வதற்கு ப்ரஸக்தியில்லை. இவருடைய வாய்மொழிகளைக் கேட்கும்போதும் வியாஸங்களை வாசிக்கும் போதும் “இவர் பரமவைதிகாக்ரேஸரர்; ஸத்ஸம்ப்ரதாய க்ரந்த காலக்ஷேபைகநிரதர்” என்றுதான் அறுதியிடலாயிருக்கும்.

டில்லியில் ஸ்ரீமத் C. S பார்த்தஸாரதி ஐயங்கார், B.A., B.L., என்று ப்ரஸித்தரான ஸ்வாமியும் அடியேனுக்குப் பரமாப்தராக விளங்கி வருகின்ருர்.



ஸ்ரீமதுபயவே C. S. பார்த்தஸாரதி ஐயங்கார், B.A., B.L., புதுடில்லி

இவர் ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களிலும் ப்ரவணராயும் ப்ரவீணராயும் விளங்குபவர். ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயங்களிலும் ஸ்ரீவசநபூஷணதி ரஹஸ்யங்களிலும் நல்ல

ப்ரவேசமுடையவர். இந்த ஸ்வாமியை அடியேன் டில்லியிலேயே பலமுறை
ஸேவிக்க ப்ராப்தமாகியிருக்கிறதேயொழிய காஞ்சீ ப்ராந்தங்களில் எழுந்தருளி
ஸேவை ஸாதிக்கப்பெற்றதில்லை. நம் தேசத்தவர்கள் பலர் உத்யோக நிமித்தமாக
வடநாட்டுக்குச் சென்று அவ்விடத்துக் கார்ய நிர்வாஹமே போதுபோக்காக
இருப்பர்கள். நம்முடைய பூர்வாசார்யர்களையும் அவர்களுடைய திவ்ய ஸ்ரீஸூக்தி
களையும் ஸ்மரிக்கவுங்கூட அன்னவர்களுக்கு அவகாசமிராது. இந்நிலையை நான்
பலரிடத்தே கண்டிருக்கிறேன். சில மஹான்களோவென்னில், ஸ்வஸ்தானத்
திற்காட்டிலும் அதிகமாகவே ஸ்வரூபரக்ஷணம் செய்து போருவர்கள். அன்னவர்
களிலே, டில்லிமாநகரில் ஸ்ரீமான்களான S. R. S. ராகவன் ஸ்வாமி,
K. S. க்ருஷ்ணன் ஸ்வாமி, C. S. பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமியென்று
சிலரைப் பரிகணனம் செய்ய ப்ராப்தமாகிறது. இம்மஹான்களின் ஸ்ரீமுகங்களை
அடிக்கடி நாம் ஸேவிக்கப்பெறுவதனாலும், இவர்களுடைய விலக்ஷணகாலக்ஷேப
ப்ரக்ரியைகளையுமறியப் பெறுவதனாலும் உள்ளம் பூரித்து இது எழுதலாயிற்று.

ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களில் முதலாழ்வார்களின் பிரபந்தங்களான
திருவந்தாதிகள் முதன்மை பெற்றிருந்தாலும், நமது பூர்வாசாரியர்கள் முதலாயிர
மென்று பெரியாழ்வார் திவ்யப்ரபந்தங்களையே ஆதியாக வைத்துப் பரிகணநம்
செய்தருளினர்கள். அவ்வாழ்வார் *வண்ணமாடங்கள்சூழ் திருக்கோட்டியூரென்று
திருக்கோட்டியூரையே முதலிட்டுப் பாடத்தொடங்கினராதலால் திவ்யதேசங்களுக்
குள் திருக்கோட்டியூருக்கு ஒரு சிறப்பு ப்ரஸித்தமாகவுள்ளது. இந்த திவ்யதேசத்
தில் அடியேனுக்கு மிக்க இளமையிலேயே ஈடுபாடு உண்டாயிற்று. இருபது
வயதுக்கு மேற்பட்டே எனக்கு இந்த திவ்யதேசத்தை ஸேவிக்க பாக்யமேற்பட்டா
லும் *வெருவாதாள் வாய்வெருவி வேங்கடமே வேங்கடமேயென்கின்றாளால்* என்னு
மாபோலே அடியேன் ஏழெட்டு வயதிலிருந்தே திருக்கோட்டியூர் திருக்கோட்டியூ
ரென்று வாய்வெருவிக் கொண்டிருந்தேன். "கோஷ்டீபுரீச சதகம்" என்று நூற்
றெட்டு ச்லோகங்கள் கொண்ட ஒரு ஸ்துதியையும் திருக்கோட்டியூரெம்பெருமான்
விஷயமாக விஜ்ஞாபித்திருந்தேன். இது இந்நாள்வரையில் அச்சிடப்படவில்லை.
வெகுகாலத்திற்கு முன்பு இயற்றப்பட்டதாகையாலே இதன் பிரதியும் கைதவறி
யிருந்தது. ஸமீபகாலத்தில் ஏதோ பழைய கந்த கூளங்களைத் தேடுகையில் இந்த
ஸ்தவம் யாத்ருச்சிகமாகக் கிடைத்தது. விரைவில் இதை யச்சிட்டு ஸஹ்ருதய
ஸஹ்ருந் மணிகளுக்கு உபஹரிப்பேன். இந்தத் திருக்கோட்டியூர்த் திவ்யதேசத்
தில் திலகமாக விளங்கினவர் ஸ்தானீகம் தங்கமையங்கார் ஸ்வாமியென்பவர்.
அவருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்கள் அதிமாத்ரம் ஸ்ப்ருஹணீயமானவை.
ஸம்பிரதாய க்ரந்தங்களில் சதுரரும் ரஸிகருமாவர். அவர் அந்த நாட்டிலே
அருமையாக அவதரித்தவரென்றே அடியேனுடைய அத்யவஸாயம். அந்த
திவ்யதேசத்திலே அடியேனுக்கு அறியாக்காலத்துள்ளே அன்பு விளைந்தது
போலவே அந்த ஸ்வாமி பக்கலிலும் அடியேனுக்கு அறியாக்காலத்துள்ளேதான்
அன்பு விளைந்தது. பரஸ்பரஸமாகமம் அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டேயிருந்தது.
இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளினது மிகவும் ஸமீபகாலத்தில்தான்.
ஆதியிலிருந்து இவரிடமிருந்து கிடைத்த ஸ்ரீமுகங்கள் ஏறக்குறைய ஓராயிர
மிருக்கும். ஒவ்வொன்றும் ரஸகனமாகவேயிருக்கும்.

அடியேன் முதல் தடவையாக தக்ஷிண திவ்ய தேசயாத்திரை செய்யும்போது
ஆங்காங்குள்ள மஹான்களின் திருவருளுக்கு இலக்காகப் பெற்றேன், பாவியே
னுடைய தௌர்ப்பாக்யத்தினால் அன்னவர்களில் பலர் இம்மண்ணுலகைத் துறந்து
விண்ணுலகேகி விளங்குகின்றனர். ஆயினும் அவர்களோடு அடியேனுக்குண்
டாகி யிருந்த நெருங்கிய பழக்கமும், அடிக்கடி ஸ்மரண கோசரமாகிற அவர்களின்
திருக்குணங்களும் அவர்களை மறக்கவொட்டுகின்றதில்லை, நாச்சியார் கோயிலென்று

ப்ரஸித்தமான திருநறையூரில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. நடாதூர். கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியோடு அந்த திவ்ய தேசத்திலேயே முதன்முதலாக வுண்டான பரிசயம் ஸௌஹார்த பரம காஷ்டாபந்நமாக விருந்தது. அந்த ஸ்வாமி ராஜஸ்தானங்களிலும் கனக கங்கண பூஷணாதி மரியாதைகள் பெற்ற பண்டிதோத்தமர். திவ்ய ப்ரபந்தங்களிலும் அத்யந்தம் அபிநிவிஷ்டர். அவ்விடத்து ஸன்னிதியில் அத்யாபக மிராசும் தீர்த்த மரியாதையுமுடையரா யிருந்தவரென்று ஞாபகம். அடியேன் முதல் தடவை இந்த திவ்ய தேசத்திற்கு விடைகொண்டிருந்த போது இந்த ஸ்வாமியின் திருமாளிகை ஸமீபத்தில் காரப்பங்காடு திருவேங்கடத்தய்யங்காரென்று ஒரு பெரியவர் எழுந்தருளியிருந்தார். ப்ரஸித்தராயிருந்த தமிழ்வித்வான். காரப்பாடுகோபாலாசாரியருடைய திருத்தமையனார் அவர் என்று நினைவு. அவர்க்குத் திருவடிகள் ஊனமாதலால் ஸஞ்சாரக்ஷமதையில்லாம விருந்தது. அந்த ஸ்வாமி மிகச்சிறந்த விவேகியென்று கேள்விப்பட்டு அவரைத் தெண்டன் ஸமர்ப்பிப்பதற்காக அவர் திருமாளிகைக்கு விடைகொண்டு வார்த்தையாடிக் கொண்டிருக்கையில் ஸம்பாஷண த்வநியைக் கேட்டு இந்த நடாதூர்ஸ்வாமி அங்கே யெழுந்தருளினர். [இது 1907 ஆம் வருஷத்துச் செய்தி] அப்போது அடியேன் ப்ரஹ்மசர்யாச்ரமத்திலிருக்கிறேன். ஒன்றிரண்டு நூல்களெழுதி வெளியிட்டிருந்தேன். அதைக் கடாக்ஷித்திருந்தவர் நடாதூர் ஸ்வாமி. இவர் அங்கு எழுந்தருளினவுடனே 'காஞ்சீபுரம் பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமி தேவரீர்தானே? என்று கேட்டார். இக்கேள்வியிலிருந்துதான் அந்தத் திருவேங்கடத்தையங்காரும் அடியேனை இன்னனென்று தெரிந்து கொண்டார். ஐம்பதுவருஷ மாய்விட்டாலும் இந்நிகழ்ச்சி இன்று போலிருக்கிறது. நடாதூர் ஸ்வாமியின் திருவுருவப்படம் அடியேனுக்குக் கிடைக்க இத்தனை



ஸ்ரீமதுபய வேதாந்த வித்வான். நடாதூர்.
க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி, நாச்சியார் கோவில்.
(வைகுண்டவாஸி).

நாளானபடியால், முன்னமே யெழுதியிருக்கவேண்டிய இந்நிகழ்ச்சிகளை இப்போது தான் எழுத அவகாசம் வாய்த்தது. அன்று காலை திருக்குடந்தையிலேயே பெருமாள் திருவாராதனத்தை முடித்துக்கொண்டு கால்நடையிலேயே நாச்சியார் கோயிலும் திருச்சேறையும் ஸேவிக்கப் புறப்பட்டிருந்தேன். அன்று மாலை திருநறையூர் நம்பியை ஸேவித்துவிட்டு உடனே திருச்சேறை சென்று சேர்வதாக உத்தேசித்திருந்தேன். ஆனால் நடாதூர் ஸ்வாமியின் ஸௌஹார்த்த விசேஷம் அப்போது அங்கு அடியேனை மூன்றுநாள் தங்கியிருக்கச் செய்துவிட்டது. இரண்டுநாள் ஸந்நிதியில் உபந்யஸிக்க ஏற்பாடுகள் செய்துவைத்தார். அந்த ஸ்வாமி தாமும் உபந்யஸித்தருளினார். அடியேனோடு கூடவே திருச்சேறைக்கும் எழுந்தருளியிருந்து அவ்விரண்டு மூன்று நாட்களிலேயே ப்ரீத்யதிசயத்தைப் பெருக்கியருளினார். அந்த ஸ்வாமி சிஷ்யாநுக்ரஹத்திற்காக அடிக்கடி சில க்ராமங்களுக்கு எழுந்தருள நேரும். எங்கு எழுந்தருளியிருந்தாலும் வாரந்தோறும் ஸ்ரீமுகங்கள் ஸாதித்துக்கொண்டேயிருப்பர். ஸ்ரீமுகங்களெல்லாம் ஸம்ஸ்க்ருத ச்லோக ரூபமாகவேயிருக்கும். அடிக்கடி காஞ்சிக்கு மெழுந்தருளி ஸேவை ஸாதிப்பர். இவர் திருநாட்டுக் கெழுந்தருளி 15, 20 ஸம்வத்ஸரமாகிறது. அவருடைய வியோகதுக்கம் இறையும் தோற்றாதபடி அவருடைய திருக்குமாரர் ஸ்ரீமத். ராகவாசார்யஸ்வாமி யென்பவர் *பிதுச் சதகுண ப்ரேம ஸம்பந்நராய் விளங்கி வருகிறார். இந்த ஸ்வாமியும் திருத்தகப்பனார் போலவே சிறந்த பண்டிதர். குளித்தலையில் வைகநல்லூரில் நிவாஸமாகவிருந்து வித்யா சாலையில் ஸம்ஸ்க்ருத பண்டிதராய் விளங்கி வருகிறார்.



நடாதூர் ஸ்வாமியின் மூத்த திருக்குமாரர்.
ஸ்ரீமதுபயவே. பண்டித.
N. K. ராகவாசார்ய ஸ்வாமி.

ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனார் ஒரு ஸமயம் பஞ்சவடியில் இளைய பெருமாளை நோக்கி * பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந ச லக்ஷ்மண !, த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா

மம * என்றருளிச் செய்தாரே ; அதுதான் இந்த ராகவாசார்யர் விஷயமாக எனக்கு அடிக்கடி நினைவுக்கு வருவது. இவரும் திருத்தகப்பனார் போலவே அடிக்கடி ஸேவை ஸாதித்தும் ஸ்ரீமுகங்களருளியும் மகிழ்வித்து வருகிறார். *ஸௌஹார்த ஸ்வர்ண ரேகாயா உச்சாவசபீதாஜுஷ:, பரோக்ஷமிதி கோப் யஸ்தி பரீக்ஷா நிகஷோபல:* என்கிற ச்லோகரத்நம் பலருமறிவர். ப்ரத்யக்ஷத்திற்போலவே பரோக்ஷத்திலும் ப்ரேமம் வஹிப்பவர்கள் மிகவும் துர்லபர்களென்றே சொல்லவேணும். தைத்திரீய யஜுஸ்ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டம் ஐந்தாவது ப்ரச்நம் தொடங்கும்போதே * विश्वरूपो वै त्वाष्ट्रः पुरोहितो देवानामासीत् स्वस्रीयोऽसुराणाम् * [விச்வரூபோ வை த்வாஷ்ட்ரः புரோஹிதோ தேவாநாமாஸீத் ஸ்வஸ்ரீயோ ஸுராணாம்] என்றாரம்பித்து விச்வரூபனென்பானொருவனுடைய செய்தி சொல்லப்படுகிறது. அவன் ப்ரத்யக்ஷத்தில் தேவர்களைப் புகழ்வனும்; பரோக்ஷத்தில் அஸுரர்களைப் புகழ்வனும். இத்தகைய தன்மைவாய்ந்தவர்கள் உலகில் எத்தனைவரில்லை!. ப்ரத்யக்ஷபரோக்ஷங்களிரண்டிலும் ஸமமான ப்ரேமம் வஹிப்பவர்கள் அடியேனுடைய அநுபவத்தில் சிற்சிலரே காணப்படுகிறார்கள். அன்னவர்களைப்பற்றி அடியேன் நெஞ்சுருகிக் கண்பனிப்ப எழுதாமலிருக்க முடியவில்லை. இத்தகைய விசிஷ்ட வ்யக்திகளைப்பற்றி இந்நூலில் எழுதுவதனால் நமக்கென்ன வுபயோகமென்று சிலரோ பலரோ நினைக்கக்கூடும். உண்மையில் அடியேனுடைய ஆத்ம ஸந்துஷ்டிக்காகவும் க்ருதஜ்ஞதாப்ரகாசநரூபமாகவுமே இவை யெழுதலாகிறது. இத்தகைய மஹநீய குணசாலிகளுக்கு நாம் வேறு என்ன செய்யப் போகிறோம். "போற்றியுகப்பதும் புந்தியிற்கொள்வதும் பொங்குபுகழ் சாற்றி வளர்ப்பதும் சற்றல்லவோ" என்று வேதாந்த வாசிரியர் பணிக்கும் முறையிலே இப்படிப்பட்ட கிஞ்சித் காரமல்லது வேறுண்டோ?



ஸ்ரீமதுபயவே. வித்வத்வரேண்ய.
காளி. ரங்காசார்யஸ்வாமி.

புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் பலஸம்வத்ஸரம் தாநாதிகாரியாக வெழுந்தருளி யிருந்து பத்தெட்டு ஸம்வத்ஸரமாய் விச்ராந்தி பெற்றிருக்கின்ற ஸ்ரீமதுபயவே. காளி. ரங்காசார்ய ஸ்வாமி பண்டித ச்ரேணியில் ஸுப்ரஸித்தர். ஒரு ஸமயம் புதுக்கோட்டைக்கு விடைகொள்ள நேர்ந்தபோது இந்த ஸ்வாமியின் திருமாளிகையே புகலாயிற்று. ஸ்வாமி ஸ்வரூபக்ரந்த ப்ரவசநங்கள் செய்து கொண்டும் க்ரந்த ரசனைகள் பண்ணிக்கொண்டும் ப்ரஹ்மானந்தமாகப் போதுபோக்கி வருகிறாரப்போது. ஸ்வாமிக்கு மதத்ரய நிரூபகரென்று அந்வர்த்தமான விருது. ஒருவருடைய தாக்ஷிண்யத்திற்கும் கட்டுப்படாமலும் அந்தரங்க ஸாக்ஷ்யத்தை வஞ்சியாமலும் தமது திருவுள்ளத்தில் பட்டதை வெளியிடுகிறபான்மை இந்த

ஸ்வாமி பக்கலிற் காணும் சிறந்த திருக்குணம். இவருடைய திருக்குமாரர் வடநாட்டில் ப்ரதிஷ்டித பதவியில் இருப்பதால், ஏழெட்டு வருஷங்களாய் அவரோடு கூடவே கரக்பூர், கல்கட்டா முதலான விடங்களில் வஸித்து, தற்காலம் டில்லி மாநகரை அலங்கரித்து வருகிறார். மாதந்தோறும் இருமுறை தப்பாமல் ஸ்ரீமுகம் ஸாதித்துக் கொண்டிருப்பர். அடியேனுடைய வெளியீடுகளையெல்லாம் நிஷ்பக்ஷபாதமாகக் கடாக்ஷித்து அக்ருத்ரிமமாக மகிழ்ச்சி காட்டுமவர்களில் இந்த ஸ்வாமி முதல் ஸ்தானம் வஹிப்பவர். அடியேன் சில க்ரந்தங்களை யெழுதுவதற்கு இந்த ஸ்வாமியின் நியமனமும ப்ரோத்ஸாஹநமும் நிதானமாவதுண்டு. ஞானம் வயது சீலம் முதலான எல்லாவற்றிலும் முதியரான இந்த ஸ்வாமி திறத்தில் *வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே* என்றநுஸந்தித்து நிற்கிறேன்.

சென்னைமாநகரில் ஸ்ரீமான் கொஞ்சேடி சேஷாசலச்ரேஷ்டியென்கிற பாகவதோத்தமரைப்பற்றி ஆனந்தமாகச் சில வார்த்தைகளை யெழுத விரும்புகிறேன். இங்கு என் பக்கத்தில் நின்று கொண்டிருப்பவர் அவரே. அவர்



(நிற்பவர்) சென்னை கொஞ்சேடி சேஷாசலச்ரேஷ்டியென்னும்
பரமபாகவதோத்தமர்

வைச்யஜாதியிற் பிறந்தவராயினும் * கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்* என்கிற பிரமாணவசனத்தை ஸ்மரிப்பிக்கக்கூடிய மஹான் இவர். இவரை ஜீயரென்றே வழங்கி வருகிறார்கள். அஹங்காரலேசமுமற்று பாகவத ப்ராவண்யமே வடிவெடுத்தவரிவர். ஸ்ரீமதுபயவே காரப்பங்காடு தேசி. வரதாசார்ய ஸ்வாமியை அறியாதாரில்லை. அவர் கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயராகவும் சில வாண்டுகள் எழுந்தருளியிருந்தவர். அந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் சென்னைமாநகரி

லெழுந்தருளியிருந்து காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டிருக்கையில் இந்த சேஷாசலபக்தர் அவரிடத்தே ப்ரவணராய் ஸுசிக்ஷிதரானவர். இருபத்தைந்து வருஷங்களுக்கு மேலாக நம்மோடு நெருங்கிப்பழகி வருகின்ற இவருடைய ஸ்வரூப ஸ்வபாவங்களைக் கவனிக்கும்போது மிகுந்த விஸ்மயமே உண்டாகிறது. பகவதபசார பாகவதாபசாரங்களைக் கனவிலுமறியாதவர். ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களிடத்திலும் ஸகல வித்வான்களிடத்திலும் ஸமரீதியான பக்தி பூண்டவர். முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தின் முதல் சூர்ணையில் "இருக்கும்நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே போது போக்காகையும்" என்றருளிச் செய்தபின் "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்து உகந்திருக்கையும்" என்றருளிச் செய்தவிடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் இந்த நிஷ்டையுண்டாவது மிகவரிதென்று திருவுள்ளம் பற்றுகிறார். அந்த மாமுனிகள் இந்த பக்தாக்ரேஸரரைக் காண நேர்ந்தால் மிகவுகந்தருள்வரென்னத் தட்டில்லை. இவரைக் காணும்போது "முற்காலத்தில் திருக்கச்சிநம்பி போல்வார் இப்படித்தான் எழுந்தருளியிருந்திருப்பர் போலும்" என்று நினைக்க வேண்டியதாகிறது. ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்களை உள்ளும் புறமுமொக்க வஹிப்பவர்களிலே ப்ரதம பரிகணநீயரானவிவர் "வேதகப்பொன் போலே" என்கிற ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்திக்கு லக்ஷ்யபூதரென்றே நமது கொள்கை. அஸ்மதாசார்யரான ஸ்ரீகாதி ஸ்வாமியின் நியமனத்தினால் ஒருவிசை பாம்பேநகரத்தில் பனஸவாடியில் திருவேங்கடமுடையான் ப்ரஹ்மோத்ஸவத்திற்கு அடியேன் விடைகொள்ள நேர்ந்தது; அப்போது இவரையும் கூடவழைத்துக் கொண்டு சென்றேன். அந்த ஸ்வாமி ஒரேநாள் இவருடைய ப்ரக்ரியைகளைக் கண்டு மிகமிக விஸ்மயப்பட்டருளினார். தம்முடைய ஸன்னிதியிலேயே இவரை நிறுத்திக்கொள்ளவும் ஆசைப்பட்டார்.

---

பாம்பேநகர் ப்ரஸ்தாவம் வந்தபடியால் மற்றொரு ஸந்தோஷச்செய்தியும் இங்கு எழுதுகிறேன். ப்ரஹ்மஸ்ரீ P. K. ராஜகோபாலையரென்பவர் அவ்விடத்தில் ப்ரதிஷ்டித பதவியில் அமர்ந்திருக்கிறார். அவரோடு நமக்கு முன்பரிசயம் கிடையாது, பரிசயமேற்பட ப்ரஸக்தியுமிருந்ததில்லை. அவர் தாமாகவே என்னிடத்தில் பரமப்ரேமம் கொண்டார். எனக்கு ஸுதர்சநாசார்யரென்று அவர் பெயரிட்டிருக்கிறார். இந்தத் தன்சரிதையில் முதற்பகுதியில் பக்கம் 8ல் ஸேவை ஸாதிக்கின்ற வித்வத் ஸார்வபௌம ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை, புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியின் திருவடிகளேயாவர் ஸ்ரீகாதி ஸ்வாமி. அவர்களிருவரும் ஸ்ரீஸுதர்சந பகவதநுக்ரஹத்தை அபரிமிதமாகப் பெற்றவர்கள். ஸ்ரீ காதி ஸ்வாமி தாம் ஸ்தாபித்தருளின முத்ரணாலயத்திற்கும் ஸ்ரீஸுதர்சந அச்சுக்கூடமென்றே நாமகரணம் செய்தருளினார். தமது திருமாளிகையின் சிகரத்திலும் ஸ்ரீஸுதர்சநாழ்வானையே மிகப்பெரிய திவ்யமங்கள விக்ரஹமாக ப்ரதிஷ்டிப்பித்து வழிப்போக்கர்களும் எளிதாக ஸேவித்து வாழும்படி செய்தருளியிருக்கிறார். அந்த ஸ்வாமியின் கடாக்ஷ விசேஷத்தினால் அடியேன் ஸுதர்சந பகவத் ப்ரஸாத விசேஷத்தை லவலேசம் பெற்றிருப்பதுண்டு. அதனாலேயே அடியேன் மிகவும் கடினமான ஸ்ரீஸுதர்சநசதகத்திற்கு இளமையிலேயே வியாக்கியானமெழுதி வெளியிட பாக்கியம் பெற்றேன். இந்த விஷயங்களெல்லாம் இந்த ராஜகோபாலையரவர்களுக்குத் தெரிய ப்ரஸக்தியில்லை; உண்மையில் இன்னமும் இவை தெரியாதிவர்க்கு. இவர் முதன்முதலாக நமக்குக் கடிதமெழுதத் தொடங்கும்போதே 'ஸ்ரீஸுதர்சனாசார்யர் ஸன்னிதானத்திற்கு' என்றே எழுத ஆரம்பித்து விட்டார். 'அது என்னுடைய பெயரன்று' என்று நான் தெரிவித்துங்கூட நாளைக்கும் அவ்வண்ணமாகவே தானெழுதி வருகிறார். இது பகவதாஜ்ஞை போலும் என்று நினைத்தேன். இவர் நம்மைத் தம்மில்லத்திற்கு வரவழைத்து ஸ்ரீஸுதர்சனாழ்வான் பெருமையை உபந்யஸிக்கவும் கோரினார். அப்படியே நடந்தது. இதையெல்லாம் நோக்குமிடத்து இவரிடத்தில் ஏதோ விலக்ஷணமான தைவசக்தி



ப்ரஹ்மஸ்ரீ P. K. ராஜகோபாலையரவர்கள்
Bombay

யிருக்கிறதென்று நமக்கு மிகவுகப்பு உண்டாயிற்று. பெறுதற்கரிதான இவருடைய அன்பு சுக்லபக்ஷ சந்திரன்போல் வளர்ந்து வருவது பகவத் ஸங்கல்ப நிபந்தநம்.

மசூலிபட்டணம் என்கிற பந்தர் ஸமீபத்தில் சிட்டிகூடுர் என்பது ஒரு சிறு அக்ரஹாரம். இவ்விடத்தில் ஸ்ரீமான் S. T. G. வரதாசாரியரென்பவர் ஸ்ரீநரஸிம்ஹ காலெஜ் என்னும் பெயரால் ஒரு ஸம்ஸ்க்ருத வித்யாலயம் ஸொந்தமாக ஸ்தாபித்து 25—30 வருஷ காலமாக நடத்தி வருகிறார். இவர் ஸ்வயம் வித்வான்; விசேஷ தனிகருமாவர். இவரை ஸம்ஸ்க்ருத பண்டிதவுலகம் பெரும்பாலுமறியும். இரண்டொரு ஸமயம் நாம் இந்த காலேஜுக்குச் சென்று பர்யவேக்ஷணம் பண்ண ப்ராப்தமாயிற்று. ப்ராயேண எல்லா மதஸ்தர்களும் இங்கு ஸாஹித்யமும் சாஸ்த்ரங்களும் பயில்கின்றார்கள். இந்த வித்யாலயத்தில் வாசித்துத்தேறி வெளிவந்த பண்டிதர்கள் ஆந்த்ரமாகாணத்தில் பல பேர்கள் காணப்படுகிறார்கள். அவர்களுடைய ஆசார வ்யவஹாரங்கள் ஒருவிதமாக இருந்தாலும் ஒவ்வொருவரும் நல்ல பண்டிதராகக் காணப்படுவர். இந்த வித்யாலயத்தில் வெகுகாலம் வியாகரணோபாத்யாயராக இருந்து, பிறகு பந்தர், விஜயநகரம் முதலானவிடத்து வித்யாலயங்களிலுமிருந்து, தற்காலம் வால்டேர் விச்வ வித்யாலயத்தை அலங்கரித்திருக்கின்ற ஸ்ரீமத் கரி. ராமாநுஜாசார்ய ஸ்வாமி யென்பவர் எனக்கு இருபது வருஷகாலமாகப் பரமாப்தர். இவர் மஹாபாஷ்யாந்த வித்வான் என்பது மட்டுமல்லாமல் வியாகரண சாஸ்த்ரத்தில் மிகவும் ஆழ்ந்த நிரூபகர். இவர்க்கு ஸ்வக்ராமம் ஸிம்ஹாசலம். சாஸ்த்ரப்ரவசனமே போதுபோக்காகக் கொண்டிருக்குமிவர் பலவித்யார்த்திகளை உத்தீர்ணராக்கி யிருக்கின்றார். காஞ்சிக்கும் சென்னைமாநகர்க்கும் ஸமயவிசேஷங்களிலே வந்திருந்து ப்ரேமஸம்பத்தை அபிவிருத்தி செய்து போருமிவர்க்குப் பல்லாண்டு பல்லாண்டென்போமத்தனை. இத்தகைய ஸஹ்ருதய ஸஹ்ருந்மணிகளைப்பற்றி யெழுதிக்கொண்டு போனால் மஹாபாரதத்திற்கும் மேலாக எழுதலாம். ஆவலில் குறையில்லை; இதையெல்லாம் ஆசையோடு பார்ப்பவர் இருப்பர்களோவென்கிற ஸந்தேஹத்தினால் ஸம்க்ஷேபிக்கலாகிறது.



ஸ்ரீமத் S. T. G. வரதாசாரியர் சிட்டிகூடுர் ஸம்ஸ்க்ருத காலேஜ் ஸ்தாபகர்

கீழ் மூன்றாம் பகுதியில் பக்கம் 189ல் என்னுடைய க்ரந்தமாலா ப்ரசுரங்களைப்பற்றி ப்ரஸ்தாவமெடுத்து "இதைப்பற்றி மேலே விரிவாகத் தெரிவிக்க

ப்ராப்தமாகும்" என்று விட்டிருக்கிறேன். இருபத்தைந்து வருஷ காலமாக நமது க்ரந்தமாலா கார்யாலயம் மூலமாகப் பலவகை க்ரந்தங்களின் பதிப்பு நடை பெற்று வருகின்றது. நமது பூர்வாசாரியர்க ளருளிச்செய்த மூல க்ரந்தங்கள் வியாக்கியான க்ரந்தங்கள் பெரும்பாலும் இந்த கார்யாலய த்வாரா தேவநாகரி, தெலுங்கு, தமிழ் லிபிகளில் வெளியிடப்பட்டிருக்கின்றன; வெளியிடப்பட்டும் வருகின்றன. ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸகல க்ரந்தங்களும் பகவத் ராமாநுஜ க்ரந்தமாலை யென்கிற பெயரால் இருபது வருஷங்களுக்கு முன் தெலுங்கு லிபியில் வெளியிடப்பட்டன. அது ஐந்தாறு வருடங்களுக்கு முன்னமே நிச்சேஷமாக ஆய்விட்டபடியால், சென்ற வருஷத்தில் அதுவே ஸர்வதேச வ்யாபி யான தேவநாகர லிபியால் வெகு நேர்த்தி யாகப் பிரசுரிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீமத் வேதாந்த தேசிகனருளிச்செய்த ஸகல க்ரந்தங்களும் "ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்த மாலா" என்னும் பெயால் ஒன்பது ஸம்புடங் களாக வெளியிடப்பட்டிருப்பது நாடு நகரமும் நன்கறிந்ததாகும். இதில் சில ஸம்புடங் களுக்குப் புநர்முத்ரணம் செய்ய வேண்டிய ஆவச்யகதை ஏற்பட்டதனால் அதுவும் க்ரமேண நடந்து வருகின்றது. மணவாள மாமுனிகளருளிச் செய்த ரஹஸ்ய வியாக்கி யானங்களெல்லாம் 'ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலா' என்னும் பெயரால் தெலுங்கு லிபியில் வெளியிடப்பட்டிருக்கின்றன. பகவத் விஷயம் ஈடு முப்பத்தாறுயிரப்படி மட்டும் நித்ய காலக்ஷேபத்திற்கு அர்ஹமாம் படி தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் இரண்டிரண்டு ஸம்புடமாகப் பதிப்பிக்கப்



ஸ்ரீமதுபயவே வித்வான்
அக்காரக்கனி ஸம்பத் குமாராசாரி
யர். M A. (பெரிய ஜாமாதா)

பட்டுள்ளது. இப்படியாக நடந்து வரும் க்ரந்தப் பிரசுரங்களை யாவரும் தெரிந்து கொள்ளப்பாங்காக இந்த நான்காவது பகுதியில் சிலசில பக்கங்களிலே கீழே குறிப்புரைபோல் விளக்கி வருவது குறிக்கொள்ளத்தக்கது. தனியாக ஸூசீ பத்திரங்களையும் வரவழைத்துப் பார்க்கலாம். இந்தப் பதிப்புகளெல்லாம் பல லூர்களில் பல அச்சுக்கூடங்களில் நடத்தப்பட்டு வருகின்றன. நம்முடைய வாழ்க்கையில் இதுவொரு மிகப்பெரிய காரியம். பலரும் இதை அதிமாநுஷ க்ருத்யமென்றே பாராட்டுவர்கள். இதை நாமே எழுதிக்கொள்வது அநுசித மாயினும் சில ஸமயங்களில் நாமும் வியப்படைய வேண்டும்படி இஃதிருப்பதனால் *யானே தவஞ்செய்தேன்* என்ற ஆழ்வார் முறையில் விஜ்ஞாபிக்கிறபடி. இவ் வரிய பெரிய காரியங்களெல்லாம் இங்கே ஸேவை ஸாதிக்கின்ற நமது ஜ்யேஷ்ட ஜாமாதாவின் ஸஹயோகத்தினாலேயே ஒழுங்குபட்டு நடந்து வருகின்றன. இவர்க்கு M.A. என்கிற பட்டமிருப்பதைக் கண்டு ஆங்கிலம் பயின்றவர் போலும் என்று மட்டும் நினைத்து விடலாகாது. நியாய வேதாந்தங்களைப் பரிபூர்த்தியாக வரியடைவே கற்றவர். மற்றும் அனேக தந்த்ரங்களின் மரியாதைகளை நிஷ்களங்க மாக நிலைகண்டவர். விமர்சசக்தியே வடிவெடுத்தவர். ஸம்ப்ரதாய க்ரந்தங்களி லும் ஆழ்ந்தபரிசயம் பெற்றவர். வடநாட்டில் உஜ்ஜயினீ ப்ராந்தங்களிலும் ஸௌராஷ்ட்ர மண்டலங்களிலும் சிஷ்யஸம்பத்து உடையவராகையாலே ஹிந்தீ,

குர்ஜரம் முதலான பாஷைகளிலும் விசதவிஜ்ஞானம் பெற்றவர். கிம்பஹுநா? ஸர்வாத்மநா அதிசயிக்கத்தக்க அறிவாளி. பரமகாருணிகனான எம்பெருமான் ஸங்கல்பித்த இவருடைய ஸஹயோகத்தினால்தான் நம்முடைய க்ரந்தமாலா ப்ரகாசனங்கள் நாற்றிசையும் நறுமணங்கமழ நிற்கின்றன. [கீழே பக்கம் 153ல் இவருடைய திருத்தகப்பனார் பெருமைகள் விவரிக்கப்பட்டிருப்பதும் காண்க.]

1939ஆம் ஆண்டில் ஸ்ரீகாஞ்சியில் நம்பிள்ளை ஸன்னிதியமைக்க நேர்பட்டதும் அடியேனுடைய வாழ்க்கையில் தனிப்பட்டதொரு பாக்யவிசேஷம். நம்பிள்ளை ஸன்னிதி நிர்மாணத்தைப்பற்றின ஆலோசனை அடியேனுடைய



ஸ்ரீகாஞ்சீ ஸன்னிதி வீதியில் நம்பிள்ளை ஸன்னிதி

நெஞ்சில் ஒரு மூலையிலும் ஒரு நாளிலுமிருந்ததில்லை. காஞ்சியில் நம்பிள்ளை திருப்ரதிஷ்டை செய்ய வேணுமென்கிற எண்ணம் மட்டுமிருந்தது. அடியேனுடைய வேதவேதாந்த வைஜயந்தீ பாடசாலைக்கென்று ஒரு பெரிய கட்டிடம் ஏற்பட்டிருக்கிறபடியால் அதிலேயே நம்பிள்ளையை யெழுந்தருளப்பண்ணி ஆராதிக்கலாமா என்கிற ஆசை 30, 35 ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு சிறிது தோன்றியிருந்ததுண்டு. இது சாச்வதமாக நிர்வஹிக்க வேண்டிய விஷயமாதலால் அல்பசக்திகரான நமக்கு இது நெஞ்சாலும் நினைக்கத் தகாதென்று அவ்வாசையை அப்போதே விலக்கிக் கொண்டேன். ஆனாலும் *இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹமுடையவனென்று போற்றப்படுகின்ற எம்பெருமானுடைய திருவுள்ளத்தை யாரேயறிவார்? இந்த அத்புத ஸங்கடனையைப்பற்றிச் சிறிது விவரித்தெழுத ஆசை கிளர்கின்றது. தேவப்பெருமாளுடைய ஸன்னிதித் திருமுன்பே [மேலண்டை கோபுரத்தின் முன்னணியில்] இந்த நம்பிள்ளை ஸன்னிதி அமைந்திருக்கின்றது. ஸன்னிதிவீதியில் வடவண்டை வாடையில் 39 லக்கமுள்ள இந்தத் திருமாளிகை ஒரு

வடகலை ஸ்வாமியின் க்ருஹமாக இருந்து வந்தது. ஸ்ரீமதஹோபிலமடாதிபதியாஸ்தானத்தை அலங்கரித்திருந்த ஸ்ரீமத்பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கர் பூர்வாச்ரமத்தில் இந்த பவனத்திலே நெடுநாள் குடிவாழ்ந்து வந்ததுண்டு. இந்த க்ருஹஸ்வாமியானவர் இந்த க்ருஹத்தை விற்பனை செய்துவிட வேணுமென்று முப்பது ஸம்வத்ஸரங்களுக்கு முன்னமே முயற்சி செய்திருந்தார். 1927ஆம் வருஷத்தில் அஸ்மதாசார்யரான ஸ்ரீகாதி ஸ்வாமி இந்த க்ருஹத்தை வாங்கி ப்ரதிவாதிபயங்கர மடமாக ஸ்தாபிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றிப் பன்னீராயிரம் ரூபாய் விலைக்கு முடிவு செய்யப்பட்டுமிருந்தது. அப்போது ஸ்ரீஸ்வாமி வடநாட்டில் எழுந்தருளியிருந்தபடியால் அந்த விலைத்தொகையும் அடியேனிடம் வந்து மூன்றுமாதம் தங்கியிருந்தது. அப்போது இந்த க்ருஹவிக்ரயம் ஏதோ ஸ்பர்த்தா விசேஷத்தினால் பலரால் ஆக்ஷேபிக்கப்பட்டுத் தடைபெற்று நின்றது. அதன்பிறகு ஸ்ரீஸ்வாமி ஸன்னிதி வீதியிலேயே தென்னண்டைவாடையில் அஹோபில மடத்தின் அடுத்த கிழண்டை பக்கத்து க்ருஹத்தை வாங்கி உத்தாரம் செய்திருக்கிறார். ஸ்ரீஸ்வாமி ,தமது மனோரதங்கள் நிறைவேறப்பெறாமலே திருநாடலங்கரிக்க நேர்ந்து விட்டது. அது நிற்க.

இப்போது நம்பிள்ளை ஸன்னிதியாக அமைந்திருக்கின்ற திருமாளிகையின் ஸொந்தக்காரரானவர் [இற்றைக்கும் வாழ்ந்து கொண்டிராநின்ற ஸ்ரீமான் புதுச்சேரி க்ருஷ்ணமாசாரியர்] 1939ஆம் வருஷத்தில் ஆனி மாதத்தில் ஒருநாள் நடுநிசியில் அடியேனுடைய க்ருஹத்திற்கு வந்து துயிலெழுப்பி "ஒரு சிறிய விஜ்ஞாபனம்; சற்று வெளியில் எழுந்தருளவேணும்" என்றார். அடியேன் உணர்ந்து வெளியேவந்து என்ன செய்தி? என்றவாறே "என்னுடைய க்ருஹத்தின்மேல் கடன்தொல்லை மிகவும் சிரமமாகவிருக்கிறது; அதை இப்போது விற்பனை செய்துவிட வேணுமென்று தீவிரமாக முடிவு செய்துவிட்டேன். 10, 12 வருஷங்களுக்கு முன்பு பன்னீராயிரம் ரூபாய்க்கு தேவரீரே முடிவு செய்திருந்தது ஞாபகமிருக்கும். வீணாகக் கலஹக்காரர்களின் வார்த்தையைக்கேட்டு இழந்தேனப்போது. இப்போது அவ்வளவு விலையில் நான் ஆசைவைப்பதற்கு நியாயமில்லை. நாலாயிரம் ரூபாய்க்குக் கொடுத்து விடுகிறேன். கிருபைபண்ணி வாங்கிக் கொள்ளவேணும். இந்த ஸமயம் கைகொடுத்து ரக்ஷிக்கவேணும். தேவரீர் உபேக்ஷித்தால் வீடே கடனில் மூழ்கிப் போய்விடும்; எவ்விதமான சாக்குப்போக்கும் சொல்லாமல் கிருபைபண்ணியே யாகவேணும்" என்று தயநீய தசையை அபரிமிதமாகக்காட்டி வேண்டிக் கொண்டார். அக்காலத்தில் ஸ்ரீமான் அழகு செய்யூர் (அழிசூர்) ஸ்ரீநிவாஸாசாரியர் என்பவர் அடியேனுடைய பாடசாலையில் வேதோபாத்யாயராயும் அடியேனுடைய ஸர்வகார்ய துரந்தரராயும் இருந்து வருகிறார். அவரையும் இவர் புரஸ்கரித்துக் கொண்டுவந்து வெகு நிர்ப்பந்தம் செய்தார். அந்த ஸமயத்தில், நாலைந்து வருஷங்களுக்கு முன்பு அடியேனுடைய க்ருஹத்தை ஐம்பதினாயிரம் ரூபாய் செலவில் உத்தாரம் செய்திருந்தபடியால் வேறு க்ருஹம் வாங்க வேணுமென்கிற விருப்பம் சிறிதுமில்லாமலிருந்தபடியால் 'தற்காலம் எனக்கு ஆவச்யகதை இல்லையே!' என்று சொன்னேன். அதற்கு அவர் "அப்படி சொல்லி விடக்கூடாது; சென்னையில் பல பெரியமனிதர்களுண்டு; யாருக்காவது தேவரீர் நியமித்தால் ஆகாததன்று; தேவரீர் மனம் வைத்தால் அநாயாஸமாக நிறைவேறக்கூடியதே இது; எப்படியாவது க்ருபை பண்ணியே யாகவேணும்; விலையில் சிறிது குறைத்துக்கொள்ள வேணுமானாலும் குறைத்துக்கொள்வது; எந்த விதத்திலும் தேவரீரே கதி; தேவரீரே வழிகாட்டியாக வேண்டும்" என்று சொல்லி விழுந்து விழுந்தெழுகிறார். 'ஸரி, பார்ப்போம்; போய்வருவது' என்று சொல்லி யனுப்பிவிட்டேன். அப்போது இரவு ஒருமணியிருக்கும். அதன் பிறகு தூக்கம் கொள்ளவில்லை. அவருடைய தயநீயதசையை

நினைக்க நினைக்க, எப்படியாவது இவருடைய வேண்டுகோளைப் பூர்த்தி செய்து வைக்க வேணுமென்று திடமான ஊக்கமுண்டாயிற்று. உபாயசிந்தனை பண்ணிக் கொண்டேயிருக்கையில் கண்ணுறங்கிற்று. அப்போது ஒரு சிறிய கனவு. ஸ்ரீஹஸ்தி சைல சிகரத்தில் கர்ப்பக்ருஹத்தின் திருமுன்பே கோலப்படியில் தேவப்பெருமாள் கீழே புறப்பாடு கண்டருள்வதற்காக எழுந்தருளியிருக்கிறார்; அங்கே அடியேன் ஸேவித்துக் கொண்டு நிற்கிறேன். ஒரு அர்ச்சகர், ஒரு பரிசாரகர் தவிர அங்கு வேறு யாருமில்லை. அப்போது பெருமாள் திருமேனியில் ஒரு புஷ்ப ஸரங்கூட இல்லை; அர்ச்சகர் பெரிய பெருமாளிடம் விரைந்து சென்று ஒரு புஷ்பத்தண்டையைக் கொண்டு வந்து கையில் கொடுத்து ஸ்ரீசடகோபன் ஸாதிக்கிறார். அதைப் பெற்றுக்கொண்டு பரமபாக்யம்! என்று சொல்லி நிற்கிறேன். அதே க்ஷணத்தில் நித்யப்ரதக்ஷிண பாராயண கைங்கர்ய ஸமயம் ஸந்நிஹிதமானபடியாலே பாடசாலையில் கணகணகணவென்று சோமங்கலமடிக்கும் பேரரவம் செவிப்படுகின்றது; உடனே கண்விழித்தெழுந்தேன். இதுவொரு பெரிய சகுனமாகவும், பேரருளாளன் திருவுள்ளமுகந்து நியமிக்கிறபடியாகவும் தோன்றிற்று. அதனால் மிகுந்த வுத்ஸாஹமுண்டாகி நித்ய ப்ரதக்ஷிணபாராயண கைங்கரியத்தை முடித்துக் கொண்டு தீர்த்தமாடி விட்டு பெங்களூர் புறப்படுவதென்று நிச்சயித்தேன்.



ஸ்ரீகாஞ்சீ—தேவப்பெருமாள்

சென்னைவாஸிகளான வைச்யர்களில் எனக்குப் பரமாப்தர் ஊ.ரா. ஸ்ரீராமுலு செட்டியாரென்பவர். கீழே மூன்றாம்பகுதியில் பக்கம் 165ல் இவருடைய உருவப்படம் காணத்தக்கது, இவருடைய அபிமான விசேஷங்களையும் அங்குச் சிறிது ப்ரஸ்தாவித்திருக்கின்றேன். இந்த செட்டியார் அப்போது கோடைகால விச்ராந்திக்காக பெங்களூர் சென்றிருந்தபடியால் அங்குச்சென்று இவரிடம் சொல்லி அந்த ஸன்னிதிவீதி க்ருஹத்தை விலைக்கு வாங்கச் செய்யலாமென்கிற நோக்கத்துடன் அன்றே அவ்விடம் புறப்பட நிச்சயித்தேன். உடனே அந்த க்ருஹஸ்வாமியை ஸந்தித்து க்ருஹத்தின் க்ரயத்தொகை விஷயமாக ஒரு முடிவு செய்து கொள்ள வார்த்தையாடி இரண்டாயிரத்தெழு நூறு ரூபா யென்று முடிவு செய்து கொண்டு புறப்பட்டு அன்று மாலையிலேயே பெங்களூர் சென்று சேர்ந்து ஸ்ரீராமுலு செட்டியாரைச் சந்தித்தேன். அப்போதும் எனக்கு நம் பிள்ளை ஸன்னிதி நிர்மாண உத்தேசம் சிறிதுமிருந்ததில்லை. தேசாந்தரிஸ்வாமிகள் தங்கும் விடுதியான ராமாநுஜகூடமாக இந்த க்ருஹத்தை உபயோகப்படுத்தவே எண்ணமிருந்தது. செட்டியாரிடம் நான் சொன்னது இவ்வளவே—"காஞ்சீபுரத்தில் ஸன்னிதி வீதியில் கோபுரத்வார ஸமீபத்தில் ஒரு க்ருஹம் விற்பனைக்கு வருகிறது; இதை நீர் விலைக்கு வாங்கிக் கொண்டால் நாளடைவில் அதை எவ்விதமாகவாவது உபயோகப்படுத்திக் கொள்ளலாம்" என்று. அதற்கு அவர் உடனே பதில் சொல்லி விட்டார்—"காஞ்சீபுரத்தில் எனக்கு க்ருஹம் எதற்கு? கதாசித் நான் அவ்விடம் வந்தால் ஸ்வாமி திருமாளிகை இருக்கவே யிருக்கிறது; இது அநபேக்ஷிதம்" என்றார். அதன் மேல் நான் சொன்னதாவது—"நீர் வாங்கிக்

கொள்ள ஸௌகரியமில்லையானால் ஸரி; நான் வாங்கிக் கொள்ளுகிறேன்; தற்காலம் இதற்கு வேண்டிய பொருளுதவி செய்ய வேணும்" என்றேன் அதற்குத் தடையேயில்லையென்று சொல்லி, சென்னையிலுள்ள தமது பிரதிநிதிக்கு உடனே கடிதம் எழுதிக் கொடுத்து விட்டார்—'ஸ்வாமி அபேக்ஷிப்பது போல் தடையில்லாமல் பணம் கொடுப்பது' என்று. அக்கடிதத்தைப் பெற்றுக் கொண்டு உடனே அங்கு நின்றும் புறப்பட்டு மறுநாள் காலை சென்னை சேர்ந்து பணத்தை ஸித்தப்படுத்திக் கொண்டு ஊர் வந்து சேர்ந்து அந்த க்ருஹஸ்வாமியிடம் செய்தி சொன்ன வளவில், அவர் வாடின முகத்தோடு "முன் போலவே இப்போதும் சில பாபிகள் காரியம் நிறைவேற மாட்டாதபடி கலஹங்களைப் பண்ணுகிறார்கள்; என்ன செய்வேன்? ஒரு வாரத்திற்குள் நாலாயிரம் ரூபாய்க்கே விற்பனை செய்து கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். ஒரு வாரம் பார்க்கிறேன்; ஒன்றுமில்லையானால் தேவரீருடைய க்ருபையையே நாடி வருகிறேன்" என்றார். அப்படியே செய்வதென்று சொல்லிவிட்டேன்.



ஸ்ரீமான் உவே. வேங்கடநரஸிம்ஹாசார்ய ஸ்வாமி (முதுனூர்பாடு) (வைகுண்டவாஸி)

அந்த ஸமயம் ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாள் திருவாடிப்பூரமஹோத்ஸவம் ஸேவிக்க அடியேன் போய்வர வேண்டியிருந்தது. கீழ் மூன்றாம் பகுதியில் பக்கம் 189ல் ஸேவை ஸாதிக்கின்ற ஸ்ரீஉவே. அ. மு. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி அப்போது காஞ்சீவாஸம் செய்து கொண்டிருந்தபடியால் அவரிடம் பணத்தைக் கொடுத்து "க்ருஹவிக்ரயம் ப்ராப்தமானால் தேவரீரே முன்னின்று முடிப்பது" என்று சொல்லிவிட்டு அடியேன் ஸ்ரீவில்லிபுத்தூர் போய் விட்டேன். போனவொரு வாரத்திற்குள் விக்ரயம் முடிவு பெற்று ரிஜிஸ்டருமாய் விட்டதென்கிற செய்தி அடியேனுக்கு ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாள் திருமுன்பே தெரியவந்தது. பிறகு ஊர் வந்து சேர்ந்த பின் ஆடி மாதத்திலேயே ஹஸ்த நக்ஷத்திரத்தன்று க்ருஹநிர்மாணம் தொடங்கலாயிற்று.

மேற்கு கோதாவரி ஜில்லாவில் முதுனூர்பாடு என்பது ஓர் அக்ரஹாரம். அவ்விடத்தில் ஸ்ரீமான் வேங்கடநரஸிம்ஹாசார்ய ஸ்வாமியென்கிற பெரியவர் மஹாதனிகர். மிகப்பெரிய

ஜமீன்தாரி. அளவிறந்த தருமங்கள் செய்தவர். அந்த மஹான் யாத்ருச்சிகமாக அப்போது காஞ்சீபுரம் வந்திருந்து நமது பாடசாலையைச் சேர்ந்த ஹாஸ்டலில் தங்கியிருந்தார். ஸன்னிதி வீதியில் க்ருஹநிர்மாணம் தொடங்கினவன்று அப்பெரியார் அங்கிருந்தார். அப்போது ராமாநுஜகூட நிர்மாணமென்கிற அபிஸந்தியேயிருந்தது. அதற்காக அப்பெரியார் அன்றே ஆயிரத்துநூற்றுப் பதினாறு ரூபாய் நன்கொடை யளித்தார். அஸ்திவாரத்திருப்பணிகள் நடந்து கொண்டிருக்கின்றன. "நம்பிள்ளை ஸன்னிதி கட்டப்படுகிறதாம்" என்று ஊரில் ப்ரவாதமுண்டாயிற்று. வஸ்துஸ்திதியில் அங்ஙனம் அடியேனுடைய உத்தேசமிருந்ததில்லை. ப்ரவாதமோ ப்ரபலமாகப் பரவிவிட்டது. வெளியூர்களி லிருந்தும் பலஸஹ்ருதயஸஹ்ருந்மணிகள் "நம்பிள்ளை ஸன்னிதி நிர்மாணமாகிற தென்று தெரியவந்தது; பரமஸந்தோஷம்" என்று கடிதங்கள் வந்து கொண்டி ருந்தன. 'இங்ஙனே எம்பெருமானுடைய திருவுள்ளம் போலும்' என்று கொண்ட அடியேன் நம்பிள்ளை ஸன்னிதியேயாகுகவென்று அத்யவஸித்து விட் டேன். கீழ் இரண்டாம் பகுதியில் பக்கம் 105ல் வைதிக கோஷ்டியில் ஒன்பதா மவராக விளங்குகின்ற ஸ்ரீஉவே. தி. ந. ச. திருவேங்கடாசாரியர் "நம்பிள்ளையோடு கூட அவருடைய ப்ரதாநசிஷ்யர்களான வடக்குத்திருவீதிப்பிள்ளை பெரியவாச் சான்பிள்ளைகளையும் எழுந்தருளப்பண்ணினால் நலமாம்" என்று ப்ரஸ்தாவித்தார். இதுவும் எம்பெருமான் திருவுள்ளம்போலுமென்று கொண்டு அங்ஙனமே செய்யலாயிற்று.

மூன்று நான்கு மாதங்களில் கனவேகமாகத் திருப்பணி நடைபெற்று முடிந்தது. அப்போது முப்பதினாயிரம் ரூபாய் செலவில் திருப்பணியாயிற்று. அடுத்த கார்த்திகை மாதத்திலேயே ரேவதியன்று திருப்ரதிஷ்டை நடைபெற நிர்ணயமாயிற்று. மழையோ வாசாமகோசரமாகப் பெய்து கொண்டிருக்கின்றது. தென்னிந்திய ரயில் மார்க்கங்கள் பெரும்பாலும் சிதிலமாகி ரயில் போக்கு வரத்தும் தடைபட்டிருந்தது. இப்படிப்பட்ட ஸந்தர்ப்பத்தில் திருப்ரதிஷ்டையை எப்படி நடத்துவது? தற்போது நிறுத்தி உத்தராயணத்தில் வைத்துக் கொள்ளலாமா? என்கிற ஆலோசனையும் இருந்து வந்தது. இதிகர்த்தவ்யதா மூடனாய்த் திகைத் திருக்கையில் ஆழி மழைக்கண்ணன் கண் திறந்து விட்டான். ஒருவாரம் பத்து நாள் முந்தியே மழைநின்று ரயில் மார்க்கங்களும் செப்பனிடப்பட்டு விட்டன. ப்ரதிஷ்டா முஹூர்த்தம் நிஸ்ஸந்தேஹமாக நிர்த்தாரணம் பெற்றுவிட்டது. *இமவந்தம் தொடங்கி இருங்கடலளவும்* என்று பெரியாழ்வாருளிச் செய்தபடியும் *ஆசை லாத் அத்ரிகந்யா சரண கிஸலயந்யாஸ தந்யோப கண்டாத் ஆரக்ஷோநீத ஸீதா முக கமல ஸமுல்லாஸ ஹேதோச் ச ஸேதோ:* என்று ஆளவந்தாருளிச் செய்த படியும் தென்னாடு வடநாடுகளிலிருந்து எண்ணிறந்த ஆப்தர்களும் பண்டிதர்களும் வைதிகர்களும் மண்ணும் மணமுங் கொள்ள வந்து குழுமி விட்டார்கள். இப்போது திருமலை திருப்பதியில் ஸ்ரீமத் பரமஹம்ஸ, சின்ன ஜீயர்ஸ்வாமியாக எழுந்தருளி யிருந்து ஸேவைஸாதித்தருளும் ஸ்ரீஸ்வாமி அப்போது பூர்வாச்ரமஸ்தராய்த் திரு வல்லிக்கேணியில் ப்ரவசந நிரதராக எழுந்தருளியிருக்கின்றார்; அந்த ஸ்வாமி சிஷ்ய பரிவாரங்களுடனே எழுந்தருளியிருந்து அநுக்ரஹித்தது அடியேனுக்கு மிகவும் பெருமையாயிருந்தது. அந்த ஸமயம் ஐந்நூறு திருநாமங்களுக்குக் குறை யில்லாமல் எழுந்தருளியிருந்து ஸேவை ஸாதித்தவதிசயம் இற்றைக்கும் கண் ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்று நீங்காத காட்சி. வைதிக லௌகிகர்களும் மற்று முள்ள சிஷ்ய வர்க்கங்களும் சேர்ந்து ஆயிரம் வ்யக்திகளுக்குக் குறையில்லாதபடி குழுமி விட்டார்கள். இத்தனை பேர்களையும் ஐந்து நாள்களுக்கு எப்படி ஆராதிக்கப் போகிறோமென்கிற கவலை அடியேனுக்குப் பெரிது முண்டாயிற்று. ஆனால் ஒரு

விஷயம் வெகு அவலேபத்துடன் விஜ்ஞாபிக்கிறேன்;— விரலுக்குத் தகாத வீக்கமென்னும்படி அடியேன் ஸ்வசக்தியை மீறி ஸாஹஸமாகவே எவ்வளவு பெரிய காரியங்களை ஆரம்பித்தாலும் அவற்றை அநாயாஸமாகத் தலைக்கட்டிக் கொண்டு போகிறவன் எம்பெருமான். விசேஷித்து இந்த தைவபலம் அடியேனுக்குள்ளது. இதை நான் இருபதாவது வயதிலிருந்து ஏதத்க்ஷணபர்யந்தம் ஸ்வாநுபவத்தில் கண்டு வருகிறேன். ஆனாலும் அந்தந்த ஸமயங்களில் இது எப்படி நிறைவேறப் போகிறதென்கிற கவலை சிறிது தோன்றும். அதேக்ஷணத்தில் எம்பெருமான் "நானுனக்குக் கையாளா யிருக்க ஏதுக்குக் கவலை?'' என்று சொல்லுவான் போன்று எண்ணினதற்கு மும்மடங்காகக் கார்ய நிர்வாஹம் செய்து போருவன். திருப்ரதிஷ்டை ஸமயத்தில் உபஸ்திதர்களாயிருந்த பெரிய மனிதர்களெல்லாரும் எனக்குச் சிறிதும் கவலை யில்லாதபடி தாங்களே முன்னின்று எல்லாப் பொறுப்புகளையு மேற்று வெகு விபவமாக நடத்தி வைத்தார்கள். ஹைதராபாத் நகரத்தில் கந்திகல் மெட்டு என்னும் பகுதியில் ஸ்ரீகோதண்ட ராமஸ்வாமி தேவஸ்தானத்தை நிர்வஹித்து வருகிற ஸ்ரீமதி. கொம்பெல்லி ஆண்டாளம்மாள் பகவத் பாகவதா சார்ய கைங்கர்ய துரந்தரையாய் ஸுப்ரஸித்தை. திருமலை திருப்பதி ப்ரதிவாதி பயங்கராசார்ய திருவடி ஸம்பந்தம் பெற்ற பரம வைஷ்ணவி. அந்த அம்மா திருப்ரதிஷ்டைக்கு முன்னடியே வந்திருந்தபடியால் வந்தவர்களுக்கெல்லாம் ததீயாராதன கைங்கர்யப் பொறுப்பைத் தான் பரம ஸந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டு நடத்திவைத்தது என்ஞான்றும் மறக்க முடியாதது. இவ்வண்ணமாக ஒவ்வொருவர் ஒவ்வொரு கைங்கரியத்தில் பொறுப்பேற்றுக்கொண்டு மொத்தத்தில் பதினாயிரம் ரூபாய் செலவில் ஐந்துநாள் திருப்ரதிஷ்டை மஹோத்ஸவம் மஹா ஸமாரோஹமாக நடந்தேறியது. இதற்கு அடியேன் உத்தேசித்திருந்த திட்டம் இரண்டு மூன்றாயிரத்திற் குட்பட்டதே. ஆயினும் ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான பேரருளாளன் தனதருள் வெள்ளத்தைப் பெருக்கினபடி வாசாமகோசரம். ஸ்ரீ ராஜமன்னார் ஸன்னிதியிலிருந்து ஸ்ரீபாஞ்சராத்ர நிபுணர்களான தீக்ஷிதர்கள் எழுந்தருளியிருந்து திருப்ரதிஷ்டையை வெகு சிறப்பாக நடத்திவைத்தார்கள். 1939 ப்ரமாதி ஸம்வத்ஸரம் கார்த்திகை மாதம் ரேவதியன்று திருப்ரதிஷ்டையாகி அன்றே தொடங்கித் திருக்கார்த்திகையளவும் நான்குநாள் திருநக்ஷத்ர மஹோத்ஸவமும் நடந்தேறியது. இந்த ஸன்னிதியின் பின்பாகம் வெகு விஸ்தாரமான நிலமாதலால் அப்போது காலியாயிருந்த அவ்விடத்தை ராமாநுஜ கூடமாக்க வேணுமென்கிற மனோரதம் அப்போது திருப்ரதிஷ்டைக்கு வந்திருந்த சென்னைவாஸிகளான பக்த பாகவதோத்தமர்களுக்கு உதித்தது. ஏழெட்டு மாதங்களுக்குள்ளாகவே நாற்பதினாயிரம் ரூபா செலவில் நம்பிள்ளை ஸன்னிதியின் பின்புறம் முழுவதும் ராமாநுஜ கூடமாக நிருமிக்கப்பட்டு அந்நாள் தொடங்கியே தேசாந்தரிகளுக்கு ஸௌகரியமான வஸதியாக அமைந்துள்ளது. நம்பிள்ளை நிலயமென்று இதற்குப்ரஸித்தி.



கந்திகல்மெட்டு கொம்பல்லி ஆண்டாளம்மா ஹைதராபாத்

## நம்பிள்ளை ஸன்னிதியின் நித்ய நைமித்திக க்ரமங்கள்

நம்பிள்ளை ஸன்னிதி திருப்ரதிஷ்டையான அந்நாள் தொடங்கி நித்ய நைமித்திக க்ரமங்களெல்லாம் ஏகரீதியாகவும் மிகச் சிறப்பாகவும் நடைபெற்று வருகின்றன. தினப்படியாக இரண்டுவேளை திருவாராதனம்—காலை வேளையில் திருப்பாவை கோஷ்டி—மாலை வேளையில் நாலாயிர க்ரமமாக நித்யம் ஒரு பதிகம் ஸேவிப்பது—திவ்யதேச க்ரமத்திலே தீர்த்த ப்ரஸாத விநியோக கோஷ்டி நடைபெறுவது—உசிதமாக தேசாந்தரிகளை ஆராதிப்பது. இது நித்யக்ரமம். த்வாதசி தோறும் காலையில் திருமந்த்ரார்த்த கோஷ்டி. (அதாவது) முமுக்ஷுப்படி ஸேவித்து சாத்துமுறை செய்வது. திருவிசாகந்தோறும் ஆசார்யஹ்ருதயம். திருமூலந்தோறும் தத்வத்ரயம். திருவோணந்தோறும் ஸ்ரீவசநபூஷணம். இதையும் நித்யக்ரமமென்றே கொள்ளலாம். நம்பிள்ளை திருநக்ஷத்ரம் க்ருத்திகையாதலால் அன்று திருநெடுந்தாண்டகம் ஸேவித்துச் சாத்துமுறை செய்வது. பெரியவாச்சான்பிள்ளை திருநக்ஷத்ரம் ரோஹிணியாதலால் அன்று நாச்சியார் திருமொழி முடிவில் இரண்டு திருமொழிகள் ஸேவித்துச் சாத்துமுறை செய்வது. வடக்குத் திருவீதிப்பிள்ளை திருநக்ஷத்ரம் ஸ்வாதியாதலால் அன்று பெரியாழ்வார் திருமொழியில் ஆத்யந்தத் திருமொழிகள் ஸேவித்துச் சாத்துமுறை செய்வது. ரேவதி திருப்ரதிஷ்டா நக்ஷத்ரமாகையாலும், இவ்வாசார்ய வர்யர்களின் நித்ய ஸேவைக்கு உரியனுயிருந்த ஸ்ரீரங்கநாதனுடைய திருநக்ஷத்ர மாகையாலும் அன்று அமலனதிபிரான் ஸேவித்துச் சாத்துமுறை செய்வது. இங்கு நம்பிள்ளையொருவர்க்கே மூலத் திருமேனியும் உத்ஸவத் திருமேனியுமுள்ளது. மற்றையாசிரியர்க ளிருவருக்கும் உத்ஸவத் திருமேனியே யுள்ளது. இவ்வாசார்யர்களுக்கு ஆராத்ய தேவதைகளாகப் பெரியபெருமாள் சக்ரவர்த்தி திருமகனர் கண்ணபிரான் ஆண்டாள் இவர்களும் திருக்கோலங்கொண்டு எழுந்தருளியிருக்கிறார்கள். ஆழ்வாராசார்யர்க ளெல்லாருடையவும் வருஷத் திருநக்ஷத்திர நன்னாள் ஸேவை சாத்துமுறை விசேஷங்களுடன் குறையறக் கொண்டாடப்பட்டு வருகிறது. கார்த்திகை மாதத்தில் நம்பிள்ளையின் வருஷோத்ஸவம் பத்துநாள் இரண்டு வேளையும் இரண்டாயிரம் ரூபாய் செலவில் வெகு விசேஷமாக நடைபெற்று வருகின்றது. ஆனிமாதத்தில் வடக்குத் திருவீதிப்பிள்ளை யுத்ஸவமும், ஆவணி மாதத்தில் பெரியவாச்சான்பிள்ளை யுத்ஸவமும் பத்துநாள் இரவுவேளை மட்டும் திருவாய்மொழியாயிரம் ஸேவையுடன் தனித்தனி 250 ரூபாய் செலவில் நடைபெற்று வருகின்றன. பகவத் பாகவத க்ருபையினல் இந்த நித்ய நைமித்திக க்ரமங்கள் சாச்வதமாக நடைபெற்று வரும்படி வ்யவஸ்தை செய்யப்பட்டிருக்கின்றது. அடியேனுடைய வாழ்க்கையில் இது அசிந்திதமும் அப்ரதீக்ஷிதமும் அநந்ய லப்யமுமான விசேஷம். இதிலிருந்து பல மஹான்களுடைய பரமக்ருபைக்கும் ப்ரேமத்திற்கும் இலக்காகப் பெற்றேன். அப்படிப்பட்ட ப்ரேமவான்கள் நாற்றிசையிலும் நிரம்பியிருக்கிறார்கள். அன்னவர்களில் காலஞ் சென்றவர்கள் பலர். ஜீவித்திருப்பவர்களும் பலர். அனேகருடைய உருவப்படங்கள் கிடைக்காமையினல் அவர்களைப்பற்றி ப்ரஸ்தாவம் செய்வதற்கில்லை. அனேகருடைய உருவப்படங்கள் ஸம்பாதிக்கப்பட்டிருந்தும் கைதவறிவிட்டன. இவ்வண்ணமாக வொரு தன் சரிதைநூல் வெளியிடவேணுமென்கிற உத்தேசம் ஸமீப காலத்திலேயே தோன்றினபடியால், பல மஹான்களின் உருவப்படங்கள் கைப்பட்டிருந்தும் அச்ரத்தையினல் கைசோரவிட நேர்ந்தது. சில மஹான்கள் எவ்வளவு பிரார்த்திக்கப்பட்டும் உருவப்படங்களை உதவுகின்றிலர். மீண்டும் அவர்களைப் பிரார்த்திக்கிறேன்.

பெங்களூர் ப்ராந்தத்தில் அம்ருதூர் என்னுமக்ரஹாரத்தில் ஸ்ரீமதுபயவே. ராமாநுஜாசார்ய ஸ்வாமி யெழுந்தருளியிருக்கிறார். இந்த ஸ்வாமிக்கு இப்போது

எண்பது திருநக்ஷத்ரங்களுக்கு மேலாகிறது. வயதிற்போலவே ஞானத்திலும் சீலத்திலும் முதியரான இந்த ஸ்வாமி இளமையில் காஞ்சீபுரியில் எழுந்தருளியிருந்து ஸ்ரீமதுபயவே குன்றபாக்கம் வித்வான் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி ஸகாசத்தில் நியாய சாஸ்த்ர மதிகரித்தவர். அடியேனுடைய திருத்தகப்பனார்க்கும் மாதாமஹ ஸ்ரீஜீயர் ஸ்வாமிக்கும் பரம ப்ரேமபாத்ரமாயிருந்தவர். நம்பிள்ளை ஸன்னிதிக்கு விசேஷ கைங்கரியங்கள் செய்திருப்பவர். ஒரு பர்யாயம் வடநாட்டு யாத்திரை முழுவதும் பதரிகாச்ரம முட்பட இந்த ஸ்வாமியோடு கூடியிருந்து செய்ய ப்ராப்தமாயிற்று. * நிவாஸ வ்ருக்ஷஸ் ஸாதூநாம் ஆபந்நாநாம் பரா கதி:, தாதூநாமிவ சைலேந்த்ரோ குணநாம் ஆகரோ மஹாந் * என்னப்பட்ட சக்ரவர்த்தி திருமகனுடைய திருக்குணங்களை இந்த ஸ்வாமி பக்கலிலே மிகமிகக் கண்டு அதிசயித்தார்கள் உடனிருந்த யாவரும். இவர் திருமேனி பாடவத்தோடிருந்த காலத்தில் அடிக்கடி காஞ்சிக் கெழுந்தருளி ஸேவை ஸாதித்துக் கொண்டிருப்பர். இப்போது மிகவும் அசக்தரா யெழுந்தருளியிருக்கிறபடி. இந்த ஸ்வாமியின் திருக்குமாரர்கள் நல்ல பதவிகளில் ப்ரதிஷ்டிதர்களாக விளங்கிவருகிறார்கள்.



ஸ்ரீமதுபயவே.
A. S. ராமாநுஜாசார்ய ஸ்வாமி
ஜமீன்தார், அம்ருதூர்.

---

ஆழ்வார் திருநகரி நவதிருப்பதிகளைச் சேர்ந்த தென்திருப்பேரையில் வாழ்பவரான ஸ்ரீமதுபயவே. K ராமசந்திரய்யங்கார் ஸ்வாமியின் திருக்குணங்களிலே அடியேன் அறியாக்காலத்திலிருந்தே ஈடுபட்டவன். இந்த ஸ்வாமி லௌகிகமான உத்யோகத்திலமர்ந்து வாழ்ந்தவர் அதில் வெறுப்புக் கொண்டு சீக்கிரமாகவே விச்ராந்தி பெற்று பகவத் பாகவதாசார்ய கைங்கர்ய நிஷ்டராய் ஸத்க்ரந்த காலக்ஷேப நிரதராக விளங்கி வருகின்ருர். இந்த ஸ்வாமியின் உத்தமமான திருக்குணங்களை அவரவர்கள் அநுபவித்து அறிய வேண்டுமேயொழிய அடியேனுடைய எழுத்திலிருந்து தெரிந்து கொள்வதில் சுவையில்லை. ஆனாலும் அடியேன் எழுதாமலிருக்க முடியாது. இவர் உத்யோகத்திலிருக்கும் போதே அடியேனுக்குப் பரிசிதர். பரமவைதிகரானவிவர்க்கு லௌகிக உத்யோகத்திலிருப்பு எங்ஙனே பொருந்துகிறதென்று அடியேன் கவலை கொண்டதுண்டு. அப்போதே இந்த ஸ்வாமி உத்யோகத்தை விட்டு விலகிக் கொண்டார். க்ரமமான பென்ஷன் கிடைப்பதற்கு யோக்கியமல்லாத காலத்தில் விலகிக் கொண்டபடியாலே சிறிதளவான பென்ஷன் தொகையே கிடைக்கும்படியாயிருந்தது. இருந்தாலும் அதில் பரம த்ருப்தி கொண்டவராய் ஸத்காலக்ஷேப நிரதராயினர். இயற்கையாகவே குடும்பயோக க்ஷேம நிர்வாஹத்திற்குப் பர்யாப்தமான உபபத்தியுடையவராதலால் பாகவதர்களை ஆராதிப்பதிலேயே அளவு கடந்த குதூஹலமுடையவராய் அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் ஏகரீதியாக விளங்கி வருகிருர். இந்த ஸ்வாமி நமது நம்பிள்ளை ஸன்னிதிக்குச் செய்து போந்தவையும் செய்து வருகின்றவையுமான கிஞ்சித்காரங்கள் பல. பழுத்த பழமாக ஸேவை ஸாதித்து வருகின்ற இந்த ஸ்வாமி இவ்விபூதியில் இன்னமும் வெகு நாளைக்கு ஸேவை ஸாதித்துக் கொண்




ஸ்ரீமதுபயவே. K. ராமசந்திரய்யங்கார் ஸ்வாமி
தென்திருப்பேரை.

டிருக்கவேணும். ஸ்ரீவைஷ்ணவர் என்னும் வ்யபதேசத்திற்கு இந்த ஸ்வாமி ப்ரதமலக்ஷ்ய பூதர் என்பது அடியேனுடைய அபிஸந்தி.

பல ஸம்வத்ஸரங்கள் பம்பாய் மகாநகரத்தில் மிகச்சிறந்த உத்யோக பதவியை வஹித்துவந்த ஸ்ரீமதுபயவே வி. வி. ஐயங்கார் ஸ்வாமியையறியாத லௌகிகர்களும் வைதிகர்களும் மிகச்சிலரேயிருக்கக்கூடும். இந்த ஸ்வாமியின் நட்பு அடியேனுக்குப் பல ஸம்வத்ஸரங்களாகவுண்டு. இவர் பல ஸம்வத்ஸரங்கள் லௌகிக உத்யோகத்தில் அமர்ந்திருந்தவராயினும் இவரை நேரில் ஸேவிப்பவர்கள் இவரைப் பரம வைதிகோத்தமராகவே அறுதியிடுவர்கள். இங்கே திருவுருவப்படத்தில் எப்படி ஸேவை ஸாதிக்கிறாரோ அப்படியேதான் ஸதா ஸர்வதா ஸேவை ஸாதித்தருள்வர். சிலபேர்கள் போடோக்ராப் எடுப்பதற்காகத் தனிப்படக் கோலஞ் செய்து கொள்வதுண்டு; இந்த ஸ்வாமியின் திருக்கோலம் அங்ஙனே அமைந்ததன்று. ஸஹஜமான திருக்கோலமேயிது. பகலோடு இரவோடு வாசியற எக்காலத்திலும் இவ்வண்ணமாகவே ஸேவை ஸாதித்தருள்வர். நாலாயிர திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களிலும், ஸ்ரீ வசநபூஷணாதி ரஹஸ்யங்களிலும், ஸ்ரீ ராமாயணாதிகளிலும் ப்ரவசந பர்யந்தமான ப்ராவீண்யமுடையவர். தினப்படியாகக் காலையிலும் இரவிலும் தம்முடைய ஆப்த ஸுஹ்ருந்மணிகளுக்கு இந்த ஸத்க்ரந்தங்களை ப்ரவசநம் செய்துபோருமவர். இந்த ஸ்வாமி பாம்பே நகரத்தில் வஸித்த முப்பது வருஷ காலத்தில் இத்தகைய போதுபோக்கு இல்லாத நாள் தேறவேமாட்டாது. ஸகலோபசாரங்களுடனும் காலை மாலைகளில் பெருமாள் திருவாராதனம் செய்தருளும் பரிசு பரம விலக்ஷணமானது. அதிதி



ஸ்ரீமதுபயவே. வி. வி. ஐயங்கார் ஸ்வாமி.
கரியமாணிக்கம்.

ஸத்காரச் சிறப்போ அளவுகடந்தது. ஸாத்விகர்களை ஆராதிப்பதில் ஸ்வாபாவிகமான குதூஹலம் வாய்ந்தவர். பாம்பே மகா நகரத்தில் இந்த ஸ்வாமியை அடியேன் பத்தெட்டு பர்யாயம் ஸந்திக்க நேர்ந்ததுண்டு. "உலகிலேந்து பெருஞ் செல்வத்தராய்த் திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்களே" என்று ஆழ்வாரருளிச் செய்த பலச்ருதி இந்த ஸ்வாமி பக்கலிலே பஹுமுகமாகப் பலித்திருக்கிறபடியைக் கண்டு மிகவுமுகந்தேன். நமது நம்பிள்ளை ஸன்னிதி திருப்ரதிஷ்டையானது முதலாக நம்பிள்ளையின் ப்ரதிமாஸ திருநக்ஷத்ர நிர்வாஹ கைங்கரியம் இந்த ஸ்வாமியினுடையதாக நடைபெற்று வருகிறது. இரண்டொரு வருஷகாலமாக இந்த ஸ்வாமி உத்யோகத்தில் நின்றும் விச்ராந்தராய், திருவரங்கம் பெரிய கோயிலுக்கு அருகேயுள்ள கரிய மாணிக்கமென்னும ஸ்வக்ராமத்திலே தேவேந்திர பவனமான தமது திருமாளிகையிலேயே நித்யவாஸமாயிருந்து கொண்டு அடிபணிந்தவர்களுக்கு ஸ்வரூபக்ரந்த ப்ரவசனமே செய்து போருகின்றார். ஸ்ரீகுலசேகராழ்வார் "இருமுப்பொழுதேத்தி எல்லை யில்லாத் தொன்னெறிக்கண் நிலை நின்ற தொண்டர்" என்று ஸாதித்தருளின பாசுரத்திற்கு இந்த ஸவாமியையே அடியேன் லக்ஷியமாகக் கருதியிருப்பது. இந்த ஸவாமிக்குத் திருத்தேவியார் வாய்த்திருக்குமழகைப் பற்றியும் அடியேன் இங்குச் சிறிது விஜ்ஞாபிக்க விரும்புகிறேன். "ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா" என்று திருவடி ப்ரசம்ஸித்த ப்ரசம்ஸை இங்குத்தான் மிகப்பொருத்தமானது. "நல்லபதத்தால் மனை வாழ்வர்" என்ற ஆழ்வாருடைய மங்களாசாஸனம் நன்கு பலித்திருக்கிறபடி. இவர்களுக்கு ஔரஸ புத்திரனில்லாததொரு குறையுண்டு. ஸஹோதரபுத்திரனை ஸ்வீகாரம் செய்து கொண்டு ஒருவாறு குறைதீரப் பெற்றது. அவனும் மேதாவியாய் *பிதுச் சதருண னென்னலாம் நிலைக்கு வரக் கூடியவனாய் விளங்கி வருகிறான்.



ஸ்ரீமான் M. V. நரஸிம்முலு நாயுடு
சென்னை க்ரௌன்டாக்கீஸ் ப்ரொப்ரைடர்.

சென்னைமாநகரில் ஜார்ஜ் டவுனில் சின்னதம்பி முதலித் தெருவில் வாழ்ந்து வரும் ஸ்ரீமான் M. V. நரசிம்முலு நாயுடுவை பக்தர்கள் யாவருமறிவர். இவர் வயதில் மிகச் சிறியவராயிருந்தும் அறிவிலும் ஆற்றலிலும் மிகப் பெரியவர். நெடுநாளாக நம்முடைய அன்புக்கு இலக்கானவர். பகவத் விஷயாதி ஸ்வரூப க்ரந்தங்களை நன்றாகக் கேட்டு அர்த்த விசேஷங்களைத் தரித்துக்கொண்டு மிருப்பவர். சென்னைமா நகரில் பலவாண்டுகள் எழுந்தருளியிருந்து சிங்கம் செட்டி யதீந்த்ர ப்ரவண செட்டி சாரிடியில் காலக்ஷேப க்ரந்தங்களை

ப்ரவசனம் செய்துகொண்டிருந்த வித்வச் சிகாமணியான ஸ்ரீமதித்யாதி. காரப்பங்காடு தேசி வரதாசார்ய ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருந்து அர்த்தங்கள் கேட்டு ஆஸ்திக்யம் பெற்றவர்களில் இவர் தலைவர். பரம்பரையாகவே தனவந்தர். க்ரவுன் டாக்கீஸ் நடத்தும் மூலமாகவும் தனிகர். உலகத்தில் தனிகர்கள் எண்ணிறந்தவர்களுளர். தர்ம ருசியுள்ள தனிகர்கள் மிகச் சிலரே யாவர். அன்னவர்களையே நாம் தனிகர்களென்று வழங்கத்தகும். இந்த நரசிம்முலு நாயுடு எனக்குத் தெரிந்து பல திவ்ய தேசங்களில் பல பல கைங்கரியங்களை மிகுந்த பக்தி ச்ரத்தையோடு, வெகு காலமாகச் செய்து வருகிறார். காஞ்சீபுரத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி மணவாளமா முனிகள் சாத்துமுறை (இரவு) உபயத்தை வாசாமகோசரமான வைகரியில் நடத்தி வருபவர் இவர். திருவெஃகா ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதியில் பொய்கையாழ்வார் பிள்ளை லோகாசாரியர் சாத்துமுறை யுபயத்தையும், தையில் மகம் பைந்நாகம் பாய் சுருட்டி மஹோத்ஸவத்தையும் வெகு சிறப்பாக நடத்தி வருபவரும் இவரே. கூரத்தில் ஆழ்வான் சாத்துமுறை, மதுரமங்கலத்தில் எம்பார் சாத்துமுறை......என்றிப்படி பல முக்கியமான மஹோத்ஸவங்களை மிக வுயர்ந்த ரீதியில் நடத்தி வருபவரும் இவரே. தேவப்பெருமாள் திருவாராதனத்திற்கு தினப்படி சாலக்கிணற்றுத் தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பிக்கும்படியான ஏற்பாடு செய்திருப்பவரும் இவரே. திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தானம், மயிலை ஸ்ரீகேசவப்பெருமாள் பேயாழ்வார் தேவஸ்தானம் முதலான ஸன்னிதிகளில் ட்ரஸ்டி பதவியிலும் அமர்ந்திருக்கிறாரிவர். நமது நம்பிள்ளை ஸன்னிதியில் தேசாந்தரிகளை ஆராதிக்கும் கைங்கரியமும் இவருடையதே. டம்பமில்லாமல் க்யாதி லாபங்களை விரும்பாமல் பாரமார்த்திக புத்தியோடு இவர் நடத்திவரும் கைங்கரியங்கள் அப்ரமேயமானவை. இவருடைய திடமான அத்யவஸாயத்திற்கு நித்ய ஸ்ரீர் நித்ய மங்களமென்னத்தகும்.

சில வருஷங்களுக்கு முன்பு இவர் "ஸ்ரீராமாநுஜ மிஷின்" என்னும் பெயரால் ஒரு உபந்யாஸ பரிஷத்தை ஸ்தாபித்து அதன் மூலமாக அடிக்கடி பல ப்ராந்தங்களில் தகுந்த அதிகாரிகளைக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவ சமய தத்துவங்களை ப்ரஸங்கம் செய்வித்து மதப்ரசாரத்தை வெகு ஊக்கத்துடன் செய்து வருகிறார். இதில் மற்றும் பல அபிமானிகளும் ஒத்துழைத்தால் இம் முயற்சி விரைவில் விசேஷ பலனை யளிக்கும். ... ... ... ... ... *

---



ஸ்ரீ மதுபயவே. பிரதிவாதி பயங்கரம். அண்ணன் கோவிந்தாசாரியர் ஸ்வாமி கூடாலை. (கோதாவரி)



ஸ்ரீ மதுபயவே. கோ. கம். திருமலாசார்ய ஸ்வாமி. வேணீமாதவமந்திரம். பிரயாகை (கீடகஞ்ஜ்)

கோதாவரீ தீரத்தில் பல அக்ரஹாரங்கள் விளங்கிக்கொண்டிருக்கின்றன. அவற்றுள் ‘கூடால’ (Gutala) என்பது அபிஜாதர்கள் பரம்பரையாக வாழுமிடமான மிகச்சிறந்த அக்ரஹாரம். இவ்விடத்தில் ப்ரதிவாதி பயங்கரவம்சஸ்தர்கள் நெடுநாளாக வாழ்ந்து வருகிறார்கள். இவர்களுக்கு ஸ்ரீகாஞ்சி தேவப்பெருமாள் ஸன்னிதியிலும் தீர்த்த மர்யாதையுண்டு. இத்திருவம்சஸ்தர்களில் (கீர்த்தி மூர்த்தியான) அண்ணன் கோவிந்தாசார்யரென்கிற மஹான் ப்ரஸித்தராயும் வியாபகராயுமெழுந்

[P.T.O.]

வட நாட்டில் ப்ரயாக க்ஷேத்திரம் மிகப்ரஸித்தமானது, “கங்காயமுநயோர் மத்யே யத்ர குப்தா ஸரஸ்வதீ” என்கிறபடியே த்ரிவேணீ ஸங்கமத்தினால் மிகப் புனிதமான க்ஷேத்ரம் ப்ரயாக க்ஷேத்ரம். அலஹாபாத் என்று லௌகிக நாமத்தினால் வழங்கப்படும் தலமிதுவே. இங்கே தாராகஞ் ஜென்றும், கீடகஞ் சென்றும் பல சாகாபேதங்களுள்ளன. சுத்தயமுநாநதியின் பரிஸரத்திலுள்ள கீடகஞ்ஜில் வேணீமாதவ மந்திரமென்பது ப்ரஸித்தமான ஸ்தலம். ஸ்ரீ பெரும்பூதூரில் வாழ்ந்து கொண்டிருந்த சில மஹா புருஷர்கள் பலவாண்டுகட்கு

தருளி யிருந்தார். அவருடைய திரு நாமத்தையே பூண்ட அவரது திருப்பேரனர் இப்போது அந்த அக்ரஹாரத்தில் ஸரஸ்வதீகடாக்ஷத்தையும் லக்ஷ்மீகடாக்ஷத்தையும் நன்கு பெற்று ஸ்ப்ருஹணீய குணகண நிதியாய் விளங்கி வருகிறார். இந்த ஸ்வாமியும், இவருடைய பக்கத்திலே ஸேவை ஸாதிக்கும் ப்ரயாகை ஸ்வாமியும் அடியேனுடைய ஆப்தர்களில் சிறந்தவர்கள்.

முன்பு இவ்விடத்திலே ஸ்தானசார்யர்களாக எழுந்தருளச் செய்யப்பட்டனர். அவர்களுள் இப்போது விளங்கும் ஸ்வாமி ஸ்ரீமத் திருமலாசார்யர். இவர் ஸ்ரீபெரும்பூதூரில் ஸாஹித்ய சாஸ்த்ரங்கள் வாசித்து சிஷ்ய ஸம்பத்தியோடு இங்கே வாழ்பவர். தென்னட்டிலிருந்து வடநாட்டுத் திருப்பதி யாத்திரை செல்பவர்களுக்கு இவருடைய மந்திரத்தில் வஸதி ஸௌகரியமுண்டு.

## அடியேனுடைய குடும்ப யோக க்ஷேம விஜ்ஞாபநம்.

அடியேனுக்கு இரண்டு குமாரிகள் மட்டும் பிறந்து வாழ்கின்றனர். கநிஷ்ட குமாரிக்கு இரு குமாரர்களும் ஒரு குமாரியும்; பிறகு ஜ்யேஷ்ட குமாரிக்கு இரு



— ஸ்வீக்ருதபுத்ரேண ஸஹ —

குமாரிகளும் ஒரு குமாரனும் ஜனித்திருக்கின்றனர். ஜ்யேஷ்ட ஜாமாதாவைப்பற்றி பக்கம் 256ல் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். கநிஷ்ட ஜாமாதாவைப் பற்றிக் கீழ் இரண்டாம் பகுதியில் பக்கம் 107ல் "ஸ்ரீமான் மணவாள. திருமலாசாரியர்" என்று தொடங்கியுள்ள பாராவில் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அவருடைய புதல்வனை சிரஞ்சீவி. செல்வமணி யென்னும் ஸ்ரீரங்கநாதனைப் பதினைந்து வருஷங்களுக்கு முன்பு புத்ர ஸ்வீகாரம் செய்துகொண்டேன். அவனுக்கு மாமனாராக வாய்த்திருக்கின்ற ஆழ்வார் திருநகரி ஸ்ரீமதுபயவே. இளையவில்லி. சடகோபாசார்ய ஸ்வாமியின் பெருமைகளைக் கீழ் இரண்டாம் பகுதியில் பக்கம் 116லும், முதற்பகுதியில் பக்கம் 41லும்

வெளியிட்டிருக்கிறேன். அடியேனுக்குப் பித்ரு பிதாமஹ பரம்பராப்ராப்தமாயிருந்த க்ராமபூமி தென்னாற்காட்டு ஜில்லாவில் திருவடி ராயபுரமென்னும் சுரோத்திரியமாயிருந்தது. இது நபாபு காலத்தில் பண்டித ஸன்மானமாகப் பெரியோர்களுக்குக் கிடைத்ததாம். பித்ரு பிதாமஹாதிக்ள் இந்த க்ராம வருமானத்தைக் கொண்டே பெருமாள் திருவாராதனம் நடத்தி வந்தார்கள். அடியேன் காலத்திலும் ஐம்பத்தைந்து பிராயம் வரையிலும் இந்த க்ராமமே குடும்ப நிர்வாஹகமாயிருந்துவந்தது. ஸர்க்கார் ஜமீன்களையெல்லாம் ஸ்வாதீனப் படுத்திக்கொள்ள ஆரம்பித்தது எங்கும் ப்ரஸித்தமேயன்றோ. அக்காலத்தில் இந்த நமது க்ராமத்தையும் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டார்கள். இதற்காகச் சிறிது தொகை செலுத்தியுள்ளார்கள்; இனிமேலும் சிறிது தொகை செலுத்தக்கூடும். முக்கியமாக சிஷ்யர்களின் ஆதரவே ஆதாரமாக இருந்து வருகிறது. குடும்ப நிர்வாஹம் தவிர மூன்று வகைகளில் அடியேனுடைய தார்மிககார்ய நிர்வாஹங்கள் நடைபெற்று வருகின்றன. (1) வேத வேதாந்த வைஜயந்தீ வித்யாநிலய நிர்வாஹம். (2) நம்பிள்ளை ஸன்னிதி நிர்வாஹம். (3) க்ரந்தமாலா கார்யாலய நிர்வாஹம். இவை தவிர வேறு நிர்வாஹங்களும் அநியதமாய் ஸமயாநுகுணமாக ப்ராப்தங்களாகுமானாலும் இவை மூன்றும் நியதங்கள். இவற்றை எம்பெருமான் நிர்வஹித்துக்கொண்டு போகும் விதம் அடியேனுக்கே அபரிமிதமான விஸ்மயத்தைத் தருகின்றது.

பெரியாழ்வார் எம்பெருமானை நோக்கி ஒரு பாசுரமருளிச் செய்தார்—*நெடுமையாலுலகேழு மளந்தாய் நின்மலா நெடியாய்! அடியேனைக் குடிமை கொள்வதற்கு ஐயுறவேண்டா கூறை சோறிவை வேண்டுவதில்லை, அடிமை யென்னும் அக்கோயின்மையாலே அங்கங்கே யவை போதருங் கண்டாய் * என்று. இப்பாசுரத்தின் திவ்யார்த்த தீபிகை யுரையிலே அடியேன் எழுதியுள்ளவற்றை அப்படியே இங்கு அநுவதிக்கிறேன். “த்ரிவிக்ரமாபதாநத்தில் அனைவரையும் அடிமை கொண்ட நீ அடியேனையும் அடிமைகொள்ளவேணுமென்று ஆழ்வார் ப்ரார்த்திக்க, அதற்கு எம்பெருமான் ‘உம்முடைய ஸ்வரூபத்தி னுண்மை எனக்கு விளங்கவில்லையே’ என்ன; அதற்கு ஆழ்வார் ‘அடியேனுக்கு ஸ்வாதந்த்ரியமும் ஸ்வப்ரயோஜநபரத்வமும் உண்டென்று நீ ஸங்தேஹிக்கவே வேண்டா; அடியேன் அநந்யப்ரயோஜநன்’ என்ன; அதுகேட்டு எம்பெருமான் ‘நீர் அநந்யப்ரயோஜநனென்றால் அதை நான் எங்ஙனே எற்றுக் கொள்வேன்? நீர் தேஹமுடையவரன்றோ? அத்தேஹத்திற்குத் தாரகமாயுள்ளவற்றில் உமக்கு விருப்பமில்லாமற் போகுமோ?’ என்ன; அதற்கு ஆழ்வார் ‘தேஹதாரகமான சோறு கூறை முதலியவற்றை நான் உன்னிடத்துப் பெற விரும்புகிறிலேன்’ என்ன; ‘ஆகில் அவை பெறுவதற்காகச் சில அரசர்களைத் தேடியோடுகிறீரோ?’ என்று எம்பெருமான் கேட்க, அதற்கு ஆழ்வார் ‘அவற்றை நான் அபேக்ஷித்துப் பெறவேண்டிய அருமையில்லை; அவற்றுக்காக க்ஷத்ரர்களைத் தேடி நான் ஓடவேண்டியதில்லை; உனக்கு நான் அடிமைப்பட்டவனென்கிற சிறப்பு என்னிடத்துள்ள தாதலால் ஆங்காங்கு அவரவர்கள் தாமாகவே என்னை யழைத்து அவற்றைத் தந்திடுவர்கள்; ஆகவே நான் பிரயோஜநாந்தரத்தை நச்சித் திரிபவனல்லேன்; அநந்யப்ரயோஜநனே; அடியேனை நிஸ்ஸந்தேஹமாக அடிமை கொண்டருள வேணும்’ என்பதாய்ச் செல்லுகிறது இப்பாட்டு.” என்று. இங்ஙனே பெரியாழ்வார் திருவுள்ளம்பற்றின அத்யவஸாயம் அடியேனுக்கு மிக்க இளமையில் தோன்றியது. அடியேன் பதினாறுவது பிராயத்தில் ஹைதராபாத் நகரத்தில் ஸீதாராம் பாக் என்னுமிடத்தில் ஸ்ரீகாதிஸ்வாமியோடு கூடச் சில மாதங்கள் வஸிக்க நேர்ந்ததைக் கீழ் முதற் பகுதியில் பக்கம் 28ல் விரிவாக எழுதியிருக்கின்றேன். அப்போது அந்த நகரத்தில் மிகப் பெரிய மதிப்போடு பிரபல அட்வகேட்டாக வாழ்பவர் ஸ்ரீ உவே. S. ஆராவமுதய்யங்கா ரென்பவர். இந்த மஹான்

இற்றைக்கும் பாங்காக வாழ்ந்து கொண்டிருக்கிறார். இந்த ஸ்வாமி லௌகிக வைதிகங்களில் மஹாசதுரர். ஸம்ஸ்க்ருத வ்யுத்பத்தியும் நன்றாகப் படைத்தவர். அடியேனுடைய பதினாறாவது வயதில் இந்த ஸ்வாமிக்கு முப்பது வயதுக்கு மேலிருக்கும். அப்போது இந்த மஹான் ஸமயவிசேஷங்களில் ஸ்ரீகாதிஸ்வாமி ஸன்னிதிக்கு வருவராதலால் வருகிற போதெல்லாம் அடியேனோடு பரமப்ரீதராய் வார்த்தையாடிப் போவர். ஒருஸமயம் வார்த்தையாடுகையில், கீழே விவரித்த பெரியாழ்வார் பாசுரத்தையெடுத்து விவரித்து ஒரு உபந்யாஸம்போலவே விஜ்ஞாபனம் செய்து கொண்டேன். உண்மையில் பரமரஸிகரான இந்த ஸ்வாமி அந்தப் பாசுரத்தின் பொருளிலே மிகவும் ரஸித்து அந்தப் பாசுரத்தையும் தமது நோட்புக்கில் குறித்துக் கொண்டார். இற்றைக்கு ஐம்பது வருடங்களுக்கு முற்பட்ட செய்தி இது. "அடிமையென்னும் அக்கோயின் மையாலே அங்கங்கேயவை போதருங் கண்டாய்" என்ற இப்பாசுரம் நாலாயிர திவ்யப்ரபந்தப் பாசுரங்களில் அத்விதீயமானது. சிலசில அர்த்தவிசேஷங்களை ஒரு ஆழ்வார்போலே மற்றுஞ் சில ஆழ்வார்களும் ஸாதிப்பதுண்டே; இவ்வர்த்தம் இவ்வாழ்வாரொருவரால்தான் அருளிச்செய்யப் பட்டுள்ளது. ஒருவனுக்கு பகவத் ப்ரத்யாஸத்தி பாரமார்த்திகமாக இருக்குமானால் அந்த ப்ரத்யாஸத்தியின் ப்ரபாவத்தாலே அவரவர்கள் தாமாக மேல்விழுந்து கிஞ்சித்கரிக்கப்பெறுவர்கள் என்னுமிந்த விசேஷத்தைப் பெரியாழ்வார் ஸ்வாநுபவத்திலே கண்டு அருளிச் செய்தாரோ? அல்லது சாஸ்த்ரார்த்த மென்றருளிச் செய்தாரோ? அறியேன். ஸ்வாநுபவத்தில் கண்டிருக்கவுங்கூடும். இந்தப் பாசுரம் அடியேனுக்கு ஏழெட்டு பிராயத்தில் கண்ட பாடமாகப்பெற்றது. திருத்தகப்பனார் ஒவ்வொரு நாளில் ஒவ்வொரு பாசுரத்தின் விசேஷத்தை யெடுத்துரைக்கிற முறையிலே இப்பாசுரத்தின் அர்த்தத்தையும் மிக்க இளமையிலேயே நெஞ்சிற்பதியவைத்தருளினர். அதை அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் அடியேன் ஸ்வாநுபவத்திலே காணும் விதம் *நெஞ்சால் நினைப்பரிதால்* என்னுமித்தனை.



ஸ்ரீமான். திவான்பஹதூர்.
S. ஆராவமுதய்யங்கார். ஹைதராபாத்.

---

40. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமம்—உரையுடன். ஸ்ரீபராசரபட்டாருளிச் செய்த பகவத் குண தர்ப்பணமெனனும் பாஷ்யத்தைத் தழுவி ஸாரஸம்க்ஷேபமாக எழுதப்பட்டது இவ்வுரை. ஒவ்வொரு திருநாமத்தின் தாற்பரியத்தையும் தெளிவாகத் தெரிந்துகொள்ள உதவுமிது. 1—0—0.



ஸ்ரீ:

## தானேயெழுதிய தன் சரிதை—நான்காம் பகுதியின்

தொடர்ச்சி.

ஒரு குறிப்பு ;—இனிமேல் இச்சரிதையில் சேர்க்கப்படும் திருவுருவப்படங்கள் பெரும்பாலும் என்னுடைய சரிதையில் ஸம்பந்தப் படாதவையாகும். எனக்கு மிகவும் ஆப்தர்கள் என்றும், உலகுக்கே கௌரவிக்கத் தக்கவர்கள் என்றும் இப்படிப்பட்ட காரண விசேஷங்களினல் இனி வெளியிடப்படும் உருவப்படங்களை அன்பர்கள் கண்டுகளிப்பது. சுருக்கமான குறிப்புகள் தருவேன்.

### ஸ்ரீமதுபயவே. வித்வான். காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியின் காலக்ஷேபகோஷ்டி



1. ஸ்ரீ. உவே. வேளுக்குடி. K. வரதாசாரியர்.
2. ,, பிள்ளை லோகம். பாஷ்யகாராசாரியர்.
3. ,, காரப்பங்காடு. (தேசி.) ஸ்ரீரங்கராஜாசார்யர்.
4. ,, தி. அ. சதாபிஷேகம். கோவிந்தநரஸிம்ஹாசாரியர்.

---

## அடியேனுடைய க்ரந்தரசனைகள்

அடியேன் இயற்றிய நூல்களைப்பற்றிக் கீழ்ப்பகுதிகளில் ஆங்காங்கு எழுதியிருந்தாலும், இப்போது அவற்றைப்பற்றி ஒன்றும் விடாமல் பூர்த்தியாகவும் சிறிது விரிவாகவும் எழுத விரும்புகிறேன். அடியேனுடைய வாழ்க்கையில், வடமொழி தென்மொழி தெலுங்கு ஹிந்தி ஆகிய நான்கு பாஷைகளிலும் உபந்யாஸங்கள் செய்துவருவது தவிர பல நூறு நூல்களை யெழுதி வெளியிடும் பாக்கியம்

விசேஷமாகக் கிடைத்துள்ளது. பதினெட்டு இருபது வயது வரையில் ஸம்ஸ்க்ருதத்தில் தான் விசேஷமாக எழுதிக்கொண்டிருந்தேன். இருபதாவது வயதிலிருந்து தமிழிலும் எழுத ஆரம்பித்தேன். நாற்பதாவது வயதிலிருந்து தெலுங்கிலும் ஹிந்தியிலும் எழுதத்தொடங்கினேன். திருத்தகப்பனாருடைய அதிமாநுஷக்ருத்யங்களினாலும் அபரிமிதக்ருபையினாலும் அடியேனுக்கு வடமொழிப் பயிற்சியும் அந்த பாஷையில் விச்ருங்கலமாக எழுதும் பெற்றியும் பத்து வயதுக்குள்ளாகவே உண்டாயிற்றென்பதை என்னுடைய ஹர்ஷப்ரகர்ஷத்தினால் மீண்டும் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். ஸம்ஸ்க்ருதபாஷையில் தாராளமாகப் பேசவும் எழுதவும் எனக்கு சக்தியில்லாத காலம் என்னுடைய நினைவுக்கு வரவில்லை. இதற்குரிய திருத்தகப்பனாரின் க்ருஷி அபரிமிதமாக இருந்தது.

திருப்பதியில் ஜ்ஞாநாநுஷ்டாந நிதியான ஸ்ரீமத் கிடாம்பி அப்பாஸ்வாமி யென்று ஒருமஹான் எழுந்தருளியிருந்தார். அவர் ஸ்ரீ காதிஸ்வாமிக்கு அம்மான் முறையில் சேர்ந்தவர். அதனால் அடிக்கடி காஞ்சிக்கெழுந்தருள்வர். திருத்தகப்பனாருக்குப் பரமஸ்நிக்தராகையாலே அஸ்மத் க்ருஹத்திலும் அடிக்கடி ஸேவை ஸாதிப்பர். அப்போது அந்த ஸ்வாமி அநுக்ரஹிக்கிற வழக்கம்—"அண்ணா! நீ ரங்கஸாமிக்குப் புத்ரனாகவும் அழகிய மணவாள ஜீயர்ஸ்வாமிக்கு தௌஹித்ரனாகவும் ஜனிக்கப்பெற்றதுண்டே, இதுதான் உனக்குப் பெரிய பாக்யம்; இந்த ஜன்மத்தில் வாசித்து உனக்கு வரவேண்டியது ஒன்றிருப்பதாக நான் நினைக்கவில்லை" என்று.

அது நிற்க. திருத்தகப்பனார் அமரம், சப்தமஞ்ஜரி, தாதுபாடம், ஸ்ரீராமாயண ஸங்க்ரஹம் இவற்றைப் பாடஞ்சொல்லிக் கற்பிக்கிறவிதம் உலகில் எங்கும் காணமுடியாதென்றே சொல்லுவேன். பண்டிதர்களென்று அவரிடம் யாராவது வந்துவிட்டால் அவர்களை உமக்கு அமரம் தெரியுமா? சப்தமஞ்ஜரி தெரியுமா? தாதுமாலிகை தெரியுமா?" என்றே முன்னம் கேட்பர். என்ன! இப்படி கேட்கிறாரேயென்று அவரவர்கள் வருந்துவர்கள். பல பேர்கள் அமரம் தெரியாதென்பர்கள். உடனே 'அமரம் தெரியாதவன் மரம்' என்று ஸாதிப்பர். எப்படிப்பட்ட பண்டிதரும் சப்தமஞ்ஜரியிலும் தாதுபாடத்திலும் திருத்தகப்பனாருடைய ஒரு கேள்விக்குக் கூட நேரான விடை கூறமாட்டார். சப்தமஞ்ஜரியில் ம்ருது சப்தம், சுசி சப்தம், கர்த்ரு சப்தம் இவற்றுக்குப் பும்லிங்க ஸ்த்ரீ லிங்க ரூபங்களைக் காட்டாமல் நபும்ஸக ரூபத்தைமட்டும் காட்டியிருக்கிறதே; ஏன்? அந்த சப்தங்கள் நபும்ஸக லிங்கத்தில் மட்டுந்தானுண்டோ? என்று திருத்தகப்பனார் கேட்பர். வியாகரணத்தை நன்றாக வாசித்திருக்கிறேனென்பவர்களுங்கூட இதற்கு பதில் சொல்லமாட்டாமல் திகைத்து நிற்பர்கள். தாது பாடத்தில் கேட்டாலோ வாயைத்திறக்கவே மாட்டார்கள். ஐம்பத்தைந்து வருஷங்களுக்கு முற்பட்ட செய்தியை இப்போதெழுதினபடி.

இக்காலத்தில் சிரோமணிகளென்றும் வித்வான்களென்றும் ப்ரவீணர்களென்றும் ப்ரஸித்திபெற்றிருப்பவர்களுங்கூட அப்படிப்பட்ட வினாக்களுக்கு விடையிறுக்கமாட்டாதவர்கள் பலர் காணப்படுகிறார்கள். திருத்தகப்பனார் வித்யார்த்திகளாயிருப்பவர்களை ஒன்றும் கேட்கமாட்டார். பண்டிதரென்று வருபவர்களைத் திக்கு முக்கலாடும்படி கேள்விகள் கேட்பர். பிச்சியெடுத்துவிடுவர். பல பண்டிதர்கள் அணுகுவதற்கும் அஞ்சி விலகிச் சென்றுவிடுவர்கள். பல பண்டிதர்கள் அவருடைய கேள்விகளைப் புரிந்துகொள்ளவே மாட்டாமல் திகைத்து நிற்பர்கள். சில பண்டிதர்களைப் பரீக்ஷித்துப்பார்த்து 'இவர்களே உண்மையான பண்டிதர்கள்' என்று ப்ரசம்ஸித்து அவர்களிடத்திலே அதிமாத்ரம் கௌரவம் காட்டியிருப்பர். அன்றியும் அவர்களை ஸ்ரீ காதிஸ்வாமியிடம் அழைத்துச்சென்று தகுந்த ஸத்காரமும் செய்விப்பர்,

இவ்வண்ணமாகத் திருத்தகப்பனார் பண்டிதர்களைக் கேள்விகள் கேட்பதும் அவர்களுக்கு மருமங்களைத் தெரிவிப்பதுமான செய்திகள் அடியேனுக்கு ஏழாவது பிராயத்திலிருந்தே நன்கு தெரியும். ஒரு க்ஷணகாலமும் தம்மைவிட்டுப் பிரியாதபடி அடியேனை அநவரதமும் கூடவே வைத்துக்கொண்டிருப்பராதலால் அவரிடத்தில் பண்டிதர்கள் படும்பாடுகளை யெல்லாம் நன்கறிவேன். இவர்கள் பேசிக்கொள்ளுகிற விஷயம் இன்னதென்று புரிந்துகொள்ளவும் அடியேன் அப்போது சக்தியற்றவன். ஆனாலும் அவ்விஷயங்களை யெல்லாம் ஒரு தடவைக்குப் பல தடவையாக அடியேனும் தெரிந்துகொள்ளும்படி விவரித்துக்காட்டி என்வாயினால் அநுவாதமும் செய்வித்தருள்வர். திருவாய்மொழியில் * பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட * என்றவிடத்து ஈட்டில் ஓர் ஐதிஹ்யமுள்ளது. அதன்படி இந்தப் பாசுரத்தைத்தான் அடியேன் ஸதாஸர்வதா திருத்தகப்பனார் திறத்தில் அநுஸந்தித்திருப்பது. அடியேனுடைய பதினான்காவது பிராயத்திலேயே திருத்தமப்பனார் திருநாட்டுக் கெழுந்தருளினாலும் அப்போதே அவர் அடியேனுடைய க்ரந்த ரசனைகளை விசேஷமாகக் கடாக்ஷித்தருளப்ராப்தமாயிற்று.

அக்காலத்தில் காஞ்சியிலும் காஞ்சீப்ராந்தங்களிலும் யார் பரமபதித்தாலும் திருத்தகப்பனாரே சரமச்லோகமியற்றிக் கொடுப்பது. தாமல் என்னுமக்ரஹாரத்திலிருந்து ஒருவர் அங்கே ஒரு பெரியவர் பரமபதித்ததைச் சொல்லித் திதிவார நக்ஷத்ராதிகளைக குறித்துக் கொண்டுவந்தார்; அப்போது திருத்தகப்பனார் திருமேனி பாங்கில்லாமல் உள்ளே சயனித்திருந்தபடியால், வந்தவர் அந்த குறிப்புச் சீட்டை என்னிடம் கொடுத்து 'இதை அப்பாவிடம் கொடுத்தால் ச்லோகம் எழுதிக் கொடுப்பர், அதை நீ வாங்கி வைத்திரு; அதை நான் பிறகு வந்து பெற்றுக் கொண்டு போகிறேன்' என்று சொல்லிப் போனார். இதை நான் திருத்தகப்பனாரிடம் தெரிவியாமலே நானே இரண்டு ச்லோகங்களை எழுதி வைத்திருந்து, அந்த தாமல் ஸ்வாமி வந்து கேட்டபோது அதை அவரிடம் கொடுத்து விட்டேன். அவரும் பெற்றுக்கொண்டு போய்விட்டார். இச்செய்தியை பிறகும் நான் திருத்தகப்பனாரிடத்தில் தெரிவித்திலேன். சிலநாள் பொறுத்து அந்த தாமல் ஸ்வாமி சரமச்லோக ஸம்பாவனை யென்று ஒரு ரூபாய் கொணர்ந்து திருத்தகப்பனாரிடம் கொடுக்க வந்தார். இவரோ இதைப்பற்றி எனக் கொன்றும் தெரியாதே யென்கிறார். பிறகு விசாரிக்கப் படுகையில் விஷயம் வெளியாயிற்று. திருத்தகப்பனார் விக்கிவிக்கி யழுகிறார். அருகேயிருந்த பிதாமஹி 'என்ன ரங்கஸாமீ! என்ன ரங்கஸாமீ!' என்று கேட்டுக்கொண்டே அவளும் அழுகிறாள். 'இந்த பையனுடைய துண்டைத் தனத்தைப் பார்த்தாயா' என்று சொல்லி மேன்மேலு மழுகிறாரானந்தம் பொங்கி. இப்போதும் அடியேன் சரம ச்லோக மியற்ற நேரும் போதெல்லாம் அந்த ச்லோகத்தின் முதல்பாதம் நினைவுக்கு வந்தே தீரும்—“அப்தே சார்வரி நாமகே திநமணௌ யாதே துலாம் பாண்டரே” என்று. விக்ருதி வருஷத்திற் பிறந்தவடியேனுக்கு சார்வரி வருடத்தில் என்ன வயதென்பதை யாவருமறிவர். இப்போது இதை அடியேனும் ஆனந்தம் பொங்கியே யெழுதுகின்றேன். அஹம்பாவத்தாலன்று, அபத்தமாகவுமன்று.

சார்வரி வருடத்திற்குப்பிறகு க்ரோதி வருஷத்தின் முடிவில் திருத்தகப்பனார் திருநாடலங்கரித்தார். அந்த இடைக்காலத்தில் தேவப்பெருமாள் பெருந்தேவித் தாயார் விஷயமாகவும் திருவேங்கட முடையான் விஷயமாகவும் ரங்கநாதன் விஷயமாகவும் மற்றும் பல விஷயமாகவும் எத்தனையோ ஸ்துதிகள் எழுதினேன். அந்த காலத்தில் ஸ்ரீகாதி ஸ்வாமி ஸுதர்சன அச்சுக்கூடம் ஆரம்பித்திருந்தபடியால் அவரிடம் கொண்டுபோய்க் காண்பித்து 'இதை அச்சுபோட்டுக் கொடுமே' என்று பயமறியாமல் சொல்லுவேன்; ஸ்வாமியும் வாசித்துப் பார்த்து ஆனந்தப்பட்டு உடனே அச்சிட்டுக் கொடுக்க நியமிப்பர். ஒரு ஸம்வத்ஸரம் தீபாவளியன்று

ஸ்ரீகாதி ஸ்வாமி என்னை வரவழைத்து "பட்டாஸ் வாங்கிக்கொள்ள அப்பா ஏதாவது காசு கொடுத்தாரா? என்ன கொடுத்தார்?" என்று கேட்டார். "நித்யப்படி திருவாராதனத்திற்கே ச்ரமமாக இருக்கையில் எனக்குப் பட்டாஸ் வாங்க என்ன கொடுப்பர்? என்றேன். உடனே ஏதோ கொடுப்பதற்காக எழுந்தார். அப்போது "எனக்குப் பட்டாஸ் வாங்கப் பணம் கொடுப்பது இருக்கட்டும்; நானெழுதுகிற நூல்கள் உமக்குப் பிடித்தால் அச்சுபோட்டுக் கொடுமே" என்றேன். [அப்போது, தேவரீருக்கு என்னவும் ஸ்வாமிக்கு என்னவும் தெரியாது. நீர் என்றும், உமக்கு என்றுமே சொல்லுகிற பேதைமை.] அப்படி அடியேன் விஜ்ஞாபித்ததற்கு ஸ்ரீஸ்வாமி போரவுகந்தருளி, பிரஸ்மானேஜரை யழைத்து 'இவன் எது எழுதிக் கொடுத்தாலும் அச்சிட்டுக் கொடு' என்று நியமித்தருளினர். இப்படிப்பட்ட செய்திகள் நூற்றுக்கணக்கில் நினைவுக்கு வருகின்றன. எவ்வளவென்றெழுதுவேன்? இவற்றில் வெறுப்புக்கொள்வார் பலர்; உகப்புக் கொள்வார் மிகச் சிலர், அன்னருடைய த்ருப்திக்காக ஸ்வல்பமே யெழுதுகிறேன்.

அப்போது ஸ்ரீஸ்வாமி ஆரம்பித்திருந்த மஞ்ஜு பாஷிணியிலும் அவற்றை வெளியிடுவித்திருக்கிறார். அக்காலத்தில் எனக்கு மஹாசாந்த: என்று ஒரு மறை பெயர் கொடுக்கப்பட்டிருந்தது. அது எதற்காக வென்பதுபற்றி இங்கு விவரிக்க விருப்பமில்லை. அப்போது அந்தப் பெயரினால் தான் என்னுடைய வியாஸங்களெல்லாம் மஞ்ஜுபாஷிணியில் மட்டுமன்றிக்கே ஸம்ஸ்க்ருத சந்த்ரிகா, ஸஹ்ருதவாதிநீ. மித்ர கோஷ்டி, விஜ்ஞாநசிந்தாமணி முதலிய ஸம்ஸ்க்ருத பத்ரிகைகளில் வெளியிடப்பட்டு வந்தன. இவ்விஷய மறிந்த என்னுடைய ஸஹபாடிகளில் இப்போது ஒருவரே யுள்ளார்—ஸ்ரீகாஞ்சீ ஸன்னிதி வீதியில் ஸ்ரீஉவே. சாமா. (ராஜாளி) ராஜகோபாலதாதாசார்ய ரென்பவர். இவர் நாளைக்கும் "மஹாசாந்தரே! ஸௌக்கியமா?" என்றுதான் வினவுவது வழக்கம். இவர் இளமையில் சிலவாண்டுகள் ஸ்ரீகாதிஸ்வாமி திருமாளிகையில் பகலுமிரவும் என்னோடு கூடவே யிருந்தவர். அப்போது ஸ்ரீஸ்வாமி வடதேச ஸஞ்சாரமாக எழுந்தருள நேர்ந்ததால், நாலைந்து மாதங்களுக்கு இதர ஸஹாய மில்லாமல் நானே மஞ்ஜுபாஷிணீ ஸம்பாதகனாக இருந்து வரும்படி நியமித்துவிட்டு எழுந்தருளினரென்பதையும் [ருக்ண சய்யாசயாநரான] திருத்தகப்பனார் கேள்விப்பட்டு "இந்த பையன் தீர்க்காயுஸ்ஸாக இராது போலிருக்கிறதே!" என்று தம் திருத்தாயாரிடம் [என் பிதாமஹியிடம்] அடிக்கடி சொல்லிச் சொல்லி யழுவர்.

பதினான்கு பிராயத்துக்குள்ளேயே அடியேன் பத்ய நூல்களும் கத்ய நூல்களும் கத்ய பத்ய நூல்களும் பல பல எழுதியாயிற்று. எந்த பண்டிதரும் அவற்றில் குற்றங் குறைகள் கூற இடமில்லாமல்தானிருக்கும். அடியேனுடைய நாற்பது வயதுக்குப் பிறகுதான் சிலர் அடியேனுடைய க்ருதிகளில் குற்றங் குறைகள் கூறத் தொடங்கினார்கள். அன்னவர்களத்தனை பேரும் உடனுக்குடனே பங்கப்பட்டவர்களே யல்லது ஒருவரும் தம் முயற்சி நிறைவேறப் பெற்றதில்லை. இதற்காக அடியேன் திருத்தகப்பனாருடைய விலக்ஷண க்ருபையையும் விஜாதீய க்ருஷியையுமே அடிக்கடி நினைப்பது. மாத்வர்களான ராம சந்த்ராசார், வித்யாசார் என்னுமிருவருடைய அநுக்ரஹமும் அப்ரதிமமானதென்று ஸ்மரிப்பதுண்டு.

புனப்ராந்தத்தில் கொல்ஹாபூர் என்பது ஒரு பெரிய நகரம். அதன் ஸமீபத்திலுள்ள வாயி யென்னும் க்ஷேத்திரத்தில் "அப்பா சர்ம வித்யாவாசஸ்பதி" என்று மஹாராஷ்ட்ர ப்ராஹ்மணரான ஒரு பெரிய வித்வான் இருந்தார். அவருடைய ஸம்ஸ்க்ருத பாண்டித்யமும் ஸம்ஸ்க்ருதவ்யாஸங்களெழுதுகிற சாதுர்யமும் ஆச்சரியமானது. எழுத்தில் வல்லவர் அவரைப் போன்றவர் என்னுடைய புத்திக் கெட்டினவரையில் இன்றளவும் ஒருவரும் ஸ்புரிக்க



செங்கற்பட்டு ஸ்ரீமதுபயவே. ஜி. க்ருஷ்ணமாசார்ய (அட்வகேட்) ஸ்வாமியின் திருத்தாயார் திருவத்யயனத்தன்று கோஷ்டி.



ஸ்ரீவைஷ்ணவ வுலகில் ப்ரக்க்யாத சிஷ்யஸம்பத்தியையுடைய ஸ்ரீமத் உவே. முதலியாண்டான் ஸ்வாமிகள் இருவர்.

வில்லை. அவர் ஸம்ஸ்க்ருத சந்த்ரிகா என்கிற மாஸிகபத்ரிகையை நெடுநாள் நடத்தி வந்தார். அது சிறு புஸ்தகாகாரமானது. அதை நிறுத்தி 'ஸம்ஸ்க்ருத வாதிநீ' என்கிற பெயரால் சுதேசமித்திரன் உருவத்தில் நான்கு பக்கங் கொண்டதாய் வாரந்தோறும் நடத்திவந்தார். ஸ்ரீகாதிஸ்வாமி சிஷ்யாநுக்ரஹார்த்தமாகப் புனநகரத்தி லெழுந்தருளியிருக்கையில் இந்த அப்பா சர்மா ஸ்ரீஸ்வாமியை ஸந்தித்து வார்த்தையாடுகையில் "இப்போது உங்களுடைய மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் வெளிவருகிற வியாஸங்கள் யாருடையவை?" என்று கேட்க, ஸ்ரீஸ்வாமி அடியேனைப்பற்றித் தெரிவிக்க, அவர் "என்னுடைய பத்ரிகைக்கும் வியாஸங்களெழுதியனுப்ப ஏற்பாடு செய்ய வேணும்" என்று அபேக்ஷித்தாராம். அதற்கு ஸ்ரீ ஸ்வாமி "அவன் வித்யார்த்தி தசையில் இருப்பவனாதலால் அவனுக்கு அதிக அவகாசம் கிடையாது" என்று ஸாதித்தாராம்; அது கேட்ட அந்த வித்யா வாசஸ்பதி "இந்த வியாஸங்களை வித்யார்த்தியா எழுதுகிறார்? அவருக்கு என்னவயது இருக்கும்?" என்று விசாரித்து பதில் தெரிந்து கொண்டு என்னோடு நேராகப் பத்ரவ்யவஹாரங்கள் செய்யத் தொடங்கினார். எம்மிருவர்க்கும் அபரிமிதமான ஸ்நேஹம் வெகு விரைவில் உண்டாயிற்று. நேராகக் காஞ்சீபுரத்திற்கும் வந்து விட்டார். வெகு விலக்ஷணமான திவ்ய தேஹம். தேசாசாரப்படி வெகு மநோஹரமான பட்டுத்தலைப்பாகை. ஆச்சரியமான ஸம்ஸ்க்ருதப் பேச்சு. அவர் அடுத்த வருடத்தில் ப்ளேக் என்கிற நோயிலகப்பட்டு ஒரு நாழிகையில் கீர்த்தி சேஷராக ஆய்விட்டார். இந்த

துக்கத்தை அடியேன் இன்னமும் மறக்க முடிகிறதில்லை. அடிக்கடி ஸ்மரித்து வருந்துவதுண்டு. அவருடைய நூற்றுக் கணக்கான ப்ரேமலேகங்களைப் பல காலம் வரையில் ரக்ஷித்து வைத்துக் கொண்டிருந்து அடிக்கடி வாசித்து மகிழ்ந்து வந்தேன். அவர் தம்முடைய பத்ரிகைக்கு என்னை ஸஹகாரி ஸம்பாதகனாகக் கொண்டு வாரந்தோறும் வியாஸங்களை வரவழைத்து ப்ரசுரம் செய்வித்து வந்தார். அப்படி ஒரு ஸம்வத்ஸரம் நடைபெற்றது.

மலைநாட்டில் வித்துவக்கோடு திவ்ய தேசத்திற்கு ஸ்டேஷனாகிய பட்டாம்பிக்கு மிக அருகில் பெருமுடியூர் எனபது ஓர் ஊர். அவ்விடத்தில் புன்னச்சேரி நம்பி நீலகண்ட சர்மா என்பவர் சிறந்த பண்டிதர். ஜ்யோதிஷம் ஆயுர்வேதம் முதலிய கலைகளிலும் வல்லவர். நித்யப்ரஹ்மசாரி. அவர் விஜ்ஞாநசிந்தாமணியென்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையை நெடுங்காலம் நடத்தி வந்தவர். திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருந்த ஸ்ரீ மதுபயவே. அத்தங்கி கவிபூஷண ஸ்வாமிக்கு அவர் பரமாப்தராகையாலே ஒரு ஸமயம் அந்த ஸ்வாமியிடம் வந்திருக்கையில், அந்த ஸ்வாமி அடியேனைப்பற்றி ப்ரஸ்தாவித்து "இன்னானுடைய வியாஸங்களையும் வரவழைத்து உமது பத்ரிகையில் பிரசுரிப்பது நலம்" என்று தெரிவித்தாராம். அதிலிருந்து அவருடைய ஸ்நேஹமும் ப்ரபலமாகவுண்டாகி அவரது பத்ரிகைக்கும் வியாஸங்களெழுதியனுப்பிக் கொண்டிருக்க நேர்ந்தது. அவருடைய ஸ்நேஹ பலமாகவே மலையாள லிபியிலும் அப்போது பரிசயமேற்பட்டது. இரண்டு மூன்று தடவை அவருடைய இருப்பிடத்திற்கும் சென்று வந்தேன். அவரும் கீர்த்தி சேஷராகி வெகுகாலமாய் விட்டது. அவருடைய வித்யார்த்திகளில் கே வாஸுதேவசர்மா என்பவரோடு அதிக ஸ்நேஹமுண்டாகி விசேஷமான பத்ரவ்யவஹார மேற்பட்டிருந்தது. அவர் ஜீவித்திருக்கிறார் திருச்சூரில்.

இந்த ப்ரணாளியில் நினைவுக்கு வருகிற மற்றொரு சோசநீயமான விஷயத்தையும் தெரிவித்து நிற்கிறேன். ஸ்ரீ வில்லிபுத்தூரில் மஹா சிஷ்டாக்ரகண்யராக விளங்கின ஸ்ரீமத். சிறுபுலியூர் பெரியஸ்வாமியைப்பற்றிக் கேள்விப்படாதவர்கள் இருக்கமாட்டார்கள். அந்த ஸ்வாமியை நேரில் ஸேவித்தவர்களும் இற்றைக்கும் பலருள்ளார்கள். அடியேனும் ஸேவிக்கப் பெற்றவனே. அந்த ஸ்வாமிக்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்த திருக்குமாரர் திருத்தகப்பனாரை விட்டுப் பிரியாதவராய் நெருப்பையுமலம்புகிறவர் என்று ப்ரஸித்தராய் வித்வத் வரிஷ்டராயெழுந்தருளியிருந்தார். இளைய திருக்குமாரர் ஸ்ரீ தொட்டயாசார்யஸ்வாமியென்று திருநாமம் பூண்டவர் ஸ்ரீ பெரும்பூதூரில் வந்திருந்து வாசித்து ஸாஹித்ய வியாகரணங்களில் உத்தீர்ணராய் ஸம்ஸ்க்ருத லேகனத்தில் நல்ல விரகராய் எழுந்தருளியிருந்தார். அவர் 'விசக்ஷண' என்றொரு ஸம்ஸ்கிருத பத்ரிகை நடத்த ஆரம்பித்துச் சில ஸஞ்சிகைகளையே வெளியிட்டார். அவர்க்குக் காஞ்சியில் ஸந்நிதி வீதியில் ச்வசுரக்ருஹமாகையாலே அடிக்கடி இங்கெழுந்தருள நேரும். அவர் என்னைக் கண்டாலும் காணுக்கண்ணிட்டுப் பரத்வங் கொண்டாடியிருந்து வந்தார். அவருடைய விசக்ஷண பத்திரிகையில் சில குற்றங்குறைகளை நிரூபித்து மஞ்ஜுபாஷிணியில் ஒரு பெரிய வியாஸம் வெளியிட்டு விட்டேன்; அதனால் அவர்க்குக் கோபமும் தாபமு முண்டாக வேண்டியிருந்தும் அவை சிறிதுமுண்டாகாமல் பரமப்ரீதியே தோன்றியது. பிறகு அவரோடு அதிமாத்ரமான ஸ்நேஹமுண்டாகி அவருடைய பத்ரிகைக்கும் விஷயதானம் செய்வதாக இசைந்து அனேக வியாஸங்களை யெழுதிக் கொடுத்தேன். தைவதுர்விபாகத்தினால் அந்த ஸ்வாமி மிக்க இளமையிலேயே காஞ்சியிலேயே திருநாட்டுக் கெழுந்தருளினர். அன்று ஸ்ரீமந் நாதமுனிகளின் சாத்துமுறை. நம்மாழ்வார் ஸந்நிதிக்குத் தேவப்பெருமாளெழுந்தருளி கோஷ்டி நடந்து கொண்டிருக்கையில் அங்கிருந்த அடியேனுக்கு சரமஸந்தேசம் சொல்லியனுப்பினர். உடனே ஓடிச் சென்று வார்த்

தையாடிக் கொண்டே யிருக்கையில் 'ஊருக்குப் போய்வருகிறேன்' என்று சொல்லுபவர் போல போய்வருகிறேனென்று சொல்லிக் கொண்டே வைகுண்ட யாத்திரை புறப்பட்டு விட்டார். அந்த ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் நேர்ந்த பத்ரவ்யவஹாரங்களும் அபரிமிதங்கள். இப்போது ஸேவை ஸாதித்தருளா நின்ற [சிறுபுலியூர் ஸ்வாமி யென்று ப்ரஸித்தரான] அவருடைய திருப்பேரனார் அடியேனைக் காண்கிறபோ தெல்லாம் "தேவரீர் நம் தாதாவுக்கு எழுதிய ஸம் ஸ்க்ருத கடிதங்களை இன்னமும் திருமாளிகையில் வைத்து அடிக்கடி கண்டு கொண்டிருக்கிறோம்" என்று ஸாதிப்பர். இப்படி நூற்றுக்கணக்கான மஹான் களின் பரிசயம்–ஸௌஹார்தம்—பரமக்ருபை அடியேனுக்கு இளமையிலேயே ஏற்பட்ட பாக்யத்தையும் எழுதி முடியாது; அவர்களை யெல்லாம் பெரும்பாலு மிழந்த தௌர்ப்பாக்யத்தையு மெழுதி முடியாது. அப்போதே நாற்றிசையிலும் நல்லாரோடு விளைந்த நட்புச் செல்வம் இன்றளவும் அநுவர்த்தித்தே வரு கின்றது. இவையெல்லாம் பதினெட்டு வயதுக்கு உட்பட்ட செய்திகள். ப்ரா ஸங்கிகமான விவை நிற்க.

மிக்க இளமையில் எழுதியும் அச்சிட்டும் போந்த நூல்களில் ஒன்றுகூட ஸுரக்ஷிதமாக இல்லாமையினாலே அவை அஸத்கல்பமாய்ப் போயின. அடியேன் க்ருஹஸ்தனாகி ஆங்காங்கு ஸஞ்சரித்து உபந்யாஸங்கள் செய்யத் தலைப்பட்டபின்பு சில கனதனவான்கள் பல துறைகளிலும் க்ரந்தங்களை யெழுத அடியேனை உத் ஸாஹப்படுத்தியதனாலும், அவற்றைத் தாங்களே அச்சிட்டு வெளியிடுவதாகவும் அங்கீகரித்தபடியாலும் *விமசத்யப்தே விச்ருத நாநாவித வித்ய:* என்று தேசிகன் ஒரு ச்லோகத்தில் குறிப்பிட்ட காலமாகிய இருபதாம் வயது முதலாக உலகுக்கு உப காரமாம்படி பலநூல்களைப் பல துறைகளில் எழுதத் தொடங்கினேன். ஒவ்வொரு நாளும் புல்ஸ்கேப் காகிதத்தில் ஐம்பது ஷீட், எண்பது ஷீட் என்றிப்படி யெழுது வேன். எழுதுவதில் அடித்தெழுதுவதென்பது இளமையிலிருந்தே கிடையாது. தபால்கட்டு கட்டுகிற ஸமயம் வரை எழுதுவதும், எழுதியனவையில் உடனே புக்போஸ்டு கட்டி அச்சுக்கூடங்களுக்கு அனுப்புவதும் அனுப்பப்பட்டவை மூன்றா நாளே அச்சாகி வருவதுமான வழக்கமே தொடர்ச்சியாக வந்து கொண்டிருக் கிறது. ஐம்பது பக்கங்களுக்குக் குறைவாக எழுதின நாளே என் நினைவுக்கு வர வில்லை. வெளியூர்களுக்குப் போக நேர்ந்தாலும் ஆங்காங்கும் எனக்கு எழுதுகிற காரியமே யொழிய வேறு கிடையாது. இடையூறின்றி எழுதுவதற்கென்றே வெளியூர் போவது முண்டு. ஸ்வஸ்தானத்திற் காட்டிலும் பரஸ்தலங்களில் தான் அடியேனுக்கு எழுதுகிற ஸௌகரியம் அபரிமிதம். எனது நூல்களில் பாதி பாகத்திற்குமேல் பரஸ்தலங்களில் எழுதப்பட்டவை யென்று சொல்லலாம். ரைலில் போக நேரும்போது ஒரு நிமிஷங்கூட வீணாகாதபடி நூற்றுக்கணக்கான பக்கங் களை யெழுதி முடிப்பேன்.

மூன்று தடவை பதரிகாச்ரம யாத்திரை செய்திருக்கிறேனென்றும், இருபது தடவைகளுக்குமேல் ஹரித்வார ஹ்ருஷீகேச பரியந்தமான யாத்திரைகள் செய் திருக்கிறேனென்றும் தெரிவித்திருக்கிறேன். வெகு ச்ரமமான அந்த யாத்திரை களிலும் விச்ராந்தி வேணுமென்று உள்ளம் நினையாது, உடல் விரும்பாது. எங்குத் தங்க நேர்ந்தாலும் பகவான் வெகு ஸௌகரியமான இடத்தையே காட்டிக் கொடுக்க ப்ராப்தமாகுமாதலால் தேவேந்த்ரபவனம் போன்ற அவ்விடங்களில் இருந்து கொண்டு ஊணு முறக்கமும் மறந்து எழுதினவையே பெரும்பாலுமடியேனுடைய நூல்கள். இப்போது இந்தத் தன் சரிதைப்பகுதியும் வெளிப்பயணத்தில்தான் எழுதப்பட்டு வருகிறது.

ரக்ஷிக்கப்படாமற்போன நூல்கள் போக, அச்சிட்டு வெளியிடப்பட்ட நூல்கள் [ஹேவிளம்பி௵ ஆனி மீ௳ புஷ்யம் 30—6—1957 வரையில்] 420 நானூற்

றிருபதென்று கணக்கெடுக்கப்பட்டிருக்கிறது. இவற்றுள் ஆயிரம் பக்கமுள்ள நூல்களுமுண்டு. 400, 500 பக்கமுள்ள நூல்களுமுண்டு; 100, 200 பக்கமுள்ளவையும் பல. பத்தெட்டு, 20, 30 பக்கமுள்ளவையும் சில. பூருவர்களின் திவ்ய க்ரந்தங்களைக் கணக்கிடும்போது ஸ்ரீபாஷ்யமும் ஒரு நூலாகும், ஸ்ரீரங்க கத்யமும் ஒரு நூலாகும். ஸித்தித்ரயமும் ஒரு நூலாகும், சதுச் ச்லோகியும் ஒரு நூலாகும். ஸஹஸ்ரநாம பாஷ்யமும் ஒரு நூலாகும், அஷ்டச்லோகியும் ஒரு நூலாகும். தத்வ முக்தா கலாபமும் ஒரு நூலாகும், ந்யாஸதசகமும் அல்லது வைராக்ய பஞ்சகமும் ஒரு நூலாகும். இந்த நிதர்சனங்களை இங்கு அடியேன் எடுத்துக்காட்டுவது எதற்காக வென்னில், வடமொழியிலும் தென்மொழியிலும் அடியேன் நூற்றுக் கணக்கான பக்கங்களிலும் ஆயிரக்கணக்கான பக்கங்களிலும் எழுதி வெளியிட்டுள்ள பலபல நூல்களை விட்டிட்டு, விஷயாநுரூபமாக அமைந்திருக்கின்ற சில சிறு நூல்களை மட்டும் காட்டிச் சிலர் "இவை அண்ணங்கராசாரியருடைய 420 க்ரந்தங்களிற் சேர்ந்தவை" என்று ஸாதிப்பதுண்டு. அது பரிஹாஸப் பேச்சாகவோ வேறு எவ்வகையான பேச்சாகவோ இருக்கட்டும். பவபூதி மஹாகவி உத்தர ராமசரித நாடகத்தில் "யதா ஸ்த்ரீணாம் ததா வாசாம்" என்று சொல்லியிருப்பது ப்ரஸித்தமானதே. இத்தனை நூல்கள் இயற்றவேணுமென்று அடியேன் ஸங்கல்பித்துக்கொண்டதுமில்லை; இத்தனை நூல்கள் எழுதிவிட்டோமென்று டம்பங்கொள்வதுமில்லை. ஆழ்வார் திருவாய்மொழியில் (7-9-9)* திறத்துக்கே துப்பரவாம் திருமால் * என்கிறார். அதற்கு என்ன பொருளென்பதை வியாக்கியானங்கள் கொண்டு அறிவது. அப்படிப்பட்ட ஸாமர்த்திய முடையனான பகவான் எலியெலும்பனான இச்சிறுவனைக் கொண்டு செய்வித்துக் கொண்ட—செய்வித்துக் கொள்ளுகின்ற காரியங்கள் அவன் திருவுள்ளத்திற்கு உகப்பானவை யாதலால், மனத்தை நடுநிலையில் வைத்திருக்கின்ற மஹான்கள் பலர் உகந்திருக்கின்றார்கள்.

வேதாந்த தேசிகனுடைய காலத்தில் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டு அதனை அவர் யதிராஜஸப்ததியில் ச்லோ. 43ல் அநுவதித்து ஸமாதானமும் கூறியுள்ளார். (அதாவது) *குமதிவிஹித க்ரந்த க்ரந்திப்ரபூத மதாந்தர க்ரஹிளமநஸ: பச்யந்த் வல்பாம் யதீச்வரபாரதீம் *—ஆதிசங்கராசாரியர் அநேக க்ரந்தங்கள் எழுதியிருப்பதையும், ஸ்வாமி யெம்பெருமானார் ஸ்வல்ப ஸங்க்யையான க்ரந்தங்களே அருளிச்செய்திருப்பதையு மெடுத்துக்கொண்டு சிலர் ஏதோ பேசினார்கள் போலும்; அதையநுவதித்து அதற்கு தேசிகன் ஸாதித்த ஸமாதான மென்னவென்றால்—* விகடமுரபித் வக்ஷ: பீடபரிஷ்கரணோசித: குலகிரிதுலாரோஹே பாவி கியாநிவ கௌஸ்துப:* என்பது. திராசின் ஒரு தட்டில் குலபர்வதங்களையும் மற்றொரு தட்டில் *குருமாமணிப்பூண் குலாவித் திகழும் திருமார்வு* என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடி எம்பெருமானுடைய திருமார்புக்கு அணி கலனான ஸ்ரீகௌஸ்துபமணியையும் வைத்து நிறுத்தால் கௌஸ்துபம் குறைவாகவே தோன்றும்; திராசுதட்டில் காணப்படுமதான இந்தக் குறைவினால் கௌஸ்துபமணியின் மஹிமைக்கு என்ன குறையென்றார். இப்படி எம்பெருமானார் போல்வாருடைய திவ்யக்ரந்தங்கள் எண்ணிக்கையில் குறைவாக இருந்தாலும் ஒரு குறையுமில்லை; அன்னாருடைய கோஷ்டியில் எடுத்துக் கழிக்கவும் தகுதியற்ற அடியேனைப்போன்ற புல்லறிவாளர்களின் சுவடிகள் நூற்றுக்கணக்கிலன்றிக்கே ஆயிரக்கணக்கிலமைந்தாலும் ஒரு நலனுமில்லையென்பது உண்மையுரை. ஆனால் நிகழ்ந்தவற்றைத் தெரிவிக்க வேண்டிய முறையில் இது தெரிவிக்கலாகிறதத்தனை.

ஸம்ஸ்க்ருதம் தமிழ் தெலுங்கு ஹிந்தி ஆகிய இந்நான்கு பாஷைகளிலும் இதுவரை அச்சாகி வெளிவந்திருக்கிற நூல்களை முன்னம் குறிப்பிட்டுவிட்டு, பின்னே அவற்றைப்பற்றின முக்கியமான விவரங்களை வரைந்திடுவேன். எந்த நூல் எந்த லிபியில் அச்சிடப்பட்டிருக்கிறதோ, அந்த நூலை அந்த லிபியிலேயே இதில் அச்சிடுவிக்கின்றேன்.

## அடியேனுடைய நூல்கள் பன்னிரண்டு துறைகளில் தோன்றியுள்ளன;

அவையான :—

1. பூர்வாசார்யர் பெருமையுரைத்தல்.
2. இதிஹாஸபுராணசரித்திரமுரைத்தல்.
3. உபந்யாஸகர்களுக்கு உதவியான உபந்யாஸங்கள் வரைதல்.
4. வேதாந்த விளக்க நூல்களிடுதல்.
5. திவ்யப்ரபந்தங்களுக்கு உரையிடுதல்.
6. ஆசாரியர்களின் தமிழ் நூல்களுக்கு உரையிடுதல்.
7. ரஹஸ்யார்த்தவிளக்க நூல்களிடுதல்
8. ஸ்தோத்ர நூல்களுக்கு உரையிடுதல்.
9. வேத லக்ஷண விசார நூல்களிடுதல்.
10. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்களிடுதல்.
11. லோகாபிராம நூல்களை யெழுதுதல்.
12. பரபக்ஷ ப்ரதிக்ஷேப நூல்களிடுதல்.

ஆக இப்பன்னிரண்டு துறைகளிலும் அமைந்திருக்கின்ற நமது நூல்கள் நாற்றிசையிலும் பரவியுள்ளன. இவற்றுள் பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்களைமட்டுமே நமது தேசஸ்தர்கள் பெரும்பான்மையாகப் பார்ப்பது வழக்கம். மற்ற பதினொரு துறைகளில் அமைந்துள்ள நூல்களில் இவர்களுடைய கடாக்ஷ பாதம் விசேஷமாக ஏற்படுவதில்லை. வாதவிவாத நூல்களைமட்டும் பார்த்துவிட்டு "வீணாக இவ்வளவு விவாத நூல்களை எதற்காக எழுதவேண்டும்?" என்று சொல்லுபவர்கள் சிலரோ பலரோவுள்ளார்கள். ஒவ்வொரு விவாத நூலும் தோன்ற வேண்டிய காரணத்தை மேலே க்ரமேண விவரிக்கப் போகிறோமாதலால் அதனால் விவேகிகளுக்குப் பரம த்ருப்தி விளைந்தே தீரும். ஸ்ரீராமபிரானைப்பற்றி யருளிச்செய்கிற நம்மாழ்வார் திருவாய்மொழியில் "வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதகமணித்தடம்" என்றார். கண்ணனைப்பற்றி யருளிச்செய்கிற பெரியாழ்வார் "தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப் பூடுகளடங்கவுழக்கி" என்றார். இவற்றைக் கொண்டு ஸ்ரீராமனையும் ஸ்ரீக்ருஷ்ணனையும் வீண்வம்புச் சண்டைக்காரர்களென்று யாரும் சொல்லுவதில்லை. தாமாகவே மடிந்து போக வந்து சேருகிற விரோதி வர்க்கங்களைக் களைந்தொழிக்க வேண்டுவது கடமையாகிறதன்றோ.

அடியேனுடைய வாழ்க்கையில் எவ்வெவ்விதமாக எத்தனை விவாதங்கள் நேர்பட்டனவென்பதை அறிந்திருப்பவர்கள் பலருளரெனினும் அவர்கள் கால விப்ரகர்ஷத்தாலே அவற்றை மறந்தேயிருப்பார்கள். அடியேனும் மறந்து போயிருக்கிறேன். வெளியிட்ட நூல்களை யெடுத்துப் பார்க்கும்போதுதான் ஒவ்வொன்றும் நினைவுக்கு வருகின்றது. 21—5—1938-ல் வித்வத்விநோதினியென்று ஒரு புத்தகம் வெளியிட்டிருந்தேன். அதை இன்று எடுத்துப் படித்தபோது உண்மையில் அடியேனுக்கே விஸ்மயமுண்டாயிற்று-இவ்வளவு விசேஷங்களா நடந்திருக்கின்றனவென்று அபூர்வ விஷய விஜ்ஞானத்திற்போல் வியந்தேன். அந்த வித்வத்விநோதினியை இங்கு ஸம்க்ஷேபமாக வெளியிடுகிறேன்-இதைக்கொண்டு பல விஷயங்களை அவரவர்கள் அறிந்து கொள்ளலாமன்றோ; இதை அவசியம் வாசித்துப் பார்க்கவேணுமென்று நாம் வேண்டுவது மிகையே.

### "வித்வத்விநோதிநீ. 21—5—1938"

(ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர்.)

பண்டிதர்களின் பாதகமலங்களில் நீசனேன் நிறையொன்றுமிலேன் செய்யும் விண்ணப்பம். பேரருளாளனுடைய வைகாசித் திருநன்னாளில் அடியேனுக்கும் அடியேனுடைய க்ரந்தங்களுக்கும் விசேஷமான ப்ரஸித்தியை விளைக்கும் விஷயத்தில் அநேக ஸம்வத்ஸரமாகவே ஆவல்கொண்டு வருஷம் தவறாமல் முயற்சி

கள் செய்துவரும் சில மஹான்கள் இவ்வருஷத்தில் ஏதோ உபேக்ஷையாக இருந்து வருகிறார்கள்போலும்! என்று அடியேன் குறையுற்றிருந்தேன். அக்குறைதீர "ஸ்ரீ தேசிக ஸ்ரீ ஸூக்தி ஸம்ரக்ஷண ஸபை அறிவிப்பு" என்ற மகுடம் புனைந்தவோர் சிறுபத்திரிகை நேற்று (20—5—38) வெளிவரக்கண்டேன். அதில் அடியேனுடைய பெயரையும் அடியேனது சில நூல்களையும் குறிப்பிட்டு எழுதியுள்ள விஷயம் அனைவருமறிந்ததேயாகும். ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமியும் அவரைச்சார்ந்த சிலரும் வெளியிட்டிருந்த க்ரந்தங்களுக்கு உத்தரமாக அடியேன் இயற்றி வெளியிட்டிருக்கும் க்ரந்தங்களைப்பற்றி 20—5—38 பகல் 2-மணிக்கு நூற்றுக்கால் மண்டபத்தில் பஹிரங்கமான ஸதஸ்ஸு நடத்தி அதில் விசாரம் செய்யப்போகிறதாகவும், அந்த விசார கோஷ்டியில் வாதம்புரிய அடியேனை அழைப்பதாகவும், அடியேன் வராதபக்ஷத்தில் என்னுடையபக்ஷம் தவறு என்று ப்ரஸித்த வித்வான்களைக்கொண்டு ஸித்தாந்தம் செய்துவிடுவதாகவும் அந்த விளம்பரத்தில் வரையப்பட்டுள்ளது. இந்த விளம்பரம் நேற்று பகல் ஒன்றேகால் மணிக்கு அடியேனுக்குக் கிடைத்தது. வாதஸபைக்கு அடியேனையழைப்பவர் இன்னாரென்று தெரியாமையாலும், (அதாவது விளம்பரத்தில் கையெழுத்தேயில்லாமையாலும்) அந்த ஸதஸ்ஸுக்குத் தலைவரும் மத்யஸ்தரும் தெரியாமையாலும் அவற்றை விசதமாகத் தெரிந்துகொள்ளாமல் அங்குச் செல்வது உசிதமன்று என்று கருதிய அடியேன் ஒரு அந்தேவாஸியிடம் கடிதம் எழுதிக் கொடுத்து நூற்றுக்கால்மண்டபத்திற்கு அனுப்பினேன். "வாதத்திற்கு என்னையழைப்பவர் யார்? ஸபைத்தலைவர் யார்? மத்தியஸ்தர்யார்? இம்மூன்றையும் விளங்கவுணர்த்தினால் எந்த ஸமயத்திலும் [சனி ஞாயிறு இரண்டு நாட்கள் தவிர] ஸதஸ்ஸுக்கு வந்து என்னுடைய க்ரந்தங்களின் சாஸ்த்ரீயத்வத்தை நன்கு உபபாதித்து உபந்யஸிக்கத்தடையேகிடையாது" என்று அக்கடிதத்தில் எழுதியிருந்தேன். இக்கடிதம் அந்த ஸதஸ்ஸில் பலரறிய வாசிக்கப்பட்டபோது அவ்விடத்தில் விஜயஞ்செய்திருந்த ஸ்ரீ உவே. வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகளால் "இது யுக்தமான பதில்" என்று ஆமோதிக்கப்பட்டதென்று தெரியவந்தது. அய்யா ஸ்ரீ க்ருஷ்ண தாதாசார்யரென்பவரும் மற்றுஞ்சிலரும் அந்த ஸதஸ்ஸில் அநாவச்யகமாகவும் ஆக்ரஹ பரீவாஹமாகவும் தென்னாசார்ய தூஷணோக்திகளைப் பேச அப்போதே அங்கிருந்த சில தேசிகபக்தர்களே ஸதுபதேசங்களினால் அவர்களை வாய்மாளச் செய்ததாகவும் தெரியவந்தது. எந்தவிதமாக ஸதஸ்ஸை நடத்துவது என்பதைப்பற்றி என்ன நிர்ணயித்தார்களென்பது தெரியவரவில்லை. நம்முடைய வர்ணாச்ரமதருமங்களுக்கே மஹத்தான ஹாநிவருவதாயிருக்க, அந்தப் பெரிய ஆபத்தைப் போக்கிக்கொள்வதற்காக அனைவரும் ஐகமத்யமாய்ச் சேர்ந்து காரியங்கள் செய்யவேண்டுவது அவசியமாயிருக்கும்போது அதை விட்டுவிட்டு மிகவும் அவசியமற்ற இந்த ஆந்தராளிக விவாதங்களை வளரச்செய்துகொண்டு போவதில் என்ன பயன்? என்று ஒரு பண்டிதர் எழுந்து உபந்யஸித்ததாகவும், வி. வி. ஸ்ரீ. ஐயங்கார் ஸ்வாமிகளும் அதையே ஆதரித்துப் பேசிவிட்டு, 'இந்த வீணான விவாத ஸதஸ்ஸினால் ஒரு லாபமும் காணபதரிது" என்று சொல்லிவிட்டு எழுந்து சென்றதாகவும் தெரியவந்தது. இப்படியிருக்கையில், நேற்றிரவு 9 மணிக்குமேல் "பரவஸ்து ஸ்ரீநிவாஸதாஸன்" என்று கையெழுத்திட்டவொரு கடிதம் என்னிடம் வந்தது; 23—5—38 .திங்கட்கிழமை தினம் விஷயங்களை விசாரம் செய்ய பண்டிதர்கள் ஸித்தராயிருக்கிறார்கள். தேவரீர் எழுந்தருளுவதை எழுத்து மூலமாய் உடனே தெரிவிக்கவும்" என்று அதில் உள்ளது.

அதற்காகவே நாடுநகரமும் நன்கறிய இந்த பதில் தெரிவிக்கப்படுகிறது. ஸ்ரீதேசிகனுடைய அப்ரதிம மஹாக்ருபைக்குப் பாத்திரமான ப்ரதிவாதி பயங்கர ஸந்ததியில் தோன்றியிருக்குமடியேன் அந்த பிருதத்தை ஸம்ரக்ஷித்துக்கொள்ள

நம் தேசிகனுடைய நிரவக்ரஹமான அநுக்ரஹத்தைப் பெற்றிருக்கின்றேன். இவ்வுலகிலுள்ள ஸகல வித்வான்களையும் ஒன்றுசேர்த்து ஸதஸ்ஸு கூட்டினாலும், அடியேன் ஒருவனாய் வந்து விஷயங்களை விஜ்ஞாபித்துக்கொள்ள ஒருபோதும் மயங்கமாட்டேன். இரவு 12-மணிக்குவந்து என்னை யெழுப்பி வாதத்திற்கு விளித்தாலும் விரைந்து எழுந்து வந்து, நானெழுதியுள்ள க்ரந்தங்களின் விஷயங்களில் பிறர் செய்யும் ஆக்ஷேபங்களைத் தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல் சாஸ்த்ரார்த்தச் சொல்மழை பொழிந்து நிரஸிக்க ஸஜ்ஜனாயிருக்கின்றேன்.

ஸமீபகாலத்தில் ஸ்ரீவைஷ்ணவநிதி என்று வெளிவந்துள்ள புத்தகத்தில், இதுவரை அடியேன் இயற்றியுள்ள நூல்களைப்பற்றின விவரணங்களை அனைவரும் காணலாம். இதுவரையில் வடமொழியிலும் தென்மொழியிலும் வியாக்கியான க்ரந்தங்களாகவும் ஸ்வதந்த்ர க்ரந்தங்களாகவும் பரமதநிரஸந க்ரந்தங்களாகவும் அடியேன் இயற்றி வெளியிட்டுள்ள புத்தகங்கள் 145. அடியேன் மிகச் சிறிய ஞானத்தனே யாயினும் பரம்பரையாக ஸ்ரீ தேசிகனை ஆராதிக்கும் பாக்ய முடைமையினாலும், ஸ்ரீ தேசிக திவ்யஸூக்திகளை அநவரதம் சிந்தனை செய்து வரும் சேம முடைமையினாலும் உலகமெல்லாம் தலையால் சுமக்க வேண்டும்படியான நூல்களை அடியேன் எழுதி வருகின்றேன். இதில் பொறாமைப் படுமவர்கள் ஸ்ரீ தேசிகனுடைய வைபவத்தில் பொறாமைப்படுமவர்களேயாவர். "வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்னுமாழ்வார் பாசுரம் பலிதமாகி, பகவத்பாகவதக்ருபையினால் அடியேன் இன்னும் சிறிது காலம் இந்நிலவுலகில் வாழப்பெறுவனேல், இன்னமும் பல நூற்றுக்கணக்கான க்ரந்தங்களை லோகோபகாரமாக என்மூலமாய் ஸ்ரீ தேசிகன் வெளியிடுவித்தருள்வாரென்பதில் ஐயுற வேண்டா. ஸ்ரீ தேசிகன் அருளிய ஸகல க்ரந்தங்களுக்கும் ஸுமனோமனோஹரங்களான வியாக்கியானங்களை இதுவரையில் போலவே இனிமேலும் * மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத் துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம்வளர அகமகிழுந் தொண்டர் வாழ வெளியிட்டே என்வாழ்நாளைக் கழிப்பேன் என்பதை அனைவரும் அநுதினமும் காணப்பெறலாம். இத்தகைய தொண்டுதன்னில் பொறாமையுறுவார் பலருளரெனினும் * कलकण्ठगणास्वाद्ये कामस्वाद्ये निजाङ्कुरे । निम्बवृत्तिभिरुद्गीर्णे न चूतः परितप्यते ॥ * என்று நம் ஸ்வாமி தேசிகன் அருளிய அமுதமொழியே நமக்கு நித்யாநுஸந்தானம். பூர்வாசார்ய திவ்ய க்ரந்தங்களையே பழிப்பார் பலருளர் என்னும்போது நீசனேனுடைய நூல்களைப் பழிப்பார் கிளம்புவதில் என்ன வியப்பு? இது நிற்க. பஹிரங்கஸதஸ்ஸில் வந்து வாதப்போர் புரிய வேணுமென்று நம்மை அழைப்பவர்களின் அபிப்பிராயம் யாது கொல்? அஸ்மதாசார்ய கோஷ்டியில் பரிகணிதரான ஆச்சான்பிள்ளையின் திவ்யஸூக்தியில் பிறர் ஏறிட்ட தூஷணபரிஹாஸங்களைக் களையவேண்டிய கடமை நமக்கு உள்ளதாதலால் அந்தக் கடமையைச் செலுத்தவேண்டி நாம் சில க்ரந்தங்கள் எழுத நேர்ந்தது. உத்தமாச்ரமியான ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமிகள் இவ்விஷயத்தில் க்ரந்தரூபேண வாதப்ரதிவாதங்களை நெடுநாளாக நடத்திவருகின்றார். பிரதிலேகனத்தில் தாம் தளர்ச்சியடைய நேர்ந்துவிடுமாயின் த்ரிதண்ட சிகாயஜ்ஞோபவீதாதிகளைத் துறந்து அத்வைதஸந்நியாஸியாகிவிடுவதாக சபதம் கூறியே அந்த ஸ்வாமி இதில் ப்ரவர்த்தித்திருக்கிறாரென்பதும் க்ரந்தங்களில் ப்ரஸித்தமாகவுள்ளது. ஸமீபகாலத்தில் அந்தஸ்வாமியால் நிஷ்கர்ஷமென்கிறவொரு சிறு க்ரந்தம் வடமொழியில் வெளியிடப்பட்டது. ஆச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யந்தான்; மந்தப்ரோக்தந்தான் என்று ஸ்தாபிப்பதற்காக அந்த க்ரந்தம் பிறந்திருக்கிறது. அதன் மேல் ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ

விமர்சம் என்கிற க்ரந்தம் அடியேனால் எழுதப் பட்டது. இது முழுவதும் ச்லோகரூபம். தமிழுரையுடன் இந்த க்ரந்தம் வைஜயந்தியில் அச்சாகி வெளிவந்துகொண்டிருக்கின்றதென்பதை உலகமறியும். இதுவரையில் 90 சுலோகங்கள் வெளி வந்தாயின. இன்னமும் ஏறக்குறைய 110 சுலோகங்கள் வெளிவரப்போகின்றன. தேவநாகரலிபியிலும் க்ரந்தலிபியிலும் இது வெளிவந்துகொண்டிருக்கின்றது. அனேகமாய், நம் பேருளாளன் அவப்ருதம் கண்டருள்வதற்குள் இந்த க்ரந்தம் முற்றுப்பெற்று ஒவ்வொரு பண்டிதர்க்கும் கிடைக்கவேபோகிறது. இதுவரையில் இரண்டு ஸஞ்சிகைகளில் வெளிவந்த 90 சுலோகங்கள் பண்டிதர்களின் கைத்தலத்திலேயே உள்ளன. இன்னமும் விரும்புவார்க்கு அளிக்கவும் செய்வோம். இந்த க்ரந்தம் தத்வமுக்தாகலாபத்தோடும் அதிகரணஸாராவளியோடும் தோள்தீண்டியாக விளங்குகின்றதென்பதைப் பல வித்வான்கள் உபச்லோகித்திருக்கின்றார்கள். இதற்கு ஸமாதாநக்ரந்தம் வெளியிட ஸ்ரீமத்கோழியாலம் ஸ்வாமி ஸர்வாத்மநா கடமைப்பட்டிருக்கின்றார். அதை நாம் மிக்க ஆவலுடன் எதிர்பார்த்து வருகிறோம். சென்ற வருஷத்தில் அந்த ஸ்வாமியின் ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானமாகவே அடியேன் வெளியிட்டிருக்கின்ற ப்ரஹ்மவ்யாப்திபரிஷ்க்ரியா என்னும் க்ரந்தத்திற்கு இதுவரை பதில் வெளிவரவில்லை. அதுபோலவே ப்ரக்ருத ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ விமர்சக்ரந்தத்திற்கும் பதில் வெளிவர அவகாசம் அணுமாத்திரமுமில்லை யென்பதை யறிந்து கொண்ட சிலர்; நேரில் வாதப்போர் என்று வைத்து "ஸங்கே சக்திः கலௌ யுகே." என்பதற்கிணங்க தங்களுடைய ஸமாஜ பாஹுள்யத்தையே பற்றாசாகக்கொண்டு கோலாஹலங்கள் செய்து "அண்ணங்கராசாரியர் வாதத்தில் தோல்வியடைந்துவிட்டார்" என்று ஜயபேரி யடித்துவிடலாமென்கிற நசையினால் இப்போது இவ்வழியில் புகுந்தனர்போலும். என்னே! இவர்களின் சூதுவல்லமை! நம்முடைய ஸ்ரீபாஷ்யாதி மஹாக்ரந்தங்களைப் பலவாறு தூஷித்து ஸமீபகாலத்தில் இதரமதஸ்தர்கள் சில க்ரந்தங்களை வெளியிட்டிருப்பது ஜகத்ப்ரஸித்தம். அவர்களை வாதப்போருக்கு அழைக்க வல்ல பண்டிதர் ஒருவருமில்லையா? நம் வித்வான்களுக்கு அதுவன்றோ அவச்யமான கைங்கர்யம்.

இந்த ஸ்ரீமத் கோழியாலம்ஸ்வாமியே பரபக்ஷநிராக்ருதி என்கிற ஒரு க்ரந்தத்தைச் சில ஆண்டுகட்குமுன் அடியேனைக்கொண்டு பரிஷ்கரிப்பித்து வெளியிடுவித்தார். மைலாபூர் மஹாமஹோபாத்யாய, கருங்குளம் கிருஷ்ணசாஸ்தரிகளவர்கள் அதற்குமறுப்பாக அதிகரண சதுஷ்டயீ என்கிற க்ரந்தம் அச்சிட்டு சென்ற ஜனவரி மாதத்தில் சென்னையில் கூடின பண்டிதமஹாபரிஷத்தில் ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களனைவர்க்கும் விநியோகித்தார். ஒவ்வொருவரும் வாங்கி அதை சிரஸாவஹித்தார்களேயல்லது அவரை வாதப்போருக்கழைக்கத் துணிவுகொண்டார் ஒருவருமில்லை. அந்த க்ரந்தத்தில் அவர் எழுதியிருப்பது ஸ்ரீவைஷ்ணவ உலகுக்கே தலைவணக்கம் தருகின்றது. ஸ்ரீகோழியாலம் ஸ்வாமி வீண் கோலாஹலக்காரர் என்பதை அந்த சாஸ்த்ரிகள் நிரூபித்திருக்கிறார்கள்.

* स्वपक्षरक्षणाशक्ताः परपक्षनिराकृतौ । प्रावर्तन्त भवन्तोऽद्य प्रावीण्यं किमतः परम् * என்றிங்ஙனே

அவர் எழுதியுள்ளவற்றைக்கண்டு இன்னமும் வாளாகிடக்கின்ற வித்வான்கள் நம்மை வாதப்போருக்கு அழைப்பது எந்த எண்ணத்தினாலென்பதை விவேகிகள் உணரவேணும். கீழே தெரிவித்த எண்ணந்தானே. மடத்தாருக்கும் முனித்ரயத்தாருக்கும் மன்ஸாலகட்டையாருக்கும் விவாத விஷயங்கள் எத்தனையில்லை? க்ரந்தச்சண்டைகளும் ப்ரளயமாகவுண்டே. அந்தந்த வித்வான்களும் திரண்டிருக்கின்றார்களேயித்திருநாளில். இவர்களுக்குள் வாதப்போர் முந்துற முன்னம் நடைபெறலாமே—என்று நாம் பலகால் தெரிவித்திருந்தும் அதைப்பற்றி வாய்

திறவாமல் நம்மையே அழைக்கின்ற இவர்களின் நப்பாசையை நல்லார் நன்கறிய வேணும். எந்த வொழுங்கில் இவர்கள் ஸதஸ்ஸு நடத்தப் போகிறார்கள்? த்வங்காரஹுங்காரத்திலும் சதுர்த்தோபாயப்ரயோகத்திலும் சென்று முடியுமத்தனை. இரண்டு கக்ஷியிலும் பற்றில்லாத வொரு வித்வானை மத்யஸ்தராக அமைத்து அவரது முன்னிலையில் ஒருவரே விஷயம் சொல்லவேணும்—அந்த மத்தியஸ்தர் அதை அநுவதிக்க வேணும்—பிறகு ஒருவர் ப்ரதிவாதம் பண்ணவேணும்—என்றிங்ஙனே நிபந்தனைகள் நியமித்து, வீண் கோலாஹலங்களுக்கு அவகாசம் சிறிதும் ஏற்படாதபடி தக்க பாதுகாப்பு செய்வித்து ஸதஸ்ஸு நடத்தப்படுமாயின் அடியேன் அஹோராத்ரமும் உடனிருந்து வாதம் புரிய என்ன தடை? "வாதத்திற்கு வரத் துணிவில்லாமையினால் இங்ஙனே வ்யாஜோக்திகளைத் தெரிவிக்கின்றார்" என்று இவ்வளவையே இனி ப்ரதிபக்ஷிகள் கோஷிப்பர்கள்; கீழே நாம் தெரிவித்த விஷயங்களெல்லாம் யுக்தமா? அயுக்தமா? என்பதைப்பற்றிச் சிறிதும் ஆராயாமல் யார் எப்படி உத்கோஷித்தாலும் அதில் நமக்கு நோக்கில்லை. உபயவாதிகளும் க்ரந்தங்களில் எழுதிக்கொண்டிருக்கும் விஷயங்களை வாயினால் கோஷிப்பது தவிர ஸதஸ்ஸில் வேறு என்ன ஆகும்? ஒருவர்வாதத்தைத்தள்ளி ஒருவர் வாதத்தையே ஸமஞ்ஜஸமென்று ஸ்தாபிக்க யாருக்கு என்ன அதிகாரம்? அப்படி ஸ்தாபிக்கவல்ல அதிகாரி யாவர்? இந்த நிர்ணயமின்றிக்கே ஸதஸ்ஸு நடத்தி என்ன லாபம். இவர்கள் எதிர்பார்க்கும் லாபம் கனவிலும் ஸித்திக்காது. இவர்கள் விரும்புகிறபடி நாளது திங்கட்கிழமைமுதல் வெள்ளிக்கிழமை வரை ஐந்து நாள் அடியேன் ஸதஸ்ஸுக்கு வருகிறேன். வேறொருவரையும் துணைகொள்ளாமல் அடியேனொருவனே வக்தவ்யவிஷயங்களை நிரூபிக்கிறேன். அவற்றிற்கு ஒருவரே ப்ரதிவாதம் சொல்லட்டும். இப்போது விசாரத்திலிருக்கும் ஸமஸ்யமாநேத்யாதி விஷயம் வ்யாகரண சாஸ்த்ராநுபந்தியாதலால் அந்த சாஸ்த்ரத்தில் தேர்ந்தவொரு தடஸ்தர்முன்னிலையில் ஸம்ஸ்க்ருத பாஷையிலேயே வாதம் நடத்தவேண்டியது.

திங்கட்கிழமை ஸதஸ்ஸில் முதன் முதலாக நடைபெறவேண்டிய விஷயத்தைப்பற்றி இப்போதே தெரிவிக்கின்றேன். கவனிக்கவேண்டியது. 20—5—38ல் நடந்த கூட்டத்தில் அய்யா கிஷ்ணதாதாசாரியர் அப்ரஸக்தமாக "தென்னாசாரியர்கள் வர்ணாச்ரமவரம்புகளை யழிப்பதற்கென்றே க்ரந்தங்கள் இயற்றினவர்கள் என்றும், ஸ்ரீவசநபூஷணம் ஆசார்யஹ்ருதயம் முதலான க்ரந்தங்களில் இது ஸ்பஷ்டம் என்றும் சொல்லி, *ம்லேச்சனும் பக்தனானால்..........அஜ்ஞர் ப்ரமிக்கிற வர்ணாச்ரம வித்யாவ்ருத்தங்களை* இத்யாதி ஆசார்யஹ்ருதய சூர்ணிகைகளைக்கூறிப்பழித்தும் சென்றிருக்கிறார் என்பதும், நமது அந்தேவாஸிகள் அப்போது அவருக்குத் தக்க மறுப்புகள் கூறியிருக்கிறார்களென்பதும் அனைவருமறிந்ததே. ஒரு விசாரமும் தொடங்காமலிருக்கும்பொழுதே இவ்வளவு ஆசார்ய தூஷணைகள் வெளிவந்தால், மேன்மேலும் என்ன ஆகும் என்பதை விவேகிகள் உய்த்துணரலாம். அந்த ஐயா கிருஷ்ண தாதாசாரியர்க்கு அஜ்ஞானமும் அந்யதாஜ்ஞானமும் துராக்ரஹமும் ஸதாசார்யாபசார ப்ராவண்யமும் தவிர வேறு லவலேசமும் கிடையாதென்பதை மூன்று நான்கு க்ரந்தங்களினால் பரக்க நிரூபித்து வெளியிட்டிருக்கிறேன். அவற்றுள் முக்கியமானது ஸத்ஸம்ப்ரதாய பரிசுத்தி என்பது. இந்தக்ரந்தம் ஒவ்வொரு பண்டிதரிடமுமுள்ளது. திருமுற்ற வெளியில் எந்த வேளையிலும் இப்புத்தகம் விலைக்குக் கிடைக்கின்றது. வாயெடுக்கும் போதெல்லாம் தென்னாசார்யர்களையும் அவர்களது திவ்யஸூக்திகளையும் அளவு கடந்தமுறையில் தூஷித்தே போதுபோக்குமிந்த அய்யா க்ருஷ்ண தாதாசாருடைய யோக்யதையே திங்கட்கிழமை ஸதஸ்ஸில் முன்னம் சர்ச்சிக்கப்படவேண்டும். தென்னாசார்யர்களை அஜ்ஞர்களென்று வசை கூறுமிவர் அந்த தென்னாசார்யர்

களின் திவ்ய ஸூக்திகளையே களவு கொண்டு நிரப்பிச் சில க்ரந்தங்களைத் தாம் இயற்றியதாக வெளியிட்டுள்ளார். அடைக்கலப்பத்து வியாக்கியானம் என்பது ஒன்று. இதில் ஏடு ஏடாக தென்னாசார்ய வியாக்கியான பங்க்திகளே தம்முடைய வாக்கியமாகக் கையாளப்பட்டிருக்கின்றன. எந்த எந்த இடங்களிலிருந்து எந்த எந்த பங்க்திகளைக் களவு செய்திருக்கிறாரென்பதை வரிசையாக நான் எடுத்து ஸதஸ்ஸில் காட்டுகிறேன். அந்த புத்தகத்தில் முக்கால் பாகத்திற்குமேல் தென்னாசார்ய ஸ்ரீஸூக்தி மாலிகைகளே என்பதையும், பல இடங்களில் அந்த ஸ்ரீஸூக்திகளின் பொருளைக்கூட இவர் தெரிந்து கொள்ளாமலே கையாண்டிருக்கிறாரென்பதையும் அலகலகாக நிரூபிக்கிறேன். அன்றியும், இந்த க்ருஷ்ணதாதாசார்யர் அதிகமாக நிந்திப்பது மணவாளமாமுனிகளையே. அப்படியிருந்தும் அந்த மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டுதான் இவர் தம் சுவடிக்குப் பெருமை ஸம்பாதிக்கப் பார்க்கிறார். இவர் ரகுவீரகத்யத்திற்கு வியாக்கியானமெழுதி நெல்லூரில் தெலுங்குலிபியில் இரண்டொருபாரம் அச்சிட்டிருக்கிறார். ஸ்ரீவசநபூஷணத்தின் முகப்பில் மணவாளமாமுனிகள் அருளிச்செய்திருக்கிற வியாக்கியான ஸ்ரீஸூக்தியை அரும்பதவுரையுட்படக் களவாடி அப்படியே தம் வியாக்கியானத்திற்கு அவதாரிகையாக இட்டிருக்கிறார். இது மறைக்கக்கூடியதன்று. தம்முடைய ஸம்ப்ரதாயத்தில் பல பல க்ரந்தங்கள் இருக்கவும் அவற்றிலிருந்து ஒரு பங்க்திகூட எடுத்துக்கொள்ள இவர் விரும்புகிறதில்லை. ஏன்? அசடுபிசடாய்க்கிடக்கின்ற அந்த பங்க்திகளால் தம் சுவடிக்குப் பெருமை ஏற்படமாட்டாதென்பதே காரணம். அதை நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறார். அஜ்ஞரென்று தம்மால் ஸதா தூஷிக்கப்படுகின்ற ஆசார்யமணிகளின் ஸ்ரீஸூக்திகளையே களவாடிப் பெருமை ஸம்பாதிக்கப் பார்க்குமிவருடைய பிழைப்பு என்னே! என்னே! வெள்காத வீண் பிழைப்பே!. இப்போது இவர் என்ன சொல்லுகிறார்? "ஆமாம், நான் தென்னாசார்யதிவ்யக்ரந்த திவ்யஸூக்தி தஸ்கரன்தான்" என்று ஒப்புக்கொள்கிறாரா? மறு வாய் திறக்கிறாரா? ஒப்புக்கொண்டுவிடுகிறபக்ஷத்தில் அப்படிப்பட்ட மஹநீய மஹாசார்யர்களைத் தாம் தூஷித்துவருவது துராக்ரஹத்தாலத்தனை என்பது தன்னடையே விளங்கிற்றாகும். 'நான் தஸ்கரனல்லேன்' என்று இவர் மறுதலைக்கும் பக்ஷத்தில் திங்கட்கிழமையன்று நூற்றுக்கால் மண்டபத்தில் இதைப்பற்றின விசாரணையே நடைபெறவேண்டியது. இவருடைய தஸ்கரத்வத்தை நான் நிரூபிக்கத் தவறினேனாகில் தோற்றேன் தோற்றேனென்று நிற்கின்றேன். இந்த க்ருஷ்ணதாதாசாரியர் இன்னமும் சில க்ரந்தங்களைத் தாம் எழுதியது போல் சிலர்க்கு வாசித்துக்காட்டிக் கொண்டிருக்கிறார். ஆண் பிள்ளையாகில் அவற்றையும் வெளிக்காட்டட்டும். மணவாளமாமுனிகளின் அமுதமொழிகளே (பாரா பாராவாக) அவற்றில் இல்லாமற்போகுமாயின் அடியனாகின்றேன். எங்கள் ஆசாரியர்களின் அமுதமொழிகளை இவர் எவ்வளவும் கொள்ளை கொள்க. அவ்வாசிரியர்களைத் தூஷிப்பதில் நின்று விலகுவராயின் உய்யலாமே. இதைப்பற்றி இவர் என்ன சொல்லுகிறாரென்பது எழுத்து மூலமாக வெளிவரவேண்டும்.

இவர்களுடைய ஸம்ப்ரதாயத்தில் தென்னாசார்ய தூஷணைகளை நிரப்பி க்ரந்தமெழுதினவர்களில் தலைவரான உ. வே. திருவஹீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் உலகமெல்லாம் போற்றும் ச்ருதப்ரகாசிகையை,—ஸ்வாமி தேசிகன் ஸம்ரக்ஷித்த ச்ருதப்ரகாசிகையை பெயர் குறித்து, "அதில் தவறுதலான விஷயங்கள் இருக்கின்றன; அவற்றைப் பரிஹரிப்பதற்காகவே தேசிகன் க்ரந்த மெழுதினார்" என்று எழுதி அச்சிட்டிருக்கும் வாசகங்களையும் ஸதஸ்ஸில் வித்வான்கள் நோக்கவேண்டும். இத்தகைய துர்ப்பாஷிதங்களைப்பற்றி ஸதஸ்ஸில் பரிசீலனை செய்யவேண்டுவது அவசியமன்றோ? ஆசார்யஸ்தானம் வஹிக்கின்றவொரு மஹான் இப்படி அருவருக்கத்தக்க ஸதாசார்ய தூஷணைகளை யெழுதிவைத்

திருப்பது பரஸிததமாகவேயிருந்தும் அதைப்பற்றி ஸதஸ்ஸு கூட்டி விசாரங்கள் நடத்த ஒரு வித்வானுக்கும் ஆவச்யகதை தோன்றவில்லை. பல திவ்ய தேசங்கள் நிரம்பியுள்ள காஞ்சியை திவ்ய தேசமன்றென்று பழித்தும், மதுராந்தகம் போலே காஞ்சியும் ஒரு ஊர் என்று எழுதியுமிருக்கின்ற சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் சென்ற வருஷத்தில் இத்திருநாளுக்கு வந்திருந்தாரே; அவரை ஒருவரும் வாதப் போருக்கு அழைக்கவில்லையே. இது அவசியமற்றதென்னில், ச்ருதப்ரகாசிகையை தூஷித்திருப்பதைப்பற்றின விசாரங்கூடவா அவசியமற்றது?

அந்த சேட்லூரர் ச்ருதப்ரகாசிகையை ஸ்பஷ்டமாக தூஷித்திருக்கின்றாரென்று நாம் தெரிவிப்பது பொய்யா மெய்யா? என்பதைப்பற்றியும் திங்கட்கிழமை விசாரம் நடைபெறவேண்டும். இதெல்லாம் அவசியமல்லாத விஷயங்களென்னில், எதுவும் அவசியமற்றதேயாகும் "ச்ருதப்ரகாசிகாசார்யரும் தென்னாசார்யரே கிடீர்" என்று திருப்புட்குழிஸ்வாமி ஸாதித்துவந்தபடியால் அவரை தூஷிப்பதும் அவசியந்தான்--என்றல்லவோ இவர்களின் எண்ணம். கடைசியாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ப்ராமாணிக பண்டிதஸதஸ்ஸில் விஷய விசாரங்கள் செய்வதில் நமக்குப் பரமகுதூஹலமே. நம்முடைய க்ரந்தங்கள் ஜனிக்கவேண்டிய அவகாசத்தை யளித்தவர்களின் யோக்கியதைகளைப்பற்றி முந்துற முன்னம் பரிசீலனை செய்துவிட்டுப் பிறகு நம்முடைய உத்தர க்ரந்தங்களைப்பற்றி விசாரமெடுத்துக்கொள்வோம். இவ்வருஷம் பேரருளாளன் திருத்தேர் ஒழுங்குபட்டுத் திருநாள் முடிவுபெறுவதற்கு ஒரு மாதத்திற்குமேலாகுமென்று தெரியவருவதால் அவப்ருதம் வரையில் (சனி ஞாயிறு நீங்கலாக) மற்ற நாட்களில் தினப்படியாக ஸதஸ்ஸு நடந்து வரட்டும். ஒவ்வொருநாளும் என்னுடைய ஒவ்வொரு க்ரந்தத்தைப்பற்றியும் விஷய ஸௌஷ்டவத்தை விளக்கியே பேசிவருவேன்.

இங்ஙனம்,
ஸ்ரீவைஷ்ணவதாஸன்,
21—5—38. ப்ர. அண்ணங்கரார்யதாஸன்

இங்ஙனம் வித்வத்விநோதினீபுஸ்தகம் வெளியிட்ட பிறகு என்னுயிற்றென்பது அன்பர்களுக்குத் தெரியவேணுமே. இத் தன்சரிதையில் (இரண்டாம் பகுதியில்) பக்கம் 138ல் எழுதியிருப்பதை மீண்டும் நினைப்பூட்டுகிறேன். அதாவது—

"கிழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸாசாரியார் என்றொருவர் இருந்தார்; இவர் காலஞ்சென்று பத்தெட்டு வருஷமாகிறது. அவர் தேவப்பெருமாளுடைய பெரிய உத்ஸவங்கள்தோறும் ஸ்ரீரங்கத்திலிருந்தோ சென்னையிலிருந்தோ காஞ்சிக்கு வருவர். வருகிறபோதெல்லாம் என் விஷயமான தூஷணைகளை நிரப்பித் துண்டுப் பிரசுரமச்சிட்டுக் கட்டுக்கட்டாகக் கட்டிக்கொண்டு வந்து தன் கையினாலேயே விநியோகிப்பர் பாவம்! 'இத்தோடு அண்ணங்கராசாரியார் மடிந்து விட்டார்' என்றும் சொல்லிக்கொண்டிருப்பர். மூன்றாவது நாளிலேயே விசதமான பதில் புத்தகத்தைப் பெற்றுக்கொண்டு தலைமறைவாய்ப் போய்விடுவர்." என்று எழுதியிருக்கிறேன். மேலே உதாஹரித்த வித்வத்விநோதினியில் 'பரவஸ்து ஸ்ரீநிவாஸதாஸன்" என்று குறிப்பிடப் பெற்றுள்ளவர் அவரேதான். அடியேனுடைய அனேக க்ரந்தங்கள் தோன்றுவதற்கும், அவை பிரபலப்ரசாரமடைவதற்கும் முக்கியமான ஹேதுபூதர் அந்த கீழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸாசார்யரேயாவர். அவர் ஒரு விஷயமுமறியாதவர். கேவலம் மதாபிமானி; ஆக்ரஹி. இதற்காகவே அவரிடத்தில் சில லௌகிகர்கள் பக்திவைத்துக் காசு கொடுத்துக்கொண்டுமிருந்தார்கள். பரமஸாதுக்களாய் ஏகாந்த சீலர்களாய் ஆசார்யாபசாரவைதேசிகர்களாயுமிருந்த வடகலைஸம்பிரதாய வித்வான்களை வலியப்பிடித்திழுத்து "அண்ணங்கராசார்யருடைய நூல்களுக்குக் கண்டனமெழுதுங்கள்" என்று தூண்டிவிட்டு அவர்களெல்லோரும் உடனுக்குடனே அடியேனிடமிருந்து விபுல விமலப்ரத்யாக்

யான நூல்களைப் பெற்று விஷண்ணராகும்படி செய்வதொன்றையே நித்ய கால
க்ஷேபமாகக் கொண்டிருந்தவர் இந்த கீழச்சேரி ஸ்ரீநிவாஸாசாரியர். ஆனால்
கள்ளங்கவடு அறியாதவர். இவ்வளவு ஸந்தர்ப்பத்திலும் அடிக்கடி அடியே
னுடைய க்ருஹத்திற்குவருவர்; ஸாஷ்டாங்கப்ரணாமம் செய்கிறேனென்று சொல்லிக்
கொண்டு தொழுது தொழுது எழுவர். ப்ரதிப்ரணாமம் செய்தால், கூடவேகூடா
தென்று சொல்லித் தடுத்துவிடுவர். அப்படிப்பட்ட ஸமயங்களில் "இவ்வளவு
ப்ராவண்யங் கொண்டிருக்கிற நீர் இதற்கு மாருக காரியங்கள் செய்து கொண்டு
வருகிறீரே; இதையும் அதையும் பார்ப்பவர்கள் பரிஹஸிப்பர்களே; இரண்டத்
தொன்றை விட்டு விட்டாலன்றோ நலமாகும்" என்று சொல்லுவேன். 'இது
வொரு ஸ்வரூபம், அதுவொரு ஸ்வரூபம்; இவற்றுக்குப் பரஸ்பரவிரோதமென்ன?''
என்று சொல்லிக் கொண்டேபோவர்.

மேலே குறித்த வித்வத்விநோதிநி வெளியான பின்பு அவரை நான்
காணப்பெறவில்லையென்று ஞாபகம். அவ்வளவோடு 'அவருடைய கோலா
ஹலங்கள் சாந்தமாயின. கீர்த்தி மூர்த்தியான மஹாவிவேகியான வி. வி. ஸ்ரீநி
வாஸய்யங்கார் ஸ்வாமிகள் மேலே விவரித்த வித்வத்விநோதிநியைப் பலகால்
வாசிக்கச் சொல்லித் திருச்செவிசாத்தி "அண்ணங்கராசாரியர் செல்லுகிற மார்க்
கம் அநவத்யமானது. -பல குள்ளநரிகள் ஒன்று கூடினாலும் சிங்கத்தை ஒன்றும்
செய்யமாட்டா' வென்பது உங்களுக்கு ஞாபகமிருக்கத்தக்கது" என்று சொல்லி,
வீண் வம்பு தண்டாக்கள் செய்ய நினைத்தவர்களை உத்ஸாரணம் செய்துவிட்டார்.
அவருடைய அந்தரங்கத்தில் ஒரு துக்கம் மாத்திரம் அபரிஹார்யமாக இருந்தது.
அதாவது, அய்யா க்ருஷ்ணதாதாசாரியர் இரவும் பகலும் தென்னாசார்யர்களை
தூஷித்துக் கொண்டிருந்து, தத்ஸம்ப்ரதாய க்ரந்தங்களிலுள்ள ஸ்ரீஸூக்தி பங்க்தி
களைக் களவாடி யெழுதியே தம் பெயரால் அடைக்கலப்பத்து வியாக்கியானம்
முதலிய ஒன்றிரண்டு புத்தகங்களை வெளியிட்டுக் கொண்டாரென்பதை நன்கு
ஆராய்ந்து உணர்ந்ததனாலுண்டான துக்கமே அது.

இனிமேல் அடியேனுடைய நூல்களை யெல்லாம் வரிசையாக
வெளியிடுகிறேன். இதில் ஒரு விஜ்ஞாபனம் முக்கியமாக நோக்கத்
தக்கது. பத்து பன்னிரண்டு அல்லது 20, 22 நூல்கள் அடியே
னாலெழுதப்பட்டிருந்தும் அந்தேவாஸிகளின் பெயராலோ ஆப்தர்
களின் பெயராலோ வெளியிடப்பட்டவையுண்டு. இது ஸமயாநு
குணமாகவும் ஔசித்யாநுகுணமாகவும் ஆவச்யகதாநுகுணமாக
வும் தழுவப்பட்டவொரு முறையாகும். இதற்கு ஸ்ரீமத் பரமஹம்ஸ
கோழியாலம் ஸ்வாமிதாம் 'மார்க்கதர்சீ மஹர்ஷி:' என்னத்
தகுந்தவர். எங்ஙனேயென்னில், அந்த ஸ்வாமி தாம் வெளியிட்
டருளின 'ஸமஸ்யமாந ஸூக்த்யர்த்த நிஷ்கர்ஷம்' என்கிற
வொருநூலின் ரக்ஷாபத்ரத்தில் "एतद्ग्रन्थकर्तृभिः कृताः कारिताश्च ग्रन्थाः"
என்று மகுடமிட்டு தம்முடைய க்ரந்தங்களோடுகூட பிறர் பெய
ரால் வெளிவந்த சில க்ரந்தங்களையும் குறிப்பிட்டுள்ளார். இதனால்
பிறரை ஏவி க்ரந்தங்களை யெழுதச் செய்வதும் தாமே யென்பது
புலனாயிற்று. தாமெழுதிய நூலையே காரண விசேஷாத் பிறர்
பெயரால் வெளியிட்டாரென்பது தேறிற்று. மஹான்கள் காட்டிய
இந்தவழக்கத்தை அடியேன்போல்வாரும்தழுவுவது குற்றமற்றதே
யென்று கொள்க. தோழிபாசுரம், தாய்பாசுரம் போலவும் கொள்க.

நான்கு பாஷைகளில் அடியேனியற்றி வெளியிட்டுள்ள நூல்களுள்

# ஸம்ஸ்க்ருத பாஷையிலமைந்த நூல்களிவை 155

1. श्रीकाञ्चीहस्त्यद्रिवैभवम्
2. धर्मवादः
3. बालकोपदेशमालिका
4. सुप्रभातदिव्यप्रबन्धप्रतिकृतिः
5. मुनिवाहनसूरिसूक्तिपद्यमाला
6. [illegible]
7. ध्रुवचरितम्
8. कुचेलोपाख्यानम्
9. [illegible]
10. सावित्रीपातिव्रत्यम्
11. [illegible]
12. गोदास्तुति विवृतिः
13. ब्रह्मव्याप्तिपरिष्क्रिया
14. [illegible]
15. [illegible]
16. [illegible]
17. [illegible]
18. जगद्गुरुवैभवम्
19. जगद्गुरुपञ्चामृतम्
20. [illegible]
21. सभाभुजङ्गीसर्वस्वम्
22. श्रीशैलेशाष्टकव्याख्या
23. श्रीमद्वेङ्कटनाथगुरुस्तोत्रम्
24. औत्तरदिव्यदेशदिव्यप्रबन्धावलिः
25. वैदिकलौकिकरञ्जनदशकम्
26. उपाख्यानरत्नमाला
27. लक्ष्मीतत्त्वविनिर्णयः (यद्वा) श्रीतत्त्वशोधनम्
28 मदिरेक्षणार्थतत्त्वम्
29. पाठशोधनपरीक्षा
30. రసిక రసాయనమ్
31. कृतकृत्यप्रतीक्षणम्
32. श्रीरामावतारः
33. गोपालपञ्चाशत्
34. [illegible]
35. रोदसीतत्त्वबोधिनी
36. श्रीरामायणदण्डकः
37. नन्दनन्दनवैभवचूर्णिका
38. भगवद्रामानुजसहस्रनामस्तुतिः
39. श्रीमत्कृष्णगुरुस्तुतिः
40. रत्नपरीक्षा
41. उद्यानशुष्कवचोविमर्शः
42. सहस्रनामभाष्यप्रभावः
43. युष्मत्सूक्तिसौरभम्
44. क्षेत्रतीर्थयात्रादर्शः
45. साधुपाठसौवादवम्
46. श्रीमत्परकालमहायोगिवैभवम्
47. द्राविडाम्नायरसास्वादः
48. वर्णाश्रमधर्मरक्षा
49. गोष्ठीनाथशतकम्
50. हयग्रीवशतकम्
51. गरुडविंशतिः
52. कमलास्तुतिः
53. आदिवराहत्रिंशत्
54. कलिवैरिदशकम्
55. लोकाचार्यस्तोत्रम्
56. श्रीमद्वरवरमुनिवैभवस्तोत्रम्

57. श्रीशैलेशदयापात्रस्तोत्रम्
58. अद्भुतवार्ताप्रकाशः
59. श्रीरामरत्नवरत्नम्
60. श्रीलोकाचार्यकर्णामृतम्
61. श्रीवरवरमुनीन्द्रविजयमाला
62. श्रीरामभद्रकर्णामृतम्
63. श्रीगोपालभक्तामृतम्
64. श्रीगोविन्दगीतामृतम्
65. श्रीवरवरमुनिस्तोत्ररसायनम्
66. श्रीशैलेशदयापात्रमङ्गलाशासनम्
67. श्रीमद्वरवरमुनिकर्णामृतम्
68. श्रीवरवरमुनिनक्षत्रमाला
69- श्रीवरवरमुनिवारमाला
70. श्रीवरवरमुनितिथिमाला
71. श्रीवरवरमुनिपक्षमाला
72. श्रीवरवरमुनिमासमाला
73. श्रीवरवरमुन्यृतुमाला
74. श्रीवरवरमुन्ययनमाला
75. श्रीवरवरमुनिसंवत्सरमाला
76. श्रीवरवरमुनिसहस्रनामस्तोत्रम्
77. श्रीवरवरमुन्यष्टोत्तरशतनामस्तोत्रम्
78. श्रीवरवरमुनिमङ्गलाशासनस्तोत्रम्
79. श्रीवरवरमुनिदण्डकस्तुतिः
80. रहस्यत्रयश्लोकमालिका
81. तत्त्वत्रयश्लोकमालिका
82. श्रीवचनभूषणश्लोकमालिका
83. वेदान्तसर्वस्वम्
84. संप्रदायसिद्धाञ्जनम्
85. अयमेपद्यार्थशतदूषणी
86. भगवद्रामानुजहृदयम्

87. मङ्गलाशासनपद्यमाला
88. भट्टनाथसूक्तशतकम्
89. श्रीगोदाव्रतप्रबन्धपद्यावली
90. श्रीगोदासूक्तपद्यावली
91. श्रीकुलशेखरसूक्तपद्यावली
92. श्रीमालाप्रबन्धपद्यावली
93. मधुरकविसूक्तपद्यावली
94. बृहत्सूक्तपद्यावली
95. तिरुवाशिरियप्रबन्धदण्डकः
96. श्रीपरकालरथप्रबन्धदण्डकः
97. लघुपाळीप्रबन्धप्रतिकृतिः
98. गुरुपाळीप्रबन्धप्रतिकृतिः
99. मङ्गलाशासनप्रबन्धव्याख्या
100. श्रीभट्टनाथसूक्तव्याख्या
101. श्रीगोदाव्रतप्रबन्धव्याख्या
102. श्रीगोदासूक्तव्याख्या
103. श्रीकुलशेखरसूक्तव्याख्या
104. श्रीभक्तिसारदिव्यसूक्तिव्याख्या
105. श्रीमालाप्रबन्धव्याख्या
106. सुप्रभातदिव्यप्रबन्धव्याख्या
107. मुनिवाहनसूरिसूक्तिव्याख्या
108. मधुरकविसूक्तव्याख्या
109. श्रीपरकालसूरिबृहत्सूक्तव्याख्या
110. तिरुवाशिरियप्रबन्धव्याख्या
111. श्रीपरकालरथप्रबन्धव्याख्या
112. लघुपाळीप्रबन्धव्याख्या
113. गुरुपाळीप्रबन्धव्याख्या
114. सहस्रगीतिव्याख्या
115. प्रपन्नगायत्रीव्याख्या
116. गोदासूक्तसर्वस्वम्

117. अभिनवदयाशतकम्
118. अभिनवदयाशतकतात्पर्यसार:
119. मदिरेक्षणार्थमाधुर्यम्
120. సహృదయ సౌభాగ్యమ్
121. [illegible]
122. परीक्षाविमर्शपरामर्श:
123. परिष्कारपरामर्श:
124. रक्षाविलोचनभावप्रकाशिका
125. [illegible]
126. गोदार्थोक्षावमर्दविमर्श:
127. देशिकावतारवत्सरचिन्ता
128. सप्ततिरत्नतत्त्वम्
129. वैभवप्रकाशिकाविमर्श:
130. रामानुजदयापात्रपद्यचरित्रम्
131. पात्रपद्यचरित्रप्रतिष्ठा
132. సత్సంప్రదాయ సహస్రాంశుః
133. సత్సంప్రదాయ సహస్రాంశువ్యాఖ్య
134. पदपाठपरित्राणम्
135. शतभूषणीवज्रकुठार:
136. नवीनचरित्रग्रन्थविमर्श:
137. रहस्यत्रयार्थसर्वस्वम्
138. श्रीवचनभूषणदिव्यार्थदीपिका
139. रहस्यत्रयसारसारप्रदीपिका
140. समस्यापूर्तिशतकम्
141. चित्रप्रश्नोत्तरमाला
142. चरमश्लोकावली
143. अपूर्वरामायणम्
144. दिव्यपुरुषपरीक्षा
145. महिलापुरकेशवसुप्रभातम्
146. ,, केशवकर्णामृतम्
147. ,, केशवमङ्गलम्
148. चैत्रकेशवसुप्रभातम्
149. वात्सल्यार्थप्रकाशिका
150. वात्सल्यार्थप्रकाशिकाविवृति:
151. दिव्यसूरिवैभवम्
152. पूर्वाचार्यवैभवम्
153. तर्कशास्त्रसर्वस्वम्
154. यात्रास्तोत्रामृतम्
155. सदर्थसमुच्चय:

ஹிந்தீபாஷையிலமைந்த நூல்கள் 8.

156. आल्वारवैभव
157. दिव्यदेशसूची
158. तिरुप्पल्लाण्डुव्याख्या
159. यतिराजविंशतिव्याख्या
160. श्रीवैष्णवसुधा
161. श्रीपरकालसूरिसूक्तसारसंग्रह
162. मधुरोपन्यासमाला
163. पूर्वाचार्यप्रभाव

தெலுங்கு பாஷையிலமைந்த நூல்கள் 41.

164 శ్రీ విష్ణుసహస్రనామ టీక
165 ముకుందమాల టీక
166 స్తోత్రరత్న టీక
167 గద్యత్రయ టీక
168 అతిమానుష స్తవ టీక
169 శ్రీ వైకుణ్ఠ స్తవ టీక
170 హయగ్రీవస్తోత్ర టీక
171 శ్రీ స్తుతియనే కనకధారా స్తవ టీక
172 యతిరాజవింశతి టీక

173 ధాటీపంచక టీక
174 శ్రీరంగనాథస్తోత్రటీక
175 క్షమాషోడశి టీక
176 శ్రీ వేంకటేశస్తోత్ర టీక
177 నరసింహాష్టక టీక
178 దేవరాజాష్టక టీక
179 దేవరాజమంగళ టీక
180 తిరుమంత్రార్థ టీక
181 ఆచార్య హృదయప్రథమ ప్రకరణ టీక
182 భగవత్కథామృతము
183 ఆళ్వార్ల వైభవము
184 దివ్యదేశ దర్పణము
185 విశేషార్థ రత్నమాల
186 సత్సంప్రదాయసారనిధి
187 పూర్వాచార్య ప్రభావము
188 కంచి దేవప్పెరుమాళ్ళ వైభవము
189 వేదాంతదేశిక. వైభవము
190 తిరుప్పల్లాండు టీక
191 పెరియాళ్వార్ తిరుమొழి టీక
192 నాచ్చియార్ తిరుమొழి టీక
193 తిరుప్పావ టీక
194 నిత్యానుసంధాన టీక
195 అపూర్వ రామాయణము
196 ఉత్తర దివ్యదేశ దివ్యప్రబంధావళి
197 బదరియాత్రా ప్రదీపము
198 శ్రీ భాష్యార్థసార సంగ్రహము
199 మలయాళ దివ్యదేశయాత్ర
200 శరణాగతి సామ్రాజ్యము
201 ఉపన్యాస రత్నావళీ
202 జగదాచార్యసూక్తి సుధానిధి
203 నాచ్చియార్ తిరుమొళి సారము
204 పెరియాళ్వార్ తిరుమొழి సారము
శ్రీ రామానుజ పత్రిక (ఇది మాస పత్రిక.)

தமிழ் நூற் பகுதி [தமிழ் நூல்கள் மொத்தம் 266]

## செந்தமிழ்நூற்களும், மணிப்ரவாளநூற்களும்

இப் பகுதியிலடங்கும்.

கீழே பக்கம் 281-ல் குறித்த பன்னிரண்டு துறைகளினடைவே காண்மின்.

### 1. பூர்வாசார்ய ப்ரபாவ நூற்கள்

205. கூரத்தாழ்வான் வைபவம்
206. ஸ்ரீராமாநுஜர் வைபவம்
207. அனந்தாழ்வான் வைபவம்
208. ஆழ்வார்கள் வைபவம்
209. வேதாந்த தேசிகன் வைபவம்
210. மணவாளமாமுனிகள் வைபவம்
211. அண்ணா வைபவம்
212. பூர்வாசார்ய ப்ரபாவம்
213. புரட்டாசித் திருவோண மலர்
214. ஐப்பசித் திருமூல மலர்
215. வாதிபீகர விஜயம்
216. அண்ணாவின் கால நிர்ணயம்.

### 2. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்

217. அத்திகிரி வைபவம்
218. திவ்யப்ரபந்த பகவத்கதாம்ருதம்
219. ஸ்ரீ ராமாயண ஸாரம்
220. வான்மீகி ராமாயண வசனம்
221. அபூர்வ ராமாயணம்
222. நரஸிம்ஹாவதார சரிதம்.

## 3. உபந்யாஸ நூல்கள்

223. ஸ்ரீ ராமாநுஜ பூஷணம்
224. பக்தாம்ருதம்
225. பன்னிருதிங்களநுபவம்
226. அறுபத்திரண்டு உபந்யாஸ மாலை
227. எம்பெருமானாரறுபத்திரண்டு
228. சாரீரகமீமாம்ஸை யறுபத்திரண்டு
229. பகவத்கீதை யறுபத்திரண்டு
230. அறுபத்துமூன்று உபந்யாஸமாலை
231. சக்ரவர்த்தி திருமகனறுபத்து நான்கு
232. அறுபத்துநான்கு நன்மொழிகள்
233. அறுபத்துநான்குநல்வார்த்தைகள்
234. அறுபத்துநான்கு ஆராய்ச்சி மாலை
235. விசதவாக் சிகாமணி வாக் வைசத்யம்
236. அங்கண்மா ஞாலத்தமுது
237. அர்ச்சாவதார வைபவம்.

## 4. வேதாந்தார்த்த விளக்க நூல்கள்.

238. ஸ்ரீ பாஷ்ய ஸாராம்ருதம்
239. த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்
240. விசேஷார்த்த ரத்நநிதி
241. ஸ்வஸ்வரூப நிரூபணம்
242. பரஸ்வரூப நிரூபணம்
243. ஸஹஸ்ரநாம பாஷ்யப் பெருமை
244. விஷ்ணு ஸஹஸ்ரநாம வுரை.
245. மாமுனிவன் மேற்கோள் விளக்கு
246. அத்ருஷ்டார்த்த ஸர்வஸ்வம்
247. தென்னாசார்ய ஸம்ப்ரதாயம்
248. ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி
249. ஸ்வாபதேசார்த்த ஸாகரம்
250. விபவாவதார சோக தத்வம்
251. நரஸிம்ஹாவதார தத்வம்
252. தடஸ்தபரிசீலநம்
253. க்ருஷ்ணாவதார கதாரஹஸ்யம்

## 5. திவ்யப்ரபந்தார்த்த விளக்க நூல்கள்.

254. திருப்பல்லாண்டுதிவ்யார்த்ததீபிகை
255. பெரியாழ்வார் திருமொழி ,,
256. பெரியாழ்வார் திருமொழி பொழிப்புரை
257. திருப்பாவை திவ்யார்த்த தீபிகை
258. ,, மற்றொரு வகையான உரை
259. ,, ஸ்வாபதேசவுரை
260. ,, விசேஷார்த்தவுரை
261. நாச்சியார் திருமொழி திவ்யார்த்த தீபிகை
262. ,, சிறிது சுருக்கமான தெளிவுரை
263. பெருமாள் திருமொழி திவ்யார்த்த தீபிகை
264. ,, சிறிது சுருக்கமான தெளிவுரை
265. திருச்சந்த விருத்த திவ்யார்த்த தீபிகை
266. ,, சிறிது சுருக்கமான தெளிவுரை
267. திருமாலை திவ்யார்த்த தீபிகை
268. திருப்பள்ளியெழுச்சி ,,
269. அமலனாதிபிரான் ,,
270. கண்ணிநுண் சிறுத்தாம்பு ,,
271. பெரிய திருமொழியாயிரம் தீபிகை
272. திருக்குறுந் தாண்டகம் ,,
273. திருநெடுந் தாண்டகம் ,,
274. முதல் திருவந்தாதி ,,
275. இரண்டாந் திருவந்தாதி ,,
276. மூன்றாந் திருவந்தாதி ,,
277. நான்முகன் திருவந்தாதி ,,
278. திருவிருத்தம் ,,
279. திருவாசிரியம் ,,
280. பெரிய திருவந்தாதி ,,
281. திருவெழு கூற்றிருக்கை ,,
282. சிறிய திருமடல் ,,
283. பெரிய திருமடல் ,,

284. திருவாய்மொழியாயிரம் ,,
285. இராமாநுச நூற்றந்தாதி ,,
286. ,, சுருக்கமான தெளிவுரை
287. நித்தியாநுஸந்தான வுரை
288. திவ்யப்ரபந்த ஸாரத்திரட்டு
289. திவ்யப்ரபந்த ஸாராம்ருதம்
290. திவ்யப்ரபந்தக் கண்ணடி
291. திவ்யப்ரபந்தத் திருநாமமாலை
292. அருளிச் செயலாராய்ச்சி
293. அருளிச்செயல் பாகவதம்
294. ஆழ்வார்களுகந்த இராமன்
295. ஆழ்வார்களுகந்த கண்ணன்

## 6. ஆசாரியர்களின் தமிழ் நூல்களுக்கு உரைகள்.

296. உபதேச ரத்தினமாலையுரை
297. திருவாய்மொழி நூற்றந்தாதியுரை
298. ஆர்த்திப் பிரபந்தவுரை
299. ஞானஸாரவுரை
300. ப்ரமேயஸாரவுரை
301. ஸப்தகாதையுரை
302. அடைக்கலப்பத்து உரை
303. அத்திகிரிமாகாத்மியவுரை
304. திருச்சின்னமாலையுரை
305. பிள்ளையந்தாதியுரை
306. (தனி) கம்பரின்பக் கவித்திரட்டு

## 7. ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்.

307. முமுக்ஷுப்படிஸாரம்
308. ஸ்ரீவசநபூஷணஸாரம்
309. தத்வத்ரயஸாரம்
310. ஆசார்யஹ்ருதயஸாரம்
311. ,, சிறிது சுருக்கமானது
312. ஆசார்யஹ்ருதயப் பதவுரை

## 8. ஸ்தோத்ரம் முதலிய ஸம்ஸ்க்ருத நூல்களுக்கு உரைகள்.

313. அகிலபுவநஜந்ம வியாக்கியானம்
314. த்வம்மேஹம்மே வியாக்கியானம்
315. முகுந்தமாலை ,,
316. ஸ்தோத்ரரத்னம் ,,
317. சதுச்ச்லோகி வியாக்கியானம்
318. தேவராஜாஷ்டகம் ,,
319. சரணாகதிகத்யம் ,,
320. ஸ்ரீரங்ககத்யம் ,,
321. ஸ்ரீவைகுண்டகத்யம் ,,
322. ஸ்ரீவைகுண்டஸ்தவம் ,,
323. அதிமாநுஷஸ்தவம் ,,
324. ஸுந்தரபாஹுஸ்தவம் ,,
325 வரதராஜஸ்தவம் - அதிகவிரிவான வியாக்கியானம்
326. ,, அதிக விரிவில்லாத வியாக்கியானம்
327. ஸ்ரீஸ்தவ வியாக்கியானம்
328. ஸுதர்சந சதகம் ,,
329. ஸ்ரீரங்கராஜஸ்தவம் - இரண்டு சதகமும் ,,
330. ஸ்ரீ குணரத்ந கோசம் ,,
331. அஷ்ட ச்லோகி ,,
332. யதிராஜவிம்சதி ,,
333. தாடீபஞ்சகம் ,,
334. ராமாநுஜ சதுச்ச்லோகி ,,
335. ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரம் ,,
336. க்ஷமா ஷோடசி ,,
337. ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம் ,,
338. தேவராஜமங்களம் ,,
339. நரஸிம்ஹாஷ்டகம் ,,
340. காஞ்சீக்ஷேத்ரஸங்க்ரஹஸ்துதி ,,
341. தேவராஜ பஞ்சகம் ,,
342. பராங்குசாஷ்டகம் ,,
343. வரவரமுநி சதகம் ,,
344. வரவரமுநி பூர்வதிநசர்யா ,,
345. ,, உத்தரதிநசர்யா ,,
346. நக்ஷத்ரமாலிகா ,,
347. த்ரமிடோப நிஷத்ஸங்கதி ,,

**(தேசிக ஸ்தோத்ர வியாக்கியானங்கள்)**

348. ஹயக்ரீவ ஸ்தோத்ர வியாக்கியானம்
349. கோதாஸ்துதி ,,
350. பரமார்த்த ஸ்துதி ,,
351. வைராக்ய பஞ்சகம் ,,
352. ந்யாஸ தசகம் ,,

353. பகவத் த்யாந ஸோபாநம் ,,
354. தசாவதார ஸ்தோத்ரம் ,,
355. அபீதி ஸ்தவம் ,,
356. கோபாலவிம்சதி ,,
357. யதிராஜ ஸப்ததி ,,
358. ரகுவீரகத்யம் ,,
359. த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி ,,
360. த்ரமிடோப நிஷத் ஸாரம் ,,
(ஸ்வகீய ஸம்ஸ்க்ருத நூல்களினுரைகள்)
361. கலிவைரி தசகம் ,,
362. ஸ்ரீமத் க்ருஷ்ணகுருஸ்துதி ,,
363. லோகாசார்ய ஸ்தோத்ரம் ,,
364. வரவரமுநி தண்டகம் ,,
365. வரவரமுநி வைபவ ஸ்தோத்ரம் ,,
366. ஸ்ரீசைலேச தயாபாத்ர ஸ்தோத்ரம் ,,
367. ஸ்ரீமத் வரவரமுநி ஸ்தோத்ர ரஸாயநம் ,,
368. ஸ்ரீசைலேச தயாபாத்ர மங்களா சாஸநம் ,,
369. ஸ்ரீமத் வரவரமுநி கர்ணாம்ருதம் ,,
370. ஸ்ரீமத் வரவரமுநி நக்ஷத்ர மாலா ,,
371. ஸ்ரீமத் வேங்கடநாத குரு ஸ்தோத்ரம் ,,
372. வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகை ,,
373. யாத்ரா ஸ்தோத்ராம்ருதம் ,,
374. ஸபாபுஜங்கீஸர்வஸ்வம் ,,

## 9. வேதலக்ஷண விசார நூல்கள்.

375. ஸர்வஸ்வஸம்ரக்ஷணீ
376. சாஸ்த்ரஜ்ஞாந சாண பலகம்
377. ஸர்வஸ்வரக்ஷா
378. அஸூயா பரமௌஷதம்
379. வித்வத் வைதிக பூஷணம்
380. வைதிக வித்வதாபரணம்.

## 10. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்.

## 11. லோகாபிராம நூல்கள். 12. பரபக்ஷப்ரதி க்ஷேப நூல்கள்.

(அகராதி யடைவு.)

381. அத்புத சக்தி
382. அத்யமே பத்யார்த்த தத்வம்
383. ,, தத்வப்ரதிஷ்டா
384. ,, தத்வப்ரதிஷ்டா விஜய த்வஜம்
385. ,, விஜயத்வஜ வைஜயந்தீ
386. அர்ச்சாவதாரத் திருமண் காப்பு
387. ஆசார்ய ஹ்ருதய பாடபரிஷ்காரம்
388. ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி
389. ஆச்சான்பிள்ளையாறு ரஹஸ்யம்
390. ஆராய்ச்சி மணிமாலை
391. உத்யாந ஸம்வாதம்
392. உத்யாந சிக்ஷா
393. உபதேச ரஸாயனம்
394. ஜகமத்யரஸம்
395. ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை
396. க்ஷேத்ர தீர்த்தயாத்திரை விளக்கு
397. சதபூஷணீ வஜ்ரகுடார ஸாரம்
398. சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை
399. சிரோமணி சிரோபூஷா
400. சிரோமணி சேகரம்
401. சுகஸாரண மதமர்த்தநம்
402 செந்தமிழாராய்ச்சி
403. சேஷாவதாரச் சிறப்பு
404. சேட்லூரார் மாயமயக்கம்
405. சேட்லூரார் நூலாராய்ச்சி
406. ச்ருத ப்ரகாசிகாரக்ஷா
407. ஸ்ரீ வைஷ்ணவ மஹாநிதி
408. ஸ்ரீமட ஸௌபாக்யம்
409. ஸ்ரீ ராமாநுஜன்
410. ஜகதாசார்ய ஸூக்தி ஸுதாநிதி
411. தத்வநிவேதநம்
412. தத்வஹிதோபதேசம்
413. தத்வார்த்த பூஷணம்
414. தானே யெழுதிய தன்சரிதை-

415. திருப்புட்குழிஸ்வாமி வைபவ பரிஷ்காரம்
416. ,, பரிசிஷ்டம்
417. திவ்யஸூரிசரித காலநிர்ணயம்
418. தீண்டாமை தொலையாமை
419. துவரைப்பிரான் திருவருள்
420. தேசிகப் பிரபந்தவுரை யாராய்ச்சி
421. தேசிகப்ரபாவ பரிஷ்காரம்
422. தேசிகஸூக்தி ஜயத்வஜமாலா
423. தேசிகஸூக்தி பரிமளம்
424. தேசிகஸூக்தி ஸித்தாஞ்ஜநம்
425. தேவப்பெருமாள் ஸந்நிதி விமர்சம்
426. நப்பின்னையவதார ரஹஸ்யம்
427. நமஸ்காரதத்வம்
428. நமஸ்காரதத்வ விஜயத்வஜம்
429. நற்பொருள் விளக்கம்
430. நான் கண்ட நல்லது
431. ந்ருஸிம்ஹ ப்ரியாநிரீக்ஷணம்
432. ந்ருஸிம்ஹ ப்ரியாஸமீக்ஷணம்
433. பக்தன் மூவிதமாராய்ச்சி
434. பகவச்சாஸ்த்ரதத்வம்
435. பரதுக்கதுக்கித்வ பரமார்த்தரக்ஷா
436. பாதுகாஸஹஸ்ர வுரையாராய்ச்சி
437. பாத்ரதத்வஜயத்வஜம்
438. பாத்ரதத்வ பரமார்த்தம்
439. பிழைதிருத்தப் பேரின்பம்
440. பெரியாழ்வார் திருமகள்
441. பேரருளாளன் பாடல் விளக்கம்
442. ப்ரணவாதிகாரதத்வம்
443. ப்ரமாணத் திரட்டாராய்ச்சி
444. மடவித்வத் விபூஷணம்
445. மாமுனிவனருள் விளக்கு
446. யுஷ்மத்ஸூக்தி ஸௌரபம்
447. ரக்ஷாவிமர்சசிக்ஷா
448. ராமாநுஜ தயாபாத்ர சரித்ரம்
449. ராமாநுஜ தயாபாத்ர தத்வம்
450. வம்பவிழ் கோதை தத்துவம்
451. வரதன் ஸந்நிதி வரலாறு
452. விதவாவபநவித்வம்ஸநம்
453. வித்வத்விநோதிநி
454. வ்யாமோஹ ப்ரசமௌஷதம்
455. வாத்ஸல்யார்த்த விவரணம்
456. வாத்ஸல்யார்த்த விஜயத்வஜம்
457. விஷ்ணு கோவில்களும் விசேஷ தர்ம பரிபாலனமும்
458. ஸதாசார்ய ஸூக்திரக்ஷா
459. ஸத்புருஷ ஸமாராதநம்
460. ஸத்ஸம்ப்ரதாய பரித்ராணம்
461. ஸத்ஸம்ப்ரதாய பரிசுத்தி
462. ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன்
463. ஸதுபதேசசிக்ஷா
464. ஸத்ய நாராயணஸ்த்ரம்
465. ஸத்ய நாராயணஸ்த்ரஸத்ய ப்ரதாபம்
466. ஸத்ய வாதிஸமாச்வாஸநம்
467. ஸாது ஸாத்விக ஸம்வாதம்
468. ஸௌஜந்ய ஸௌரபம்
469. ஸ்தோத்ரவ்யாக்யாந சோதநம்
470. ஸ்வக்ரந்த சோதநம்.

ஸ்வகீய க்ரந்தஸூசீ முற்றிற்று

## ஒரு குறிப்பு

—(o)—

நான்கு பாஷைகளிலும் மொத்தம் நமது நூல்கள் 420 என்று முன்னம் தெரிவித்தோம். எல்லா நூல்களையும் தேடி யெடுத்து ஆராய்ந்து எழுதுகையில் மொத்தம் 470 என்று தேறியது. இவற்றில் அந்தேவாஸிகள் பெயராலும் ஆப்தர்கள் பெயராலும் வெளியிட்டவை 50 போக 420 என்றதும் ஸரியே.

## ஸம்ஸ்க்ருத நூல்களைப்பற்றிய விவரணங்கள்

1. ஸ்ரீ காஞ்சீஹஸ்த்யத்ரி வைபவம்: முதற்பதிப்பு க்ரந்தலிபியிலும், இரண்டாம் பதிப்பு தேவநாகரலிபியிலுமான கத்யப்ரபந்தம். ஹஸ்திகிரி மாஹாத்மிய மென்கிற புராணத்தையநுஸரித்து காஞ்சீஹஸ்திகிரியின் வைபவம், தேவப் பெருமாளவதரித்த வரலாறு, தேவப்பெருமாளை நான்கு யுகங்களில் நால்வர் ஆராதித்த வரலாறு முதலியன மிக விரிவாக எழுதப்பட்டுள்ளது. ஸம்ஸ் க்ருதவ்யுத்பத்தி பெறவிரும்புவார்க்கு மிகவுபயோகமான நூல்.

2. தர்மவாதம்: தர்மார்த்த காம மோக்ஷங்களென்கிற சதுர்வித புருஷார்த்தங் களில் தர்மத்தைப்பற்றி விரிவான உபந்யாஸம். தேவநாகரலிபி. இந்நூல் தோன்றினதையும் அச்சிடப்பெற்றதையும்பற்றி இத் தன்சரிதையில் இரண்டாம் பகுதியில் (பக்கம் 82, 83-ல்) விவரிக்கப்பட்டிருக்கிறது,

3. பாலகோபதேசமாலிகா: ஸம்ஸ்க்ருத வித்யார்த்திகளுக்கு வ்யுத்பத்தி ஸாதகமாக எழுதப்பட்டது. தேவநாகரலிபி. கீழ் இரண்டாவது லக்கங்கொண்ட நூலோடு சேர்த்து 1908-ஆம் வருஷத்தில் அச்சிடப் பெற்றுள்ளது.

4. ஸுப்ரபாத திவ்யப்ரபந்த ப்ரதிக்ருதி: தொண்டரடிப் பொடியாழ்வாரருளிச்செய்த திருப்பள்ளி யெழுச்சிக்கு ச்லோகரூபமான மொழிபெயர்ப்பு. இருபது ச்லோகம். இதுவும் கீழ் 2, 3 லக்கங்கொண்ட நூல்களோடு சேர்த்து அச் சிடப்பெற்றுள்ளது. ஒன்றுசேர்ந்த இம்மூன்று நூல்களும் பாம்பே, கேமராஜ் ஸ்ரீவேங்கடேச்வர பிரெஸ்ஸில் கிடைப்பன.

5. முநிவாஹந ஸூரிஸூக்தி பத்யமாலா: திருப்பாணாழ்வாரருளிச்செய்த அமலனாதி பிரானுக்கு ச்லோகரூபமான நேர் மொழிபெயர்ப்பு.

6. திவ்யப்ரபந்த வைபவவிவேக: திவ்யப்ரபந்தங்கள் வேதமுமல்ல, வேதத்திற்காட் டில் உயர்ந்தவையுமல்லவென்று ஒரு ஸமயம் தேவப்பெருமாள் ஸந்நிதி நூற்றுக்கால் மண்டபத்தில் சிலர் செய்த பூர்வபக்ஷத்தை நிரஸித்து பிரமாணோபபத்திகளுடன் ஸித்தாந்த ஸ்தாபநம் செய்த சாஸ்த்ரார்த்த நூலிது. க்ரந்தலிபி. இந்நூலைப்பற்றி இத் தன்சரிதையில் பக்கம் 32-ல் விரிவுகாண்க.

7. த்ருவ சரிதம்: உத்தாநபாத புத்ரனான த்ருவனுடைய சரித்திரம். கத்ய ப்ரபந்தம். தேவநாகரலிபி.

8. குசேலோபாக்யானம்: குசேல முனிவன் சரித்திரத்தை ஐம்பது பக்கங்களுக்குக் குறையாமல் விரித்தெழுத வேணுமென்று ஒரு பெரியவர் நியமிக்க அப் படியே யெழுதினது இது. நியமித்தவர் கீர்த்தி மூர்த்தியான திருக்கண்ண புரம் பட்டப்பாஸ்வாமி. ஸம்ஸ்க்ருத கத்யகாவ்யம். தேவநாகரலிபி.

9. உபந்யாஸ ரத்நமாலா: ஐந்து பெரிய விஷயங்களைப்பற்றின ஐந்து உபந்யாஸங் கள். திருக்குடந்தையில் வாழும் உவே. சின்னமூ. ர. ஸ்ரீநிவாஸபாட்டரா சார்யரின் வேண்டுகோளுக்கிணங்கி எழுதப்பட்டவிது அவர் தம்மாலேயே (அப்போதிருந்த தம்முடைய) கோமளாம்பா முத்ராணாலயத்தில் க்ரந்தலிபியி லச்சிடப்பட்டது. இத் தன்சரிதையில் பக்கம் 47-ல் வரி 11-ல் ப்ரஸ்தாவிக்கப் பட்டிருக்கும் நபர் இந்த ஸ்ரீநிவாஸபாட்டரே.

10. ஸாவித்ரீ பாதிவ்ரத்யம்: புராண ப்ரஸித்தையான ஸாவித்ரியின் கற்பின் கனத்தைப்பற்றி * மாலதீமாதவீ ஸம்வாதமென்று வைத்து ஸம்பாஷணை நூலாக அமைக்கப்பட்டது. தேவநாகரலிபி. இதன் ரசநாசைலி பல பண்டிதர்களால் கொண்டாடப்பட்டது.

11. பரிபந்தி பஞ்சபங்கீ: வடமொழியில் பரிபந்தியென்கிற சொல் வைதிகபதமேயல்லது லௌகிகபதமல்லவென்றும், ஆனாலும் லௌகிக ப்ரயோகங்களிலும் இது காணப்பட்டு வருகிறதென்றும் ஒரு க்ரந்தத்தில் நாம் ப்ராஸங்கிகமாக எழுதியிருந்ததை திருவையாறு ஸம்ஸ்க்ருத காலேஜில் வியாகரணோபாத்யாயராக விருந்து இப்போது காஞ்சீபுரியில் விச்ரமித்து வருகின்ற ஸ்ரீ உவே. வித்வான். வேளிய நல்லூர் ஸ்ரீநிவாஸதாதாசார்யர் மறுத்தெழுத, அதன் மேல் கண்டனமாக வெழுதப்பட்டவிது ஐந்து பங்கங்கள் கொண்டபடியால் பஞ்சபங்கியென்று பெயர்பெற்றது. இதில் பெரும்பாலும் வியாகரண சாஸ்த்ரார்த்த விசாரம். க்ரந்தலிபி. * छन्दसि परिपन्थिपरिपणौ पर्यवस्थातरि * என்றார் பாணிநிமஹர்ஷி. * लोके तु परिपन्थिशब्दो न न्याय्यः * என்றார் ஸித்தாந்த கௌமுதீகாரர். * भाषायां परिपन्थिशब्दस्य असाधुः प्रयोगः * என்றார் பதமஞ்ஜரீகாரர். இங்ஙனே பலபல ஆதாரங்களைக் காட்டியும், ப்ரதிபக்ஷி தமக்கு ஸாதகமாகக் காட்டிய விஷயங்களை நன்கு கண்டித்தும் வையாகரணர்கள் மெச்சும்படியாக எழுதப்பட்ட நூலிது.

12. கோதாஸ்துதி வியாக்கியானம்: தேசிகனருளிச்செய்த கோதாஸ்துதிக்கு ஸ்ரீ உவே. மாம்பலம் வாஸுதேவாசார்ய ஸ்வாமியின் நியமனத்தினாலெழுதப்பட்ட ஸம்ஸ்க்ருத வியாக்கியானம். தேவநாகரலிபி. மணிப்ரவாள வியாக்கியானமும் தனிப்பட எழுதப்பட்டுள்ளது. அதைப்பற்றி மேலே காண்க.

13. ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா: பகவானுடைய வ்யாப்தியைப்பற்றி 122 ச்லோகங்களும் அவற்றுக்கு விவரணரூபமான கத்யங்களுங்கொண்ட நூலிது. இதைப்பற்றிச் சிறிது விளக்கமாகத் தெரிவிக்க வேண்டியதாகிறது. அடியேன் திருச்சந்த விருத்தத்திற்கு திவ்யார்த்த தீபிகையுரை எழுதும்போது அதில் 1949-ஆம் வருஷத்திய இரண்டாம் பதிப்பில் (பக்கம் 34-ல்) (பா. 5) * நின்றியங்கு மொன்றலாவுருக்கடோறு மாவியாய், ஒன்றியுள் கலந்து நின்ற * என்றவிடத்தில் எம்பெருமான் வஸ்துதோறும் பரிஸமாப்ய வர்த்திக்கும்படியைப்பற்றிப் பூருவாசாரியர்களின் ஸித்தாந்தத்தை விவரித்தெழுத நேர்ந்தது. அடியேனுக்குப் பரமாப்தரான (வைகுண்டவாஸி) ஸ்ரீ உவே. தாயார் ஸன்னிதி வரதாசார்யர்ஸ்வாமி அடியேனுடைய நூல்களை ஒன்றுவிடாமல் கடாக்ஷித்து ரஸித்துவருகிற முறையில் அவ்விடத்தையும் கடாக்ஷித்து அதை ஸ்ரீமத்பரமஹம்ஸ கோழியாலம் ஸ்வாமி ஸன்னிதியிலே வாசித்துக்காட்டிச் சர்ச்சை செய்தார். அப்போது அந்த ஸ்வாமி இது தேசிகஸூக்தி விருத்தமென்று ஸாதித்து பூர்ணத்வவிசார: என்றொரு மிகச்சிறிய நூலை வடமொழியிலெழுதி க்ரந்தலிபியில் அச்சிட்டு வெளியிட்டார். உடனே அந்த ஸ்வாமியின் திருவுள்ளத்தைத் தெளிவிக்கவேண்டி அடியேனெழுதிய நூலிது. இதற்கு அந்த ஸ்வாமி ஒன்றும் மறுப்பெழுதாமல் வாளா விருந்திட்டார். பிறகு சிலவாண்டுகள் கழித்து ஸ்ரீ. D. T. தாதாசார்யரென்பவர் ஸர்வசக்தி யென்றொரு சிறு சுவடியெழுதி வெளியிட்டார். உடனே அத்புத சக்தி யென்னும் நூலை நாமெழுதி அந்த தாதாசார்யருடைய அஸாது வாதங்களை நிரஸித்தோம். அதைப்பற்றிமேலே

தமிழ் நூற்பகுதியில்காண்க. அதன் பிறகு பல வாண்டுகள் கழித்து ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமிதாமே சில எழுதினதும் அவையும் ப்ரத்யாக்க்யாதமானதும் மேலே விளங்கும். இத் தன்சரிதை நூலில் கீழே (பக்கம் 178-ல்) ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ள ஸ்ரீமத் பரமஹம்ஸ. இளங்காடு ஸ்வாமி இந்த ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா க்ரந்தத்தைப் பலகால் கடாக்ஷித்து "அதிகரண ஸாராவளியோடும் தத்வ முக்தாகலாபத்தோடும் சேர்த்துப் பரிகணிக்கத்தக்கது இந்த நூல்" என்று தம்முடைய சிஷ்ய கோஷ்டியில் ஸாதித்து, உடனே "இந்த க்ரந்தத்தில் விசாரிக்கப்பட்டுள்ள விஷயங்களில் நம்மவர்களுக்கு விஸம்வாத மிருக்கலாம். அதைப்பற்றி நான் ஒன்றும் சொல்ல வரவில்லை. சாஸ்த்ரார்த்தங்களை யடக்கி ச்லோக ரசனை அமைத்திருப்பது தத்வமுக்தாகலாபாதிகளுக்குப் பின் வாங்கினதன்று என்பது என்னபிப்ராயம்" என்று ஸாதித்தார்.

14. வேதாந்த்யயந ஸர்வஸ்வம்: இது வேதலக்ஷண விசார பரமாக வடமொழியிலெழுதி க்ரந்தலிபியில் அச்சிடப்பட்டது. இதைப்பற்றிக் கீழே இரண்டாம் பகுதியில் (பக்கம் 128 முதல்) மிக விரிவாக விளக்கப்பட்டிருப்பது காண்க. கீர்த்தி மூர்த்திகளான ஸ்ரீமத் கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி, லக்ஷ்மீபுரம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி போல்வாரான வித்வத்வரிஷ்டர்கள் அடியேனுடைய நிரூபணப்ரணளி நிரவத்யமானதென்று ப்ரஸித்தப்படுத்தின பின்பு பிறருடைய வீண்வாத கோலாஹலம் உபசாந்தமாயிற்றென்று இதுவும் கீழே 134 முதலிய பக்கங்களில் விசதீகரிக்கப்பட்டுள்ளது.

15. ஸர்வ ஸ்வகவசம்: கீழே (லக்கம் 14) வேதாத்யயநஸர்வஸ்வத்தை தூஷிக்க வந்தவர்களில் ஒருவரான ஸ்ரீ உவே. அழிசூர் திருமலாசார்ய ரென்பவருடைய துர்வாதங்களைக் களைந்த நூலிது. க்ரந்த லிபியிலச்சிடப்பட்டது. மேலே ப்ரஸ்தாவித்த திருமலாசார்யருக்கு ஆசார்யரான ஸ்ரீ உவே, வித்வான். (வைகுண்டவாஸி) ராமாநுஜாசார்ய ஸ்வாமி சிலகாலம் ஸ்வக்ராமமான அழிசூரைவிட்டு உத்தரமேரூரில் வாஸஞ் செய்துவந்தார். அப்போது அவ்விடத்தில் அடியேனுக்குப் பரமாப்தராயிருந்த ஸ்ரீ உவே. ஸலக்ஷண கனபாடி. ராகவாசார்ய ஸ்வாமி இந்த நூலை அச்சிடுமுன் பெற்று அந்த ஸ்வாமியிடம் வாசித்துக் காட்ட, அந்த ராமாநுஜாசார்ய ஸ்வாமி இந்நூலுக்கு "சித்ராபர்வ சபேடிகா" என்று மறுபெயர் சாத்தினர். அதுவும் இந்நாலின் முடிவில் நிபந்திக்கப்பட்டிருக்கிறது. 'சித்ராபர்வசபேடிகா' என்றால் இன்னது பொருளென்றே அப்போது விளங்காமலிருந்தது. அந்த திருமலாசாரியர்க்கு சித்ராபர்வமென்று வழக்குப் பெயராமென்பது பிறகு தெரியவந்தது. [இங்கே ஒரு தத்துவம் மறுபடியும் ஞாபகப்படுத்தப்படுகிறது; நம்முடைய நூல்களில் சில நூல்கள்மட்டும் [7, 8-க்கு உட்பட்டவை] நமது அந்தேவாஸிகளின் பெயராலும் பரமாப்த ஸஹ்ருதய ஸஹ்ருந்மணிகளின் பெயராலும் வெளிவந்தவையுண்டு. ஸமய விசேஷங்களில் நம்முடைய வேத வேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் ஆவச்யகதாநுகுணமாக நாம் நடத்தும் உபந்யாஸங்களைக் கொண்டே அவை ஸித்தப்படுத்தப்பட்டனவாதல் அறிக. இங்ஙனே தமிழிலும் சில சிலவுண்டு. இவ்வகுப்பில் சேர்ந்தது இந்த ஸர்வஸ்வகவச நூல்.]

16. பரமார்த்த பரித்ராணம்: கீழ் 14, 15 லக்கங்களில் தெரிவித்தபடி வேதலக்ஷண விசாரச் சண்டை முற்றியிருந்த காலத்தில் மன்னார் குடியிலும் அக்ரஹார வேத பாடசாலையில் இதைப்பற்றிப் பரிஷத்து நடந்தபோது (வைகுண்ட

வாஸியான) ஸ்ரீ உவே. வித்வான் வண்ணுத்தங்கரை ஸீமாச்சார் ஸ்வாமி யென்பவர் திருவையாறு ஸம்ஸ்க்ருத காலேஜிலிருந்து வந்து பரிஷத்தில் கலந்துகொண்டார். அந்த ஸ்வாமிக்கு வேதாத்யயநகந்தமுமில்லாமலிருந்த படியாலே சர்ச்சிக்கப்படுகிற விஷயங்களின் ஸ்வரூபத்தைப் புரிந்துகொள்ள அவர் மிகவும் ச்ரமப்பட்டார். அப்போது அந்த ஸ்வாமிக்கு நல்தெளிவு உண்டாவதற்காக நூற்றுக் கணக்கான வைதிக ஸ்தலங்களை யெடுத்து அவ்வவ்விடங்களுக்குரிய உபபத்திகளை விளக்கி சாஸ்த்ரார்த்தமயமாக எழுதப்பட்ட வடமொழி நூலிது. க்ரந்தலிபியிலச்சிடப்பட்டது. அக்காலத்தில் தோன்றிய வேதலக்ஷண விவாதக்ருதிகளில் இந்த பரமார்த்த பரித்ராண நூல்தான் கடைசியாக நின்றது. இவ்வளவோடு பிறருடைய வம்புகோலாஹலங்கள் அடங்கியொழிந்தன. மதுரையில் ஹரி ஸமய திவாகரத்தவர் அச்சிட்டு வெளியிட்ட "கும்பகோண பிசாசோச்சாடந மந்த்ரமஹோததியின் முதல் தரங்கம்" என்று ப்ரஸித்தமான நூலினுலும் நிச்சேஷமாயொழிந்தது.

17. ரஸிக புதரஞ்ஜநம்: கீழ் 14, 15, 16 லக்கங்களில் விவரித்தபடி வேதலக்ஷண விசாரப் போரில் பங்கமடைந்த திருக்குடந்தை வாஸிகள் சிலர், அவ்வூரில் ப்ரஸித்த வித்வானுகவும் அடியேனுக்குப் பரமாப்தராகவுமிருந்த மஹாமஹோபாத்யாய ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி யென்பவரை புத்திபேதம் செய்து கிளப்பிவிட்டு அவரால் "அண்ணங்கராசார்யஸ்ய அபசப்த நாதி" என்று நாலைந்து காகிதங்கொண்ட ஒரு துண்டுப் பிரசுரம் வெளிவரும்படி செய்தார்கள். அதில் விஷயமென்னவென்றுல், கீழே நெ-9 உபந்யாஸ ரத்நமாலையில் அபசப்த ப்ரயோகங்களிருப்பதாக நிரூபணம். அதற்கு ப்ரத்யக்ஷரகண்டனமாக வெளியிடப்பட்டது இந்த ரஸிகபுதரஞ்ஜநமென்கிற நூல். இது க்ரந்தலிபி. இதன் பிறகு அந்த ஸ்வாமி மர்மப்ரகாசமென்ருெரு நூல வெளியிட்டு அதற்கும் உபதேச ரசாயநமென்கிற பதில் பெற்று உபசாந்தராகி அடியேனேடு புராதந ஸௌஹார்தத்தை அநுவர்த்திக்கச் செய்து கொண்டாரென்பது ஜகத்ப்ரஸித்தம். அவருடைய திருவுருவப்படம் இச்சரிதையில் பக்கம் 27-ல் காண்க.

18. ஜகத்குரு வைபவம்: அஸ்மதாசார்யரான ஸ்ரீகாதி ஸ்வாமி ஜகத்குருப்ரக்யா விக்யாதராயெழுந்தருளியிருந்த விஷயம் உலகமறிந்தது. அந்த ஸ்வாமியின் சரித்ரபரமாக எழுதப்பட்ட வடமொழி வசன நூலிது.

19. ஜகத்குரு பஞ்சாம்ருதம்: ஸ்ரீகாதி ஸ்வாமி விஷயமாகவே மங்களா சாஸனம், ப்ரபத்தி, ஸுப்ரபாதம், திநசர்யா, வைபவவிவரணம் என்று ஐந்து பகுதிகளாக வைத்து நூறு ச்லோகரூபமாக எழுதப்பட்ட நூலிது.

20. ஸுதர்சந குருஸ்துதி: காஞ்சியில் வேத வேதாந்தவைஜயந்தீ வித்யாலய ப்ரதிஷ்டாபந ஹேதுபூதராய் வித்யாநிதியா யெழுந்தருளியிருந்த ஸ்ரீமது பயவே. மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யஸ்வாமி விஷயமான துதிநூல். இந்த ஸ்வாமியைப்பற்றிக் கீழே இரண்டாம் பகுதியில் (97 முதலிய பக்கங்களில்) விசதமாக வரையப்பட்டுள்ளவை காண்க.

21. ஸபாபுஜங்கீஸர்வஸ்வம்: வேதாந்த தேசிகன் விஷயமான ஸ்துதிநூலொன்றில் "ஸபா புஜங்கீ குணபம் தருண்ய:" என்ற விடத்தில் 'ஸபா புஜங்கீ' என்ற தன் உண்மைப் பொருளை விரிவாக விவரிக்கத் தோன்றிய ஸம்ஸ்க்ருத காவ்யமிது. 105 ச்லோகமுள்ள இரண்டு ஸர்க்கங்கள் கொண்டது. தேவ

நாகரி, தெலுங்கு லிபிகளில் உரையுடனச்சிடப்பட்டுள்ளது. மூலமாத்ரமான பதிப்புமுண்டு. இதைப்பற்றி மேலே தமிழ் நூற் பகுதியில் விரிவுகாண்க.

22. ஸ்ரீசைலேசாஷ்டகவ்யாக்க்யாநம்: எறும்பியப்பா அருளிச் செய்த ஸ்ரீசைலேசாஷ்டகத்திற்கு வடமொழி வியாக்கியானம். க்ரந்தலிபியிலும் தேவநாகரியிலும் அச்சாகியுள்ளது. தமிழுரையுமுண்டு; அதைப்பற்றி மேலே.

23. ஸ்ரீமத் வேங்கடநாத குருஸ்தோத்ரம்: "ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய:" என்கிற தனியனிலுள்ள (32) அக்ஷரங்களை அடைவே ஆதியாக வைத்து சார்தூலவிக்ரீடிதவ்ருத்தத்திலியற்றப்பட்ட தேசிகவைபவஸ்துதிநூலிது. தேவநாகரலிபியிலும் க்ரந்தலிபியிலும் தமிழுரையுடனச்சிடப்பட்டது.

24. ஔத்தர திவ்யதேச திவ்யப்ரபந்தாவளி: ஸ்ரீபதரிகாச்ரமம், திருப்பிரிதி, கண்டமென்னுங் கடிநகர், நைமிசாரணியம், சாளக்கிராமம், வடமதுரை, விருந்தாவனம், சிங்கவேழ்குன்றம் முதலான வடநாட்டுத் திருப்பதிகளைப்பற்றி திவ்யப்ரபந்தங்களிலுள்ள பாசுரங்களையெல்லாம் ஸம்ஸ்க்ருதப்படுத்தியது இது. ஒரு பர்யாயம் வடநாட்டுத் திருப்பதியாத்திரையில் எழுதப்பட்டவிது அங்கேயே ப்ருந்தாவனத்தில் அச்சிடப்பட்டது.

25. வைதிக லௌகிகரஞ்ஜநதசகம்: ஸாமாந்ய விசேஷ பண்டிதஜநமநோரஞ்ஜகமாக எழுதப்பட்ட பத்து ஸம்ஸ்க்ருத கதைகள்.

26. உபாக்க்யாநரத்நமாலா: இதிஹாஸ புராணங்களிலிருந்து முக்கியமான சில உபாக்கியானங்களைத் தொகுத்து எழுதப்பட்ட வடமொழி வசன நூல்.

27. லக்ஷ்மீதத்வவிநிர்ணய: எம்பெருமானுக்குப் போலே பிராட்டிக்கும் விபுத்வ, ஜகத்காரணத்வ, உபாயத்வங்களுண்டென்று சொல்லுவாருடைய வாதங்களை யெல்லாம் நிரஸித்து ப்ரமாணோபபத்திகளுடன் ஸத்ஸம்ப்ரதாயார்த்தத்தை ஸ்தாபித்தெழுதப்பட்ட சாஸ்த்ரார்த்த நூல். இது, ஸ்ரீ தத்வசோதகமென்கிற பெயரால் சிறிது வேறுபாடுடன் மறுபதிப்புப் பெற்றிருக்கிறது.

28. மதிரேக்ஷணார்த்த தத்வம்: மஹர்ஷிகளும் மஹாகவிகளும் ஸ்த்ரீகளை மதிரேக்ஷணா என்பதுண்டு. இச்சொல்லின் உண்மைப் பொருளைப் பலர் அறியாது வேறாக எழுதியிருக்கையாலே "மதிரோ மத்தகஞ்ஜந:" என்கிற நிகண்டுவை யநுஸரித்து உண்மைப் பொருளையுணர்த்த நேர்ந்த தொருகால். அதைக்கண்ட வொரு பண்டிதர் அதற்கு மறுப்பெழுத, அதிலிருந்து இந்த விவாதம் மிகமிக வளர்ந்திட்டது. வேறு சில பண்டிதர்களும் இந்த விவாதத்தில் தலையிட்டு தீபசலபந்யாயேந சிதைந்தனர். அன்னவர்களில் D. T. தாதாசார்யர் தலைமை ஸ்தானம் பெற்றவர் இது, மேலே விவரிக்கப்படும் வடமொழி தென்மொழி நூல்களினாலும் விசதமாகும்.

29. பாடசோதநபரீக்ஷா: ஸ்ரீமத் பரமஹம்ஸ கோழியாலம் ஸ்வாமி பாட சோதநம் என்றொரு க்ரந்தம் வெளியிட்டிருந்தார். ஸ்ரீ பாஷ்ய கீதாபாஷ்யாதிகளான சில பூர்வ க்ரந்தங்களில் வெகுகாலமாகச் சில பல பாடப்பிழைகள் நேர்ந்துவிட்டன வென்றும், அவற்றைத் தம்முடைய விமர்ச சக்தியினால் திருத்துவதாகவுங் காட்டி அந்த க்ரந்தம் அந்த ஸ்வாமியால் வெளியிடப்பட்டிருந்தது. அதனால் பல வித்வான்களின் திருவுள்ளம் புண்பட்டிருக்கையில் அடியேன் இந்த பரீக்ஷா க்ரந்தம் எழுதிவெளியிட அவச்யமாயிற்று. இதைப் பற்றித் தேவப் பெருமாள் ஸந்நிதி நூற்றுக்கால் மண்டபத்தில் பண்டித

பரிஷத்து கூட்டி சர்ச்சிக்க வேணுமென்று கிளர்ச்சியேற்பட்டு அப்படியே பரிஷத்து நடைபெற்றது. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமிக்கு ப்ரதிநிதியாக ஸ்ரீ உவே. உத்தமூர் வீரராகவாசாரியர்ஸ்வாமி வந்து வாதித்தார். பிறகு அடியேனுடைய பிரதி வாதங்களைக் கேட்டுக் கொண்டிருந்து, மத்யஸ்த வித்வான்கள் ஸுப்ரஸந்நர்களாயிருப்பதறிந்து எழுந்து சென்றார். அது நிற்க. இந்த பாட சோதநபரீக்ஷா க்ரந்தத்தில் 72 பாராக்களால் பலபல அபூர்வ விஷயங்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன. முடிவில் 95 ச்லோகங்களையியற்றி நூலின் ஸாராம்சங்களை விளக்கிக்காட்டியிருக்கிறேன். இங்கும் வெகு சுருக்கமாக ஸாராம்சங்களைக் காட்டுகிறேன்.

உலகில் எந்த க்ரந்தங்களிலுமே அச்சுப் பிழைகள் பல நேர்ந்துவிடுவதுண்டென்பது யாவருமிசைந்த விஷயம். அப்படிப்பட்ட பிழைகளைத் திருத்துவதில் யார்க்கும் விவாதமிராது. ஸதாசார்ய ஸன்னிதியில் காலக்ஷேபம் செய்கிற மஹான்கள் அந்த அச்சுப் பிழைகளைப் பெரும்பாலும் திருத்தியே வைத்துக் கொள்ளுகிறார்கள். பிற்பட்ட சில அச்சுப் பிரதிகளில் அந்தத் திருத்தங்கள் ஏறியுமிருப்பதுண்டு. ஆகவே அத்தகைய பிழைகளை ஸ்ரீஸ்வாமி திருத்திக்காட்டி யிருப்பதில் யார்க்கும் வக்தவ்ய மொன்றுமிராது. பல திருத்தங்களைத் தாம் ஸ்வதந்திரமாகச் செய்துள்ளார். ஓலை ஸ்ரீகோசங்களை ஆதாரமாகக் காட்டிச் செய்திருக்கும் திருத்தங்கள் மிகச் சில. 100-ல் 95 திருத்தங்கள் கேவலம் தம்முடைய ஸ்வாதந்திரியத்தாலேயே செய்திருப்பவை. "இருக்கிற பங்க்தி அந்வயிக்காமையினால் இப்படித் திருத்தியே யாகவேண்டும்" என்றே பெரும்பாலும் திருத்தங்களைக் காட்டியுள்ளார். இதனால் பல பாடங்கள் அந்தபரம்பரையாய்த் தவறுதலாக வந்திட்டனவென்று இவருடைய திருவுள்ளம் வியக்தமாகக் காண்கிறது. சில விடங்களில், அந்தந்த க்ரந்தமருளிச் செய்த ஆசார்யரே தவறுதலாக எழுதிவிட்டாரென்று கருதி இப்படித் திருத்திக் கொண்டால் நன்றாயிருக்குமென்று எழுதியுள்ளார். இவற்றால் பல பெரியார்களின் திருவுள்ளம் கன்றுமென்று திண்ணமாகத் தெரிகிறது. ஆகவே இந்த க்ரந்தத்தை மிகவும் ஆழ்ந்து பரிசீலனை செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஸ்ரீ ஸ்வாமியும் இவ்விதமாகவே தமது நூலை ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யவேணுமென்றும் தவறுதல்களிருந்தால் அவசியம் எடுத்துக்காட்டவேணுமென்றும் அதனால் தம்மைத் தாம் திருத்திக்கொள்ள நேருமென்றும் தமது நூலிலேயே யெழுதியிருப்பதும் தவிர அடியேனுக்கும் விசேஷித்து நியமித்துள்ளார். மஹா நியமனமென்று அடியேன் சிரமேற்கொண்டு மிகவும் ஆழ்ந்து ஆராய்ந்து இந்த பரீக்ஷா க்ரந்தத்தை யெழுதி யுள்ளேன். ஸ்ரீ ஸ்வாமியின் பாடசோதன க்ரந்தத்தின் போக்கு நான்கு வகையாக அடியேனால் பிரிக்கப்பட்டிருக்கிறது. 1. அவசியமாக சோதிக்கவேண்டிய முக்கியமான விடங்களைத் தொடாமலே விட்டிட்டது. 2. ஏற்கெனவே சில பதிப்புகளில் திருத்தம்பெற்று வெளிவந்திருக்கின்றவற்றையே தாம் திருத்துவதாகக் காட்டுவது. 3. வ்யுத்பந்நர்களுக்கு அவசியமல்லாத திருத்தங்களைச் செய்வது. 4. வித்வான்கள் கடுமையாக ஆக்ஷேபிக்கக் கூடிய திருத்தங்களைச் செய்வது - என இந்த நான்கு வகுப்புக்களில் சேரக்கூடிய திருத்தங்கள் ஸ்ரீஸ்வாமியின் நூலில் மலிந்துள்ளன. வித்வான்கள் உகந்து ஏற்கக்கூடிய திருத்தங்களும் இடையிடையே சில வுண்டு. அவற்றை அபலாபம் செய்யகில்லோம். ஆனால் அவை சோபிக்கமாட்டாத நிலைமையில் விழுந்திட்டன. ஏனென்றால், வித்வான்கள் வருந்தவும் மறுக்கவுங் கூடிய திருத்தங்கள் நிறைந்து, அவை குறைந்திருப்பதால்.

வித்வான்கள் கடுமையாக ஆக்ஷேபிக்கக்கூடிய திருத்தங்களைச் செய்திருக்கிறாரென்கிறவிது ஸ்ரீ ஸ்வாமியின் க்ரந்தத்திற்கு கௌரவ ஹாநிகரமான பெரிய

விஷயம். எவ்விடத்தும் எல்லாப் பெரியார்களும் சுத்தமென்றே கொண்டு ஆதரித்து ப்ரவசனம் செய்துவருகின்ற பாடங்களை அசுத்தமென்றாக்கித் திருத்துவது நியாயமன்றே. தமக்கு அந்வயிக்கவில்லையென்ற காரணத்தைக் காட்டியே அனேக பாடங்களைத் திருத்தியிருக்கிறார். அந்வயிக்காத விடங்களில் மஹநீய வித்வான்களை யுபஸர்ப்பணம்பண்ணிக் கேட்டுத்தெளிய ப்ராப்தம். ஸாதாரணமாக எல்லார்க்கும் எளிதாக அந்வயிக்கக்கூடிய இடங்களிலுங்கூட ஸ்ரீஸ்வாமி ஆபாததஃ கடாக்ஷித்து மருண்டு திருத்தங்கள் செய்திருப்பதாக நன்கு தெரிகின்றது. அப்படிப்பட்ட பல இடங்களை அடியேன் இதில் எடுத்துக் காட்டித் தெளிவு பெறுத்தியிருக்கின்றேன். மிகப் பழைய ஏட்டுச்சுவடிகளைக் காட்டித் திருத்தங்கள் செய்தாலும் மஹான்கள் ஏற்றுக்கொள்ள ஆலோசிக்கும்படியான இடங்களில் இந்த ஸ்வாமி ஒரு ஸ்ரீகோச பலத்தையுங் கொள்ளாமல் தம்முடைய புத்தி பலத்தினாலேயே இந்தத் திருத்தங்களைச் செய்வதாகவும் ஸ்பஷ்டமாக வெழுதி "மனமே அரசன் மதியே மந்திரி" யென்கிற கணக்கிலே காட்டியுள்ள திருத்தங்களைப்பற்றி மற்றும் பல வித்வான்களும் விமர்சிக்க ப்ரார்த்தனை.

இந்த பாடசோதநபரீக்ஷா நூலிலுள்ள விஷயங்களுக்குக் கண்ணாடி.

1. அவச்யம் சோதிக்கவேண்டிய பாடங்களைத் தொடாமலே விட்டிட்டாரென்கிற விஷயம் நமது நூலில் 11, 24, 25, 26, 51 வது பாராக்களில் நிரூபிதம். 2. முன்னமே அச்சில் வெளிவந்திருக்கிற திருத்தங்களையே வீணாகத் தாம் செய்கிறாரென்பது 11, 28, 30, 32, 36, 38, 39, 40, 45, 46, 47, 48 பாராக்களில். 3. அவசியமற்ற திருத்தங்களைச் செய்திருக்கிறாரென்பது 12, 16, 50-ல். 4. ந்யாய வீரோதம், யுக்திவிரோதம், ச்ருதப்ரகாசிகாதிவ்யாக்யாந விரோதம் முதலிய காரணங்களினால் மஹான்கள் ஆக்ஷேபிக்கக் கூடிய திருத்தங்களைச் செய்திருக்கிறாரென்பது 17, 22, 23, 31, 37, 49, 52, 54 முதலிய பாராக்களில். 5. அவசியம் திருத்தவேண்டுமிடங்களில் ஏற்கெனவே திருத்தி வெளியிட்டிருப்பதை நோக்காமலோ அல்லது திரஸ்கரித்தோ அவ்விடங்களில் தாம் மிகவும் விரஸமான திருத்தத்தைச் செய்திருக்கிறாரென்பது 10, 34 முதலிய பாராக்களில் நிரூபிக்கப்பட்டிருப்பது காண்க. ஔசித்யத்தைக் கடந்து திருத்துகிறாரென்பது 13 முதலிய பாராக்களில். 6. ச்ருதப்ரகாசிகை, பாவப்ரகாசிகை மற்றும் பலவற்றை ஆழ்ந்து பரிசீலனை பண்ணாமலே ஸஹஸா தூஷிக்கிறாரென்பதை 17, 41, 42, 43, 44 ல் காண்க. 7. லேகந சோதநாதி கர்த்தாக்களுக்கு ப்ரமாதங்களிருப்பதாக நினைக்கிறவளவோடு நில்லாமல் க்ரந்தகர்த்தாக்களான பூருவர்களுக்கும் ப்ரமாதமுள்ளதாக நினைத்துத் திருத்துகிறாரென்பது 6-A, 59, 63 முதலிய பாராக்களில் நிரூபிதம். 8. மேலே குறித்தவை தவிர மற்ற பாராக்களில் க்ரந்த சோதனங்களைப் பற்றின பலவகையான மருமங்கள் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. இந்த க்ரந்தத்தின் ப்ரமேயம் எல்லார்க்கும் கண்ட தாரணமாம்படி 95 ச்லோகங்களுமியற்றப்பட்டு முடிவில் சேர்க்கப்பட்டன.

30. ரஸிக ரஸாயநம்: இது பெரிய நூல் அன்றாயினும் விஷயம் மிகப்பெரிது. ஸ்ரீமான் D T. தாதாசார்யருடைய பல வியாஸங்களுக்கு நம்முடைய கண்டனங்கள் புஸ்தக ரூபமாகவும் பத்ரிகா ரூபமாகவும் வெளிவந்திருக்கின்றனவென்பது விச்வப்ரஸித்தமான விஷயம். விவாதத்தில் ஆரம்ப விஷயமென்னவென்றால், ரகுவம்சத்தில் (4—2) * திலீபாநந்தரம் ராஜ்யே * என்கிற ச்லோகத்தின் மல்லிநாத வியாக்கியானத்தில் (எல்லாப் பதிப்புகளிலும்) பிரபலமான அச்சுப் பிழையொன்று விழுந்துவிட்டதாகவும் அதைத் தான்

திருத்திக் காட்டுவதாகவும் உத்யாநபத்ரிகையில் ஒரு வியாஸமெழுதி வெளியிட்டாரிவர். அங்கு அச்சுப்பிழை யாதொன்றும் கிடையாதென்றும், காண்கிறபாடத்தில் யாதொரு அநுபபத்தியும் கிடையாதென்றும் இவருடைய மருளை விரிவாக நிரூபித்து மஞ்ஜுபாஷிணியில் மறுப்பு வியாஸமெழுதியிருந்தேன். மஞ்ஜுபாஷிணி நிறுத்தப்பட்டு இற்றைக்கு 27, 28 வருஷமாகிறபடியால் முப்பது வருஷங்களுக்கு முந்தின செய்தி இதுவென்று உணரலாம். அந்த மறுப்பு வியாஸத்திற்கு இந்த தாதாசாரியர் யாதொரு பதிலும் எழுதவில்லை, எழுதவும் முடியாது. அதனால் உள்ளத்துள்ளே பகைகொண்டு அதை வளர்த்துவந்தார். அந்தப் பகையின் சேஷ்டைகள் பல முகமாக வெளிவரத் தொடங்கின. ஏறக்குறைய நூற்றுக்கு மேற்பட்ட விஷயங்களில் இவர்க்கும் நமக்கும் வாதவிவாதங்கள் ஏற்பட்டு அவை முழுவதும் ஏடுபட்டுக் கிடக்கின்றன. இத் தன்சரிதையில் பக்கம் 140-ல் ஸ்ரீமதுபயவே. அப்ரமேய வித்யாநிதி (வைகுண்டவாஸி) காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமியின் சோதிடவார்த்தையை விரிவாக உதாஹரித்திருக்கிறேனல்லவா? "பண்டிதர்கள் தாமாகவே வந்து உம்முடைய வாக்கில் மாட்டிக்கொள்ளுவர்கள்; திக்குமுக்கலாடி நிற்பர்கள்" என்று அந்த ஸ்வாமி சபதமிட்டுரைத்த திருவாக்கை யதார்த்தமாக்கி வைக்கும் பண்டிதர்களில் இவர் தலைவராய் நிற்பவர். இவருடைய உக்திகளுக்குக் கண்டனமாக நாமெழுதி வெளியிட்ட பல நூல்களில் ரஸிகரஸாயநமென்கிறவிதுவும் ஒன்று. இதில் இத் தாதாசாரியருடைய பல மருள்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் ஒன்றைப்பற்றிமட்டும் இங்குத் தெரிவிக்கிறேன். காஞ்சீபுரியில் வாழ்ந்த ஸ்ரீமத் தண்ட்ரி பட்டப்பா தாதாசாரியரென்கிற சிறந்த வித்வான் ஸுபாஷித நீவிக்கு ஆச்சரியமான வியாக்கியானமொன்று (வடமொழியில்) எழுதியிருந்தார். அதை இவர் உத்யாநபத்ரிகையில் சிறிது சிறிதாக அச்சிட்டு வந்தார். அதில் இவருடைய புத்திக்ருதமான பிழைகள் மலிந்திருந்தன. ஸஹிக்கமுடியாத பிழைகளைமட்டும் நாம் உபேக்ஷிக்கமாட்டாமல் எடுத்துக் காட்டிவந்தோம். அதில் அந்த பட்டப்பா ஸ்வாமி ப்ராஸங்கிகமாக ஒரு கதையெழுதியிருந்தார். அதாவது, ஒரு தனிகனுக்கு ஆண் குழந்தை பிறந்தது. அதையறிந்தவொரு சோதிடன் அக் குழந்தையின் ஜாதகத்தைப் பரிசீலனைபண்ணி ஏகாந்தமாகத் தந்தையிடம் வந்து 'இக் குழந்தை பத்துநாள் ஜீவித்திருந்தால் தாய் தந்தையர்க்கு மரணம் தப்பாது' என்று சொன்னான். அது கேட்ட தந்தை மிக வருந்தித் தன் மனைவியோடு ஆலோசித்தான். இக் குழந்தையை முடித்திடுவது நலமா? நமக்கு நேரும் மரணத்தை ஸஹித்துக்கொள்வது நலமா? என்று. நாம் பிழைத்திருந்தால் பல பிள்ளைகள் பிறக்கவுங்கூடும்; நமக்கு மரணம் நேர்ந்துவிட்டால், காப்பாரில்லாமல் இக் குழந்தையும் ஜீவித்திருப்பது அரிதாகும். இத்யாதிகளை ஆலோசித்து, குழந்தையை முடித்துவிடும்படி ஒரு வேலைக்காரியிடம் கொடுத்துவிட்டான். அவளும் அப்படியே செய்கிறேனென்று சொல்லிக் குழந்தையைப் பெற்றுக்கொண்டு போய் அதைக் கொலை செய்யமாட்டாமல், ஸந்ததியில்லாமல் வருந்திக்கொண்டிருந்த (தேசாந்தரஸ்தரான) தன்னுறவினரொருவர்க்கு அக் குழந்தையைக் கொடுத்துவிட்டாள். அக் குழந்தை தூரதேசத்தில் வளர்ந்துகொண்டிருக்கிறது. இந்த மாதா பிதாக்கள் அக் குழந்தை கொலையுண்டு போய்விட்டதாகவே நினைத்திருக்கின்றார்; பதினெட்டு வருடங்கள் கடந்தன. அவர்களுக்கு மறுபடியும் ஸந்தானமுமுண்டாகவில்லை. தேசாந்தரத்தில் இனிது வளர்ந்துவருகின்ற அப்புத்திரன் உரிய காலத்தில் சோதிட நூல் பயில்விக்கப்பெற்று, ஜ்யோதிச்

சாஸ்த்ர முகத்தால் தன் சரிதையைத் தானுணர்ந்து தன்னைப் போஷித்து வருகின்ற தந்தையை நோக்கி 'என் பிறப்புச் செய்தியை உள்ளபடி சொல்லும்' என்றான். அத்தந்தை உள்ளபடியே தெரிவிக்க, அப்போது 18 வயது வாய்ந்த இக் குமாரன் உடனே புறப்பட்டுத் தனது உண்மைத் தாய் தந்தையரிடம் சென்று சேர்ந்து தன்னை வெளியிட்டு எல்லாச் செய்திகளையும் கூறி 'நான் உங்கள் புதல்வன்' என்றான். அவர்களும் பரமானந்த மெய்தினர். இது கதை. இதில், வந்து சேர்ந்த குமாரன் எந்த மாதா பிதாக்களிடம் வந்தானோ அந்த மாதா பிதாக்களுக்கு (வ்யாக்க்யாதாவான பட்டப்பா ஸ்வாமியால்) ஒரு விசேஷணம் இடப்பட்டிருக்கிறது "अपुत्रतया हतपुत्रतया च खिद्यमानयोः" என்று. பட்டப்பா ஸ்வாமி தம் திருக்கையாலெழுதின ஸ்ரீ கோசம் க்ரந்தலிபியிலுள்ளது. க்ரந்தலிபியில் கவர்க்க த்விதீயாக்ஷரமும் வகாரமும் அதிகமாக பேதப்பட்டிராது. அதனால் (खि) என்னுமெழுத்தை இந்த முத்ராபக தாதாசார்யர் (வி) என்று வாசித்துவிட்டு (வித்யமாநயோ:) என்று காபி யெழுதிக்கொடுத்து அச்சிட்டுவிட்டார். இது அநியாயமான தவறுதலல்லவா? இதை உலகுக்கு எடுத்துக் காட்டாமலிருக்க முடியுமா? ஹாஹாகாரத்துடன் எடுத்துக்காட்ட வேண்டிய தவறல்லவா இது; ஆகவே உலகமறிய எடுத்துக் காட்டப்பட்டது. இதற்கு ப்ராமாணிகர் செய்ய வேண்டியதென்ன? பதில் ஒன்றுமெழுதாமல் ஸ்ரீமத் கம்பீரமாக இருந்து விடலாம்; அல்லது அச்சுப்பிழையாக விழுந்துவிட்டதென்று ஒரே வார்த்தையில் முடித்துவிடலாம். இவ்விரண்டையும்விட்டு, இங்கு खिद्यमानयोः என்றிருக்கத் தகவேதகாது; (வித்யமாநயோ:) என்றுதா னிருக்கவேண்டும் என்று ஆக்ரஹங்கொண்டு அந்த தாதாசார்யரால் எழுதப்பட்ட பதில் வியாஸங்களைப் பண்டிதவுலகம் கண்டு பரிஹஸித் திருக்கின்றது. அது கிடக்க; *செய்வன திருந்தச்செய்* என்றபடி எதையும் நாம் திருந்தச் செய்வது இயல்பாதலால் தண்ட்ரி. பட்டப்பா ஸ்வாமியின் ஸ்வஹஸ்தலிகிதமான ஸ்ரீகோசத்தை பஹிரங்கப்படுத்தி இதனுண்மையைத் தெரிவிக்க வேண்டி ஸ்ரீமதுபயவே. வித்வான். இளங்காடு ரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் இந்த சர்ச்சைகளை விஜ்ஞாபித்தேன். [இந்த ஸ்வாமியைப் பற்றி இத் தன்சரிதையில் பக்கம் 25 ல் காண்க.] உடனே அந்த ஸ்வாமி பட்டப்பாவின் திருக்குமாரரிடமிருந்து அந்தஸ்வஹஸ்தலிகித ஸ்ரீகோசத்தை வாங்கிவந்து, அன்றுநடந்த வெள்ளிக்கிழமைத் தாயார் புறப்பாட்டில் பண்டிதர்களுக்கெல்லாம் அதைக் காட்டினார். அதில் 430-ஆம் பக்கத்தில் எட்டாவது வரியில் விவாதாஸ்பதமான பதமுள்ளது. ஸந்தேஹத்திற்கு ஈஷத்தும் அவகாசமில்லாதபடி खिद्यमानयोः என்றே எழுதப்பட்டிருப்பதை ஒவ்வொருவரும் கட்கூடாகக் கண்டார்கள். இதெல்லாம் இந்த ரஸிக ரஸாயந நூலில் விரிவாகக் காணக்கிடைக்கும். இந்நாலின் முகப்பில், மேலே குறித்த இளங்காடு ஸ்வாமியின் அபிநந்தன ச்லோகமாலிகையுமுண்டு. இதற்காக அந்த தாதாசாரியர் இந்த ஸ்வாமியிடம் பட்ட அபசாரங்கள் பல. இவ் விஷயத்தில் மிகவும் அநாவச்யகமாக வாதவிவாதங்கள் வளர்ந்திட்டது அத்யந்த சோசநீயம். இத்தகைய மற்றுள்ள விஷயங்களும் மேலே விரியும்.

31. க்ருதக்ருத்யப்ரதீக்ஷணம்: *ப்ராயோஹ்யக்ருதக்ருத்யத்வாத் ம்ருத்யோருத்விஜதே ஜந:, க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்* என்கிற ச்லோகத்திற்கு இன்சுவை மிக்க விவரணம். கத்யப்ரபந்தம்.

32. ஸ்ரீராமாவதார: ஸ்ரீராமாவதாரத்தில் விமர்சரூபமான சில விவரணங்களிதில்.

33. கோபாலபஞ்சாசத்: அஸ்மத்குலகூட ஸ்தரான ப்ரதிவாதிபயங்கரம் அண்ணவுக்கு வீதியாரவருவானென்கிற கண்ணபிரானது திருக்கோலம் மணவாள மாமுனிகள் திருவருளால் ஆராத்ய தேவதையாகக் கிடைத்த விஷயம் ஸுப்ரஸித்தம். அண்ணு ஸாதித்த ஸ்ரீக்ருஷ்ண மங்களத்தில் "ஸ்ரீவாதி பீகராக்க்யேந ஸ்ரீஸௌம்யவரயோகிந:, லப்தாய கோபபாலாய நித்யஸ்ரீர் நித்ய மங்களம்." என்றுள்ள ச்லோகத்தினுலும் ப்ரஸித்தம். அந்த திவ்ய மங்கள விக்ரஹம் அஸ்மதாசார்யரான ஸ்ரீகாதி ஸ்வாமி திருமாளிகையில் திருவாராதனம் கண்டருளி வருகிறபடி. இந்த கோபாலன் விஷயமாக இயற்றப்பட்ட ஐம்பது சுலோகங்கள் கொண்ட துதிநூல் இது. ஸ்ரீகாதி ஸ்வாமியின் வடதேச யாத்திரையில் உடன் வரும் சிஷ்யவர்க்கங்கள் கண்ட பாடமாக்கிப் பத்து வருஷகாலம் நித்ய மநுஸந்தித்து வந்தார்களிதை நித்ய திருவாராதன காலத்தில்.

34. ஸதாசார்யஸம்ரக்ஷா: மேலே தமிழ்நூற்பகுதியில் இப்பெயர் கொண்ட நூல் வரும். அந்த நூலின் ஸாரமான சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் கொண்ட வட நூலிது. க்ரந்தலிபியில் அச்சிடப்பட்டுள்ளது. பிராட்டியைப்பற்றினவிசாரம்.

35. ரோதஸீதத்வபோதிநீ: லௌகிகப்ரயோகங்களில் 'ரோதஸீ' என்று வரும் பதப்ரயோகத்தைப்பற்றின சாஸ்த்ரார்த்த விளக்கம். இது தமிழ்ப்பாஷையிலுமுண்டு- அது தமிழ் நூற்பகுதியில் காணத்தக்கது.

36. ஸ்ரீராமாயணதண்டகம்: ஸ்ரீராமாயணத்தில் ஆறுகாண்டங்களின் கதையையும் ஆறு தண்டகமாக அமைத்தது இது. ஒவ்வொரு தண்டகத்தின் முடிவிலும் ஒவ்வொரு சுலோகம் அந்தந்த காண்ட கதையின் ஸங்க்ரஹமாயமைந்தது. இது தெலுங்குலிபியிலும் தேவநாகரலிபியிலும் பதிப்பிக்கப்பட்டது.

37. நந்தநந்தநவைபவசூர்ணிகா: ஸ்ரீபாகவதத்திலும் ஸ்ரீவிஷ்ணு புராணத்திலுமுள்ள ஸ்ரீக்ருஷ்ண கதைகளைப் பூர்த்தியாக இருபத்துநான்கு பெரிய சூர்ணிகைகளில் அமைத்தது இது. கேசவாதி சதுர்விம்சதி நாமாவளீ க்ரமத்தில் இயற்றப்பட்டது. ஸங்கீத ரஸிகர்களுக்குப் பரமபோக்யமாம்.

38. பகவத்ராமாநுஜஸஹஸ்ரநாமஸ்துதி: எம்பெருமானர் விஷயமாக ஸஹஸ்ரநாமாவளீஸ்தோத்ரமியற்றத் தொடங்கி முந்நூறு நாமாவளியோடு நின்றது. விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் ஒவ்வொரு நாமத்தின் முதலெழுத்தே இந்த ஸ்துதியில் திருநாமங்களுக்கும் முதலெழுத்தாகவைத்துச் செய்யப்பட்டது. * விச்வம் விஷ்ணுர் வஷட்கார:* இத்யாதிச்லோகத்தில் வி, வி, வ, இத்யாதிகளான அக்ஷரங்களை ஆதியிலே கொண்ட நாமங்களிருப்பதுபோல இதிலுமுள்ளது; *வித்யாநிதிர் விசுத்தாத்மா வகுலாபரணச்ரித:, பூதார்த்தவாதீ பூபாரஹாரீ பூரிகுணேஜ்ஜ்வல:* இத்யாதியாக இந்த ஸ்துதியிலுள்ளது. இந்தஸ்துதி பூர்த்தியடையாமல் முந்நூறு திருநாமத்தளவிலே நின்றதற்குக் காரணம் இடையிலே மணவாளமாமுனிகள் பரமக்ருபையாலே தம் பக்கலில் துவக்கிக்கொண்டதனுல் அவர் விஷயமாகவே பலபல ஸ்துதிகளை இயற்ற நேர்ந்ததுவே யாம். அவை மேலே விவரிக்கப்பெறும்.

39. ஸ்ரீமத்க்ருஷ்ணகுருஸ்துதி: பெரியவாச்சான் பிள்ளை விஷயமாக 24 ச்லோகங்கள் கொண்ட ஸ்துதியிது. புத்தூர் அக்ரஹாரத்திலிருந்த ஸ்ரீ உவே. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் (ஸ்ரீவைஷ்ணவஸுதர்சந பத்ராதிபர் அட்வகேட்) இடையில் சிலகாலம் மனக்கலக்கமுற்று அடியேனேடு விவாதப்பட்டிருந்தது விச்வப்ரஸித்தம். அது மேலே தமிழ்நூற்பகுதியிலும் விசதமாகும். அந்த

ஸ்வாமி பகவத்க்ருபையினால் தாமாகவே தெளிந்து பழைய நட்பை அநுவர்த்திக்கச் செய்துகொண்ட பின்பு 'பெரியவாச்சான் பிள்ளை விஷயமாக ஒரு நல்ல ஸ்துதிநூல் இயற்றித் தரவேணுமென்று வேண்ட, அந்த வேண்டுகோளை வியாஜமாகக்கொண்டு எழுதப்பட்டவிது அவர் தம்மாலேயே தமது மாதப்பத்திரிகையில்வெளியிடப்பட்டதிது. தமிழுரையோடுதனிப்புத்தகமாகவுமுள்ளது. ஸ்வாமி இருபத்துநாலாயிரப்படி ஸாதித்ததற்காக 24 ச்லோகம்.

40. ரத்நபரீக்ஷா: தேசிகனருளிச்செய்த ந்யாயஸித்தாஞ்ஜநத்திற்கு வியாக்கியானமாக ஸ்ரீமத் திருப்புட்குழி ஸ்வாமி பணித்த ரத்நபேடிகையிலுள்ள ரத்னங்களில் ஒன்றைப்பற்றின பரீக்ஷை இது. இது 59 ச்லோகங்கள் கொண்டது; அவற்றின் தாத்பர்ய விவரணமான கத்யமாலிகையுமுள்ளது. இதில் விமர்சிக்கப்பட்டுள்ள விஷயத்தின் ஸாரத்தைச் சுருக்கமாகத் தெரிவிப்போமிங்கு. ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் ஈச்வரபரிச்சேதத்தில் * ச்ரியா ஸஹ துதாம்பத்யம் சாச்வதம்......* என்றுள்ள காரிகையின் வியாக்கியானத்தில் திருப்புட்குழியப்பா ஸ்வாமி ஸாதித்திருப்பதாவது घटपटयोः द्वित्वम् என்று சொல்லவேண்டுமிடத்தில் घटेन सह पटस्य द्वित्वम् என்று சொல்லவொண்ணாது; அப்படிச் சொன்னால் கடமும் இரண்டு, படமும் இரண்டு என்று சொன்னதாக ஆகுமேயொழிய 'கடமும் படமும் சேர்ந்து இரண்டு வஸ்துக்கள்' என்று சொன்னதாக ஆகமாட்டாது-என்று; இது ப்ராமாணிகர்கள் ஒப்புக்கொள்ளத்தக்கதன்று. घटपटयोः द्वित्वम् என்கிற வாக்யமும் घटेन सह पटस्य द्वित्वम् என்கிறவாக்யமும் ஸமரூபமான அர்த்தத்தையேகொண்டதாகும். 'மஹாபாரதமானது வியாக்யானத்தோடுகூட ஐம்பது ரூபா விலையுள்ளது' என்று சொன்னால் மூலமும் ஐம்பது ரூபா விலையுள்ளது, வியாக்யானமும் ஐம்பதுரூபா விலையுள்ளது என்பதாகப் பொருள்படுமோ! घटेन सह पटस्यापि द्वित्वम् என்று அபிசப்தஸம்வலிதமாக வாக்கியமிருந்தால் கடமும் இரண்டு, படமும் இரண்டு என்பதாகப் பொருள் தேறக்கூடும்......இத்யாதிகளான பல விஷயங்களையும் சாஸ்த்ர ஸம்வாதங்களையும் பரக்க நிரூபித்து ரத்நபேடிகாகாரருடைய வாதம் மறுக்கப்பட்டுள்ளது. இப்பெரியவர் ஸ்ரீவசநபூஷண மீமாம்ஸாபாஷ்யத்திற்குத் தாம் கண்டனமெழுதிவிட்டதாக இந்த ரத்நபேடிகையில் ஆங்காங்கு காட்டிவருகிறார்; அது பாமரப்ரதாரணமத்தனையென்று பண்டிதர்களின் உள்ளத்திற் பதியவைப்பதற்காக இந்தப் பரீக்ஷாக்ரந்தமெழுதப்பட்டது. இது க்ரந்தலிபியிலும் தேவநாகரலிபியிலுமச்சிடப்பட்டுள்ளது. இந்நூலுக்கு இதுவரை ஒரு வித்வானும் மறுப்பெழுத நெஞ்சாலும் நினைத்ததில்லை.

41. உத்யாநசுஷ்கவசோவிமர்ச: கீழே 30 லக்கமுள்ள நூலுக்கு விஷய பூதரானவர் உத்யாநபத்ரிகையில் அஸம்பத்தமாக எழுதியிருந்த பல விஷயங்களுக்கு விரிவான மறுப்பு. இது போன்ற நூல்களெல்லாம் வித்வான்களுக்குப் பாரிதோஷிகமாகக் கிடைக்கக் கூடியவையாதலால் விருப்பமுள்ளவர்கள் வரவழைத்துப் பார்த்து ஆனந்திக்கவேணும்.

42. ஸஹஸ்ரநாமபாஷ்யப்ரபாவ: ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு பட்டரருளிச்செய்த பகவத் குணதர்ப்பணமென்ற பாஷ்யத்தின் பெருமையைப் பலவிடத்து ஸ்வாரஸ்யங்களை யெடுத்துக்காட்டி நிரூபிப்பது இது.

43. யுஷ்மத்ஸூக்திஸௌரபம்: மணவாள மாமுனிகளருளிச்செய்த யதிராஜவிம்சதியில் * யுஷ்மத் பாதாரவிந்த யுகலம் பஜதாம் குரூணாம் * என்றவிடத்து 'யுஷ்மத்

பாத' என்றிருக்கக் கூடாதென்றும் 'த்வத்பாத' என்றேயிருக்க வேணுமென்றும் சிலரெழுதினதற்கு மறுப்பு. ப்ராமாணிகங்களான பரச்சத ப்ரயோகங்களை யெடுத்துக்காட்டித் தெளிவு பிறப்பிக்கத் தோன்றியது இது.

44. க்ஷேத்ரதீர்த்தயாத்ராதர்ச: அடியேனுடைய வடநாட்டுத் திருப்பதி யாத்திரை யொன்றில் க்ஷேத்ர தீர்த்த யாத்திரை விஷயமாக விரிவாயெழுதப்பட்ட வடநூலிது. அந்தந்த க்ஷேத்திரங்களிலுள்ள பல மஹான்களின் உருவப் படங்களுங்கொண்டதிது.

45. ஸாதுபாடஸௌவாதவம். பூர்வாசார்ய திவ்யஸூக்திகளிலும் மஹாகவிகளின் உக்திகளிலும் திருத்தமானபாடங்களின் சுவையைப்பற்றின விமர்சநூலிது.

46. ஸ்ரீமத்பரகாலமஹாயோகி வைபவம்: மைஸூரில் வர்த்தமாந காலத்தில் ஸ்ரீப்ரஹ்மதந்த்ர பரகாலாஸ்தான மடாதிபதியாக எழுந்தருளியிராநின்ற ஸ்ரீமதபிநவரங்கநாத பரகாலயதீந்த்ர மஹாஸ்வாமியின் திவ்ய சரித்ரம் ஸ்ரீஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்திமஹோத்ஸவ ஸமயத்தில் மடத்தின் கார்ய நிர்வாஹகர்களின் அபேக்ஷைக்கிணங்கி எழுதப்பட்டது. மடம் மூலமாகவே அச்சிடப்பட்டது. தெலுங்குலிபியிலும் தேவநாகரலிபியிலுமுள்ளது.

47. த்ராவிடாம்நாயரஸாஸ்வாத: திவ்ய ப்ரபந்தங்களை ஸம்ஸ்க்ருதபாஷையில் மொழிபெயர்க்கத் தொடங்கினபோது, திவ்யப்ரபந்தங்களிலுள்ள ரஸவிசேஷங்கள் ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களுக்கு விசதமாகத் தெரிவதற்காக வெகு லலிதமாய் எழுதப்பட்ட நூலிது.

48. வர்ணாச்ரமதர்மரக்ஷா: ஆலயங்களில் அரிஜநப்ரவேசக் கிளர்ச்சி தோன்றிய போது ஸ்ரீமான் காந்திஜீ அவர்களுக்கு எழுதியனுப்பப்பட்ட நூலிது. நமது வைதிகமநோஹரா பத்திரிகையி லச்சிடப்பட்டுள்ளது. தனிப் புத்தகமாகவும் அச்சாகும்.

49. கோஷ்டீநாதசதகம் திருக்கோட்டி யூரெம்பெருமான் விஷயமாக விஜ்ஞாபித்த 104 ச்லோகங்கள் கொண்ட துதிநூல். இதைப்பற்றி இத் தன்சரிதையில் கீழே பக்கம் 248-ல் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அப்போது அச்சிடப்படாமலிருந்தவிது இப்போது அச்சாகிவிட்டது.

50. ஹயக்ரீவசதகம்: ஹயக்ரீவன் விஷயமாக விஜ்ஞாபித்த 100 ச்லோகங்கள் கொண்ட துதிநூல். மஞ்ஜூபாஷிணீ பத்திரிகை நின்றுபோன பிறகும் வைதிகமநோஹரா ஆரம்பிப்பதற்கு முன்பும் இடைக்காலத்தில் "வேத வேதாந்த வைஜயந்தீ" என்னும் பெயரால் மூன்று மாதங்களுக்கொரு முறையாக ஸம்ஸ்க்ருதபத்ரிகை புஸ்தகாகாரமாக நடத்திவந்தேன். அதில் அநேக கத்ய ப்ரபந்தங்களும் பத்யப்ரபந்தங்களும் வெளியிடப்பட்டன. அவற்றுள் 'ஸ்தோத்ரமாலிகா' என்னும் பகுதியில் இது முதன்மையாக வெளியிடப்பட்டது. "மிக்க இளமையில் எழுதிய ஸ்தோத்ரமாலிகாதி க்ரந்தங்களை இப்போதுள்ள ஸ்வல்பமதி விகாஸத்தின்படி திருத்தி வெளியிடலாமாயினும் திருத்தாமலே வெளியிடுகிறேன்" என்று முகவுரை எழுதியிருக்கிறேனங்கு.

51. கருடவிம்சதிঃ பெரிய திருவடி விஷயமாக 20 ச்லோகம். கீலகவருஷ மார்கழிமீ ஸ்ரீரங்கத்தில் பதற்பத்து ஒன்பதாந்திருநாளன்று எம்பெருமானார் ஸந்நிதியில் ஸ்தோத்ரபாட கோஷ்டியிலிருந்த ஸ்வாமிகளின் நியமனத்தை முன்னிட்டு உடனே அவ்விடத்திலேயே இது விஜ்ஞாபிக்கப்பட்டதென்று

இதன் முகவுரையிலுள்ளது. முடிவில் 24-ஆம் ச்லோகம்.

* श्रीमद्रङ्गे भाष्यकारालयेऽस्मिन् गोष्ठ्यामस्यां दीयतां पण्डितानाम् ।

आज्ञां लब्ध्वा दासदासेन सद्यः प्रोक्तं स्तोत्रं ह्येतदार्यैः स्व्यकारि ॥ *

என்றதும் காண்க.

52. கமலாஸ்துதி: பெரிய பிராட்டியார் விஷயமாக 30 ச்லோகம். ஆர்யாவ்ருத்தம்.

53. ஆதிவராஹத்ரிம்சத்: திருவிடவெந்தை யெம்பெருமான் விஷயமாக 30 ச்லோகம். அக்ஷராந்தாதியாயும் ககாராதி அக்ஷரமாலையாயு மியற்றப்பட்டது.

54. கலிவைரிதசகம்: நம்பிள்ளை விஷயமாக 12 ச்லோகம். இது நம்பிள்ளை ஸன்னிதியில் க்ருத்திகைதோறும் பக்தவர்க்கங்கள் அநுஸந்தித்து வருவது.

55. லோகாசார்யஸ்தோத்ரம்: *லோகாசார்யாய குரவே* இத்யாதியான பிள்ளை லோகாசார்யருடைய தனியனிலுள்ள ஒவ்வோரெழுத்துக்கும் ஒவ்வொரு ச்லோகமாக இயற்றப்பட்ட துதிநூல். நம்பிள்ளை ஸன்னிதியில் த்வாதசி தோறும் முமுக்ஷுப்படி ஸேவித்தவுடனே அநுஸந்திக்கப்பட்டுவருவது இது.

56. ஸ்ரீமத்வரவரமுனிவைபவஸ்தோத்ரம்: *ஸ்ரீசைலேசதயாபாத்ரத் தனியனிலுள்ள ஒவ்வோரெழுத்துக்கும் ஒவ்வொரு ச்லோகமாக இயற்றப்பட்ட துதிநூல். நம்பிள்ளை ஸன்னிதியில் திருமூலந்தோறும் தத்வத்ரயம் ஸேவித்தவுடனே அநுஸந்தித்து வருவது இது.

57. ஸ்ரீசைலேசதயாபாத்ரஸ்தோத்ரம்: கீழ் 56 லக்கமுள்ள ஸ்தோத்ரமானது ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தனியனின் (ஸ்ரீ) என்கிற எழுத்துக்கு ஒரு ச்லோகம், (சை) என்கிற எழுத்துக்கு ஒரு ச்லோகம்...என்று இவ்வண்ணமாக இயற்றப்பட்டது. இந்த ஸ்தோத்ரம் அங்ஙனல்லாமல் (ஸ்ரீ) என்கிற எழுத்தில் சகார-ரேப-ஈகாரங்களிருப்பதால் இம்மூன்றெழுத்துக்கும் மூன்று ச்லோகம். (சை) என்னுமெழுத்தில் சகார-ஐகாரங்களிருப்பதால் இவ்விரண்டெழுத்துக்கும் இரண்டு ச்லோகம்...இவ்வண்ணமாக 86 ச்லோகங்களமைக்கப்பெற்ற துதிநூலிது. சென்ற பார்த்திவ௵ மணவாள மாமுனிகளின் மஹோத்ஸவத்தில் ஒன்பதாந்திருநாளிரவு திருவாய்மொழி சாத்து முறைத் திருவோலக்கத்தில் அரங்கேற்றம் செய்யப் பெற்றது இது. மேல் 65 லக்கம் முதல் 78 லக்கம் வரையிலுமுள்ள துதிநூல்களும் அரங்கேற்றப்பெற்றவை

58. அத்புதவார்த்தாப்ரகாச: இதைப்பற்றி அன்பர்கள் கவனிக்கவேணும். இதோர் அற்புதவார்த்தை கேளீர். முதல் தடவையாக அடியேன் பதரிகாச்ரம யாத்திரை சென்றது 1943௵ அதாவது ஸ்வபாநு௵ ஆனி மாதத்தில். ஏழெட்டு அநுசரர்களுடன் புறப்பட்டு பதரிகாச்ரமத்தைப் பேரின்ப வெள்ளமாக ஸேவித்துக்கொண்டு மீளுகையில் வழியடைவே அயோத்யை முதலான திவ்ய தேசங்களையும் ஸேவித்துக்கொண்டு ப்ரயாகக்ஷேத்ரம் (அலஹாபாத்) வந்து சேர்ந்தேன். அங்கு தாராகஞ் ஜென்னுமிடத்தில் கங்கைக்கு அதி ஸமீபத்தில் ஒரு மாளிகையின் மாடிமேல் தங்கியிருந்தேன். அந்த மாளிகையின் பக்கத்தில் ஒரு ஸ்ரீவைஷ்ணவபக்தர் தேசிகனுடைய க்ருதியாகிய ஸுதர்சநாஷ்டகத்தை நல்ல ராகத்தோடு உச்சஸ்வரத்தில் பாடிக்கொண்டிருந்தார். ச்லோகந்தோறும் *ஜயஜய ஸ்ரீஸுதர்சந ஜயஜய ஸ்ரீஸுதர்சந* என்று வருகிறதே, அதை ஆனந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்த அடியேனுக்கு "நாமும் இப்படியொரு ஸ்துதிநூல் இயற்றுவோம்" என்று ஆசை கிளர்ந்தது. அப்போது இரவு மணி பத்து. அடியேன் படுத்துக்

கொண்டே கண்விழித்துக்கொண்டே அப்படியொரு ஸ்துதிநூல் இயற்றத் தொடங்கி ஒரு ச்லோகம் மனத்துள் சிந்தித்தேன்; அதாவது—

दिशिदिशि स्फीतकीर्तिक सवितृधिक्कारिदीप्तिक! सकलतेजस्समुच्छ्रित निखिलदेवैस्समाश्रित ।

विपुलकाशीपुरान्तक विविधरक्षोगणान्तक जयजय श्रीसुदर्शन जयजय श्रीसुदर्शन ॥ *

என்கிற இந்த ச்லோகத்தை நெஞ்சிலேயே சிந்தித்தேன். நாளை காலை சேஷபூரணம் செய்துகொள்வோமென்று நித்திரை செய்யலானேன். நடு நிசியில் மிகவிலக்ஷணமானதொரு கனுக்கண்டேன். ஆச்சரியமான ஸௌந்தர்ய லாவண்ய நிதியாய் பத்து பிராயமுள்ளவனை வொரு சிறுவன் என்னருகே வந்திருந்து, பூர்வ ராத்திரியில் நான் நெஞ்சினுள்ளே சிந்தித்த (மேலே குறித்த) ச்லோகத்தை மிக இனிமையாகப் பாடிக்கொண்டு என்னுடம்பைத் தடவிக்கொடுத்தான்; நாம் மனத்தினுள்ளேயே சிந்தித்த ச்லோகத்தை இச்சிறுவன் எப்படி தெரிந்துகொண்டு பாடுகிறான்! என்று கனவிலேயே விஸ்மிதனுன அடியேன் அவன் முகத்தை நோக்கினேன். அந்த முகாரவிந்த ஸேவையை என்னவென்று சொல்லுவேன்! பிறகு அச்சிறுவனுக்கும் எனக்கும் ஹிந்தியில் ஸம்பாஷணை நடந்தது. அப்பா! நீயார்? என்றேன். நான் யாரானல் உமக்கென்ன? எதற்காகக் கேட்கிறீர்? என்றானவன். நான் நெஞ்சினுள்ளே சிந்தித்திருந்த ச்லோகம் உனக்கு எப்படி பாடமாயிற்று? என்று கேட்டேன். அதற்கு அச்சிறுவன் 'என்னுலும் தெரிந்துகொள்ள முடியாததொன்று இருப்பதாக நீர் நினைக்கிறீரோ?' என்றான். அதற்கு நான் 'அப்படியா? நீ ஸர்வஜ்ஞனென்றறிந்து ஸந்தோஷிக்கிறேன்; நீ எதற்காக வந்தாய்? எங்கிருந்து வந்தாய்? என்றேன். அதற்கு இப்போது நான் சொன்ன ச்லோகம் போலவே இதே விருத்தத்தில் என்விஷயமான ஸ்தோத்ரமொன்றை உம்மிடமிருந்து பெற்றுக்கொள்ளவந்தேன்' என்றான். அதற்கு மேல் 'அயோத்யையிலிருந்தா வந்தாய்?' என்றேன்; ஆமாம் என்றான். [அயோத்தியில் ஒரு வேளைமட்டும் தங்கியிருந்து உடனே ப்ரயாகைக்கு வந்துவிட்டேனென்பது அன்பர்களறிந்திருக்கவேண்டும்.] அதற்குமேல் நான் கேட்டேன். என் வாக்கிலிருந்து ஒரு துதிநூலைப் பெற்றுப் போக வந்தேனென்கிறாயே; உன் பெயர் தெரியாமல் உன்னை நான் எப்படி ஸ்துதிப்பேன்? என்று.

உடனே அச்சிறுவன் ஒரு சிறு பெட்டியைத் திறந்து நவரத்னகசிதமாய் திவ்யமான வொருவில்லையெடுத்துக்கையிலேந்திக்கொண்டு புன்முறுவலோடு ஏதேதோ சொன்னான் அவை என்னல் கிரஹிக்க முடியவில்லை. அப்போது நான் அவனை நோக்கி "அப்பா! உன்னையறிந்து கொண்டேன்; நான் ஆசார்ய வர்யரைத் துதிப்பதையே விரதமாகக் கொண்டவன்; உன்னை எங்ஙனம் துதிப்பேன்? என்னை சோதிக்கவந்தாயோ?" என்றேன்; அதற்கு அச்சிறுவன்—'இல்லையில்லை; என்னுடைய ஆசையை யறிவித்தபடி; என்னைச் சிறிது துதித்ததனல் ஒரு கெடுதலும் வராது; ஆசார்ய ஸ்துதியேதான் எனக்கும் ப்ரியமானது. என்னையும் சிறிது துதிக்கலாமே—என்று சொல்லிக்கொண்டே சார்ங்கபாணியான அந்ததிவ்யபுருஷன்மறைந்துசென்றான். அடியேன் உடனே யெழுந்து தூயனுகி அந்த திவ்ய புருஷனுடைய கட்டளையை நிறைவேற்றத் தொடங்கி, அவன் திருக்கையில் தாங்கியிருந்த சார்ங்கத்தில் நவரத்னங்களைக் கண்டதனாலே நவரத்னமென்றே பெயரிட்டு ஒன்பது ச்லோகங்களை அம்மஹா புருஷன் விரும்பிய விருத்தத்திலேயே எழுதித் தலைக்கட்டினேன். இவ்வொன்பது ச்லோகத்தில் ஸ்ரீராமாயண கதை முழுவதும் ஸாரமாக அடக்கப்பட்டது. ஒவ்வொரு ச்லோகமும்

"ஜயஜய ஸ்ரீரகூத்வஹ! ஜயஜய ஸ்ரீரகூத்தம!" என்றே முடியும். அப்போது அடியேன் இவ்வளவோடும் நிறுத்தவில்லை; அநவரதமும் அடியேனுள்ளத்துள்ளே யுறையும் மணவாள மாமுனிகளையும், அவரது ப்ராசார்யரான பிள்ளை லோகாசாரியரையும் குறித்து ஏற்கெனவே துதிகள் விஜ்ஞாபித்திருந்தாலும், கனவில் கண்ட திவ்ய புருஷனுடைய திருவாக்கில் வெளிவந்த வார்த்தைகளை யநுஸரித்து அப்போது அவ்வாசாரியர்களிருவரைக் குறித்தும் இரண்டு ஸ்துதிகள் விஜ்ஞாபித்தேன். மாமுனிகள் விஷயமான ஸ்துதிக்கு ஸ்ரீமத்வரவரமுநீந்த்ரவிஜயமாலா என்று பெயர்: இது முப்பத்திரண்டு ச்லோகங்கள் கொண்டது. ஒவ்வொரு ச்லோகமும் 'ஜய ஜய ஸ்ரீமுநீச்வர! வரவர ஸ்ரீமுநீச்வர' என்றே முடிவு பெறுவது. மற்றொரு ஸ்துதி ஸ்ரீலோகாசார்ய கர்ணாம்ருதமென்பது. பத்து ச்லோகங்கள் கொண்டது. ஒவ்வொரு ச்லோகமும் * ஜயஜய ஸ்ரீகுருத்தம! ஜயஜய ஸ்ரீஜகத்குரோ!* என்றே முடிவுபெறுவது. ஆக இந்த மூன்று ஸ்துதிகளை அங்கே இயற்றினது ஆச்சரியமல்ல; அதற்குமேல் நடந்த ஆச்சரியம் கேண்மின். இந்த ஸ்துதிகளை அப்போதே அவ்விடத்திலேயே அச்சிடவேணுமென்று ஆசை தோன்றியது. போஜநாநந்தரம் நகரில் சென்று அச்சுக்கூடங்களை விசாரிப்போமென்றிருந்தேன். அந்த தாராகஞ்ஜிலேயே அதிஸமீபத்தில் 'பாரதவாஸீப்ரெஸ்' என்னுமச்சுக்கூடத்திற்குத் தலைவர் ப்ரதாப நாராயண சதுர்வேதி யென்பவர் இவர் எனக்கு முன்பின் பரிசயமில்லாதவர் பகவானால் ப்ரேரிதர்போலத் தாமாகவே என் ஜாகைக்குவந்து குசல ப்ரச்னங்கள் பண்ணித் தாம் முத்ராக்ஷர சாலாத்யக்ஷரென்பதைத் தெரிவித்து 'எனக்கு ஏதேனும் ஸேவைகிடைக்குமோ?' என்றார். என்ன சொல்லுவேன் நான்? அன்றே அப்போதே நான்கு மணி காலத்தில் மூன்று ஸ்துதிகளையும் அச்சிட்டுக் கொடுத்துவிட்டார். மேலே விவரித்தெழுதிய செய்திகளும் அதிலேயே அச்சிடப்பட்டன. இதற்கே அத்புத வார்த்தா ப்ரகாசமென்று பெயர். இந்த அத்புத வார்த்தையை ஏதோ நாவல் எழுதப்படுவதாகப் பிறர் நினைப்பர்களேயொழிய உண்மையென்று நம்புவது அரிதே. இங்ஙனம் வேறு யாரேனுமெழுதியிருந்தால் அதை நான் நம்பமாட்டேனன்றோ. பிறர் கருதுவது எங்ஙனேயாயினுமாகுக என் அந்தரங்க ஸாக்ஷிகமான செய்திகளையெழுதி நான் ஆனந்தப்படக் குறையில்லையே. இது நடைபெற்று இற்றைக்குப் பதினான்கு வருஷங்கள் பூர்த்தியாகிறது. ஆனாலும் இன்றைய நிகழ்ச்சி போலவேயுள்ளது. இது நிற்க; இதிற்காட்டிலும் மிகவற்புதமான மற்றொரு செய்தியும் தெரிவிக்க வேண்டியதுண்டு; அதனை மேலே நெ. 62. ஸ்ரீராமபத்ரகர்ணாம்ருதத்தின் விவரணத்தில் காண்க,

59. ஸ்ரீராமரத்ந நவரத்நம் நாம ஸ்ரீராமாயண ரஸாயநம். இதைப்பற்றிக் கீழ் நெ. 58ல் விவரித்தாயிற்று.

60. ஸ்ரீலோகாசார்ய கர்ணாம்ருதம். இதைப் பற்றியும் கீழ் நெ. 58ல் விவரித்தாயிற்று.

61. ஸ்ரீ வரவரமுநீந்த்ர விஜய மாலா. இதைப் பற்றியும் கீழ் நெ. 58ல் விவரித்தாயிற்று.

62. ஸ்ரீராமபத்ர கர்ணாம்ருதம். கீழ் நெ. 58 ல் விவரித்த செய்திகளுக்குத் தொடர்ச்சியான மேற் செய்தி கேண்மின். ப்ரயாக க்ஷேத்ரத்திலிருந்து சித்ரகூடம் ஸேவிக்கச் சென்றேன். மந்தாகினியின் கரையில் ஸுந்தரமான மந்திரத்தில் ரம்யமான ஹர்மியத்தில் படுத்துறங்குகின்றேன். முன்னாள் ப்ரயாக க்ஷேத்ரத்தில் காட்சி தந்த திவ்ய புருஷனே தன்னிற் காட்டிலும் மிக விஞ்சிய அழகுடையனாய்த் தனக்கு ஸமவயஸ்கனானவொரு தோழப் பிள்ளை

யோடுங் கூட வந்து அருகே நின்று மறுபடியும் தனது குதூஹலம் விஞ்சி வளர்ந்து வருவதாக ஏதேதோ பேசுகின்றான். 'அப்பா! உன்னுடன் வந்திருக்கின்ற இவனார்?' என்று கேட்டேன். அதற்கு 'அவனையே கேள்' என்றான். அப்படியே அவனைக் கேட்க முயன்ற போதே *இடவணரை யிடத்தோளொடு சாய்த்து இருகை கூடப் புருவம் நெறிந்தேறக் குடவயிறு படவாய்கடை கூடக் குழலூதிக் கொண்டு கருங்கண்தோகை மயிற் பீலி யணிந்து கட்டி நன்குடுத்த பீதக வாடையான திருக்கோலத்தைக் காட்டிக் கொண்டே தன் தோழனோடும் மறைந்தனன். தசரத நந்தந- நந்த நந் தனர்கள் ஏக காலத்திலே காட்சியளித்தருளப்பெற்ற களிப்பினால் உடனே யெழுந்து மந்தாகிநியில் குடைந்தாடி ஸ்ரீராம பத்ர கர்ணாம்ருதம், கோபால பக்தாம்ருதம், கோவிந்த கீதாம்ருதம் என்கிற மூன்று துதிகளை விஜ்ஞாபித்து அவற்றை மறுநாளே காசியில் அச்சிடுவித்தேன். இவற்றுள் ஸ்ரீராம பத்ர கர்ணாம்ருதம் 84 சூர்ணிகைகள் கொண்டது. ஸ்ரீராமாயண கதைகளை வரிசையாகப் பேசுவது. இதில் 21, 22 சூர்ணிகைகள் காண்மின்—

* चित्रकूटविहारहर्षितयोगिमण्डलराघव * अत्र चित्रमनुग्रहं मयि दर्शयन् स्थित राघव *

என்பன; இங்குச் சொன்ன அநுக்ரஹமே கீழ் விவரிக்கப்பட்டது.

63. ஸ்ரீகோபால பக்தாம்ருதம். இதைப்பற்றிக் கீழ் நெ. 62ல் விவரித்தாயிற்று. இது 43 ச்லோகங்கள் கொண்டது. ஒவ்வொரு ச்லோகமும் *ஜயஜய ஸ்ரீயதூத்வஹ ஜயஜய ஸ்ரீச கேசவ* என்று தலைக்கட்டுவதிது. யாத்திரையில் காசியில் இது அச்சிடப்பட்டபோது அவகாசக் குறைவினால் 13 ச்லோகங்கள் மட்டுமே அச்சிடப்பட்டன; அதன் சேஷமான மற்ற முப்பது ச்லோகங்கள் (நெ.44) க்ஷேத்ர தீர்த்தயாத்ராதர்சத்தின்முடிவில் அச்சிடப்பட்டன.

64. ஸ்ரீகோவிந்த கீதாம்ருதம். இதைப்பற்றியும் கீழ் நெ. 62ல் விவரிக்கப்பட்டுள்ளது காண்க. இது 4 சூர்ணிகைகள் கொண்டது. நம்மாழ்வார் திருவாய் மொழியைப்பற்றி *பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்* என்றருளிச் செய்தாப் போலே இத் துதிநூல்கள் ஸம்ஸ்க்ருத வித்வான்களுக்கும் ஸங்கீத ரஸிகர்களுக்கும் பக்தி பரவசர்களுக்கும் மிக்க இனிமையைத் தருவனவாதலால் இவையும் மற்றுஞ் சிலவும் இத் தன்சரிதையின் முடிவில் அநுபந்தமாகச் சேர்க்கப்படும்.

65. ஸ்ரீமத் வரவரமுநி ஸ்தோத்ர ரஸாயநம். மேலே, நெ. 66 ஸ்ரீசைலேச தயாபாத்ர மங்களா சாஸநஸ்துதியில் (ச்லோ 27.) * जाग्रद्दशायामात्मीयदिव्यमङ्गलविग्रहम् । प्रदर्शितवते मह्यं प्राङ्भोग्याय मङ्गलम् * என்று விஜ்ஞாபித்திருக்கிறபடி கனவிலன்றிக்கே நனவிலேயே அடியேனுக்கு மணவாள மாமுனிகள் ஸேவைஸாதித்தருளின விஷயம் அடியேனுடைய நூல்களையெல்லாம் ஆநுபூர்வியாகக் கடாக்ஷித்தவர்களுக்கு விசதம்; அப்படிப்பட்ட பரமாநுக்ரஹ மயரான மாமுனிகள் விஷயமாகப் பலபல ஸ்துதிகள் விஜ்ஞாபிக்க பாக்யசாலியானேன். கீழ் 56, 57, 61லக்க முள்ள மூன்று ஸ்துதி நூல்கள் தவிர, மேலே நெ. 79 வரையிலுள்ள பதினைந்து ஸ்துதிகளும் *அண்ணிக்குமமுதூறு மென்னாவுக்கே* என்னும்படி பரம போக்யமாக அமைந்தவை. இவையெல்லாம் யாத்திரையிலேயே விஜ்ஞாபிக்கப்பட்டவை. இவை தேவநாகரி தெலுங்கு க்ரந்த லிபிகளில் அச்சிடப்பட்டவை. பெரும்பாலும் தெளிவான தமிழுரையோடுங் கூடியவை. இவற்றுள் இந்த ரஸாயநஸ்துதி 34 ச்லோகங்கள் கொண்டது. ஸ்ரீசைலேச தயா பாத்ரமென்னும் தனியனிலுள்ள எழுத்துக்களின் வரிசையாக தீர்க்காக்ஷரமில்லாமல் ஹ்ரஸ்வாக்ஷரங்களையே அமைத்து இத் துதி நூல்

இயற்றப்பட்டது. பாதங்களின் முடிவில் மட்டும் தீர்க்காக்ஷர மிருப்பது விருத்தமன்று. இத்துதியில் தீர்க்காக்ஷரம் புகாமையினாலே ஸ்ரீசைலேசத் தனியனில் தீர்க்கமாகவுள்ள அக்ஷரங்களும் இதில் ஹ்ரஸ்வமாகவே யிருக்கும். எடுத்துக் காட்டாக இதிலிருந்து இரண்டு மூன்று ச்லோகங்களை இங்குத் தருவோம் ;—

श्रितजनविरचितदुरितगणं क्षणलवविदलितमकुरुत यः ।
स दिशति वरवरमुनिगुरुराट् मम हृदि निजशुभतनुमनिशम् ॥ १ ॥
शमदमसुखशुभगुणजलधे सुविशदविवरणकरणपटो ।
अनुदिनमिह भुवि तव यशसां ततिमहमनुभवविषयमधाम् ॥ २ ॥
निरवधिनिरुपममहिमनिधे वरमुनिवर ! तव शुभकृपया ।
अनुदिनमनुकूलमुदयमियात् स्तुतिततिरनवधि गुणभरिता ॥ ३२ ॥

66\. ஸ்ரீசைலேசதயாபாத்ர மங்களாசாஸநம் : ஸ்ரீசைலேசத் தனியனிலுள்ள எழுத்துக்களின் அடைவே ஒவ்வோ ரெழுத்துக்கு ஒவ்வொரு ச்லோகமாக இட்டு (அநுஷ்டுப்பில்) மணவாள மாமுனிகளின் மங்களா சாஸநபரமான 32 ச்லோகங்கள்கொண்டது; இதிலிருந்தும் சில ச்லோகங்கள் கேண்மின் ;—

श्रीशठारियतीशानश्रीसूक्त्यमृतपायिने । श्रीमत्सुन्दरजामातृमुनीन्द्रायास्तु मङ्गलम् ॥ १ ॥
शैशवात्प्रभृति श्रीमन्नारायणगुणाम्बुधौ । निमग्नहृदयायास्तु मुनिवर्याय मङ्गलम् ॥ २ ॥
लेखने विशदव्याख्यानिबन्धानां पटीयसे । लेलिहानेन्द्ररूपाय मुनीन्द्रयाास्तु मङ्गलम् ॥ ३ ॥
नित्यकैङ्कर्यनिष्णातशेषावतरणात्मने । मुनये रम्यजामात्रे नित्यश्रीर्नित्यमङ्गलम् ॥ ३२ ॥

67\. ஸ்ரீமத் வரவரமுநிகர்ணம்ருதம் : பகவத்விஷயத்தி லீடுபட்டவர்கள், *மணிவண்ணா ! உன் சேவடி செவ்விதிருக்காப்பு* என்றநுஸந்திப்பது போல மணவாளமாமுனிகளிடத்திலீடுபட்டவர்கள் *वरवर मुनिपदकमल ! जय*வரவரமுநிபதகமலஜய' என்று எப்பொழுதுமநுஸந்தித்திருக்கப்ராப்த மாகையாலே இந்த வாக்யத்திலுள்ள 13அக்ஷரங்களின் வரிசையாகஅமைந்த 13ச்லோகங்கள் கொண்டது இது. இதுவும் கெ. 65, ரஸாயநஸ்துதிநூல்போலவே ஹ்ரஸ்வாக்ஷரமயம்.

वरवरमुनिवर ! तव चरणौ रविसममिह मम मनसि परम् ।
सुनियतमुदयत इति वदतो मम खलु जनिरिह सुफलवती ॥ १ ॥
लसतिहि भुवि बहुगुरुजनवाक् फलमिह न किमपि भवति तया ।
मुनिवर यदि तव न भवति गीः ध्रुवमिह सुविपुलतिमिरमहो ॥ ११ ॥
जगदिदमनवधिगुरुभरितं भवति हि, भवतु च गुरुनियुनम् ।
शुभगुणवरवरमुनिगुरुराडयमिह निरुपम गुरुपदभाक् ॥ १२ ॥
यतिपतिमतमिह विशदयितुं कृतजनिरिह भुवि वरमुनिराट् ।
विलसति मम हृदि परमकृपाजलनिधिरविरतममितमुदा ॥ १३ ॥

68. ஸ்ரீவரவரமுநிநக்ஷத்ரமாலா. முத்ராலங்காரரீதியில் நக்ஷத்ரங்களின் பெயர்களையிட்டு எழுத்தந்தாதியாக அமைக்கப்பட்ட 27 ச்லோகங்கள் கொண்டதிது; இதில் திருமூல நக்ஷத்ரச்லோக மொன்று கேளீர்;

जन्मशुद्धवैष्णवाग्र्यमानसोद्यदप्रमेयमोदमूलम् अद्वितीय भक्तियुक्तदिव्यसूरिसूक्तितत्त्वबोधमूलम् ।

लक्ष्मणार्यदर्शनीय निस्तुलार्थरत्नराशिजीवमूलम् अत्र सुन्दरोपयन्तृयोगिवर्य निस्तुलावतारमूलम् ॥१९॥

69. ஸ்ரீவரவரமுநி வாரமாலா: ஞாயிறு முதலான ஏழு வாரங்களையிட்டு அமைக்கப்பட்ட ஏழுச்லோகங்கள் கொண்டதிது. இதில் மங்கள வாரத்தின் ச்லோகம்—

पूर्वं सर्वे देशिकवर्याः शुभचर्याः यन्मूर्त्याऽत्र प्रादुरभूवन् समवेताः ।

तेनैतेन श्रीवरयोगिप्रवरेण श्रीमान् रङ्गी मङ्गलवारान्निधिरासीत् ॥

70. ஸ்ரீவரவரமுநிதிதிமாலா: ப்ரதமை முதலான 15 திதிகளையிட்டு அமைக்கப்பட்ட எழுத்தந்தாதியான 16 ச்லோகங்கள் கொண்டதிது. இதில் நவமிக்கும் ஏகாதசிக்குமான ச்லோகங்கள் கேளீர்;—

गीर्वाणवाचि सततं नवनवमीदृक्स्तुतीरहं रचयन् । रुचिरोपयन्तृमुनिवरसेवाहेवाकभरित एव स्याम् ॥९॥

तुष्यन् विवेकरेकादशीतिपाठीति केवलं विप्रः । यदि वरमुनीन्द्रफणितिषु वैदुष्यमियात्तदा स सर्वज्ञः ॥११॥

இந்த ச்லோகத்தின் பொருளாவது, விவேகரேகாத்—விவேகமின்மையாலே, अशीतिपाठीति केवलं तुष्यन् विप्रः—கிருஷ்ணயஜுர் வேதத்தில் எண்பது ப்ரச்நங்களை யோதி அவ்வளவினாலேயே தன்னை க்ருதக்ருத்யனாக நினைத்து மகிழ்கின்ற அந்தணன் அவ்வளவில் தருப்தியடைந்திடாமல் மணவாள மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளில் வல்லமை பெறுவானாயின் அவன் ஸர்வஜ்ஞனே யாவன் என்கை. யஜுர்வேதத்தில் "அசீதியுமாயிற்று" என்றன்றோ சொல்லிவருகிறார்கள்.

71. ஸ்ரீ வரவரமுனிபக்ஷமாலா: க்ருஷ்ணபக்ஷ சுக்லபக்ஷங்களையிட்டு அமைத்த துதி நூலிது; இது நடாதூரம்மாளுடைய பரமார்த்த ஸ்துதிபோன்று இரண்டே ச்லோகமாகையாலே பக்தர்கள் நித்யாநுஸந்தானம் செய்யப்ராப்தம்.

युगलं वरमुनिपदयोस्सततं हृदये विचिन्तयेयुर्ये । यशसा जगदिदमखिलं शुक्लयितुं ते ध्रुवं प्रवीणास्स्युः ॥

स्यूतां वरवरमुनिवरशुभगुणमुक्ताफलैरिमां मालाम् । कलयत सदैव कण्ठे कृष्णो भगवान् शुभानि वितरेद्वः ॥

पक्षमालामिमां वाचि शिक्षमाणेषु सादरम् । पक्षपाती भवेद्विष्णुः वक्षसा चाद्रियेत तान् ॥

72. ஸ்ரீவரவரமுநிமாஸமாலா: மேஷம், வ்ருஷபம் முதலான 12 மாதங்களையிட்டுச் செய்த துதிநூலிது.

( ककाराद्यक्षरानुपूर्वी प्रायशः )

कलानामेष* सर्वासां निधिर्वरवरो मुनिः । करोतु सततं वासं कृपया मम मानसे ॥१॥

खलानां दमनायैव कलयन्नुदयं भुवि । वरयोगीश्वरस्स्वामी वर्धतां पुरुषर्षभः ॥२॥

* मेषराश्यादिनिर्देशः क्रमेण द्रष्टव्यः ।

73. ஸ்ரீவரவரமுநிருதுமாலா: வஸந்தம், க்ரீஷ்மம் முதலான ஆறு ருதுக்களையிட்டுச் செய்த துதிநூலிது. இதைப் பூர்த்தியாகவே உபஹரிப்போமிங்கு.

सदैव सन्तो वरयोगिपादद्वंद्वैकचिन्तानिरता मदीये । चित्ते वसन्तो मुदमद्वितीयां सम्पादयन्तां नियतं दयन्ताम् ॥
हाहा भवग्रीष्मविशेषतप्ताः सद्यो विहातुं सकलांश्च तापान् । श्रीरम्ययोगीन्द्रपदाम्बुजन्मच्छायामुपाश्रित्य भवन्तु हृष्टाः
श्रीमच्छठारातियतीन्द्रमुख्यप्राचीनसूरीन्द्रगणावतारः । श्रीरम्यजामातृमुनीश्वरोऽयं वर्षायुतं जीवतु भक्तभोग्यः ॥३॥
श्रीमद्वचोभूषणदिव्यसूक्तिव्याख्यादिविख्यापितवैभवाब्धिः । श्रीमद्यतीन्द्रप्रवणो मुनीन्द्रः जेजेतु भूमौ शरदस्सहस्रम् ॥

योगीन्द्र ! हे मन्तरि :: मन्त्रराजं नित्यं त्वदीयं मयि दासदासे ।
श्रेयांसि भूयांसि तरङ्गयेथाः कारुण्यवातोत्थकटाक्षपूरैः ॥५॥

(टिप्पणी). ::हे योगीन्द्र त्वदीयं मन्त्रराजं मन्तरि मयि=त्वदीय श्रीशैलेशमन्त्रनित्यमनननिरते मयीति यावत् ॥
कारुण्यपूरैः शिशिरान्तरङ्गः कान्तोपयन्ता मुनिसार्वभौमः । एवं सदा मां स्वगुणावलीनां सङ्कीर्तनैकोत्सुकमातनोतु ॥
इत्थमृतुमालिकास्तुतिमभिराममुनीन्द्रगुणमयीं पठताम् । अण्णङ्गरार्यरचितामनुकलमनघैव धीर्विजृम्भेत ॥

74. ஸ்ரீவரவரமுந்யயநமாலா: தக்ஷிண, உத்தர அயனங்களையிட்டுச் செய்த துதி நூலிது. இதையும் இங்குப் பூர்த்தியாக அநுபவிப்பிக்கின்றேன்.

भवाब्धिसन्तारणदक्षिणानि श्रीसूक्तिरत्नान्यमृतोपमानि ।
संदत्तवान् कान्तवरोपयन्ता योगीश्वरो मे न जहाति चित्तम् ॥
सर्वोत्तरश्रीशठवैरिवाचां स्वादिष्ठमर्थं समयेऽनुगृह्णन् ।
रङ्गाधिराजादुपलब्धपद्यो रम्योपयन्ता मुनिरेव दैवम् ॥२॥
अयननाम निवेश्य कृतामिमां वरमुनीन्द्रनुतिं हृदि कुर्वताम् ।
अयनमुत्तममच्युत आदरात् वितरतीह परत्र च पश्यत ॥ ३ ॥

75. ஸ்ரீவரவரமுநிஸம்வத்ஸரமாலா: ப்ரபவ, விபவாதிகளான அறுபது வருஷங்களையுமிட்டுச் செய்த 60 ச்லோகங்கள் கொண்ட மிக விலக்ஷணமான துதிநூலிது. இதில் இரண்டு நியமங்கள் உண்டு; (1) வருஷத்தின் பெயரை ச்லோகத்தின் தொடக்கத்திலேயேவைப்பது. (2) ஒவ்வொரு ச்லோகத்திலும் ஆரம்பத்தில் எந்த எழுத்து உள்ளதோ அதுவே மற்ற மூன்று பாதங்களுக்கும் ஆரம்பத்தில் நிற்கும்படி செய்வது. இதில் சில ச்லோகங்களை இங்கு அநுபவிக்கத் தருகிறேன்.

प्रभवो बहवस्सन्ति प्रसिद्धा भुवि सन्तु ते । प्रज्ञानिधिर्वरो योगी प्रभुरेको विवेकिनाम् ॥१॥
विभवान्विविधान् सद्भ्यः वितरीतुं प्रकल्पते । विशिष्य वरयोगीन्द्रविभवध्यानवासना ॥२॥
शुक्लपक्षेन्दुवन्नित्यं शुद्धसत्त्वं प्रवर्धते । शुभ्रां रम्यमुनेर्मूर्तिं शुद्धे मनसि भेजुषाम् ॥३॥
प्रमोदोऽतनुरस्माकं प्रवृद्धिं हृदि विन्दति । प्रसिद्धवरयोगीन्द्रप्रभावध्यानहेतुना ॥४॥
प्रजोत्पत्तिकृतौ नित्यं प्रवीणो विष्णुरस्तु सः । प्रजातानां प्रबोधार्थं प्रजज्ञेऽसौ वरो मुनिः ॥५॥
*आङ्गीरसकृदानन्दमावहन्तीर्महस्ततीः । आविष्कुर्वन्ममैवान्तरातिष्ठति वरो मुनिः ॥६॥
श्रीमुखाम्भोजनिर्गच्छच्छ्रीसूक्त्यमृतवर्षणैः । श्रीवैष्णवमतोद्धर्ता श्रीरम्यमुनिरेधताम् ॥७॥

* आनन्दमावहन्तीः , आङ्गीः=अङ्गसंबन्धिनीः(स्वदिव्यमङ्गलविग्रहस्येति यावत् ) महस्ततीः । असकृदाविष्कुर्वन्

भवसागरसन्तारो भवत्विति यदीच्छथ । भक्तिं वरमुनीन्द्रस्य भव्योक्तिषु करिष्यथ ॥८॥

युवत्वं प्रापुषां मा भूद्यौवनस्य वृथा व्ययः । युक्तं सुन्दरजामातृयोगिश्रीसूक्तिचिन्तनम् ॥९॥

धातुसाम्ये सति स्वैरं धावद्भिः किं नु साध्यते । धारणार्हा सतां कण्ठे धार्यतां वरयोगिवाक् ॥१०॥

ईश्वरो जगतां विष्णुरीर्यते तत्र मन्महे । ईष्टे वरमुनीन्द्रोऽसौ ईश्वरस्यापि पोषणे ॥११॥

बहुधान्यधनेच्छाभिर्बहुधा भ्रमतां भुवि । बद्धानां वरयोगीन्द्रो बहुशो नैति मानसम् ॥१२।

प्रमा दिव्यप्रबन्धेषु प्राप्तव्येति समुत्सुकाः । प्राज्ञाः वरमुनीन्द्रोक्तीः प्रकामं चिन्तयन्त्विह ॥१३॥

( अथवा श्लोकान्तरम् )

प्रमाधि चञ्चलं चेति प्रोक्तं गीतासु यन्मनः । प्रसभं यो जिगायैतत् प्रसिद्धस्स वरो मुनिः ॥१४॥

रौद्रीं धनुर्लतामल्पां रामश्चिच्छेद किं नु तत् । रौद्रसंसारगुल्मौघान् रम्ययोगी छिनत्ति नः ॥५४॥

दुर्मतिध्वंसनीस्सूक्तीः दुग्धेस्म वरयोगिराट् । दूषयन्तः परे तास्तु दुरितान्यार्जयन्त्यहो ॥५५॥

दुन्दुभिध्वनततूल्यै र्दूषणोक्तिविघोषणैः । दोषदूरस्थयोगीन्द्रं दूषयन्तो भुवो भराः ॥५६॥

रुधिरोद्गारिबाणौघान् रूक्षान् क्षेप्तुं पटुर्हरिः । रुचिरोक्तिभिरेवासौ रुन्धे सर्वान्वरोमुनिः ॥५७॥

रक्ता क्षिप्रं रसज्ञा मे रम्ययोगीन्द्रकीर्तने । रमारमणमुत्सृज्य रात्रन्दिवमुदञ्चति ॥५८॥

क्रोधनो दारुणो मूर्खः क्रूर इत्युक्तिगोचरः । कोऽपि नैव भवेद्वंशे कान्तयोगीन्द्रसेविनाम् ॥५९॥

अक्षयास्सम्पदस्सर्वा अत्रामुत्र च लिप्सवः । अभिराममुनिस्तोत्रमनुसन्दधतामिदम् ॥६०॥

76. ஸ்ரீவரவரமுநிஸஹஸ்ரநாமஸ்தோத்ரம்: மணவாளமாமுனிகள் விஷயமான ஸஹஸ்ரநாமம்

लक्ष्मीनाथसहस्रनामरचनासंसक्तचित्तं तु मां लक्ष्मीशस्स हरि स्स्वयं करुणया स्वप्ने समाजग्मिवान् ।

श्रीमत्सुन्दरयोगिवर्यविषये स्तोत्रं कुरुष्वैतदित्याज्ञाप्यान्तरधात्ततो वरमुनिं स्तौमीदृशस्त्रोत्रतः ॥

எம்பெருமான் விஷயமாக "அத்புத ஸஹஸ்ரநாமம்" என்று ஒரு ஸ்துதியியற்றத் தொடங்கினேனடியேன். அதில் அத்புதமாவது என்னெனில், ஒவ்வொரு திருநாமத்திலும் முடிந்த சொல்லையே (அல்லது எழுத்தையே) அடுத்த திருநாமத்தின் முதலாக அமைப்பது. இங்ஙனே எண்பது திருநாமங்கள் வரையில் இயற்றினேன். அவை வருமாறு:—

सर्वश्रुतिततिस्तुत्यः स्तुत्यमाहात्म्यशेवधिः । शेवधीभूतपादाब्जः पादाब्जाश्रितशोकहा ॥

शोकहारिनिजध्यानो ध्याननिष्णातसुग्रहः । ग्रहपीडादिसर्वार्तिसमूलोन्मूलनक्षमः ॥

क्षमादिसद्गुणाम्भोधिरम्भोधिशयनोत्सुकः । उत्सुकानन्तसद्भक्तहृत्सुखाधानतत्परः ॥

परमात्माऽऽत्मपादाब्जप्रणताशेषदैवतः । दैवतौघशिरोधार्यपादाब्जोऽब्जविलोचनः ॥

लोचनातिथिसद्भक्तमोचनोत्सुकमानसः । मानसैकनिधानार्हमहनीयशुभाश्रयः ॥

आश्रयाकांक्षिदेवेन्द्राद्याश्रितः श्रितमुक्तिदः । मुक्तिदानैकविख्यातः ख्यातसद्गुणसागरः ॥

[illegible]रोन्मथनोद्धर्षी हर्षिताशेषसज्जनः । सज्जनस्वान्तनिलयो लयसर्गादिकारणम् ॥

[illegible]शूरो रमानाथोऽनाथरक्षाविचक्षणः । क्षणनिर्लूनसर्वाघो घनसंनिभसद्वपुः ॥

पुष्कराक्षः क्षमाशाली लीलामानुषविग्रहः । हतराक्षसदैत्यौघो घनसंनिभविग्रहः ॥

हनूमद्भक्तिसंतुष्टः तुष्टूषद्भक्तिवर्धनः । नक्राक्रान्तगजत्राता तापविध्वंसनोदयः ॥

यमसंयमनिष्क्षातमुनिप्रत्यक्षगोचरः । रक्षिताशेष भुवनो नमज्जनभवान्तकः ॥

कमलास्तनकस्तूरीकर्दमाङ्कितविग्रहः ।

இவ்வண்ணமாக இயற்றிக்கொண்டு செல்லுகையில் அன்றிரவு எம்பெருமான் பேரருள்பொலியக் கனவிலே காட்சி தந்து "என் விஷயமான ஸஹஸ்ரநாம ஸ்துதிகள் பல இருப்பதால் மணவாள மாமுனிகள் விஷயமாக ஒரு ஸஹஸ்ரநாமம் இயற்றுவாயாக" என்று நியமித்து அந்தர்த்தானமடைந்த அதிசயம் வாசாமகோசரம். இது ஒரு யாத்திரையில் (பெஜவாடாவில்) கிருஷ்ணாநதீ தீரத்தில் நேர்ந்த ஸம்பவம். அந்த நியமனத்தை சிரஸாவஹித்து உடனே துயிலெழுந்து இந்த ஸ்ரீமத் வரவரமுநி ஸஹஸ்ரநாமஸ்தோத்ரமியற்ற ஆரம்பித்து அன்றே தலைக்கட்டினேன். எம்பெருமானின்னருளும் மாமுனிவனின் மஹாக்ருபையும் மிகவியக்கத்தக்கதாயிருந்தது

श्रीमान् सुन्दरजामातृमुनिस्संयमिसत्तमः । पर्यायभाष्यकृद्भोगिराजांशो भद्रवाक्प्रदः ॥

काषायवासाः कान्तोपयन्तृयोगी कलानिधिः । कांक्षिताशेषफलदः (१०) कामक्रोध विनाशनः ॥

यज्ञसूत्राञ्चितोरस्कः शिखाशेखरशोभनः । घोरसंसारकान्तारश्रान्तविश्रान्तिपादपः ॥

स्वपादाब्जसमासक्तभक्तसंतारणव्रती । कुदृष्टिध्वान्तमार्ताण्डः कुत्सितार्थ निषूदनः ॥

कुदृष्टिकुहनाच्छेत्ता कुदृष्टिमदमर्दनः । आर्जवैकान्तनिलयो (२०) भक्तवात्सल्यवारिधिः ॥

कौटिल्यदूरगस्सौम्यः सुन्दरास्यस्सुधीमणिः । अभिजातपदाम्भोजो नलिनायतलोचनः ॥

पुलकाञ्चित दिव्याङ्गः पुरुषोत्तम सेवनः । सर्वोपनिषदर्थज्ञः (३०) सर्ववेदार्थवित्तमः ॥

सर्वोपबृंहणाभिज्ञोऽभिज्ञशिष्यसमन्वितः । अष्टदिग्गजसच्छिष्याभिष्टुतोऽभीष्टपोषणः ॥

वानाचलमहायोगिवदनाम्भोजभास्करः । वाधूलदेशिकाद्युक्तस्तोत्रसंक्षिप्तवैभवः ॥

वादिभीतिकराचार्यवाग्विख्यापितवैभवः । भगवद्भक्तभक्ताग्र्यो गुणकीर्ताभिपूजितः ॥४०॥

वैराग्यशेवधिश्शिष्टाग्रेसरश्शेमुषीनिधिः । नैसर्गिकमहाभक्तिर्नैष्ठिकोऽनिष्टनाशनः ॥

श्रीशैलेशार्यसच्छिष्यश्शेषांशो ज्ञानशेवधिः । महायोगी (५०) महाप्राज्ञो महाभक्तो महामतिः ॥

श्रीरामानुजसिद्धान्तनिर्धारणधुरन्धरः । लोकाचार्यमहासूक्तिव्याख्याविख्यातवैभवः ॥

श्रीकासारादियोगीन्द्रदिव्यसूक्तचयविवर्धनः । अविद्याध्वान्तसंहर्ता विश्वविद्याविशारदः ॥

अन्यथाज्ञानविध्वंसी * मन्युवैदेशिको (६०) महान् । अभिरामवराभिख्योऽनसूयुरनघश्शुचिः ॥

अव्याजकरुणासिन्धुरार्तबन्धुरमेयधीः । अत्याश्चर्यवचोदाता दान्तिशान्त्यादिशेवधिः ॥७०॥

कैवल्यनित्यमुक्तित्वसंस्थापनसमर्थधीः । सकृत्प्रणामानुष्ठानसौवादवसमर्थनः ॥

नव्यनव्यदुराचारवैमुख्योत्पादनोक्तिदः । द्राविडाम्नायविद्वेषिदुरध्वविनिवारकः ॥

*கோபமென்பது இருக்குமிடமே தெரியாதவர்.

अशुद्धमतनिष्ठोक्तदुरर्थक्षेपदक्षिणः । विशुद्धसंप्रदायस्थसुशुद्धहृदयालयः ॥
विवक्षितार्थविशदीकारदक्षवचःप्रदः । प्रदत्तसर्वसौभाग्यो भाग्यभूमप्रदर्शितः ॥
प्रदर्शितविशेषार्थः (९९०) प्रदर्शितमहागुणः ॥
प्रदर्शितमहावर्त्मा प्रदर्शितमहानिधिः । प्रदर्शितमहाभूमा प्रदर्शितसुविग्रहः ॥
प्रदर्शितस्वपादाब्जः प्रदर्शितमहाकृपः । कृपाविभवसन्दत्तसुपावनवचस्ततिः ॥
वचस्ततिसहस्रार्हविश्रुतामितवैभवः । परस्सहस्रनामौघप्रकाश्यमहिमार्णवः ॥१०००॥
अहोरात्रमदुद्गीतमहोत्तुङ्गवचःप्रदः । अनारतमदुद्गीतस्वनामावळिहृष्टहृत् ।
पवित्रीकृतमज्जन्मा पवित्रीकृतमद्वचाः । पवित्रीकृत मद्वंशः पवित्रीकृतमन्मनाः ॥
श्रीवादिभीकराचार्यश्रीमत्कुलमहाधनम् । अण्णङ्गराख्याविख्यातदासमानसवासभाक् ॥१००८॥
श्रीमद्वरवरमुनि सहस्रनामस्तोत्रं समाप्तम् ॥

77. ஸ்ரீவரவரமுந்யஷ்டோத்தரசதநாமஸ்தோத்ரம் :

सहस्रनामकीर्तनेऽप्यतृप्तिपूर्णमानसं पुनःपुनस्स्वदिव्यनामकीर्तनैकदीक्षितम् ।
जनंत्विमं वरोमुनिः कृपानिधिः प्रसन्नधीः पुनश्च चोदयत्यहो शताभिधानकीर्तने ॥
श्रीशैलेशदयापात्रं धीभक्त्यादिगुणार्णवः । यतीन्द्रप्रवणो वन्द्यो रम्यजामातृयोगिराट् ॥
यतीन्द्रापरपर्यायः पर्यायभुजगेश्वरः । वाचस्पतिविशदवाक्चूडामणिरमेयधीः ॥१०॥
श्रीमत्परमहंसार्यस्तत्वज्ञानविवर्धनः । यथाभूतार्थकथनो यथादृष्टार्थबोधनः ॥
गुणानुभवकैङ्कर्यनैयत्यनिरताग्रणीः । आचार्यप्रेमसंपत्तिसमुज्ज्वलितमानसः ॥
आभ्यन्तरदृढप्रेमा बाह्याडम्बरवर्जितः । सर्वप्रमाणसंग्राही सर्वभूतसुहृत्तमः ॥
सर्वपापफलध्वंसी सर्वपुण्यफलप्रदः । सर्वदेशदशाकालसमिन्धानयशश्चय ॥१००॥
सर्वदेवालयस्तोमसमुद्घोषितवैभवः । सत्संप्रदायसिद्धान्तसंवर्धनविचक्षणः ॥
सर्वदेवालयाराध्यदिव्यमङ्गलविग्रहः । सर्वशास्त्रार्थवैशद्यसमुत्पादकसूक्तिदः ॥
सर्वसूरिगणांशात्मा सर्वविज्ञानसागरः । सर्वाचार्यसमुत्तुङ्गस्सर्वरक्षकरक्षकः ॥१०८॥
एवमष्टोत्तरशतानर्घनामस्तुतिश्शुभा ॥
श्रीमत्सुन्दरजामातृमुनिनामावळीम् मुदा । सदा चिन्तयतां गेहे सर्वसंपद्ध्रुवा ध्रुवा ॥
श्रीमद्वरवरमुनये नमः ॥

78. ஸ்ரீவரவரமுநிமங்களாசாஸநஸ்தோத்ரம் : *ஸ்ரீமதே ரம்யஜாமாத்ருமுநீந்த்ராய மஹாத்மநே, ஸ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர் நித்யமங்களம்.* என்னும் ஸுப்ரஸித்த ச்லோகத்திலுள்ள 32 அக்ஷரங்களின் வரிசையிலிட்டு அமைத்த துதியிது. இதையும் இங்கே பூர்த்தியாக அநுபவிக்கத்தருகிறேன்.

श्रीमते रम्यजामातृमुनीन्द्राय महात्मने । श्रीरङ्गवासिने भूयान्नित्यश्रीर्नित्यमङ्गलम् ॥
इत्येतत्पद्यरत्नस्थवर्णानुक्रमशोभिताम् । रचये रम्यजामातृमुनिमङ्गलमालिकाम् ॥

श्रीरामानुजयोगीन्द्रदर्शनोद्धारकारिणे । श्रीमते रम्यजामातृमुनिवर्याय मङ्गलम् ॥१॥
मय्येव करुणां नित्यमप्रमेयां वितन्वते । मनीषिभिरुपास्याय महाचार्याय मङ्गलम् ॥२॥
तेजोराशिमयं स्वीयं दिव्यमङ्गलविग्रहम् । आविष्कृतवते मह्यमाचार्येन्द्राय मङ्गलम् ॥३॥
रङ्गनाथसमुद्गीतमन्त्रविख्यातकीर्तये । रम्यजामातृमुनये चित्तभोग्याय मङ्गलम् ॥४॥
यतीन्द्रयामुनार्यादिदिव्यसूक्त्यर्थदायिने । यतीन्द्रप्रवणायास्तु यतिवर्याय मङ्गलम् ॥५॥
जानकीजानिमुत्सृज्य देवराजगुरुस्तु यम् । अर्च्यमङ्ग्यकरोत्तस्मै आचार्येन्द्राय मङ्गलम् ॥६॥
माता पिता सुहृद्भ्राता सर्वं च नियमेन यः । मद्वंश्यानां भवत्यस्मै महाचार्याय मङ्गलम् ॥७॥
तृणीकृतविरिञ्चादिमहैश्वर्याय योगिने । महते महतां बृन्दैर्महितायास्तु मङ्गलम् ॥८॥
मुदा सदा शठारातिमुखसूक्त्यर्थवर्षिणे । मुग्धस्मिताञ्चितास्याय मुनीन्द्रायास्तु मङ्गलम् ॥९॥
नीचानपि महोत्तुङ्गान् कुर्वते कृपया स्वया । निर्निमेषानुभाव्याय मुनये नित्यमङ्गलम् ॥१०॥
द्राघीयसीं कृपां दिव्यां दिशते मयि संततम् । द्राक्षापाकोक्तिदक्षाय मुनीन्द्रायास्तु मङ्गलम् ॥११॥
यत्सूक्तिलवलेशार्थवेदिनां तत्त्ववेदिता । प्रथिता मुनये तस्मै प्राज्ञभोग्याय मङ्गलम् ॥१२॥
ममैव मुखतो नित्यं महतां मोददायिनीः । स्तुतीरुत्सृजते बह्वीः स्तुतियोग्याय मङ्गलम् ॥१३॥
हालाहलनिभैरुक्तैरप्यनुद्विग्नचेतसे । हसदाननपद्माय मुनीन्द्रायास्तु मङ्गलम् ॥१४॥
मञ्जूनि सूक्तिरत्नानि मनीषीभ्यो ऽनुगृह्णते । मान्याय महितैर्नित्यं महाचार्याय मङ्गलम् ॥१५॥
नेदीयानेव वैकुण्ठो यत्पदाम्बुजसेविनाम् । नित्याराध्याय मुनये तस्मै स्यान्नित्यमङ्गलम् ॥१६॥
श्रीमल्लोकगुरूत्तंसश्रीसूक्त्यमृतरक्षिणे । श्रीमच्छेषावताराय मुनीन्द्रायास्तु मङ्गलम् ॥१७॥
रङ्गनाथमनोहारिदिव्यश्रीसूक्तिराशये । रम्याय योगिराजाय रम्यगात्राय मङ्गलम् ॥१८॥
गतागतजुषां पुंसां संसारमरुकानने । शरणाय मुनीन्द्राय शरण्यायास्तु मङ्गलम् ॥१९॥
वारणाचलनाथस्य मङ्गलाशासनं मुदा । वितन्वानाय मुनये विद्वद्भोग्याय मङ्गलम् ॥२०॥
सितपक्षेन्दुवन्नित्य समिन्धानसुकीर्तये । सार्वभौमाय यमिनां सुन्दरार्याय मङ्गलम् ॥२१॥
नेत्रे सत्संप्रदायस्य दात्रे सर्वार्थसंपदाम् । पात्रे भवाब्धिमग्नानां त्रात्रे मे नित्यमङ्गलम् ॥२२॥
भूयसां श्रेयसां राशिं भूयोभूयः प्रयच्छते । भूजुषां भाग्यरूपाय भूयादार्याय मङ्गलम् ॥२३॥
यामुनार्ययतीन्द्रादिहृदयाम्भोजभानवे । धेनवे सूक्तिदुग्धानां मम दैवाय मङ्गलम् ॥२४॥
निधिवन्नित्यभोग्यानां श्रीसूक्तीनां ततीरिह । विश्राणितवते विश्वविद्याभिज्ञाय मङ्गलम् ॥२५॥
मर्त्यैर्बहुभिरप्यन्यैरलभ्यां भक्तिसंपदम् । मह्यं दत्तवते प्रेम्णा माननीयाय मङ्गलम् ॥२६॥
श्रीवाग्भूषणसच्छास्त्रमहार्थामृतवर्षिणे । श्रीमत्कान्तोपयन्त्राख्यजीमूतायास्तु मङ्गलम् ॥२७॥
निरयान् विविधान् गन्तुं सन्नद्धानपि चक्षुषा । वीक्ष्योज्जीवयते विद्योदन्वते नित्यमङ्गलम् ॥२८॥
यदृच्छया स्वनामानि कथञ्चिद्वदतामपि । अघानि हरते भूयादाचार्येन्द्राय मङ्गलम् ॥२९॥
मंदानामप्यमन्दानां शुद्धधीभक्तिसंपदाम् । अद्वेषमात्रतो दात्रे मुनीन्द्रायास्तु मङ्गलम् ॥३०॥

गतिर्गम्यं मुमुक्षूणां यस्यैव चरणौ सताम् । तस्मै सुन्दरजामातृमुनिवर्याय मङ्गलम् ॥३१॥

लक्ष्मणार्यावतारश्रीलक्ष्मणा भूषितात्मने । सौम्यजामातृमुनये नित्यश्रीर्नित्यमङ्गलम् ॥३२॥

मङ्गलाशासनस्तोत्रमिदं वरमुनीशितुः । शृण्वतां वदतामस्तु नित्यश्रीर्नित्यमङ्गलम् ॥

79. ஸ்ரீவரவரமுநிதண்டகஸ்துதி: மணவாள மாமுனிகளின் வைபவங்களைப் பெரிய தண்டகங்களெட்டினால் விஜ்ஞாபித்தநூல் இது. தேவநாகரி தெலுங்கு லிபிகளில் அச்சிடப்பட்டது. விரிவான தமிழுரையுமிதற்குண்டு.

80. ரஹஸ்யத்ரயச்லோகமாலிகா: முமுக்ஷுப்படிரஹஸ்யத்தை ஓரக்ஷரம் விடாமல் பரிபூர்ண மொழிபெயர்ப்பாகச் செய்த 234 ச்லோகங்கள் கொண்ட நூலிது. இதைப்பற்றியும் மேலே 81, 82 லக்கமுள்ள நூல்களைப்பற்றியும் இத் தன் சரிதையில் கீழ் இரண்டாம் பகுதியில் (பக்கம் 87, 88ல்) விரிவாக எழுதப் பட்டுள்ளவை காண்க.

81. தத்வத்ரயச்லோகமாலிகா: தத்வத்ரயமென்னும் ரஹஸ்யத்தை ஓரக்ஷரம் விடாமல் பரிபூர்ண மொழிபெயர்ப்பாகச்செய்த 212 ச்லோகங்கள்கொண்ட நூல்.

82. ஸ்ரீவசநபூஷணச்லோகமாலிகா: ஸ்ரீவசநபூஷண ரஹஸ்யத்தை ஓரக்ஷரம்விடாமல் பரிபூர்ண மொழி பெயர்ப்பாகச் செய்த 440 ச்லோகங்கள் கொண்ட நூலிது. நெ. 80, 81, 82 இம் மூன்று நூல்களும் தேவநாகரலிபியிலும் தெலுங்கு லிபியிலுமுள்ளன. 80 நெ. நூல்மட்டும் க்ரந்தலிபியிலுமுள்ளது.

83. வேதாந்தஸர்வஸ்வம்: தத்வத்ரயத்தின் மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தைத் தழுவி மிகவிரிவாக எழுதப்பட்டது. மூன்று ப்ரகரணங்கள் கொண்டது. இதில் முக்கால் பாகம் அச்சிடப்பெற்றது. அச்சிட்ட பாரங்கள் பாதிபாகம் செல்லரிக்கப்பட்டனவாதலால் அநுத்ஸாஹத்தினால் இது பூர்த்தி செய்யப்படாமலிருக்கிறது.

84. ஸம்ப்ரதாயஸித்தாஞ்ஜநம்: தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸாரார்த்தங்களை யுணர்த்தும் 100 ச்லோகங்கள் கொண்ட நூலிது. இந்த ச்லோகங்களெல்லாம் அத்ருஷ்டார்த்த ஸர்வஸ்வம், ஸதாசார்யஸூக்திரக்ஷா முதலான ஸ்வகீய (மணிப்ரவாள) க்ரந்தங்களில் ஆங்காங்கு மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கிறவத்தனையல்லது தனிநூலாக வெளியிடப்படவில்லை. இனி வெளிவரும்.

85. அத்யமே பத்யார்த்த சததூஷணீ: ஸ்ரீராமாயண யுத்த காண்டத்தில் ஸமுத்ர சரணாகதி ப்ரகரணத்திலுள்ள *அத்ய மே மரணம்வாபி தரணம் ஸாகரஸ்ய வா * என்கிற ச்லோகத்தின் அர்த்த விஷயமாக 20 வருஷங்களுக்கு முன்பு பிரபலமான வாத விவாதங்கள் க்ரந்த மூலமாக நடந்தன. மேலே யெடுத்த ச்லோகத்தில் ‘மே தரணம், ஸாகரஸ்ய மரணம்’ என்கிற அந்வய க்ரமந்தான் பூர்வாசார்யாபிமத மென்றும், அதுவே தான் யுக்த மென்றும் சில வித்வான்களின் வாதம்; இது ஸர்வாத்மநா அஸங்கத மென்பதை அடியேன் ஸ்தாபித்து மணி ப்ரவாளத்தில் சில நூல்களெழுத நேர்ந்தது. அது மேலே தமிழ்ப் பகுதியில் விசதமாகும். இந்த விவாதத்தில் அடியேன் முடிவாக எழுதின ஸம்ஸ்க்ருத க்ரந்தமிது. இந்த சததூஷணியில் பஞ்சவிம்சதி தூஷணங்களே முதற்பகுதியாக அச்சிடப்பட்டன. மேற்பகுதிகள் வெளிவர வேண்டாவென்று ஸாமரஸ்யத்தில் தலைக்கட்டிற்று.

86. பகவத் ராமாநுஜஹ்ருதயம்: அரிஜன ப்ரவேச இயக்கத்தில், விசால ஹ்ருதயம் படைத்த பகவத் பாஷ்யகாரருக்கு இது ஸம்மதமே யாகும் என்று சிலர்

வாதித்தபோது அவருடைய ஹ்ருதயவைசால்யம் எப்படிப்பட்டதென்று ஒழுங்கானமுறையில் பரிசீலனைசெய்து வடமொழியில் எழுதப்பட்ட நூலிது.

87. மங்களாசாஸந பத்யமாலா : திருப்பல்லாண்டு திவ்யப்ரபந்தத்திற்கு நேர் மொழி பெயர்ப்பான ச்லோகமாலிகை. இந்த 87 லக்கத்திலிருந்து 98 லக்கம் வரையி லுள்ள 12 நூல்களும் திவ்ய ப்ரபந்தங்களுக்கு ச்லோக ரூபமாக மொழி பெயர்ப்பான நூல்களாகும்.

88. பட்டநாத ஸூக்த சதகம் : பெரியாழ்வார் திருமொழியில் ஒவ்வொரு பதிகத்திற்கும் ஸாரமாக ஒவ்வொரு ச்லோகம்; தவிர, இன்சுவை மிக்க சில பதிகங் களுக்குப் பூர்த்தியாக ச்லோகங்கள் ; இடையிடையில் ரஸகனமான பாசுரங் களுக்கு ச்லோகங்கள்; இவ்வண்ணமாக 100 ச்லோகங்கள் கொண்டது இது.

89. ஸ்ரீகோதாவ்ரதப்ரபந்த பத்யாவலீ : திருப்பாவை முப்பதுக்கும் 30 ச்லோகங்கள்.

90. ஸ்ரீகோதாஸூக்த பத்யாவலி: நாச்சியார்திருமொழிபதிகங்களின்ஸார ச்லோகங்கள்.

91. ஸ்ரீகுலசேகர ஸூக்தபத்யாவலீ : பெருமாள் திருமொழி பதிகங்களின் ச்லோகங்கள்.

92. ஸ்ரீமாலாப்ரபந்த பத்யாவலீ : திருமாலைக்குப் பூர்த்தியாக ச்லோகமாலிகை.

93. மதுரகவி ஸூக்த பத்யாவலீ : கண்ணிநுண்சிறுத்தாம்பு ச்லோக மாலிகை.

94. ப்ருஹத்ஸூக்த பத்யாவலீ : பெரியதிருமொழியாயிரத்திற்கும் பதிகங்களின் ஸார மாக ச்லோகமாலிகை.

95. திருவாசிரிய ப்ரபந்த தண்டகம் : திருவாசிரியம் ஏழு பாட்டுக்கும் ஏழு தண்டகம்.

96. ஸ்ரீபரகாலரதப்ரபந்த தண்டகம்: திருவெழுகூற்றிருக்கைமுழுவதும் ஒரேதண்டகம்.

97, லகுபாளீப்ரபந்த ப்ரதிக்ருதி: : சிறியதிருமடலுக்கு ஆர்யாவ்ருத்த ச்லோகமாலிகை.

98. குருபாளீப்ரபந்த ப்ரதிக்ருதி: : பெரியதிருமடலுக்கு ஆர்யாவ்ருத்தச்லோகமாலிகை.

99. மங்களாசாஸநப்ரபந்த வ்யாக்க்யா : திருப்பல்லாண்டுக்கு விரிவான ஸம்ஸ்க்ருத வியாக்கியானம். இந்த லக்கம் முதல் மேல் 116 லக்கம் வரையிலுள்ள 18 நூல்களும் திவ்ய ப்ரபந்தங்களுக்கு எளிய தெளிய ஸம்ஸ்க்ருத வியாக் கியானங்கள். அடியேனுடைய வாழ்க்கையில் இவை யெழுதப் பெறுகையே அதிதரலப்யமான பரமபாக்யம்.

100. ஸ்ரீபட்டநாத ஸூக்தவ்யாக்க்யா : பெரியாழ்வார் திருமொழிக்குப் பூர்த்தியாக ஸம்ஸ்க்ருத வியாக்கியானம். இது தேவநாகரலிபியிலும் தெலுங்கு லிபி யிலும் அச்சிடப்பட்டது.

101. ஸ்ரீகோதாவ்ரத ப்ரபந்த வ்யாக்க்யா : திருப்பாவைக்கு மிகவிரிவான ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் ; ஸ்வாப தேசார்த்தங்களும் நிரம்பியது.

102. ஸ்ரீகோதா ஸூக்த வ்யாக்க்யா : நாச்சியார் திருமொழிக்குப் பரிபூர்த்தியான ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

103. ஸ்ரீகுலசேகர ஸூக்தவ்யாக்க்யா : பெருமாள் திருமொழிக்குப் பூர்த்தியான ஸம் ஸ்க்ருத வியாக்கியானம்.

104. ஸ்ரீபக்திஸார திவ்யஸூக்திவ்யாக்க்யா : திருச்சந்த விருத்தத்திற்குப் பூர்த்தியான ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

105. ஸ்ரீமாலாப்ரபந்த வ்யாக்க்யா : திருமாலைக்குப் பூர்த்தியான ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

106. ஸுப்ரபாத திவ்யப்ரபந்த வ்யாக்க்யா : திருப்பள்ளி யெழுச்சிக்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

107. முநிவாஹநஸூரிஸூக்திவ்யாக்க்யா: அமலனாதிபிரானென்கிற திவ்யப்ரபந்தத்திற்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

108. மதுரகவி ஸூக்தவ்யாக்க்யா : கண்ணிநுண் சிறுத்தாம்புக்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

109. ஸ்ரீபரகால ஸூரிஸூக்தவ்யாக்க்யா : திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதவியாக்கியானம். இது, முதற்பத்துக்கு முடிந்து இரண்டாம் பத்துக்கு அச்சாகி வருகின்றது. க்ரமேண முடியும்.

110. திருவாசிரிய ப்ரபந்தவ்யாக்க்யா: நம்மாழ்வாரருளிச் செய்த திருவாசிரிய மேழு பாட்டுக்கும் ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

111. ஸ்ரீபரகாலரதப்ரபந்த வ்யாக்க்யா : திருமங்கையாழ்வார் ரதபந்தத்தி லமைத்து அருளிச்செய்த திருவெழு கூற்றிருக்கைக்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

112. லகுபாளீப்ரபந்த வ்யாக்க்யா : சிறிய திருமடலுக்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

113. குருபாளீப்ரபந்தவ்யாக்க்யா : பெரியதிருமடலுக்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானம்.

114. ஸஹஸ்ரகீதிவ்யாக்க்யா : திருவாய்மொழியாயிரத்திற்கு ஈடுமுப்பத்தாறுயிரப்படியைத் தழுவிய வடமொழி வியாக்கியானம். க்ரமேண அச்சாகி வருகிறது.

115. ப்ரபந்த காயத்ரீவ்யாக்க்யா : திருவரங்கத்தமுதனாரருளிச் செய்த இராமாநுச நூற்றந்தாதிக்கு ப்ரபந்த காயத்ரியென்று ஸம்ப்ரதாய வ்யபதேசம். அதற்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானமிது.

116. ஸ்ரீகோதாஸூக்தஸர்வஸ்வம் : நாச்சியார் திருமொழி ஒவ்வொரு பதிகத்தின் ஸாரார்த்தங்களை விவரித்தெழுதிய வடமொழி வியாக்கியானம்.

## இடையில் முக்கிய விஜ்ஞாபனம்.

இந்த ஸம்ஸ்க்ருத க்ரந்தாவளியில், லக்கம் 4, 5, 24, 87 முதல் 116 வரை. ஆக முப்பத்திரண்டு நூல்கள் திவ்யப்ரபந்த திவ்யார்த்த விசேஷங்களைப் பத்ய ரூபமாகவும் கத்ய ரூபமாகவும் மொழி பெயர்த்தவை. இவ்வளவும் தேவநாகரலிபியில் (பெரும்பாலும்) இருமுறை அச்சாகி வடநாடுகளில் விசேஷப்ரசார மடைந்திருப்பவை. இவை தெலுங்கு லிபியிலும் அச்சாகி வருகின்றபடியால் ஆந்திர தேசத்தாரும் இவற்றை யநுபவித்து வருகிறார்கள். கீழ் கெ. 65 முதல் 79 வரை விவரிக்கப்பட்டுள்ள துதி நூல்களை விஜ்ஞாபனம் செய்ததற்குப் பலனாகவே இந்த திவ்ய ப்ரபந்த விவர்த்த நூல்களை அநாயாஸமாக எழுதவும் அச்சிடவும் பாக்கியம் வாய்த்ததென்று அடியேனுடைய அத்யவஸாயம். மிக முக்கியமான இக் கைங்கரியம் இடையூறின்றி விரைவில் பூர்த்தியாகாதபடிக்கு வெவ்வேறு துறைகளில் பலபலவும் எழுத வேண்டும்படி நேர்ந்து விடுகிறது. இடையூறுகள் அகலவேணுமென்று ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளில் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

117. அபிநவதயாசதகம் : எம்பெருமானுடைய தயையென்னும் குணத்தை, நவீனர்களின்வாதங்களை நிச்சேஷமாகநிரஸித்து நிஷ்கர்ஷிக்கும் பத்யப்ரபந்தம்.

இது இரண்டு சதகமாக அமைந்துள்ளது. மொத்தம் 230 சுலோகங்கள் கொண்டது. ஒரு ஆசார்யருக்கும் மற்றொரு ஜிஜ்ஞாஸுவுக்கும் ஸம்வாத ரூபமாக அமைக்கப்பட்டது. இதில் வாதியாய் நின்றவர் D. T. தாதாசார்யர். இந்த நூல் தேவநாகரியிலும் தெலுங்குலிபியிலும் வெளிவந்தபின்பு தயாகுண தூஷணத்தில் உபசாந்தராயினர்.

118. அபிநவதயாசதகதாத்பர்யஸாரः : கீழ் 117 லக்கமுள்ள நூல் ச்லோகரூபமானபடியால் அதன்கருத்தை எளிதாகத் தெரிந்துகொள்வதற்குப்பாங்காக அந்த ச்லோகங்களுக்குச் சார்பாகவே எழுதப்பட்ட கத்ய ப்ரபந்தம்.

119. மதிரேக்ஷணர்த்தமாதுர்யம் : கீழ் நெ. 28 மதிரேக்ஷணர்த்ததத்வம் என்கிற நூலுக்குப்பிறகு வெளிவந்த சில துர்வாதங்களுக்கு நிரஸநம். இதில் ப்ராஸங்கிகமாகப் பல விஷயங்கள் சர்ச்சிக்கப்பட்டுள்ளன.

120. ஸஹ்ருதய ஸௌபாக்யம் : கீழ் நெ. 30 ரஸிகரஸாயநமென்னும் நூலைப்பற்றி எழுதியிருந்த விஷயங்களை மறந்திருந்தால் மறுபடி ஒரு விசை கண்டுகொள்வது. அந்த நபரைக் குறித்துப் பலபல நூல்கள் வெளியிட நேர்ந்தபடியால் அவற்றுள் இதுவுமொன்று. ரஸிகவித்வான்கள் இந்நூலை நேராக வாசித்துக் களிக்கவேணுமே யல்லது இங்கு ஸாரஸம்க்ஷேபம் செய்வதனால் பலனொன்றும் தேறாது. இந்த நபர் தாம் பெரிய பண்டிதரென்றும் தம்முடைய வாதங்களே வெற்றி பெறக்கூடியவை யென்றும் வெற்றி பெற்றுவிட்டனவென்றும் சிலரிடத்தில் சொல்லிக் கொள்வதாகக் கேள்விப்பட்டு வருகிறோம். உண்மையில் இவர் ஒவ்வொரு விஷயத்திலும் பங்கப்பட்டவரே யல்லது ஒருவிஷயத்திலும் ஸாதுத்வத்தை நிரூபித்து நிலைநாட்டிக் கொள்ளவில்லை. ஒன்றே பார்க்கலாம். தேசிகன் யாதவாப்யுதயத்தில் கோவர்த்தநோத்தரண ப்ரகரணத்தில் *அதியஜேத நிஜாம் யதி தேவதாம்* என்றொரு ச்லோகமருளிச் செய்திருப்பது ப்ரஸித்தம். இது குவலயா நந்தத்தில் அப்பய தீக்ஷிதரால் உதாஹரிக்கப்பட்டிருக்கிறது. இதில் உத்தரார்த்தத்தில் * क्षितिभृतैव सदैवतका वयम्-க்ஷிதிப்ருதைவ ஸதைவதகா வயம் * என்று பெரும்பாலும் பாடம் வழங்கி வருகிறது; இங்கே (ஸதைவதகாः) என்ற பதம் கவனிக்கத்தக்கது. அப்பய்ய தீக்ஷிதரும் இப்படியே பாடம் கொண்டார். குவலயாநந்தத்திற்கு 'புதரஞ்ஜநீ' என்றொரு சிறந்த வியாக்கியானமெழுதியவர் அதில் உதாஹ்ருதமான இந்த யாதவாப்யுதய ச்லோகத்திற்கும் வியாக்கியான மெழுதுகையில் "" आपोऽन्यतरस्याम् इति ह्रस्वः " என்றெழுதியுள்ளார். இதை நோக்கினல் இந்த வியாக்கியான கர்த்தா (ஸதைவதகாः) என்று பாடம் கொள்ளாமல் 'ஸதேவதகாः' என்று பாடங் கொண்டாரென்பது அநாயாஸமாக அறியக்கூடியது. 'ஸதைவதகா:' என்று பாடம் கொண்டிருந்தாராகில் இங்கு * ஆபோந்யதரஸ்யாம் * என்று வியாகரணம் காட்ட வேண்டிய ப்ரஸக்தியே கிடையாது. இந்த யாதவாப்யுதய ச்லோகம் * यो वै स्वां देवतामतियजते प्र स्वायै देवतायै च्यवते * என்கிற ச்ருதியைக்கொண்டே அவதரித்ததாகையாலும், அந்த ச்ருதியில் ஒரு தடவைக்கு இரு தடவையாக தேவதா சப்தமே யுள்ளதன்றி தைவத சப்த மில்லையாகையாலும் * வேதஸநாபி ஸ்வோக்தி விநோதரான தேசிகன் 'ஸதேவதகா:' என்று தான் அருளிச்செய்தாரென்று உறுதிகொண்ட புதரஞ்ஜநீகாரர் அதற்குச்சேர வ்யாகரணோபபத்தியையும் காட்டி வைத்தார். இந்த வியாக்கியானமானது

இந்த தாதாசாரியரால் உத்யாந பத்ரிகையில் பதிப்பிக்கப்பட்டு வந்தது. அதில் இவருடைய புத்திக்ருதங்களான பலபல அவத்யங்களை யெடுத்துக் காட்டிவந்தோம். மற்றவைகிடக்க, இங்கு* ஆபோங்யதரஸ்யாம் இதிஹ்ரஸ்வ: என்று வியாக்கியானமச்சிட்டவிவர் அதற்குச்சேர மூலத்தை 'ஸதேவதகா:' என்றன்றோ பதிப்பிக்க வேணும். அந்த வ்யாக்க்யாதாவுக்கு அநபிமத மான 'ஸதைவதகா:' என்னும் பாடத்தையே பதிப்பித்திருந்தாரிவர். இதனால் இவர் சிறிதும் ஆராய்ச்சி யில்லாதவர் என்பது நன்கு விளங்க வில்லையா? என்று நாம் வெகு விபுலமாக நிரூபித்திருந்தோம். இவ்விடத்தில் தலைவிதியே யென்று கைகூப்பித் திருத்தம் வெளியிட்டாரிவர். நாம் சர்ச்சித்த ஒவ்வொரு விஷயத்திலும் இவர் இங்ஙனமே கைகூப்பி நின்று திருத்தம் வெளியிடக் கடமைப்பட்டவரே யென்பதைப் பண்டித வுலகம் பிரசுரப்படுத்தியிருக்கிறது. * विवेकधियमेकतो ह्यभिनिवेशलेशो हरेत् * என்று ஆழ்வான் ஸாதித்தது எங்ஙனே பழுதுபடும். ஒரே வார்த்தை;—இவரை நிமித்தமாகக் கொண்டு உலகம் நம்மால் மஹோபகாரங்கள் பலபல பெற்றுள்ளது.

121. பாதுகாஸஹஸ்ராவதாரதத்வம்: இத் தன்சரிதையில் பக்கம் 59ல் "பாம்பே நகரத்தில் நிர்ணய ஸாகரமுத்ராலயாதிகாரிகள்" என்று தொடங்கி இரண்டு பக்கம் எழுதியிருப்பதையும், மேலே 65, 66 பக்கங்களிலெழுதியிருப்பதையும் மீண்டுமொருமுறை வாசிக்கவேணும். இந்நூலைப்பற்றி அவ்விடங்களில் விவரிக்கப்பட்டுள்ளது. உண்மையை எவ்வளவு விரிவாக நிரூபித்தெழுதினாலும் பாமரப்ரதாரணமொன்றிலேயே நோக்குடைய நவீனர்கள் பழம் பாட்டையே திருப்பித் திருப்பிப் பாடிக்கொண்டிருப்பது வழக்கம். ஒருவர் மாறி ஒருவராக அந்த அபத்த அஸம்பத்த ஐதிஹ்யத்தையே இற்றைக்கும் நாளைக்கு மெழுதிக் கொண்டிருக்கிறார்கள். மேலே தமிழ் நூற்பகுதியில் காணப்படவிருக்கிற புரட்டாசித் திருவோணமலரில் (பக்கம் 31-ல்) 'பாதுகாஸஹஸ்ரப்ராதுர்ப்பாவம்' என்ற தலைப்பின்கீழ் உள்ள விஷயம் இங்கு ஸம்க்ஷேபமாக வெடுத்துக் காட்டலாகிறது. இதனால் பிராமாணிகர்களுக்குத் தெளிவு பிறப்பதொன்றே உத்தேச்யம். அந்தவியாஸத்தின் சுருக்கம் :—

ஸ்ரீதேசிகசரித்திரத்தில் நமதுநண்பர் D. ராமஸ்வாமிஐயங்கார் எழுதுகிறார்—"தேசிகனிடம் பொறாமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இவருடன் போட்டியிட்டதன் பலனாக ஸ்வாமியிடமிருந்து ஸ்ரீபாதுகாஸஹஸ்ரமென்ற க்ரந்தம் தோன்றியது" என்று. இஃது இருளும் மருளும் வடிவெடுத்த வார்த்தை. அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரென்பவர் பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியார்; வடக்குத் திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரர்; ஆசார்யஹ்ருதயம், அருளிச்செயல் ரஹஸ்யம், திருப்பாவையாறாயிரப்படி முதலான திவ்ய க்ரந்தங்களை யருளிச் செய்தவர். இவர் தேசிகனோடு போட்டியிட்டாரென்று நெஞ்சால் நினைப்பதும் மஹாபசாரம். பரமஸாத்விகப்ரக்ருதிகளென்று தங்களுடைய திவ்யக்ரந்தங்களால் வெளியிட்டுக்கொண்டு பகவத்குணாநுபவைக நிஷ்ணாதர்களாயிருந்த மஹாசார்யர்களை வலுவில் பிடித்திழுத்து நிந்திப்பது நீதிநெறிநிற்பார் பணியன்று. இந்த D. R. கோஷ்டியில் சேர்ந்தவர்கள் பலர் பாதுகாஸஹஸ்ரம் அவதரித்த காரணத்தை யெழுதியுள்ளார்கள். ஒருவர் எழுதின ரீதியைப் பின்பற்றி மற்றொருவர் எழுதுவதென்பது அடியோடு கிடையாது. ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாக எழுதிவைக்கிற வேடிக்கையைப் பார்க்கவேணும். இவ்விஷயத்தில் ப்ராசீனர்கள் எவ்விதமாக எழுதியிருக்கிறார்களென்பதையும் பிறகு பார்க்க வேணும். அடைவே எல்லாவற்றையும் பார்ப்போம். இவர்கள் தங்களைத் தாங்களே

பரஸ்பரம் கண்டித்துக் கொள்ளுகிறார்களென்பதே நன்கு தேறுவதால் நமக்கு அதிகபரிச்ரமமில்லை. பாம்பே நிர்ணயஸாகர காவ்யமாலை ஸீரீஸில் வியாக்கியானத்தோடு பதிப்பிக்கப்பட்ட பாதுகாஸஹஸ்ரத்திற்கு—காஞ்சீபுரம் சாமா திருமலை தாதாசாரியர் சேர்த்திருக்கிற பூமிகையில் வாதிகேஸரியென்பவர் தாம் பெற்றிருந்த வாதிகேஸரிவிருதுகாரணமான செருக்கினாலும் அஸூயையினாலும் கவித்வ விஷயத்தில் போட்டியிட்டதனால் பாதுகாஸஹஸ்ரம் தோன்றியதென்று எழுதியுள்ளார். வாதிகேஸரி யென்பவர் பிள்ளை லோகாசார்யர் திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரல்லர். அவர் உத்தமாச்ரமி. அழகிய மணவாளச்சீயரென்பவர். திருவாய்மொழிக்குப் பன்னீராயிரவுரை, தத்வதீப தீபப்ரகாசம் முதலிய நூல்களையிட்டவர். அவர் தேசிகனைவிட பதினேழுவயது பெரியவர். அவரோடுண்டான ஸ்பர்த்தையினால் பாதுகாஸஹஸ்ரம் தோன்றியதாக அந்தத் திருமலை தாதாசாரியரெழுதினர். ந்யாய பரிசுத்திக்கு பூமிகையெழுதின திருவஹீந்திரபுரம் சதாவதானி ஸ்ரீநிவாஸாசாரியரும் அதைப்பார்த்து அப்படியேயெழுதிவைத்தார். இந்த D. R. அவ்வாசிரியரைவிட்டு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தாம் ஸ்பர்த்தையிட்டதாக வெழுதுகிறார். முன்சொன்ன திருமலை தாதாசாரியருடைய பாதம் பணிந்தவர் இந்த D. R. ஐயங்கார்—என்பது வாசகர்களுக்கு நினைவிலிருக்கட்டும். ஆனால் ஆசிரியர் வடமொழியிலெழுதியிருப்பதால் சிஷ்யர் அஃதறியாமல் யாரேனுமோராசார்யரைப் பிடித்திழுக்கவேணுமென்கிறவளவேகொண்டும், ஜகத்விக்யாதரான பேராசிரியரையே தூஷிக்கவேணுமென்னுமாக்ரஹங்கொண்டும் ஆசார்யஹ்ருதயகாரர் ஸ்பர்த்தையிட்டதாக எழுதுகிறார். இன்னமும் பலர் பலவிதமாக எழுதியிருப்பதெல்லாம் கிடக்கட்டும். குருசிஷ்யர்களின் கூற்று காட்டினவிவ்வளவேபோதும். நவீனச் சண்டைகளில் தலையிடாத ப்ராசீனர்கள் எவ்விதமாக எழுதியுள்ளார்களென்று பார்ப்போம். ஆசார்ய சம்பூ என்கிற க்ரந்தம் நவீனர்களின் நவநவோக்தி தோன்றுவதற்கு நெடுநாள் முன்னமேதோன்றியது. அவர் மன: பூர்த்தியாக அப்ராமாணிக விஷயங்களை யெழுதுகிறவரல்லர். அவர் எழுதியிருப்பதாவது "एवमाबद्धाभिरपरिमिताभिः कृतिभिरापादितमनितरसाधारणस्य गुरोरतिशयम् आशुकविताविभवादपाचिकीर्षुः कश्चन कविः अस्याशमभ्येत्य गिरमिमामपगतशङ्कमङ्कुरयामास" இத்யாதி. ஆசுகவியென்று ப்ரஸித்திபெற்றிருந்த யாரோவொரு கவி வந்து ஸ்பர்த்தை பண்ணினதாகச் சொல்லப்பட்டது. நவீனர்கள் அதிகமாகக் கொண்டாடும் ச்லோகரூபமான வைபவப்ரகாசிகையிலோ வென்னில், (ச்லோ, 114.) "संप्रार्थितस्संसदि सूरिवर्यैः पादावनीं रङ्गपतेर्निशायाम् । पद्यैस्सहस्रैर्गुरुरस्तवीद्यः तं भावयेऽहं कविसार्वभौमम् ॥" என்றுள்ளது. வித்வான்களின் வேண்டுகோளுக்கிணங்கிப் பாதுகாஸஹஸ்ர மருளிச்செய்தாரென்பது இதன் கருத்து. [இவ்விடத்தில் ப்ராஸங்கிகமாக ஒரு விவக்ஷிதம். மேலே குறித்த வைபவப்ரகாசிகை ஒரு சதுச்சாஸ்த்ரவித்வானால் இயற்றப்பட்டதென்று சொல்லிவருகிறார்கள். மேலெடுத்துக் காட்டிய ச்லோகத்தில் "ஸஹஸ்ரை: பத்யை:" என்று ப்ரயோகித்திருப்பதை வையாகரணர் கண்டால் சிரிப்பார்கள். 'ஸஹஸ்ரேண பத்யை:' என்று இருக்கவேண்டுமேயல்லது 'பத்யைஸ் ஸஹஸ்ரை:' என்றது ஒருபடியாலும் பொருந்தாது. வேறு சில ப்ரயோகங்களைப்போல் க்லிஷ்ட கதியாகவும் ஸமர்த்திக்கக் கூடிய பிரயோகமன்றிது. * ग्रन्थैश्चतुस्सप्ततिभिस्सहस्रैः * என்ற மற்றொரு ப்ரயோகமும் ஏதத்ஸமசீலமே. தமிழில் வாழிதிருநாமம் நாள் பாட்டு முதலானவற்றையும், ஸம்ஸ்க்ருதத்தில் இங்ஙனே சில பத்ய ப்ரபந்தங்களையும் நவீனர்கள் புதியவுறவு கொண்டாடப்

புகுந்தபோது ஸாமான்ய கவிகள் சிலர் இயற்றினர்களத்தனை யென்கிற தத்துவம் உணரத்தக்கது.] இனி ப்ரக்ருத விஷயத்தில் செல்வோம். யாரோவொரு ஆசு கவி வந்து ஸ்பர்த்தையிட்டதன் பலனாகப் பாதுகாஸஹஸ்ரம் தோன்றிற்றென்றார் ஆசார்யசம்பூகாரர். ஸத்துக்களின் ப்ரார்த்தனையினால் தோன்றிற்றென்றார் வைபவப்ரகாசிகாகாரர். ஸ்ரீவரவரமுநி ஸம்ப்ரதாயத்திலிருந்து மாறுபட்டு தேசிக ஸம்ப்ரதாயத்திற்கு வந்து சேர்ந்ததாகப் பிறரால் எழுதப்பெற்ற பாரத்வாஜ ஸ்ரீநிவாஸாசார்யரென்பவர் பாதுகாஸஹஸ்ரத்திற்கு வ்யாக்க்யான கர்த்தா; அவர் எவ்விதமாக எழுதிவைத்திருக்கிறா ரென்னில்; அந்த வியாக்கியான ஆரம்பத்தில், * रङ्गास्थानीरसिकपरिषत्प्रेरणां प्राप्य शौरेः पादावन्याः स्तुतिमकृत यो यैस्सहस्रेण पद्यैः * என்கிற ச்லோகத்தை முன்னமெழுதிவிட்டு உடனே வசனமாக "श्रीमान् वेङ्कटनाथो गुरुर्भगवतो रङ्गनाथस्य दिव्यास्थानरसिकैर्भागवतैरभ्यनुज्ञातपादुकास्तुतिः पादुकासहस्रं नाम काव्यं प्रणिनाय" என்றெழுதி யுள்ளார். ஸ்ரீரங்கத்திலிருந்த ரஸிகர்கள் ப்ரேரணை பண்ண அதன்மேல் பாதுகாஸஹஸ்ரமருளிச் செய்ததாக ச்லோகத்திலுள்ளது; அந்த ரஸிகர்களின் அநுஜ்ஞையைக் கொண்டு (அது) அருளிச் செய்ததாக கத்யத்திலுள்ளது; ப்ரேரணையும் அநுஜ்ஞையும் பர்யாயமன்று. ஒரு காரியத்தில் ப்ரவர்த்திக்கச்செய்வது ப்ரேரணை. ஸ்வயம் ப்ரவ்ருத்தரானவரை அநுமோதிப்பது அநுஜ்ஞை. இது ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களின் கோஷ்டியில் நிர்விவாதமான விஷயம். இதை எப்படியாவது பொருந்தவிட்டுக்கொள்வோம். ப்ரயாஸமொன்றுமில்லை. யாரும் போட்டியிட்டது கிடையாதென்றும், தேசிகன் தாமே தமது கைங்கரியமாகப் பாதுகாஸஹஸ்ரமியற்றியருளத் தொடங்கினார், அதை மஹான்கள் ஆமோதித்தார்கள்—என்றும் இவ்வளவே தத்துவமாய் முடியும். இது தேசிகனுடைய ஸொந்த ஸ்ரீஸூக்திக்கும் பொருந்தும்; (அதாவது) பாதுகாஸஹஸ்ரத்தினுள்ளேயே நாதபத்ததியில் (41.) * प्रख्यातानां परिषदि सतां कारयित्वा प्रतिज्ञाम् * என்றொரு ச்லோகமுள்ளது. இதனால், தேசிகன் தாமே ப்ரக்க்யாதர்களான ஸத்துக்களின் முன்னிலையில் ஆயிரம் சுலோகம் செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்து இந்த ஸ்துதியை இயற்றினதாக ஸ்பஷ்டமாகிறது. இவ்விடத்து வியாக்கியானத்திலாவது முன்னோர்கள் ஏதாவது எழுதியிருக்கவேண்டுமே. ஐதிஹ்ய மிருந்தால் எழுதாது விட்டிருப்பர்களோ? எந்த விதத்திலாவது மஹாசார்யர்களைப் பிடித்திழுத்து அவர்களுக்கு ஓர் அவத்யம் இட்டுவைக்கவேணும் என்கிற கடு நினைவுதான் இந்த கோஷ்டியார்களுக்குள்ளது. அன்னவர்களில் தலைநின்றவர் D. R. ஐயங்கார்.

இவர்களுடைய கோஷ்டியில் நெடுநாளாகவே ஒரு பழக்கமுள்ளது; (அதாவது) இப்படி அஸம்பத்தமான கதைகளைக் கைபோனபடி யெழுதிவைப்பது; அது ஸர்வாத்மநா அஸங்கதமென்று நிபுணநிரூபணம் வெளிவந்தால் வாய்திறவாமல் வாளாகிடப்பது; மற்றொரு காலத்தில் வேறொருவர் அந்த அஸம்பத்த கதையையே பிரசுரம் செய்யத் தொடங்குவது, புநர் முத்ரணம் பண்ணுவது: சில பாமரர்களாவது வஞ்சிக்கப்பட்டு இதையே பரமார்த்தமென்று கொள்ளட்டுமே யென்று கருதுவது......இப்படியாக இந்த கோஷ்டியார் பழகிவருகிறார்கள். இதெல்லாம் இவர்கள் தேசிகனோடு புதிய வுறவு கொண்டாடத் தொடங்கின காலத்திலிருந்தே தோன்றிய தடுமாற்றங்களென்று திண்ணமாகவெண்ணுவர் தீர்க்கதர்சிகள்.

122. பரீக்ஷாவிமர்சபராமர்சஃ: கீழே லக்கம் 29. கொண்ட பாடசோதநபரீக்ஷா என்னும் நூலின்மேல் வானமாமலையிலொருவர் எழுதி வெளியிட்ட பரீக்ஷா விமர்சமென்பதைப் பராமர்சித்த நூலிது. ரஸமாகத் தெரிவிக்கக் கூடிய விஷயமொன்றுமில்லையிங்கு.

123. பரிஷ்காரபராமர்சஃ: கீழே நெ. 28, 119. இரண்டு நூல்களில் விசாரிக்கப்பட்ட விஷயத்தின் ஸமாப்தி இதிலுள்ளது. ஆந்த்ரதேசத்துப் பல வித்வான்களின் ப்ரசஸ்தி பத்ரிகைகளோடு கூடியது.

124. ரக்ஷாவிலோசநபாவப்ரகாசிகா: இது இரண்டுமயூகங்கள் கொண்டது. இதில் ரக்ஷா என்றது ஸச்சரித்ரரக்ஷையை; விலோசநமென்றது ஸுதீவிலோசநமென்கிற தர்மசாஸ்த்ரக்ரந்தத்தை. இவ்விரண்டு நூல்களிலுமுள்ள உக்தி விசேஷங்களின் கருத்தை விசதீகரிக்கத் தோன்றிய நூலிது. இந்நூலின் விஷயத்தைச் சுருக்கமாகத் தெரிவிப்போமிங்கு ;—

கீழே நெ. 121 பாதுகாஸஹஸ்ராவதாரதத்வத்தில் ப்ராஸங்கிகமாக ஒரு ரஹஸ்யார்த்த விஷயம் ப்ரஸ்துதமாயிற்று, அதாவது—ஆச்சான் பிள்ளை சரம ரஹஸ்யத்ரய மென்கிற க்ரந்தத்தில்—த்வயத்தில் பூர்வ கண்டத்தின் முதற்பதவிவரணத்தில்—"இப்பதத்தில் த்விவசநம் 'ஸத்விதீயமிவ்வுபாயம்' என்கிற ஸாஹஸ வசனத்தைத் தள்ளுகிறது; அவனு மவளுங்கூடி உபாயமென்னில் சரணங்களிரண்டென்ன வொண்ணாது, நாலென்ன வேணும்" என்றருளிச் செய்திருந்தார். இது முதலான ஸ்ரீஸூக்திகளை தேசிகன் ரஹஸ்யத்ரயஸார த்வயாதிகாரத்தில் "சரணவிதி நிர்த்தேச:" என்று தொடங்கி மூன்று காரிகைகளினால் தூஷித்தும் பரிஹஸித்தும் போந்தார். மஹாவித்வானாகிய ஆச்சான் பிள்ளையின் திவ்ய ஸூக்தியை 'மந்தன் பேச்சு' என்றும் 'படித்தவர்கள் பரிஹாஸம் பண்ணக்கூடியது' என்றும், 'ஆராய்ச்சியில்லாமல் மிகவும் துணிச்சலாக வெளியிடப்பட்டது' என்றும் மிகவும் அநாவச்யகமாக தேசிகன் தூஷித்தெழுதியிருந்ததை அந்தப் பாதுகாஸஹஸ்ராவதாரதத்துவத்திலே பிரமாணோபபத்திகளுடன் நிரஸிக்கும் அடைவிலே, தேசிகனுடைய ஸச்சரித்ரரக்ஷையிலும் தோழப்பருடைய ஸுதீவிலோசநத்திலுமுள்ள சில வாக்கியங்கள் உதாஹரிக்கப்பட்டு மந்தரென்னும் வசைமொழி தேசிகன் மீது ஏறும்படியாகத் தோழப்பர் நிகமித்திருக்குமது நிரூபிக்கப்பட்டது. அதற்குமேல் நாலைந்து வருஷங்களுக்குப் பிறகு ஸ்ரீமான். புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசாரியரென்பவர், ஒரு ஆவணி மாதத்தில மதுரையில் நடந்த வேதாந்த தேசிக பக்தஸபையில் இது விஷயமாக ப்ரஸ்தாவம் செய்து ஒரு துண்டுப்பிரசுரம் வெளியிட்டார். அப்போது நடந்துகொண்டிருந்த வேதாந்த தீபிகையிலும் 'ஸ்ரீ தேசிகஸூக்தி ஸாதுத்வஸமர்த்தநம்' என்றொரு வியாஸமெழுதி வெளியிட்டிருந்தார். அவை தமிழில் வெளிவந்தவை ; அவற்றையெல்லாம் நிச்சேஷமாக மறுத்து ரக்ஷாவிலோசநபாவப்ரகாசிகையென்கிற இந்த ஸம்ஸ்க்ருத நூல்வெளியிடப்பட்டது.

(1) ஆச்சான்பிள்ளையருளிச்செய்த விஷயத்தில் தேசிகன் ஏறிட்ட தூஷண பரிஹாஸங்கள் சிறிதும் ஏறமாட்டா. (2) 'விச்வேதேவார்த்தே' 'விச்வேதேவரூபீ' இத்யாதிவ்யவஹாரங்கள் பிராமாணிகமானவைகளே யென்று தேசிகன் திருவுள்ளமாக ஸச்சரித்ரரக்ஷையில் விளங்குகின்றது. (3) அப்படிப்பட்ட வ்யவஹாரத்தை ஸுதீவிலோசநத்தில் க்ஷேபித்தெழுதிய தோழப்பர் இட்டிருக்கிற சில வார்த்தைகள் தேசிகனையே ஸ்பரிசிக்கின்றன.—என்கிற இம்மூன்று விஷயங்களே விசாரத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டவை. இம்மூன்று விஷயங்களுள் முதல் விஷயத்தைப்பற்றிமட்டும் ஸ்ரீமத் பரமஹம்ஸ கோழியாலம் ஸ்வாமியும் தச்சிஷ்யர்களும் நெடுநாள் வரையில் போராடினார்கள். கடைசியாக 'ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவவிமர்சம்' என்கிற (நெ. 125) நம்முடைய நூல் வெளிவந்த பிறகே 'சாந்தஃ கோலாஹலஃ' என்றாயிற்று. 'விச்வே தேவார்த்தே' என்கிற இரண்டாவது விஷயத்தில் கீழ் நெ. 11. பரிபந்திபஞ்சபங்கீ என்கிற நூலுக்கு லக்ஷ்யபூதரான ஸ்ரீ. வேளியநல்லூர் ஸ்ரீநிவாஸதாதாசாரியார் என்னுடைய பக்ஷத்தையே ஸமர்த்தனம் பண்ணி அதற்குரிய பிரமாணங்களும் காட்டி உத்யாநபத்ரி

கையில் ஒரு வியாஸமெழுதி வெளியிட்டார். D. T. தாதாசாரியர்தாமும் அதை அபிநந்தனம் செய்து அதிலேயே வெளியிட்டுவிட்டார். இதனால் மூன்றாவது விஷயமும் முடிந்ததாக ஆய்விட்டது. பிறகு புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸய்யங்கார் 'நம்மவர்களே நமக்கு ப்ரதிகூலர்களாக வெளிவந்துவிட்டார்களே!' என்று ப்ரலாபம் செய்துகொண்டு அவ்விருவர் விஷயமான கோபத்தோடே சாந்தராய்விட்டார். மேலே 125 நெ. நூலைப்பற்றின விவரணத்தில் மற்றவை காண்க.

## 125. ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ விமர்ச:

கீழே இந்நூலைப்பற்றின ப்ரஸ்தாவமுள்ளது. ஆச்சான்பிள்ளை செய்தருளிய த்வயார்த்த விவரணத்தில் "அவனு மவளுங்கூடி உபாயமென்னில் சரணங்கள் இரண்டென்ன வொண்ணாது, நாலென்னவேணும்" என்கிற ஸ்ரீஸூக்தியின் யதாவஸ்திதமான கருத்தை யதாவத் க்ரஹியாமல் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் தூஷண பரிஹாஸ ஸம்ப்ரமங்கள் தோன்றிவிட்டனவென்பதை நாம் பல நூல்களால் பன்னிப் பன்னியுரைத்திருக்கிறோம். மேலே தமிழ்நூற்பகுதியில் வரும் ஸதாசார்யஸூக்திரக்ஷா, தேசிகஸூக்தி ஸித்தாஞ்ஜநம், தத்வநிவேதநம், ரக்ஷாவிமர்சசிக்ஷா முதலான பல நூல்கள் இதற்காகவே தோன்றியவை. நவீநர்களின் வகுப்பில் ரஹஸ்யத்ரயஸார வியாக்கியானமாகிய ஸாராஸ்வாதிநியின் கர்த்தாவை அபரதேசிகனாக அபிமானித்திருக்கிறார்கள். உண்மையில் அவர் ஸாமாந்ய ஜ்ஞானியானவொரு பரமைகாந்தி. அவர் "சரணங்களிரண்டென்னவொண்ணாது, நாலென்னவேணும்" என்னுமாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தியை ரஹஸ்யத்ரய ஸாரத்தில் தூஷித்திருக்குமிடத்திற்கு வியாக்கியானஞ்செய்கையில் "समस्यमानपदार्थसंबन्धिलिङ्गवचनानां प्रधानमात्रानुसारित्वात् सामात्यो राजा वदतीति प्रयोगः, न तु वदत इति" என்று எழுதிவைத்தார். இது சாஸ்த்ரஜ்ஞர் எழுதக் கூடிய வார்த்தையேயன்று. இது ஸர்வாத்மநா அஸம்பத்த வார்த்தை யென்பதை அலசியலசிப் பன்னிப்பன்னி யெழுதியிருக்கிறோம். மேற்குறித்த * ஸமஸ்யமாநேத்யாதி வாக்யத்தைப்பற்றி நாம் ஸதாசார்ய ஸூக்தி ரக்ஷையில் (கீழ் நெ. 34.) என்ன எழுதியிருந்தோமென்றால்,

तदिदं वाक्यजालं शास्त्रवासनात्यन्ताभावपिशुनमित्यत्र न कोऽपि शास्त्रवित् विप्रतिपद्येत । .... सामात्यो राजावदत इति यथा न प्रयोज्यम् तथा श्रीमन्नारायणः प्रपत्तव्याविति न प्रयोज्यमिति तु शिक्षा निष्पद्यते । केन प्रयुक्तमत्र तथा । इदमपि विमृशत । वदतीत्यत्र आख्यातार्थसंख्या न स्वप्रकृत्यर्थे अन्वेति; अपि तु भावनान्वयिनि राज्ञि । चरणावित्यत्र तु चरणशब्दोत्तर वचनार्थ संख्या प्रकृत्यर्थचरण एवान्वेति । तत्सिद्धं महद्वैषम्यम् । विशेष्यमात्रानुसारित्वमित्यपि लक्ष्ये कथं समन्वेतीति पर्यालोचनीयम् । सामात्य इत्यत्र विशिष्टे आख्यातार्थान्वय संभवात् विशेष्यमात्रानुसारित्वमित्युपपद्यते । प्रकृते श्रीमन्नारायणरूपविशिष्टे चरणशब्दोत्तरवचनार्थान्वयाभावात् विशेष्यमात्रानुसारित्वकथाया एव न प्रसक्तिः । तदन्वयाङ्गीकारे नारायणद्वित्वमेव हि भायात् । ....इत्थं नाम प्रायस्सर्वमपि विपर्यस्तमेव शुष्कमेव च प्रतिपादयताम् असंबद्धप्रलापपुञ्जमयग्रन्थबृन्दानां संकेतबद्धैरादरणम् सदाचार्यसदुक्तीनां दुराग्रहैकवैवश्येन धिक्करणं च हन्त प्रतिपक्षिणां पारम्परिकमिव ।

என்றெழுதி வைத்தோம். இதற்குமேல் ஸ்ரீமத் பரமஹம்ஸ. கோழியாலம்ஸ்வாமி தம்முடைய திருநாமத்தால் மறுப்பெழுதுவதை நிறுத்திக்கொண்டு சிஷ்யர்கள்

பெயரால் மறுப்பு வெளியிடத் தொடங்கினர். இந்த ஸ்வாமிதாமே தமது திருநாமத்தினாலேயே வெளியிட்ட ஸமஸ்யமாக ஸூக்த்யர்த்த நிஷ்கர்ஷமென்கிற நூலின் அட்டையில் "एतद् ग्रन्थकर्तृभिः कृताः कारिताश्च ग्रन्थाः" என்று மகுடமிட்டுப் பிறர் பெயரால் வெளிவந்த நூல்களையும் தம்முடைய ஸொந்த நூல்களோடு சேர்த்து வெளியிட்டதனால் பிறர் நூல்களுக்கும் ஸ்வாமியே கர்த்தா வென்பது விளங்குகின்றதென்று இதை முன்னமே விளக்கியிருக்கிறேன். நமக்கு விஷயம் ப்ரதானமே யொழிய வக்தாக்களைப்பற்றி விசாரமில்லை. பிறருடைய பெயரால் மறுப்புகளை வெளியிட்டும் பயன்படவில்லை. மாதக்கணக்கிலும் வருஷக் கணக்கிலும் பலர்கூடி யெழுதி வெளியிடுபவை யெல்லாம் இரண்டொரு நாளிலேயே பங்கமடைந்து வந்தன. இவ்விசாரத்தில் ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவவிமர்ச மென்கிற இந்த நமதுக்ரந்தமே முடிவாக நின்றது. இந்நூல் இருநூறுச்லோகங்கள் கொண்ட ஏழு பரிச்சேதங்களையுடையது; விளக்கமான தமிழுரையோடுங் கூடினது. ஈச்வரஹு பங்குனி யுத்தரத்தன்று வெளியிடப்பட்டது. பல வித்வான்கள் தலையிட்டு ஏழெட்டு வருஷகாலம் ஓயாது நடந்த இந்த விவாதத்தின் ஸ்வரூபம் ஸாமான்ய ஞானிகளுக்கும் தெரியும்படி உணர்த்துகிறேனிங்கு. இங்கு அர்த்தத்தைப்பற்றி ஒரு விவாதமும், சப்தப்ரயோகத்தைப்பற்றி ஒரு விவாதமுமாக இரண்டு விவாதங்களுண்டு. த்வயத்தில் 'சரணௌ' என்று த்விவசனமே யுள்ளது; இதனால் இரண்டு திருவடிகளே ஏற்படுகிறபடியாலே எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளே உபாயமென்று விளங்குகின்றது. பிராட்டியும் உபாயமென்னில், அவளுடைய இரண்டு திருவடிகளையும் கூட்டி சரண சப்தத்தில் பஹுவசநப்ரயோகம் பண்ணியிருக்க வேணும்—என்று சொல்லப்பட்டது. இதன்மேல் இரண்டு விதமான சோத்யங்கள். முதல் சோத்ய மென்ன வென்றால் "திருவடிகள் நாலென்று சொல்ல வேண்டிய அவச்யமில்லை; இரண்டென்று சொல்லி யிருந்தாலும் இதனாலேயே பிராட்டிக்கும் உபாயத்வம் ஏற்படக் குறையில்லை" என்பது முதல் சோத்ய மென்று கொள்ளுங்கள். ப்ரதிபக்ஷிகள் இந்த சோத்யத்திலே அதிகமாக வூன்றவில்லை. அவர்கள் முக்கியமாக எடுத்துக்கொண்ட சோத்யமெது வென்றால், பிராட்டிக்கும் உபாயத்வம் தேறவேணுமானால் 'ஸ்ரீமந்நாராயண சரணாந்' என்று த்வய சரீரமிருக்கவேணு மென்று ஆச்சான்பிள்ளை ஆபாதநம் பண்ணுகிறார்; இது மிகவும் அபஹாஸ்யமான ஆபாதநம். "மகனும் தந்தையும் போகிறார்கள்" என்று ஒரு பிரயோகம்; "மகனோடு கூடிய தந்தை போகிறான்" என்று மற்றொரு பிரயோகம். இவ்விரண்டு ப்ரயோகங்களிலும் தாற்பரியம் ஒன்றேயாயினும் வசநப்ரயோகத்தில் வாசியுண்டு. முந்தின விடத்தில் த்விவசந ப்ரயோகம் பொருந்தும். பிந்தின விடத்தில் ஏகவசநப்ரயோகம் பொருந்துமே யல்லது த்விவசநப்ரயோகம் ஒருநாளும் பொருந்தாது. ஏன் பொருந்தா தென்னில், முந்தின விடத்தில் மகன், தந்தை ஆகிற இருவர்க்கும் ஸமப்ராதாந்யமிருப்பதனால் அங்கு த்விவசநம் பொருந்தும்; பிந்தின விடத்தில் [புத்ரஸமேதஃ பிதா என்பதில்] பிதாவுக்கு மட்டுமே விசேஷ்யதை யுள்ளது; புத்ரனுக்கு அது இல்லை. ஆகவே पुत्रसमेतः पिता गच्छति என்னலாமே தவிர पुत्रश्च पिता च गच्छतः என்றவிடத்திற்போல த்விவசநப்ரயோகம் செய்யவேகூடாது. செய்தால் அது அபஹாஸ்யமேயாகும். அது போல *ஸ்ரீமந் நாராயண என்ற ப்ரக்ருத ஸ்தலத்தில் பிராட்டிக்கும் எம்பெருமானுக்கும் ஸமப்ராதாந்ய மில்லை; ஸ்ரீமானான நாராயண னென்கையாலே நாராயணனொருவனுக்கே விசேஷ்யத்வ முள்ளதாகையாலே அவனுக்குள்ளதான இரண்டு திருவடிகளை நோக்கி *ஸ்ரீமந் நாராயண சரணௌ* என்னலாமேதவிர *ஸ்ரீமந்நாராயண சரணாந்* என்னக்

கூடாது; அது பரிஹாஸ்ய ப்ரயோகமேயாகும். ஆகவே ஆச்சான் பிள்ளையின் ஆபாதநம் அபஹாஸ்யம். என்பது தூஷகர்களின் சோத்யம். இது சப்த ப்ரயோகத்தைப் பற்றியதே யொழிய அர்த்த விஷயகமன்று.

இதற்கு அடியேனுடைய ப்ரதிவாத மென்ன வென்றால்; ஆச்சான் பிள்ளை "சரணங்களிரண்டென்ன வொண்ணாது, நாலென்ன வேணும்" என்றிவ்வளவு அருளிச் செய்தாரே யொழிய சப்த ப்ரயோக சரீரத்தை யெழுதிக் காட்டியிருக்கவில்லை. 'ஸ்ரீ நாராயண சரணௌ' என்றிருந்திருக்கவேணு மென்பது அவருடைய திருவுள்ளம். இதுவொரு ஸமாதானம். மற்றொரு ஸமாதான மென்ன வென்றால், 'ஸ்ரீமந்நாராயண சரணௌ' என்கிற ப்ரயோகம் ஒருகாலும் அஸாதுவன்று; பிராட்டியின் திருவடிகளையும் பெருமாளுடைய திருவடிகளையும் விவக்ஷித்து ஸ்ரீமந்நாராயண சரணௌ என்று ப்ரயோகிப்பதை ஒரு சாஸ்த்ரமும் கண்டிக்க முன்வரமாட்டாது. "श्रीमन्नारायणः गच्छतः, श्रीमन्नारायणः वदतः, श्रीमन्नारायणः रक्षकौ" என்றிப்படிப்பட்ட ப்ரயோகங்கள் தூஷணீயங்களாகுமே யொழிய श्रीमन्नारायणस्य चरणाः, श्रीमन्नारायणस्य नयनानि என்றாற்போன்ற ப்ரயோகங்கள் ஸாக்ஷாத் பாணிநி பதஞ்ஜலி வரருசிகளாலும் தூஷிக்க முடியாதவை. வ்யதிகரண ப்ரயோகத்திற்கு ஸமாநாதி கரண ப்ரயோகத்தை த்ருஷ்டாந்தமாகக் காட்டவே தகாது. पुत्रसमेतः पिता गच्छतः என்று சொல்லக்கூடாதென்பது வாஸ்தவம். அப்படிப்பட்ட ஸமாநாதிகரண ப்ரயோகம் இங்கில்லை. மகனுடைய ஐந்து ரூபாயையும், தந்தையினுடைய ஐந்துரூபாயையும் விவக்ஷித்து पुत्रसमेतस्य पितुः दशरूप्याणि என்றால் அதை எப்படி க்ஷேபிக்கமுடியாதோ அப்படியே, பிராட்டியினுடைய இரண்டு திருவடிகளையும் எம்பெருமானுடைய இரண்டு திருவடிகளையும் விவக்ஷித்து श्रीमन्नारायणस्य चरणचतुष्टयम् என்றால் இதையும் க்ஷேபிக்கமுடியாது. ஆகவே ஆச்சான் பிள்ளையின் ஆபாதநத்தை க்ரந்தஜ்ஞைரபஹாஸ்ய மென்றும் மந்தப்ரோக்தமென்றும் சொல்லுகிறவர்களின் சொல்லே க்ரந்தஜ்ஞை ரபஹாஸ்யமாயும் மந்த ப்ரோக்தமாயும் முடிந்தது—என்பது அடியேனுடைய ப்ரதிவாத ஸர்வஸ்வம். ஸாரஸ்வாதிநீகாரர் "समस्यमानपदार्थसंबन्धिलिङ्गवचनानाम्" இத்யாதியாக எழுதியிருப்பது ஓரிடத்திலும் ஸமந்வயம் காட்டமுடியாததாகையாலும், ப்ரக்ருதவிஷயத்திற்கு ஈஷத்தும் உபயுக்தமல்லாமையாலும் அது ஸர்வாத்மநா அஸம்பத்தப்ரலாபம் என்று முடிக்கப்பட்டுள்ளது. இவ்விஷயத்தில் ப்ரதிவாதம் செய்தருள முன்னின்ற ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி ஸ்ரீரங்கத்தில் திருக்காவிரிக்கரையில் அடியேனோடு சர்ச்சை செய்கையில் * க்ரந்தஜ்ஞை ரபஹாஸ்ய மென்ற விடத்திலுள்ள ஸாரஸ்வாதிநீ பங்க்திகளை நான் ஸமர்த்தநம் செய்யாமற்போனால் த்ரிதண்ட சிகாயஜ்ஞோபவீதங்களைத் துறந்து அத்வைதஸம்ந்யாஸியாகக்கடவேன் என்று ப்ரதிஜ்ஞை செய்தருளினாரென்பதை ப்ரக்ருத விஷயகங்களான அடியேனுடைய ஸகலநூல்களிலும் அப்போதே வெளியிட்டிருக்கிறேன். ∗ ब्रह्मेशादिसुरव्रजस्सदयितः त्वद्दासदासीगणः—ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜஸ் ஸதயிதஸ் த்வத்தாஸதாஸீகண:* என்கிற ஆளவந்தார் ப்ரயோகத்தை எடுத்துக்காட்டியபின்பே ஸ்ரீஸ்வாமிக்குத் தெளிவு ஏற்பட்டது. இவ்விஷயத்தில் மறுப்பெழுதின வித்வான்கள் யாவரும் இற்றைக்கும் ஜீவித்தேயுள்ளார்கள்; புத்தங்கோட்டம் சீமாச்சாரொருவரே மறைந்தார். ஆச்சான் பிள்ளையின்

அநவத்ய ஸ்ரீஸூக்தியை க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யமாக்கவும் மந்த ப்ரோக்த மாக்கவும் அந்தோ! வெகு முயற்சி செய்தார்கள். வைகுண்ட வாஸியான ஸ்ரீ உவே மாம்பலம் வாஸுதேவாசார்ய ஸ்வாமி யொருவரே இந்த விவாதத்தின் ஆரம்பத்திலேயே தம்முடைய சிறந்த விமர்ச சக்தியைச் செலுத்தி "ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் இவ்விஷயம் ப்ரக்ஷிப்த மென்றே பெரியோர்களின் ஸித்தாந்தம்" என்று ஒரே வார்த்தையில் முடித்திட்டார். அதுவும் அவருடைய ஜீவித காலத்திலேயே அச்சேறியிருக்கிறது. அதற்காக அவரை நவீனர்கள் நிந்தித்தார்கள். இந்த ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ விமர்சத்தில் 188, 189 ச்லோகங்கள் இவை காணீர் ;

> इळङ्गाडुस्वामीत्यधिधरणि विख्यातयशसा यतीन्द्रेण श्लाघा सहृदयमहो या विरचिता ।
> न सा वाचां भूमिः, स पुनरिह पृष्टो भवतु भोः न हि प्रख्यातानामनृतकथनं जातु भविता ॥
> तत्त्वमुक्ताकलापादिसद्ग्रन्थतो भेदमीषच्च वा नैव पश्यामि भोः ।
> तावके ग्रन्थ इत्येवमेवं मुदा पण्डितानां पुरस्ते महान्तोऽवदन् ॥

இந்த ச்லோகங்களின் கருத்தாவது 'இளங்காடு ஸ்வாமியென்று ப்ரஸித்தரான யதிவரர் இந்த ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ விமர்சநூலை வாசாமகோசரமாகக் கொண்டாடினர். இதைப்பற்றி அந்த ஸ்வாமியை நேரில் கேட்கலாம்; ஒரு போதும் பொய் சொல்லார். அந்த ஸ்வாமி கொண்டாடிச் சொன்ன வார்த்தை யாவது, 'அண்ணா! உம்முடைய இந்த க்ரந்தம் தத்வமுக்தாகலாபாதி க்ரந்த துல்யமே யொழிய அதற்கு மிதற்கும் ஈஷத்தும் வாசி கண்டிலேன்' என்று, இதை அந்த ஸ்வாமி ஏகாந்தமாக ஸாதிக்கவில்லை; பல பண்டிதர்களின் முன்னிலையில் ஸாதித்தார் என்பதாம். [இது அந்த ஸ்வாமி திருநாட்டுக் கெழுந்தருளின பிறகு வெளியிட்ட தன்று. இது வெளியிட்ட பிறகு அந்த ஸ்வாமி பலவாண்டுகள் ஜீவித்திருந்தார். "அண்ணா! கோழியாலம் ஸ்வாமியும் தச்சிஷ்யர்களும் என்னோடு போராடும்படி செய்து விட்டீரே; அதற்கு நான் அஞ்சவில்லை. உண்மையை யொளிப்பது மநுஷ்யதர்மமா?" என்று அடிக்கடி ஸாதித்துக் கொண்டிருந்தார்.

126. **கோதார்த்தோக்ஷாவமர்தவிமர்சஃ :** திருவாய்மொழியில் (3-4-4) *வம்பவிழ் கோதை பொருட்டா மால்விடை யேழுமடர்த்த* என்கிற பாசுரத்தில் நப்பின்னைப் பிராட்டிக்காக எருதேழடர்த்த கதை ஆழ்வாரால் அநுஸந்திக்கப்பட்டிருக்கின்றது. இங்கு நப்பின்னைப் பிராட்டியை அப்பெயரையிட்டுக் கூறாமல் 'வம்பவிழ் கோதை' என்று கூறியிருக்கிறது. 'நறுமணம் மிக்க பூமாலையை யணிந்துள்ளவள்' என்பது இதற்குப் பொருள். இது ஸாமாந்ய சப்தமே யொழிய விசேஷ சப்தமன்று. நப்பின்னையென்றோ மைதிலியென்றோ பாஞ்சாலியென்றோ உள்ள சிறப்புப்பெயரையிட்டுச்சொல்லியிருந்தால் அது விசேஷ சப்த மெனப்படும். அப்படிச் சொல்லாமல் பொதுவாக மாதர்கட்குரிய விசேஷணத்தை யிட்டுச் சொல்லியிருந்தால் அது ஸாமாந்ய சப்த மெனப்படும். தமிழ் நூற்களில் நப்பின்னை, ஸீதை, த்ரௌபதி முதலிய ஸ்த்ரீவ்யக்திகளைத் தெரிவிக்கவேண்டு மிடங்களில் ஸாமாந்ய சப்தங்களை யிட்டுத் தெரிவிப்பது தான் அதிகமாயிருக்கும். அப்படி ஸாமாந்ய சப்தத்தை யிட்டுச் சொன்னால் இன்ன வ்யக்தியென்று எப்படி தெரிந்து கொள்ள முடியுமென்றால் அடுத்தபடியாகக் கூறப்படுகிற கதையினால் வ்யக்தி நிச்சயம் எளிதாகவுண்டாய் விடும். *கோவைவாயாள் பொருட்டு ஏற்றினெருத்த மிறுத்தாய்* என்கிறார் நம்மாழ்வார். இங்கு ஏற்றினெருத்த மிறுத்த

கதையின் ஸமபிவ்யாஹாரத்தினுல் கோவைவாயாளென்கிற ஸாமாந்ய சப்தம் நப்பின்னைப் பிராட்டியைக் குறிக்கின்றதென்று எளிதினுணரலாமன்றோ. திருமங்கையாழ்வார் * தையலாள் மேல் காதல் செய்ததானவன் வாளரக்கன் * என்கிறார். இங்கு ராவண ஸம்ஹார கதையின் ஸமபிவ்யாஹாரத்தினுல் தையலாளென்கிற ஸாமாந்ய சப்தம் ஸீதா பிராட்டியைக் குறிக்கின்றதென்று உணரலாகும். திருவல்லிக்கேணிப் பதிகத்தில் *அணியிழை * என்றும் *சந்தமல் குழலாள் * என்றுமுள்ள ஸாமாந்ய சப்தங்கள் த்ரௌபதியைக் குறிக்கின்றன வென்பது அங்குள்ள கதையினுல் நிர்ணயிக்கலாகிறது. இங்ஙனே திவ்யப் பிரபந்தத்தில் ஆயிரக்கணக்கான இடங்கள் காணக் கிடக்கின்றன. இது தமிழ் நூல்களுக்கே அஸாதாரணமான மரியாதையாகும். வடமொழி நூல்களில் இங்ஙனே ஓரிடத்திலும் காணக் கிடைக்காது. ப்ரக்ருதம் * வம்பவிழ் கோதை பொருட்டா * என்னும் பாசுரத்தில் மால்விடையேழு மடர்த்த கதையின் ஸமபிவ்யா ஹாரத்தினுல் வம்பவிழ் கோதை யென்கிற ஸாமாந்ய சப்தத்தினுல் நப்பின்னைப் பிராட்டிதான் விவக்ஷிதை யென்பது எளிதினுணரப்படும். ஸகல வியாக்கியானங்களும் இப்படியேயுள்ளன. தேசிகனருளிச் செய்த த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் இப்பாசுரத்திற்காக * गोदार्थोक्षावमर्दे - கோதார்த் தோக்ஷாவமர்தே * என்று இடப்பட்டிருப்பதாகக் காண்கிறது. மூலமான பாசுரத்திலுள்ள கோதை என்கிற சொல்லுக்கும் இந்த ச்லோகத்திலுள்ள கோதா என்கிற சொல்லுக்கும் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. வடமொழியில் கோதா என்றால் ஆண்டாளையே பொருளாகக்கொள்ளலாகும். ஆண்டாளுக்காக எருதேழடர்த்தது கிடையவே கிடையாது. அது நப்பினைக்காகவே; அவளுக்கோ கோதா என்கிற பெயர் கிடையாது. நீளா என்பதே நப்பின்னையின் ஸம்ஸ்க்ருத நாமமென்பது நிர்விவாதம். * நீளாதுங்கஸ்தநகிரிதட ஸுப்த மித்யாதிகளிலும் இது ஸுப்ரஸித்தம். ஏவஞ்ச, * வம்பவிழ் கோதை பொருட்டா வென்கிற பாசுரத்திற்காக இட்ட ச்லோகத்தில் * நீளார்த்தோக்ஷாவமர்தே * என்றிருக்க வேணுமே யொழிய * கோதார்த்த...* என்றிருப்பது பாடஸ்கலனம்—என்று அடியேனியற்றிய த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலீ வியாக்கியானத்தி லெழுதி வெளியிட்டிருந்தேன். இதிலும் தீப சலபந்யாயேந பல பண்டிதர்கள் எதிரம்பு கோத்து வந்து விழுந்தார்கள். அன்னவர்களில் D. T. தாதாசாரியரும், (காலஞ்சென்ற) திருப்பாப்புலியூர் சடகோபாசாரியரும் தலைநின்றவர்கள். இவர்களின் அசட்டு வாதங்களுக்கு மறுப்பாகச் சில தமிழ் நூற்களும் தோன்றியுள்ளன. அவற்றைப்பற்றி மேலே தமிழ் நூற் பகுதியிற் காணலாகும். இந்த விவாதம் தொடங்கின காலத்தில் ஸ்ரீமதுபயவே. வித்வச் சிகாமணி. கோஷ்டீபுரம் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமியும் அவருடைய திருத் தம்பியார் ஸ்ரீராமதேசிகாசார்ய ஸ்வாமியு மெழுந்தருளி யிருந்தார்கள். அவ்விருவரிடத்திலும் இதைப்பற்றிச் சிலர் சர்ச்சிக்கச் சென்றார்கள். அவர்களில் பெரியவர் ஸாதித்ததாவது, விவாதப் பாசுரத்தின் தொடக்கம் வம்பு; இந்த வம்பு விவாதத்தில் நீங்கள் ஏதுக்குத் தலையிடுகிறீர்கள்? அண்ணா செய்திருப்பது ருஜுவான வாதம்; நேராக தேசிகனே யெழுந்தருளினாலும் இங்கு எதிர்வாதம் பண்ணுவதற்கு விஷயமில்லை என்பதாம். ஸேதுபதி ஸம்ஸ்தான மஹா வித்வான். கீர்த்தி மூர்த்தி, ராமநாதபுரம் ரா. ராகவையங்கார் ஸ்வாமியைச் சிலர் சந்தித்து " அண்ணங்கராசாரியர் இவ்விதமாக எழுதியிருக்கிறார்; இதை தேவரீர் விமர்சிக்க வேணும் " என்றார்களாம். அதற்கு அவர் ஸாதித்தாராம்—அண்ணா

ஒன்றெழுதினுரென்ருல் அதை நீரும் நானும் விமர்சித்து லாபமென்ன? பாக்யமிருந்தால் அதிலே யீடுபட்டு வாழலாம்; இல்லையாகில் வாளா கிடக்கலாம் என்று. இதை அந்த ராகவையங்கார் ஸ்வாமி தாமே ஒருவிசை ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் தமது உபந்யாஸத்தினிடையே பல பெரியாரெதிரில் பேசினுர். அதிலிருந்தே நாமு மறிந்தது.

127. தேசிகாவதாரவத்ஸரசிந்தா: வேதாந்த தேசிகன் திருவவதரித்தது விபவ வருஷத்திலென்றும் சுக்ல வருஷத்திலென்றும் நவீனர்கள் விவாதப்பட்டு எழுதி வந்தபோது விபவவருஷத்தில்தானென்று நிர்ணயிக்கத் தோன்றிய நூலிது. கோவில் சண்டைகளுக்காக நூதன கல்பிதமான * ராமாநுஜ தயாபாத்ரத் தனியனுக்கு வருஷம் மாஸம் திதி நக்ஷத்ரம் வாரம் லக்னம் ஹோரை முதலான யாவற்றையுமிட்டு ச்லோகமியற்றி வைத்தவர்கள் ஒன்ருன ஸ்வாமியின் திருவவதார வருஷத்தில் விவாதப்படும்படி செய்து வைத்தார்கள் என்பது ஸாராம்சம். இந்த ஸாராம்சத்தைமட்டும் யாவரும் கவனிக்கவேணும்.

128. ஸப்ததிரத்நதத்வம்: அஸ்மத்குலகூடஸ்தரான ப்ரதிவாதி பயங்கராசார்யர் தேசிகன் விஷயமான ஒரு ஸ்தோத்ரமருளிச் செய்திருந்தார்; அதற்கு ப்ராசார்ய ஸப்ததிரத்நமாலையென்று பெயர். அது இப்போது கிடையாது, லுப்தம். நவீநர்கள் ஸப்ததிரத்நமாலிகையென்று ஒன்று கல்பனை செய்தார்கள். அல்லது வாஸ்தவமான அந்த க்ரந்தத்தில் சில ச்லோகங்களை நீக்கிவிட்டுச் சில ச்லோகங்களைக் கல்பனை செய்து சேர்த்தார்களென்ருவது இசைந்து தீரவேண்டும். ஏனென்னில், தேசிகனை விபவத்தில் உலகமெல்லாம் கொண்டாடிக் கொண்டிருந்தது என்கிற உண்மையை ஸ்துதிநூலில் எழுத வேண்டியிருக்க அதைவிட்டு அக்காலத்தில் யாவரும் தேசிகனை அவமானப்படுத்துவதும் நிந்திப்பதுமாகவே யிருந்தார்களென்றும் அவர்கள் ராவண சிசுபாலாதிகளோடொத்தவர்களென்றும் காட்டுகிற "ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்ய ராவணநுஸாரிணம்" இத்யாதி ஜுகுப்ஸநீய ச்லோகங்களை யிட்டிருப்பது கொண்டே ப்ராமாணிகர்கள் இது நவீந கல்பிதமென்பதை நிர்ணயிக்கத் தட்டில்லை; * ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:, ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி* என்ருற்போலே ஸ்துதிக்கும் வழியை அறவேவிட்டுப் பரநிந்தையே மலிந்திருக்குமிந்த ஸப்ததிரத்நமாலிகை நவீநர்கள் தேசிக பக்தியை ஏறிட்டுக்கொண்டபின் கல்பித்ததே என்பது முதலிய பல விஷயங்கள் இந்நூலில் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன.

129. வைபவப்ரகாசிகாவிமர்ச:: சோளங்கிபுரம் சண்டமாருதம் தொட்டயாசார்ய ஸ்வாமி தேசிக பக்தர்களில் தலைவராக விளங்கினவர். அவர்க்கு தேசிகன் ஸ்வப்நத்தில் ஸேவை ஸாதித்து மதாந்தரகண்டனத்திற்குரிய விஷயங்களை அநுக்ரஹித்தாரென்றும் ஐதிஹ்யமுண்டு. இந்த ஸ்வாமி தென்னுசார்ய ஸம்ப்ரதாயஸ்தரே யென்பது இற்றைக்கும் விளங்கிவருகிற இவருடைய திருவம்சஸ்தர்களால் நிர்விவாதமானது. இந்த ஸ்வாமி தேசிக பக்தாக்ரேஸரராகையாலே தேசிகனைப் புகழ்ந்து துதித்து எத்தனை க்ரந்தங்கள் ஸாதித்தாரென்ருலும் அதில் விவாதப்பட ப்ரஸக்தியே கிடையாது. தேசிக சரித்ர ப்ரதிபாதனத்தில் பரமப்ராமாணிகமென்று ப்ரஸித்தமான ஆசார்ய சம்பூ க்ரந்தத்திலில்லாத கதைகளை நவீநர்கள் கல்பனை செய்யத் தொடங்கின போது அவற்றுக்கு ஸம்வாதம் காட்டவேண்டி இந்த தொட்டயாசார்ய ஸ்வாமி வேதாந்த தேசிக வைபவப்ரகாசிகையென்று ஒரு க்ரந்தமிட்ட

தாகக் கல்பித்துவிட்டார்கள். இந்த வைபவ ப்ரகாசிகையானது ஸாதாரண ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுங்கூட ப்ரயோகிக்கமாட்டாத அசுத்த ப்ரயோகங்கள் மலிந்ததாகையாலே இது அந்த மஹாவித்வத் ஸார்வ பௌமர் செய்திருக்க ஔசித்யலேசமுங் கிடையாதென்று நன்கு நிரூபித்திருப்பது இந்நூல். இதை இன்னமும் சிறிது விரிவாகத் தெரிந்துகொள்ள அடுத்த நெ. 132 க்ரந்தம் [ஸத்ஸம்ப்ரதாய ஸஹஸ்ராம்சு] மிகவுதவும்.

130. ராமாநுஜ தயாபாத்ரபத்ய சரித்ரம்: தேசிகனுக்கு * ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியனே ப்ராமாணிகமான தென்றும் * ராமாநுஜதயாபாத்ர மென்கிற ச்லோகம் நவீநர்களால் கோவில் கலஹங்களுக்காக ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்றும் அசைக்கமுடியாத ஹேதுக்களை நிரூபித்துத் தமிழில் பலநூல்கள் எழுதப்பட்டிருப்பது மேலே தமிழ் நூற்பகுதியில் விசதமாகும். இந்த நவீனத்தனியன் தோன்றியது காரணமாகவே ஸ்ரீவைஷ்ணவர்களுள் அபரிமிதமான கலஹங்களும் ஆங்காங்கு லக்ஷக்கணக்கான வீண் பொருட் செலவுகளும் ஏற்பட்டு மஹத்தான க்ஷோபம் விளைந்து கொண்டிருப்பதால் இந்த புதுத்தனியனின் உண்மைஸ்வரூபத்தை உலகமுழுவதுமறியப் பல பாஷைகளிலும் யதார்த்தமாக வெளியிட அடியேனுக்கு மிக்க ஆசையுண்டாயிற்று. வட நாட்டினர்க்கு உபயோகமாம்படி வட மொழியில் எழுதப்பட்டதிது. இதன் மொழி பெயர்ப்பு ஆங்கிலத்திலும் வெளியிடுவிக்கப் பட்டுள்ளது. இத்தகைய நூல்களினால் "யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ" என்கிறபடியே விவேகசக்தியற்ற பஹுஜனங்களின் த்வேஷமொன்றுதான் பலனாகத் தேறுமென்பது நமக்கு நன்கு தெரிந்திருந்தும் தத்துவத்தை யுணர்த்துவதில் நாம் இளைப்பதில்லை. இந்த பாத்ரத் தனியன் நவீனந்தா னென்பதையும் கோவில் சண்டைக்காகவே தோன்றியதென்பதையும் அசைக்க வொண்ணாத அறுபது காரணங்கள் காட்டி ஏழெட்டு நூல்களில் விளக்கியிருக்கிறேன். அவற்றைப் பாராதவர்கள் இவ்வுலகில் இல்லை. இதைப்பற்றின நூல்களை நாம் 18 வருஷகாலமாக வெளியிட்டு வருகிறோம். 15-வருஷம்வரையில் ஒருவரும் ஒரு பதிலும் பேசினதுமில்லை, எழுதினதுமில்லை; மதுரையில் ஒருவர் ஏதோ தூஷணையாக வெளியிட்டா ரென்பதும், அதற்கு உடனே மறுப்புகள் வெளிவர அவரும் கையொழிந்து நின்றாரென்பதும் மேலே தமிழ்நூற் பகுதியில் விசதமாகும். மூன்று வருஷங்களுக்கு முன்பு இந்த வடமொழிநூல் வெளியானபின்பு இருவர் ஏகதேசமாக பதில் வெளியிட்டார்க ளென்பதும், அவையும் உடனே * வானோமறிகடலோ மாருதமோ தீயகமோ * என்னும்படியாயின வென்பதும் மேலே 131, 132 லக்கமுள்ள நூல்களால் மிக விளங்கும். இதைப்பற்றி நாம் 100-பக்கமும் 200 பக்கமுமாக எழுதியிருப்பவற்றின் ஸாரத்தை மிகவும் ஸம்க்ஷேபமாக இங்கு உணர்த்துவோம்.

வேதாந்ததேசிகனுக்கு * ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: * என்பதொன்றே தனியன்; ராமாநுஜ தயாபாத்ரமென்கிற தனியன் இருநூற்றுச் சொச்சம் வருஷங்களுக்கு உட்பட்ட காலத்தில் கோவில் சண்டை தொடங்கினபோது நூதனமாகக் கல்பிக்கப்பட்ட சுலோகம். அது தோன்றினகாலம்முதல் ஆங்காங்கு கிரிமினல் வியாஜ்ஜியங்களும் ஸிவில் விவகாரங்களும் அபரிமிதமாகத் தோன்றி அதைச் சொன்னவர்களுக்குப் பலவித தண்டனைகளும் சாச்வத இஞ்ஜங்ஷன்களும் ஊர்ஜிதமாகியிருக்கின்றன. இந்தச்லோகத்தை நவீனமாகத் தொடுத்த நவீனர்களுக்குக் கோவில்களில் ஸம்பந்தமும் நவீனம்; திவ்யப்ரபந்தத்தில் அந்வயமும் நவீனம்; ஆழ்வாராசார்யர்களோடு உறவும் நவீ

னம். இதைப்பற்றின விஷயங்கள் பாரதமும் ராமாயணமும் போலே விஸ்தாரமாகவுள்ளன. அவை இந்நூலில் விசதமாக நிரூபிக்கப்பட்டுள்ளன.

மிக முக்கியமான ஒரே விஷயம். பாத்ரத் தனியன் சொன்னபிறகு *யோநித்யமச்யுத* என்கிற உடையவர் தனியனும் *மாதா பிதா* என்கிற நம்மாழ்வார் தனியனும் அநாதி ஸ்ரீ வைஷ்ணவர்களாலே அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. இது யுக்தம். ஏனென்றால், அவர்கள் எப்போதும் [ஸமாச்ரயணபரம்பரையிலும் க்ரந்தபரம்பரையிலும்] உடையவர்க்கும் ஆழ்வார்க்கும் தனியனாக அந்த ச்லோகங்களையே வைத்துக் கொண்டிருப்பதனாலே. நவீனர்களோ வென்னில், இவற்றைத் தள்ளி இவற்றின் ஸ்தானத்திலே *ப்ரணமம் லக்ஷ்மணமுநி: *யஸ்ய ஸாரஸ்வதஸ்ரோத:* என்னும் ச்லோகங்களையே வைத்துக் கொண்டிருக்கிறார்களென்பது நிர்விவாதம். இப்படிப்பட்டவர்கள் திவ்யப்ரபந்தஸேவையில் மாத்திரம் அநாதி ஸ்ரீவைஷ்ணவர்களாதரிக்கும் தனியன்களைச் சொல்லி வருவது எதனாலேயென்று விசாரித்தால் மருமம் விளங்கும். தவிரவும், வாழிதிருநாமத்தில். ஸ்ரீசைலேசத் தனியனுக்கு முன்னாடி யநுஸந்திக்கப்பட்டுவருகிற *நம: ஸ்ரீ சைல நாதாய* என்கிற ச்லோகமானது மாமுனிகளுக்கு ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையின் தனியன். திவ்யப்ரபந்த ஸேவைக்கு மாத்திரம் அது தனிப்பட்ட தனியனன்று; ஸமாச்ரயண பரம்பரையிலும் க்ரந்த பரம்பரையிலும் அவர்க்கு அதுவேதான் தனியன். *ராமாநுஜதயாபாத்ரத் தனியனுக்கு முன்னே சொல்லப்படுகிற *நமோராமாநுஜார்யாய* என்கிற ச்லோகமானது தேசிகர்க்கு ஆசார்யரான அப்புள்ளாருடைய தனியன். ஆனால் அவருடைய உண்மையான தனியன் இதுவல்ல. *யஸ்மாதஸ்மாபி:* என்று தொடங்கி அதி கம்பீரமாக தேசிகனருளிச்செய்த தனியன் வேறு இருக்கிறது. அதுதான் ஸமாச்ரயண பரம்பரையிலும் க்ரந்தபரம்பரையிலும் அப்புள்ளார்க்கு வழங்கிவரும் தனியன்; *நமோராமாநுஜார்யாய* என்கிற இப் புதுச்லோகமானது ராமாநுஜ தயாபாத்ரத்தோடு கூடவே ஸ்ருஷ்டிக்கப் பட்டது. உள்ள தனியனை விட்டு வேறு தனியன் எதற்காக இவ்விதமாய் ஸ்ருஷ்டித்ததென்று கேட்டால் உண்மை வெளிவரும். எல்லாம் கற்பனையென்பது இவற்றால் எளிதாகப் புலனாகும். இங்கு இவ்வளவு போதுமென்று நிற்கிறோம். மத்யஸ்தர்கள் இவற்றை யாராயவேணும்.

**131.** பாத்ரபத்ய சரித்ரப்ரதிஷ்டா: மேலே 130 லக்கமுள்ள நூலில் ஏகதேசமாகச் சிற்சில விஷயங்களைப்பற்றி மட்டும் பதில் சொல்லவந்த மைஸூர் ஸ்ரீபரகாலமட ஸ்ரீகார்யகர்த்தாவின் "ராமாநுஜ தயாபாத்ர பத்ய தத்வநிரூபணம்" என்கிற (நாலைந்து காகிதமேயான) சிறு நூலுக்கு மறுப்பு இது. இதைப்பற்றி இத் தன்சரிதையில் பக்கம் 219ல் காண்க. இந்த ப்ரதிஷ்டா க்ரந்தம் இரண்டு பரிச்சேதங்கள் கொண்டது; முதல் பரிச்சேதம் 44 விஷயங்களைத் தெரிவித்து ப்ரதிவாதியின் வாதங்களை அடியறுப்பது. இரண்டாம் பரிச்சேதம் புஷ்கரக்ஷேத்ரத்திலிருந்து தாமோதரபண்டிதனென்றொருவன் ஹிந்தியில் எழுதி வெளியிட்டிருந்ததற்கு மறுப்பு.

**132.** ஸத்ஸம்ப்ரதாய ஸஹஸ்ராம்சு: கீழே நெ 130. ராமாநுஜதயா பாத்ரபத்ய சரித்ரமென்கிற நமது நூலுக்கு D.T. தாதாசார்யரும் ஸ்ரீமதுராந்தகம் வீரராகவாசாரியரும் சேர்ந்து மறுப்பெழுதத் தொடங்கி ஸம்ப்ரதாயப்ரதீபமென்றொரு வடநூலை வெளியிட்டார்கள். அதற்கு ப்ரத்யக்ஷரகண்டனமாகத் தமிழிலும் வட மொழியிலும் நம்மாலெழுதப்பட்டது. தமிழில் ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரனென்பது. அதைப்பற்றி மேலே தமிழ் நூற்பகுதியில் விசதமாகும். ஸத்ஸம்ப்ரதாயஸஹஸ்ராம்சு வென்கிற இந்த வடநூல் ச்லோகரூபமானது. நூலின் பெயருக்குத் தக்கபடி ஆயிரம் சுலோகங்களெழுதுவதென்று

தொடங்கலாயிற்று. மிகவும் அஸம்பத்தமானவிஷயங்களுக்கு மறுப்பெழுதுவதே வீணைது; அதிலும் ஆயிரம் ச்லோகமிடுவது எதற்காகவென்று பல ஆப்தர்கள் தெரிவித்தபடியால் அறுபத்துநான்கு சுலோகத்தளவில் நிறுத்தப்பட்டது. திருப்பதி வித்வான்களின் கோரிக்கைக்கிணங்கி இது தெலுங்குலிபியில் அச்சிடப்பட்டுள்ளது. வைபவப்ரகாசிகையென்று கல்பிதமான நூலில் *பத்யைஸ் ஸஹஸ்ரை:* என்றும் *க்ரந்தைச் சதுஸ்ஸப்ததிபிஸ் ஸஹஸ்ரை:* என்றுமுள்ள பிரயோகங்கள் ஸர்வாத்மநா அஸம்பத்தமென்பது இதில் பரக்கநிரூபிக்கப்பட்டிருக்கின்றது; வித்வான்கள் மிகரஸிக்கத்தக்கது.

133. ஸத்ஸம்ப்ரதாயஸஹஸ்ராம்சுவ்யாக்க்யா: கீழ் 132 லக்கமுள்ள நூலுக்கு இது விரிவான வியாக்கியானம்; வடமொழியிலேயே அமைந்தது.

134. பதபாடபரித்ராணம்: இது வேதலக்ஷணரூபமான வைதிகக்ரந்தம். கீழ் நெ. 14 வேதாத்யயநஸர்வஸ்வநூலுக்குத் தொடர்ச்சியானது. இதில் நவாஹ்நிகம் என்று ஒன்பது பரிச்சேதங்கள் வெளியிடப்பட்டுள்ளன. தேவநாகரலிபி.

135. சதபூஷணீவஜ்ரகுடார: வேதாந்ததேசிகனுடைய சததூஷணீக்ரந்தத்தின்மேல் ப்ரத்யாக்க்யானமாக ஸமீபகாலத்தில் வெளிவந்த சதபூஷணியென்னும் நூலுக்கு மறுப்பு இது. இது உலகமெங்கும் பரவியதாதலால் இதைப்பற்றி இங்கு நாம் அதிகமாக எழுதவேண்டிய தொன்றுமில்லை. இது நமது அம்ருதலஹரீ பத்ரிகையில் ஆரம்பிக்கப்பட்டு வைதிகமநோஹராவில் வருகிறது.

136. நவீநசரித்ரக்ரந்தவிமர்ச: வேதாந்த தேசிகனேடு நவீனமாக உறவு கொண்டாடப் புகுந்தவர்கள் கற்பனையாக எழுதிவைத்த மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்னும் புத்தகம் ஆபாதசூடம் அபத்தமும் அஸம்பத்தமுமானதென்று விரிவாக நிரூபிக்கும் நூலிது. தேசிக சரித்திரத்தைப் பிராமாணிகமாகப் பேசவந்த ஆசார்யசம்புவில் இல்லாதவற்றையும், முரணனவற்றையும் நிராதாரமாக எழுதிவைத்திருக்கிறார்களென்பதை நன்கு நிரூபிக்குமிது.

137. ரஹஸ்யத்ரயார்த்தஸர்வஸ்வம்: முமுக்ஷுப்படிக்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தைத் தழுவியெழுதிய ஸம்ஸ்க்ருதவியாக்கியானம்.

138. ஸ்ரீவசநபூஷணதிவ்யார்த்ததீபிகா: ஸ்ரீவசநபூஷண திவ்யார்த்தத்தை மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தைத் தழுவியெழுதிய ஸம்ஸ்க்ருதவியாக்கியானம்.

139. ரஹஸ்யத்ரயஸாரஸாரப்ரதீபிகா: தேசிகனுடைய ரஹஸ்யத்ரயஸாரத்திலுள்ள ஸாரார்த்தங்களை வடநாட்டினருமறிந்து கொள்ளும்படி ஸம்ஸ்க்ருதத்திலெழுதிய விளக்க நூல்.

140. ஸமஸ்யாபூர்த்திசதகம்: நாநாதேசத்துப் பண்டிதர்கள் கொடுத்த ஸமஸ்யைகளைப் பூர்த்தி செய்த ச்லோகங்கள் நூறு. இவை மஞ்ஜுபாஷிணியிலும் ஸம்ஸ்க்ருத சந்திரிகையிலும் விஜ்ஞாநசிந்தாமணியிலும் ஏறியுள்ளன.

141. சித்ரப்ரச்நோத்தரமாலா: நாநாதேசத்துப் பண்டிதர்கள் கொடுத்த நூற்றுக்கணக்கான சித்ரப்ரச்நங்களுக்கு வெளியிட்ட உத்தரச்லோகங்கள். உதாஹரணமாக ஒன்று காட்டுகிறேன் காண்மின்; *आयान्तं मैथिलीनाथं द्रष्टुमत्र ससंभ्रमम् । अत्र क्रियापदं वक्तुः सुलभं रूप्य पञ्चकम्* என்று ஒரு பண்டிதர் சித்ரப்ரச்நம்கொடுப்பது. ஆயாந்தம்-வந்துகொண்டிருக்கிற, மைதிலீநாதம்-ஸீதாபதியான ஸ்ரீராமனை, த்ரஷ்டும்—ஸேவிப்பதற்கு, அத்ர—இவ்விடத்தில், ஸஸம்ப்ரமம்—பரபரப்புடன்.

என்று இவ்வளவே ச்லோகத்திலுள்ளது. வினைமுற்று (க்ரியாபதம்) இல்லை. அது மறைந்து கிடக்கிறது; அதைக்கண்டுபிடித்துச் சொல்ல வேணுமென்று ப்ரச்நம். இதற்கு உத்தரம்; आयामिति पदच्छेदे सुलभं हि क्रियापदम् என்று. (அதாவது) 'ஆயாந்தம்' என்றது ஒரே பதமல்ல, இரண்டுபதம். ஆயாம், தம் என்று பிரித்து, தம் மைதிலீநாதம் த்ரஷ்டும் அத்ர ஸஸம்ப்ரமம் ஆயாம்=என்று கொண்டால் க்ரியாபதம் காணலாகிறது. ஆயாம்—வந்தேனென்றபடி. இது க்ரியாகுப்தமெனப்படும். இங்ஙனே கர்த்ருகுப்தம், கர்மகுப்தம்...மற்றும் பலவகைகளுமுண்டு. எல்லாவகைகளும் அமைக்கப்பட்டுள்ளன. இவையும் வடமொழிப் பத்ரிகைகளில் ப்ரஸித்தம்.

**142.** சரமச்லோகாவளீ: ஸு ப்ரதிஷ்டிதர்களாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி, திருமலை திருப்பதி புரிசை ஸ்வாமி, ஸ்ரீமத்பரமஹம்ஸ. அழகிய மணவாள ஜீயர்ஸ்வாமி, முஸர்பாக்கம் விரக்தி ஸ்வாமி, ஸ்ரீகாதி ஸ்வாமி, மாம்பள்ளம் ஸ்வாமி, ஆக இப்பெரியோர்கள் விஷயமாக தத்தத் ஸமயங்களில் இயற்றின சரமச்லோகங்கள். இப்பெரியார்களின் திருவுருவப் படங்களை இத்தன்சரிதையிலேயே ஆங்காங்கு ஸேவித்திருக்கிறீர்கள்.

**143.** அபூர்வராமாயணம்: இது தமிழ்ப்பாஷையிலெழுதப்பட்டது ப்ரஸித்தம்; மேலே தமிழ்நூற்பகுதியிலும் (லக்கம் 221) வரும். அதுவேபோல வடமொழியிலும் எழுதப்பட்டதிது.

**144.** திவ்யபுருஷபரீக்ஷா: இது வொரு ஆங்கில காவியத்தின் மொழிபெயர்ப்பான விநோத கத்யப்ரபந்தம்.

**145.** மஹிளாபுர கேசவஸு ப்ரபாதம்:
**146.** மஹிளாபுர கேசவகர்ணாம்ருதம்:
**147.** மஹிளாபுர கேசவமங்களம்:
} இம்மூன்று நூல்களும் மயிலை ஸ்ரீகேசவப் பெருமாள் ஸன்னிதியில் நித்யமநுஸந்திப்பதற்காக அந்ததேவஸ்தான தர்மகர்த்தாக்களின் விருப்பத்திற்கிணங்க இயற்றப்பட்டன. இவை தேவநாகரி தெலுங்கு தமிழ்லிபிகளில் அச்சேறியுள. இவற்றுள் ஸு ப்ரபாதஸ்துதியை மூன்று வருஷகாலமாக தினப்படி ப்ரபாதத்தில் விச்வரூபஸமயத்தில் கோஷ்டியாக விருந்து நியமேந அநுஸந்தித்து வருகிறார்கள். மேலே குறித்த மூன்றுஸ்துதிகளையும் கண்டபாடமாக்கி அஸ்கலிதமாகப் பரீக்ஷை கொடுப்பவர்களுக்குப் பரிசு கொடுப்பதாக தேவஸ்தாநாதிகாரிகள் பிரசுரப்படுத்தப் பல பேர்கள் பரீக்ஷைக்கு வந்தார்கள். ஸ்ரீமதுபயவே. (ரிடைர்டு பெடரல் கோர்ட்டு ஜட்ஜ்) S. வரதாச்சாரியர் ஸ்வாமியும், ஸ்ரீமான் உவே. வித்வான் காரப்பங்காடு வேங்கடாசாரியர் ஸ்வாமியும் இதற்குப் பரீக்ஷகர்களாக இருந்து, இப்பரீக்ஷையில் முதல் வகுப்பில் தேறின [ஸ்ரீ காஞ்சீ, வேதவேதாந்த வைஜயந்தீ வித்யாலயோபாத்யாயர்களுள் ஒருவரான] ஸ்ரீ உவே. கோயில் கந்தாடை அண்ணன் ராமாநுஜாசாரியர்க்கு தங்கப்பதக்கம் பரிசளித்தார்கள். அவருருவப்படமும் இத்தன்சரிதையில் [பக்கம் 103, 105–களில்] காணலாம்.

**148.** சென்ன கேசவஸு ப்ரபாதம்: மயிலை ஸ்ரீ கேசவப்பெருமாள் தேவஸ்தானத்திற்போலவே சென்னை கேசவப்பெருமாள்ஸன்னிதியிலும் தினப்படி ஸு ப்ரபாதஸ்துதியின் அநுஸந்தானம் நடந்துவர வேணுமென்று விரும்பிய இந்த தேவஸ்தாநாதிகாரிகளின் அபேக்ஷைக்கிணங்க இயற்றப்பட்டது. இதுவும் மூன்று வருஷகாலமாக இந்த தேவஸ்தானத்தில் விச்வரூபஸமயத்தில் நித்ய கைங்கர்யபரர்களால் நித்யமநுஸந்தானம் செய்யப்பட்டு வருகின்றது. இதுவும் தேவநாகரி தெலுங்கு தமிழ்லிபிகளில் அச்சேறியுள்ளது.

149. வாத்ஸல்யார்த்தப்ரகாசிகா: எம்பெருமானுடைய வாத்ஸல்யகுணத்தில் குத்ஸித வாதங்களைப் பண்ணி பங்கமடைந்தவர்கள் பலர். அவர்களுள் D. T. தாதாசாரியார் அவஸாநத்தில் நின்றவர். இவருடையவும், இவரைச்சார்ந்தவர்களுடையவும் ஸகலவிதமான துர்வாதங்களையும் வேரறக்களைந்து இருநூற்றுச் சொச்சம் ச்லோகங்களாக எழுதப்பட்ட நூலிது. ஸ்ரீரங்க ராஜஸ்தவத்திற்போல் இதில் பூர்வசதகமென்றும் உத்தரசதகமென்றும் இரண்டு சதகங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பகவத் குணரஸிகர்களுக்கு இதுபோன்ற நூல் வேறில்லையென்று பலரும் புகழ நின்றது இது. தேவநாகரலிபியிலும் தெலுங்குலிபியிலுமச்சேறியுள்ளது. தமிழுரையும் தெலுங்குடீகையுமுண்டு.

150. வாத்ஸல்யார்த்தப்ரகாசிகாவிவ்ருதி: கீழ் 149 லக்கமுள்ள வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகாக்ரந்தம் ச்லோக ரூபமாகவிருப்பதனால் அதற்கு மிக வெளிய வடமொழி வசன நடையில் அமைந்த வியாக்கியானமிது. (தமிழுரை வேறு.)

151. திவ்யஸூரிவைபவம்: ஆழ்வார்களின் வைபவத்தை வடமொழியிலுணர்த்தும் வசன நூல். (இது நான்கு பாஷைகளிலுமுண்டு.)

152. பூர்வாசார்யவைபவம்: ஸ்ரீமந் நாத முனிகள் முதலான பூர்வாசார்யர்களின் வைபவத்தை வடமொழியிலுணர்த்தும் வசன நூல். ஆளவந்தார் வைபவம் வரைக்குமே அச்சிடப்பட்டுள்ளது. சேஷம் இனி முத்ரிதமாகும்.

153. தர்க்கசாஸ்த்ரஸர்வஸ்வம்: தர்க்க சாஸ்த்ரத்தின் கொள்கைகளை இருவர்ஸம்பாஷண ரூபமாக விளக்கியுள்ளது இதில்.

154. யாத்ராஸ்தோத்ராம்ருதம்: இத் தன்சரிதையிலேயே (பக்கம் 181-186-ல்) காண்க.

155. ஸதர்த்தஸமுச்சய: அனேக நற்பொருள்களை நிரம்பக்கொண்ட வடமொழி வசன நூல்.



JAGADACHARYA SIMHASANADHIPATHI MAHAVIDWAN
P. B. ANNANGARACHARYA,
KANCHEEPURAM-3. 29. 9. 69

ஸ்ரீமான் பக்தமணி. அநேகாசீ
ர்வாதம் [illegible]
உபயநலம். உன்னுடைய க்ஷேமம்
தெரிந்து கொள்வது மிகவும் அரி
தாயிருக்கின்றது. நீ ஆசார்ய அந்தர்
ஜீவித்தவரே அவசியமில்லை, ஜீவியந்தர்
ஜீவித்த வேணுமா? என்னுடைய ஜீவியமே
உன்னுடைய ஜீவியமல்லவா? என்றி
அடிக்கடி க்ஷேமம் தெரிவிப்பதில்லை
20 நாளுக்கு ஒரு Card எழுதக்கூடாதா?
இன்னும் 4-6 மாதம் இருப்பேனோ தெ
ரியாமலிருக்கிறது. இப்போது எதுவரை உ
த்யோகம் செய்கிறாய்?

இனி தமிழ் நூற்பகுதி. அடியேனுடைய தமிழ் நூல்கள் பன்னிரண்டு துறைகளில் தோன்றியுள்ளனவென்று கீழே பக்கம் 281ல் விவரிக்கப்பட்டுள்ளது. அந்தத் துறைகளினடைவே நூல்களை விவரிப்போமினி.

## 1. பூர்வாசாரியர்களின் பெருமை யுரைக்கும் நூல்கள்.

205. **கூரத்தாழ்வான் வைபவம்:** ஸம்ப்ரதாயத்திலிழிந்து அடியேன் முதன் முதலாக எழுதிய தமிழ்நூல் இதுவேயாகும். என்னுடைய நண்பர்களிலொருவர் (சைவர்) 50 வருஷங்களுக்கு முன்பு பெரிய காஞ்சீபுரத்தில் அச்சுக்கூடம் வைத்தார். அவர் முதன் முதலாக என்னுடைய வொரு நூலை அச்சிட விரும்பி என்னிடம் வந்து இந்த விருப்பத்தைத் தெரிவித்து 'தாங்கள் அருமையானவொரு வசன நூல் எழுதித் தர வேணும்' என்று கோரினார். அன்று தைமீ ஹஸ்த நக்ஷத்திரமாயிருந்த படியாலே அன்று திருவவதரித்த கூரத்தாழ்வானுடைய திவ்ய சரித்திரத்தை யெழுதித் தருவதாகச் சொல்லி 'இவ்வாசார்யர் சைவ கண்டனத்தில் தலை நின்றவர்; இவருடைய சரித்திரம் உங்களுக்கு ருசிக்குமோ?' என்றேன். அது கேட்ட அவர் 'உங்கள் கையினால் எது எழுதிக் கொடுத்தாலும் அதுவே எனக்குப் பரம சந்தோஷம்' என்றும் 'முதன்முதலாக உங்களுடைய திருவாக்கில் வந்தபடி அதையே எழுதித் தரவேணும்' என்றும் சொன்னார். அவருடைய விருப்பத்தை நிறைவேற்ற இதை யெழுதிக் கொடுத்தேன். அவரே குமரன் அச்சுக்கூடத் தலைவர். என்னைக்கொண்டு வான்மீகி ராமாயண வசன நூலை எழுதுவித்து அதை முதற் பதிப்புச் செய்வித்தவரும் இந்த நண்பரே யாவர். இந்த கூரத்தாழ்வான் வைபவத்தைப் பல நூல்களை யாராய்ச்சி செய்து மூன்று நாட்களிலெழுதிக் கொடுத்தேன். அவரும் மூன்றே நாளில் அச்சிட்டு முடித்தார். அந்தப்பதிப்பு இப்போதில்லை; பிறகு மிக வழகிய பதிப்பு அமைந்துள்ளது. இந்த நூலைப் படிப்பவர்கள் பெரும்பாலும் "கண்ணீரைப் பெருகவிட்டுக் கொண்டே வாசித்தோம்" என்று சொல்லுவது வழக்கம்.

206. **ஸ்ரீராமாநுஜர் வைபவம்:** எம்பெருமானாருடைய வைபவம் விரிவாகவும் தெளிவாகவும் எழுதப் பெற்ற நூலிது.

207. **அனந்தாழ்வான் வைபவம்:** எம்பெருமானாருடைய திவ்ய நியமனத்தைச் சிரமேற்கொண்டு திருவேங்கட மலையில் அத்புத கைங்கர்யங்களைச் செய்தருளின திருமலை யனந்தாழ்வானுடைய திவ்ய சரிதை.

208. **ஆழ்வார்கள் வைபவம்:** ஆழ்வார்கள் பன்னிருவரின் சரித்திரம் விரிவாகவும் தெளிவாகவு முள்ளது. ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தை யடியொற்றி யெழுதியது.

209. **வேதாந்த தேசிகன் வைபவம்:** தேசிகனுடைய திவ்ய சரித்திரத்தைக் கூடியமட்டில் பிராமாணிகமாகப் பேசியிருக்கும் நூல் வேதாந்தாசார்ய விஜயமென்கிற ஆசார்ய சம்பூப்ரபந்தம். அதன்படி தேசிகன் வைபவத்தை இக்காலத்தவர்கள் எழுதுவதும் சொல்லுவதுமில்லை. ஸ்வேச்சையாகப் பல மாறுதல்களைச் செய்தும் இல்லாதவற்றைச் சேர்த்தும் எழுதி வைத்திருக்கிறார்கள்.

அன்னவர்களின் த்ருப்திக்காக நாமும் அவ்வாறே எழுதிய நூலிது. மேலே உதாஹரித்த ஆசார்ய சம்பூ ப்ரபந்தத்தில் கூறியுள்ள சரித்திரம் எத்தகைத்து? இத்யாதி விஷயங்கள் மேலே சில நூல்களைப் பற்றின விவரணங்களில் விசதமாகும்.

210. மணவாள மாமுனிகள் வைபவம்: யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்தையும், எறும்பியப்பாவின் சில ஸ்ரீ ஸூக்திகளையு மநுஸரித் தெழுதப்பட்டது.

211. அண்ணு வைபவம்: அஸ்மத் குல கூடஸ்தரான ப்ரதிவாதி பயங்கராசார்யருடைய திவ்ய சரித்திரம்; பழைய ஏடுகளிலிருந்து ஸங்க்ரஹிக்கப்பட்டது.

212. பூர்வாசார்யப்ரபாவம்: ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகளீறாக ஸகலாசார்யர்களுடையவும் திவ்ய சரித்திரம்.

213. புரட்டாசித் திருவோண மலர்: இதன் முன்னுரை மட்டும் ஸம்க்ஷேபமாக இங்கு வெளியிடப்படுகின்றது; அதைக்கொண்டே பல தத்துவங்கள் தெரிந்து கொள்ள முடியுமென்று. அந்த முன்னுரையாவது—

"நிகழும் நந்தனஹு புரட்டாசித் திருவோணத் திருநாள் ஜகத்தேசிக சிகாமணியான நம் தூப்புல்வள்ளல் திருவவதரித்த நன்னாளாகையாலே அன்று உலகமெல்லாம் திரு நக்ஷத்ரமஹோத்ஸவத்தை வெகு சிறப்பாகக் கொண்டாடும். ஆசார்யனுடைய திவ்ய சரித்ர வைபவங்களையும் திவ்ய ஸ்ரீ ஸூக்தி மேன்மைகளையும் பரிபூர்த்தியாகவும் யதார்த்தமாகவும் அநுபவிப்பதே முக்கியமான திருநக்ஷத்ரமஹோத்ஸவக் கொண்டாட்டமாதலால் அவ்விதமான அநுபவம் ஸகல தேசஸ்தர்களுக்கும் ஸமரீதியாக வாய்க்கும்படி அடியேன் தொண்டு செய்ய முயல்கின்றேன். ஸ்ரீ தேசிகனுடைய திவ்ய சரித்திரத்தைப் பலர் பலவிதமாக எழுதி வெளியிட்டுள்ளார்கள். அறுநூறு ஆண்டுகட்கு முன்பு எழுந்தருளியிருந்த மஹாசார்யனுடைய சரித்திரத்தை நாம் நம் மனம் போனபடி எழுதி வெளியிடுவது தகாது. பழையவைகளும் பிராமாணிகங்களுமான சரித்திர நூல்களின் ஆதாரங் கொண்டே எழுதத்தகும். இதர ஆசாரியர்களின் நிந்தைகளைப்புகுத்தியும், இல்லாத வைபவங்களை அநாவச்யகமாக ஏறிட்டும் எழுதப்படுகிற சரித்திர நூல்களால் பிராமாணிகவுலகம் உகப்படையாது. உகப்புக்கு எதிராக வெறுப்பையுமடையும். உதாரணமாக ஒரு விஷயம் காட்டுகிறேனிங்கு. சென்ற 1944 ஆம் வருஷத்தில் வெளி வந்த தேசிகப் பிரபந்தவுரையில் தேசிகனுடைய சரித்திரம் (16 பக்கம்) அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அது சென்னை அட்வகேட் D. ராமஸ்வாமி ஐயங்காரவர்கள் எழுதியதாக வெளிவந்துள்ளது. 'தேசிக வைபவம்' என்று தலைப்புடையதான அந்த சரித்திரத்தில் பல பொய்யான விஷயங்களும் இதர ஆசார்ய தூஷணைகளும் விசேஷமாகக் காணப்படுகின்றன வென்று அப்போதே ஒரு ஆராய்ச்சி நூல் வெளியிடப்பட்டு நாடெங்கும் பரவியுள்ளது. அதன் பெயர் 'தேசிகப்ரபந்தவுரையாராய்ச்சி' என்பது. அதை வாசித்தவர்கள் யாவரும் ஒருமிடறாகச் சொல்லிக்கொண்டதென்ன வென்றால், இவ்வளவு எளிதாக மறுப்பு ஏறும்படியான தேசிக சரித்திரத்தை மஹாவிவேகியான D. ராமஸ்வாமி ஐயங்கார் ஒருகாலும் எழுதியிருக்கமாட்டார்; அவர் பெயரையிட்டு வேறு யாரேனும் எழுதியிருக்கலாம்; இப்படி பச்சையாக ஆசார்யாபசாரப் படுகுழியில் அவர் (D. R.) ஒரு நாளும் விழுந்திருக்க மாட்டார்-என்றே சொல்லிக் கொண்டார்கள். அது வாஸ்தவமே. அதில் பூருவாசாரியர்களை தூஷித்து எழுதியிருக்கும் வார்த்தைகள் பலபல; இப்போது இங்கு முக்கியமாக ஒன்றே எடுத்துக் காட்டுதும். அதில்,

"ஆறாயிரப்படிக்குப் பின் தோன்றிய பல வியாக்கியானங்களி லுள்ள தோஷங்களைக் கணிசித்து அவற்றையெல்லாம் களைந்து தேசிகனருளிச் செய்த எழுபத்தினாலாயிரம் கிரந்தங்கள் கொண்ட நிகம பரிமள மென்னும் ஓர் அழகியவியாக்கியானம் ஸ்வாமியால் தம்குமாரர்க்கு முன்பே காலக்ஷேபமாக ப்ரவசனம் செய்யப்பட்டிருந்தது"

என்றெழுதப்பட்டுள்ள இவ்வொரு விஷயத்தை யெடுத்துக் கொள்வோம். ஆறாயிரப்படி யென்பது திருவாய்மொழிக்குத் திருக்குருகைப் பிரான் பிள்ளானருளிச்செய்த வியாக்கியானம். இது மிகவும் சுருக்கமானது. இதற்குப் பின் தோன்றிய வியாக்கியானங்களாவன—நஞ்சீயரருளிய ஒன்பதினாயிரப் படியும், பெரியவாச்சான் பிள்ளை யருளிய இருபத்து நாலாயிரப் படியும், வடக்குத் திருவீதிப்பிள்ளையருளிய ஈடு முப்பத்தாறாயிரப்படியும், வாதி கேஸரி அழகிய மணவாளச்சீயரருளிய பன்னீராயிரப்படியுமாம். இவை தவிர வேறு ஒரு வியாக்கியானமும் தேசிகன் காலத்திற்குமுன் தோன்றியதில்லை. ஒன்பதினாயிரப்படி முதலிய அந்த நான்கு வியாக்கியானங்களிலும் தோஷங்கள் இருந்ததாகவும் அவற்றை தேசிகன் கண்டு மனம் நொந்ததாகவும் அந்த தோஷங்களை யெல்லாம் களைவதற்காக அவர் நிகமபரிமளமென்கிற விஸ்தார வியாக்கியானம் வெகு அழகாக இட்டதாகவும் எழுதப்பட்டிருக்கிறது. அந்த நிகமபரிமளம் இப்போது உள்ளதோ வென்று கேட்டால், ஐயோ! அன்றைக்கே அது அந்தர்த்தானமாய் விட்டதே! யென்று கண்ணீர்மழை பெருக்குகிறார். அது எப்படியாவது போகட்டும். ஒன்பதினாயிரப்படி முதலிய நான்கு வியாக்கியானங்களில் தோஷங்களிருப்பதாக எழுதுகிறவர் ஆறாயிரப் படியையும் அந்த நான்கு வியாக்கியானங்களையும் நன்கு ஸேவித்தவராக இருத்தல் வேண்டும். ஒன்றிலும் ஓரக்ஷரத்தையும் பாராதவரும் பார்க்கவில்லாத வருமான ஒருவர், தம்முடைய ஸம்பிரதாயத்தில் அப்படிப்பட்ட வியாக்கியானங்கள் இல்லையே யென்கிற வருத்தத்தினாலும் இதரஸம்ப்ரதாய ஆசார்யர்களைப் பழிக்க வேணுமென்கிற பாரிப்பினாலுமே மேலே காட்டிய விதமாக எழுதி அஸஹ்யாபசாரப் படுகுழியில் விழுந்திருக்கிறாரென்பது கையிலங்கு நெல்லிக்கனி. உண்மையில், இவர் சுத்தஸம்பிரதாய மென்று அபிமானித்திருக்கின்றவொரு நூதன ஸம்பிரதாயத்திற்கு ஆறாயிரப்படியோ மற்ற வியாக்கியானங்களோ எல்லாம் வாசியற விருத்த மானதே. இதில் ஸந்தேஹலேசமுமில்லை. மற்ற வியாக்கியானங்களிற் காட்டிலும் ஆறாயிரப்படியே முந்துற முன்னம் இவர்களுக்கு விலக்காகத்தக்க தென்பதும் சிலாலிகிதம்.

உண்மை இப்படியிருக்க, ஆறாயிரப்படியில் மஹார்த்தங்கள் கண்டுவிட்டதாகக் காட்டிக்கொண்டு, இதர வியாக்கியானங்களை துஷ்டங்களென்று பழிப்பது மஹத்தான ஸாஹஸம். வியாக்கியானங்கள் நிற்க; வியாக்கியேயங்களான [மூலமான] திவ்யப்ரபந்தங்களே இவர் கொண்ட ஸம்பிரதாயத்திற்கு நேர் முரணாயிருக்கும்போது வியாக்கியானத்தில் அநுகூலமாக ஓரக்ஷரமாகிலுங் காண அவகாசமேது? மூலத்திற்கு விருத்தமாக ஆறாயிரப்படி எங்ஙனே அமையுமென்று ஆராய அசக்தரல்லரே இவர். விஷயங்களை யெடுத்துக் கொண்டு அலசியலசி ஆராய்ச்சி செய்யும் சிரமத்தை ஏற்றுக் கொண்டாலல்லவோ 'ஆறாயிரப்படியில் நமக்குள்ள அநுகூலமென்ன? இதர வியாக்கியானங்களில் நமக்குள்ள பிரதிகூலமென்ன? என்பதைப் பகுத்துணரமுடியும். ஈடு முதலான வியாக்கியானங்களில் தோஷமிருப்பதாக தேசிகன் திருவுள்ளம் பற்றியிருந்தால் அந்த தோஷம் ஆறாயிரப்படியிலுமிருப்பதாகவே திருவுள்ளம் பற்றியிருக்கவேணு மென்பது திண்ணம். இவ்விஷயம் திருவாய் மொழியின் ஸகல வியாக்கியானங்களையும் தேசிகனுடைய ஸகல ஸ்ரீஸூக்திகளையும் கரதலா

மலகமாகக் கண்டவர்களுக்கே எளிதாகும். இவை யொன்றிலும் அந்வய மில்லாதவரும் ஏதோசில ஸ்தோத்ரங்களில் கண்ணீரைச் சொரியுமவருமான ஒருவர் உலகமெல்லாம் கொண்டாட நின்ற ஸதாசார்ய வியாக்கியானங்களை தோஷமுடையனவாகப் பழிப்பதும் ககநாரவிந்த சசச்ருங்காதி ஸஹோதர மான வொரு வியாக்கியானத்தை அழகிய வியாக்கியான மென்பதும் வீணன வொரு அபிமானத்தின் க்ருத்யமா மத்தனையன்றோ.

பக்திகனிந்த நெஞ்சுடையவரென்றும் கூடியவரையில் ப்ராமாணிக ரென்றும் சொல்ல நிற்கிற இவர் (D. R.) அபசார பஹுளமும் அஸமஞ்ஜஸமு மான அந்த சரித்திரப்பகுதியை எழுதியிருக்க மாட்டாரென்றே மஹான்களின் முடிபு. ஆனல் 1944 ஆம் வருஷத்தில் தேசிகப்ரபந்தவுரையில் சேர்த்து வெளி யிடப்பட்டதாய், பிறகு பலமுகமான கண்டனங்களையும் அடைந்ததான அந்த சரித்திரம் மறுபடியும் 1948 ஆம் வருஷத்தில் ஸர்வதாரி புரட்டாசித் திரு வோண வெளியீடாக இரண்டாம் பதிப்புச் செய்யப்பட்டிருக்கிறது, அதிலும் இவருடைய கையொப்பம் பன் முறையும் காண்பதால் இவ்வபசாரம் இவர்க்கு மனஸ் பூர்த்தியாகவே நேர்ந்த தென்று நினைக்கலாகிறது. இவ்விருள் தருமா ஞாலத்தின் செயலுக்கு ஆட்படாதாரு முளரோ? * அநுதாபாத் உபரமாத் ப்ராயச் சித்தோந்முகத்வத:. தத்பூரணச் சாபராதாஸ் ஸர்வே நச்யந்தி பாதச: * என்ற அற்புத மான வசனத்தை ஸ்ரீ தேசிகரஹஸ்யங்களிற் கண்டிருப்பரேயிவர். அதனைப் புந : புந : ஆவர்த்தனஞ் செய்து தூய்மை பெறுவதே இவர்க்குப் பாங்காகும். இங்கு வக்தவ்ய சேஷமெல்லாம் மேலே விரிவாகச் சொல்லுவோம். இதரா சார்ய தூஷணைகளும் பொய்யுரைகளும் கலசாத ஸ்ரீ தேசிக சரித்திரம் இப் புரட்டாசித் திருவோண மலரிற் காண்க. ஓர் முக்கியமான குறிப்பு ;—இதில் வேதாந்த தேசிகர்வைபவத்திற்கு அடுத்தபடியாக வெளியிடப்பட்டுள்ள ஒவ்வொரு வியாஸமும் இவருடைய பொய்யுரைகளைக் களைந்து யதார்த்தத்தை நன்கு ஸ்தாபிப்பனவாதலால் உண்மையான தேசிக பக்தர்கள் இப் புத்தகம் முழுவதையும் பலகால் வாசித்துப் பரிசீலனைபண்ணவேணும். (இப்புரட்டாசித் திருவோணமலர் தேசிகபக்தர்களுக்கு நிதி போன்றது.)"

214. ஐப்பசித் திருமூலமலர்: இதற்கு 'ஜகதப்யுதயைக மூலம்' என்கிற மறுபெயரு முண்டு. இந்நூலில் மிகப் பெரிய விஷயங்கள் பதினன்கு அடங்கியுள்ளன. இதன் முன்னுரையை மட்டும் இங்குச் சுருக்கி வெளியிடுகின்றேன்.

"வணங்கும் துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி" என்பது (திருவிருத்தத்தில்) நம்மாழ்வாரருளிச் செயல். அதன் படி உலகில் பல்வேறு சமயங்கள் தோன்றி நிற்கக் காணுகின்றோம். ஸகல மதங்களினுள்ளும் ஸ்ரீவைஷ்ணவ மதம் மிகச் சிறந்ததென்று மெய்யடியார் களின் கொள்கை. அந்த ஸ்ரீ வைஷ்ணவ மதத்தினுள் பல உட்பிரிவினைகள் இருந்தாலும் அவை எல்லாம் ஆழ்வாருடையவும் எம்பெருமானருடையவும் ஸ்ரீஸூக்திகளையே நிதியாகக்கொண்டிருக்க வேண்டியவைகளாதலால் அவற் றுள் பரஸ்பரம் இகழ்ச்சி காட்டுவது உற்றதன்று. அவரவர்கள் தங்கள் தங் கள் ஸம்பிரதாயங்களில் அன்பும் ஆதரவும்கொண்டிருப்பது ப்ராப்தமேயாகும். சில ஸமயங்களில் பிறமதங்களை நிந்திக்க நேர்ந்தாலுங்கூட, நஹிநிந்தா ந்யாயத் தையே பெரியார்கள் கருதுவர்கள். அந்த நியாயத்தின் கருத்தாவது-ஒரு விஷ யத்தில் நிந்தை ஏற்பட்டாலும் அங்கு நிந்தையில் நோக்கென்பதில்லை ; உத்தே ச்யமானதொன்றின் உயர்த்தியைக் கூறுவதிலேயே நோக்கம் என்பதாம். இதற்கு உதாஹரணமாக ஒன்று காட்டுவோம் ; ஆசாரியர் பெரியாழ்வா ருடைய ஸ்ரீ ஸூக்திக்கு வியாக்கியானம் செய்தருளப் புகுமிடத்து அவ்வாழ் வாரைப் போரப்பொலியப் புகழ்ந்து பேசுவதோடு நில்லாமல் மற்றை யாழ்வார்

களைக் குறைத்துப் பேசுவதையும் காணுகின்றோம். இதனால் அவர்களை நிந்திப்பதாக ஆகாது. ப்ரக்ருதத்தில் உத்தேச்யரான வொருவருடையபுகழ்ச்சியிலேயே அது விச்ராந்தமாகும். இதுவே *நஹிநிந்தா நியாயத்தின் கொள்கை. தம்முடைய ஸம்பிரதாயத்தின் மேன்மையையும் தத்துவங்களையும் விளங்கக் காட்ட நினைப்பவர்கள் இதர ஸம்பிரதாயங்களைப் பற்றின இகழ்ச்சியுரையை அணுவளவும் நெஞ்சிலும் நினைக்கக்கூடாது. ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களின் ஸம்ப்ரதாயத்திற்கே தென்னாசார்ய ஸம்ப்ரதாயமென்று பெயர். ச்ருதிகள் பஞ்சராத்ர ஸம்ஹிதைகள் ஸ்மிருதிகள் இதிஹாஸ புராணங்கள் ஆழ்வாரருளிச் செயல்கள் என்று பலவகைப்பட்ட ப்ரமாணங்களுள் ஆழ்வாரருளிச் செயல்களான திவ்யப் பிரபந்தங்களுக்கே அதிசயித்த ப்ராமாண்ய முள்ளதென்று கொள்பவர்களே ஸ்ரீ வைஷ்ணவர்க ளென்பார். அன்னவர்களையே இக்காரணம் பற்றியே தென்னாசார்யர்களென்பது. தென்கலையாகிய தமிழ் வேதத்தில் ஊற்றமுள்ள ஆசார்யர்கள் தென்னாசார்யர்க ளென்றபடி. இவர்களுடைய ஸம்பிரதாயம் ஆழ்வார்களாலும் ஸ்ரீமத் நாதமுனிகள் தொடங்கி மணவாளமாமுனிகளீறாகவுள்ள ஆசாரியர்களாலும் சேமிக்கப் பட்டதாகும். விசேஷித்துப் பிள்ளை லோகாசார்யரும் மணவாள மாமுனிகளும் இந்த ஸம்பிரதாயத்திற்கு விஜயத்வஜம் போன்றவர்கள். இவ்விரண்டு திருநாமங்களும் திருவவதாரம் செய்தருளாதிருந்தால் இவ்வுலகம் இருள்மயமாகவே யிருந்திருக்கும்.

நமது ஆசார்ய கோஷ்டியில் ஸ்ரீ ராமாநுஜர் ஒருவரே க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்ற பட்டத்தை முதன்மையாகப் பெற்றவரா யிருந்தும் அவர் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு க்ரந்தமும் அருளிச் செய்தாரல்லர். ப்ரஹ்மஸூத்ரங்களின் அர்த்தங்களை விவரிக்க மூன்று நூல்களை அருளிச் செய்தவவர் ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு சிறு நூலாவது அருளிச் செய்திருக்கலாம்; இன்னுமொரு திருக்கோலம் பூண்டு [அதாவது—மணவாள மாமுனிகளாக அவதரித்து] அப்போது அருளிச்செய்ய வேணுமென்று திருவுள்ளம்பற்றி யிருந்தமையாலே ஸ்ரீ ராமாநுஜரான அந்த அவதாரந் தன்னிலே ரஹஸ்யார்த்தங்களை எடுபடுத்தாமே சென்றனர். ஸ்ரீ பாஷ்யம் கீதாபாஷ்யம் முதலிய திவ்ய க்ரந்தங்களில் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களும் ஆங்காங்குச் சேமிக்கப்பட்டே யிருக்கின்றனவாயினும் அவற்றைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித் தாராத குறை குறையே. அக்குறைதீர ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான பிள்ளைலோகாசார்யர் முதன் முதலாக ஸ்ரீ வைஷ்ணவ மண்டலிக்கு மஹோபகாரம் செய்தருளினார். லோகாசார்ய ரென்கிற திருநாமம் இவர்க்கே தகும். இவ்விருள் தருமா ஞாலத்தின் அகவிருளை அறவே யொழிக்க வல்ல திவ்ய ஸ்ரீ ஸூக்திகளைத் தேனும் பாலும் நெய்யுங் கன்னலுமமுதுமாக அளித்தருளினவர் இம்மஹாசார்யர். இவருடைய ஸர்வஜ்ஞத்வத்தைப் புகழ்வதா? பரமகாருணிகத்வத்தைப் புகழ்வதா? பரம ப்ராமாணிகத்வத்தைப் புகழ்வதா? என்றால் ஒவ்வொன்றும் நெஞ்சால் நினைப்பரிதே. ஒரு அர்த்தத்திலும் ஆக்ரஹமின்றிக்கே ஆசார்ய பரம்பரா ப்ராப்தமான அர்த்தங்களையே அழகுபட அமைத்திருக்குமற்புதம் இவருடைய க்ரந்தங்களுக்கே அஸாதாரணச் செல்வமாயிருக்கும். இவர் அருளிசசெய்த நூல்கள் 'அஷ்டாதச ரஹஸ்யம்' என்று ஸுப்ரஸித்தமா யிருக்கும். அந்தப் பதினெட்டு ரஹஸ்ய க்ரந்தங்களுள் ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்ற மூன்று ரஹஸ்ய நூல்கள் மிகச் சிறந்து முக்கியமாக விளங்கும். இவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்ய ஹ்ருதயமென்னும் ரஹஸ்யமுஞ் சேர்ந்து நான்கு ரஹஸ்ய க்ரந்தங்கள் தென்னாசார்ய ஸம்பிரதாயத்திற்கு மூலாதாரமாக விளங்குகின்றன. இந்த நான்கு க்ரந்தங்களுக்கும் மிகச்சிறந்த வியாக்கியானத்தை அருளிச்செய்தவர் மணவாள மா

முனிகள். இவர்க்கு "விசதவாக் சிகாமணி" என்றொரு பிருதம் வழங்கிவருகின்றது. இதனை முதல் முதலாக அளித்த மஹாநுபாவர் ஆரோ அறிகின்றிலோம். மருமமறிந்து அளித்த அந்த விருது இவ்வாசார்ய சிகாமணியொருவர்க்கேதான் ஏற்குமென்னத் தட்டில்லை. நீறுபூத்த நெருப்பு என்ன நின்ற இவ்வாசிரியரின் திருவாக்குப்போல் இவ்வுலகில் இதுகாறும் கண்டதில்லை யென்றால் இனிமேலா காணப்போகிறோம். மாமுனிகளின் திவ்யமங்கள விக்ரஹமும் திருவுள்ளமும் ஸத்வகுணமொன்றே வடிவெடுத்ததா யிருந்ததென்பது அவருடைய திருவாக்குகளில் அக்ஷரந்தோறும் புலப்படா நின்றது. ஸகலசாஸ்த்ர ஸாரார்த்தங்களையும் வெகு அழகாகத் திருவுள்ளத்திலே அடக்கிக் கொண்டு நாட்பூ அலர்ந்தாற்போலே ஸ்ரீ ஸூக்திகளை ஏற்றக் குறைவின்றி அமைத்திருக்கிற அழகு என்னே! என்னே!! என்று உள்ளம் குழைகின்றதத்தனை. விமர்ச சக்தி, நிரூபண நைபுண்யம் என்றிங்ஙனே சொல்லும்படியான திறமையெல்லாம் மிக வியக்கும்படியான முறையில் மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீ ஸூக்திகளிலேதான் அமைந்துள்ளது. பல சொல்லி என்? ஸாரமாக வொன்று சொல்லித் தலைக்கட்டுகின்றேன். *அப்திர் லங்கித ஏவ வாநரபடை: கிந்த்வஸ்ய கம்பீரதாம் ஆபாதாளநிமக்நபீவரதநுர் ஜாநாதி மந்தாசல:* என்று முராரி என்கிற ஒரு மஹாகவி சொல்லுகிறார். வானரவீரர்கள் கடலைக் கடந்து அப்பால் சென்றுவிட்டார்களெனினும் கடலின் ஆழத்தை அவர்கள் சிறிதும் அறிய கில்லார்கள்; கடலினுள்ளே பாதாளம் வரையில் அமிழ்ந்து கிடந்த மந்தரமலைக்கன்றோ அந்த ஆழம் தெரியும்—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. ஜ்ஞாதாக்களென்று பேர்படைத்த மற்றவர்களெல்லாரும் வானர முதலிகளின் ஸ்தானத்திலேயாய் மணவாள மாமுனிகளொருவரே மந்தர மலையின் ஸ்தானத்திலே எண்ணக்கூடியவராக உள்ளார். ஆசார்யர் என்கிற சொல்லுக்கு மாமுனிகளொருவரே இலக்காமவர் என்றும், ஸூக்தி, ஸ்ரீ ஸூக்தி, திவ்ய ஸூக்தி, திவ்ய ஸ்ரீ ஸூக்தி என்றிங்ஙனே சொல்லும் சொற்களெல்லாம் மாமுனிகளின் திருவாக்கையேதான் இலக்காகக் கொள்ளத் தக்கவை யென்றும் நிஷ்பக்ஷபாதர்களின் ஸித்தாந்தம்.

இப்பரமாசார்யருடைய திவ்ய ஸூக்திகளில் நாமறியவேண்டிய ஸகலார்த்தங்களும் தெள்ளமுதெனக் கிடக்கின்றன. கடலில் நவமணிகளும் உள்ளனவெனினும் விரகர் எடுத்துக் கொடுத்தாலன்றி அநுபவிக்க இயலாதவாறு போல, இவ்வர்த்த விசேஷங்களையும் எடுத்துக்காட்டியே அனுபவிப்பிக்க வேண்டி யிருத்தலால், தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்தின் அரிய பெரிய ஆழ்பொருள்களை எளிதிலுணர விரும்புவார்க்குப் பாங்காக இம்மலர் வெளியிடப்படுகின்றது. உயர்ந்த க்ரந்தங்களிலே காலக்ஷேபம் பண்ணிப் பலகால் பெரியார்களிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டிய நற்பொருள்களை எளிதிலுணர உபாய முண்டோ? என்று கேட்குங்காலமிது. லௌகிக உத்தியோகங்கள் வியாபாரங்கள் முதலானவற்றில் ஈடுபட்டிருந்தும் ஆஸ்திக்யம் குன்றாம லிருந்து இப்படிப்பட்ட நல்விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேணுமென்னும் ருசியுடையார் பலர் இருப்பதால் அன்னவர்களின் கோரிக்கைக்கு இணங்கியும் இம்மலர் வெளியிடப்படுகின்றது. மணவாள மாமுனிகளின் திவ்ய சரித்திரம் முன்னாக ஸகலார்த்தவிசேஷங்களும் அடைவே இதில்வெளியிடப்பட்டன.

215. வாதிபீகர விஜயம். அஸ்மத்குல கூடஸ்தருடைய வைபவத்தில் சில விசிகித்ஸைகளைக் கிளப்பின ஆந்தராளிகர்களின் பிரசுரங்களுக்கு மறுப்புரைக்கும் முகத்தால் தத்வார்த்தங்களை யுணர்த்தின நூல்கள் பல; அவற்றுள் இது தலையானது. மற்றவற்றைப்பற்றி மேலே விவரணம் வரும்.

216. அண்ணாவின் கால நிர்ணயம்: நெ. 215. வாதிபீகர விஜயத்திற்கு சேஷபூதமிது.



1951௵ ஜுலை மாதத்தில் புது டில்லியில் பிர்லா மந்திரத்தில்
கனம் (மினிஸ்டர்) முன்ஷீ அவர்களோடு ஸம்பாஷணை.



டில்லிமாநகரில் ரிகார்டிங் ஆபீஸில்
வேதபாராயண ஸஹஸ்ரநாமபாராயணாதிகளை ரிகார்ட்செய்யும் ஸமயம்.

## 2. இதிஹாஸபுராண சரித்திர விளக்கநூல்கள்

217. அத்திகிரிவைபவம்: ஹஸ்திகிரி மாஹாத்மியமென்கிற புராண நூலைத்தழுவி யெழுதப்பட்ட காஞ்சீ ஹஸ்திகிரியின் வைபவம், தேவப் பெருமாளவதரித்த வரலாறு, தேவப்பெருமாளை நான்குயுகங்களில் நால்வர் ஆராதித்த வரலாறு முதலியன இதில் விரிவாகவுள. இதுவே வடமொழியிலு மெழுதப்பட்டது. லக்கம் 1 காண்க.

218. திவ்யப்ரபந்தபகவத்கதாம்ருதம்: நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களில் ஆழ்வார்களநுபவித்த பகவத் கதைகள் யாவற்றையும் விவரித்திருப்பது. 'பகவத் கதையமுதம்' என்கிற பெயரால் முதற்பதிப்பு வெளிவந்திருந்தது. இரண்டாம் பதிப்பு இப்பெயரால் வெளிவந்துள்ளது.

219. ஸ்ரீராமாயணஸாரம்: வால்மீகி ராமாயண கதையை ஸம்க்ஷேபமாகவும் ஸாரமாகவும் எழுதப்பெற்றது இது.

220. வான்மீகிராமாயணவசனம்: ஸ்ரீ ராமாயணத்தை உத்தரகாண்ட முட்பட மொழி பெயர்த்த வசனநூல். மூலத்தில் வர்ணனையாகவுள்ளவைமட்டும் இதில் விடப்பட்டன.

221. அபூர்வராமாயணம்: ஸ்ரீ ராமாயணத்தின் ஆரம்பத்தில் வான்மீகி பகவானல் நாரதமஹர்ஷியை நோக்கி * கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச்ச வீர்யவாந் * இத்யாதியால் பதினறுதிருக்குணங்களைச் சொல்லி ப்ரச்னம் செய்யப்பட்டிருக்கிறதல்லவா? அந்தத் திருக்குணங்களை மிகவிரிவாக விவரிக்கும் முகத்தால் ஸ்ரீ ராம திவ்ய சரித்திரங்களை யெல்லாம் வெகு இனிமையாக அநுபவிக்கத் தோன்றிய நூலிது. ஜகன் மோகினி பத்திரிகையில் மாதந்தோறும் பகுதியாக வெளிவந்து தனிப்புத்தகமாக ஸித்தமானது.

222. நரஸிம்ஹாவதாரசரிதம்: கம்பராமாயணம் யுத்தகாண்டத்தில் விபீஷணுழ்வான் இராவணனுக்கு உபதேசிப்பதாக அமைக்கப்பட்டுள்ள இரணியன் வதைப் படலத்தின் கதாஸாரம். வடமொழி சிறிதும் கலவாத தென்மொழி நூல்.

## 3. உபந்யாஸகர்களுக்கு உதவியான உபந்யாஸநூல்கள்

223. ஸ்ரீராமாநுஜபூஷணம்: எம்பெருமானருடைய பெருமைகளைப்பற்றின ஏழு உபந்யாஸங்கள் கொண்டது. அவ்வுபந்யாஸங்களாவன:—

1. * சங்கரபாக்கரப் பாசுரவிவரணம்.
2. ஸ்ரீ ராமாநுஜன் திருநாமவைபவம்.
3. "ராஜஹம்ஸம்-ப்ருங்கராஜம்-யதிராஜமீடே"
4. * பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னுனாள் வாழியே.*
5. யதிராஜஸப்ததியும் எம்பெருமானரும்.
6. மார்கழி நீராட்டமும் எம்பெருமானரும்.
7. எம்பெருமானரும் திருக்கோட்டியூரும்.

இந்த விவாதத்தில் ஸாரமாக கவனிக்க வேண்டிய திவ்வளவே. (1) பரந்த ரஹஸ்யமென்கிற க்ரந்தம் அச்சிடப்படுவதற்கு முன்பு அதை யாருமறியார்கள். வ்யபதிஷ்டர்களான பூர்வாசாரியர்களில் மணவாளமா முனிகளொருவரே தம்முடைய வியாக்கியானங்களில் பரந்த ரஹஸ்யத்தை உதாஹரித்தருளினவர்; அவர் ஆச்சான் பிள்ளை யென்றே இருபத்திரண்டிடங்களில் எழுதியுள்ளார். பெரியவாச்சான் பிள்ளையை நிர்தேசிக்க வேண்டுமிடங்களில் பெரியவாச்சான் பிள்ளை யென்றே நிர்தேசித்தருளுகிறார். (2) பரந்த ரஹஸ்யத்தில் வேதாந்த தேசிகனுடைய சில வாதங்களுக்கு பதில் தெரிவிக்கப்பட்டு மிருக்கிறது. பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளை மேற்கோள் காட்டியுள்ள தேசிகன் பெரியவாச்சான் பிள்ளைக்குப் பிற்பட்டவரென்பது நிர்விவாதம். அவருடைய உக்திகளுக்கு பதில் சொல்லுகிற பரந்த ரஹஸ்ய கர்த்தா பெரியவாச்சான் பிள்ளையாயிருக்கத் தகுதியே கிடையாது. (3) பரந்த ரஹஸ்யம் முதலிய விரிவான ரஹஸ்ய க்ரந்தங்களையும் பெரியவாச்சான் பிள்ளையே அருளிச் செய்திருந்தால் உபதேச ரத்தின மாலையில் திவ்யப்ரபந்த வியாக்கியான விஷயத்தில் பெரியவாச்சான் பிள்ளைக்கு மஹத்தான கௌரவத்தைக் காட்டிவிட்டு ரஹஸ்யார்த்த விஷயத்தில் பிள்ளை லோகாசார்யருக்கு மஹத்தான பெருமையை விளக்கி யிருப்பது விரஸமாகும். ரஹஸ்யார்த்தங்களையும் பெரியவாச்சான் பிள்ளையே ப்ரபஞ்சனம் செய்தருளினரென்று ஒருபாசுரமாவது அவசியம் அருளிச்செய்திருக்கவேண்டுமே. மணவாள மாமுனிகள் இதை உபேக்ஷிக்க ப்ரஸக்தியே கிடையாதே. ரஹஸ்யார்த்த ப்ரகாசனத்திற்காகப் பெரியவாச்சான் பிள்ளைக்கு ஒரு பாசுரமுமிடாமையாலும், அதுபற்றிப் பிள்ளைலோகாசார்யருக்கே ஏழு பாசுரங்களிட்டிருக்கையாலும் அவ்வுலகாசிரியர்க்குப் பிற்பட்டவரான ஆச்சான் பிள்ளையே பரந்த ரஹஸ்யகர்த்தாவாவர். (4) நம்பிள்ளை திருவடிகளில் நேராகக் கேட்டவரும் பலவிதங்களிற் பெருமை பெற்றவருமான பெரியவாச்சான் பிள்ளையே பரந்த ரஹஸ்யத்தை யருளிச் செய்திருந்தால் அவருடைய க்ரந்தத்தை விட்டுப் பிள்ளை லோகா சார்யருடைய முமுக்ஷுப்படியையே எங்கும் யாவரும் காலக்ஷேபக்ரந்தமாகக் கொள்ள ப்ரஸக்தியேயிராது. பெரியவாச்சான்பிள்ளையின் ஸந்ததியாரென்று சொல்லிக் கொள்பவர்களுங் கூட இற்றைக்கும் நாளைக்கும் பரந்த ரஹஸ்யாதிகளின் பெயரையும் கேட்டறியாதவர்களாக வன்றோ உண்மையுள்ளது. (5) தத்வத்ரயம் 103 ஆம் சூர்ணையின் வியாக்கியானத்தில் ஆச்சான் பிள்ளையும் வாதி கேஸரி ஜீயரும் ஆவரண க்ரமம் சொன்னார்கள்; பிள்ளை லோகா சார்யரும் பெரியவாச்சான் பிள்ளையும் அது சொல்லவில்லை என்னும் விஷயத்தை மணவாள மாமுனிகள் விரிவாக நிரூபித்தருளியிருக்கையாலே ஆச்சான் பிள்ளையைக் காட்டிலும் பெரியவாச்சான்பிள்ளை வேறு வ்யக்தியே யாவர்......இங்ஙனே ப்ராமாணிகர்கள் தெளியக் கூடிய பலபல உபபத்திகள் ப்ரக்ருத விவாத விஷயகமாக அடியேனெழுதிய நூல்களில் மலிந்துள்ளன. இந்த விவாதத்திற்கு ப்ரதிஸம்பந்தியான (கீர்த்தி மூர்த்தியான) ஸ்ரீமத். புத்தூர் ஸ்வாமி நாளடைவில் ஸுப்ரஸந்ந ஹ்ருதயராய் பழைய ஸௌஹார்தத்தை அநுவர்த்திக்கச் செய்து கொண்டது மல்லாமல், பெரியவாச்சான் பிள்ளை விஷயமான ஸ்துதிநூலொன்றை எழுதித்தரும்படி அடியேனுக்கு நியமித்து அதைத் தாம் தமது பத்ரிகையில் அச்சிட்டுப் பிரசுரமும் செய்தது பேரின்ப வெள்ளமாக முடிந்தது. இடைக் காலத்தில் பகவானுடைய விலக்ஷணமான லீலையொன்று நடந்ததென்றே உலகங்கொண்டது. திருக்குடந்தை R. V. கிருஷ்ணமாசாரியருமிப்படியே. மற்றுஞ் சிலருமுளர்.

**390.** ஆராய்ச்சி மணிமாலை: ஸ்ரீ உவே. சேனங்குளம் கந்தாடை ராமாநுஜா சார்யரென்கிற பண்டிதர் * அத்யமேச்லோகார்த்த விசாரத்திற் புகுந்து எழுதியவற்றுக்கு மறுப்பு. ப்ராஸங்கிகமாகப் பலதத்வார்த்தங்கள் பொருந்தியது.

391. உத்யாநஸம்வாதம்.
392. உத்யாந சிக்ஷா. } இவையிரண்டும் உத்யாந பத்ரிகா சிரியரான D. T. தாதாசார்யருடைய அஸத்வாதங்களை யெடுத்து அலசியலசிக் காட்டுவன. கீழே ஸம்ஸ்க்ருத நூற்பகுதியில் (நெ. 30.) ரஸிகரஸாயநத்தின் விவரணமும், நெ. 41, 120. நூல்களின் விவரணமும் காண்க.

393. உபதேச ரஸாயநம்: திருக்குடந்தையில் வாழ்ந்த ஸ்ரீஉவே. ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்யர் இடைக் காலத்தில் வேறுபட்டிருக்கையில் வெளியிட்ட மர்ம ப்ரகாச மென்னும் புத்தகத்திற்கு இது மறுப்பு. கீழ் ஸம்ஸ்க்ருத நூற்பகுதியில் (நெ. 17.) ரஸிக புதரஞ்ஜநத்தின் விவரணம் காண்க. இந்த மஹான் ஆதியில் பரமஸ்நிக்தரா யிருந்து இடையில் வேறுபட்டிருந்து, மறுபடியும் முன்னிலும் அதிகமான அதிமாத்ர ஸ்நேஹத்தை வளரச் செய்து கொண்டு பல அபிநந்தந பத்ரிகைகளை அச்சிட்டும் வெளியிட்டா ரென்பது உலக மறிந்தது. இவருடைய திருவுருவப் படம் பக்கம் 27ல் காண்க.

394. ஐகமத்ய ரஸம்: நமது நண்பர் ஸ்ரீஉவே. D. ராமஸ்வாமி ஐயங்கார் தேசிக சரித்திரமெழுதுவதாக வியாஜங்கொண்டு பூர்வாசார்ய நிந்தைகள் செய்திருந்ததற்கு சோகித்து அவர்க்கு நல் தெளிவு பிறக்குமாறு எழுதியது.

395. ஐதிஹ்ய நிர்வாஹ ரத்நமாலை: நாலாயிர வியாக்கியானங்களில் காணும் ஐதிஹ்யங்களையும் நிர்வாஹங்களையும் (ஆங்காங்கு விவரணங்களோடும்) சேகரித்தது.

396. க்ஷேத்ர தீர்த்தயாத்திரை விளக்கு: தென்னாடு வட நாடுகளிலுள்ள க்ஷேத்ர தீர்த்தங்களில் யாத்திரை செய்ய விரும்புமவர்களுக்குப் பரம ஸௌகரியமாகும்படி கண்ணாடிபோல் எழுதப்பட்டதிது. இங்ஙனே ஸம்ஸ்க்ருதம் ஹிந்தி தெலுங்கு பாஷைகளிலு மெழுதப்பட்டதுண்டு. லக்கம் 44, 157, 184, 197 காண்க.

397. சதபூஷணீ வஜ்ர குடார ஸாரம்: கீழ் ஸம்ஸ்க்ருத நூற்பகுதியில் நெ. 135. சதபூஷணீ வஜ்ர குடார: என்ற நூலின் விவரணம் காண்க. இந்த ஸார நூலில் 101 பாராக்களினால்-சதபூஷணீ காரர் சத தூஷணியைக் கையால் தொடுவதற்கே அநதிகாரி யென்பது விசதமாக நிரூபிக்கப் பட்டது.

398. சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை: அஹோபில மடத்துப் பத்ரிகையான ந்ருஸிம்ஹப்ரியாவில் "எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளும் ஆதிவண் சடகோப ஸ்வாமி யிடத்திலேயே ஆச்ரயித்தவர்கள்" என்றும் "ஈடு முப்பத்தாறு யிரப்படி வடகலை ஸம்பிரதாயத்திற்கே பொருந்தி யிருக்கிறது" என்றும் இப்படி சில அஸம்பத்தோக்திகளை யொருவர் வெளியிட்டிருந்தார். இவை ஸர்வாத்மநா அபத்த மாகையாலே இவற்றை மறுத்து இந்த வியாஜத்தாலே நாம் பல பலவுண்மைகளை நமது பத்ரிகையில் வெளியிட்டோம். அதற்கு பதிலெழுத வித்வான்கள் முன்வர வேண்டும். முன் வந்த வொரு ஸாமாந்யர் நிந்தைகளைச் சரமாரியாகப் பொழிந்து "அண்ணா ஸ்வாமியின் கேள்விகளுக்குத் தக்க பாணங்களை விடுவதற்குச் சில ஸிம்ஹங்கள் புறப்பட்டுக் கொண்டிருக்கின்றன" என்று வழிகாட்டி விட்டு விலகினர். பிறகு பழைய D. T. தாதாசார்யரும் மடத்தில் போக்தாக்களாயிருக்கின்றசிலரும் தூஷிக்க வெழுந்தார்கள். 1951—52 வருஷங்களில் இந்த வாத விவாத கேளி மிகவும் மும்மிரமாக நடந்தது. அந்த ஸமயத்தில் "சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை" என்ற பெயர் கொண்ட வொரு பத்ரிகையை நடத்தத் தொடங்கி அதன் மூலமாகப் பல பல சாஸ்த்ரார்த்த தத்துவங்கள் வெளியிடப்பட்டன. இந்த வகையில் இருபத்து நான்கு பிரசுரங்கள் வெளியாகி யுள்ளன.

399. சிரோமணி சிரோபூஷா: } சென்னைக் காருமானிகலாசாலையில் தலைமைப் பண்டி
400. சிரோமணி சேகரம்: } தராயிருந்து இப்போது விச்ராந்தரா யிருக்கின்ற ஸ்ரீஉவே. திருக்கண்ணபுரம் ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியே இங்கு சிரோமணி சப்த விவக்ஷிதர். கீழ் ஸம்ஸ்க்ருத நூற் பகுதியில் நெ. 28, 119. நூல்களின் விவரணத்தில் கண்ட மதிரேக்ஷணார்த்த விசாரத்தில் முதன்மையாகத் தலையிட்டவர் இந்த சிரோமணி ஸ்வாமியே யாவர். இவர் அவதம்ஸமாகக் கொள்ளும்படியா யெழுதப்பட்ட நூல்களிவை. ப்ராஸங்கிகமாகப் பல பல விஷய விசாரங்கள் கொண்டவை

401. சுகஸாரண மதமர்தநம்: கீழ் 215, 216 லக்கமுள்ள நூல்களின் ச்ரேணியிலே அமைந்தது இதுவும்.

402. செந்தமிழாராய்ச்சி: சிறந்த தமிழ் வித்வானாகிய ஸ்ரீமத். மு. ராகவையங்கார் (ராமநாதபுரம்) அவர்கள் திவ்யப் பிரபந்தங்களைப் பற்றியும் ஆழ்வார்களைப் பற்றியும் சில ஆராய்ச்சிகளை மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிட்டார்; அவை நம்முடைய ஸதாசார்ய ஸத்ஸம்ப்ரதாய ஸரணிக்குச் சேராதவையென்னு முண்மையை வெளியிட வேண்டியது அவசியமாயிற்று. அந்த ஸந்தர்ப்பத்தில் வெளி வந்ததிது. நான்முகன் திருவந்தாதியில் * தரித்திருந்தேனாகவே தாராகணப் போர், விரித்துரைத்த வெந் நாகத்துன்னை * என்ற பாசுரத்தின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தை மறுக்கப் புகுந்து "வெந்நாகத்து" என்கிற பாடத்தை 'என்னாகத்து" என்று ஸ்வதந்திரமாகத் திருத்திச் சில எழுதி யிருந்தார். அது ஸர்வாத்மநா அஸங்கதமென்று மூதலிக்க முதன் முதலாக இறங்கினேன். அதிலிருந்து பல விஷயங்களை விமர்சிக்க நேர்ந்தது. அந்த விமர்சங்களெல்லாம் தமிழுலகில் ஸுப்ரஸித்தங்களாகையாலே இங்கு விவரிக்கின்றிலேன்.

403. சேஷாவதாரச் சிறப்பு: ஸ்வாமியெம்பெருமானாரை சேஷாவதாரமென்று முன்னோர்கள் பலர் எழுதியுள்ளார்கள். இராமாநுச நூற்றந்தாதியில் (பா. 33-ல்) பஞ்சாயுதாவதாரமென்று உள்ளது. யதிராஜஸப்ததியில் அதையுஞ் சொல்லி விஷ்வக்ஸேநாவதாரரென்றும் சொல்லியிருக்கிறது. இவற்றையெல்லாம் ஸமந்வயப்படுத்தி நிர்வஹிக்கும் வழியறியாத திருவஹீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் (பரலோகவாஸி) "சேஷாவதாரரென்பது மிகவும் தவறு" என்றெழுதி வெளியிட்டிருந்தார். அதை மறுத்தெழுதி ஸ்வாமி யெம்பெருமானாருடைய சேஷாவதாரத்வத்தை ஸ்தாபித்த நூலிது.

404. சேட்லூரர் நூலாராய்ச்சி } கீழ் லக்கம் 403 நூலுக்குத் தொடர்ச்சியாக அந்த
405. சேட்லூர் மாயமயக்கம் } சேட்லூர் நரஸிம்ஹாசாரியருடைய அஸம்பத்தோக்திகள் பலவற்றைப் பராமர்சித்து ஒன்பது நூல்கள் எழுதி வெளியிடப்பட்டன. 1928ஆம் முதல் 33, 34-ஆம்வரை அவை வெளிவந்து கொண்டிருந்தன. கடைசியாக அவர்மன்னிப்புக் கடிதமெழுதியனுப்பி விச்ராந்தியடைய நேர்ந்தது. அந்த க்ஷாமணபத்ரிகை இந்த நூல்களில் விசதம். அது வருமாறு—

"ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸராமாநுஜ மஹாதேசிகாய நம: ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: மஹாமஹோபாத்யாய பண்டிதபூஷணம். பகவத் விஷயம் தேசிகதர்சநாசார்ய சேட்லூர், நரஸிம்ஹாசாரியார் ஸ்ரீவேதாந்ததேசிக விலாஸம் திருவஹீந்திரபுரம் தேதி 12 ஸ்ரீமதித்யாதி அஸ்மதஸாதாரணஸஹ்ருதயவரிஷ்டாநாம்தத்ரபவதாம்ஸந்நிதௌ விஜ்ஞாபயதி. ஸ்வாமிநியமித்தஸ்ரீமுகத்தைஸேவித்துக் கொண்டேன். ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருவுள்ளத்தில் வெறுப்புண்டாகும்படி செய்தது வல்வினையேன் குற்றமே. வாஸ்தவமாகவோ ஆரோபிதமாகவோ

ஆசார்யாபராதம் அடியேன் மநஸ்ஸில் ப்ரதிபாஸித்ததினால் திருவுள்ளத்துக்கு வெறுப்பும் நிர்வேதமும் உண்டாகும்படி செய்ய நேரிட்டது. அதிலும் பரமனைப் பயிலும் திருவுடைய பாகவதர்களுடைய "சுத்தாநாம் து லபேமஹி" "ஸம்ஸ்ருஜ்யதே யதி ச தாஸஜநஸ் த்வதீய:" என்று ஆசார்யனால் ப்ரார்த்திதமாய் அபவர்க்க தசாநிர்விசேஷமுமான பெறற் பேறாகிய பாகவதாநுக்ரஹத்துக்குப் பாத்ரமாகாத படி செய்வதற்குரிய பகவந்நிக்ரஹஸங்கல்பமொழிய வேறு ஒன்றுமில்லை. ஆதலால் இவ்விஷயத்தில் 'யச்ச பாஷிதம், மயா த்வம் பருஷாண்யுக்த: தச்ச த்வம் க்ஷந்துமர்ஹஸி' என்கிற இளையபெருமாள்படியை இச்சேதநன்விஷயத்தில் திருவுள்ளம் பற்றி அடியேனுடைய அபசாரங்களை ஸோபாதிகங்களாக்கியதாபூர்வம் அடியேனை ஸஹ்ருதயனாகத் திருவுள்ளம் பற்றும்படி பிரார்த்திக்கிறேன். இத்தம் விஜ்ஞாபயதி பாகவதவிதேய:" என்பதாம்.

இந்த மன்னிப்புக்கடிதம் அச்சாகி வெளியானபிறகு அந்த சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் பலவருஷங்கள் ஜீவித்திருந்தார். அவர் பரமபதித்த பிறகு சில மாதங்கள் கழித்து அவருடைய ஸஹோதரரான ஸ்ரீநிவாஸமூர்த்தியென்பவர் "என் தமையனார் எழுதியதாக வெளியிடப்பட்டிருக்கின்ற மன்னிப்புக் கடிதத்தின் அஸல்காப்பியைக் காட்டுவீரா?" என்று நமக்கொரு கடிதமெழுதினார். "ஒரு நாள் குறிப்பிட்டெழுதினால் அந்த நாளில் நாமே அந்த அஸல் கடிதத்துடன் திருவயிந்திரபுரம் வருவோம்" என்று பதில் எழுதினேன். அவ்வளவோடு அவர் சாந்தராய் விட்டார்.

**406. ச்ருதப்ரகாசிகாரக்ஷா:** ச்ருதப்ரகாசிகா பட்டரருளிச் செய்த சரணாகதிகத்ய பாஷ்யத்தில் வாத்ஸல்யமென்கிற குணத்தை விவரிக்குமிடத்து "வாத்ஸல்யம் நாம தோஷேபி குணத்வபுத்தி:" என்றருளிச் செய்யப்பட்டிருப்பதை மேலே ப்ரஸ்தாவித்த சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் தூஷித்ததுமல்லாமல் "இப்படிப்பட்ட அபார்த்தங்களைக் களைவதற்காகவே தேசிகன் கத்யபாஷ்யமருளிச் செய்தது" என்று மெழுதியிருந்ததைப் பலப்ரமாணோபபத்திகளுடன் மறுத்து ச்ருதப்ரகாசிகாஸூக்தியை ஸமந்வயப்படுத்தின நூலிது. இத்தன் சரிதையில் கீழே பக்கம் 286-ல் கடைசி பாராவும் காண்க.

**407. ஸ்ரீவைஷ்ணவமஹாநிதி:** இந்தப் பெயருக்குத் தக்கபடியே அமைந்திருக்கும் நூலிது. நேரில் கண்டுகளிக்கத்தக்கது. ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயப் ப்ரவர்த்தக ஸகலாசார்ய திவ்யஸூக்தி விளக்காக மற்றொரு நூலும் இப்பெயர் பூண்டுள்ளது. அது இப்போது துர்லபம்.

**408. ஸ்ரீமடஸௌபாக்யம்:** கீழ் நெ. 398 நூலின் வகுப்பைச்சேர்ந்தது இது. ஸ்ரீமடமென்றது அஹோபிலமடமென்றபடி.

**409. ஸ்ரீராமாநுஜன்:** இப்பெயரால் பத்து வருஷகாலமாக மாதப்பத்திரிகை நடந்து வருகின்றதென்பது உலகமறிந்ததே, இதன்மூலமாகப் பல வியாஸங்களும் பலநூல்களும் வெளிவந்துகொண்டிருக்கின்றன. இந்தத் தன் சரிதையும் இப்பத்திரிகையின் மூலமாகவே வெளிவருகின்றது.

**410. ஜகதாசார்யஸூக்திஸுதாநிதி:** ஏழுதரங்கங்களும் அறுபத்துநான்கு உக்திமாலைகளும் கொண்ட நூலிது. இரண்டு மூன்று வருஷங்களுக்குமுன்பு ஒரு விவாதக் கிளர்ச்சி விளைந்தது; (அதாவது) த்ரௌபதிக்கு மஹாஸபையில் பரிபவம் நேர்ந்தகாலத்தில் வஸ்த்ரவ்ருத்தியானது ப்ரபத்தியின் பலனாக ஸ்ரீவசநபூஷணத்தினால் தெரிய வருகிறது; அது திருநாம ஸங்கீர்த்தனத்தின் பலனென்று முமுக்ஷுப்படியினால் தெரியவருகிறது. இங்ஙனே தோன்றும்

முரண்பாட்டை எங்ஙனம் பரிஹரிப்பதென்று சர்ச்சை விளைந்ததாம். சென்னையில் ப்ரஸித்த ப்ரவக்தாவாக விளங்குபவரும் நமக்குப் பரமாப்தரு மான ஸ்ரீஉவே. வித்வான் காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமிகள் "ஸ்ரீவசந பூஷணத்தில் த்ரௌபதி ப்ரபத்தி செய்ததாக மட்டும் சொல்லப்பட்டதே யொழிய அது பலித்ததாகவும் சொல்லிற்றில்லை; முமுக்ஷுப்படியில் "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்று திரு நாமஸங்கீர்த்தனம் பலித்ததாக ஸ்பஷ்டோக்தியுள்ளது. ஆகவே, த்ரௌ பதியின் ப்ரபத்திநிஷ்டை விபலமாயிற்றென்றும் நாமஸங்கீர்த்தனமே ஸபல மாயிற்றென்றும் சொல்லிவிட்டால் உபயக்ரந்தங்களுக்கும் யாதொரு விரோ தமுமில்லையாகும்" என்று ஸ்வாபிப்ராயத்தைப் பிரசுரப்படுத்தினர். இது ஸங்கதமாக அடியேனுக்குத் தோற்றாமையாலே தத்வார்த்தத்தை உலகுக்கு வெளியிடக்கருதி, அந்த வேங்கடாசார்யஸ்வாமியின் திருநாமத்தைத் தொடா மலே "(மேலே காட்டிய) உபயக்ரந்த விரோதத்தை எங்ஙனம் பரிஹரிப்ப தென்று சிலபக்தர்கள் தத்வஜிஜ்ஞாஸையோடு கேட்டார்கள்; பெரியார் களிடம் கேட்டிருந்த ஸமாதானத்தை விவரிக்கிறோம்" என்று தொடங்கி உபயக்ரந்தங்களுக்கும் விரோத ப்ரஸக்தியே கிடையாதென்றும், ப்ரபத்தி யின்பலனை வஸ்த்ரவ்ருத்தியைச்சொன்னதும், திருநாமஸங்கீர்த்தனபலமாக அதனைச் சொன்னதும் பர்யாயமேயொழிய வேறன்று என்றும் இதை மிக விரிவாக நிரூபித்து வெளியிட்டேன். அதன் பிறகு சில பத்ரிகைகளில் விஷய விசாரங்கள் நடந்தன. அந்த ஸ்வாமியும் எழுதினர்; அடியேனும் பதில் எழுதினேன். கடைசியாக அடியேனுடைய நிரூபணங்கள் ஸ்ரீராமா நுஜன் 77, 78-ல் வெளிவந்தன. இதன் பிறகு என்ன நடந்ததென்றால் விஷயசர்ச்சையாக ஒன்றும் வெளிவராமல் அநாமதேயத் துண்டுப்பிரசுரம் தேதிகூட இல்லாமல் ஒன்று வெளிவந்தது. அதில் நிந்தை தவிர வேறு கிடையாது. கையெழுத்துஸ்தானத்தில் "காரப்பங்காடு ஸ்வாமியின் கால க்ஷேபகோஷ்டியார்" என்றிருந்தது. அந்த ஸமயம் அடியேன் பவித்ர யாத்ரையென்று ப்ரஸித்தமான வடநாட்டுத் திருப்பதியாத்திரை தொடங்கி 75-பேர்களுடன் சென்றிருந்தேன். அப்போது மேலே தெரிவித்த அநாம தேயத்துண்டுப் பிரசுரம் விசேஷப்பிரசாரமடைந்து வந்தது. வெளியூர் களுக்கும் அனுப்பப்பட்டு வந்ததாம். விஷயலேசமுமில்லாமல் அஸஹ்ய தூஷணைகள் மலிந்த அந்தத் துண்டுப்பிரசுரத்தை யாரே ஸஹித்திருக்க வல்லார்? அப்போது நடந்த செய்திகள் ஜகத்ப்ரஸித்தமேயானாலும் அந்த விஷமச்செயல்கள் இச்சரிதைநூல் மூலமாக நீடூழி விளங்கவேணுமென்று கருதி அப்போது, மத்யஸ்தர்களான மஹநீயர்கள் வெளியிட்ட வியாஸங் கள் பலவற்றிலிருந்து சில பகுதிகள் இங்கெடுத்துக் காட்டப்படுகின்றன.

(1.) சென்னை பிரபல அட்வொகேட் ஸ்ரீமான் உவே. V. ராஜகோபாலாசாரியார் சுவாமிகள் (கீழ்ப்பாக்கம்) அவர்களின் ஆங்கில வியாஸத்தின் மொழிபெயர்ப்பு: (இவருடைய திருவுருவப் படம் இத் தன்சரிதையில் பக்கம் 175-ல் காண்க.)

"சென்ற சில வாரங்களாய் சென்னையிலும் மற்ற விடங்களிலுமுள்ள ஆஸ்திகர் களிடையே த்ரௌபதீசரணாகதி விஷயமாய்ப் பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளில் முரண்பாடு இருப்பதுபோல் நடைபெற்றுவரும் விவாதத்தில் ஸ்ரீகாரப்பங்காடு ஸ்வாமியின் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் அநாமதேயமாகப் பிரசுரம் செய்திருக்கிற ஓர் அறிக்கையானது பரபரப்பை விளைத்து வருகிறது. அந்த வெளியீடானது காரப்பங்காடு ஸ்வாமியின் அபிப்ராயத்தை ஸித்தாந்தப் படுத்தும் முறையில் மட்டும் அமைந்திருந்தால் அந்த ஸ்வாமியைப்போற்றும் கோஷ்டியினர்க்கு மிகவும் பொருத்தமாகும். அத்துடன் நிற்காமல், ப்ரக்ருத

விஷயத்தில் ஏற்பட்டிருக்கும் அபிப்ராயபேதத்தை முன்னிட்டு ஸ்ரீமத் P. B. A. ஸ்வாமியைப்பற்றின தூஷணோக்திகளில் அந்த வெளியீடு இறங்கியிருப்பது அதிக்ரமமானது. அந்த தூஷண பத்ரிகையை நான் பார்க்கவில்லை, அதில் வெளிவந்திருக்கும் தூஷணங்களின் ஸ்வபாவத்தையோ அளவையோ நான் அறியேன். அதைப் பார்க்கவும் எனக்கு விருப்பமில்லை. P. B. A. ஸ்வாமியின் பக்தர்களுக்கும் மற்றவர்களுக்கும் அந்த வெளியீடு மனக்கசப்பை விளைவித்திருப்பதிலிருந்தே அதன் தன்மையை ஒருவாறு உணர்ந்திருக்கிறேன். வாதப்ரதிவாதங்களின் தராதரங்களைச் சீர்தூக்கி விமர்சிப்பது உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களான மஹான்களுக்கேதகும். இப்படிப்பட்ட விஷயங்களில் பரிசயமுள்ள கள்ளக்குறிச்சி அட்வகேட் ஸ்ரீ ஆராவமுதுதாதாசாரியார் இது ஸம்பந்தமாக எழுதி வெளியிட்டிருக்கிற வியாஸத்தில் வாத ப்ரதிவாதங்களை ஆங்கிலம் பயின்றவர்களுக்கு அவகாஹமாகும் முறையில் விசதமாக எழுதியுள்ளார். நம் போலியர்கள் அவரவர்கள் மனோபாவத்துக்கு ருசிக்கும் அபிப்ராயங்களைக் கைக்கொள்வது பொருத்த முடையதாகும். எந்த சந்தர்ப்பத்திலும் அளவுக்கு மீறின முறையில் ஒருவரையொருவர் கண்டிக்கவும் தகுதியில்லை. நிர்ப்பயமாகவும் நிர்தாக்ஷிண்யமாகவும் தத்வார்த்தங்களைவிளக்கி நிலைநிறுத்த P. B. A. ஸ்வாமி ஒருகாலும் தயங்குவதில்லையென்பது யாவருமறிந்த விஷயம். விஷயங்களைப் பரிசீலனை செய்ய ஒவ்வொருவரும் சுதந்திரம் பெற்றிருக்கிறபடியாலே படித்தவர்களிடமும் சிறந்த மேதாவிகளிடமும் இப்படிப்பட்ட சர்ச்சைகள் நிகழ்வது ஸஹஜமே. ஆனால் விவாதங்கள் ஒழுங்கான முறையில் உயர்ந்த ரீதியில் எவர் மனமும் நோகாதபடி விமர்சனம் செய்யப்பட வேண்டுமேயல்லாது ஒருவரை யொருவர் தூஷிக்க முற்படுவது தகாது. தக்கபடி பதிலுரைத்துத் தம் வாதங்களை ஸ்தாபிக்க சக்தியற்றவர்கள் தூஷணையில் இறங்க முற்படுவர்களென்பது இயற்கை. காரப்பங்காடுஸ்வாமி தன்கோஷ்டியினரால் வெளியிடப்பட்ட அறிக்கை P. B. A. ஸ்வாமியின் பக்தர்களுக்குமனக்கசப்பையுண்டாக்கியுள்ள தென்பதையறிந்ததும் அந்த அறிக்கையை நிராகரித்து, தனக்கும் அவ்வறிக்கைக்கும் எவ்வித சம்பந்தமுமில்லையென்று தெரிவிப்பாரென்பதில் யாதொரு சந்தேகமுமில்லை. P. B. A. ஸ்வாமி பலவாண்டுகளாக ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தத்திற்காகப் பல்வகையில் ஒப்புயர்வற்ற தொண்டுகள் செய்து வருவது நாட்டில் பலருக்கும் நன்கு தெரிந்திருப்பதால் யாரிடமிருந்தும் எத்துணை தூஷணை யறிக்கைகள் தோன்றினாலும் P. B. A. ஸ்வாமியின் கௌரவத்திற்கும் புகழுக்கும் எவ்விதமான குறையும் ஒருநாளும் ஏற்படாது. அநாமதேயமான ஓர் அறிக்கை என்ன செய்யப்போகிறது. P. B. A. ஸ்வாமியின் உபந்யாஸங்களைக் கேட்டவர்களுக்கும் அந்த ஸ்வாமியின் க்ரந்தங்களை ஸேவித்தவர்களுக்கும் பூர்வாசார்ய க்ரந்தங்களில் உண்மையாக எவ்வித முரண்பாடும் கிடையாதென்பது P. B. A. ஸ்வாமியின் ஸித்தாந்தமென்றும், மேலெழுந்த வாரியில் எங்கேனும் முரண்பாடுகண்டாலும் அவைகளைப் பொருத்தமான முறையில் ஸமந்வயப்படுத்துவது ஸ்வாமியின் இயல்பு என்றும் நன்கு உணர்வார்கள். P. B. A. ஸ்வாமியின் கோஷ்டியினர் எதிர் வகுப்பு அறிக்கை விஷயமாய் எவ்விதமான கவலையுங்கொள்ள வேண்டா; அதை லக்ஷ்யத்தில் வைக்காமலிருப்பது நலம். எவ்வித எதிர்ப்பாவது பதிலாவது எழுத வேண்டுவதுமில்லை. மேற்கொண்டு இந்த விவாதத்தில் எவ்வித பிரசாரமும் வேண்டியதுமில்லை. இனி, உலகம் மதிக்கும் உத்தமாதிகாரிகள் பிரஸ்தாப விவாதத்தில் ஏதாவது ஈடுபட்டா லீடுபடட்டும். இவ்விவாதத்தை இத்துடன் முடிவு செய்ய P. B. A. ஸ்வாமியை முழுமனதுடன் பிரார்த்திக்கிறேன். இவ்விரண்டு ஸ்வாமிகளும் ஒரே ஸம்பிரதாயத்தின் அபிவிருத்தியில் அரும்பாடுபடுகிறவர்கள் இருவர்களும் மஹான்கள். உத்தமாதிகாரிகள். தம்தம் அபிப்ராயங்களை அவரவர் சித்

தாந்தமாகக் கொண்டிருந்தாலும் இவ்வபிப்ராய பேதம் வியாஜமாக ஸௌஜந்ய பங்கத்திற்கு எவ்விதமாகவும் இடம் தராமலிருக்கும்படி பிரார்த்திக்கின்றேன்.

சென்னை }
1—8—1955 }

V. ராஜகோபாலாசாரி.

(2.) மதுரை ஸத்ஸம்ப்ரதாயஸபையின் காரியதரிசி ஸ்ரீமான் உ. வே. S. ஸுந்தரராஜய்யங்கார் [வக்கீல், 11, கிருஷ்ணன் ஸன்னிதி வடக்கு மாசி வீதி] அவர்களின் கடிதம். (இவருடைய திருவுருவப்படம் இத் தன்சரிதையில் பக்கம் 174-ல்)

சிலமாதங்களாக இரண்டு மஹான்களுக்கு நடந்துவரும் க்ரந்த சர்ச்சை ஒரு அநாமதேய பத்ரிகையினால் மிகவும் சோசநீயமான நிலைமைக்குக் கொண்டு வரப்பட்டதென்பதை வெகு வருத்தத்துடன் விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீ காஞ்சீ அண்ணாஸ்வாமி ஒருவருடைய திருநாமத்தையும் குறிப்பிடாமலும் ஒருவருடைய க்ரந்தத்திற்குக் கண்டனமெழுதுவதாகக் கூடச் சொல்லாமலும் விஷயசர்ச்சை செய்திருந்தார்; அதில் எவ்வித தவறுமில்லை. ஸ்ரீமத் கரப்பங்காடு ஸ்வாமி அதற்கு மறுப்பு எழுதத் தொடங்குகையில் ஸ்ரீ அண்ணாஸ்வாமியின் திருநாமத்தைக் குறிப்பிட்டு அந்த ஸ்வாமிக்கு மறுப்பு எழுதுவதாகவே கண்டிருந்தது. இது தேவையில்லை. அந்த ஸ்வாமியும் அண்ணாஸ்வாமி போலவே விஷய சர்ச்சையோடு நிறுத்தி முடித்திருக்கலாம். ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கு அண்ணா ஸ்வாமி உயிர் நிலையாயிருக்கிறார். காரப்பங்காடு ஸ்வாமியும் அவருக்கு அடுத்தபடியே ஆகவே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அன்பர்களாயும் உயிர் நிலையாயுமுள்ள இருமஹான்கள் சண்டையிட்டுக்கொள்வதாக அநாமதேய ரொருவர் தப்புப் பிரசாரம் செய்வது ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கே கேவலமானது. காரப்பங்காடு ஸ்வாமி பரம ஸாத்விகர். அண்ணா ஸ்வாமியிடத்தில் அபாரமான மதிப்பும் பிரதிபத்தியும் வைத்திருப்பவர். உண்மையில் அண்ணா ஸ்வாமியின் வித்யாபரிச்ரமம் அபாரமானது. மாற்சரியமில்லாத யாரையும் கவர்ச்சி செய்யக்கூடியதென்பதில் சந்தேகமில்லை, ஆச்சரியமுமில்லை. அண்ணா ஸ்வாமியைப்போன்ற வித்வான் ஸ்ரீ வைஷ்ணவ வுலகத்தில் இப்போது யாரும் கிடையாது. ஸ்ரீ வைஷ்ணவ வுலகுக்கு இந்த ஸ்வாமி புரியும் தொண்டு வாசாமகோசரம். நூறுபேர்கள் சேர்ந்தாலும் செய்ய முடியாத காரியத்தை அண்ணா ஸ்வாமி ஒருவரே ஸாதித்து விடுகிறார். இதையெழுதும்போது ஸ்ரீ ராமபிரானுடைய பராக்ரமத்தை வான்மீகிமுனி போற்றியிருப்பதுதான் நினைவுக்கு வருகிறது. தற்காலம் நடந்துவரும் அந்த ஸ்வாமியின் உத்தரதேசயாத்திரை உண்மையில் திக்விஜயமே யாகும். இந்த யாத்திரையில் ரிஷீகேசத்தில் ஸ்ரீ ஸ்வாமியினுடைய வித்வத்தின் பெருமையையறிந்த ஸ்ரீ சிவானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் வேதபாரங்கதர் என்கிற விருதை ஸ்வாமிக்கு அளித்ததாகப் பத்ரிகைகளில் வாசிக்கிறோம். நம் ஸமூஹத்திற்கே, முக்கியமாக மணவாள மாமுனிகளின் ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு அண்ணா ஸ்வாமியால் பெருமையும்பெருமதிப்பும் தென்தேசத்திலும்வடதேசத்திலும் அபரிமிதமாக ஏற்பட்டு வருகிறது. ஆகையால் ஸ்ரீ ஸ்வாமியினுடைய கௌரவத்திற்கும் மதிப்புக்கும் ஹானியை விளைக்க யார் நினைத்தாலும் அது உசிதமானதன்று. ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இது நெஞ்சாலும் நினைக்கத் தக்கதன்று. காரப்பங்காடு ஸ்வாமியோ அவருடைய கோஷ்டியாரோ இதில் பிரவேசிக்கத் தகவே தகாது. மஹாயசஸ்வியான ஸ்ரீமத் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமியிடத்தில் அண்ணா ஸ்வாமிக்கு விசேஷப்ரதிபத்தியுண்டு. அதிலிருந்தே அவருடைய தௌஹித்ரரும் புத்ரஸ்தாநீயருமான (வர்த்தமாந) காரப்பங்காடு ஸ்வாமியிடத்திலும் அன்பு ஏற்பட்டு விசேஷித்துக் கொண்டு வந்தது. இந்த ஸ்வாமிக்கும் அண்ணா ஸ்வாமியிடத்தில் மிகுந்த அன்பும் மதிப்பும் பிரதிபத்தியும் இருப்பது அடியேனுக்கு

நன்கு தெரியும். இவ்விருவருக்கும் பரஸ்பரம் ஸௌஹார்தம் விலக்ஷணமானதே. யார் கண்ணெச்சில்பட்டதோ அறியோம்! உலகம் வேறாகப் பேச அவகாசமேற்பட்டு விட்டது. இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். காரப்பங்காடு ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியிலிருந்து வெளி வந்ததாகக் காணும் ஒரு அநாமதேய துண்டுப்பிரசுரம் அடியேனுக்கும் அனுப்பப்பட்டுக் கிடைத்தது; வாசித்துப் பார்த்தேன். பரமஸாத்விகரான காரப்பங்காடு ஸ்வாமியால் அது எப்படி அனுமதிக்கப்பட்டதென்று அடியேனுக்குமிகுந்த விஸ்மயமுண்டாயிற்று. உண்மையில் ஸ்வாமியால் அனுமதிக்கப்பட்டதல்லவென்றும், சிலருடைய சூழ்ச்சியினால் ஸ்வாமிக்கும் தெரியாமலே பிரசுரம் செய்யப்பட்டிருக்குமென்றும் என் போன்றவர்கள் நினைக்கக் கூடியது. இப்படி பிரசுரமாயிருக்கிறதென்று தெரிந்த பிறகு காரப்பங்காடு ஸ்வாமி அதை அவசியம் மறுத்திருக்கவேண்டும். ஆமோதிக்கவும் முடியாமல் மறுக்கவும் முடியாமல் ஏதோ சங்கடமான நிலைமை ஏற்பட்டுவிட்டது போலும். மதுரையில் நம்முடைய ஸத்ஸம்ப்ரதாய ஸபையின் வார்ஷிகோத்ஸவங்களுக்கு இவ்விரண்டு ஸ்வாமிகளும் பரமக்ருபையோடு எழுந்தருள்வதுண்டு. இருவரும் பரஸ்பரம் கொண்டாடிப் பேசுமழகை ஸதஸ்யர்கள் கண்டு பரமானந்தமடைந்திருக்கிறார்கள். அண்ணா ஸ்வாமியின் நாநாவித வித்யாபரிச்ரமங்களைக்கண்டு காரப்பங்காடு ஸ்வாமி வியப்படையாதவரல்லர். ப்ரக்ருத விவாதத்தில் அண்ணா ஸ்வாமியின் வாதங்களை வித்வான்கள் மெச்சுகின்றார்களென்பதை அடியேன் அறிந்திருக்கின்றேன். காரப்பங்காடு ஸ்வாமி திருவுள்ளத்திலும் இது பட்டிருக்குமென்றே அடியேனுடைய நம்பிக்கை. அடியேனுக்கு ஸம்பிரதாய விஷயமான ஞானம் மிகவும் குறைவு ஆகவே விஷய சர்ச்சைபற்றியெழுத சக்தியற்றவன். பிறருடைய அபிப்ராயங்களை அநுவதிக்கவும் அடியேன் அநர்ஹனே; அவ்விஷயத்தில் க்ஷமையை வேண்டுகிறேன். விஷய சர்ச்சையை கோபதாபமில்லாமல் நேர்மையான முறையில் நடத்தினால் உலகுக்கு விசேஷபலன் கிடைக்கும். அபூர்வமான சாஸ்த்ரார்த்தங்கள் தெரிய வரும். அண்ணா ஸ்வாமியின் ஒவ்வொரு ஸஞ்சிகையிலும் அபூர்வமான அர்த்தங்களை உலகம் அனுபவிக்கப் பெற்றுவருகிறது. ப்ரக்ருத வாதப்ரதிவாத நூல்களையும் சுவடிகளையும் ஆரம்பம் முதல் அடியேன் தவறாமல் படித்து வருகிறேன். இதில் அடியேன் தலையிடத்தகாதென்று வாளாவிருந்தேன். அது தவறு என்று உணர்ந்து இருஸ்வாமிகளுக்கும் தனித்தனி விண்ணப்பங்களெழுதியிருக்கிறேன். இருவரும் அடியேனை அந்யதாவாக நினைக்கக் கூடியவர்களல்லர். அடியேனுடைய பூர்வ ஜன்ம ஸுக்ருதவிசேஷத்தால் இவ்விரு ஸ்வாமிகளும் அடியேனிடத்து ஒரு விசேஷமான அன்பு வைத்திருக்கிறார்கள். அதனால் மிகுந்த தைர்யத்துடன் பிரார்த்திக்கின்றேன் ஸ்ரீ வைஷ்ண வுலகில் திங்களுமாதித்தியனும் ஏககாலத்திலெழுந்தாற்போல் விளங்கும் இவ்விரு ஸ்வாமிகளும் மேன்மேலும் அதிசயிக்கும் ஸௌஹார்தத்துடனே நீடூழி விளங்கி உலகை வாழ்விக்க வேணுமென்றும், சாஸ்த்ரார்த்தங்களை வெளியிடுவதில் ஒருவர்க்கும் வைராக்யமுண்டாக வேண்டாமென்றும், தாம்தாம் கண்ட அர்த்த விசேஷங்களை "சார்ங்க முதைத்த சரமழை போல்" என்கிற அடைவில் அல்லாமல் "வாழவுலகினில் பெய்திடாய்" என்ற அடைவிலே வர்ஷித்துக் கொண்டிருக்க வேணுமென்றும் பிரார்த்தனை.

தாஸன், S. ஸுந்தரராஜன், மதுரை.

(3) கள்ளக்குறிச்சி அட்வகேட் ஆராவமுது தாதாசாரியர் எழுதுவது; (இவருடைய திருவுருவப்படம் இத் தன்சரிதையில் (பக்கம் 123ல்) காணத்தக்கது.) ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியொன்றுக்கும் முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியொன்றுக்கும் பரஸ்பர விரோதமிருப்பதாக வொரு வாதமும், விரோதம்

கிடையவே கிடையாதென்று மற்றொரு வாதமும் ஆக இப்படிப்பட்ட இரு விவாதம் இருமஹான்களுக்குள்ளே நான்கு மாதங்களாக நிகழ்ந்துவருகிறது. இந்த விவாதம் முதல்முதலாக யாரால் ஏற்பட்டது? எப்போது ஏற்பட்டது? என்பது யாவர்க்கும் தெரிந்ததே. ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமிகளால் 13 வருஷங்களுக்கு முன்பு எழுதி அச்சிடப்பட்டிருந்த "விரோதபரிஹாரம்" என்கிற வியாஸம் மறுபடியும் நான்கு மாதங்களுக்கு முன்பு பக்தன் என்கிற பத்ரிகையில் அப்படியே மறுபதிப்பாகி வெளிவந்தது. அதற்குக் கண்டனமென்று யாரும் யாதொரு வியாஸமும் எழுதவில்லை. அந்த விரோதபரிஹாரமென்கிற வியாஸத்திற்கு ஸ்ரீமத் காஞ்சீபுரம் ஸ்வாமிகள் கண்டனமெழுதி வெளியிட்டதாகச் சிலர் நினைப்பது சிறிதும் ஆதாரமற்றது. ஸ்ரீ காரப்பங்காடு ஸ்வாமிகள் எப்படி ஒருவரையும் குறிப்பிடாமல் தம்முடைய அபிப்ராயத்தைமட்டும் முதலில் வெளியிட்டாரோ, அப்படியே காஞ்சீபுரம்ஸ்வாமிகளும் ஒருவரையும் குறிப்பிடாமல் ஸ்ரீஸூக்திகளின் ஐககண்டியம், த்ரௌபதியின் ஸம்ரக்ஷணம் என்கிற இரண்டு வியாஸங்களை யெழுதி சென்ற ஜயவருஷ பங்குனி மாதத்தில் தம்முடைய ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையில் வெளியிட்டிருந்தார். அதில் தம்மிடம் வந்து கேட்டவர்களுக்குத் தாம் உரைத்த பதிலை வெளியிடுவதாகத் தெரிவிக்கப் பட்டிருக்கிறதேயொழிய, ஒருவருடைய வியாஸத்திற்குக் கண்டனமென்பதாகச் சிறிதும் காட்டப்பட்டிருக்கவில்லை. ஸ்ரீராமாநுஜன் நெ. 74. அனேகமாய் ஒவ்வொருவருடைய க்ருஹத்திலுமிருக்குமே. அதை யெடுத்துப்பார்த்தால் உண்மை விளங்கும். காஞ்சீபுரம் ஸ்வாமியின் ஷெ இரண்டு வியாஸங்களிலுமுள்ள விஷயங்களைக் கண்டனம் செய்து மறுப்பு எழுதவேணுமென்று ஒருவர்க்குத் தோன்றினால் அவர் செய்யவேண்டியதென்ன? அவரும் காஞ்சீபுரம் ஸ்வாமியைப்போலவே பெயரைக் குறிப்பிடாமல் தமக்கு அபிமதமான விஷயங்களைமட்டும் எழுதி லோகாபிராமமான நடையில் வெளியிடுவது நியாயமாகும். ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமிகள் அந்த நடையைக் கைப்பற்றாமல், அடுத்த பக்தன் பத்ரிகையில் "காஞ்சீபுரம் மஹாவித்வான் பிரதிவாதிபயங்கரம் அண்णங்கராசாரியர் ஸ்வாமிகள் என்னுடைய வியாஸத்தைக் கண்டனம்செய்து சிலவியாஸங்கள் வெளியிட்டிருக்கிறார்; அவை யுக்தமல்லவென்று நான் நிரூபணம் செய்கிறேன்" என்று பீடிகையிட்டு ஒரு கட்டுரை [ஆராய்ச்சி யென்பதை] வெளியிட்டார். அது வெளிவந்த பிறகுங்கூட காஞ்சீபுரம் ஸ்வாமிகள் அடுத்த ஸ்ரீராமாநுஜனில் (No. 76ல்) தாம் எழுதி வெளியிட்ட வியாஸம் ஒருவர்க்கும் கண்டனமாக எழுதப்பட்டதல்ல வென்றும் ஒருவரையு முத்தேசித்து எழுதப்பட்டதல்லவென்றும் ஸ்பஷ்டமாக எழுதி வெளியிட்டிருக்கிறார்; இதையும் அனைவரும் வாசித்துப் பார்க்கலாம். அதன் பிறகு மறுபடியும் காரப்பங்காடு ஸ்வாமிகள் அடுத்த பக்தனில் காஞ்சீபுரம் ஸ்வாமிகளின் திருநாமத்தைக் காட்டி அவர் தம்முடைய வியாஸங்களைக் கண்டனம் செய்துவிட்டதாகத் தெரிவித்து அதற்குத் தாம் மறுப்பு எழுதுவதாக (எதிர் மொழிகள்) என்கிற வியாஸத்தை வெளியிட்டார். அதற்குப் பிறகுங்கூட காஞ்சீபுரம் ஸ்வாமிகள் ஸ்ரீராமாநுஜன் 77, 78ல் தாம் விரிவாக எழுதி வெளியிட்ட வியாஸங்களில் ஸ்ரீகாரப்பங்காடு ஸ்வாமியின் திருநாமத்தை அடியோடு காட்டாமலே விஷயங்களை மாத்திரம் அழகாக விளக்கியிருக்கிறார். ஆக, இந்த விவாதம் ஏற்பட்டது முதல் காரப்பங்காடு ஸ்வாமிகள் காஞ்சீபுரம் ஸ்வாமிகளின் திருநாமத்தை இருமுறை வெளியிட்டு மறுப்பெழுதினாரே தவிர, காஞ்சீபுரம் ஸ்வாமிகள் இந்தக்ஷணம் வரையில் ஒரு வியாஸத்திலும் காரப்பங்காடு ஸ்வாமிகளின் திருநாமத்தை ஸ்பர்சிக்கவேயில்லை யென்பது ஸத்தியம். விஷயங்களின் நிரூபணப்போக்கை கவனித்தால் காரப்பங்காடு ஸ்வாமிகளின் வியாஸங்களுக்கும் கண்டனமாகப் புலப்படும் என்பது தனிப்பட்ட விஷயம். விஷயத்தில் விவாதமுண்

டென்பதை யாரும் மறைக்கமுடியாது. வஸ்துஸ்திதி இங்ஙனேயிருக்க, காரப்பங்காடு ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியின் சார்பாக வெளியிடப்பட்டதென்று ஒரு அநாமதேயக் காகிதம் நிந்தாமயமாக வெளிவந்திருப்பது எந்த வழிப்போக்கருடைய செயலென்று தெரியவில்லை. இதைப்பற்றி, அடியேனுடைய பரமஸௌஹ்ருத்தான ஸ்ரீமான். பண்டித. சௌரிராஜய்யங்கார் எழுதிய ஒரு வியாஸத்தைப் பின்னே சேர்த்து வெளியிடுகிறேன். ஸஹ்ருதயர்கள் யாவரும் அதனால் அனேக வுண்மைகளைத் தெரிந்துகொள்வர்கள். அந்த அநாமதேயக் கந்தையினால் காஞ்சீஸ்வாமிக்கு அபகீர்த்தி லேசமும் நேராது. ஆனால் காரப்பங்காடு ஸ்வாமிக்கே அதனால் அபக்க்யாதி விளைந்திருக்கிறது. "என்னுடைய காலக்ஷேப கோஷ்டிக்கும் அந்த அநாமதேயக் கந்தைக்கும் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது" என்று காரப்பங்காடு ஸ்வாமி வெளியிடுவதே நலம். இந்த விவாதத்தில் காஞ்சீஸ்வாமியின் வாதங்கள் யாவும் தனிப் புத்தகமாக விளங்குவது நன்றென்று கருதி ஜகதாசார்யஸூக்திஸுதா நிதியென்னு மிப்புத்தகம் வெளியிடப்படுகிறது." ... ... ... ... ... ....*

T. ஆராவமுது தாதாசாரியர், கள்ளக்குறிச்சி.

(4.) (பண்டித. சௌரிராஜய்யங்கார், மாம்பலம்—எழுதுவது.)

"ஸ்ரீகாஞ்சீபுரம் ஸ்வாமிகள் வடதிசைநோக்கிச் சென்றுவிட்டாரென்றும், மூன்று மாதம்வரை இத்திசை நோக்காரென்றும் தெரிந்துகொண்ட சில விஷமிகள் ஆருமில்லாதவூரிலே அச்வமேதயாகம் நடத்துகிற கதையாய் "பயங்கரரின் விதண்டாவாதம்" என்றொரு நிந்தைக் காகிதத்தை வெளியிட்டார்கள். சாந்தியும் ஸத்வ குணமுமே வடிவெடுத்தவரான ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமிகளின் காலக்ஷேபகோஷ்டியின் சார்பாக அது வெளியிடப் பட்டதாகவும் பொய்யாகவே பிரசுரம் செய்யப்பட்டுவிட்டது. அந்த மஹாபுருஷர் ஒருகாலும் அநாமதேயமான நிந்தைக்காகிதங்களை வெளியிட அனுமதியளிக்கமாட்டா ரென்பது திண்ணம். ஆனால் இரண்டு காரணங்களினால் அந்த மஹாபுருஷரும் இதில் ஸம்பந்தம் பெற்றவரேயென்பதைச் சிலர் நிரூபிக்க முன்வருகிறார்கள். (1) அந்த ஸ்வாமிக்கு காஞ்சீபுரம் ஸ்வாமி ஸாதித்திருந்த ஸ்ரீமுகத்திலிருந்து சில வாசகங்களை உதாஹரித்திருப்பது. (2) இனிமேல் மஹான்கள் முன்னிலையில் வாதம் நடத்துவது தவிர இந்த விவாதத்தில் தாம் எழுத்து மூலமாகச் சிறிதும் ஸம்பந்தம் வைத்துக்கொள்ளப்போகிற தில்லையென்று ஸ்வாமி தெரிவிக்கிறார் என்றது. இவ்விரண்டு காரணங்களினால் ஸ்வாமியின் அனுமதியின் பேரில்தான் அந்த நிந்தைக் காகிதம் வெளிவந்ததென்று நிச்சயிக்கலாம் என்று சிலர் கூற முன்வருகிறார்கள். இவ்விரண்டு காரணங்களும் நம்பத் தகுந்தவையல்ல. காஞ்சீபுரம் ஸ்வாமியால் எழுதப்பட்ட ஸ்ரீமுகங்களை காரப்பங்காடு ஸ்வாமி ஏகாந்தமாகக் காப்பாற்றி வைத்துக்கொள்வதில்லை; காலக்ஷேப கோஷ்டிகளிலே அடிக்கடி வாசித்துக் காட்டுவதுண்டு. 'அதை இப்படி ஸாதிக்க வேணும்' என்று யார் கேட்டாலும் அவர்களிடம் கொடுத்துவிடுவது முண்டு. ஆதலால் முதல் காரணம் தேறாது. இரண்டாவதும் அப்படியே. 'இந்த விஷயத்தில் இனிமேல் நான் எழுதத்தக்கது ஒன்று மில்லை' என்று ஸ்வாமி சிலரிடம் ஸாதித்திருக்கக் கூடும். அதை விஷமிகள் பெருக்கியெழுதியிருக்கிறார்களென்பதுதான் உண்மை. அந்த காகிதத்தில் 11-வது பக்கத்தில் "தத்துவ நூல்களைப்பற்றிய அறிவிலும் உலகியலறிவிலும் துறைபோகிய பலர் காரப்பங்காடு ஸ்வாமியிடம் அன்பும் ஆதரவுங்கொண்டு பல்லாண்டுகளாக ஸம்பிரதாய ரகஸ்யங்களை அறிந்து வருகிறார்கள்" என்றெழுதியிருப்பது உண்மையான விஷயம். அப்படிப்பட்ட மஹான்களிலே சிலரோ ஒருவரோ முன்னின்று தம் பெயரை வெளியிட்டு ஏன் அந்த

நிந்தைக் காகிதத்தைப் பிரசுரம் செய்திருக்கக்கூடாது? அநாமதேயக் காகிதம் என்று அவத்யம் சொல்லும்படியாகவா ஒரு கள்ளப் பிரசுரம் வெளியிடுவது? இது யார் செய்கிற காரியம். இனிமேல் ஒரு பெரியவருடைய பெயரால் பிரசுரம் வெளிவந்தாலுங்கூட அதற்கு கௌரவமில்லாமல் போய்விட்டதே. பெருமுயற்சிகள் செய்து படாதபாடும் பட்டு ஆளைத் தயார் செய்ததாகவன்றோ அர்த்தமாகும். முன்னடியே அந்த பாடுகள்பட்டிருக்கலாமே. இது ஆண்பிள்ளை செய்த காரியமாகத் தெரியவேயில்லையே. “வீண்வாதங்களில் பொழுதுபோக்கும் இயல்புடைய காஞ்சீபுரம் ஸ்வாமி சண்டைச் சுவடிகளை யெழுதிக் குவிப்பதில் வியப்பில்லை” என்று இப்படிப்பட்ட நிந்தைகளை காரப்பங்காடு ஸ்வாமி கனவிலும் நினைக்கமாட்டார். ஆமோதிக்கவும் மாட்டார். காஞ்சீபுரம் ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்திகளின் பெருமைகளைப்பற்றி எத்தனையோ மஹான்கள் எழுதி வெளியிட்டிருந்தாலும் காரப்பங்காடு ஸ்வாமி எழுதி வெளியிட்டிருக்கிற கட்டுரையே எல்லாவற்றினும் தலைமைபெற்று விளங்குகிறதென்பது உலகமெல்லாமிசைந்த விஷயம்; அப்படி யெழுதின மஹாஸ்வாமி இப்போது ஸ்வல்ப விவாதத்திற்காகத் தம்முடைய திருவுள்ளத்தைத்தலைகீழாக மாற்றிக்கொண்டாரென்பது பாமரர்களுங்கூடநம்ப முடியாத விஷயமல்லவா? “ப்ரக்ருதம் நேர்ந்த விவாத விஷயத்தில் காரப்பங்காடு ஸ்வாமி தம்முடைய கூற்றை ஸ்தாபித்துக்கொள்ள முடியாமையினாலே அநாமதேயமாக நிந்திக்க ஆரம்பித்துவிட்டார்” என்கிற அபக்யாதியன்றோ ஸ்வாமிக்கு உண்டாகும். உண்டாகுமென்று என்ன? உண்டாகியே விட்டது. உண்மையுமதுவே. மஹான்கள் எப்போதும் விஷயவிசாரத்தில் கண்ணுங் கருத்துமாயிருப்பர்களே யல்லது முன்னுக்குப்பின் முரணாக நிந்திக்கத் தலைப்பட மாட்டார்கள்.

“யச: காயேந ஜீவதி” என்னப்பட்டவர்களில் தலைவரான ஸ்ரீமத் ராமநாதபுரம் ராகவையங்கார் ஸ்வாமிகள் ஒருஸமயம் மதுரை ஸத்ஸம்பிரதாய ஸபையில் தலைமை வஹித்தபோது காஞ்சீபுரம் ஸ்வாமி விஷயமாக ஒரு வெண்பாவை இயற்றி விரிவாக உபந்யஸித்ததாய் அப்போது பத்ரிகைகளில் பிரசுரமாயிற்று.

“அண்ணங்க ராசிரியர் அற்புதமாம் நூல்கள்தமைப்
பண்ணித் தருகையினால் பாமரரும்—மண்ணுலகில்
நான் சொல்லுகேனதனை நன்றுரைக்கேன் நானென்று
தாஞ் சொல்ல முன்வருவர் தாம்.” என்பது அந்த வெண்பா.

இதன் கருத்தை நாம் வியாக்கியானம் செய்யவேணுமோ? ஆயினும் சுருக்கமாக உரைசெய்வோம். காஞ்சீபுரம் ஸ்வாமிகள் அற்புதமாக வெளியிட்டுள்ள நூல்கள் அளவு கடந்தவை. நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கு மிகவிரிவான திவ்யார்த்த தீபிகையுரை; [இது ஒரு பாஷையிலன்று; ஸ்வாமிக்குத் தெரிந்த ஸகல பாஷைகளிலும்.] மற்றும் ஆளவந்தார் முதல் மணவாளமாமுனிகள் வரையிலுள்ள பூருவாசாரியர்கள் வடமொழியிலும் தென்மொழியிலும் அருளிச்செய்திருக்கின்ற சிறியவையும் பெரியவையுமான க்ரந்தங்களுக்கெல்லாம் அரிய பெரிய வியாக்கியானங்கள்; [இவையும் ஒரு பாஷையில் மட்டுமல்ல.] வியாக்கியானங்களாக வல்லாமல் ஸ்வதந்திரமாகவும் பல க்ரந்தங்கள்; ஆயிரக் கணக்கான உபந்யாஸங்கள் காஞ்சீபுரம் ஸ்வாமியால் வெளியிடப் பட்டவை. நாளைக்கும் வெளிவந்து கொண்டிருப்பவை. இவற்றை ஆதாரமாகக்கொண்டே ஆங்காங்கு உபந்யாஸகர்கள் தம் தம் உபந்யாஸங்களை நடத்திவருவதாக ராமநாதபுரம் ராகவையங்கார் ஸ்வாமி கண்டறிந்து வெளியிட்டதில் பொய்ம்மை சிறிதுமுண்டோ? சென்னையில் பலபகுதிகளில் பலமஹான்கள் உபந்யாஸங்கள் நடத்திவருகிறார்கள். ஓரிடத்தில் திருமாலை; மற்றோரிடத்தில் திருநெடுந்தாண்டகம்; வேறோரிடத்தில் திருவாய்மொழி; இன்னோரிடத்தில் ஞானஸாரம்......இப்படி

யாக உபந்யாஸங்கள் நடந்துகொண்டிருப்பது பக்தவர்க்கங்களுக்குத் தெரியுமே. அங்கங்கே சென்று கேளுங்கள்; காஞ்சீபுரம் ஸ்வாமியின் வியாக்கியான நூல்களைக் காணுங்கள்; இவற்றால் அந்தந்த உபந்யாஸகர்கள் எவ்வளவு உபயோகமடைந்து வருகிறார்களென்பதை ஒரே நிமிஷத்திற் காணலாம். ஆண்டுதோறும் மார்கழி மாதம் வருகிறது. அடுத்தபடியாகவும் வரப்போகிறது. திருப்பாவையுபந்யாஸங்கள் நடைபெறுமிடங்களிற் சென்று கேளுங்கள். காஞ்சீபுரம் ஸ்வாமி திருப்பாவைக்கு மிகவும் விரிவாக ஸம்ஸ்க்ருத வியாக்கியானமும் அச்சிட்டு வெளியிட்ட பின்பு பண்டிதர்களுக்குப் பரம ஸௌக்யமாய்விட்டது. நாம் இப்படியெழுதுவது ஒவ்வொருவருடைய அநுபவத்திற்கும் அவசியம் வரவேண்டும். வந்திருக்கவுங்கூடும். உபந்யாஸகரத்னமாயும் ஹரிகதா காலக்ஷேப மணியாயும் விளங்கும் ஸ்ரீஉவே. வித்வான் ஸ்ரீரங்கம் சடகோபாசார்ய ஸ்வாமியொருவரே தம்முடைய சொற்பொழிவுகளில் அஸூயாலேசமுமில்லாமல் காஞ்சீ ஸ்வாமியின் வியாக்கியான நூல்களின் உபயோகப் பெருமைகளை உலகமறியப் பேசிவருகின்றவர். அந்த ஸ்வாமியின் திருவாக்கிலிருந்து இதை என்னைப்போன்றவர்கள் ஓரிடத்திலன்று, பலவிடங்களில் பலதடவைகள் கேட்டிருப்பர்கள். இத்தகைய உதார குணம் ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமியிடத்திலும் குறைந்ததன்று. மற்றபேர்கள் சொல்லுவதும் எழுதுவதும் நிற்க: ஸ்ரீமத் D. R. ஸ்வாமி 1955 ஜூலை 10உ ஹிண்டு தமது மதிப்புரையில் "ஸ்ரீஅண்ணங்கராசார்ய ஸ்வாமியின் வியாஸங்கள் ஆங்காங்கு உபந்யாஸகர்களுக்கு வழிகாட்டியாயிருக்கும்" என்று எழுதியிருப்பதுண்டே, இதை நடுநிலைமையிலுள்ளவர்கள் கவனிக்க வேண்டும். காஞ்சீ ஸ்வாமியின் 63 உபந்யாஸமாலை யென்கிற புத்தகம் ஸமீபகாலத்தில் வெளிவந்ததன்று; சென்ற ஆண்டில் வெளிவந்தது. அதற்குப் பல பத்ரிகைகளிலும் அப்போதே மதிப்புரை வெளிவந்துவிட்டது. ஹிண்டுவில் மட்டுமே இப்போது தாமதித்து வெளிவந்தது. இந்த ஸந்தர்ப்பத்தில் இது இவ்விதமாக வெளிவந்ததை நோக்குங்கால், மேலே சொன்ன விஷமிகளின் துராகிருதமான நிந்தைக்கு மறுப்பாகவே பகவானால் இது பிரசுரம் செய்விக்கப்பட்டதென்று நன்குணரலாம். அளவுகடந்த அசூயை குடிகொண்ட விஷமிகள் எதையெழுதினாலும் கேட்பாரில்லையென்று நினைக்கிறார்கள் போலும். யார் எதையெழுதினாலும் அச்சுக்கூடங்கள் ஏற்றுக்கொள்ளத் தடைசெய்யாது. மை படியமாட்டேனென்னாது; காகிதம் தாங்கிக்கொள்ள மாட்டேனென்னாது. ஆனால் உண்மையறிவாளிகள் உடனுக்குடனே அவற்றை உதறித்தள்ளுவர்களென்பது உறுதி. விஷமிகள் எது வேணுமானாலும் எவ்வளவு வேணுமானாலும் எழுதட்டும். அதற்காக யாரும் கவலைப்படமாட்டார்கள். மஹாஸாத்விகரான ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமிகள் இந்த அதர்க்கண நிந்தைக்கு ப்ரவர்த்தகர் என்று அஸப்யமான ஒரு அபக்க்யாதியை அந்த மஹானுக்கு உண்டாக்க முன்வந்தார்களே! இதுதான் மிகவும் வெறுக்கத்தக்கது. காரப்பங்காடு ஸ்வாமி இதில் ஸம்பந்தப்பட்டிருந்தது உண்மையாயிருந்தால் முக்கியமான விஷயவிசாரம் ஒன்றுதான் இதில் அழகாக வெளிவந்திருக்கும். தவிர, அந்த நிந்தைக் காகிதத்தில், விஷயத்திலே நோக்காக எழுதியுள்ள ஸ்வல்ப பாகமும் அந்த ஸ்வாமியினுடைய திருவுள்ளத்திற்கு பிரதிகூலமானதேயொழிய அநுகூலமானதுமன்று. "காஞ்சீஸ்வாமி தம்முடைய கொள்கையை நிலைநாட்டாமல் வீணாகப் பக்கங்களை வளர்த்திருக்கிறார்" என்று ஊர்பேரில்லாத தூஷகர் ஆரம்பத்திலேயே எழுதுகிறார். ப்ரஸித்தரான ஒரு பண்டிதர் தம்முடைய பெயரை நாடு நகருமறிய வெளியிட்டுக் கொண்டு இப்படிப்பட்ட தூஷணையை எழுதியிருந்தால் சிலராவது இதை மெய்யென்று இரண்டொரு நாளாகிலும் நம்பியிருக்கக்கூடும். ஒன்றுந்தெரியாத பாமரர்கள் மயங்குவதற்கும், அல்பஸந்தோஷத்தையடைந்து ஸ்வல்பகாலம் கொக்கரிப்பதற்குமேயன்றோ இந்த நிந்தைக்காகிதம் உபயோகப்படும். ஆண்

பிள்ளையாயிருந்தால் இப்படி ஊர்பேரில்லாமல் நிந்தித்து விட்டுத் தலைமறைய மாட்டார். தசரதசக்ரவர்த்தியிடம் இராமபிரானது திருக்குணங்களை எடுத்துரைக்கின்ற நகரத்து ஜனங்கள் "யதா வ்ரஜதி ஸங்க்ராமம் க்ராமார்த்தே நகரஸ்ய வா, கத்வா ஸௌமித்ரிஸஹிதோ நாவிஜித்ய நிவர்த்ததே." என்கிறார்கள். இராமன் யுத்தத்திற்குச்சென்றால் வெற்றிபெறாமல்திரும்புவதில்லை என்று இதில் சொல்லப்படுகிறது. அதுபோலவே காஞ்சீஸ்வாமி விவாதங்களில் இறங்கினால் தம்முடைய வாதத்தை நிலைநாட்டாமல் நிற்பதில்லை என்பதைப் பலவாண்டுகளாக உலகம் பார்த்து வருகிறது. ப்ரக்ருதம் த்ரௌபதீப்ரபத்தி விஷயத்தில் காஞ்சீஸ்வாமி, விவாதத்தை தாம் ஆரம்பிக்கவில்லை. "என்னைக் கேட்டவர்களுக்கு என்னபிப்ராயத்தை நான் தெரிவித்தேனத்தனை" என்றே பன்முறையும் எழுதியிருக்கிறார்- அப்படியிருந்தும் விவாதம் வீணாக வளர்ந்திட்டது; யாரால் வளர்ந்திட்டது என்பதை நிர்ணயிக்க யாருக்கும் சிரமமில்லை. "பயங்கரரின் விதண்டாவாதம்" என்கிற நிந்தைக் காகிதத்தை வெளியிட்டவர் நிந்தைகளை நிறுத்தி விவாத விஷயத்தில் நிலைநின்று, இவ் விஷயத்தில் 64 பாராக்கள் கொண்ட காஞ்சீஸ்வாமியின் அமுதக்கடலான வியாஸத்தை ஒவ்வொரு பாராவாக எடுத்து மறுப்புரைக்கட்டும். எந்தெந்த பாராக்கள் மறுக்க வேண்டாதவையென்று தோன்றுகிறதோ, அந்த பாராக்களின் லக்கங்களை வரிசையாகக் குறிப்பிட்டு 'இந்த பாராக்களை உபேக்ஷித்து விட்டோம்' என்றெழுதி விடட்டும். மறுக்கத்தக்க விஷயமுள்ள பாராக்களை மட்டும் ப்ரமாணங்களைக் கொண்டு மறுக்கட்டும். அப்போதன்றோ "தம்முடைய கொள்கையை நிலைநாட்டாமல் வீணாகப் பக்கங்களை வளர்த்திருக்கிறார்" என்று அநாமதேயர் எழுதியுள்ள தூஷணம் உண்மையாக யாரிடத்தில் சார்கின்றதென்பதை உலகம் காணும். காஞ்சீஸ்வாமியின் 64 பாராக்கள் கொண்ட வியாஸத்திற்கு மறுப்பெழுத வேணுமென்பதுகூட அபேக்ஷிதமன்று. ஸ்ரீலோகா சார்ய ஸூக்திகளுக்குள் பரஸ்பரவிரோதமே கிடையாதென்றும், விரோதமிருப்பதாக வைத்துச்செய்திருக்கிற பரிஹாரம் யுக்தமன்று என்றும் இந்த விஷயத்தை காஞ்சீஸ்வாமி ஒருவருடைய பெயரையும் தொடாமல் எப்படி லோகாபிராமமாக நிரூபணம் செய்திருக்கிறாரோ, அப்படி ஒரு பண்டிதர் எழுந்து 'விரோதமுண்டுதான், விரோதபரிஹாரம் அவசியந்தான், பரிஹாரப்ரகாரம் இதுதான்' என்று காட்டி ஒருவர் பெயரையும் தொடாமல் லோகாபிராமமாக எழுதி வெளியிடட்டும். அதனால் உலகம் உண்மையையுணர்ந்து கொள்ளட்டும். காஞ்சீஸ்வாமியை வீணாக நிந்திக்க வேணுமென்றும், அவர் தூஷிக்கிறாரென்று பொய்ப்பிரசாரம் செய்து முக்கியமான விஷய விசாரத்தை மறைத்துவிட வேணுமென்றும் இவ்வளவே ஆசைகொண்டவர்களுக்கு இந்த வழிகள் அடியோடு ருசிக்கமாட்டாவென்பதையறிவோம். ஸ்ரீஉவே. பண்டித V. P. ரங்காசாரியர் ஸ்வாமியின் வெளியீட்டில் இரண்டு வார்த்தைகளை ஸாரதமமாக ஒரு ரஸிகர் எடுத்துரைத்தார். அவையாவன; (1) "இப்படியழுகிறவர்கள் மற்றும் பலருளர்; அவர்களோடு சேர்ந்து *வாயுந்திரையுகளுமநுஸந்தானமாகலாம்." (2) "இந்த மார்க்கங்களில் ஒன்றிலும் புத்தி செல்லாமல் ஊர்பேர் தேதியொன்றுமில்லாத நிந்தைக்கந்தைகளை வெளியிடத்தான் எங்கள் கோஷ்டிக்கு ஸாத்யமாகுமென்னில் அதைத் தடுப்பாராருமில்லை; அப்படியே நடக்கட்டும்." என்னுமிவை. பகவானுடைய விபவாவதாரங்களில் ஸ்ரீராமக்ருஷ்ணாதிகளின் சக்திவிசேஷங்களை மிக நன்றாக அறிந்து வைத்தும், *வல்லரக்கர் புக்கழுந்த* என்று நம்மாழ்வார் ஸாதிக்கும்படியாக அரக்கருமசுரரும் தயரதன்பெற்ற மரகதமணித்தடாகத்திலே தாமாகவே வந்து விழுந்து முடிந்தனரென்று பழங்கதை கேட்டிருந்தோம். அதை இப்போது ப்ரத்யக்ஷமாகப் பார்த்து மெய்யேயென்று நம்புகிறோம். ஸ்ரீகாரப்பங்காடு ஸ்வாமியின் விரோதபரிஹாரமென்கிற வியாஸம் 13 வருஷங்களுக்குமுன்னமே வெளி

வந்தகென்பதை யாரும் மறுக்கமாட்டார். அதுவே மறுபடியும் பக்தனில் ஆவச்யகமாகவோ அநாவச்யகமாகவோ வெளியிடப்பட்டது. அதிலிருந்தே இவ்வளவு விவாதக் கிளர்ச்சி ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அஸ்து. விரோதபரிஹாரமென்கிற அந்த வியாஸம் வெளியான பிறகு காஞ்சீபுரம் ஸ்வாமி வெளியிட்ட வியாஸம் இன்னதென்பதை "பயங்கரரின் விதண்டா வாதம்" என்கிற நிந்தைக்காகிதம் உள்ளபடி எடுத்துக் காட்டியிருக்கிறது. அதில் 5வது பக்கம் ஆரம்பம்—:'இப்படி காரப்பங்காடு ஸ்வாமி இந்த விஷயத்தை உபபாதித்திருக்கிறார். இதைக் கண்டதுமே ஸ்ரீ. பிர. அ (காஞ்சீஸ்வாமி) பிரளயம் நேர்ந்ததுபோலச் சீறிக்கொண்டும் அலறி மேல்விழுந்து கொண்டும் ஸ்ரீஸூக்திகளின் ஐககண்ட்யம் என்றவொரு வியாஸத்தையெழுதி பக்தனுக்கு அனுப்பினர்" என்றிருக்கிறது. இந்த ஒரு விஷயத்தை மட்டும் எடுத்துக் கொள்வோம். காரப்பங்காடு ஸ்வாமியின் விரோதபரிஹாரமென்கிற வியாஸத்தைக் கண்டவுடனே காஞ்சீபுரம் ஸ்வாமி சீறிக்கொண்டும் அலறி மேல்விழுந்து கொண்டும் ஐககண்ட்ய வ்யாஸத்தை எழுதினரென்று தெரிவிக்கிற இந்த விதண்டாவாதக் காகிதமானது உண்மையாக ஸ்ரீஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியார் சார்பில் வெளியிடப் பெற்றதாயிருக்குமாயின் அந்த காலக்ஷேப கோஷ்டியைச் சேர்ந்த மஹான்களில் ஒருவராவது இதை விமர்சிக்கத் திறமையில்லாதவராகவா இருப்பர்? காஞ்சீ ஸ்வாமியின் ஐககண்ட்ய வ்யாஸந்தானே விவாதத்திற்கு மூலமானதென்று (அல்லது) ஆஸ்பதமானதென்று இவர்களால் காட்டப்படுகிறது. அந்த வியாஸம் அச்சாகி வெளி வந்திருப்பதுதானே. அதில் காரப்பங்காடு ஸ்வாமியைப்பற்றியோ, அவரைச் சார்ந்தவர்களைப்பற்றியோ, வேறு எந்த நபர்களைப்பற்றியோ, பக்தனைப்பற்றியோ கிஞ்சித்தாவது ப்ரஸ்தாவமுண்டா? கடுஞ்சொல்லாவது உண்டா? அணுவளவு இருந்தாலும் எடுத்துக் காட்டட்டும். இல்லாததை எப்படி காட்டமுடியும்? காட்ட முடியவில்லையென்று தீர்ந்து விட்டால் "காரப்பங்காடு ஸ்வாமியின் வியாஸத்தைக் கண்டதுமே காஞ்சீ ஸ்வாமி பிரளயம் நேர்ந்து விட்டதுபோல் சீறிக்கொண்டும் அலறி மேல்விழுந்து கொண்டும் ஐககண்ட்ய வ்யாஸத்தை யெழுதினர்" என்று ஒருவழிப்போக்கர் வரைந்து வெளியிட்டிருப்பதானது வீணைமாச்சரியத்தை வளர்ப்பதற்காகவேயென்பது வெளிப்படை. உண்மைக்குமாறாக அஸம்பத்தமாயெழுதி தூஷித்திருப்பதுமல்லாமல், இது காரப்பங்காடு ஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டியின் மூலமாக வெளியிடப்பெற்றதென்றும் ஒரு அபத்தம் எழுதி, பரமஸாத்விகரான அந்த மஹானுக்கும் வீணை அபக்க்யாதியை விளைவித்ததானது திருவல்லிக்கேணி வாஸிகளான பிராமாணிகர்களால் அவசியம் கண்டிக்கத் தக்கதென்பதில் ஐயமுண்டோ? ஸ்ரீமான் உவே. பண்டித V. P. ரங்காசாரியர் ஸ்வாமி வெளியிட்டுள்ள "அநாமதேயரின் ஆத்திரம்" என்னும் உண்மையுரைப் புத்தகமும், கள்ளக்குறிச்சி அட்வகேட், ஆராவமுதுதாதாசாரியர்ஸ்வாமி ஆங்கிலத்திலும் தமிழிலும் தெலுங்கிலும் விஷய தத்துவங்களை வெகு விசதமாக விவரித்து வெளியிட்டிருக்கிற லோகாசார்ய ஸ்ரீஸூக்தி ஸாமரஸ்யமென்கிற புத்தகமும் உலகம் பரவியிருப்பதால் ப்ரக்ருத விவாத ஸம்பந்தமான ஸகலதத்துவங்களும் அவற்றால் விசதமாகும். இவற்றையெல்லாம் கடாக்ஷித்தருளும் ஸ்ரீ காரப்பங்காடு ஸ்வாமிகள் இந்த நிலைமையில் தமக்கு கர்த்தவ்யம் இன்னதென்பதை உணரகில்லாதவரல்லர். உணர்ந்து, செய்வன திருந்தச் செய்வதே நலம்....."

அன்பர்களே! இத் தன்சரிதையில், கீழ் 140 பக்கத்தில் ஆரம்பித்த விஷயத்தையும், 143 பக்கத்தின் கடைசிபாராவையும் மறுபடியும் ஒரு முறை காணவேணும். இப்போது இங்கு விரித்துரைக்கப்பட்ட விஷயமெல்லாம் அங்கே சுருக்கமாகத் தெரிவிக்கப் பட்டுள்ளது. கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீமத் காரப்பங்காடு சிங்கப்பெருமாள்ஸ்வாமியின் திருவாக்குறுதியை அடியேன்நினையாத நிமிஷமில்லை.

411. தத்வநிவேதநம். கீழ் (பக்கம் 328ல்) செ. 125 ஸமஸ்யமாரோக்தி விஷயகங்க ளான நூல்களில் இதுவு மொன்று.

412. தத்வஹிதோபதேசம். கீழ் செ. 391, 392 நூல்களின் விஷய பூதரானவர்க்கு அளித்த தத்வோபதேசங்களும் ஹிதோபதேசங்களு மிதில் காணத்தகும்.

413. தத்வார்த்த பூஷணம்: அஹோபில மடத்து போக்தாக்களில் ஒருவர் எழுதிய தத்வபாஷணத்திற்கு மறுப்புரை. இவ்விஷயம் ரஸிகவித்வான்களுக்கு அவசியம் தெரிந்திருக்கவேண்டுமல்லவா? சிறிது தெரிவிக்கிறேன்; அடியே னெழுதிய ஸதுபதேச சிக்ஷையில் (பக்கம் 11ல்)

*பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிற ஸுப்ரஸித்தச்ருதிவாக்யத்திற்கு "பூயிஷ் டாம் நம உக்திம் தே விதேம" என்கிற அந்வயமும் அதற்குரிய பொருளுந் தவிர வேறு அறியார்கள் நவீனர்கள். இவ்வந்வயம் நம்பிள்ளை கோஷ்டியில் தலைகாட்ட ப்ரஸக்தியில்லையே. தே பூயிஷ்டாம் நமஉக்திம்—உனக்குக் கனத்துத்தோன்றும் நம உக்தியை;—உன் கருத்தாலே பொறுக் கொணாச்சுமையான நம உக்தியை என் றன்றோ நம்பிள்ளை யருளின பொருள். அடியார்கள் வாக்கிலே நம: என்கிற சொல் வந்தாலும் அதை மலை சுமந்ததாக நினைப்பவனும் எம்பெருமான்— என்றெழுதியிருந்தேன். (இதன்மேல் பாஷணகாரர் (பக்கம் 17-ல்)

"ஔபாஸநாந்தத்தில் (அக்நேநய) என்றாரம்பித்து *பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம* இத்யந்தமான அக்நிவிஷயகமான உபஸ்தாநமந்த்ரம் படிக்கப்பட்டிருக்கிறது. இது ஸாக்ஷாத் பகவத் விஷயகமன்று. *அபரிமித க்ருத்வஸ் தே நம:* என்கிற வாக்யத்தை யநுஸரித்து இங்கும் (பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம) என்று அர்த்தங்கொள்வதே அத்யந்தமுசிதமாகும். வேறுவிதமான அர்த்தங்கொண்டால் விருத்தமாக முடியும்."

என்று எழுதிவிட்டு, "தே பூயிஷ்டாம் நம உக்திமென்று அந்வயிக்கவேணு மென்று நம்பிள்ளை எங்கே சொல்லியிருக்கிறார்? ஆச்சான் பிள்ளை சொல்லி யிருக்கிறாரா, நம்பிள்ளை சொல்லியிருக்கிறாரா?......இம்மாதிரியான மாயாஸீதாவ் யாபாரம் அநர்ஹமானது" என்றெழுதினர். இவர் வேதாந்த வித்வானென்று நிர்ப்பயமாய் விருது வெளியிட்டுக்கொள்ளுகிறார். இதைப்பற்றி விரிவாகக் கேளுங்கள். *அக்நே நய ஸுபதா* என்கிற மந்த்ரம் ஈசாவாஸ்யோப நிஷத்தில் முடிவான ருக்கு; ப்ருஹதாரண்யகத்திலும் ஏழாமத்தியாயத்தின் முடிவானது. ஈசாவாஸ்யோப நிஷத்திற்கு ஸ்வாமி தேசிகன் பாஷ்யமருளிச் செய்திருக்கிறார். ஸ்வாமியின் அவதாரிகை "அக்நி சப்தவாச்யம் பகவந்தம் ஸ்வாபேக்ஷிதம் ப்ராபயேத்யாஹ" என்றே. மேலே விவரணமும் காணீர்:—"(அக்நே!) அக்நி சரீரக!. *யஸ்யாக்நிச் சரீரமிதி அந்தர்யாமிப்ராஹ்மணம். *ஸாக்ஷாதப்யவிரோ தம் ஜைமினிரிதிந்யாயாத் அக்ரநயநாதிகுணயுக்த! இதி வா." என்று கதிராயிர மிரவி கலந்தெரித்தாற் போன்ற விளக்கமான விவரணமுள்ளது. இப்படியிருக்க, இது ஔபாஸநமந்த்ரமென்றும், ஸாக்ஷாத் பகவத் விஷயகமன்று என்றும் எழுதிவிட்டு வேதாந்த வித்வானென்று வெடிபோடுகிறார். ஸம்ஸ்க்ருத வேதாந் தத்தின் கதி இதுவாயிற்று. இனி திராவிட வேதாந்தத்தின் கதியையும் பார்ப் போம். *பூயிஷ்டாமித்யாதிக்கு ஆச்சான் பிள்ளை அபார்த்தம் எழுதியிருப்பரே யொழிய நம்பிள்ளை யெழுதியே யிருக்கமாட்டாரென்று கொண்டு உறுமுகிறார்: உபய வேதாந்தங்களிலும் கனமகர குண்டலமணிந்து விளங்குமழகுக்கு ஆலத்தி வழிக்க வேணும் "பூயிஷ்டாம் தே நமஉக்திம்" என்பதற்கு 'மிக அதிகமான நம உக்தியை உன் விஷயத்திலே செய்யக்கடவோம்' என்கிற பொருள் அஸங்கத மன்று; அது சப்த லப்யமே யாகும். [ஆவ்ருத்திதோ பூயஸீம் நம உக்திம்

விதத்மஹே] என்று தேசிகன் வியாக்யானம் செய்தருளி யுள்ளார். நமோநம: நமோநம: என்று பலகால் சொல்லுவதே ஆவ்ருத்தியினல் பூயிஷ்டமான நம உக்தியாகும். இங்ஙனே வியாக்யானம் செய்வதைக் காட்டிலும் எம்பெருமானுடைய தன்மைக்குப் பொருத்தமாக வியாக்கியானம் செய்தருளவேணுமென்று திருவுள்ளம்பற்றிய நம்பிள்ளை விலக்ஷணமாக வியாக்யான மருளியுள்ளார். ஆழ்வாருடைய திவ்யஸூக்தியும் அதற்குக் கைகொடுத்தது. நம்பிள்ளை திருவுள்ளம்பற்றின பொருள் எங்ஙனே யென்னில்; நம: என்கிற உக்தியானது எம்பெருமானுக்குக் கனத்துத் தோற்றுவதாக அவர் கொண்ட பொருள். உள்ள சொல்வடிவில் இப்பொருள் எங்ஙனே கிடைக்கிறதென்று விமர்சிக்கவேணும்; "பூயிஷ்டாம் நமஉக்திம் தே விதேம" என்று அந்வயங் கொண்டால் முந்துற முன்னம் உதாஹரித்த பொருள் கிடைக்கின்றது. "தே பூயிஷ்டாம் நம உக்திம் விதேம" என்று அந்வயம் கொள்ளுமளவில் நம்பிள்ளை திருவுள்ளம்பற்றின விலக்ஷணப்பொருள் கிடைக்கின்றது. எங்ஙனேயென்னில், தேபூயிஷ்டாம்—உன் மனத்தால் கனத்ததான என்றபடி. "வேங்கடத் துறைவார்க்கு நமவென்னலாங் கடமையது சுமந்தார்கட்கே" என்றருளிச் செய்கிறாராழவார். "நம உக்தியைச் சொன்னவர்களுக்கு" என்று விவக்ஷிதமான இவ்விடத்தில் "அது சுமந்தார்கட்கே" என்று அருளிச்செய்தது ஏன்? என்று ஆராய்ச்சி செய்தருளின நம்பிள்ளை—"இவன்பக்க லுள்ளத்தைக் கனக்க நினைத்திருக்கு மவன் கருத்தாலே" என்று அருளிச்செய்து அதற்கு ஸம்வாத ப்ரமாணமாக "பூயிஷ்டாம்" என்கிற இந்த ச்ருதியை உதாஹரித்தருளியுள்ளார். அவ்விடத்தில் உரைகாரர் [தே பூயிஷ்டாம் நம உக்திம்—உக்தி: நம இத்யேதாவந்மாத்ராபி பகவதபிப்ராயேண பூயிஷ்டா பவதீதி அர்த்த:] என்று விவரித்துள்ளார். முநித்ரய ஸம்பிரதாயத்தில் தலைவரான ஸாக்ஷாத் ஸ்வாமி என்பவரும் தம்முடைய திருவாய்மொழியுரையில் இதே யிடத்தில் இந்த ச்ருதிவாக்கியத்தையே உதாஹரித்து இங்ஙனமே அர்த்தம் நிரூபித்துள்ளார். இது நம்பிள்ளை யருளிய பொருளேயன்றி ஆச்சான் பிள்ளையருளிய பொருளன்று. இத்யாதி.

414. தானேயெழுதியதன்சரிதை. இப்போது அன்பர்கள் கையில் வைத்துக் கொண்டு கடாக்ஷித்தருளும் நூல் இதுவே. அடியேனுடைய தெலுங்கு பாஷைப் பத்ரிகையிலும் இது அந்த பாஷையில் வெளியாகிவருகிறது. (சிரஞ்சீவி) ஆழ்வார் திருநகரி. இளையவில்லி பூவராஹன் எம். ஏ. இதனை ஆங்கில பாஷையில் மொழி பெயர்த்து வருகிறன். அதுவும் அச்சாகி வெளிவரும். (அவனுருவப்படம் இதில் பக்கம் 116ல் காண்க.)

415. திருப்புட்குழிஸ்வாமிவைபவபரிஷ்காரம். } ஸ்ரீகாஞ்சியில் திருப்புட்குழி ஸ்வாமி
416. தத்பரிசிஷ்டம். } யென்றே ப்ரஸித்தரான ஸ்ரீக்ருஷ்ண தாதா சார்யஸ்வாமி யென்பவர் மஹாவ்யாபகராக எழுந்தருளியிருந்தார். அந்த மஹாஸ்வாமியைத் 'திருப்புட் குழியப்பா' என்று வழங்கிப் போருவர்கள். அவர் தேவப்பெருமாள் ஸன்னிதிக்கு தர்மகர்த்தாவாகவு மெழுந்தருளியிருந்தார் சிலகாலம். அவர் சதுச்சாஸ்த்ர வித்வானென்று கொண்டாடப்பட்டவர். இந்த மஹானுடைய சரித்திர மெழுதுவதாகப் புகுந்த அய்யா. க்ருஷ்ண தாதாசார்ய ரென்பவர் பல பொய்யான கதைகளைப் புகுத்தி யெழுதி வேதாந்த தீபிகை யென்னும் அஹோபில மடத்துப் பத்ரிகையில் பிரசுரம் செய்வித்து வந்தார். அந்தப் பொய்க்கதைகளை நீக்கி, யதாவஸ்திதமான சரித்திரத்தைப் பரிஷ்காரப்படுத்தியவை இவ்விருநூல்களும். மேலேசொன்ன வேதாந்த தீபிகாபத்ரிகைக்கு ஆசிரியராயிருந்த ஸ்ரீ V. V. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்கள் இவ்விரண்டு நூல்களையும் பூர்த்தியாக வாசித்



சென்னைத் தண்டையார்பேட்டையில் "ஸ்ரீராமா" என்னும் ஸபாமண்டபத்தில் 1954வருஸ ஸ்ரீராமநவமி மஹோத்ஸவத்தை முன்னிட்டு நடத்தின ஸ்ரீராமாயண நவாஹப்ரவசனத்தில் பட்டாபிஷேக ஸமய விசேஷத்தின் உருவப்படம்.

துப்பார்த்து மிகவுகந்து "இவற்றை தேவரீர் தனிப்பட அச்சிட்டிருக்க வேண்டாமே; எனக்கு அனுப்பியிருந்தால் வேதாந்த தீபிகையிலேயே பிரசுரம் செய்திருப்பேனே" என்று தெரிவித்திருந்தார்.

**417.** திவ்யஸூரிசரிதகாலநிர்ணயம். எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்திருந்த கருடவாஹந பண்டிதர் பணித்த திவ்ய ஸூரி சரிதகாவ்யம் ஐம்பது வருஷங்களுக்கு முன்பு மைஸூரில் அச்சிடப் பட்டிருந்தது அது நாளடைவில் துர்லபமாய்விட, அதை அடியேன் மறுபதிப்புச் செய்வித்தேன். இந்நூல் எம்பெருமானார்காலத்தில் அவதரித்ததன்றென்றும், மிகப் பிற்காலத்தில் தோன்றியதென்றும் சுதேசமித்திரனில் ஒருவர் வெளியிட, அது ஸர்வாத்மநா அபத்தமென்பதை நன்கு நிரூபித் தெழுதிய நூலிது. சுதேசமித்திரனாராய்ச்சி யென்றும் இதற்கு மறு பெயருண்டு.

**418.** தீண்டாமைதொலையாமை: நூற்பெயரைக் கொண்டே நூலின் ஸ்வரூபமுணரலாம்.

**419.** துவரைப்பிரான் திருவருள்: துவரைப் பிரானென்று த்வாரகாநாதனுடைய திருநாமம். பல தடவைகள் த்வாரகைக்கு விடை கொண்டிருக்கிறேன். பத்து வருடங்களுக்கு முன்பு ஒரு தடவை விடை கொண்டபோது ஸ்ரீத்வாரகாதீசனுடைய முன்னிலையில் அநுயாயிகளுடன் கோஷ்டியாக விருந்து அருளிச் செயல் ஸேவித்துக் கொண்டிருக்கையில் *துவரைப்பிரானுக்கே சங்கற்பித்துத் தொழுதுவைத்தேனொல்லை விதிக்கிற்றியே* என்ற நாச்சியார் திருமொழிப்பாசுரம் ஸேவிக்குமளவில் D T. தாதாசாரியாரிடமிருந்து ஒரு அபார்த்த புத்தகம் கிடைத்தது. அதற்கு அப்போதே அவ்விடந்தன்னிலேயே மறுப்பெழுதி அச்சிட அனுப்பலாயிற்று. இது துவரைப்பிரான் திருவருள்மூலமாகத் தோன்றியதால் நூலுக்குத் துவரைப்பிரான் திருவருளென்று பெயரிடலாயிற்று. இவ்விஷயம் இந்நூலிலும் விளக்கப்பட்டுள்ளது மற்றவை நூலிற் காணத்தக்கன. ப்ராஸங்கிகமாக இங்கொன்று விஜ்ஞாபிக்கிறேன். அடியேன் வடநாடு யாத்திரை புறப்பட்டேனென்றால் அதைத் தெரிந்துகொண்ட விஷமிகள் "இவன் திரும்பிவரப் பல மாதங்களாகுமன்றோ; அதுவரையில் நம்முடைய சுவடி பங்கமடையாமல் ப்ரசாரம் பெறுமல்லவா?" என்று *மநோரதாநாம் அதடாந் ப்ரவாஹாந் வளர்த்தி எதையாவது எழுதி வெளியிடுவார்கள். அது மூன்று நாளிலேயே அடியேனுக்குக் கிடைத்து மறுமூன்று நாளிலேயே மறுப்பு வெளியாகும்படி எம்பெருமான் செய்தருள்வன். இந்த ரீதியிலேயே முப்பது நூல்களுக்குமேல் வெளியாகியுள்ளன. அன்னவற்றுள் இதுவொன்று.

**420.** தேசிகப்பிரபந்தவுரையாராய்ச்சி: 1944-ஆம் ஹு டிசம்பர் மாதம் முடிவில் தஞ்சாவூரில் ஒரு பெருங்கூட்டத்தின் மூலமாக அரங்கேற்றமடைந்து வெளிவந்த தேசிகப்பிரபந்தவுரையைப்பற்றினது இவ்வாராய்ச்சி நூல். இத் தன்சரிதையில் [பக்கம் 193-ல்] ஸேவைஸாதித்தருளும் ஸ்ரீ மதுபயவே, வித்வத்வரேண்ய (உப்பிலியப்பன் ஸன்னிதி) நவநீதம் க்ருஷ்ணமாசார்யஸ்வாமியின் ஜ்யேஷ்ட புத்ரரத்னமான சிரோமணி வித்வான். ஸ்ரீராமதேசிகாசார்யரே உரையாசிரியர். இவர் எனக்கு இளமை தொடங்கியே *பஹி: ப்ராண இவாபர:* என்றும் *ப்ராணேப்யோபி கரீயாந்* என்றும் சொல்லும்படி சீரணிந்த தோழமைகொண்டு விளங்குபவர். இவருடைய பாண்டித்யமும் விமர்சசக்தியும் லேகன சாதுர்யமும் மிக வியக்கத்தக்கவை. உண்மையில், என்னுடைய பரமாப்த பண்டிதமணிகளுள் இவர்க்கே முதல்ஸ்தானம் கொடுத்

திருக்கிறேன். அஸ்மதாசார்யரான ஸ்ரீ காதிஸ்வாமி தென்னாட்டுத் திவ்ய தேச யாத்திரையாக எழுந்தருளியிருந்த காலத்தில் திருவையாற்றில் இரண்டொருநாள் தங்கியிருக்க நேர்ந்தது. அப்போது இவர் அவ்விடத்து ஸம்ஸ்க்ருத கலாசாலையில் சாஸ்த்ரம் பயின்றுவருகிறார். இவருடைய திருத்தகப்பனார் எனக்குப்போலவே ஸ்ரீ காதிஸ்வாமிக்கும் பரமப்ரேமபாத்ரபூதராதலால் அந்தத் தொடர்பை முன்னிட்டு இவர் ஸ்ரீ காதிஸ்வாமி ஸன்னிதியில் ஏகாந்த விருப்பில்வந்து ஆழ்வார் திவ்யஸூக்திப் பெருமை விஷயமாகச் சிறிய தோருபந்யாஸம் செய்தார். அதைத் திருச்செவிசாத்தின ஸ்ரீ காதிஸ்வாமிக்கு உண்டான ஹர்ஷமும் விஸ்மயமும் எல்லைகடந்திருந்தது. இளமையிலிருந்தே இவருடைய யோக்யதை வியக்கத்தக்கதாயிருந்ததென்கைக்காக இதையெழுதினபடி. அன்றியும் என்னுடைய நித்யஸ்மரணத்திலிருந்துவருமிவ்விஷயத்தை எழுதாமலிருப்பதும் ஆத்மவஞ்சனையாகும். இவருடைய உருவப்படத்தை சேகரிக்க முயன்றும் அம்முயற்சி பலிக்கவில்லை. அக்குறை தீரவும் இஃது எழுதலாயிற்று. இத்தகைய மஹாவிவேகியான இவருடைய அப்புத்தகத்தில் தேசிகனுடைய திவ்ய சரித்திரத்தை இவர் தாமேயெழுதியிருந்தால் நிரவத்யமாயிருந்திருக்கும். அதில் ஸந்தேஹமேயில்லை. ஏதோ தாக்ஷிண்யத்திலகப்பட்டு D. R. என்பவரை அஃதெழுதும்படி கோரினார். அவர்தாம் "பூர்வாசாரியர்களை தூஷிப்பதுதான் தேசிகபக்தி லக்ஷணம்" என்று உறுதிகொண்டவராதலால் அந்தவுறுதியை உலகமறியுமாறு தேசிக சரித்திரமெழுதிக் கொடுத்தார். அதனை இந்த பரமஸாது வாசித்துப்பாராமலே தன்னுரையோடு சேர்த்து வெளியிட்டதனால் "மதிராபிந்துமிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்த ஸலிலம் போலே" என்கிற திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய திருவாக்குக்கு ஸ்மாரகமாய்விட்டது அப்புத்தகம். அதனாலேயே தேசிகப்பிரபந்தவுரையாராய்ச்சியென்னுமிந்த நூல் நமது அம்ருதலஹரீ பத்ரிகையின் மூலமாக வெளியிட நேர்ந்தது. அதில் முன்னுரையிலிருந்து மட்டும் சில வார்த்தைகளை இங்கு எடுத்துக் காட்டுகிறோம். அவற்றால் பலவிஷயங்கள் தெரியவரும்.

"மஹோபகாரகர்களான ஆசாரியர்களின் பெருமையை நன்கு விளக்குவது நன்றியறிவுடைய நல்லன்பர்களின் கடமையே. உபகாரகர்களில் தலைவரான தேசிக ஸார்வபௌமரது பெருமையை எவ்வளவு பகர்ந்தாலும் எத்தனை பக்கங்களெழுதி வெளியிட்டாலும் போராது. அங்ஙனம் எழுதப்படும் பெருமையானது இதர ஆசார்ய தூஷணைக் குற்றம் கலசாமலும் பிராமாணிக வழியைக் கடவாமலுமிருத்தல் வேண்டும். 600-வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்த மஹானுடைய சரித்திரம் நமக்குப் பரோக்ஷமாதலால் பிராமாணிகமானவொரு முன்னூலைத் தழுவியெழுதியாகவேண்டுமேயல்லாது நம்மனத்தில் தோன்றியவாறு எதையேனுமெழுதி விடுவது விவேகிகளின் பணியன்று. முன்னோர்கள் எழுதாத கதைகளைத் தொடுப்பதும், அவர்கள் எழுதியுள்ளதற்கு மாறுபாடாக வரைவதும் சில பாமரர்களை மயக்குமேயல்லது விவேகிகளை உகப்பிக்கமாட்டாது. இதர ஆசாரியர்களைத் தூஷிப்பதற்கு ஒரு வியாஜமாக தேசிக சரித்திரம் எழுதுகிறோமென்று முன்வருவது உண்மையில் தேசிகனை லாகவப்படுத்தியதாகுமே யொழிய இறையும் பெருமைப் படுத்தியதாகாது. இக்காலத்தில் லௌகிகமறியாத வெறும் வைதிகர்கள் எழுதும் நூல்களை எப்படி யெழுதினாலும் ஆங்கிலம் படித்து லௌகிகத் தேர்ச்சி பெற்றவர்கள் எழுதும் நூல்கள் பழிப்புக்கு இடமற்றிருக்க வேண்டுமே; அவற்றிலும் அப்ராமாணிக விஷயங்களும் இதர ஆசார்ய தூஷணைகளும் மலிந்திருந்தால் எவ்வளவு வெறுக்கத்தக்கதாயிருக்குமென்பதை விவேகிகள் விமர்சிப்பது. இப்போது நாம் ஆராய்ச்சி செய்ய எடுத்துக்கொண்ட தேசிக சரித்திரம் ஸ்ரீமான் திண்டுக்கல் ராமஸ்வாமி ஐயங்கார் பி.ஏ., பி.எல். அட்வகேட் எழுதியது.

இவரும் மனத்தை நடுநிலையில் வைக்காது பொய்க்கதைகளையும் பொறாமைப் பேச்சுக்களையும் பொழிந்து எழுதினரென்றால் இவரால் உலகம் என்னவுதவி பெற்றதாகும்? உண்மைக் கதைகளையுணரவிரும்பும் பக்தர்களுக்கு இவர்என்ன வுதவி புரிந்தாராவர்? இப்பெரியார் எழுதியுள்ள தேசிக சரித்திரம் 16-பக்கங்கள் கொண்டது. இதிலுள்ள ஆசார்ய தூஷணைகளை ஈண்டெடுத்துக் காட்டுவோம். (1) "தேசிகனுடைய காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய ஸ்தானம் வஹித்திருந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் திவ்ய ப்ரபந்தத்தை மட்டும் அதிகரித்து ஸ்வகோஷ்டியில் உபந்யாஸம் செய்ய வல்லவர்களாகமாத்திர மிருந்தார்களே யன்றி ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களைப் பரிசயம் செய்து பிறமதத்தினரோடு வாதஞ் செய்ய உரியராக இல்லை." [பக்கம் 8.] (2) "தாம் கற்காத ஸ்ரீ பாஷ்யாதிகளை நன்கு கற்றுப் பன்முறை ப்ரவசனஞ் செய்து, தாம் கற்ற பிரபந்தங்களிலும் தம்மிலும் தெளிவான ஞானத்துடன் திகழ்ந்து தம்மிலும் மிகுந்த ஆதரத்தை அப்பிரபந்தங்கள் பால் செலுத்திய தேசிகன் விஷயத்தில், அதற்கு முன் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யகம் செய்து வந்தவர்களும் அவர்கள் சிஷ்யர்களும் பல்வகையான இடையூறுகளையும் ஹிம்ஸைகளையும் புரியத் தலைப்பட்டனர். அவர்களால் ஸ்வாமியடைந்த கஷ்டங்கள் பல." [பக்கம் 10.] (3) "தேசிகனிடம் பொறாமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் இவருடன் போட்டியிட்டதின் பலனாக ஸ்வாமியிடமிருந்து ஸ்ரீபாதுகா ஸஹஸ்ரமென்ற க்ரந்தம் தோன்றியது." [பக்கம் 11.] (4) "ஆறாயிரப்படிக்குப் பின் தோன்றிய பல வியாக்கியானங்களிலுள்ள தோஷங்களைக் கணிசித்து அவற்றையெல்லாம் களைந்து தேசிகனருளிச் செய்த எழுபத்தினாலாயிரம் கிரந்தங்கள் கொண்ட நிகம பரிமளமென்னும் ஓர் அழகிய வியாக்கியானம் ஸ்வாமியாலே தம் குமாரருக்கு முன்பே காலக்ஷேபமாக ப்ரவசனம் செய்யப்பட்டிருந்தது." ஆக இந்த நான்கு பாராக்களை மாச்சரிய மற்ற விவேகிகள் நோக்கவேண்டும். இந்த நான்கு தூஷணைகளும் பிராமாணிக மான தேசிக சரித்திர நூல்களில் சிறிதும் காணப்படாதவை. எந்த நூலை ஆதாரமாகக் கொண்டு இந்த அட்வகேட் இந்த தூஷணைகளைப் பெய்திருக்கின்றாரோ? மேலே உதாஹரித்த வார்த்தைகள் D. R. எழுதிய தேசிக சரித்திரத்தில் உள்ளவை. இவற்றுக்கு நிச்சேஷமான மறுப்புகள் ப்ராமாணிக பத்ததியில் இவ்வாராய்ச்சி நூலில் காணத்தகும். ஸ்ரீ பாஷ்யத்திலோ பகவத்விஷயத்திலோ ப்ரவேசலேசமாவது இருக்கப்பெற்றவர்கள் இங்ஙனே யெழுதியிருந்தால் ஸஹிக்கலாம். ஒன்றையுமறியாத வொருவர் ஆசாரியர்களின் ஞானத்தையளவிட முன் வந்ததுண்டே, இதுதான் அஸஹ்யாபசாரமென்பது. தேசிகனுக்குண்டான ஸ்ரீ பாஷ்யஜ்ஞானமும் பகவத்விஷயஜ்ஞானமும் பகவத்பக்தியுமெல்லாம் ஆறாயிரப்படிக்குப் பிற்பட்ட ஸதாசார்ய ஸ்ரீஸூக்திரத்னங்களின் ஸேவையையே மூலமாகவுடையவை என்கிற தத்துவம் நவீனர்களின் புத்தியில் எளிதாக ஏற மாட்டாவாகிலும் அடியேனுடைய நூல்களையெல்லாம் ஆழ்ந்து அநுபவிப்பவர்களுக்கு அறிய வெளிதே. இவ்வாராய்ச்சி நூலைப்போன்ற பல நூல்கள் இவருடைய துரபிநிவேசத்தைத் தொலைப்பதற்கென்றே தோன்றியவை. ஸபாபுஜங்கீ ஸர்வஸ்வம் முதலிய நமது வடமொழி நூல்களும் இவருடைய மருளையகற்றவே யாயின. கீழே நெ. 213 புரட்டாசித் திருவோணமலரு மிவருக்காகவே.

421. தேசிக ப்ரபாவ பரிஷ்காரம்: கீழே பலகால் ப்ரஸ்தாவிக்கப்பட்ட திருவஹீந்திர புரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் தாமொரு தேசிக சரித்திரமெழுதி வெளியிட்டார். அதன் முன்னுரையில்-வடகலையார்க்கு குருபரம்பரா ப்ரபாவம் புராதனமாக எதுவும் கிடையாதென்றும், ஆனல் புராதனமாக இருந்த துண்டு, அது முன்னமே லோபித்து விட்டதென்றும், பிற்காலத்தவர்கள் எழுதிய சரித்திர நூல்களெல்லாம் நிராதாரங்களாய் ஒன்றை யொன்று



க்ருஷ்ண ஜில்லா குடிவாட ஸமீபத்தில் வாடவல்லி யென்னும் க்ராமத்தில் அடிக்கடி ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்த ப்ரசாரஸபையை அடியேன் சென்று நடத்துவதுண்டு. அவ்விடத்தில், நிகழும் 1957 மார்ச்சுமாதத்தில் ஸதஸ்ஸு நடந்தபோது இது அந்தரங்க பரிஷத்து.

கண்டிப்பவையா யிருப்பதால் அவிச்வஸநீயங்க ளென்றும் எழுதி முடித்து விட்டு, தாம் பரமப்ராமாணிகமாக தேசிக ப்ரபாவமெழுதுவதாக வரைந்தார். மரத்தின் நுனியிலுட்கார்ந்து கொண்டு அடிமரத்தை வெட்டுகிறவன் கதை யாயன்றோ இஃதுள்ளது. மூலாதாரமே கிடையாதென்றும், ஸயூத்யர்கள் எழுதியிருப்பதெல்லாம் நிராதாரமென்றும் எழுதி முடித்தவர் தாம் எந்த ஆதாரத்தைக் கொண்டு இந்த சரித்திரமெழுதுகிறா ரென்பதைக் காட்டித் தீரவேண்டுமே. தம்முடைய உக்திகள் வேதம் போல் ஸ்வதஃ ப்ரமாண மென்று கொள்ளக் கடவதென்றே கருதிவிட்டார். இவரெழுதி யிருப்பதெல்லாம் ஆபாத சூடம் அஸம்பத்த மென்பதை நன்கு நிரூபித்துக் காட்டத் தோன்றியது இந்நூல். இவருடைய ஸம்ஸ்க்ருத ஜ்ஞானம் எவ்வளவிற் றென்பதை இந்நூல் பரக்க நிரூபித்திருக்கிறது. அதில் ஒரு விஷயம் மட்டும் இங்கெடுத்துக் காட்டலாகிறது.

தேசிகன் ஸ்தோத்ர பாஷ்ய முடிவில் "அகணி ஸதஸி ஸத்பி: யஸ் ஸமஸ்யா ஸஹஸ்ரீ கவி கதகம்ருகேந்த்ரஸ் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர:" என்றருளிச் செய்துள்ளார். இதில் 'ஸமஸ்யா ஸஹஸ்ரீ' என்பது தனிப்பதம். இது தேசிகனுக்கு அடைமொழி. தம்மை ஸமஸ்யா ஸஹஸ்ரி யென்று ஸத்துக்கள் கொண்டாடினதாக இங்குச் சொல்லப்பட்டதே யொழிய வேறில்லை. சேட்லூரையங்கார் இங்கு "ஸமஸ்யா ஸஹஸ்ரீ கவி கதகம்ருகேந்த்ர:" என்று ஏகபதமாகக் கொண்டு, ஸமஸ்யா ஸஹஸ்ரி யென்று ஒரு க்ரந்தத்தைக் கவி செய்தவரென்று பொருளுரைத்து, தேசிக க்ரந்தங்களைப் பரிகணநம் செய்து வருமடைவில் "ஸமஸ்யா ஸஹஸ்ரீ. இந்த க்ரந்தம் இப்போது லுப்தமென்று மெழுதிவிட்டார். பஞ்சாநாம் வடாநாம் ஸமாஹார:-பஞ்சவடீ; பஞ்சாநாம் ஸஹஸ்ராணாம் ஸமாஹார:- பஞ்ச ஸஹஸ்ரீ என்கிறப்போலே, ஸமஸ்யாநாம் ஸஹஸ்ராணாம் ஸமாஹார:—ஸமஸ்யா ஸஹஸ்ரீ என்று ஸமாஸமாகிறதென்று நினைத்து விட்டாரந்தோ. ஸங்க்யாவாசக பதம் முன்னே யிருக்க வேணு மென்கிற நியமத்தை யறிந்திலரந்தோ. நவீனர்களின் வகுப்பில் பெரும்பாலு மிப்படிப்பட்டவர்களே பண்டித பூஷணாதி பிருதாவளீ ஸமலங்க்ருதர்களாய் ஆசார்ய பீட மேறுகிறார்கள். இவ்வழுக்களை அலசிக் காட்டினால் 'யுக்த முக்தம்' என்பாருளரோ? சேட்லூரார் இப்படிப்பட்ட பலநூறு விஷயங்களில் அகப்பட்டுக் கொண்டதனால் தான் வேறு புகலில்லை யென்று துணிந்து க்ஷாமண பத்ரிகை யெழுதிக் கொள்ள முன் வந்தார். அது நெ. 403ல் காணத்தக்கது.

422. **தேசிக ஸூக்தி ஜயத்வஜமாலா:** கீழே பலகால் ப்ரஸ்தாவிக்கப்பட்ட கீழச்சேரி பரவஸ்து ஸ்ரீநிவாஸாசாரியார் தேசிக ஸூக்தி ஸம்ரக்ஷிணீ என்கிற பத்ரிகையைப் பிரசுரம் செய்யத் தொடங்கினபோது "காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யருடைய நூல்களைக் கண்டனம் செய்வதற்காகவே இப்பத்ரிகை ஆரம்பிக்கப்படுகிறது" என்று உண்மையை யொளித்திடாமல் விளம்பரம் செய்திருந்தார். அவற்றுக்கு உடனுக்குடனே கண்டனங்களை வெளியிடுவதற்காக "தேசிகஸூக்தி ஜயத்வஜமாலா" என்கிற ஸஞ்சிகை அப்போது நம்மால் மாதந்தோறும் சிலகாலம் வெளியிடப்பட்டு வந்ததென்பதை வித்வான்கள் மறந்திரார்கள். இளமை தொடங்கி அடியேன்பால் அன்பே நிரூபகமாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத். (திருச்சி) ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமியும் அப்போது தைவதுர்விபாகாத் சிறிது வேறுபட்டு அந்த ஸம்ரக்ஷிணீ பத்ரிகைக்கு ஸம்பாதக பதவியை வஹித்து அடியேன் எதிரம்பு கோக்கும்படி நடந்துகொண்டாரென்பதும், பிறகு ஸாமரஸ்யத்தை விரும்பி க்ஷமா பத்ரிகையை அநுக்ரஹித்துப் பழைய ஸௌஹார்தத்தைப் பதின்மடங்கு பெருக்கிக்கொண்டு விளங்குகிறாரென்பதும் ஜகத்ப்ரஸித்தம்.

இங்கே ஒரு சிறுவிஜ்ஞாபனம். கீதாசார்யன் * சதுர்விதா பஜந்தே மாம்* என்று பணித்த கணக்கிலே அடியேன் கண்ட வித்வான்கள் நான்கு வகையாகப் பிரியலுற்றார்கள். அந்த நால்வகையாவன. (1) அடியேனுடைய நூல்களை ப்ராமாணிகங்களென்றும் யுக்தி யுக்தங்களென்றும் கொண்டு வீண்வம்புச் சண்டைக்கு வாராதார் வகுப்பு முதலது. ஸ்ரீகோஷ்டீபுரம் ஸ்வாமி, திருவிண்ணகர் நவநீதம் ஸ்வாமி போல்வார் பலர் இவ்வகுப்பில் பரிகணிதர்கள். (2) அடியேனுடைய சில நூல்களைக் கண்டு கோபதாபம் மேலிட்டு மறுப்பெழுத வேணுமென்று ஆசை கிளர்ந்தும் அவ்வாசையை வாக்கினால் வெளியிட்டுக் கொள்வதற்கு மேற்பட ஒன்றும் செய்யகில்லாமல் வாளாவிருப்பவர்களின் வகுப்பு இரண்டாவது. (3) மறுப்பெழுத வேணுமென்று கிளர்ந்த ஆசையை எவ்விதத்திலும் அடக்கிக் கொள்ளமாட்டாமல் எழுதித் தீர்த்து * கிலோத்பாடீவ வாநர:* என்ன நிற்பாருடைய வகுப்பு மூன்றாவது. (4) அப்படி மறுப்பெழுதி உடனுக்குடனே நம் மறுப்புநூல்களைப் பெற்று, ஆத்ம வஞ்சனை பண்ண முடியாமலும் ப்ராமாணிகத்வத்தைப் பரிபாலிக்க வேண்டியும் எதிரம்பு கோப்பதை விட்டொழித்து விரோத பாவனையை அறவேயகற்றி ஸ்நேஹத்தை விரும்பி க்ஷமைவேண்டுவார் வகுப்பு நான்காவது. இவற்றுள் முதல் வகுப்புக்கு உதாஹரண வ்யக்தி விசேஷங்களைக் காட்டினது போல மற்ற மூன்று வகுப்புக்களுக்கும் காட்டாததேன் ? என்று ஒருவரும் கேட்க முன் வரமாட்டார்.

423. தேசிகஸூக்திபரிமளம் : ஸமஸ்க்ருத நூற்பகுதியில் நெ. 125 ஸமஸ்யமாநோக்தி ஸௌஷ்டவவிமர்சமென்னும் நூல்தோன்றுவதற்கு முன்னே நடந்த வாத ப்ரதிவாத நூல்களுள் இதுவொன்று.

424. தேசிகஸூக்திஸித்தாஞ்ஜநம்: கீழ் நெ. 423 நூல்போன்றதே இதுவும்.

425. தேவப்பெருமாள்ஸன்னிதிவிமர்சம்: 1945-ஆம் வருஷத்தில் செட்டிநாடு வாரப் பத்ரிகையில் ராவ்பஹதூர். ப. சம்பந்த முதலியார் B.A.B.L. என்பவர் "சின்னக் காஞ்சிபுரம் வரதராஜஸ்வாமி கோயில்" என்ற தலைப்பின் கீழ் ஒரு வியாஸமெழுதி வெளியிட்டிருந்தார். அதில் ஸ்ரீவரதராஜர் கோவில் நானூறு வருஷங்களுக்கு முன்பு சிவாலயமாக இருந்ததென்றும் பிறகு விஷ்ணு கோயிலாக மாற்றப்பட்டதென்றும் சில சான்றுகளைக்கொண்டு தாம் முடிவு செய்திருப்பதாக அஸம்பத்தோக்திகளை நிரப்பி யெழுதியிருந்தார். அதற்கு இது பரிபூர்ணமான மறுப்பு. மார்க்கபந்து பத்ரிகையிலச்சிடப்பட்டது,

426. நப்பின்னையவதாரரஹஸ்யம் : 1953-ஆம் வருஷத்தில் அடியேனெழுதி தேவ நாகரலிபியில் அச்சிட்டு வெளியிட்டதும், ஸர். S. வரதாசார்ய ஸ்வாமியின் தலைமையில் அரங்கேற்றப்பெற்றதுமான திருப்பாவை ஸம்ஸ்கிருத வியாக்கியானத்திற்கு மதிப்புரையாக ஸ்ரீ உவே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியின் வியாஸம் 14-2-54உ தினமணிச்சுடரில் வெளிவந்தது. அதாவது,

"இந்த ஸம்ஸ்கிருத வியாக்கியானம் முன்னோருரைகளை முற்றுந்தழுவி மிக அழகான ஸம்ஸ்க்ருத பாஷையில் எழுதிவெளியிடப்பட்டுள்ளது ஸ்ரீப்ரதிவாதி பயங்கரஸ்வாமி உபயவேதாந்தங்களில் மஹாப்ராஜ்ஞரென்பது உலகறிந்ததேயாம். ஸிம்ஹியின் வயிற்றிற் பிறந்த ஸிம்ஹக்குட்டிபோன்று ஸ்ரீஸ்வாமியிடம் பிறந்த இவ்வியாக்கியானமும் வீறுபெற்று விளங்குகின்றதென்னில் இது கேவலம் ஸ்துதியாகாது. ஒவ்வொரு பாட்டிலும் ஸ்வாபதேசார்த்தம் மிக அழகாக நிரூபிக்கப்பட்டுள்ளது இவ்வியாக்கியானத்திற்குத் தனிச்சிறப்பாகும். மேலும், பெரிய வாச்சான் பிள்ளை முதலான பூருவாசாரியர்களருளிச் செய்த வியாக்கியானங்களில் காணக்கிடைக்காத சில கற்பனைகளும் ஸ்ரீ அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் ஸம்ஸ்

க்ருத வியாக்கியானத்திலுள்ளன......அது ரஸிகர்களுக்கு வெகுரஸமானதென்பது கூறாமலேயே விளங்கும்.''

(என்று எழுதி, இதற்கு மேல்)

"ஆனல், ஸ்ரீராமாநுஜர் தமது சரணாகதி கத்யத்தில் 'ஸ்ரீவல்லப! ஏவம்பூத பூமிநீலா நாயக!' என்று கூறியுள்ளார்; இந்த வாக்கியங்களை உற்று நோக்குங்கால் மஹாலக்ஷ்மியும் நீளாதேவியும் ஒருவரல்லரென்பது தெரிகிறதன்றோ. இந்த ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் *நீளாதுங்கஸ்தநகிரிதட* என்னும் திருப்பாவைத்தனியனில் அமைந்த நீளாசப்தம் மஹாலக்ஷ்மியின் அவதாரமாக நப்பின்னையைக் குறிப்பதாகக் கூறுகின்றது; 'ஸ்ரீக்ருஷ்ணவதாரே ஸ்ரீமஹாலக்ஷ்மீ: கோகுலே கும்பநாமக கோபாலதல்லஜஸ்ய பவநே நப்பின்னைப் பிராட்டி நாம்நா அவதீர்ய ஸ்திதா' என்றதைக் காண்க. நப்பின்னை மஹாலக்ஷ்மியினுடைய அவதாரமா? நீளாதேவியினுடைய அவதாரமா? என்பது விசாரிக்கத்தக்கது. ஸம்ஸ்க்ருத பாஷா பரிசயம் பெற்றுள்ளவர்களுக்கு இந்த வியாக்கியானம் மிகவும் பயன்படும்'' என்று நிகமித்தபடியால் விசாரிக்க வேண்டிய பொறுப்பை நாமே ஏற்றுக்கொண்டு

व्रजे नन्दसूनोः प्रिया कुम्भकन्या प्रसिद्धैव नीलावतारत्वकीर्त्या ।
रमायाश्च सैषाऽवतारत्व भागित्यसौ वाक् च साधीयसीत्युद्गृणीमः ॥

என்று தொடங்கி இருபது பாராக்களினல் இவ்விஷயத்தில் தெளிவைப்பிறப்பித்து எழுதப்பட்ட நூலிது. இந்நூலைக் கடாக்ஷித்தருளின அந்த ஸ்வாமி சொல்லியனுப்பினதாவது—'நான் ஏதோ குறை கூறினதாகத் திருவுள்ளத்தில் படக்கூடாது. மதிப்புரைகளில் ஏகதேசம் இவ்வண்ணமாக எழுதிவைக்கவேணுமென்று பத்ராதிபர்களின் கட்டளையைப் பரிபாலித்தவத்தனே' என்று. அதன் பிறகு நாம் நமது நூல்களைப் பத்திரிகைகளுக்கு அனுப்புவதையே நிறுத்திக் கொண்டோம்.

427. நமஸ்காரதத்வம்:
428. நமஸ்காரதத்வவிஜயத்வஜம்: } கீழே பலகால் ப்ரஸ்தாவிக்கப்பட்ட சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் *நமோ நமோ வாங்மநஸாதிபூமயே* என்கிற ஸ்தோத்ரரத்நஸ்ரீ ஸூக்தியை விவரிக்கும் வியாஜத்தினல் ஸக்ருத் ப்ரணம ஸம்ப்ரதாயத்தை தூஷிக்க, தேசிக திவ்யஸூக்திகளினல் ஸக்ருத் ப்ரணம ஸம்ப்ரதாயமே ஸம்ப்ரதிபந்நமானதென்று வியுலநிரூபணம் செய்தது நமஸ்கார தத்வமென்கிற நூல். ஸ்ரீரங்க தேவஸ்தானத்து அர்ச்சக நமஸ்கார வ்யவஹாரத்தில் இந்நூல் தாக்கல் செய்யப்பட்டு ஸக்ருத் ப்ரணமமே ஸாதுவென்று முடிவு செய்யப்பட்டது. அதன் மேல் புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசாரியர் மறுப்பெழுத, அதற்கு மறுப்பாகத் தோன்றினது நமஸ்காரதத்வவிஜயத்வஜம்.

429. நற்பொருள்விளக்கம்: கீழ் நெ. 420 ஆராய்ச்சிநூலின்மேல் மதுரை நாராயணையங்காரென்பவர் எழுதிய பதிலுக்கு விடையளிப்பு.

430. நான்கண்டநல்லது: திவ்யப்பிரபந்த வியாக்கியானப் பேராசிரியர்களான நம் பூர்வாசாரியர்களைத் தமிழறியாதவர்களென்று நிந்தித்தும், அவர்களது ஸ்ரீஸூக்தி நடையைப் பரிஹஸித்தும், மூல பாடங்களை யதேஷ்டமாகத் திருத்தியும் ஒரு அவ்யபதேச்யன் வெளியிட்டதற்கு மறுப்பு. இந்நூலின் முன்னுரையில், இத் தன் சரிதையில் பக்கம் 222-ல் விளங்குகின்ற ஸ்ரீமத் மகாமகோபாத்யாய. தாக்ஷிணத்ய கலா நிதி. டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள் 1939-ஆம் வருடத்தில் எழுதி அச்சிட்டு வெளியிட்ட நல்

லுரைக் கோவை நாலாம் பாகத்தில், வித்துவான் தியாகராச செட்டியார் அவர்களின் சரிதை யெழுதிவருகையில் அதில் 159-ஆம் பக்கத்தில் ஆரம்பமாகி 163-ஆம் பக்கத்தில் முடிகின்ற ஓர் பகுதி எடுத்து வெளியிடப்பட்டிருக்கின்றது. அதைமட்டும் இங்கு அநுவதிக்கிறேன்.

"பிறருடைய குறையைக் கண்டவிடத்துக் கண்டிக்கும் இயல்புடைய தியாகராச செட்டியார் தம்முடைய நிலையை நன்றாக உணர்ந்திருந்தார். தம்முடைய அளவுக்கு மிஞ்சிய காரியத்தைப் பிறர் வற்புறுத்தினாலும் செய்யார்; இது சிலரிடத்தில் மாத்திரம் காணப்படும் அருமையான குணம். திருச்சிராப்பள்ளியிலும் வேறு இடங்களிலும் சிரஸ்தேதாராகவும் டிப்டி கலெக்டராகவும் இருந்து விளங்கிய திரு. பட்டாபிராம் பிள்ளை யென்பவர் தமிழபிமானம் மிக்கவர்; தமிழ்ப் புலவர்களை ஆதரித்துப் பாதுகாக்கும் இயல்பினர்; மகா வித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களை நன்கு அறிந்தவர்; ஸ்ரீ தியாகராச செட்டியாரிடத்தில் மிக்க அன்பு பூண்டவர்; அறிவாளிகள் நிலையான காரியங்கள் செய்ய வேண்டுமென்பது அவருடைய விருப்பம். திவ்யப் பிரபந்தங்களுக்குப் பெரியோர்களால் வடமொழி தென்மொழியிற் செய்யப்பெற்ற வியாக்கியானங்கள் இருப்பது போலத் தேவார திருவாசகங்களுக்கு இல்லையே யென்ற வருத்தம் அவருக்கு உண்டு. அதனால் சைவமடாதிபதிகளையும் சைவ வித்துவான்களையும் சந்திக்கும் பொழுதெல்லாம் திருமுறைகளுக்கு ஓர் உரை எழுதும்படி வற்புறுத்திக் கூறுவார். கேட்பவரிற் பெரும்பாலோர் இயன்றவரையில் உழைத்துப் பார்ப்போமென்றே விடை பகர்ந்து வந்தார்கள்.

தியாகராச செட்டியார் உபகாரச் சம்பளம் பெற்றுத் திருவானைக்காவில் சில ஆண்டுகள் இருந்த போது பட்டாபிராம் பிள்ளை அவர் வீட்டிற்கு அடிக்கடி சென்று பார்த்து வருவார். அப்போது அவரைத் திருவாசகத்திற்கு உரை எழுத வேண்டுமென்று வற்புறுத்திக் கூறுவார். அன்றியும் அங்கங்கே நிகழும் கலியாணங்களை விசாரிக்கப் போன காலங்களிலும் மற்ற இடங்களுக்குச் சென்றிருந்த காலங்களிலும் அவரைச் சந்தித்தபோதெல்லாம் மேலும் மேலும் கூறுவார்; "எழுத ஆரம்பித்தீர்களா? எவ்வளவு ஆயிற்று" என்று கேட்பார்; அருகிலுள்ள கனவான்களிடம், "இவரிடம் எவ்வளவு நாளாகச் சொல்லி வருகிறேன்; கேட்க மாட்டேனென்கிறாரே!" என்று சொல்லுவார். ஒரு நாள் செட்டியார் திருச்சிராப்பள்ளியிலுள்ள உறவினரொருவர் வீட்டில் நிகழ்ந்த ஒரு துக்கத்துக்காக அங்கே சென்று விசாரித்து நீராடிவிட்டு ஈரத்துணியோடு மீண்டு காவிரியாற்றுப் பாலத்தின் மேல் நடந்து வந்தார். அப்பொழுது நடுப்பகல் பன்னிரண்டு மணி நேரம். செட்டியார் வெயிலாலும் பசியாலும் மிகவும் களைப்படைந்திருந்தார். அச்சமயம் பட்டாபிராம் பிள்ளை ஸ்ரீரங்கம் சென்று பெருமாளைத் தரிசனம் செய்துவிட்டு மார்பிற் சந்தனம் விளங்க உத்ஸாகமாக எதிரே ஒரு வண்டியில் வந்தார். செட்டியாரைக் கண்டவுடன் அவர் வண்டியை நிறுத்திக் கீழே இறங்கினார்; செட்டியாரை யணுகி க்ஷேம சமாசாரம் விசாரித்த பின்பு வழக்கம் போலவே 'திருவாசகவுரை எவ்வளவாயிற்' றென்று கேட்டார். நீண்டநாளாக இந்த விஷயத்தைப்பற்றி எவ்விடத்திலும் கேட்டு வந்ததனாலும் அப்பொழுது தமக்கு இருந்த தளர்ச்சியினாலும் செட்டியாருக்குக் கோபம் உண்டாயிற்று; "நீங்கள் கொஞ்சமாவது திருவாசகத்தின் பெருமையை அறிந்து கொள்ளவேயில்லை யென்று நிச்சயமாய்ச் சொல்லுவேன். அதற்கு என்னால் உரை எழுத முடியுமா? திருவாசகம் எவ்வளவு! என்னுடைய படிப்பு எவ்வளவு! அதற்கு உரையெழுத வேண்டுமென்றால் வேதம், உபநிஷதம், ஆகமங்கள், புராணங்கள், யோக சாஸ்திரங்கள் முதலியவை தெரிய வேண்டாமா? தமிழில் உள்ள இலக்கண இலக்கியங்களையும் சில சைவ சித்தாந்த சாஸ்திரங்களையுமே படித்தநான் எப்படி எழுத முடியும்?" என்றார்.

அதற்குப் பட்டாபிராமபிள்ளை :—"திவ்யப் பிரபந்தத்திற்கு அவர்கள் வியாக்கியானம் செய்யவில்லையா?" என்று கேட்க, அதற்குச் செட்டியார் "என்ன ஐயா! உங்களுக்கு அவர்களுடைய படிப்பின் அளவு சிறிதேனும் தெரியாது போல் இருக்கிறது; அவர்கள் வடமொழி தென்மொழி இரண்டிலும் சிறந்த புலமையுடையவர்கள்; அவர்களது உரையினலல்லவா நூலின் பெருமை அதிகமாகின்றது? நான் உரை எழுதினல் திருவாசகத்திற்கு எவ்வளவு குறைவு உண்டாகும் தெரியுமா? என்னுடைய உரையினல் அதற்குக் குறைவு ஏற்பட வேண்டுமென்பது தங்கள் எண்ணமோ? எங்கே கண்டாலும் நச்சு நச்சென்று என் படிப்பின் அளவு தெரியாமல் திருவாசகத்திற்கு உரையெழுதும்படி சொல்லிச் சொல்லி என்னை வருத்துகின்றீர்கள். இனி மேலும் இப்படித் தொந்தரவு செய்வதாயிருந்தால், இதோ இந்தக் காவிரியில் இப்படியே பொத்தென்று விழுந்து என் உயிரை விட்டு விடுவேன். பட்டாபிராம பிள்ளையவர்கள் திருவாசகத்திற்கு உரையெழுதும்படி அடிக்கடி தொந்தரவு செய்ததனல் அந்தத் துன்பத்தைத் தாங்கமாட்டாமல் தியாகராச செட்டியார் ஆற்றில் விழுந்துவிட்டாரென்ற அபக்கியாதி உங்களுக்கு ஏற்படட்டும்" என்ருர். பட்டாபிராம பிள்ளை உடனே செட்டியாருடைய கைகளைப் பிடித்துக்கொண்டு, "ஐயா! ஐயா! வேண்டாமையா! இனிமேல் நான் இதைப்பற்றிக் கேட்பதே இல்லை ஐயா!" என்று சொல்லிச் சமாதானப்படுத்திவிட்டு அவருடைய அயர்ச்சியான நிலையை அறிந்து தம் வண்டியில் ஏற்றித் திருவானைக்காவிலுள்ள அவரிருப்பிடத்தில் அவரை விட்டுவிட்டுத்திரிசிரபுரத்திலிருந்த தம்மிடம் சென்ருர்.'

431. ந்ருஸிம்ஹப்ரியா நிரீக்ஷணம் :
432. ந்ருஸிம்ஹப்ரியா ஸமீக்ஷா : } கீழ் நெ. 398 நூலுக்கும் நெ. 408 நூலுக்கும் சேஷ பூதங்களிவையிரண்டும்.

433. பகவச் சாஸ்த்ரதத்வம் : கீழ் நெ. 418. நூலின் ப்ரமேயமே இதற்கும்.

434. பக்தன் மூவிதழாராய்ச்சி : திருவல்லிக்கேணியிலிருந்து வெளிவரும் பக்த னென்னும் மாதப் பத்ரிகையின் ஜயஹூ ஆடி ஆவணி புரட்டாசி ஆகிய மூன்று மாத ஸஞ்சிகைகளை யாராய்வதென்று பொருள். கப்யாஸச்ருதி விசாரபரமான இச்சிறு நூல் நேராக அநுபவிக்கத் தக்கது.

435. பரதுக்கதுத்கித்வ பரமார்த்தரக்ஷா : ஸஹஸ்ர நாமத்தில் 'விகர்த்தா' என்கிற திருநாமத்திற்கு பாஷ்யம் செய்தருளின பட்டர் "அந்யதா பரதுக்கது:க்கித்வாதயோ குணா: கதமஸ்ய ஸ்யு:?" என்றருளிய ஸ்ரீஸூக்தியின் உண்மைப் பொருளை மிக விரிவாக நிரூபிக்கும் நூலிது.

436. பாதுகா ஸஹஸ்ர வுரையாராய்ச்சி : D. T. தாதாசார்யரா லெழுதப்பட்டதென்று சென்ற வருஷத்தில் வெளிவரத் தொடங்கிய பாதுகா ஸஹஸ்ரவுரையிலுள்ள பலவகை அவத்யங்களை ஸஹ்ருதய ஹ்ருதயங்கமமாக விவரித்தது.

437. பாத்ரதத்வவிஜயத்வஜம் :
438. பாத்ரதத்வ பரமார்த்நம் : } இவை யிரண்டும் ராமாநுஜ தயாபாத்ரத் தனியனின் நவீநத்வத்தை நன்கு ஸ்தாபித்தவை. நேரில்காண்க.

439. பிழைதிருத்தப் பேரின்பம் : அஸ்மத் குலகூடஸ்தருடைய வைபவத்தைப் பற்றின ஆந்தராளிக விவாதத்தை நிரஸிக்கத்தோன்றின நூல்களுள் இதுவொன்று.

440. பெரியாழ்வார் திருமகள் : உலகப் பிரஸித்தரான C. R. அவர்கள் (ராஜாஜீ) த்ரிவேணியென்னும் ஆங்கில பத்ரிகையில்-ஆண்டாளென்று ஒரு வ்யக்தி தனிப்பட கிடையாதென்றும், திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும்

பெரியாழ்வார் தாமே தம்மைப் பெண்பிள்ளையாகப் பாவனை செய்து எழுதியவை யென்றும் நூதனமான வொரு கொள்கையைப் பிரசுரம் செய்ததற்கு ப்ரமாண யுக்தி புஷ்கலமான நிரஸனம். இது ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளியிடப்பட்டது. இதை ராஜாஜீ அவர்கள் வாசித்துப் பார்த்து உகப்பைத் தெரிவித்தார்கள்.

441. பேருளாளன் பாடல் விளக்கம்: தேவப் பெருமாளுக்கு ஆழ்வார் பாடல் கிடையாதென்றும், மதுராந்தகம் போலே காஞ்சியும் ஆசார்யாபிமானம் பெற்ற ஸ்தலமே யொழிய திவ்ய தேசமன்றென்றும் சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் எழுதியிருந்ததற்கு ப்ரத்யக்ஷர கண்டனம். இதன் முடிவில் பெரிய ச்லோக மொன்று; அதன் நான்காவது பாதம்-* காஞ்சீம் வீக்ஷ்ய ஹநூ நிஜே பள பளாத்காராஞ்சனைஸ் ஸமஸ்க்ரியாத் * என்பது. சேட்லூரார் இந்நூலுக்கு விடையிறுக்க சக்தராகில் எழுதட்டும்; இல்லையேல் காஞ்சீபுரியைத் திசை நோக்கித் தொழுது தம் தவடையில் பளபள பளவென்று அறைந்து கொள்ளட்டும் என்பது அந்த ச்லோகத்தின் கருத்து. அநுஷ்டானத்தில் அதுவே பலித்தது.

442. ப்ரணவாதிகார தத்வம்: ஸப்ரணவாஷ்டா க்ஷரம் ஸர்வாதிகாரமன்றென்றும், ஸ்த்ரீ சூத்ரர்கள் விலக்ஷணர்களா யிருந்தாலும் அவர்களுக்கு உபதேசிக்க வேண்டுமென்றும் பிறர் எழுதி யிருந்ததற்கு நூறு பாராக்களினுல் மறுப்பு. ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்த ஸ்ரீஉவே. திருக்கோட்டியூர் ஸ்ரீராம தேசிகாசார்யரென்கிற பண்டிதர் இதன்மேல் மறுப்பெழுதி வெளியிட்டிருந்தார். அப்போது ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வந்த ஸ்ரீஉவே. திருமணி அப்பன் ஸ்வாமி "இந்த மறுப்பு நூலுக்குக் கண்டனம் நானே யெழுதிக் கொண்டிருக்கிறேன்; இதில் தேவரீர் அந்வயிக்க வேண்டாம்" என்று அடியேனுக்குத் தெரிவித்துத் தாமே சிறந்த கண்டன மெழுதி வெளியிட்டார். அதன்மேல் ஒரு மறுப்பு வெளிவந்தது; அதற்கும் அந்த ஸ்வாமியே ப்ரதித்வநி கிளம்பாதபடி மறுப்பெழுதி முடித்தார்.

443. ப்ரமாணத் திரட்டாராய்ச்சி: திருக்குடந்தையில் வாழ்ந்த ஸ்ரீ V. K. ராமாநுஜாசாரியா ரென்கிற பெரியார் "ரஹஸ்யத்ரய ஸாரப்ரமாணத் திரட்டு" என்று ஒரு நூலெழுதி வெளியிட்டார். அது மருளே வடிவெடுத்ததா யிருந்தபடியால் உலகம் ஏமாற்ற மடையாமைக்காகத் திருத்தங்கள் செய்தது இது. இதைப் பற்றி ஸ்ரீமத் A. V. கோபாலாசார்ய ஸ்வாமி ஸம்ரக்ஷிணீ பத்ரிகையில் எழுதும்போது "இரண்டு கண்களும் அடியோடு தெரியாதவவர் ஏதோ எழுதினர்; அதைப் பொருள்படுத்தி யிருக்கவேண்டாம்" என்றுவரைந்தார்.

444. மடவித்வத் விபூஷணம்: அஹோ பிலமடத்து விவாத நூல்களி லொன்று.

445. மாமுனிவனருள் விளக்கு: இது நேரில் அநுபவிக்கத் தக்கது.

446. யுஷ்மத்ஸூக்திஸௌரபம்: யதிராஜ விம்சதிப்ரயோக தூஷண நிரஸநம்.

447 ரக்ஷாவிமர்ச சிக்ஷா: கீழே ஸம்ஸ்க்ருத நூற்பகுதியில் நெ. 34 மேலே நெ. 457 உள்ள நமது ஸதாசார்ய ஸூக்திரக்ஷா என்னும் நூலின் மீது தோன்றின பதிலுக்கு மறுப்பு.

448. ராமாநுஜதயாபாத்ரபத்ய சரித்ரம்: கீழே ஸம்ஸ்க்ருத நூற்பகுதியில் நெ. 130 நூலுக்கு நேரான மொழி பெயர்ப்பு.

**449.** ராமாநுஜதயாபாத்ரதத்வம்: இந்த நவீனத் தனியன் விஷயமாக நாம் எழுதியுள்ள நூல்களில் இதுவே முற்பட்டது. இதையும் இதற்கு அநுபந்தியான நூல்களையும் வாசிப்பவர்கள் ராமாநுஜதயாபாத்ரத்தனியன் நவீன காலத்தில் போட்டியாகக் கல்பிக்கப்பட்டதே யென்பதை நிஸ்ஸந்தேஹமாக வுணர்ந்தும், இரண்டு நூற்றூண்டாக ப்ரபலமான போராட்டம் லக்ஷக்கணக்கான பணச் செலவுடன் பார்லிமெண்டு வரையிலுங்கூட நடந்து விட்டபடியால் ப்ராமாணிகர்களுங்கூட உண்மை நெறியைக் கடைப்பிடிக்க முடியாமலிருக்கின்றது. இது ஸர்வஜநஹ்ருதயஸாக்ஷிகம்.

**450.** வம்பவிழ்கோதை தத்துவம்: கீழ் வடநூற் பகுதியில் நெ. 126 'கோதார்த்தோக்ஷாவமர்த:' என்னும் நூலின் விவரணம் காண்க.

**451.** வரதன் ஸன்னிதி வரலாறு: தேவப் பெருமாள் ஸன்னிதியின் வரலாற்றை மிகவும் பொய்யான முறையில் D. ராமஸ்வாமி ஐயங்கார் B.A.B.L. எழுதி வெளியிட்ட (வரலாறு) அபத்தக் களஞ்சியத்திலுள்ள பொய்க் கதைகளை ஒவ்வொன்றையும் ப்ரமாண பூர்வகமாகக் கண்டித்து உண்மையான வரலாறுகளை விளக்கி யெழுதப்பட்ட நூலிது. பொய்க் கதைகள் மலிந்த அவருடைய புத்தகத்தையும் இவ்வரலாற்றையும் சேர்த்து வாசிப்பவர்கள் "மனச் சாட்சியை மீறி அபிநிவேச வசத்தாலோ துராக்ரஹத்தினுலோ பாமர ப்ரதாரணமாகப் பொய்க் கதைகளை யெழுதின அவர் அநுதாபம் காட்டாமல் எப்படி யிருக்கிறூர்?" என்று வியந்து கேட்பார் பலருளர். 'அவ்வளவு ப்ராமாணிகத்வம் எளிதிலுண்டாய் விடுமோ?' என்று அவரவர்களே ஸமாதான மடைந்திடுவர்கள். பதினூறு அத்யாயங்கள் கொண்ட நமது வரதன் ஸன்னிதி வரலாற்றில் இந்த தேவஸ்தானத்தின் சரித்திரம் பூர்த்தியாக ரிகார்டுகளை முன்னிட்டு மூதலிக்கப்பட்டுள்ளது. ப்ராஸங்கிகமாய்ப் பொதுவாகப் பல தத்துவங்களும் இதில் விவரிக்கப்பட்டிருப்பது மத்யஸ்தமநீஷிகளால் அவசியம் நோக்கத்தக்கது. ஸ்ரீமான் D. ராமஸ்வாமி ஐயங்காரிடத்தில் மிகச் சிறந்த வொரு ஸ்வபாவமுண்டு; அதை நாம் அபலாபம் செய்யாமல் அக மகிழ்ச்சியுடன் வெளியிடக் கடமைப் பட்டிருக்கிறோம். (அதாவது) ஏதோ காரண வசாத் தாம் அபத்தமாகவும் அஸம்பத்தமாகவும் பல எழுதி விட்டாலும் உடனே நம்முடைய மறுப்புரைகளினுல் தெளிவு பெற்று எதிரம்பு கோக்காமலிருந்திடுவர். மற்றவர்களைப்போல் எதையாவது எழுதி * நிந்தாபிச்சேஷ பூரணம் செய்யும் வழியைக் கனவிலு மறியார். பிறர் யாரேனும் பதிலெழுதப் புறப்பட்டாலும் * அப்ரமேயம் ஹி தத்தேஜ: * என்று உபதேசித்த மாரீசனைப் போலே பலவுமுபதேசித்து * ஸ்வஹஸ்தே நோத்க்ஷிப்தை ரித்யாதி யதிராஜஸப்ததி ஸூக்தியையும் ஸ்மரிப்பித்து விலக்குவர். இஃதொன்று இந்த மஹாண்டத்தில் நாம் கண்ட மிகச் சிறந்த நலம். இத் தன் சரிதையில் கீழே பக்கம் 66 முதல் ஐந்து பக்கங்களை ரஸிகர்கள் மீண்டும் வாசித்துப் பார்க்க வேணும். அதில் பக்கம் 68ல் இந்த D.R. ஐயங்காருடைய அந்தரங்க ஸாக்ஷிகமான பத்ரிகையும் வெளியிடப்பட்டுள்ளது. அதில் அடியேனைப் பற்றிப் பல விஷயங்கள் எழுதிவிட்டு முடிவில் எழுதுகிறூர்—"இவ்வளவு சக்தி வாய்ந்த ஒரு மஹா புருஷர் விஷயத்தில் அசூயையையும் பொறூமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர் பார்க்கலாம்; ஆனுல் எவ்வித வாதப்போரிலும் ஸ்வாமி பின்வாங்கவே மாட்டார்; இவருடைய வாதமே கடைசியாக ஓங்கி நிற்கும். இந்த ரீதியில் அனேகம் உள்ளன. விஷயங்களைத் தேங்கா யுடைப்பதுபோல் வெட்டொன்று துண்டிரண்டென்று உடைத்துக் காட்டுவர். இவை ஒரு பக்கம் கிடக்கட்டும்; ஸ்ரீவைஷ்ணவத்திற்காக இவர் செய்திருக்கும் செய்து கொண்டிருக்கும் பணி கணக்கிட முடியாதது." என்று. இங்ஙனே ஸ்ரீமத் ஸர். எஸ். வரதா சாரியர்

ஸ்வாமி போல்வாரான ஏழெட்டு மஹான்களும் எழுதியிருந்தாலும், விவாத நூல்களுக்கு இலக்கியமாகாத அவர்கள் எழுதியிருப்பதில் அதிசயமில்லை. விவாத விஷயங்களில் தலையிட்டு, ஒவ்வொன்றிலும் நாம் தவருக எழுதி விட்டோமென்று அநுதபிக்கும்படியான ஸந்தர்ப்பத்தை அடியேனது நூல்களினல் அடைந்து நிற்குமவர் ஆத்ம வஞ்சனையில்லாமல் எழுதினதன்ரே அதிசயம். D. T. தாதாசார்யரும் பிறருடைய போதனைக் கிணங்கி மாச்சரியம் கொள்வதற்கு முன்னே உத்யாந பத்ரிகையில் நம்முடைய நூல்களைப்பற்றி யெழுதியுள்ள ப்ரசஸ்திகள் அச்சேறி விட்டபடியால் மாறமாட்டாமலுள்ளன.

452. விதவாவபந வித்வம்ஸநம் : திருக்குடந்தையில் வாழ்ந்த ஸ்ரீமத் அக்நி ஹோத்ரம் கோபால தேசிகாசார்யரென்கிற ஸஹ்ருதய ஸூஹ்ருந்மணி நாற்பது வருஷங்களுக்கு முன் "விதவாச் சவபநஞ்ச" என்ருெரு ஸம்ஸ்க்ருத வியாஸமெழுதி மஞ்ஜு பாஷிணியில் வெளியிடுவிக்க வேணுமென்று அடியேனுக் கனுப்பினர். அதை அப்படியே அதில் பிரசுரஞ்செய்து, அதற்கு மறுப்பெழுதி அதையும் அதிலேயே (நாலைந்து இதழ்களில்) க்ரமசः பிரசுரித்தேன். உபய ஸம்பிரதாயத்தையும் பூஷித்தே அடியேன் எழுதி யிருந்தபடியால் அவர் மிகவுகந்துபதில் திருமுகமருளினர். விதவாவபந வித்வம்ஸநமென்கிற இந்நூலும் அதே ப்ரணளியில்தான் தமிழில் தோன்றியுள்ளது.

இந்த நூல் எதற்காகத் தோன்றியது? இதில் எவ்விதமான முடிவு உள்ளது? என்பதை அடியோடு பாராமலே நூலின் பெயரை மாத்திரமே கண்டோ கேட்டோ சில பாமரர்கள் பழிப்பதுண்டு. விஷயம் தெரிவிக்கிரே மிங்கு. மாயவரம் நடேச சாஸ்திரி களென்பவர் வபனம் செய்துகொள்ளாத விதவைகள் வாழும் ஸம்பிரதாயத்தை இழித்துரைத்து வேதாந்ததீபிகையில் ஒரு வியாஸம் வெளியிட்டிருந்தார். பிரமாணங்களைப்பராமர்சியாமல்வீணை ஆக்ரஹங்கொண்டு அநாதி ஸம்பிரதாயத்தை நிந்திப்பது முறையன்று என்றுமுகவுரையில் விளக்கி உபயஸம்பிரதாயங்களுக்கு முரிய பிரமாணங்களை விவரித்தே இந்த நூல் இயற்றப்பட்டது. இதில் முடிவுகட்டிய விஷயம் என்ன என்பதையும் எடுத்துக் காட்டுவோம். உபஸம்ஹாரத்தில் (பக்கம் 33-ல்) "விதவைகளுக்கு முண்டனம் செய்கையும் செய்யாமையுமாகிய இவ்விரு வகை யனுஷ்டானங்களும் சிஷ்ட சிரேஷ்டர்களின் பரம்பரைகளிலே நெடுநாளாகவே நிகழ்ந்துவரக் காணநின்ரேம். இவ்வநுஷ்டானங்களைப் பரஸ்பரம் நிர்மூலமென்று தூஷிக்க வொண்ணதபடி சாஸ்திரங்களிலே விதி நிஷேதங்களும் விளங்கக் காண நின்ரேம். இவை...அதிகாரி பேதத்தையிட்டு உபபந்நங்களாகக் கூடியவை. ஆனபின்பு அவரவர்கள் பரஸ்பரம் 'இகழ்ச்சியின்றியே யிருக்க ப்ராப்தம்." என்று மதுரமாக முடிவுகட்டியிருக்கிறது. நமஸ்காரதத்வம் முதலிய மற்றஎந்நூலை யெடுத்துக் கொண்டாலும் இவ்வகையான நிகமனமே நாம் செய்திருப்பது காணப்படும். முதன் முதலாகப் பிறர் தூஷணைகளெழுதுவதும் அதன்மேல் நாம் ஆராய்ச்சி செய்து ஒழுங்குபடுத்துவதுமாக இப்படிப்பட்ட முறைதான் அன்று தொட்டு இன்றுகாறும் நிகழ்ந்து வருகின்றது. எமது உடலை ஒருவர் தூஷித்தால் அதை நாம் சிறிதும் பொருள்படுத்தமாட்டோம். நாம் உயிராகக் கொண்டிருக்கிற ஸம்பிரதாயத்தைச் சிலர் தூஷித்தாலும், ஸம்பிரதாய விருத்தமாக எவரேனும் ஏதேனும் எழுதினலும் வாளாவிருக்ககில்லோம். உண்மையில் நமக்குள்ள ஸதாசார்ய பக்தியையும் யதார்த்த க்ராஹித்வத்தையும் ப்ராமாணிகார்த்த விசேஷங்களில் அசஞ்சலமான ப்ரதிபத்தியையும் கண்டு நல்லார் உகக்கின்றனர். இந்த விதவாவபன நூல் தோன்றி இன்றைக்கு 23-வருடங்கள் ஆனலும் புத்தகம் துர்ப்பிக்ஷமில்லாமல் கிடைக்கிறது. அதில் 1. 2. 3. என்று வரிசையாக லக்க

மிட்டு 50 விஷயங்களெழுதப்பட்டுள்ளன. இதன்மேல் இன்றுவரை ஒருவராவது ஒரு பதிலாவது எழுதினதில்லை. உபயஸம்பிரதாயத்திற்குமுரிய சாஸ்திரங்கள் இருக்கின்றனவென்றும், இருவகுப்பிலும் அநாதியாக வரு மனுட்டானங்களைப் பரஸ்பரம் இகழ்ந்துகொண்டு அழிந்துபோக வேண்டாவென்றும் நாம் நிகமனம் செய்திருக்கையாலே பிராமாணிகர்கள் இதில் உகப்புக் கொள்ள இடமுளதேயன்றி வெறுப்புக்கொள்ள ஈஷத்துமிட மில்லாமை பற்றியே இந்நூலையும் இதுபோன்ற பல நூல்களையும் சிறந்த ஞானிகள் மத்யஸ்த புத்தியுடன் கொண்டாடியிருக்கிறார்கள்.

453. வித்வத்விநோதிநி: கீழே பக்கம் 281-ல் இதைப்பற்றி விவரித்திருப்பது காண்க.

454. வ்யாமோஹப்ரசமௌஷதம்:
455. வாத்ஸல்யார்த்தவிவரணம்:
456. வாத்ஸல்யார்த்தவிஜயத்வஜம்:
இம்மூன்று நூல்களும், இடைக்காலத்தில் வேறுபட்டிருந்த ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணியான ஸ்ரீமத். ஏ. வி. கோபாலாசார்யஸ்வாமியின் வியாஸங்களுக்கு மறுப்பாக எழுதப்பட்டு வெளிவந்தவை. பரமப்ராமாணிகரான அவருடைய க்ஷாமணபத்ரிகையோடு விச்ராந்தியாகி, புராதந ப்ரேமாபிவிருத்தியுமாயிற்று. ஜ்ஞானம் சீலம் வயது முதலிய எல்லாவற்றாலும் மூதுவராக விளங்கிக் கொண்டிருக்கின்ற அந்த மஹாஸ்வாமி அடியேனுக்கு க்ஷாமணபத்ரிகை யெழுதிக்கொண்டாரென்று நீசனேன்கையாலெழுதுவது ஸ்வரூபமன்று. இதற்தகாக அடியேன் க்ஷமை வேண்டுகிறேன். கீழே பக்கம் 224 முதல் 230 முடியுமளவும் அடியேனெழுதியுள்ளவற்றை மீண்டுமொருமுறை வாசிப்பது.

457. விஷ்ணுகோவில்களும்விசேஷதர்மபரிபாலனமும்: இந்நூல் நேராக வாசிக்கவுரியது.

458. ஸதாசார்யஸூக்திரக்ஷா: கீழே ஸம்ஸ்க்ருத நூற்பகுதியில் (பக்கம் 306-ல்) நெ. 34 காண்க. த்வயார்த்த விவரணத்தில் ஆச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்தியைப் பற்றின ப்ரபலவிவாதத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. கோழியாலம் ஸ்வாமியினுடையவும் தச்சிஷ்யர்களினுடையவும் வாதங்களுக்கு மிகவிரிவான விடையளிப்பு.

459. ஸத்புருஷஸமாராதனம்: அஹோபில மடத்துச் சார்பில் D. T. தாதாசார்யரால் வெளியிடப்பட்ட 'ஸஜ்ஜநாராதநம்' என்னும் சுவடிக்கு மிகவும் விபுலமான மறுப்பு இது. நமது சாஸ்த்ரார்த்த சந்த்ரிகையில் வெளிவந்த இந்நூலைக் கண்ட பின்பே மடத்து போக்தாக்கள் விநீதர்களாயினர் என்பது இங்கு அறிவிக்கத்தக்கது. இந்நூலில் அபூர்வ விஷயங்கள் அனந்தங்கள்.

460. ஸத்ஸம்ப்ரதாயபரித்ராணம்: கீழ் நெ. 420 தேசிகப்ரபந்தவுரை யாராய்ச்சியின் மீது திருப்பாப்புலியூர் சடகோபாசாரியரெழுதிய பதிலுக்குப் பரிபூர்ணமான மறுப்பு. இதில் பன்னிரண்டு விஷயங்கள் அலசியலசிப் பரிஷ்கரிக்கப்பட்டுள்ளன.

461. ஸத்ஸம்ப்ரதாயபரிசுத்தி: தேசிகரஹஸ்யங்களுள் முதலது ஸம்ப்ரதாய பரிசுத்தியென்பது. அய்யாக்ருஷ்ண தாதாசார்யர் இதற்கு வியாக்கியானமெழுதுவதாக வொரு வியாஜங்கொண்டு ஸதாசார்ய ஸதர்த்த தூஷணங்களை நிரப்பி தத்தகபித்தகவென்றெழுதிவந்ததை வேதாந்த தீபிகாபத்ரிகை வெளியிட்டுவந்தது. அதற்கு ஸ்ரீராமாநுஜஸித்தாந்த வைஜயந்தீ பத்ரிகை மூலமாய் உடனுக்குடனே வெளியிட்டு வந்த கண்டனம் தனிப்புத்தகமாக்கப்பட்டது. அதுதானிது. தேசிகனுடைய அந்தரங்கத்தை உள்ளபடி விளக்குவது.

462. ஸத்ஸம்ப்ரதாயபாஸ்கரன்: கீழே ஸம்ஸ்க்ருத நூற்பகுதியில் நெ. 132. விவரணம் காண்க. நவீநபாத்ரத் தளியலைப்பற்றித் தெரிவிக்க வேண்டிய உண்மைகளெல்லாம் இதில் மிகத்தெளிவாகவும் விரிவாகவுமுள்ளன. ஒவ்வொரு விஷயத்திலும் 'வாய்திறக்கவுண்டோ வழி' என்னும்படியான நிரூபணமாதலால், ஸம்ப்ரதாயப்ரதீபமென்கிற சுவடியை யெழுதிய D. T. தாதாசாரியரும் மதுராந்தகம் வீரராகவாசாரியரும் *தாளா லுலகமளந்த வசவேகொல்* என்ற பாசுரத்தின் இரண்டாமடியின்படியே ஸேவை ஸாதிக்கிறார்கள்.

463. ஸதுபதேசசிக்ஷா: அஹோபிலமடம் விஷயமாய் அவசியமான பல ஆராய்ச்சிகள்.

464. ஸத்யநாராயணஸ்த்ரம்: } இவ்விரண்டு நூல்களும் அஸ்மத்குலகூட
465. ஸத்யநாராயணஸ்த்ரஸத்யப்ரதாபம்: } ஸ்தவைபவ விஷயமான விவாதத்தில் ப்ரதிபக்ஷிதுர்வாத ஸமூலோந்மூலனமாகத் தோன்றியவை.

466. ஸத்யவாதிஸமாச்வாஸம்: "அஹோபில மடத்தில் ஈடு முப்பத்தாறாயிரப்படி ப்ரவசநம் வெகு அழகாக நடந்துவருகிறது" என்று அர்த்தமில்லாத வார்த்தை அடிக்கடி ந்ருஸிம்ஹப்ரியாவில் வெளிவந்து கொண்டிருக்கையில் "மடத்தின் தற்கால நிலைமைக்கும் ஈட்டுக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை; சுஷ்கமான ஆடம்பரோக்திகளால் பயனொன்றுமில்லை" என்று "ஈடும் மடமும்" என்ற வியாஸத்தினால் உள்ளவாறு வெளியிட நேர்ந்தது; அதற்குமேல் மடவித்வானாகிய புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசாரியர் 'ஈட்டு விமர்சம்' என்றொரு வியாஸம் வெளியிட்டார். அதன்மேல் 'ஈட்டு விமர்சபராமர்சம்' என்னும் வியாஸம் வெளியிடலாயிற்று. அதன்மேல் ஆசைதீர வசவுகளைப் பொழிந்து தீர்த்துவிட வேண்டியதென்று தீக்ஷைகொண்ட மடபோக்தாக்கள் 'பராமர்சஸாரப்ரகாசனம்' என்றொரு காகிதத்தை அச்சுக்கூடத்தின் பெயர்கூட இல்லாமலும், இன்னார் வெளியிட்டது என்பதுமில்லாமலும் (ஓர் ஸத்யவாதி) என்று கையொப்பமிட்டுப் பிரசுரஞ் செய்தார்கள்; அதற்கு நாம் நம்முடைய அந்தேவாஸியொருவர் பெயரால் வெளியிட்ட பதில் இது.

467. ஸ்வாபதேசாந்யாபதேசதத்வம்: 'ஸ்வாபதேசம் அந்யாபதேசம்' என்கிற சப்த ப்ரயோகமே அஸாது என்றெழுதிய திருப்பாப்புலியூர் சடகோபாசாரியர்க்கு விரிவான நிரூபணங்களினால் தெளிவு பிறப்பித்த நூலிது.

468. ஸௌஜந்யஸௌரபம்: இதுவும் மடத்துவிவாத மறுப்பு நூல்களிலொன்று.

469. ஸ்தோத்ரவ்யாக்க்யாநசோதநம்: ஸ்தோத்ரரத்னத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்த வியாக்கியானத்தில் ஆறு தூஷணங்களை யெழுதிய சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் ஸம்ஸ்க்ருதவ்யுத்பத்திவைதேசிகரென்பதை விளக்கிக்காட்டும் நூலிது. இது ஸாரஸ்வதஸாரஜ்ஞர்களுக்குப் பரமரஸ்யமானதென்று வித்வான்களுகந்தது. இதற்கு அவருடைய மன்னிப்புக் கடிதமே பதில்.

470. ஸ்வக்ரந்த ஸம்சோதநம்: அடியேன் இயற்றியவையும், பரிசோதித்துப் பதிப்பித்தவையுமான நூல்களில் பல காரணங்களினால் நேர்ந்த பிழைகளைப் புத்திக்கெட்டின வரையில் திருத்திக் காட்டும் நூலிது. அச்சிடும் நூல்களில், பிழைகள் விழுவதற்குப் பல காரணங்களுண்டு; நம்முடைய அஜ்ஞானம் அநவதானம் என்னுமிவை முக்கியமான காரணங்கள். இவை தவிர அச்சுக்கூடத்தில் சில காரண விசேஷங்களினால் பிழைகள் பரிஹரிக்கப்படாமல் நின்றுவிடுவதுண்டு. நாம் நன்றாகத் திருத்தியனுப்பியிருந்தாலுங்கூட அச்சுக் கோப்பவர்களால் எப்படியோ விபர்யயம் நேர்ந்துவிடுகிறது. அச்சுக்கூடங்களில் நியமிக்கப்பட்டுள்ள பரிசோதகர்கள் தாங்கள் தலையிடத்தகாத திருத்தங்களில் தலையிட்டு விருத்தமாகத்திருத்திவிடுவதுண்டு. அடியேனுடைய பதிப்புகள் பெரும்பாலும் சென்னை, ஸ்ரீரங்கம், கும்பகோணம், தேவகோட்டை, புதுக்

கோட்டை, ஷோலாபூர், பாம்பே என்றிப்படிப்பட்ட தூரதேசங்களிலேயே நடப்பன; ஸ்வஸ்தானத்திலேயே நடக்கிறபதிப்பு மிகவும் ஸ்வல்பம். நாம் அவ்வப்போதுகளில் வெகுதூரதேச யாத்திரைகள் செய்ய நேர்ந்துவிடுகிறது. அப்போது சில மஹான்களை விச்வஸிப்பதனால் அவர்களாலும் பல பிழைகள் நேர்ந்துவிடுவதுண்டு. நேர்ந்த பிழைகள் நமக்கு உடனே தெரிவதுமில்லை. மொத்தத்தில் லக்ஷக்கணக்கான பக்கங்கள் நம்மால் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றனவாதலால் அவற்றையெல்லாம் நாம் மறுபடியும் வாசித்துப்பார்க்க ப்ரஸக்தி நேருகிறதில்லை. சிலசில ஸமயங்களில் சில சில புத்தகங்களை [சொந்தப் பதிப்புகளை] எடுத்துப் பார்க்கும்போது பிழைகள் கண்டு வருந்தவேண்டியதாகிறது. ஆங்காங்குள்ள ஆப்தர்கள் தெரிவிப்பது கொண்டும் சில பிழைகளையறிய ப்ராப்தமாகிறது. சில கேண்மின். சரணாகதி கத்யத்தில் "தாஸபூதம், சரணாகதோஸ்மி தவாஸ்மி தாஸ இதி வக்தாரம் மாம் தாரய" என்பது ஒரு ஸ்ரீஸூக்தி. இதை "தாஸபூத: சரணாகதோஸ்மி...." என்று சிலர் சொல்லி வருவதுண்டு. இது தவறான பாடம். அடியோடு சேராது. இப்பிழையை அடியேன் முப்பது நாற்பது வருஷங்களுக்கு முன்னமே திருத்தி வெளியிட்டிருக்கிறேன். அப்படியிருந்தும் ஸ்ரீமத்வேதாந்த தேசிக க்ரந்தமாலையில் சேர்ந்த கத்யபாஷ்யத்தில் 'தாஸபூத:' என்கிற தவறான பாடம் மூலத்திலும் பாஷ்யத்திலும் விழுந்திருப்பதை நெடுநாள் கழித்துப் பார்க்க நேர்ந்தது. இப்பிழை எவ்வாறு நமது பதிப்பில் விழுந்திட்டதென்று வியந்தேன், வியாகுலப்பட்டேன். அச்சுக் கூடத்திலேயே சில பண்டிதர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்களல்லவா? அவர்கள் தாம் கடைசியாகத் திருத்தங்கள் கவனிப்பவர்கள். அவர்களது சேஷ்டைகளினால் இப்படி ஸம்பவிக்கிறதென்று நெடுநாள் கழித்துத் தெரிந்து கொள்ளலாகிறது.

இந்தத் தன் சரிதையிலும் சில பல பிழைகள் விழுந்து விட்டதாகப் பிறகு தெரிந்து கொள்ளலாயிற்று. ஒன்றிரண்டு இடங்கள் மட்டும் இங்குக் காட்டுகிறேன். பக்கம் 352-ல் நூற்பெயரை நிர்தேசிக்குமிடத்தில், 230 அறுபத்து மூன்று உபந்யாஸமாலை என்றேயுள்ளது; ஆனால் பக்கத்தின் தலை மேலேயிடும் மகுடத்தில் "அறுபத்திமூன்று..." என்று விழுந்திருக்கிறது. சிலர்க்கு இதில் பிழையிருப்பதாகவே தோன்றாமற் போகும். சிலர் அச்சுப்பிழையென்று போவார்கள். சிலர், நாமே அறுபத்தி என்று எழுதிக்கொடுத்ததாகக் கொண்டு ஏசப்புகப்படுவார்கள். ஏச நினைப்பவர்களுக்கு இப்படிப்பட்ட பிழைகள்தானே கிடைக்கும் இதிலேயே பக்கம் 376-ல் 382 to 385 லக்கமுள்ள நூல்களைப்பற்றி விவரணமெழுதுகையில் "இந்நான்குநூல்களும் ஸ்ரீராமாயணயுத்த காண்டத்திலுள்ள..." இத்யாதிவாக்யம் அஸங்கதமாக விழுந்திருக்கிறது. இதில் ஒரு வரி விட்டுப்போயிற்று. இப்படியாகப் பிறகு நமக்குத் தெரியவரும் பிழைகள் பலபல. ஸமீபத்தில் (15-8-57-ல்) வெளிவந்த அம்ருதலஹரியில் "தீதில் நன்னெறி" என்று மகுடம் புனைந்த ஆரம்ப வியாஸத்தில் "மஹாஜநோ யேந கதஸ் ஸ பந்தா:" என்கிற வசனத்தையுதாஹரித்துப் பொருளெழுதுகையில் "பெரியோர்கள் செல்லும் வழி" என்று நாமெழுதியிருக்க 'சொல்லும் வழி' யென்று விழுந்திட்டது. அதிலேயே ஜிதந்தாஸ்தோத்ரத்திற்கு உரையெழுதி அச்சிடுவித்திருக்கிறேன்; அதில் முன்னுரையின் முடிவில் 'ஸ்தோத்ரத்தை நாடோறும் திருவாராதநஸமாப்தியில் அநுஸந்திக்கப்பட்டு வருவது" என்று தவறாக விழுந்துவிட்டது. 'அநுஸந்தித்து வருவது' என்றிருக்கவேணும்; அல்லது 'ஸ்தோத்ரத்தை' என்பது (ஸ்தோத்ரம்) என்றிருக்க வேணும்.

அடியேன் ஆழ்வார்கள் வைபவத்தை ஸம்ஸ்க்ருத பாஷையிலெழுதி அச்சிட்டபோது தொண்டரடிப் பொடியாழ்வார் வைபவத்தின் உபக்ரமத்தில் அவ்வாழ்வார் விஷயமாகச் செய்த வொரு ச்லோகத்தில் "தநுர்மாஸி தநிஷ்டோடுநி" என்றெழுதி விட்டேன். இவ்வாழ்வார் கேட்டை நக்ஷத்ரத்திலவதரித்தவர்; கேட்டைக்கு ஜ்யேஷ்டா என்று பெயரே தவிர தநிஷ்டா என்று கிடையாது. அது அவிட்டத்திற்குப் பெயர். இது அடியேனுக்கு நன்றாகத் தெரிந்திருந்தும் ஏதோ

ப்ரமாதவசத்தாலே 'தநிஷ்டோடுநி' என்று எழுத நேர்ந்து விட்டது. பிறகு இதை ஆப்தர்கள் தெரிவிக்கத் திருத்தம் வெளியிடப்பட்டேயிருக்கிறது. இந்த ப்ரஸங்கத்தில மிகுந்த வருத்தத்துடன் ஒன்று தெரிவிக்க வேண்டியதாகிறது. ஆசார்யஹ்ருதயத்தில் "இவற்றுக்கு மூலம் இருவல்லருள் நல்வினைகள்" என்பது எட்டாவது சூர்ணை இதன் பொருளென்ன வென்றால், கீழ்ச் சூர்ணையில் சொல்லப் பட்ட ஜன்மத்திற்கு மூலம் ப்ரபலங்களான புண்ய பாபங்கள்; (கீழ்ச் சூர்ணையில் சொல்லப்பட்ட) கடாக்ஷத்திற்கு மூலம் ஸ்வாபாவிகக்ருபையாகிற ஸௌக்ருதம். என்பது பொருள். இப்பொருளுக்கு வாசகமாக மூலத்திலுள்ள ஸ்ரீஸூக்தியோ வென்னில், "இருவல்லருள் நல்வினைகள்" என்பது. *சார்ந்த இருவல்வினைகளும் சரித்து* என்கிற பாசுரத்தையும், *தொல்லருள் நல்வினையால்* என்கிற பாசுரத்தை யுங்கொண்டு இந்த ஸ்ரீஸூக்தி வெகு அற்புதமாக அருளிச் செய்யப்பட்டது. ஆசார்யஹ்ருதயகாரருடைய ஸாமார்த்தியங்களில் விலக்ஷண ஸாமர்த்தியமிது; விசேஷணம் பேதப்படாமல் விசேஷ்யங்கள் மட்டும் பேதப்பட்டிருக்கும் ப்ரமாணங் களைத் தாம் சேர்க்கும் போது, விசேஷணபதத்தை ஒரு தடவை மட்டும் சொல்லி விடுவர். (இதற்கு உதாஹரணம்.) *ஸர்வலோக சரண்யாய* என்கிற விபீஷண வசனத்தையும், * (அபயம்) ஸர்வபூதேப்ய:* என்ற பெருமாள் வசனத்தையும் ஒரே வார்த்தையாக்கத் திருவுள்ளம்பற்றி "ஸர்வலோக பூதேப்ய:" என்றருளிச் செய் திருக்கிறார். மேலே காட்டின இரண்டுவசனங்களிலும் விசேஷ்யபதங்கள் பேதப் பட்டிருந்தாலும் (ஸர்வ என்கிற) விசேஷணபதம் ஒன்றே யாதலால் அதை முன்னே ஒருமுறை ப்ரயோகித்து, வெவ்வேறான விசேஷ்யங்களை யொன்று சேர்த்து (ஸர்வ-லோகபூதேப்ய:) என்றவிது வேறொருவருடைய மதிக்கு நிலமன்று.

விசேஷணங்கள் வேறுபட்டு விசேஷ்யம் மட்டும் வேறுபடாமலிருக்கும் ப்ரமாணவசனங்களைத்தாம் சேர்க்கும்போது, வெவ்வேறான விசேஷணபதங்களை அப்படியே காட்டி, வேறுபடாத விசேஷ்யத்தை மட்டும் ஒரு முறை சொல்லுவர். இதற்கு உதாஹரணம் மேலே காட்டின (இருவல்லருள் நல்வினைகள்) என்பது. *சார்ந்த இருவல்வினை* என்றவிடத்தும் *தொல்லருள் நல்வினை* என்ற விடத்தும் வினையென்பதே விசேஷ்யமாதலால் அதை இருமுறை பிரயோகித்திலர். ஒரு பாசுரத்தில் (இருவல்) என்பது விசேஷணம்; மற்றொரு பாசுரத்தில் (அருள்நல்) என்பது விசேஷணம். இந்த வெவ்வேறுபட்ட விசேஷணங்களை ஒன்று சேர்த்து (இருவல், அருள்நல்) என்றாக்கி விசேஷ்யமான வினையைக் கூட்டி "இருவல்லருள் நல்வினைகள்" என்று யோஜித்திருப்பதானது அஸாதாரண சக்தி விசேஷ நிபந் தநம். இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் விரிவாக விவரணம் காட்டியருளாமல் "இருவல்லருள் நல்வினைகள் என்றது இருவல்வினையும் அருள்நல் வினையும் என்றபடி" என்று இவ்வளவே காட்டியருளினார். நெடுநாளைக்கு முன்னே தெலுங்குலிபியிலும் தமிழ்லிபியிலும் ஆசார்ய ஹ்ருதய வியாக்கியானத்தைப் பதிப் பித்தவர்கள் இங்கு "இருள்வல்வினையும் அருள் நல்வினையுமென்றபடி" என்று இல்லாததொருளகரத்தைச் சேர்த்துத் தவறாக அச்சிட்டுவிட்டார்கள். மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தை அடியேனும் தெலுங்கு தமிழ்லிபிகளில் பதிப் பித்திருக்கிறேனே; அவற்றிலும் ஸரி; ஸ்வகீய ஸாரநூல்களிலும் ஸரி; தவறில் லாத சுத்த பாடத்தையே பதிப்பித்திருக்கிறேன். தெ. 233, அறுபத்துநான்கு நல் வார்த்தைகள் என்னுமொரு நூலில் (60-ஆம் வார்த்தையில் பழைய பதிப்புகளின் அசுத்தியைக் காட்டி உண்மையான பாடத்தின் தத்துவத்தைக் காட்டுமிடத்தில் 'இருவல்வினையும்' என்னுமிடத்தில் 'இருநல்வினையும்' என்று அச்சு விழுந்திருக் கிறதாம். [உண்மையாகவே இந்த அச்சுத்தவறு உள்ளதுதான்.] இது அச்சுப் பிழையேயொழிய வேறன்று என்பதை அல்பஜ்ஞர்களும் எளிதாக இசைந்து தீரு வர்கள். விசேஷஜ்ஞரான வொரு ஸஹ்ருதய ஸௌஹ்ருந்மணியானவர் இந்த இடத்தையெடுத்துக்கொண்டு ப்ரளயம் செய்கிறார். அப்பெரியார் அடியேனுக்கு எழுதுகிறார்—"தேவரீர் வேறுபல விடங்களில் (இருவல்வினையும் அருள்நல்வினை

யும்) என்று சுத்தமான பாடத்தைப் பதிப்பித்திருப்பது வாஸ்தவமே; ஆனாலும் அப்பதிப்புக்களுக்கெல்லாம் பிற்பட்டதான ஸமீபநூலில் (இருநல்வினையும்) என்று காண்பதால் இதுதான் ஸித்தாந்தமான பாடமென்று கொள்ள என்ன தடை?" என்கிறார். அப்பெரியார்க்கு அடியேன் என்ன பதிலெழுதினேனென்றால், பெரிய பகவத் விஷயமென்று குலாவப்படுகிற தெலுங்குலிபி ப்ராசீன பகவத்விஷய ஸ்ரீகோசமானது பெரும்பாலும் சுத்தமென்று மதிக்கப்படுவது. இதில்*வைகுந்தா மணி வண்ணன் வியாக்கியான முடிவில் திருவாய்மொழி நூற்றந்தாதி பாசுரம் வியாக்கியானத்தோடு பதிப்பிக்குமிடத்து அப்பாசுரத்தின் ஈற்றடியானது "வன்மையடைந்தான் கேசவன்" என்று முதலில் மூலத்தில் பதிப்பிக்கப்பட்டது; பிறகு உரையில் ப்ரதீகதாரணத்தில் 'வண்மையடைந்தான்' என்று பதிப்பிக்கலாயிற்று. பிற்பட்டதற்கே ப்ராபல்யமாதலால் 'வன்மையென்கிற பாடம் தவறு; வண்மையென்பதே சுத்த பாடம்' என்று கொள்ளும் மேதாவிகள் இங்குமப்படியே கொள்ளலாமென்று தெரிவித்தேன். வஸ்துஸ்திதியில் பிழைதிருத்தம் மிக அவசியமேயென்பது மறுக்க முடியாதது; கேவலம் ரந்த்ராந்வேஷிகளான புரோபாகிகளுக்கு இட மறும்படி செய்துவைக்கவேண்டியது நமது கடமையாதலால் "ஸ்வக்ரந்தஸம்சோதநம்" என்னுமிந்த நூல் மிகவும் ஆவச்யகமென்றுகொண்டு சேகரிக்கப்பட்டு வருகிறது. இஃது ஒரு நாள் வரையிலே முடியுமதன்று.

## தன் சரிதை தலைக்கட்டுதல். (நிகமனம்.)

சீலமில்லாச் சிறியேனுடைய சரிதையை இவ்வளவு பெரியதாக்கின அபராதம் உண்மையில் மிகப் பெரியதே. இத்தனை பெரிதாக எழுத வேணுமென்று உபக்ரமத்தில் ஸங்கல்பித்திலேன். ஆயினும்*ஏவம் ஸமஜாயத* என்ற கணக்கிலே இவ்வளவாக வளர்ந்திட்டது. இதில் பலபல பெரியோர்களுடைய புகழுரைகள் மலிந்திருந்தாலும் வாதப்ரதிவாத முறையில் வாதிகளாகவோ ப்ரதிவாதிகளாகவோ நின்றவர்களைப்பற்றிக் குறைபாடாக எழுத நேர்ந்திருப்பதுமுண்டு; அது வ்ருத்த கீர்த்தனமே யொழிய எள்ளளவும் அஸதுக்தியன்றென்பதை உண்மையறிவாளிகளான தடஸ்தமஹநீயர்கள் நன்குணர்வார்கள். ஆனாலுங்கூட பாகவதாபசாரத்திற்கு நாம் வெருவியிருக்க வேண்டுவது ஸ்வரூபமாதலால்*பிழைப்பராகிலும் தம்மடியார் சொல் பொறுப்பது பெரியோர் கடனன்றே* என்னும் பெரியாழ்வார் பாசுரத்தையே அநுஸந்தித்து நிற்கின்றேன். வடமொழி நூற்பகுதியிலும் தென்மொழிநூற்பகுதியிலும் சேர்ந்து ஏறக்குறைய நூறுநூல்கள் பரபக்ஷப்ரதிக்ஷேபபரங்களாகத் தோன்றியவையுண்டு. இவை மறுப்பு நூல்களாயினும் அவரவர்கள் மிக அவசியமாகத் தெரிந்து கொள்ளவேண்டிய ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தங்களையே தெள்ளமுதாக விளக்குவனவாதலால் இவையும் ரஸிகவித்வான்களுக்கு மிகவும் ஆதரணீயங்களேயாகுமென்பதைப் பல மஹநீயர்கள் உலகுக்கு ப்ரஸித்தப்படுத்தியுள்ளார்கள். வைகுண்ட வாஸிகளான (மாம்பலம்) ஸ்ரீ உவே. S. வாஸுதேவாசார்ய ஸ்வாமியும், மயிலாப்பூர் S கோபாலஸ்வாமி ஐயங்கார் (அட்வகேட்) அவர்களும் அன்னவர்களில் பரிகணிதர்கள். இப்போது வாழ்பவர்களில் டாக்டர், ஸர் K. S. க்ருஷ்ணன் ஸ்வாமி (டில்லி), S. R. S. ராகவன் ஸ்வாமி (டில்லி) ராவ் பஹதூர். மநீஷிமாந்ய. R. நரஸிம்ம அய்யங்கார் ஸ்வாமி (மதுரை), ராவ்ஸாஹிப், S. ராகவையங்கார் ஸ்வாமி (மாம்பலம்), C. R. ராமஸ்வாமி ஐயங்கார் B.A.B.L., (கோயமுத்தூர்) இத்யாதி மஹநீயர்கள் பரிகணநீயர்களாக விளங்கி வருகின்றார்கள். *மதுரேண ஸமாபயேத்* ஆகையாலே மிக மதுரமானவொரு விஷயத்தை மிகச் சிறு நூலாக்கி முடிவில் உபகரிக்க முன்வருகின்றேன். அதுதான் "மூன்று தத்தின் மூலஸ்தானம்" என்னும் பெயர் கொண்டு அடுத்துள்ளது. இத் தன்சரிதையில் பக்கம் 40-ல் ஸேவைஸாதித்தருளும் ஸ்ரீ உவே. விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமியென்று ப்ரஸித்தரான அஸ்மத்ஸுஹ்ருந்மணியின் நியமனத்தையே கொண்டு அவருடைய திருவுள்ள வுகப்புக்காக இன்றே எழுதப்பட்ட இந்நூல் ஸகல ரஸிகர்களுக்கும் பரம போக்யமாகுமென்று விஜ்ஞாபித்து நிற்கிறேன்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.        நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

# மூன்றுதத்தின் மூலஸ்தானம்.

---

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

I. நம்பிள்ளை திருவடிகளில் வடக்குத் திருவீதிப் பிள்ளை பகலெல்லாம் கேட்ட அர்த்தங்களை இரவிலே எடுபடுத்திவைப்பராம்; அந்த எடுகளை இரு திருக்குமாரர்களும் கூடி இரவெல்லாமாராய்ந்து அவற்றில்கண்ட அர்த்த விசேஷங்களைப்பெய்து தாங்கள் ரஹஸ்ய க்ரந்தங்களை இட்டருளினர்களாம். அஷ்டாதச ரஹஸ்ய கர்த்தாவான பிள்ளை லோகாசாரியரும், அருளிச்செயல் ரஹஸ்யம், ஆசார்ய ஹ்ருதயம் இத்யாதிகளுக்குக் கர்த்தாவான அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரர்களேயன்றோ. இவ்விருவரு மருளிச்செய்த ரஹஸ்ய க்ரந்தங்களில் விசேஷித்து ஸ்ரீவசநபூஷணத்திலும் ஆசார்ய ஹ்ருதயத்திலும் காண்கிற திவ்யார்த்த ரத்னங்களெல்லாம் பெரும்பாலும் ஈடு முப்பத்தாறுயிரப்படியில் ஆங்காங்கு சிதறியிருப்பவை. பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களிலிருந்து கொள்ளப்பட்ட ரத்னங்களுமுண்டு.

2. ஆசார்ய ஹ்ருதயத்தில் நான்காம் ப்ரகரணத்தில் திருவாய்மொழி யெட்டாம் பத்தின் ஸாரார்த்த ஸங்க்ரஹமாக இட்டருளின சூர்ணையில் "மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினைநோய் மறுவலிடாமல் சிறியேனென்றதின் பெருமையைக்காட்ட" என்றுள்ள திவ்ய ஸ்ரீஸூக்தியானது ஈடுமுப்பத்தாறுயிரப்படியையே மூலாதாரமாகக்கொண்டு அவதரித்தது. இதை நிரூபிக்கவே இந்தச் சிறுநூலெழுகின்றது. மேலெடுத்த ஸ்ரீஸூக்தியின் விவரணத்தில் அபிப்ராயபேதம் விளைந்திருப்பது விச்வப்ரஸித்தம். இவ்விஷயம் அம்ருதலஹரீ பத்ரிகையிலும், ஸ்ரீராமாநுஜனிலும் விரிவாக வெளிவந்திருப்பதால் அவற்றைக் கடாக்ஷித்தருளியிருக்கும் வித்வான்கள் இந்த விசாரத்தின் மருமத்தை நன்கறிவர்கள். அடியேனுடைய க்ரந்தங்களின் வரிசையில் 233 லக்கம் பெற்றுள்ள 'அறுபத்துநான்கு நல்வார்த்தைகள்' என்னும் நூலில் அறுபத்திரண்டாம் நல்வார்த்தையும் காணத்தக்கது.

3. ஆழ்வார்க்குத் திருவாய்மொழியில் மூன்று கண்டங்களுண்டாகி அவை எம்பெருமானால் பரிஹரிக்கப்பட்டனவாகவும், அப்படிப்பட்ட கண்டம் நான்காவது தடவையாக (எட்டாம்பத்தில்) உண்டாகப்புக, அதையும் எம்பெருமான் களைந்துவிட்டதாகவும் தெரிவிக்கப்

படுகிறது மேலே உதாஹரித்த "மூன்று தத்துக்குப் பிழைத்த" என்ற ஸ்ரீஸூக்தியினால். நான்காவதான அந்த கண்டம்மட்டும் மூலகாரரால் [ஆசார்ய ஹ்ருதயகாரரால்] ஸுஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டுவிட்டது. முந்தின மூன்று கண்டங்கள் எங்கே தோன்றினவென்று ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டிருக்கவில்லை. ஆனாலும், ஆசார்ய ஹ்ருதயகாரருடைய ஸரணியென்று ஒன்று பரம விலக்ஷணமாகவுண்டாகையாலே அந்த ஸரணியில் நன்கு காட்டப்பட்டேயிருக்கின்றது. ஆசார்ய ஹ்ருதயகாரர்க்கு அஸாதாரணமென்று சொன்ன அந்த ஸரணி இன்னதென்பதை முன்னம் வேறோரிடங்கொண்டு நிரூபித்துக்காட்டிவிட்டுப் பிறகு ப்ரக்ருத ஸ்தலத்தில் நிரூபணம் செய்வோம்.

4. இரண்டாம் ப்ரகரணத்தில் "ச்ரமணீ விதுர ரிஷிபத்நிகளைப் பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு" என்பது ஒரு ஸ்ரீஸூக்தி· 'சபரியையும் விதுரரையும் ரிஷிபத்நியையும் பரிசுத்தப்படுத்தின புண்டரீகாக்ஷனுடைய திவ்யகடாக்ஷமானது' என்பது இந்த வாக்கியத்தின் பொருள். இங்கு "பூதராக்கின புண்டரீகாக்ஷன் நெடுநோக்கு" என்கிற சொல்தொடர் மிக அற்புதமானது. மேலே யெடுத்த மூவரையும் எம்பெருமான் பரிசுத்தப்படுத்தி யருளினதை அந்தந்த ஸ்தலங்களிலுள்ள ப்ரமாணங்களைக் கொண்டே காட்டுவதாகவன்றோ இந்த சொல்தொடர் அவதரித்திருக்கின்றது. (1) * சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி ரகுநந்தந! * என்கிற சபரியின் வார்த்தையையே நினைப்பூட்டுகிறது 'பூதராக்கின' என்கிற சொல். (2) விதுரர்திருமாளிகையிலே அமுதுசெய்தருளின கண்ணபிரானை நோக்கித் துரியோதனன் 'பீஷ்மாசார்யரையும் த்ரோணாசார்யரையும் என்னையு முபேக்ஷித்து (விதுரனென்னும்) சூத்ரனுடைய அன்னத்தை எவ்வாறு புஜித்தாய்?' என்று க்ஷேபிக்கும்போது * பீஷ்மத்ரோணாவதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந, கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷலபோஜநம் * என்ற ச்லோகத்தில் 'புண்டரீகாக்ஷ!' என்று ஸம்போதித்தான்; வையவந்த இந்த விடத்திலே இப்படிப்பட்ட ஸம்போதநம் தகவேதகாது. ஆனாலும் தைவிகமாகவே அவன் வாயில் புண்டரீகாக்ஷ! என்கிற ஸம்போதனம் வெளிவந்தது; விதுரன் சூத்ரயோநியில் பிறந்தவனாயினும் உன்னுடைய தாமரைபோன்ற திருக்கண்பட்டதனால் சபரியைப்போலவே அவனும் பரிசுத்திபெற்றனன் என்பதாகக் காட்டுவதாம் இந்த புண்டரீகாக்ஷ! என்பது. ஆகவே இதுவும் திருக்கண்ணோக்கத்தாலே பரிசுத்தப் படுத்துகையென்கிற ப்ரக்ருத உத்தேச்ய விஷயத்தில் விதுரரைப் பரிசுத்தராக்கினதற்கு ப்ரமாண வசனம் காட்டினபடியாயிற்று. (3) இனி மூன்றாவதாகவுள்ள நெடுநோக்கு என்கிற சொல் *வேர்த்துப் பசித்து வயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போது, ஈதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும் பத்தவிலோசனத்து * என்கிற ஆண்டாள் பாசுரத்தை நினைப்பூட்டும் முகத்தாலே அந்த விஷயத்திற்கு ப்ரமாணம் காட்டினபடியாகிறது. ஆக இங்ஙனே ப்ரக்ருத விவக்ஷிதத்திற்கு ப்ரமாணம் காட்டுவதாகப் பிறர் தெரிந்துகொள்ள முடியாதபடிக்கு ப்ரமாணங்களைக் காட்டும் முறையிலே உக்திவிந்யாஸம் செய்வது ஆசார்ய ஹ்ருதயகாரர்க்கு அஸாதாரணமான ஸாமர்த்தியம். இப்படி அமைந்த க்ரந்தம் வேறகிடையாதென்பது புநருக்தம்.

5. இனி ப்ரக்ருதவிஷயத்திற்கு வருவோம். "மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோய்" என்ற இவ்விடத்தில் அருவினை, நோய் என்கிற சொற்கள் மூன்று தத்துக்கள் தோன்றியவிடங்களைக் காட்டுவன: எங்ஙனேயென்னில்; (1) அருவினை என்னுஞ் சொல்லானது *வளவேழுலகின் முதலாய வானோரிறையை அருவினையேன் * என்கிற பாசுரத்தை நினைப்பூட்டா நின்றுகொண்டு முதல்தத்துக்கு ஸ்தலம்—வளவேழுலகு பதிகமென்று காட்டிற்

றுகிறது. (2) நோய் என்கிற சொல்லானது * நீயும் நானு மிந்நேர்நிற்கில், மேல்மற்றோர் நோயும் சார்கொடான் * என்கிற * பொருமாநீள்படைப்பதிகப் பாசுரத்தை நினைப்பூட்டா நின்றுகொண்டு இரண்டாம் தத்துக்கு ஸ்தலம் அந்த பொருமாநீள்படைப்பதிகமென்று காட்டிற்றுகிறது. அவ்விடத்து ஈட்டில் நோயாவது இதுதானென்று ஸ்பஷ்டமாக வியாக்கியானிக்கப்பட்டுள்ளது. (3) நோய் என்கிற அந்தச் சொல்தானே * வைகுந்தாமணிவண்ணன் பதிகத்தில் (பா. 4) * உள்ள நோய்களெல்லாம் துறந்து * என்கிற பாசுரத்தை நினைப்பூட்டா நின்றுகொண்டு மூன்றுவது தத்துக்கு ஸ்தலமும் காட்டிற்றுகிறது. * நீயும் நானுமிந்நேர் நிற்கில் மேல்மற்றோர் நோயும் சார்கொடான்* என்றவிடத்து ஈட்டில் "அயோக்யதாநுஸந்தானம்பண்ணி அகலவிடுதல்" என்று [நோயின் சப்தார்த்தமாக] அருளிச்செய்யப்பட்டிருப்பது போலவே * வைகுந்தா மணிவண்ணனிலுள்ள *உள்ளநோய்களெல்லாமென்றவிடத்தும் "அயோக்யன் என்று அகன்றுவருமவை" என்றருளிச்செய்யப்பட்டிருப்பது முக்கியமாக—மிக முக்கியமாக நோக்கத்தக்கது. அயோக்யதாநுஸந்தானம்பண்ணி அகலுகை என்கிறவிஷயம் * வைகுந்தாமணிவண்ணன் பதிகத்தினீட்டிலே எத்தனைபர்யாயம் அருளிச்செய்யப்பட்டிருக்கிறதென்பதை ப்ராமாணிகர்கள் காணவேணும்.

6. இவ்விஷயம் *அந்தாமத்தன்பிலன்றே காட்டப்படவேண்டும்;* வைகுந்தாமணிவண்ணனில் காட்டிப் பயனென்? என்ன வேண்டா; அந்தாமத்தன்பிலே தலைகாட்டின அந்த நோய் பரிஹ்ருதமானது * வைகுந்தாமணிவண்ணனிலாகையாலே இங்குத்தான் காட்டப்படவேண்டும். மேல் எட்டாம்பத்தில் *இருத்தும் வியந்திலே *சிறியேனுடை* என்றவிடத்துத் தலைகாட்டினவிது அடுத்த பதிகமான *கண்கள் சிவந்தில்தானே ஆசாரியர்களால் காட்டப்பட்டது. அதுபோலவே இதுவும். இவ்வளவே வாசி; (அதாவது) * வளவேழுலகிலுண்டான கண்டம் வளவேழுலகிலேயே பரிஹரிக்கப்பட்டதாக ஆசாரியர்களால் தெரிவிக்கப்பட்டது. * பொருமாநீள்படையிலுண்டான கண்டம் பொருமாநீள்படையிலேயே பரிஹரிக்கப்பட்டதாகவும் தெரிவிக்கப்பட்டது. *அந்தாமத்தன்பிலுண்டான கண்டம் அடுத்த * வைகுந்தாபதிகத்தின் தொடக்கத்தில் பரிஹரிக்கப்பட்டதாக இதுவும் ஆசாரியர்களாலேயே தெரிவிக்கப்பட்டுள்ளது. இது மேலே மிக விசதமாகும்.

7. நோய் என்கிற ஒருசொல்லே இரண்டு ஸ்தலங்களைக் காட்டுமோவென்று சங்கிக்க வேண்டா. இதுவும் ஆசார்ய ஹ்ருதயத்தின் அஸாதாரண ஸரணியில் சேர்ந்தது. மூன்றும் ப்ரகரணத்தில் *வளர்த்தெடுப்பார் கையிருந்து* என்ற விடத்தில் * வளர்த்தெடுப்பார் * என்ற ஸ்ரீஸூக்தியானது * வளர்த்ததனல் பயன்பெற்றேன் * இன்னடிசிலொடு பாலமுதாட்டி யெடுத்த * இட்டமாக வளர்த்தெடுத்தேனுக்கு * என்ற மூவிடத்துப் பாசுரங்களையுட்கொண்டதாக வியாக்கியானிக்கப்பட்டிருப்பது காண்க. ஆக "அருவினை நோய்" என்ற மூல ஸ்ரீஸூக்தியினலேயே மூன்று தத்துக்குமுரிய இடங்கள் காட்டப்பட்டுவிட்டனவென்பது அசைக்கமுடியாத விஷயம்.

8. இனி, (மூன்று தத்துக்கு) என்பதற்கடுத்துள்ள (பிழைத்த) என்னுஞ் சொல்லும் * வைகுந்தாமணிவண்ணன் பதிகத்தைக் காட்டிற்றுகிறதென்று நிர்வஹிப்பதும் ஒரு வழியுண்டு. இதையும் இங்கு விளக்கமாக உபபாதிக்கப்போகிறேன். அதற்கு முன் ஒரு சிறிய சங்கையைப் பரிஹரிக்கவேண்டியதாகிறது. 'பிழைத்த' என்கிற சொல் மூன்றுவதான தத்தைக் காட்டுவதாகில் அது மூன்றுவது சொல்லாகவன்றே பிரயோகிக்கப்பட்டிருக்க

வேண்டும்; அப்படியல்லாமல் முதல் சொல்லாக ப்ரயோகிக்கப்பட்டிருப்பது பொருந்துமோ? என்று சிலர் சங்கிக்கநேரும். சொல்தொடர் அந்வயிக்கவேண்டிய ரீதியில் ஸ்ரீஸூக்திகளை அமைக்கவேண்டி யிருப்பதால் இங்ஙனே வ்யுத்க்ரமமாக அமைப்பதும் இந்நூலின் ஸரணியே யாகும். ஒன்றே இங்குக் காட்டுவோம்; மூன்றாம் ப்ரகரணத்தில் "க்ஷுத்த்ருட்பீடித நிர்த்தநரைப்போலே கண்டுகொண்டு உண்டு பருகி" என்னும் ஸ்ரீஸூக்தியைக் கொள்வோம்; இங்கு க்ஷுத்பீடிதரிடத்தும் த்ருட்பீடிதரிடத்தும் நிர்த்தநரிடத்தும் க்ரமேண அந்வயிக்கும்படி மேலே ப்ரயோகிக்கப்படும் சொற்கள் 'உண்டு பருகிக் கண்டுகொண்டு' என்றிருக்கவேண்டுவன மாறிப் பிரயோகிக்கப்பட்டிருப்பது காண்க. இந்த வ்யுத்க்ரமம் எதற்காகக் கொள்ளப்பட்டதென்பது தனிப்பட்ட விசாரம்; வ்யுத்க்ரமமுள்ளதென்பது மறுக்கமுடியாததாதலால் அதைப்பற்றிமட்டும் கொண்டோமென்க. 'பிழைத்த' என்கிறவிது * வைகுந்தா மணிவண்ணன் பதிகத்தை எங்ஙனம் காட்டிற்றாகிறதென்பதை உபபாதிக்கிறேன் காண்மின்.

9. இந்நூலாசிரியர் ப்ரமாணவசனங்களை நேராகக் கையாள்வதுபோலவே ப்ரமாண வசனப்பொருளைக் கையாள்வதுமுண்டு; முதல் பிரகரணத்தில் "இருள்தருமமலங்களாகவென்னும் ஜந்ம ஜாயமாநகாலகடாக்ஷங்கள்" என்றதில் * இருள்தரும்பாசுரத்திலுள்ள சொல் பிறவியென்பதாயிருக்க, அச்சொல்லைவிட்டு அதன் பொருளையுடைய ஜந்மபதத்தை யிட்டருளினார். * அமலங்களாகவென்னும் பாசுரத்திலுள்ளசொல் விழிக்குமென்பதாயிருக்க, அச்சொல்லைவிட்டு அதன் பொருளைக்கொண்ட ஜாயமாநகாலகடாக்ஷபதத்தையிட்டருளினார். இந்நூலின் தொடக்கம் "காருணிகனான ஸர்வேச்வரன்" என்பது; அங்கு ஆசிரியர் கொண்ட * விவேக்து மீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி * என்ற பட்டர் ஸ்ரீஸூக்திக்குச் சேர "காருணிகனான ஈசன்" என்றே அருளிச்செய்திருக்கவேண்டும்; "ஈசனை யீசனீசன்பாலென்ன" என்று மேலே அருளிச்செய்கிறார். அப்படி இங்கு அருளிச்செய்யாமல் 'ஸர்வேச்வரன்' என்றது பொருளைக்கொண்டேயன்றோ. "வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனியின் ருசிஜநகவிபவ லாவண்யம் பூர்ணம்" என்கிறார். இங்கு * நிறைந்தென்னுள்ளே நின்றொழிந்தான் * என்னெஞ்சம் நிறைந்தனவே * என்ற சந்தைகளுக்குச்சேர "லாவண்யம் நிறைந்தது" என்னவேண்டியிருக்க, பூர்ணம் என்றருளியது பொருளைக்கொண்டேயன்றோ. இங்ஙனே பலபலவுங் காணலாம். ப்ரக்ருதத்தில் * உள்ள நோய்களெல்லாம் துரந்து உய்ந்து போந்திருந்தே * உய்ந்து போந்தென்னுலப்பிலாத வெந்தீவினைகளை நாசஞ்செய்து * என்ற பாசுரங்கள் * வைகுந்தாவில் உயிரானவையாகையாலே (உய்ந்து போந்து) என்றதன் பொருளையே * பிழைத்த வென்பதனால் காட்டியருளினாரென்று திண்ணமாகவெண்ணுக. (மூன்றுதத்துக்கு உய்ந்த) என்றே அருளிச்செய்திருக்கலாகாதோ வென்னில், அதில் ரஸமில்லையென்பதைக் காட்டுகிறோம் காண்மின்.

10. (மூன்றுதத்துக்குப் பிழைத்த) என்றவிதில் பிழைத்தவென்பதற்கு இரு வகைப் பொருள் காணலாம். மணவாளமாமுனிகளின் வியாக்யானத்தில் "இவர் பிழைத்த" என்று ஆழ்வாரோடே கூட்டிப் பொருள் பணித்திருக்கையாலே 'ஜீவித்த' என்பது ஒரு அர்த்தம். பிழைத்தலாவது ஜீவித்தலும் தப்புதலும். ஜீவித்தலென்கிற பொருளுக்கு உதாஹரணம் காட்ட அவசியமில்லை. * கஞ்சன் வலைவைத்தவன்று காரிருளெல்லில் பிழைத்து * வலையில் பிழைத்த பன்றிபோல் * என்னும் ஆண்டாள் பிரயோகங்களில் தப்புதலென்னும் பொருள் ப்ரஸித்தம். ஆக ஜீவித்தலென்னுமர்த்தத்தையும் தப்புதலென்னுமர்த்தத்தையுங் கொண்ட பிழைத்த வென்னுஞ் சொல்லை இங்கு ஆசிரியர் பிரயோகித்தருளினது வெகு ரஸம்.

மூன்று கண்டங்களுக்குத் தப்பினாரப்ப! என்னவேண்டியே பிழைத்தவென்றார். உய்ந்த என்றால் இந்தரஸம் வாராது. எனவே, பிழைத்த என்கிற ஸ்ரீஸூக்தியும் மூன்றாவதுதத்தின்ஸ்தலத்தைக் காட்டிக்கொடுக்கவற்றேயென்பது அசைக்கமுடியாதது. "மூன்றுதத்து மறுவலிடாமல்" என்று எளிதாக அருளிச்செய்து போகலாமே. "மூன்றுதத்துக்குப் பிழைத்த அருவினைநோய் மறுவலிடாம்ல்" என்று அதிகமாக வருளிச்செய்தது எதற்காகவென்பது இப்போது விளங்கிற்றாகும். அதி கம்பீரமான மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்திலிருந்தே அடியேன் இந்த மருமங்களை உய்த்துணர்ந்து எழுதுகின்றேன். *மநஸி விலஸதாக்ஷ்ணு பக்திஸித்தாஞ்ஜநேந ச்ருதிசிரஸி நிகூடம்......நிதிமிவ புஞ்ஜதே தந்யா:* என்று பட்டருளிச்செய்த கணக்கிலே நிகூடநிதியைக் கண்டநுபவிப்பதற்கு மூலம் பக்தி ஸித்தாஞ்ஜநமேயாம்.

11. ஸ்வயமுக்த ஸாரநிஷ்கர்ஷ:. ஆசார்ய ஹ்ருதய மூலகாரரும் வ்யாக்யாதாவான மணவாளமாமுனிகளும் திருவுள்ளம்பற்றின மூன்று தத்துக்கள் இதுவரை நிரூபிக்கப்பட்டபடியேயொழிய வேறுவிதமாகவல்ல. * வளவேழுலகிலேயே இரண்டு தத்துக்களென்றும் * பொருமாநீள்படையிலே ஒருதத்தென்றும் ஆக இவையே மூன்று தத்துக்களென்றுகூறி * அந்தாமத்தன்பிலே அங்ஙனேயான தத்து கிடையவேகிடையாதென்று க்ருஹீதக்ராஹிகளாய்ச் சொல்லுமவர்கள் மணவாளமாமுனிகளின் திருவுள்ளத்தை மிகவும் புண்படுத்துமவர்களென்னத் தட்டில்லை. மாமுனிகள் தமது நூற்றந்தாதியில் * பொருமாநீள்படைக்கு இட்டருளின பாசுரத்தில் நைச்யாநுஸந்தாந ப்ரஸக்தியைச் செய்தருளவேயில்லை. * வைகுந்தா மணிவண்ணனுக்கு இட்டருளின பாசுரத்தில் * வைகுந்தன்வந்து கலந்ததற்பின் வாழ்மாறன் செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து — நைகின்ற தன்மைதனைக்கண்டு * என்று ஸ்பஷ்டமாகவுள்ளது. கீழ் * அந்தாமத் தன்புபதிகத்திற்கு இட்டருளின பாசுரத்தில் *சந்தாபம் தீர்ந்த சடகோபன் * என்றதையும் சேர்த்து நோக்குமளவில் ஒரு ரஸகனமான கருத்து விளங்கும்— *அந்தாமத்தன்பிலே ஆழ்வார் சந்தாபம் தீர்ந்தார்; உடனே வைகுந்தன் சந்தாபமுற்றான் என்று. ஆழ்வார் சந்தாபம் தீர்ந்ததற்கு ஹேது இறைவன்வந்து ஆரக்கலந்தது; வைகுந்தன் சந்தாபமுற்றதற்கு ஹேது மாறன் செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்தது. இது நாம் எடுத்துக் காட்டவேண்டாதபடி மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தியில் அநாயாஸலப்யமாயிருக்கச் சிலர் இங்கு வீண்விவாதத்தை வளரச்செய்து போருகிறார்களென்றால் * என் சொல்லவல்லேனென்வாய்கொண்டே ?

12. விசேஷித்துச் சில விண்ணப்பங்கள் குறிக்கொண்மின். திருவாய்மொழியாயிரத்திலும் ஆழ்வார் நைச்யாநுஸந்தானம் பண்ணினவிடங்கள் நூற்றுக்கணக்காகத் தேறும். * நீசனேன் நிறையொன்றுமிலேன் * என்கிற பாசுரத்தில் ஸூஸ்பஷ்டமான நைச்யாநுஸந்தானம் காண்கிறது; *சீலமில்லாச் சிறியன்* இத்யாதிகளும் பலபல. ஆயினும் அவ்விடங்களில் ஆழ்வார் அயோக்யதாநுஸந்தானம்பண்ணி அகலப்பார்ப்பதாக ஆசார்யர்கள் வியாக்கியானித்தருள்வதில்லை. மருமமறிந்து வியாக்கியானித்தருளுமாற்றல் நம் ஆசார்யர்களுக்கே அஸாதாரணமாதலால் அன்னவர்கள் வியாக்கியானித்தருள்வதே நமக்குத் தஞ்சம். ஆழ்வார் நைச்யாநுஸந்தானம்பண்ணி அகலப்பார்த்தவிடங்கள் மூன்றென்று நம் ஆசாரியர்கள் திருவுள்ளம்பற்றினார்கள். * வளவேழுலகிலும் * பொருமாநீள்படையிலும் இது உபயவாதி ஸம்மதமாய் நிர்விவாதமாயிற்று. * அந்தாமத்தன்பு பற்றியே விவாதமுள்ளது. * வளவேழுலகில் ஒருதடவை நைச்யாநுஸந்தானம்பண்ணி அகலப்பார்த்து அது சாந்தமாகி மறு

முறையும் அது தலைகாட்டினதாகவும் பரிஹரிக்கப்பட்டதாகவும் வியாக்கியானம் ஸ்பஷ்டமாகக் காண்கையாலே *வளவேழுலகுதன்னிலேயே இரண்டு தத்துக்களென்று கொள்ளக் குறையில்லையாதலால் *அந்தாமத்தன்பு விசாரம் ப்ரஸக்தமாவதற்கு அவகாசமே யில்லையென்று சிலர் கருதுவது பொருத்தமற்றது. இதைப்பற்றி நன்கு கேண்மின்.

13. திருவாய்மொழியாயிரத்தில் தூதுவிட்ட பதிகங்கள் * அஞ்சிறையமடநாராய் * *வைகல் பூங்கழிவாய் *பொன்னுலகாளீரோ* எங்கானலகங்கழிவாய்—என நான்கு உள்ளன. இப்பதிகங்களொவ்வொன்றிலும் பல தூதுகளுண்டு. இருந்தாலும் "தூது நாலுக்கும் விஷயம்" என்றருளிச்செய்தவர் ஆசார்ய ஹ்ருதயகாரரே. ஒவ்வொரு பதிகத்தையும் ஒவ்வொரு தூதாகவைத்து நாலு தூதென்று கணக்கிட்ட இவ்வாசிரியர் * வளவேழுலகை ஒரு தத்தென்று கணக்கிடுவரேயல்லது இரண்டு தத்தென்று ஒருகாலும் கணக்கிடமாட்டார். * அந்தாமத்தன்பு பதிகத்திலும் இங்ஙனே தத்து உண்டென்பது ஈட்டினுலும் திருவாய்மொழி நூற்றந்தாதியினுலும் நிர்விவாதஸித்தமாயிருக்க, இதனை என் விட்டொழிப்பது?

14. இங்கே பிறர் சொல்லுவதாவது, * அந்தாமத்தன்பிலே நைச்யானுஸந்தானம் பண்ணியிருக்கிருரென்பது உண்மையே; அதை யாரும் அபலபிக்கவில்லை; ப்ரக்ருதத்திற்கு அதுமட்டும் போதாது; அகன்றதாகவோ அகலப்பார்த்ததாகவோ தெரியவரவேணும்; அது இங்குத் தெரியாமையாலே இப்பதிகம் தத்துக்கு நிரூபகமாகாது—என்று. இங்குத்தான் அவரவர்கள் அவதானம் கொள்ளவேணும். நைச்யாநுஸந்தானம் பண்ணுகிற ஆழ்வார் நான் அகலுகிறேனென்ருே, அகலப்பார்க்கிறேனென்ருே ஓரிடத்திலும் பணித்திலர். பணித்ததுண்டாகில் எடுத்துக்காட்டலாம். அகலவேணுமென்று ஆழ்வார் தாம் நிச்சயித்து * வளவேழுலகுபாசுரம் பேசியிருந்தாராகில் அந்தப்பாட்டோடே ஆழ்வார் அகன்றிருக்கவேண்டும். மேல்பாசுரம் தொடங்கியிருக்கவெ கூடாது. (1—10—8) * செல்வநாரணன் பாட்டின் ஈட்டவதாரிகையில் "ஒரு குட்டிச்சுவரிலே முட்டாக்கிட்டுக்கொண்டு கிடந்தார்" என்று நம்பிள்ளை சாடூக்தியாக அருளிச்செய்கிருரே அவ்வண்ணமாக * வளவேழுலகு பாட்டுச் சொன்னவுடனேயே—* நினைந்து நைந்துள்கரைந்துருகி பாட்டு தொடங்குவதற்கு முன்னமேயே ஆழ்வார் ஒரு குட்டிச்சுவரிலே சென்று முட்டாக்கிட்டுக்கொண்டு கிடந்திருக்கவேணும். அப்போதே பொலிந்துநின்ற பிரான் பதறியோடிவந்து தன் சீலகுணத்தை வாய்விட்டுச் சொல்லியோ, சரித்திரவிசேஷமொன்றை நினைப்பூட்டியோ அகலவொட்டாதபடி வளைத்திருக்கவேண்டும். அப்படி செய்திருக்கவில்லையென்பது ஸ்பஷ்டம். ஆகவே அகலப்பார்த்தாரென்பதோ, அகன்ருரென்பதோ விஷயமேயன்று. ஆழ்வாருடைய நைச்யாநுஸந்தானங்களுக்குள் எந்த நைச்யாநுஸந்தானத்தினுல் எம்பெருமானுக்கு அதிசங்கையுண்டாகி [அதாவது, ஐயோ! ஆழ்வார் நம்மைவிட்டுவிட்டாராகில் நம் கதி என்னே! என்று அச்சமுண்டாகி] தத்பரிஹாரம்செய்ய ப்ரவ்ருத்தியுண்டாகிறதோ அப்படிப்பட்ட நைச்யாநுஸந்தானங்களையே தத்துக்களாகக் கூறுகின்ருர்கள் தத்வவித்துக்கள்.

15. பரிஹாரப்ரகாரங்கள் ஒரேவிதமன்று. மூன்றிடங்களிலும் மூன்று விதம். உலகிலும் பார்க்கலாம். தாரித்ரியத்தினுல் ஒருவன் சோகிக்கிருன்; அவனுக்கு சோகநிவ்ருத்தியைப்பண்ண ஒரேவழிதானென்பது கிடையாது. (1) நான் உதாரனல்லவா? என்று சொல்ல அதனுலும் சோகம் நிவ்ருத்தமாகும். (2) உனக்கு வேண்டியதை நான் கொடுக்கிறேனப்பா! என்று சொன்னுலும் சோகம் நிவ்ருத்தமாகும். (3) ஒன்றும் சொல்லாமலும்

இங்கிதங்களும் காட்டாமலும் உடனே கையில் காசு கொடுத்துவிட்டால் சோகம் நிவ்ருத்தமாமென்பது சொல்லவேண்டா. சோக நிவர்த்தந ப்ரகாரங்கள் இங்ஙனே பல வுண்டு. ப்ரக்ருதத்தில் பாருங்கள். (1) வளவேழுலகிலுண்டான தத்தை * திசைகளெல்லாம் திருவடியால் தாயோன் * என்னும்படி உலகளந்த கதை காட்டியும் [* உண்டாயுலகேழ் முன்னமே *] வெண்ணெய்க் கதை சொல்லியும் பரிஹரித்தான். (2) * பொருமாநீள்படையிலுண்டான தத்தை எம்பெருமான்தான் ஆழ்வாரை விடமாட்டாதவனென்பதைக் காட்டிப் பரிஹரித்தான். அதாவது, இனி பகவத்விஷய கதையே நமக்கு வேண்டாமென்று உறுதிகொண்ட ஆழ்வாருடைய பரிஸரத்திலே ஒருவனைப் போகவிட்டு அவன் வாயால் ஸ்ரீமந்நாராயணவென்று சொல்லுவித்து அம்முகத்தாலே ஆழ்வாரை அகலவிடாமல் ஈடுபடுத்திக்கொண்டது. இது * வளவேழுலகிற்செய்த பரிஹாரத்திற்காட்டிலும் விலக்ஷணமானது.

16. மூன்றுவது தத்தைப் பரிஹரித்தது இதனில் மிக விலக்ஷணம். இதை நன்கு விவரிக்கிறேன். * அந்தாமத்தன்பிலே * அல்லாவியுள் கலந்த * என்றவிடத்திலும் * என் முடிவு காணாதே * என்றவிடத்திலும் நைச்யம் தோன்றுகின்றது. அந்த நைச்யாநுஸந்தானத்தினால் ஆழ்வாரிடத்திலே எம்பெருமானுக்கு அதிசங்கை உதித்தது. "இவ்வாழ்வார்க்கு ஏற்கெனவே இருமுறைவந்து கழிந்த நோய் மறுபடியும் தலைகாட்டத் தொடங்கிவிட்டது போலுள்ளதே; பழைய பரிஹாரங்களையே மீண்டும் செய்வதில் பயனில்லை; புதிய பரிஹாரமுறையும் ஒன்றும் தோன்றவில்லையே! என்செய்வது! இவரை இழந்தே போமித்தனையோ! என்று மிக வருந்தியிருந்தான். கண்ணுங் கண்ணீருமான நிலைமையையுங் காட்டி நின்றான். அதுகண்ட ஆழ்வார் "ஐயோ! நம்முடைய நைச்யாநுஸந்தானத்தினால் இப்படிப்பட்ட அநர்த்தமன்றோ விளைகிறது. ஆனந்தமயனாக ஓதப்பட்ட எம்பெருமான் சோகமயனாக ஆய்விட்டானே! இது நம்மால்வந்த அனர்த்தமன்றோ? இவ்வநர்த்தத்துக்கு நாம் ஹேதுவாகலாமோ? ஐயோ!" என்று அநுதபித்து எம்பெருமானுக்குத் தாம் அபய ப்ரதாநம்பண்ணும்படியாயிற்று. இந்த கெட்டத்தில் ஆழ்வாருடைய நைச்யாநு ஸந்தானத்தினால் எம்பெருமான் மிக வருந்தினனென்பது எங்ஙனே தெரிகிறது? நீ நேரில் கண்டாயோ? உன் உல்லேகமோ இது? என்ன வேண்டா; * பொய்யிலாத மணவாளமாமுனிகளன்றோ இதனை நிஸ்ஸந்தேஹமாக அருளிச்செய்திருப்பது. * வைகுந்தன்வந்து கலந்ததற்பின் வாழ்மாறன், செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து *என்றதற்குமேல் என்னவுள்ளதென்று பார்க்கவேணும். "நைகின்ற தன்மைதனைக்கண்டு" என்றன்றோவுள்ளது, இதுவன்றோ இங்கு உயிரானவார்த்தை.

17. ஆழ்வாருடைய நைச்யாநுஸந்தானம் மட்டும் பாசுரத்தில் காணப்படுகிறது. அதாவது * அந்தாமத்தன்பிலுள்ளது. எம்பெருமான் வருந்தியது பாசுரத்திலில்லை. அப்படியிருக்க எதுகொண்டு நம்பிள்ளையும் மணவாளமாமுனிகளும் எம்பெருமான் வருந்தி நின்றதாக அருளிச்செய்கிறார்களென்று பார்க்கவேணும். ஸ்ரீவசநபூஷணத்தில் "ஶாப: என் கையாலே சோகஜநகம்" என்கிற ஸ்ரீஸூக்தியின் பொருள் தெரியுமன்றோ. அந்த ரீதி இங்கும் காணத்தக்கது. எம்பெருமான் சோகித்திருந்திலனாகில் * உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கனவே * என்று ஆழ்வா ரருளிச்செய்ய ப்ரஸக்தியே கிடையாது. இதனால் எம்பெருமானுக்கு சோகநிவ்ருத்தி யானது மட்டுமன்றிக்கே வடிவில் பௌஷ்கல்யமு முண்டாயிற்றென்றல்லவோ நம்பிள்ளை இரண்டாம் பாட்டுக்கு அவதாரிகையிட்டருளினர். *உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கனவே * என்றதனால் எம்பெருமானுக்கு எவ்வளவோ ஸம்ருத்திகள் விளைந்ததாக அந்தப் பதிகமே நன்கு காட்டித்தருகின்றது. அதனை விசதவாக்சிகாமணிகள்

"உன்னைத்தான் விடேனென்றுரைக்க, வன்மையடைந்தான் கேசவன்" என்றருளிச்செய்தது அநவத்யமான ஸ்ரீஸூக்தியன்றோ. * வைகுந்தாமணிவண்ணனில் கேசவன் வன்மையடைந் தானென்றால் அதற்கு முன்னே வன்மையிழந்திருந்தா னென்பது சொல்லவேண்டுமோ? சொல்லவேண்டாவாயினும் * நைகின்ற தன்மைதனைக்கண்டு * என்று ஸூசிதமாகவும் சொல்லிவைத்தது. அப்படி வன்மை யிழந்திருந்தது ஆழ்வார் அகன்றிடுவரோ! என்னு மதிசங்கையால் தானே. வேறு காரணமுண்டாகில் ஸாதித்தருளலாம்.

18. ஆக, *அந்தாமத்தன்பிலே * அல்லாவியுள் கலந்த* என்றும் *என் முடிவு காணாதே யென்னுள் கலந்தானை * என்றும் ஆழ்வாரருளிச்செய்ததை எம்பெருமான் தன் சிந்தையிலே மனனம் பண்ணப்பண்ண, அவனுக்கு அஞ்சவேண்டியதாய் வந்துவிழுந்தது. என்னவென்று அச்சம்? தம்முடைய நைச்சியத்தைப் பேசின இவர் நம்மைவிட்டு அகல்வார் போலே யிருக்கிறதே! என்று கொண்டு அச்சம். கீதையிலே * ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்* என்றவனன்றோ எம்பெருமான். "* என்ன தன்னதாவியிலே அறிவாராத்மாவென்று அவன் மதம் தோன்றும்" என்றன்றோ ஆசார்ய ஹ்ருதயமும். ஆழ்வார் உயிராகவும், எம் பெருமான் உடலாகவுமிருக்கையில் உயிர் அகலப்பார்த்ததென்றால் உடலுக்கு அச்சம் அவர்ஜ நீயமேயன்றோ. * மே மத மென்ற கீதை அபத்தமாகில் இதுவும் அபத்தமாகும். அதுவும் அபத்தமன்று, இதுவும் அபத்தமன்று. ஸர்வஜ்ஞனை எம்பெருமானுக்கும் இப்படியொரு அதிசங்கை யுண்டாகுமாவென்று நமது ஸம்ப்ரதாய ஸரணியில் படியாதவர்கள் க்ஷேபிப்பர் கள். நம்மவர்கள் க்ஷேபிக்க ப்ரஸக்தியில்லை. எம்பெருமானுக்கு அதிசங்கையுண்டானதை யும், அச்சமுண்டானதையும், அந்த அச்சம் ஆழ்வாருடைய ஸமாதாநத்தாலே பரிஹார மடைந்ததையும் ஆசார்யர்கள் நிரூபித்தருளியிருப்பதைப் பின்பற்றியே இவ்வளவுரைத்தோம்.

---

## ஸப்தப்ரச்நஸமாதி:.

"மூன்றுதத்துக்குப் பிழைத்த" இத்யாதியான இந்த சர்ச்சையில் ஸ்ரீமதுபயவே. வித்வான் விஞ்சிமூர் ஆழ்வார்ஸ்வாமி தலையிட்டிருப்பது முன்னமே வெளியிடப்பட்டிருக் கின்றது. இடையில் பல வருஷங்கள் சாந்தமாகியிருந்த இந்த சர்ச்சை இப்போது [ஹேவி ளம்பிவருஷ திருவாடிப்பூரம் முதலாக] மீண்டும் கிளர்ந்திருக்கின்றது. அந்த ஸ்வாமியின் சில திருமுகங்களுக்காகவே மூன்றுதத்தின் மூலஸ்தானமென்னும் இச் சிறுநூல் எழுதலாயிற்று. அந்த ஸ்வாமி முடிவாக ஏழு கேள்விகள் கேட்டிருக்கிறார்; அந்தக் கேள்விகளையும் அவற் றிற்கு அடியேனுடைய விடைகளையும் இதன்கீழ் க்ரமேண வெளியிட்டு இதை முடிக்கிறேன்.

"அந்தாமத்தன்புதத்து விஷயத்தில் சில ப்ரச்னங்களை ஸவிநயமாய் விண்ணப்பித்துக்கொள்ளுகிறேன். அவைகளுக்கு பரம க்ருபயா உத்தரம் அருளிச்செய்தருளவேணுமாய் ப்ரார்த்திக்கிறேன்.

(1) அந்தாமத்தன்பில், ஐந்தாம் பாட்டிலுள்ள "அல்லாவியுள் கலந்த" என்னுமிடத்திலும், எட்டாம் பாட்டி லுள்ள "என் முடிவு காணாதே யென்னுள் கலந்தானை" என்னுமிடத்திலும் சேர்ந்து ஒருதத்து உண்டா யிற்றா? அல்லது ஐந்தாம்பாட்டுத்தத்து வேறு, எட்டாம் பாட்டுத்தத்து வேறு என்று திருவுள்ளமா?

இதற்கு விடை:—* வளவேழுலகில் 1, 2, 7 பாட்டுக்களாகிற மூன்று பாசுரங்களி லும் சேர்ந்து ஒருதத்து என்று எப்படி வஸ்துஸ்திதியோ அப்படியேதான் இங்கும். ஒரு

பதிகத்தில் எத்தனை பர்யாயம் நைச்யாநு ஸந்தானம் நடந்தாலும் அந்த ஸ்தலத்தை நம் ஆசார்
யர்கள் தத்து என்று திருவுள்ளம் பற்றியிருந்தால் அது ஒரு தத்தேயொழிய இரண்டு தத்தல்ல
என்பதைச் சிக்கனக் கொள்க. இதை ஒருகாலும் மறக்கவேண்டா. கலங்கவேண்டா.

(2) வளவேழுலகில் 1, 2 பாட்டுத்தத்துக்கு மூன்றாம் பாட்டினவதாரிகையில் ஸௌசீல்யகுணாநுஸந்தாநத்தால்
பரிஹாரமுண்டானதாகவும், ஏழாம்பாட்டிலுண்டான தத்துக்கு எட்டாம்பாட்டி னவதாரிகையில் திருவாய்ப்
பாடிவெண்ணெய் வ்ருத்தாந்தத்தால் பரிஹாரமுண்டானதாகவும், பொருமாநீள்படையில் ஏழாம்பாட்டி
லுண்டான தத்துக்கு எட்டாம்பாட்டி னவதாரிகையில் ஸ்ரீமந்நாராயணன் என்கிற திருநாம ச்ரவணத்தால்
பரிஹாரமுண்டானதாகவும் ஈட்டில் அருளிச்செய்திருப்பதுபோல் "அல்லாவி" தத்துக்கு, அடுத்த ஆறாம்
பாட்டினவதாரிகையில் பரிஹாரம் உண்டானதாக அருளிச்செய்திருக்கிறாரா? "என் முடிவு காணாதே"
தத்துக்கு ஒன்பதாம்பாட்டி னவதாரிகையில் பரிஹாரமுண்டானதாக அருளிச்செய்திருக்கிறாரா?

இதற்கு விடை:—* அந்தாமத்தன்பில் தத்துஉண்டு என்பது மூதலிக்கப்பட்டுவிட்டது.
[அதுவே இச்சிறுநூலின் முக்கியவிஷயமாக விரித்துரைக்கப்பட்டுள்ளது காண்க.] இந்த
தத்து எவ்வாறு பரிஹரிக்கப்பட்டதென்றால் "செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து நைகின்ற
தன்மைதனைக் கண்டு" என்கிற நூற்றந்தாதிப் பாசுரத்தின்படியே எம்பெருமானால் தன்னு
டைய அளவுகடந்த அவஸாதத்தைக் காட்டிப் பரிஹரிக்கப்பட்டது. "உன்னை நான் பிடித்
தேன்கொள் சிக்கனவே" என்று ஆழ்வாரருளிச்செய்ததற்கு மூலமென்ன? என்பதையும்,
அதனால் தேறினதென்ன? என்பதையும் இன்னமும் க்ரஹித்திராவிடில் மீண்டும் உபபாதிக்கி
றேன். * அந்தாமத்தன்பில் இரண்டு பாசுரங்களில் நைச்யாநுஸந்தானம் வெளிவந்தது. இது
ஸ்வரூப ப்ராப்தமான ஸ்வாபாவிக நைச்யாநு ஸந்தானமாகவுமிருக்கலாம்; எம்பெருமான்
அப்படி திருவுள்ளம் பற்றாமல் இது அகல்வதற்காகச் செய்த நைச்யாநுஸந்தானமென்று
கொண்டு அழத்தொடங்கிவிட்டான். அந்த அழுகைதான் ஆழ்வாருடைய மூன்றாவது
தத்தைப் பரிஹரித்தது. * உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கனவே * என்றதற்கு "நான்
அகலமாட்டேனப்பா! அகலமாட்டேனப்பா! அழேலழேல்" என்பதே அர்த்தம்; இதுதவிர
வேறு அர்த்தம் கிடையாது. ஆகவே எம்பெருமானுடைய அழுகைதான் ஆழ்வாருடைய
மூன்றாவது தத்தைப் பரிஹரித்ததென்பது ஸ்பஷ்டம்.

(3) "இப்படி மூன்றிடத்திலே வந்து பரிஹ்ருதமானதாகையாலே" என்று மணவாளமாமுனிகளின் வியாக்கியான
ஸ்ரீஸூக்தி இருக்கிறபடியால் அந்தாமத்தன்பிலே யுண்டான இந்த மூன்றாவது தத்துக்கும் பரிஹாரம் அவசி
யம் சொல்லப்பட்டிருக்கவேணுமே, அது ஈட்டில் எவ்விடத்தில் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது?

இதற்கு விடை;—* வைகுந்தாமணிவண்ணனீட்டு ப்ரவேசத்தின் முடிவில்—"இவர்
தாம் இனி நம்மைவிடில் செய்வதென்! என்று அதிசங்கைபண்ணி அவன் அலமாக்கிற
படியைக்கண்டு 'நீ இங்ஙன்படவேண்டா' என்று அவனதிசங்கையைப் பரிஹரித்து அவனை
யுளனாக்குகிறார்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. அதன் பொருள் ஒருவருபதேசிக்கவேண்டும்
படி இல்லையே. ஆழ்வார் எம்பெருமானுக்கு அளிக்கிற இந்த அபயப்ரதானத்தினாலேயே ஆழ்
வாருடைய அருவினைநோய் பரிஹ்ருதமாய்விட்டதென்று தெரியவில்லையா? ஆழ்வாரிடத்தில்
அருவினைநோய் அபரிஹ்ருதமாகவே யிருந்ததாகில் "உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்க
னவே" என்று அவர் சொல்ல ப்ரஸக்தியுண்டோ? ஒருவன் பிறவியே தொடங்கி ஊமையாய்
இருந்தான்; ஒருநாள் அவன் பேசத்தொடங்கிவிட்டான்; ஆயிரம்பேர் முன்னிலையில் பேசா
நின்றான். அப்போது "இவன் ஊமையல்லவா? இவனுடைய ஊமைத்தனம் போய்விட்ட
தென்று யார் எங்கே எழுதியிருக்கிறார்?" என்று கேட்பானொரு மேதாவியுண்டாகில், அந்த
மேதாவி இந்த மஹாநுபாவரேயாகவடுக்கும். ஸந்நிபாத ஜ்வரம்வந்து அயர்ந்துகிடந்தவன்
ஒருநாள் வீதிகளிலே உலாவாநின்றால் "இவனுக்கு ஜ்வரம் நீங்கிவிட்டதென்று யார் சொன்
னார்? யார் எழுதிவைத்திருக்கிறார்? எங்கே யெழுதி வைத்திருக்கிறார்? என்று சேஷிப்
பீர்போலும். ஆசார்ய ஸார்வபௌமர்கள் எழுதிவைத்திருப்பதிலும் குறையில்லையே.

(4) வைகுந்தாமணிவண்ணன் முதற்பாட்டினவதாரிகையிலுள்ள எம்பெருமானதிசங்கையும், கண்கள் சிவந்த ப்ரவேசத்திலுள்ள எம்பெருமானதிசங்கையும் ஒரேமாதிரியானதா, வெவ்வேறுமாதிரியானதா.

இதற்கு விடை;—இந்தக் கேள்வி எங்ஙனே யிராநின்றதென்றால், *வைகுந்தாமணி வண்ண னருளிச்செய்த ஆழ்வாரும் *கண்கள் சிவந்து அருளிச்செய்த ஆழ்வாரும் ஒரே வ்யக்தியா? வெவ்வேறு வ்யக்தியா? என்று கேட்பதுபோலிராநின்றது. கேண்மின். எம்பெருமானைவிட்டு அகலவேணுமென்று ஆழ்வார் ஒருகாலும் நினைத்தவரல்லர், நினைப்பவருமல்லர். எம்பெருமானுடைய பெருமையையும், தம்முடைய தாழ்வையும் சொல்லவேண்டியது அனைவர்க்கும் ப்ராப்தமாகையாலே ஆழ்வாரும் தம் ஸ்வரூபம் நிறம்பெறத் தமது தாழ்வை—சிறுமையை—நைச்சியத்தை ஆங்காங்கு அநுஸந்திக்கிறார். வளவேழுலகோ, பொருமாநீள்படையோ, அந்தாமத்தன்போ, இருத்தும் வியந்தோ....எல்லாவற்றிலும் இவ்வளவுதானுள்ளது. இந்த நான்கிடங்கள் தவிர மற்ற இடங்களில் தமது நைச்சியத்தை யநுஸந்தித்திலர் என்று சொல்லமுடியுமோ? இப்படி யநுஸந்தித்தவிடங்கள் அபரிமிதங்கள். ஆனால் இந்த நைச்யாநுஸந்தானத்திலிருந்து எம்பெருமானுக்கு அதிசங்கைவிளைந்த இடங்கள் நான்கே. நான்கிலும் துல்யமான அதிசங்கைதான். பரிஹாரப்ரகாரத்தில்மட்டுமே வாசியுள்ளது. ஸ்வாமிந்! எதை மறந்தாலும் இஃதொன்றைமட்டும் மறவாமல் சிக்கனக்கொள்ளவேணும்.

(5) "அருவினைநோய் மறுவலிடாமல்" என்கிற மூல ஸ்ரீஸூக்தியாலும் அதன் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளாலும் அகலில் செய்வதென் என்று பயந்து அகலுவதற்கு முன்னமேயே ஆத்ம ஸ்வரூப வைலக்ஷண்யத்தைக்காட்டினன் என்று தெளிவாக ஏற்படுவதுபோல் 'வைகுந்தாமணிவண்ணன்' முதற்பாட்டிலுண்டான எம்பெருமானதிசங்கையை அகலுவதற்கு முன்னமேயே தீர்த்துவைத்தாரா, அகன்று வெகுதூரத்திற் போனபின்பா?

(6) அகலுதல் உண்டாவதற்கு முன்பேயே என்று ஒப்புக்கொள்ளில், வள்வேழுலகு, பொருமாநீள்படைதத்துக்களோடு, அந்தாமத்தன்புதத்து ஸமாநஸ்கந்தமாக எப்படி ஆகமுடியும்?

(விடை) இக்கேள்விகளை அசட்டுக் கேள்வியென்று ஒதுக்கவேணும்; ஆனாலும் அமைதியுடன் விடையிறுக்கிறேன். வளவேழுலகிலும் ஸரி, பொருமாநீள்படையிலும் ஸரி, ஆழ்வார் திருப்புளியாழ்வாரடியை விட்டுப்பெயர்ந்தது கிடையாது; கடுகளவும் பெயர்ந்தது கிடையாது; *தூதுரைத்தல் செப்புமின்கள் என்ற பாட்டில் *தூமொழிவா யென்ற விடத்து ஈட்டில்—"பெருமாளு மிளையபெருமாளும் கையும் வில்லுமாய் வருகிறபடியைக் கண்டு 'இவர்கள் வாலி வரவிட வருகிறார்களோ!' என்றஞ்சி மஹாராஜர் நாலு மூன்று யோஜநம் அவ்வருகே யோட" என்று நம்பிள்ளை யருளிச் செய்கிறார். தாசரதிகளைக்கண்டு அஞ்சின ஸுக்ரீவன் மூன்று நான்கு காததூரம் ஓடிவிட்டதாக இதற்குப் பொருள். ஸ்ரீராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டம் – இரண்டாம் ஸர்க்கத்தில் *[illegible] । *[illegible]* என்றும், *[illegible]* என்றுமுள்ளது. இடையில் *[illegible]* என்றுமுள்ளது. ஆனாலும் *[illegible]* என்ற கணக்கிலே நம்பிள்ளையருளிச் செய்தது இன்சுவைமிக்கதே. ஸுக்ரீவன் இடத்தைவிட்டுப் பெயர்ந்து அங்குமிங்கும் சிதறியோடினதுண்டாகையாலே அங்ஙனமருளிச் செய்யக் குறையில்லை. ஆழ்வாரோ திருப்புளியிலே அசைந்தாலும் தாம் அசைபவரல்லர். வ்யாக்யாந சதுரர்களான ஆசார்ய ஸார்வபௌமர்கள் 'ஆழ்வார் அகன்றார்' என்றெழுதியிருந்தாலும், அகலப்பார்த்தார், அகல நினைத்தார் என்பதுதான் அதற்குப் பொருள். சிறிய திருமடலில் கட்டுவிச்சியின் செயலைச் சொல்லத் தொடங்கினபோது *பேராயிரமுடையானென்றாள்* என்றும் *சீரார்வலம்புரியே யென்றாள்* என்றும் *திருத்துழாய்த் தாரார்நறுமாலை

கட்டுரைத்தாள் * என்றுமுள்ள விடங்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை என்ன வியாக்கியானமருளினரென்று பார்க்கவேணும். வாய்விட்டுச் சொன்னதாக மூலம் காட்டினாலும் வாய்விட்டுச் சொன்னமையில்லை யென்றன்றோ வியாக்கியான முள்ளது. ஆழ்வார் அகல நினைத்தா ரென்பதும் அதிசங்கை கொண்ட எம்பெருமான் நினைவாலத்தனை. ஆழ்வார் திருநகரித் திருவீதியில் வருவாரையும் செல்வாரையும் திருவண்பரிசாரத்திலிருந்து வருவாராகவும் திருவண்பரிசாரத்திற்குச் செல்வாராகவும் ஆழ்வார் எண்ணினது போலவே, ஆழ்வார் ஸ்வரூபப்ராப்தமாகப் பண்ணின நைச்யாநுஸந்தானத்தை அகல்வதற்காகச் செய்ததாய் எம்பெருமான் எண்ணினானத்தனை. ச்ருதப்ரகாசிகையில் "ஸம்பந்தவிசேஷாந்நிதேஷு வ்ருத்தி: ஸ்நேஹ: யஸ்ய விபாகா: ஸ்நேஹ நஹ்யபரம்கிம்வழ......." என்றருளிச் செய்திருப்பது பெரியாழ்வார் போல்வாரான ஆழ்வார்கள் பக்கலிலே ஸமந்விதமாகிருப்போலே எம்பெருமான் பக்கலிலும் ஸமந்விதமாகக் குறையில்லை. ஆழ்வார் பகவத் விஷயம் நடையாடாத தேசிடத்திலே போய்ப் புக்கொளிக்கவேணுமென்று கருதி ஒரு குட்டிச்சுவரிலே முட்டாக்கிட்டுக் கொண்டு கிடந்தாரென்று நம்பிள்ளை ஸஹஸநமாக அருளிச்செய்த சாடூக்தியைக் கொண்டு ஆழ்வார் திருநகரியில் ஒரு ஸ்வாமி தம் திருமாளிகைப் பக்கத்திலுள்ள ஒரு குட்டிச்சுவரைக்காட்டி "இதுதான் பொருமாநீள்படையிலாழ்வார் முட்டாக்கிட்டுக்கொண்டு கிடந்த குட்டிச்சுவர்" என்று ஐதிஹ்யம் சொல்லிக்கொண்டிருந்தாராம். மற்றொரு கிழவர் தம் திருமாளிகையில் கோயிலாழ்வாரில் ஒரு ஜீர்ண வஸ்த்ரத்தை அமுக்கி வைத்து இதுதான் முன்பு ஆழ்வார் குட்டிச்சுவரிலே முட்டாக்கிட்டுக்கொண்டிருந்த திருப்பரிவட்டம் என்று காட்டிக்கொண்டிருந்தாராம். கிம்கு நிஷ்ட: கிமந்யேஷாம் ஸஹஸ்ராயம் வம்சிதோ ஜந: ?

ஸாரமாகக் கேளீர். அகன்றாரென்பது எங்குமே கிடையாது. நைச்யாநுஸந்தானம் பண்ணின ஆழ்வார் நம்மை விட்டிடுவரோ! என்று எம்பெருமான் அதிசங்கித்தது தானுள்ளது. இவ்வதிசங்கையினால் ஆழ்வார்க்குத் தன்னிடத்தில் ஆபிமுக்க்யம் மிகும்படியான வழியைத் தேடினானெம்பெருமான். *அந்தாமத்தன்பில் கண்ட நைச்யாநுஸந்தானத்தினால் ஆழ்வார் நம்மை விட்டுவிடுவரோ! என்று அதிசங்கித்தானெம்பெருமான் என்பது அபலபிக்கப்போகாது; அந்த அதிசங்கையினால் நைந்து வருந்தினான் என்பதும் அபலபிக்கப்போகாது. அந்தவருத்தத்தை ஆழ்வார் கண்டாரென்பதும் அபலபிக்கப்போகாது; கண்ட ஆழ்வார் எம்பெருமானுக்கு அபயப்ரதாநம் செய்தாரென்பதும் அபலபிக்கப்போகாது. இவ்வளவால் அருவினைநோய் பரிஹ்ருதமாயிற்று என்பதும் அபலபிக்கப்போகாது. பலமுறை பன்னிப் பன்னியுரைத்தாலும் இது க்ரஹிக்கப்படவில்லை யென்பதும் அபலபிக்கப்போகாது. விஷயம் தெளிவாக மனத்திற்பட்டும் தம்மிடத்தில் ஏதோ சரக்கிருப்பதாகக் காட்டிக்கொண்டு ஓயாமல் வெள்ளைக் காகிதங்களைக் கறுப்பாக்கி வருகிறாரென்பதும் அபலபிக்கப்போகாது. ஆனால் அபலபிக்கப்படுவது ஒன்றே; அதுதான் அந்தரங்க ஸாக்ஷ்யம். தமிதம் ஸ்வயமேவாலோசயது.

ஸஹாஸ்யமாஹ நணே!,—அகல்வதற்கு முன்னேயா பின்னேயா என்கிற அஸமஞ்ஜஸ ப்ரச்நங்கள் மீண்டுமீண்டும் தலைகாட்டவேண்டா. கண்ணபிரான் அக்ரூரரைப் பரிஷ்வங்கித்தபோது *ஸம்ச்லிஷ்டஸ்து க்ருஷ்ணேந வ்ருத்தஸ்ய ஸஹாஸம் பரிஷ்வஜே* என்றார் முனிவர். ஸம்ஸ்பர்சித்தவுடனே அக்ரூரர் *அம்மானாழிப்பிரானவன் எவ்விடத்தான்யானார் ?* என்று இருய்த்தார்; எட்டடியோ பத்தடியோ பிற்காலித்தார். அவரைக் கண்ணபிரான் வலியப் பிடித்திழுத்து அணைத்தானென்பது ஆக்ர்ஷ்ய என்பதனால் தெரியவருகின்றது. ஆழ்வாருடைய பரிமாற்றம் அத்தகைத்தன்று. ஆசார்ய ஹ்ருதயத்திலேயே "இவற்றால்வரும் ஸம்ச்லேஷவிச்லேஷங்களாகிறன,... தர்சந ஸமமான மாநஸாநுஸந்தானமும், திண்கொள்ளப்

பெருத மநச்சைதில்யமும்" என்றருளிச்செய்திருப்பதும் அவ்விடத்து மாமுனிகளின் வியாக்யானமும் காண்க. எதுவும் மாநஸாநுபவமாத்ரமே யல்லது வேறல்லவே. *வளவேழுலகு தலையெடுத்து ஆழ்வார் அகன்ருரென்ருல் திருநகரியைவிட்டுத் திருச்செந்தூருக் கெழுந்தருளிவிட்டாரென்றோ நினைத்திருப்பது? தேவரீருடைய ஐந்தாவது கேள்வியின் முடிவில்—"வைகுந்தாமணிவண்ணன் முதற்பாட்டிலுண்டான எம்பெருமானதிசங்கையை அகலுவதற்கு முன்னமேயே தீர்த்துவைத்தாரா? அகன்று வெகுதூரத்திற்போனபின் தீர்த்துவைத்தாரா?" என்று கேட்டிருப்பதை நினைக்க நினைக்க விபப்பும் வெறுப்பும் சிரிப்புமுண்டாகிறது. *வைகுந்தா முதற்பாட்டில் எம்பெருமானுக்கு அதிசங்கையுண்டானதாக யாரும் சொல்லவில்லை. *அந்தாமத்தன்பில் இரண்டு சந்தைகளைக் கேட்டபோது எம்பெருமானுக்கு அதிசங்கை யுண்டாயிற்றென்றும், அவ்வதிசங்கை *வைகுந்தா முதற்பாட்டில் பரிஹ்ருதமாயிற்றென்றும் இங்ஙனேதான் ஆசாரியர்கள் ஸாதித்திருப்பதும் அடியேன் விஜ்ஞாபிப்பதும். "அகல்வதற்கு முன்னமேயே தீர்த்துவைத்தாரா? அகன்று வெகுதூரத்திற் போனபின் தீர்த்துவைத்தாரா?" என்கிற கேள்வி பகவத்விஷயம் நடையாடாதவிடத்திலிருப்பார் கேட்கத்தக்கதத்தனை. அகன்றதே கிடையாதென்று கல்வெட்டாகச் சொன்னபின் சிறிது தூரம் போவது, வெகுதூரம்போவது என்கிறபேச்சே அப்ரஸக்தப். அஸமஞ்ஜஸம்.

(7) அம்ருதஸஹரியில் த்ருஷ்டாந்தமாக எடுத்த அஞ்சிறையமட நாரையின் எட்டாவது பாட்டான "நீயலையே சிறுபூவாய்" என்னும் பாட்டில் தூதுவிட்டமை உண்டா, இல்லையா?

அடியேனுடைய இந்த ஏழு ப்ரச்நங்களுக்கும் க்ருபயா தெளிவாக உத்தரம் அருளிச்செய்யவேணுமாய் ப்ரார்த்திக்கிறேன்.

இதற்கு உத்தரம்;—* நீயலையே பாட்டில் *நோயெனது நுவல்* என்றவளவில் வாக்ய பேதம் பண்ணினுல் தூதுவிட்டதாகச் சொல்லலாம். அதற்கு ஔசித்யமில்லை. ஆகவே தூதுவிட்டமையில்லையென்பதே எனது கொள்கை. தூதுவிட்டமையுண்டுதானென்னில்; அங்ஙனமே தாராளமாகக் கொள்க. மறுப்பேனல்லேன். வாத விவாதங்களில் கேட்கிற கேள்விகள் ப்ரதானமான விஷயத்தில் பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்திற்கும் ஸ்வபக்ஷ ஸ்தாபனத்திற்கும் உபயுக்தமா யிருக்கவேண்டும். "ஞாயிற்றுக்கிழமைமாலையில் எதற்காக ராஹுகாலம்? திங்கட்கிழமை காலையில் எதற்காக ராஹுகாலம்" என்றும் கேட்கலாமே.

ஸ்ரீபாஷ்யாதிகளில் தத்வார்த்தஜ்ஞான முண்டாவது எளிது; பகவத் விஷயத்தில் அஃதுண்டாவது மிகவுமரிது. ஆழ்வார் *அஞ்சிறையமடநாரையில் *திருவடிக்கீழ் குற்றேவல்....அகல்வதுவோ விதியினமே* என்று வாய்விட்டு அகலுகையை ப்ரஸ்தாவித்திருக்கிருர். [இது * வளவேழுலகுக்கு முன்னமேயே.] * அகல்வதுவோ விதி * என்ற அந்தப் பாசுரமும் எம்பெருமான் திருச்செவியில் விழுந்ததே. அப்போது அப்பெருமான் என்ன செய்தான்? 'அகன்றுபோனுல் போமே' என்று எம்பெருமான் உபேக்ஷித்திருந்துவிட்டதாகவே அடுத்தபாட்டி னவதாரிகையில் ஸாதித்திருப்பதைக் காணலாம். மேலுள்ள பாசுரத்திற்குத் தக்கபடி அவதாரிகை யிடவேண்டியிருந்ததனுல் இங்ஙனே அவதாரிகையிட்டருளினுர். கடைசியாக, *சிறியேனென்றதின் பெருமையைக் காட்டின *கண்கள் சிவந்துக்குப் பிறகு ஆழ்வார்க்கு நைச்யாநுஸந்தான முண்டாகாமலிருந்ததா? என்று பார்ப்போம். அது எப்படி உண்டாகாமலிருக்கமுடியும்? திருக்காட்கரைப் பதிகத்தில் *வெறிகமழ்சோலைத் தென்காட்கரை யென்னப்பன், சிறியவென்னுருயிருண்ட திருவருளே* என்றிருப்பதை உற்றுநோக்கவேணும். *இருத்தும் வியந்தில் * சிறியேனுடை * என்றதைக் கேட்டு ஸம்ப்ரமித்த எம்பெருமான் அதைவிட அதிகமாக இங்கு ஸம்ப்ரமிக்கவேணுமே; ஏன் ஸம்ப்ரமிக்கவில்லை? என்று கேட்டால் வாய்திறப்பாருண்டோ? இத்தகைய அரும்பெரும் பொருள்களை வாரியிறைக்க யானே தவஞ்செய்தேன். தற்போது இவ்வளவோடு நிற்கிறேன். .... .... *

அடியேன் பரிஷ்கரித்து வெளியிட்ட

## புராதந க்ரந்தங்கள்

1. శ్రీవిష్ణుపురాణమ్ - மூலம் மட்டும்
2. భగవద్రామానుజ గ్రన్థమాలా(இந்த ஸ்ரீ கோசம் இப்போது கிடைப்பதில்லை)
3. भगवद्रामानुजग्रन्थमाला - ஸமீபப் பதிப்பு
4. सहस्रनामभाष्यम्
5. భగవద్విషయమ్ - ఈడు
6. பகவத்விஷயம்—ஈடு
7. முதலாயிர வியாக்கியானம் (இது 40 வருஷங்களுக்கு முன் ஸ்ரீ ஸுதர்சன அச்சுக்கூடத்தில் ஸ்ரீ காதிஸ்வாமி நியமனத்தினல் அச்சிடுவிக்கப்பட்டது. இப்போதும் அவ்வச்சுக் கூடத்தில் கிடைக்கும்.)
8. श्रीमद्वेदान्तदेशिकग्रन्थमाला
9. శ్రీ దేశికరహస్య దేశికప్రబన్ధాః
10. దేశికస్తోత్రాణి
11. పాదుకాసహస్రమ్
12. శ్రీమద్వరవరమునీన్ద్ర గ్రన్థమాలా
13. ஆசார்யஹ்ருதய வியாக்கியானம் (மணவாள மாமுனிகள்)
14. श्रीवचनभूषणमीमांसाभाष्यम्
15. సంప్రదాయచన్ద్రికా(இப்போது அரிது)
16. రహస్యత్రయ కారికావళీ
17. పురుషకార మీమాంసా
18. దివ్యసూరి చరితమ్
19. பரந்த ரஹஸ்யம் - மாணிக்கமாலை
20. தேசிக ரஹஸ்யங்கள் 16
21. सिद्धित्रयम्
22. यतीन्द्रमतदीपिका
23. భగవద్విషయ ప్రమాణ తిరట్టు
24. మూవాయిరవ్యాఖ్యానప్రమాణ తిరట్టు
25. రహస్యవివేకః
26. బ్రహ్మసూత్రాణి
27. ఉపనిషత్సంగ్రహః
28. ఇతిహాసపురాణ ప్రమాణసంగ్రహః
29. நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
30. அத்யாபகஹஸ்த பூஷணம்
31. रघुवंशकाव्यम्
32. కైశికపురాణమ్ (భట్టర్)
33. கைசிக புராணம் (பட்டர்)
34. ముదలాయిరమ్ మూలమ్
35. తిరువాయ్మొழி ,,
36. అరుళిచ్చెయల్ రహస్యమ్
37. ముముక్షుప్పడి తత్త్వత్రయమ్, శ్రీవచన భూషణమ్(మూలమ్)
38. తత్త్వశేఖరమ్ - అర్చిరాది - ప్రమేయ శేఖరమ్ - ప్రపన్న పరిత్రాణమ్ ,,
39. ఆచార్యహృదయమ్ ,,
40. நித்யாநுஸந்தானம்.
41. सकलपूर्वाचार्यस्तोत्रमाला
42. నిత్యానుసంధేయ స్తోత్రజాలము
43. పఞ్చస్తవ శ్రీరఙ్గరాజస్తవౌ
44. ஸ்ரீ ராமாயண ஸௌரபம். (ஸ்ரீ ராமாயண தனி ச்லோகி.)
45. ஸ்தோத்ரரத்நமஹோததி: 1, 2.

---

45 ஸ்தோத்ர ரத்ந மஹோததி யென்னுமிந்த க்ரந்தம் இரண்டு ஸம்புடமானது. தேசிக ஸ்தோத்ரங்கள் தவிர, மற்ற ஸகல ஸ்ரீவைஷ்ணவாசார்ய ஸ்தோத்ரங்களும் இவ்விரண்டு ஸம்புடங்களிலும் சேர்ந்துள்ளன. ஸ்ரீ உ. வே. (வைகுண்டவாஸி) குணகரம்பாக்கம். அனந்தாண் பிள்ளை, பண்டித. அனந்தாசார்ய ஸ்வாமியால் தமது அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது. இது அச்சிடத் தொடங்கின போது அந்த ஸ்வாமிக்கு அடியேனிடத்தில் நல்ல அபிப்பிராயமில்லாமலிருந்தது. "பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளில் இவன் ஸ்வதந்திரமாகத் திருத்தங்களைச் செய்பவன்" என்று விபரீதாபிப்ராயம் கொண்டிருந்தார். அதனல், இவர் அடியேனுடைய ஸமீபத்திலேயேயிருந்தும் அடியேனுடைய உதவியைக் கொள்ளாமலே தாமே பரிசோதித்து, அச்சிடத் தொடங்கிச் சில பாரங்கள் அச்சிட்டுவிட்டார். அந்த ஸமயத்தில் "ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:" என்றதை நினைத்து இவரை அடியேனுக உபஸர்ப்பணம் பண்ணி, பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளில் நேர்ந்துள்ள பாடப் பிழைகளையும், திருத்தவேண்டிய ப்ரகாரங்களையும் ஐந்தாறுநாள் தொடர்ந்து ஸப்ரமாணமாக விஜ்ஞாபிக்க, ஸுப்ரஸந்நஹ்ருதயராய் சோதநபாரத்தை அடியேனிடமே ஒப்படைத்து, அதன் முகவுரையில் "இந்த ஸ்தோத்ரங்களில் அந்த பரம்பரையில் வந்த அபத்த பாடங்களெல்லாம் ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியால் அகற்றப்பட்டிருக்கின்றன" என்றெழுதி இரண்டு ஸம்புடங்களிலும் பதிப்பித்துள்ளார்.

# இத் தன் சரிதையில் விளங்கும் உருவப் படங்களுக்கு அட்டவணை.

மடாதிபதிகளும், வித்வான்களும் மஹநீயர்களும், பக்தமணிகளும், கோஷ்டியாயிருப்பவர்களும் வரிசையாகத் தெரிவிக்கப்படுகிறார்களிங்கு.

## 1. மடாதிபதிகளின் திருவுருவப் படங்கள்.



## 2. வித்வான்களுடையவும் மஹநீயர்களுடையவும்.



3.



4.

## 3. பக்த பாகவதமணிகளின் உருவப் படங்கள்.



## 4. ஸமஷ்டி கோஷ்டித் திருவுருவப் படங்கள்

பக்சம்

மா. கு. நரஸிம்ஹாசாரியர்,
மா. பாஷ்யகாராசாரியர்.

105. விருதுபெற்ற வைதிக கோஷ்டி :—
தி. வி. சிங்கராசாரியர்,
மணவாள ஸ்ரீநிவாஸாசார்யாஃ,
கற்பூரம். வேங்கடாசாரியர்,
தி. அ. தொட்டயாசாரியர்,
கோ. க. அ. ராமாநுஜசாரியர்,
மா. கு. நரஸிம்ஹாசாரியர்,
தி. க. பார்த்தஸாரதி ஐயங்கார்,
தி. ந. ச. திருவேங்கடாசாரியர்.

108. ஸ்வகீய திருமந்த்ரார்த்த காலக்ஷேப கோஷ்டி

109. ஏலூர். வைதிக பரிஷத்தின் பகுதி.

115. கோயில். ப்ர. கண்ணமாசாரியர்,
தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
'தி. த. சேஷாத்ரி ஐயங்கார்,
கிடாம்பி. ரங்கஸாமி ஐயங்கார்,

116. இளையவில்லி. சடகோபாசார்யாஃ,
(தத்புத்ர) பூவராஹாசார்யஃ,
(மத்புத்ர) ரங்கநாதஃ,
கநிஷ்டஜாமாதா. திருமலாசார்யஃ

117. நம்பிள்ளை ஸன்னிதி. நித்ய காலக்ஷேப கோஷ்டி

120. ஸ்வகீய நித்ய ப்ரதக்ஷிண கோஷ்டி

122. நெல்லூர். வெங்கடாசார்ய ஸ்வாமியின்ஷஷ்ட்யப்தபூர்த்தி கோஷ்டி.

125. கள்ளக்குரிச்சி. திருப்ரதிஷ்டை

170, 171. திருமலையில் உலகமுண்ட பெருவாயன் சாத்துமுறை கோஷ்டிகள் 2.

177. நமது ஸத்காலக்ஷேபஸபா மெம்பர்களின் குழு.

186. விசேஷோபந்யாஸ ஸபா கோஷ்டி

189. (க்ரந்தமாலா சோதக ஸமிதி.)
அ. மு. ஸ்ரீநிவாஸாசார்யர்,
அ. ஸம்பத் குமாரா சார்யர்.

பக்கம்

196. மேலைவாத்யார்ஸ்வாமிகாலக்ஷேபம்

197. பொம்மலூர். பண்டித பரிஷத்து

198.} பதரிகாச்ரம யாத்ரா கோஷ்டி
355.} ,,

223. மந்தஸா. ராமாநுஜாசார்யாஃ,
தெ. கம். கோபாலாசார்யாஃ,
ஸ்ரீமந் நாராயணசார்யாஃ,

273. காரப்பங்காடு. வேங்கடாசார்ய ஸ்வாமி கோஷ்டி

277, 366. முதலியாண்டான் ஸ்வாமி கோஷ்டி

345. புது டில்லியில் கனம் முன்ஷீ அவர்களோடு ஸம்பாஷணை கோஷ்டி.

345. டில்லியில் வேத பாராயணதிகளை ரிகார்டு செய்த கோஷ்டி.

347. ஏரணகுலத்தில் புருஷ ஸூக்தோபந்யாஸ கோஷ்டி.

347. திருவனந்த சயனத்தில் கோஷ்டி.

349. திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் உபந்யாஸ கோஷ்டி

355. தேவராஜபுரம் திருப்ரதிஷ்டையில் உபந்யாஸ கோஷ்டி.

357. அவ்விடத்திலேயே அந்தரங்க பக்தர்களோடு.

362. கோவை பட்டர்ஸ்வாமிஷஷ்ட்யப்தபூர்த்திம ஹோத்ஸவ கோஷ்டி

364. மதுரை ஸத்ஸம்ப்ர தாயஸபை பரிஷத்து

368. நெல்லூர். பகவத் விஷயசாத்துமுறைகோஷ்டி

376. க்ருஷ்ண ஜில்லா வாடவல்லியில் ஸமாஜம்.

395. சென்னைத் தண்டையார் பேட்டையில்ஸ்ரீராமா என்னும் ஸபா மண்டபத்தில் உபந்யாஸ கோஷ்டி.

—:o:—

ஸ்ரீ:

## ஸம்ஸ்க்ருத நூற்பகுதியில் மொத்தம் நூல்கள் 155.

## அவற்றுள் பிறருடைய வாதத்தின்மேல் ப்ரதிவாதமாக எழுந்த நூல்கள் 28.

அவற்றுக்கு அகராதி அட்டவணை. (லக்கம் — நூல்வரிசைலக்கம்.)

85. அத்யமேபத்யார்த்த சததூஷணீ
117. அபிநவதயா சதகம்
41. உத்யான சுஷ்கவசோவிமர்சம்
6. திவ்யப்ரபந்த வைபவவிவேக:
16. பரமார்த்த பரித்ராணம்
11. பரிபந்தி பஞ்சபங்கி
123. பரீக்ஷாவிமர்சபராமர்ச:
29. பாடசோதந பரீக்ஷா
131. பாத்ரபத்ய சரித்ர ப்ரதிஷ்டா
121. பாதுகா ஸஹஸ்ராவதார தத்வம்
13. ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா
28. மதிரேக்ஷணார்த்த தத்வம்
119. மதிரேக்ஷணார்த்த மாதுர்யம்
43. யுஷ்மத்ஸூக்தி ஸௌரபம்
124. ரக்ஷாவிலோசந பாவப்ரகாசிகா
40. ரத்நபரீக்ஷா
17. ரஸிக புதரஞ்ஜநம்
30. ரஸிக ரஸாயநம்
27. லக்ஷ்மீதத்வவிநிர்ணய: (ஸ்ரீதத்வசோதநம்வா)
149. வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகா
135. சதபூஷணீ வஜ்ரகுடார:
34. ஸதாசார்ய ஸூக்திரக்ஷா
132. ஸத்ஸம்ப்ரதாய ஸஹஸ்ராம்சு:
21. ஸபாபுஜங்கீ ஸர்வஸ்வம்
125. ஸமஸ்யமாநோக்திஸௌஷ்டவ விமர்ச:
15. ஸர்வஸ்வ கவசம்
120. ஸஹ்ருதய ஸௌபாக்யம்

---

தமிழ் நூற்பகுதியில் கண்ட நூல்கள் மொத்தம் 266. அவற்றுள் பிறருடைய வாதத்தின் மேல் பிரதிவாதமாக எழுந்த நூல்கள் தனிப்பட (முடிவில்) விவரிக்கப்பட்டுள்ளன. அவை பகவத்கடாக்ஷத்தாலும் ஸதாசார்யாநுக்ரஹத்தாலுமே தோன்றியவை யென்பதை அந்தரங்கஸாக்ஷிகமாக விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். இப்போது அடியேன் வெகு ஊக்கத்துடன் எழுதிக் கொண்டிருக்கும் நூல்கள் பலவுண்டு. அவற்றில், திவ்யப்ரபந்தங்களுக்கு ஸம்ஸ்க்ருத பாஷையில் எழுதும் வியாக்கியானங்களே தலைமை பெற்றனவாகும். அவற்றால் தென்னாடும் வட நாடும் மஹோபகாரம் பெற்றுவருவதால் பெருந்தேவிமணவாளனை பேரருளாளன் இந்த ஸம்ஸ்க்ருத வியாக்கியான விலேகந கைங்கர்யத்தையே அடியேனுக்கு முக்கியமாக வைத்து விரைவில் நிறைவேற்றியருளவேணுமென்று பிரார்த்தித்து நிற்கிறேன்.

# முடிவான விஞ்ஞாபனம்

—:o:—

1. இந்தத் தன் சரிதையை 1950 ஸிலுக்கு முன்னமே (அதாவது, நம்முடைய ஷஷ்டியப்த பூர்த்திக்கு முன்னமே) எழுதி வெளியிடப் பல ஆப்தர்கள் ஆஜ்ஞாபித்துக் கொண்டிருந்தார்கள். ஆனாலும் அப்போது இதில் நமக்கு ருசியுண்டாகவில்லை. அநிவார்யமான சில பெரியார்களின் நியமனத்தையே கொண்டு இது இப்போது எழுதி வெளியிடப்பட்டு முடிந்தது. இதில் ஓரெழுத்துக்கூட அயதார்த்தமாக எழுதப்படவில்லை யென்பதை அந்தரங்க ஸாக்ஷிகமாக விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன்.

2. நம்முடைய தௌர்ப்பாக்யவசத்தால் மறைந்து போனவர்களும், நம்முடைய ஸௌபாக்ய வசத்தால் வாழ்ந்துகொண்டிருப்பவர்களுமான பல பெரியார்களின் திருவுருவப்படங்களை வெளியிட்டு அவர்களின் பெருமைகளையும் யதோசிதம் வெளியிடவேணுமென்கிற விருப்பமே அடியேனுக்கு அபரிமிதமாக இருந்தது. அந்த விருப்பம் இதில் பெரும்பாலும் நிறைவேறியதுபற்றி அடியேனுக்குண்டான மகிழ்ச்சி உண்மையில் உள்ளடங்காததே. இன்னமும் நாற்றுக் கணக்கான ஆப்தர்களைப்பற்றியும் மஹநீயர்களைப்பற்றியும் எழுதவேண்டிய விஷயங்கள் உள்ளத்துள்ளே உறைந்திருக்கின்றன. ஸமயம் எதிர்பார்க்கப்படுகின்றது.

3. அடியேனியற்றிய நூல்களைப்பற்றி விவரங்களெழுதி யிருப்பது இந்நூலில் நான்கிலொரு பகுதியாகும். அந்த விவரணங்களை யெல்லாம் பூர்த்தியாக வாசித்துப் பார்ப்பவர்களுக்கு அடியேனுடைய நூல்களின் தன்மைகள் விளங்கும். அடியேனுடைய வடமொழி நூல்களும் தென்மொழி நூல்களும் பன்னிரண்டு துறைகளில் தோன்றி யிருக்கின்றன வென்பதை விளக்கமாகக் காட்டியிருக்கிறேன். அந்த 12 துறைகளில் பரபக்ஷப்ரதி க்ஷேப நூல்கள் கடைசியான துறையில் சேர்ந்தவை. அந்த நூல்கள் மட்டும் சில மஹான்களுக்கு வருத்தத்தை விளைக்கக்கூடுமாயினும் அதற்காக நாம் செய்யலாவ தொன்றில்லை. ஸ்ரீ தேசிகனுடைய திவ்யக்ரந்தங்களில் சததூஷணீ, ஸச்சரித்ரரக்ஷை முதலான சில நூல்கள் சிலர்க்கோ பலர்க்கோ வருத்தம் தருவனவாகிலும் அவை அவதரித்தே தீர வேண்டியவையாயின. அது போலவே இவற்றையும் கொள்வர் விவேகிகள். ஸ்ரீமத். S. R. S. ராகவன் ஸ்வாமி (டில்லி) இங்ஙனமே யெழுதியுள்ளாரென்பதை மஹான்கள் வாசித்தே யிருக்கிறார்கள்.

4. "சேஷாயுஷ்யபி சேஷிதம்பதி தயாதீக்ஷாமுதீக்ஷாமஹே" என்ன நின்ற ஆயுச் சேஷத்தில் ஆவிர்ப்பவிக்கின்ற அடியேனுடைய நூல்கள் ஸகல ஸஜ்ஜநஸப்ருஹணீயங்களாகவே அமைய வேணுமென்று ஆப்தர்கள் ஆசாஸிக்க வேணும். அடியேனும் அங்ஙனமே ஆசம்ஸியா நின்றேன்.

**ஸ்ரீகாஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்**

**தானே யெழுதிய தன் சரிதை முற்றுப் பெற்றது.**

SRI RAMAJAYAM

PHONE : 31326

# Sathgrantha Prakasana Sabha

*Principal* :
VEDAVEDANTA VAIJAYANTHI VIDYALAYA.

*Editor* :
[SAN]SKRIT, HINDI, TELUGU AND TAMIL MONTHLY JOURNALS.



UBHAYAVEDANTHA
MAHA VIDWAN
PRATHIVADI BHAYANKARAM
Annangaracharya Swami
L. KANCHEEPURAM.

PRESIDENT :
SRI JAGADACHARYA SIMHASANADHIPATHI

**SRI KANCHI P. B. ANNANGARACHARYA SWAMI**

~~213, GOVINDAPPA NAICK ST., MADRAS-1~~

No. [illegible] Dated, 12. 4. 1967

[illegible]

[illegible]

[illegible] Registered Letter [illegible]

